# இப் புத்தகத்திலடங்கியவை.

# இப்பதிப்பில்வந்துள்ள நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

---

அகநா - அகநானூறு.
அடிக் - அடிக்குறிப்பு. [ரை.
அடியார் - அடியார்க்கு நல்லாரு
அரிச்சந்திர - அரிச்சந்திரபுராணம்.
அருணாசல - அருணாசலபுராணம்.
அரும்பத - அரும்பதவுரை.
அறநெறி, அறநெறிச் - அறநெறிச்
ஆசார - ஆசாரக்கோவை. [சாரம்.
ஆனந்த. வண்டு - ஆனந்தருத்திரே
சர் வண்டுவிடுதூது. [ணம்.
ஆனைக்கா - திருவானைக்காப் புரா
இ. கொ - இலக்கணக்கொத்துரை.
இலிங்க - இலிங்கபுராணம்.
இ. வி - இலக்கணவிளக்கவுரை.
இளம் - இளம்பூரணருரை. [ரை.
இறை - இறையனாரகப்பொருளு
ஈங்கோய் - ஈங்கோய் மலையெழு
உத்தர - உத்தரராமாயணம் [பது.
ஐங், ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஐந். ஐம் - ஐந்திணையம்பது.
ஓ - ஒத்தபகுதி.
கண்டனலங் - கண்டனலங்காரம்.
கந்த - கந்தபுராணம்.
கந்தரலங் - கந்தரலங்காரம்.
கம்ப - கம்பராமாயணம்.
கல் - கல்லாடம்.
கலி - கலித்தொகை.
கலிங்க - கலிங்கத்துப்பரணி.
களவழி - களவழிநாற்பது.
காசி - காசிகாண்டம்.
காசிக் - காசிக்கலம்பகம்.
காஞ்சி, காஞ்சிப் - காஞ்சிப்புரா
கார் - கார்நாற்பது. [ணம்.
காரைக் - காரைக்காலம்மையார்.
குலோத். உலா - குலோத்துங்க
சோழனுலா.
குலோத். பிள்ளை - குலோத்துங்க
சோழன் பிள்ளைத்தமிழ்.
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு.
குறு, குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
கோயின் மூத்த - கோயின் மூத்த
திருப்பதிகம்.
சிதம்பர - சிதம்பரபுராணம்.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிவ. போ - சிவஞானபோதம்.
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சீகாழித் - சீகாழித்தலபுராணம்.
சீகாளத்தி - சீகாளத்திப்புராணம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சூ - சூத்திரம்.
சூடாமணி - சூடாமணிநிகண்டு.
சூளா - சூளாமணி. [கைவகுப்பு.
செருக்களத் - செருக்களத்து அல
சே - சேனாவரையருரை.
சோணசைல - சோணசைலமாலை.
ஞானா - ஞானாமிர்தம்.
தக்க - தக்கயாகப்பரணி.
தகடூர் - தகடூர்யாத்திரை.
தஞ்சை - தஞ்சைவாணன்கோவை.
தண்டி - தண்டியலங்காரம்.
தணிகை, தணிகைப் - திருத்தணி
கைப்புராணம்.
தமிழ்நா - தமிழ்நாவலர்சரிதை.
தமிழ்நெறி - தமிழ்நெறிவிளக்கம்.
தமிழ்விடு - தமிழ்விடுதூது.
தனிப் - தனிப்பாடல்.
திணைமா, திணைமாலை - திணைமாலை
நூற்றைம்பது.
திணைமொழி - திணைமொழியைம்
திரி - திரிகடுகம். [பது.
திருக்காளத்திப் - திருக்காளத்திப்
புராணம். [ம்.
திருக்குற் - திருக்குற்றாலப்புராண
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோ
வையார்.
திருநாகைக் - திருநாகைக் காரோ
திருப் - திருப்புகழ். [ணப்புராணம்.
திருவரங்கக், திருவரங்கக்கலம் - தி
ருவரங்கக்கலம்பகம். [தாதி.
திருவரங்கத்தந் - திருவரங்கத்தந்

திருவள்ளுவ - திருவள்ளுவ மாலை.
திருவா - திருவாசகம்.
திருவாய் - திருவாய்மொழி.
திருவாரூர்மும் - திருவாரூர் மும்மணிக்கோவை.
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.
திருவாலங்காட்டுமூத்த - திருவாலங்காட்டுமூத்த திருப்பதிகம்.
திருவானைக்காப் - திருவானைக்காப்புராணம்.
திருவிடை.மும் - திருவிடைமருதூர்மும்மணிக்கோவை. [ம்.
திருவிளை - திருவிளையாடற்புராண
திவ் - திவ்யப்பிரபந்தம்.
திவா - திவாகரம்.
தெய்வச் -தெய்வச்சிலையாருரை.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியர் உரை.
நம்பி - நம்பியகப்பொருள்.
நள - நளவெண்பா.
நற் - நற்றிணை. [ருரை.
நன். மயிலை - நன்னூல் மயிலைநாத
நன். வி - நன்னூல் விருத்தியுரை.
நாற் -நாற்கவிராச நம்பியகப்பொருள்.
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்.
நீல - நீலகேசி. [பதியந்தாதி.
நூற்றெட்டுத் - நூற்றெட்டுத்திருப்
நெடு, நெடுநல் - நெடுநல்வாடை.
ப - பக்கம். [தாதி.
பஞ்சாக்கர - பஞ்சாக்கரதேசிகரந்
பட், பட்டின - பட்டினப்பாலை.
பதிற் - பதிற்றுப்பத்து. [றை.
பதினோராந் - பதினோராந் திருமு
பரி - பரிபாடல்.
பரிமேல் - பரிமேலழகருரை.
பழ - பழமொழி.
பாக, பாகவத - பாகவதம்.
பாண்டிக் - பாண்டிக்கோவை.
பிங், பிங்கல - பிங்கலந்தை.

பி-ம் - பிரதிபேதம்.
பிரபு - பிரபுலிங்கலீலை.
பிரமோத்-பிரமோத்தரகாண்டம்.
பிரயோக - பிரயோகவிவேகம்.
பு. வெ - புறப்பொருள் வெண்பா
புறநா - புறநானூறு. [மாலை.
பெரிய - பெரியபுராணம்.
பெருங் - பெருங்கதை. [படை.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்
பெரும்பொருள் - பெரும்பொருள் விளக்கம்.
பேர் - பேராசிரியர் உரை.
பொருகளத் - பொருகளத்தலகை வகுப்பு.
பொருந - பொருநராற்றுப்படை.
பொன்வண்ணத் - பொன்வண்ண
மணி - மணிமேகலை. [த்தந்தாதி.
மது, மதுரை, மதுரைக் - மதுரைக் காஞ்சி.
மயிலேறு - மயிலேறும்பெருமாள் பிள்ளையுரை.
மலைபடு - மலைபடுகடாம்.
மாறன் - மாறனலங்காரம்.
மு - முற்றும் ஒத்தது.
முத் - முத்தொள்ளாயிரம்.
முத்துக்குமார - முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்.
முது - முதுமொழிக்காஞ்சி.
முருகு - திருமுருகாற்றுப்படை.
முல்லை - முல்லைப்பாட்டு.
மெய்க் - மெய்க்கீர்த்தி.
மேற் - மேற்கோள். [யுரை.
யா. கா - யாப்பருங்கலக் காரிகை
யா. வி-யாப்பருங்கலவிருத்தியுரை.
வளையா - வளையாபதி.
வாட்போக்கிக் - வாட்போக்கிக்க
வாயு - வாயுசங்கிதை. [லம்பகம்.
விக்கிரம - விக்கிரமசோழனுலா.
விநாயக - விநாயகபுராணம்.
வி. பா, வில்லி. பா - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்.
வீர, வீரசோ - வீரசோழியம்.

# அடிக்குறிப்பிற் காட்டியுள்ள நூற்பெயர்கள்.

அகநானூறு, அரிச்சந்திர புராணம், அருணாசலபுராணம், அழகரந்தாதி, அறநெறிச்சாரம், ஆசாரக்கோவை, ஆசிரியமாலை, ஆளுடையபிள்ளையார் கலம்பகம், ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, இரண்டாம் இராசராசன்மெய்க்கீர்த்தி, இரண்டாவதுகுலோத்துங்கன் மெய்க்கீர்த்தி, இராசராச சோழனுலா, இலக்கணக் கொத்து உரை, இலக்கணவிளக்கவுரை, இலிங்கபுராணம், இறையனாரகப்பொருள், இன்னா நாற்பது, இனியது நாற்பது, ஈங்கோய்மலையெழுபது, உண்மை விளக்கம், உத்தரராமாயணம், ஏலாதி, ஐங்குறுநூறு, ஐந்திணை ஐம்பது, ஒரு பழைய இலக்கணநூல், ஔவையார் பாட்டு, கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடுதூது, கண்டனலங்காரம், கந்தபுராணம், கந்தர்கலிவெண்பா, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கபிலர் சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை, கம்பராமாயணம், கல்லாடம், கலிங்கத்துப் பரணி, கலித்தொகை, களவழி நாற்பது, காசிக்கலம்பகம், காசிகாண்டம், காஞ்சிப்புராணம், கார்நாற்பது, காரைக்காலம்மையார் கோயின்மூத்ததிருப்பதிகம், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், கிளவித்தெளிவு, கிளவிமாலை, கிளவிவிளக்கம், குசேலோபாக்கியானம், குமாரஸம்பவம், குலோத்துங்கசோழன்பிள்ளைத்தமிழ், குலோத்துங்கசோழனுலா, குறுந்தொகை, கூர்மபுராணம், சித்தராரூடம், சிதம்பரபுராணம், சிலப்பதிகாரம், சிவஞானசித்தியார், சிவஞானபோதம், சிறுபஞ்சமூலம், சீகாழித்தலபுராணம், சீகாளத்திப்புராணம், சீவகசிந்தாமணி, சூடாமணிநிகண்டு, சூளாமணி, சொக்கநாதருலா, சோணசைலமாலை, ஞானாமிர்தம், தக்கயாகப்பரணி, தகடூர் யாத்திரை, தஞ்சைவாணன்கோவை, தண்டியலங்காரம், தமிழ் நாவலர்சரிதை, தமிழ்நெறிவிளக்கம், தமிழ்விடுதூது, தனிப்பாடல், திணைமாலை நூற்றைம்பது, திணைமொழி ஐம்பது, திரிகடுகம், திருக்காளத்திநாதருலா, திருக்காளத்திப்புராணம், திருக்குற்றாலத்தலபுராணம், திருக்குறள், திருக்கைலாயஞானவுலா, திருச்சிற்றம்பலக்கோவையார், திருத்தணிகைப்புராணம், திருத்தணிகையாற்றுப்படை, திருநாகைக்காரோணப் புராணம், திருப்புகழ், திருப்பெருந்துறைப்புராணம், திருமுகப்பாசுரம், திருவகுப்பு, திருவரங்கக்கலம்பகம், திருவரங்கக்கோவை, திருவரங்கத்தந்தாதி, திருவருணைக்கலம்பகம், திருவள்ளுவமாலை, திருவாசகம், திருவாப்பனூர்ப்புராணம், திருவாரூர்க்கோவை, திருவாரூர் மும்மணிக்கோவை, திருவாரூருலா, திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், திருவானைக்காப்புராணம், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவிளையாடற் புராணம், திருவெங்கைக்கோவை, திருவெங்கையுலா, திருவேங்கடமாலை, திருவையாற்றுப் புராணம், திரு

வொற்றியூரொருபாவொருபஃது, திவ்யப்பிரபந்தம், திவாகரம், தேவாரம், தொல்காப்பியம், ஷை உரைகள், நல்வழி, நளவெண்பா, நற்றிணை, நன்னூல், ஷை உரைகள், நாலடியார், நாற்கவிராசநம்பி அகப்பொருள், நான்மணிக்கடிகை, நீதிநெறிவிளக்கம், நீலகேசி, நூற்றெட்டுத்திருப்பதி அந்தாதி, நைடதம், பஞ்சாக்கர தேசிகரந்தாதி, பதிற்றுப்பத்து, பாராந்தகதேவர் மெய்க்கீர்த்தி, பரிபாடல், பல்சந்தமாலை, பழமொழி, பாகவதம், பாண்டிக்கோவை, பிங்கலநிகண்டு, பிரபுலிங்கலீலை, பிரமோத்தர காண்டம், பிரயோகவிவேகம், புறநானூறு, புறப்பொருள்வெண்பா மாலை, பெரியபுராணம், பெருங்கதை, பெரும்பொருள்விளக்கம், பொருளியல், பொன்வண்ணத்தந்தாதி, மணிமேகலை, மாறனலங்காரவுரை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், முத்தொள்ளாயிரம், முதுமொழிக் காஞ்சி, மூதுரை, யாப்பருங்கலக்காரிகை உரை, யாப்பருங்கல விருத்தி, வங்கர்கோவை, வளையாபதி, வனசவிடுதூது, வாட்போக்கிக் கலம்பகம், வாயுசங்கிதை, விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி, விக்கிரமசோழனுலா, விநாயகபுராணம், வில்லிபுத்தூராழ்வார்பாரதம், விறலிவிடுதூது, வெண்பாப் பாட்டியல், வீரசோழியம், வீரராசேந்திரதேவர்மெய்க்கீர்த்தி, வேள்விக்குடிசாஸனம்.

---

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௬ | 24 | 35 - 6 | 34 - 5 |
| ,, | 30 | பொறிப் | பொரிப் |
| ௧௪ | 29 | வனம் | ஞனம் |
| ௧௫ | 12 | உருமுடி | உருமிடி |
| ௧௬ | 6 | நன்பக | நன்பகற் |
| ௨0 | 13 | நாறிதழ்ங்குளவி | நாறிதழ்க்குளவி |
| ௬௧ | 22 | இணைத்த | இணைந்த |
| ௮௫ | 2 | மிசைஇய | மிசைய |
| ௧0௫ | 19 | ஒழுங்கிய | ழுகிய |
| ௧௧௬ | 3 | பௌவ | வ்வ |
| ௧௫௮ | 34 | கண்ணப்ப. 68). | ண்ணப்ப. 66). |
| ௧௬0 | 30 | இல்வாய் | இன்வாய் |
| ௧௬௨ | 19 | வருந்தி | வருந்திய |
| ௧௭௨ | 23 | நிறைத்தன்ன | நிரைத்தன்ன |
| ௨௧௭ | 24,31 | பயன்றரூஉம் | பயந்தரூஉம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உகக | 6 | வடி | வடு |
| உஉ0 | 29 | உவரி | உவர் |
| உஉகூ | 3 | முள்ளாகிய | முள்ளாலாகிய |
| உஉஎ | 1 | நெல்விலை | நெய்விலை |
| உசச | 32 | யென்றும் | யென்று |
| உசஅ | 21 | குப்பிகள் | பச்சைக்குப்பிகள். |
| உருகூ | 33 | புறறா. | புறநா. |
| உகூஎ | 35 | புனலுற்றுருகு | புனலுற்றுருவு |
| ௩க0 | 20 | மும். 3 | மும். 13. |
| ௩உஉ | 18 | கூரவையம் | கூறவையம். |
| ௩உச | 28 | 544 - 5 | 543 - 4 |
| ௩சஅ | 28 | என்பழியும் | என்புழியும் |
| ௩ருச | 13 | அண்கலை | அரண்கலை |
| ௩எ0 | 22 | குடியிலிருக்கும் | குடிலிலிருக்கும் |
| ,, | 26 | பழவழி | பலவழி |
| ௩அரு | 29 | 'கணம்' | 'பவுனம்' |
| ச0௩ | 9 | தருகின்ற | தருகின்ற |
| சகஅ | 25 | கதவுதலும் | கதவுகளும் |
| ச௩க | 34 | நான்மடத்தான் | நான்மாடத்தான் |
| சஅகூ | 15 | நல்கோல் | நல்கோள் |
| சகூஅ | 4 | கலங்கி அவன்கூற்றிற்கு | கலங்கி-அவன்கூற்றிற்கு |
| ருருஅ | 14 | பன்தீ | பின்தீ |
| ,, | ,, | ஜொடை | தொடை |
| ,, | 15 | பிறத்து | றத்து |
| ,, | ,, | நறி | நறிய |
| ருகூகூ | 20 | 67, | 67, பேர். |
| ருகூ௩ | 7 | காமர் | காமரு |
| கூ0ரு | 4 | தழைத்தல் | தழைத்தலுமாம். |
| ,, | 15 | தானத்தை | தாவத்தை |
| கூச0 | 24 | 247 - 8. | 347 - 8 |
| கூருகூ | 30 | க0ரு, உரை | க0கூ, உரை. |
| கூகூச | 9 | பாஅஅய்ப்பகல்செய்வான் | பாஅய்ப்பகல்செய்வான் |
| எ௩உ | 12 | கொடுஞ்தெய்வம், 510. | இவ்வரியை எடுத்துவிடுக. |
| எச௩ | 43 | நெருப்பு உவமை, | நெருப்புஉவமை, 621. |
| எஎகூ | 33 | [கிலி, 973. | [கிலி, 379. |

உ

கணபதி துணை.

# முகவுரை.

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு நாயனர் தேவாரம்.

### திருத்தாண்டகம்.

மின்காட்டுங் கொடிமருங்கு லுமையாட் கென்றும்
விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண்
நன்பாட்டுப் புலவனுய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னேன்காண்
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவிற் றிருப்புத் தூரிற்
றிருத்தளியான் காணவனென் சிந்தை யானே.

திருச்சிற்றம்பலம்.

---

அண்டர்க ளுறுகண் விண்டிட முந்நீர்
அலைகடல் குடித்தும் மலைநிலை மழுத்தியும்
தென்றிசை யுயர்ந்த நொய்ம்மை போக
அப்பணி சடையாற் கொப்பவீற் றிருந்தும்
பன்னு வலர்புகழ் தென்னு டாண்ட
இராவணன் றனையவ னிராவணம் போக்கியும்
இலங்குறு பொதியில் விலங்கல்வாழ் பெருந்தவத்
தகத்தியன் புரந்தருண் மகத்துவ மிகுத்த
அமிழ்தினிற் சிறந்த தமிழெனு மடந்தை
கந்தரத் தணிமணிக் கலனர சென்ன
உத்தமர் புகழுமிப் பத்துப் பாட்டும்

பாண்டிவள நாட்டில் மதுரையம்பதியில் ஸ்ரீ அங்கயற்கண் அம்மையோடு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் அருளிய சங்கப்பலகையில் அக்கடவுளோடு ஒப்ப வீற்றிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப்புலவர்களாகிய நக்கீரனர் முதலிய எண்

மரால் இயற்றப்பெற்ற திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாமென்னும் * பத்துமாகும்; "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை, பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய, கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப், பாலை கடாத்தொடும் பத்து" என்பதனால் இப்பெயர்களும் இவற்றின் முறையும் விளங்கும். இவை, மதுரை ஆசிரியர் பாரத் துவாசி நச்சினார்க்கினியர் இயற்றிய உரையைப் பெற்றுள்ளன. அவ் வுரையினால் அதற்கு முன்பும் இவற்றிற்கு வேறுரை இருந்ததென்று தெரிகிறது.

இவற்றை இயற்றிய நல்லிசைப்புலவர்களின் பெயர்களும் பாட்டுடைத்தலைவர்களின பெயர்களும் ஒவ்வொரு பாட்டின் இறுதியில் உள்ள பழையவாக்கியங்களாற் புலப்படும். இவர்களின் வரலாற்றை இம் முகவுரையின் பின்னே காண்க. திருமுருகாற்றுப்படை நெடுநல்வாடையென்னுமிரண்டையும் இயற்றிய ஆசிரியர் நக்கீரர். பெரும்பாணாற்றுப்படை பட்டினப்பாலை யென்னுமிரண்டையும் இயற்றியவர் பெருங்கௌசிகனார். பொருநராற்றுப்படை, பட்டினப்பாலையென்னும் இரண்டும் கரிகாலனையும் மதுரைக்காஞ்சி நெடுநல்வாடை யென்னுமிரண்டும் நெடுஞ்செழியனையும் பாட்டுடைத்தலைவர்களாகக் கொண்டவை. இவற்றைத் தொகுத்தோரும் சங்கப்புலவர்களே; இது மலைபடுகடாத்தில், "தீயி னன்ன வொண்செங் காந்தள்" (145) என்பதன் உரையில் நச்சினார்க்கினியர், 'இவர்செய்த செய்யுளை நல்லிசைப் புலவர் செய்த ஏனைச்செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் காரணம் ஆனந்தக் குற்றமென்பதொரு குற்றம் இச்செய்யுட்கு உறுமையானென்றுணர்க' என்று எழுதியுள்ள பகுதியால் விளங்கும்.

இவை, "ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து, சான்றோருரைத்த தண்டமிழ்த் தெரியல், ஒருபது பாட்டும்" (நச்சி

* பத்துப்பாட்டின் இலக்கணமாக, இரண்டு சூத்திரங்கள் பன்னிரு பாட்டியலிற் காணப்படுகின்றன. இவ்விலக்கணம் பத்துப்பாட்டைக் கண்டு பிற்காலத்தில் ஓராசிரியராற் கூறப்பட்டதாகத் தோற்றுகிறது; வேறுவகையான பத்துப்பாட்டுக்களின்மையும் இதனை வலியுறுத்தும்.

ஞர்க்கினியர் உரைச்சிறப்புப்பாயிரம்) என்று பாராட்டப் பெற்றுள்ளன. * பாட்டும் தொகையும் கீழ்க்கணக்குமென்பதில் இவற்றை முன்வைத்து உரையாசிரியர்களும் பிறரும் எண்ணும்முறையே இவற்றின் அருமை பெருமையைப் புலப்படுத்தும்.

இவை † பாட்டெனவும் ‡ பாவெனவும் வழங்கும்.

இவற்றுள், அகத்திணைக்குரியன முல்லை, குறிஞ்சி, பட்டினப்பாலை யென்பன. ஏனையவை புறத்திணைக்குரியன. அவற்றுள் ஆற்றுப்படைகளாக உள்ளவை ஐந்து.

ஆற்றுப்படை யென்பது கூத்தர் முதலியவர்களில் ஒருவர் ஒருகொடையாளியின்பால் தாம் பெற்ற பெருஞ்செல்வத்தை எதிர்வந்த இரவலர்களுக்கு அறிவுறுத்தி அவரும் அவன்பாற் சென்று தாம் பெற்றவற்றையெல்லாம் பெறுமாறு வழிப்படுத்தல்; ஆறு - வழி, படை - படுத்தல். ஒவ்வொருவரும் இங்ஙனம் கூறுதற்கு உரியோராயினும் கூத்தர் முதலியோரே எதிர்வந்த கூத்தர் முதலியவர்களுக்குக் கூறி அவர்களை வழிப்படுத்தியதாகச் செய்யுள் செய்தல் மரபு. தொல்காப்பியப் புறத்திணையியலில் ௩௬-ஆம் சூத்திரத்திலுள்ள, "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும், ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்" என்பது இதற்கு விதி; 'ஆடன் மாந்தரும் பாடற் பாணரும் கருவிப் பொருநரும் இவருட் பெண்பாலாகிய விறலியுமென்னும் நாற்பாலாரும், தாம்பெற்ற பெருஞ் செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச் சென்று தாம்பெற்றவை யெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும்' என்பது இதன் பொருள். இங்ஙனம் இயற்றப் பெற்றவைகள் கூத்தராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை யென வழங்கும். பத்துப்பாட்டிலன்றி, பதிற்றுப்பத்து, புறநானூறு, புறப்பொருள்வெண்பாமாலை முதலியவற்றிலும் பிற்காலத்துநூல்களாகிய கலம்பகங்களிலும் தனிப்பாடல்களிலும் இவ்வாற்றுப்படைகள் காணப்படுகின்றன. புலவராற்றுப்படை, திருத்தணிகை

* "பாட்டினுந் தொகையினும் வருமாறு கண்டுகொள்க" (தொல். செய். சூ. 50, பேர்.); "மூத்தோர்கள், பாடி யருள்பத்துப் பாட்டுமெட்டுத்தொகையுங், கேடில் பதினெட்டுக் கீழ்க்கணக்கும்" தமிழ்விடு. 55-6.

† தொல். செய். சூ. 50, பேர். ‡ சீகாளத்தி. நக்கீரச். 115.

யாற்றுப்படை, திருப்பாணாற்றுப்படை முதலியன பெருங் கவிஞர்களாற் பிற்காலத்தில் இயற்றப்பெற்ற ஆற்றுப்படை நூல்களாகும்.

இந்தப் பத்துப்பாட்டினுள் :—

க. திருமுருகாற்றுப்படை: இது புலவராற்றுப்படை யெனவும் முருகெனவும் வழங்கும். இது 317-அடிகளுள்ள ஆசிரியப்பாவாலமைந்தது; பதினோராந்திருமுறையில் தொகுக்கப்பட்ட பிரபந்தங்களின் வரிசையிற் சேர்க்கப்பெற்றுள்ளது. முருகக்கடவுளுடைய திருவருளைப்பெற விரும்புவோர் இதனை நியமமாக அன்புடன் *பாராயணம் பண்ணுதல் நலமென்றும் இது கண்கூடென்றும் பெரியோர் கூறுவர்.

"வளவாய்மை சொற்ப்ரபந்த முளகீர னுக்குகந்து மலர்வாயி லக்கணங்க ளியல்போதி, அடிமோனை சொற்கிணங்க வுலகாமுவப்ப வென்று னருளா லளிக்குகந்த பெரியோனே",

"நக்கீர ரோதிய வளமை சேர்தமி ழுக்காக நீடிய கரவோனே",

"கீதவிசை கூட்டி வேதமொழிசூட்டு கீரரிசை கேட்ட க்ருபைவேளே" (திருப்புகழ்),

"நக்கீரர் சொற்றித்தித்ததே" (கந்தரந்தாதி)

என அருணகிரிநாதராலும்,

"இன்னன......பாவுள், முன்னுற வந்து நிற்கு முருகாற்றுப்படை மொழிந்தான்" (சீகாளத்திப் புராணம்)

எனச் சிவப்பிகாச ஸ்வாமிகளாலும்,

"தவிராத வெவ்வினை தவிர்க்குமுரு காறுந் தரித்தாறெழுத்தோதலாம்" (செய்யூர்ப் பிள்ளைத்தமிழ்)

என அந்தகக்கவி வீரராகவ முதலியாராலும் இந்நூல் பாராட்டப்பெற்றிருத்தல் காண்க.

ஒரு மலைக்குகையில் முன்னமே அடைக்கப்பட் டிருந்த தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரோடு சேர்த்துண்ணக் கருதித் தம்மையும் அக் குகையில் அடைத்துவிட்டு உண்ணு

---

* "நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத், தற்கோல நாடோறுஞ் சாற்றினால்—முற்கோல, மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித், தானினைத்த வெல்லாந் தரும்"

தற்கு நீராடப்போன ஒரு கொடிய பூதத்தை வெல்லக் கருதிய நக்கீரனார் முருகக் கடவுளைக் குறித்து இந்நூலைப் பாடி அப் பூதத்தினின்றும் விடுதல் பெற்றன ரென்பர். இவ்வரலாற்றைப் பற்றிய செய்திகள் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், திருப்பரங்குன்றப் புராணம், சீகாளத்திப் புராணம் முதலியவற்றிற் சிலசில வேறுபாடுகளுடன் காணப்படுகின்றன. முருகக் கடவுள் நக்கீரனாரைச் சிறைமீட்டருளிய திருவிளையாடல் ஒவ்வோராண்டும் திருப்பரங்குன்றத்திலே பங்குனி மாதத்தில் நடக்கும் திருவிழாவில் நான்காந் திருநாளில் நடைபெற்று வருகின்றது.

முருகாற்றுப்படை என்னுந்தொடர்மொழிக்கு, "வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்தது" என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

ஏனை ஆற்றுப்படைகளுக்கும் இதற்கும் வேறுபாடுகள் உண்டு; அவற்றிற் சில வருமாறு :

பிற ஆற்றுப்படைகள் ஆற்றுப்படுத்தப்படுபவர்களது பெயரொடு சார்த்தி வழங்கப்படும்; இது பாட்டுடைத்தலைவன் பெயரொடு சார்ந்து வழங்கும். பிறவற்றிற் காணப்படுவனவாகிய, ஆற்றுப்படுத்தப்படுவானை விளித்தலும், அவனது நிலையை விரித்தலும், ஆற்றுப் படுத்துவான் தனது பழையநிலை, பரிசில் பெற்ற முறையென்பவற்றைக் கூறுதலும் இதில் விளக்கப்படாமல் உய்த்துணர வைக்கப்பெற்றிருக்கின்றன.

இது, முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும் திருப்பரங்குன்றம் முதலாகிய ஆறு படைவீடுகளைப் பாராட்டும் ஆறு பகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதற்பகுதியில், முருகக்கடவுளுடைய திருவுருவச்சிறப்பும், அவர் அணியும் மாலைவிசேடங்களும், சூரரமகளிர் செயல்களும், முருகக்கடவுள் சூரனைச் சங்காரஞ் செய்த விறலும், மதுரையின் பெருமையும், திருப்பரங்குன்றத்தின் இயற்கைவளனும் கூறப்பட்டுள்ளன. இரண்டாவது பகுதியில், முருகவேள் அடியார்க்கு அருள்புரிய எழுந்தருளும் யானையினது இயல்பும், அவருடைய ஆறு திருமுகங்களின் செயல்களும், அவற்றிற்கேற்பப் பன்னிரண்டு திருக்கரங்கள் ஆற்றுவனவும், திருச்சீரலைவாயில் அவர் எழுந்தருளுவதும் சொல்லப்பட்டுள்

ளன. மூன்றும் பகுதியால் அவரை வழிபடும் முனிவர்களுடைய ஒழுக்கமும், தேவருடன் அவரைத் தரிசிக்கவரும் மகளிர் இயல்புகளும், திருமால் முதலியவர்களைப்பற்றிய செய்திகளும் அறியலாகும். நான்காவது பகுதியில் அந்தணர் இயல்பும், அவர்கள் அவரை வழிபடும் முறைமையும் கூறப்பட்டுள்ளன. ஐந்தாவது பகுதியில், குன்றக் குரவையின் நிகழ்ச்சி, அவரைச் சேவிக்கும் மகளிர் பாடுமகளிர் ஆடுமகளிர் ஆகிய இவர்களின் இயல்பு, அவருடைய அணி ஆடை செயல் முதலிய சிறப்புக்கள் ஆகிய இச்செய்திகளைக் காணலாம். ஆறுவதுபகுதி, அவர் எழுந்தருளியுள்ள இடங்களையும், தேவராட்டி அவரை ஆற்றுப் படுத்தும் முறையையும், அவரைத் துதிக்கும் முறையையும், அவர்பாற்சென்று அருள் பெறும் வழியையும், அவருடைய தொண்டர்களின் நல்லியல்புகளையும், அவர் அருள்புரியும் விதத்தையும், பழமுதிர் சோலையிலுள்ள அருவியின் சிறப்பையும் விரித்துக்கூறும்.

இதனால், முருகக்கடவுளுக்குரிய காந்தள், வெண்கடம்பு, வெட்சியென்னும் மலர்களும், கோழி மயிலென்னும் கொடிகளும், தகர் மயில் யானை யென்னும் ஊர்திகளும், அவரை அறுவர் வளர்த்தது, குன்றங்கொன்றது, சூர்முதல் தடிந்தது முதலிய திருவிளையாடல்களும் உணரப்படுகின்றன.

உ. பொருநராற்றுப்படை: இது 248-அடிகளை உடையது; வஞ்சியடிகள் இடையில்வந்த ஆசிரியப்பாவாலாகியது; பரிசில் பெறக்கருதிய ஒருபொருநனைப் பரிசில்பெற்ற ஒருபொருநன் இளஞ்சேட்சென்னி புதல்வனாகிய கரிகாற்பெருவளத்தானிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அக் கரிகாற்பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியார் பாடியது. பொருநர் ஏர்க்களம் பாடுவோர் போர்க்களம் பாடுவோர் பரணி பாடுவோரெனப் பலர். அவருள் * இதிற் கூறப்படுபவன் போர்க்களம் பாடும் பொருநன்; இப்பொருநன் தடாரிப்பறை கொட்டுபவன்; இப்பாட்டில், "கைக்கச டிருந்த வென் கண்ணகன் றடாரி..................ஒன்றியான் பெட்டா வளவையின்" (70 - 73) என வருதல்காண்க.

* "இவன் போர்க்களம் பாடும் பொருநனாதலாலும், கூத்தரில் இவனிற் சிறந்த கூத்தர் இன்மையானும் இங்ஙனம் கூறினார்" (பொருந. 56 - 7, ந.) பொருநர் - மற்றொருவர்போல வேடங் கொள்வோர்; நன். சூ. 208, சங்கர.

இதனுள், பொருநர்கள் விழாவிற்கூடித் தங்கள் இசைத்திறனைக்காட்டி அவ்விழா முடிந்தபின் வேற்றாரை நோக்கிச் செல்லும் இயல்பினரென்பதும், பாலையாழின் வருணனையும், பாலைப் பண்ணை வாசிப்பதனால் ஆறலைகள்வர் தங்கள் கொடுஞ்செயலை மறந்து அன்புடையராவாரென்பதும், விறலியுடைய * கேசாதிபாதவருணனையும், கரிகாற் பெருவளத்தான் எளியாரையும் விரும்பி அவரை உபசரிக்கும் இயல்பும், உணவின் வேறுபாடுகளும், பரிசிலர்க்கு உபகாரிகள் தேர் யானை முதலியவற்றைக் கொடுக்கும் வழக்கமும், பொருநர் பொற்றாமரை பெறுதலும், விறலியர் பொன்னரிமாலைகள் பெறுதலும், கரிகாற் பெருவளத்தான் இளமையில் † வெண்ணிப்பறந்தலையிற் போர்செய்து சேர பாண்டியர்களை வென்றமையும், திணை மயக்கமும், காவிரியின் பெருமையும் கூறப்பட்டுள்ளன.

௩. சிறுபாணாற்றுப்படை: இது 269-அடிகளுள்ள ஆசிரியப் பாவாலமைந்தது; பரிசில் பெறக்கருதிய பாணனொருவனைப் பரிசில்பெற்றானொருவன் ஓய்மாநாட்டு நல்லியக்கோட னிடத்தே ஆற்றுப் படுத்தியதாக அந்நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. பாணர் - பாடுவோர்; இவர் இசைப்பாணரும் யாழ்ப்பாணரும் மண்டைப்பாணரு மெனப் பலராவர். இதிற் கூறப்படுபவன் யாழ்ப்பாணன். யாழ்ப்பாணர் சிறுபாணர் பெரும்பாணரென இருவகைப்படுவர். இவ்விருவரையும் ஆற்றுப்படுத்தின காரணம்பற்றி இப்பாட்டும் இதற்கடுத்த பாட்டும் முறையே சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படையெனப் பெயர் பெற்றன; பாட்டின் அடி அளவுபற்றி இப் பெயர் பெற்றன என்றுங்கொள்ளலாம்.

இச் சிறுபாணாற்றுப்படையில், "இன்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ" (35) என்றும், பெரும்பாணாற்றுப்படையில், "இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி" (462) என்றும் வரும்

---

* "இங்ஙனம் சிறடியுங் கூட்டி எண்ணுக்கால் தலைமுதல் அடியீறின்றாகக் கூறிற்றும்" பொருந. 47, ந.

† இது தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ளது; தேவாரம் பெற்ற சிவஸ்தலங்களுளொன்று; இப்பொழுது கோவிலுண்ணியென்று வழங்கப் பெறும்.

அடிகள் இவ்விருவகைப் பாணர்களுக்கும் உள்ள வேறுபாடு யாழால் வந்ததாகக் கருத இடந்தருகின்றன.

இந்நூலை, "சிறப்புடைத்தான சிறுபாணாற்றுப்படை" என்பர் தக்கயாகப்பரணி உரையாசிரியர்.

விறலியின் கேசாதிபாதம் கூறும் முகத்தால் அவள் உறுப்புக்களுக்கேற்ற உவமைகளும், வஞ்சி கொற்கை மதுரை உறந்தை யென்னும் தமிழ்நாட்டு முடிமன்னர்களுடைய இராசதானிகளின் பெருமைகளும், உமணர்களுடைய செயல்களும், ஏழு வள்ளல்களின் அருஞ்செயல்களும், நல்லியக்கோடனது வீரமும், பாணனுடைய வறுமைநிலையும், நெய்தல்நிலஇயல்பும், அதனைச் சார்ந்த எயிற்பட்டினத்தில் உள்ள நுளையர் வாழ்க்கைமுறையும், முல்லைநில இயல்பும், அதைச் சார்ந்த *வேலூரிலுள்ள எயிற்றியர் விருந்து பேணும் தன்மையும், மருதநில இயல்பும், அதனைச் சார்ந்த ஆமூரிலுள்ள உழவர்மகளிர் ஒழுகலாறும், அவர் விருந்தினரைப் பேணும் திறமும், நல்லியக் கோடனுடைய நற்குணங்களும் வீரச்செயல்களும் வள்ளன்மையும், யாழின்வருணனையும், நல்லியக் கோடனைப் புகழும் முறையும், அவன் பாணனை உபசரித்துப் பரிசில் நல்கும் அருமையும் இதிற் காணப்படுகின்றன.

ச. பெரும்பாணாற்றுப்படை: இது 500-அடிகளை உடைய ஆசிரியப்பாவாலாகியது; பரிசில் பெறுதற்குரிய பெரும்பாணன் ஒருவனைப் பரிசில்பெற்றானொருவன் காஞ்சிநகரத்திற் செங்கோல் செலுத்திக் கொண்டிருந்த தொண்டைமான் இளந்திரையனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அவ்விளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது.

பெரும்பாணரென்பார் பாணருள் ஒருவகையினர். இப்பாட்டுள், "இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி" (462) என வருதலால் இப்பாணர்க்குரியது பேரியாழென்று தெரிகிறது. இவ்வகையினர் பண்டைக்காலத்தில் மதுரையிலும் காவிரிப்பூம்பட்டினத்திலும் இருந்தனரென்று, "அழுந்துபட் டிருந்த பெரும்பாணிருக்கையும்" (மதுரைக்காஞ்சி, 342), "அரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையும்" (சிலப். ரு: 37), என்பவற்றால் தெரியவருகின்றது; "பெரும்பாண் காவல் பூண்டென" (நற். சo: 3)

* உப்புவேலூர்.

என்ற செய்யுளினும் பெரும்பாணனென்னும் பெயர் வந்துள்ளது; அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனாரைத் * திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பியும், பெரியபுராணத்திற் பலவிடங்களில் தொண்டர் சீர்பரவுவாரும் பெரும்பாணரென்று கூறியிருத்தல் அவரும் இவ்வகையினரெனக் கருத இடந்தருகின்றது. 'பெரும்பாணராவார் குழலர் பாணர் முதலிய பெரிய இசைக்காரர்' என்பர், அடியார்க்கு நல்லார்.

பாணாறு எனவும் இப்பாட்டு வழங்கப்பெறும். யாழின் வருணனை, இளந்திரையன் நாட்டில் அவன் செங்கோன்முறையால் வழிப்போவாருக்கு விலங்குகள் முதலியவை துன்பஞ்செய்யாமை, உப்புவாணிகர் இயல்பு, கவர்த்தவழிகளைக் காப்பவர்தன்மை, எயிற்றியர் செயல், கானவர்தொழில், எயினரரண்களின் நிலை, வீரக்குடிமகள் இயல்பு, மறவர் வீரம், இடையர்குடியிருப்பின் தோற்றம், ஆய்மகள் செயல், இடையர் தன்மை, உழவர் குடியிருப்பின் அமைப்பு, உழுவார்செய்கை, மருதநிலத்தின் நிகழ்ச்சி, வலைஞர் குடியிருப்பின் இயல், அந்தணர் ஒழுக்கமுறை, அந்தணச்சாதிமகள் ஊறுகறி அமைக்கும் முறை, நீர்ப்பெயற்றென்னும் ஊரின் பெருமை, பரதர் தெருவில் நிகழ்வன, †பட்டினத்தின் சிறப்பு, கலங்கரைவிளக்கத்தின் மாண்பு, திருவெஃகாவில் திருமால் பள்ளிகொண்டருளியிருத்தல், காஞ்சிநகரின் சிறப்பு, இளந்திரையனுடைய வீரம் கொடை முதலியவற்றின் பெருமை, பேய்கள் வனதுர்க்கைக்குத் தம் பசிப்பிணியைக் கூறும் மரபு, பாணர் இளந்திரையனாற் பொற்றாமரை பெறுதல், விறலியர் அவனாற்

* "நிணையொப் பருந்திரு நீலகண்டப் பெரும் பாணனை" (திருத்தொண்டர் திருவந். 83); "நீடுசீர்த்திரு நீலகண்டப் பெரும்பாணர்", "திருநீல கண்டதுப் பெரும்பாணர்", "பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையா ரெதிர்கொள்ள", "பிள்ளையா ரருள்பெற்ற பெரும்பாணர்", "அருட்பெரும் பாணனாரை", "மன்பெரும் பாண னாரு மாமறை பாட வல்லார், முன்பிருந் தியாழிற் கூடன் முதல்வரைப் பாடு கின்றார்", "நல்ல விசையாழ்ப் பெரும்பாணர்க், கானபடியாற் சிறப்பருளி", "பெரும்பாணர் மலர்த்தாள் வணங்கி" பெரிய. திருநீலநக்க. 24, திருஞான. 131 - 2, 138, திருநீலகண்ட. 3 - 4, 11 - 2.

† இதனை மகாபலிபுரமென நினைத்தற் கிடமுண்டு.

பொன்மாலை பெறுதல், அவன் பரிசிலரை உபசரிக்கும் முறை, அவன்மலையில் யானை குரங்கு முதலியன முனிவர்க்கு ஏவல் புரிதல் முதலியன இப்பாட்டால் அறியப்படும் செய்திகள்.

ஐந்திணைகளைப்பற்றிய வருணனைகளும், அவ்வத்திணையிலுள்ள பலவகைச் சாதியார் இயல்புகளும், அவர்கள் தத்தமக்கேற்றவாறு விருந்தினர்களை ஆதரிக்கும் முறையும், அந்தணர் முதலியோர் அன்போடு விருந்தூட்டும் தன்மையும் இப்பாட்டில் மிக அழகாகக் கூறப்பட்டிருக்கின்றன.

ரு. முல்லைப்பாட்டு: இது 103-அடிகளை உடைய ஆசிரியப் பாவாலமைந்தது; தலைமகன் போர் செய்தற்குப் பிரியக் கருதியதனைக் குறிப்பால் உணர்ந்து ஆற்றாளாய தலைவியது வாட்டத்தைக்கண்டு அவன் வற்புறுத்திச் செல்லவும் அவள் உடம்படாததை அறிந்த பெருமுதுபெண்டிர், 'அவன் வினைமுடித்து வருதல் உண்மை; நீ வருத்தம் நீங்குக' எனக் கூற, அதுகேட்டு அவள் பின் உளதாம் இல்வாழ்க்கைப் பயனை நினைந்து ஆற்றியிருந்தவழி, தலைவன் அக்காலத்தே போர்முடித்து வந்ததனைக்கண்டு தோழி முதலியோர் தம்முட் கூறியதாகக் காவிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் பாடியது. முல்லையென்பது இல்லறம் நிகழ்த்துதற்குப் பிரிந்துவரும் துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை யென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

இந்நூல் *முல்லையெனவும் வழங்கும். இப்பாட்டினால், பெருமுதுபெண்டிர் விரிச்சிபார்க்கும் வழக்கமும், பாசறையின் அமைப்பும், பாகர் யானைப்பேச்சானவடமொழிச்சொற்களைக்கூறி யானைகளுக்குக் கவளமருத்தும் வழக்கமும், பாசறையிலுள்ள பள்ளியறையின் இயல்பும், அங்கே நிகழும்நிகழ்ச்சிகளும், வீரமங்கையர் நாழிகை சொல்வார் மெய்காப்பாளர் என்பவர்களுடைய செயல்களும், தலைவன் பகைவரால் துன்புற்ற தன் படைகளின் வருத்தத்தை நினைந்து வருந்தும் அன்பின்திறனும், தலைவி தலைவனைக் காணாது துயருறுவதும், கார்காலத்திற் காட்டுவழியில் தோன்றும் காட்சிகளும் அறியப்படுகின்றன.

* தக்க. 54, உரை.

சு. மதுரைக்காஞ்சி : இது 782-அடிகளை உடையது ; முதலி லும் இடையே சிலசிலவிடத்தும் வஞ்சியடிகள்வந்த ஆசிரியப்பா வாலாயது ; தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனுக்கு வீடுபேறு நிமித்தம் பலவகை நிலையாமை யைச் செவியறிவுறுத்தற்கு மாங்குடிமருதனார் பாடியது.

மதுரைக்காஞ்சியென்ற தொடரை மதுரையிடத்து அரசற் குக் கூறிய காஞ்சியென விரிப்பர். காஞ்சித்திணையென்பது வீடு பேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோர் கூறும் குறிப்பினது. இப்பாட்டின்கண், "கொன்னொன்று கிளக்குவ லடுபோ ரண்ணல், கேட்டிசின் வாழி கெடுகநின் னவலம்" (207 - 8) என்பவற்றால் வீடுபேறாகிய நிமித்தத்தையும், "அன்னாய் நின் னொடு முன்னிலை யெவனோ" (206), "திரையிடு மணலினும் பலரே யுரைசெல, மலர்தலை யுலக மாண்டு கழிந்தோரே" (236 - 7) என்பது முதலியவற்றாற் பல்வேறு நிலையாமையையும் ஆசிரி யர் புலப்படுத்தியிருத்தல் காண்க.

பெரும்பான்மை வஞ்சியடிகளால் அமைந்திருத்தலின் இதனை வஞ்சிப்பாவின் தலையளவிற்கெல்லையாகக் காட்டினர் * நச்சினார்க் கினியர். இந்நூலின்பெருமை, "பெருகு வளமதுரைக் காஞ்சி" என்பதனால் அறியப்படும்.

இதன் முறபகுதியில் செங்கோலரசருடைய நாட்டிற் கோள் கள் பிறழாது வழங்குதல் முதலிய நன்னிகழ்ச்சிகள் உண்டாகு மென்பது கூறப்பட்டுள்ளது.

நெடுஞ்செழியன் பகைவர்கள்மேற் படையெடுத்துச்சேறலும், அவர்கள் அரணங்களையும் காவன்மரங்களையும் அழித்தமையும், தன் ஏவல் கேட்பார்க்கு அருளிக் கேளாதவரை அழித்து அவர் நாடு களைப்பாழாக்கியமுறைகளும், தலையாலங்கானத்துப் போர்செய்து சேர சோழர்களையும் ஐந்து குறுநில மன்னர்களையும் வென்ற செய்தியும், சாலியூர் முதுவெள்ளிலை முதலிய ஊர்களைக் கைக் கொண்டதும், பரதவரை அடிப்படுத்தியதும், பகைவரை வென்று கொணர்ந்த பொருள்களை நட்டோருக்கும் புலவர் முதலியோருக் கும் தனக்கெனப் பாதுகாவாமல் வழங்கும் வண்மையும், பிறரைப் பணியாப் பெருவிறலும், முந்தையோர் அடிவழிப் பிழையா

* தொல். செய். சூ. 157, உரை.

மூதறிவும், பொய்தவிர்ந்து வாய்மைமொழியும் பொற்பும், கொடுத்துப் புகழ்கொள்ளும் கொள்கையும், பிற அருங்குணங்களும் இந்நூலில் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இப்பகுதிகள் புறப் பொருட்டுறைகளுக்குரிய சிறந்த இலக்கியங்களாக விளங்குகின் றன. இது நச்சினார்க்கினியர் தம் உரையில் அங்கங்கே துறைகளை விளக்கிச் செல்வதனால் அறியப்படும்.

போர்புரிந்து பகைவரை வெல்வதையே கருதித் தன் வாழ் நாளிற் பெரும்பகுதியைக் கழித்த பாண்டியன் நெடுஞ்செழியனுக் குப் பல்வேறு நிலையாமையை அறிவுறுத்தப் புகுந்த ஆசிரியர் முதற்கண்ணே தம் கருத்தைப் புலப்படுத்தாமல் அவன் முன்னோ ருடைய நல்லியல்புகளையும் அவனுடைய கொடை, வீரம், நற் குணம் முதலியவற்றையும் எடுத்துப் பாராட்டிப் புகழ்ந்து பின்பு தம் கருத்தைக் குறிப்பாகச் சில அடிகளாலே புலப்படுத்திப் பின்னர் மதுரையின் பெருவளத்தைப் பரக்கக் கூறியிருத்தல் அவரது * உலகியலறிவையும் மன்னவர்களிடத்து ஒழுகும் முறை யையும் புலப்படுத்துகின்றது.

பாண்டிநாட்டைப் புகழும் முகத்தால் அஃது ஐந்திணை வளங்களையும் உடையதென்பதும், அத்திணைகளில் ஒவ்வொன்றி லும் காணப்படும் காட்சிகளும் நிகழும் நிகழ்ச்சிகளும் மலிந்த ஓசைவகைகளும் முதல் கரு உரிப்பொருள்களின் அமைதிபெற மிகச் செவ்வனே கூறப்பட்டுள்ளன.

மதுரையின் பெருமையைக் கூறுகையில் முதலில் வையை யாறு மதில் அகழி முதலியவற்றின் பெருமையும், அந்நகரின் நாளங்காடியின் வருணனையும், பின் அல்லங்காடியின் வருணனையும் காணப்படுகின்றன.

நாளங்காடி வருணனையில் பண்டம் விற்பார், விழாவெடுப் பார், வெற்றியைப் புலப்படுத்துவார் முதலியோர்கள் எடுத்த பல வகைக் கொடிகளும் பிறவும் கூறப்படுகின்றன.

---

* சிலப்பதிகாரத்தில், செங்குட்டுவனை நோக்கி நன்னெறி யறி வுறுத்தப் புகுந்த மாடலமறையவனார் முதலில் அவனை வாழ்த்தி அவ னுடைய முன்னோர் பெருமை முதலியவற்றைக் கூறிப் பின்பு தாம் குறித்த நீதிகளை உலகியல் பறிந்துசொல்லும் முறையைப் புலப்படுத்தும், "மன்னவர் மன்னே" (உஅ : 112) என்பது முதலிய அடிகள் இங்கே கருதற்குரியன.

அல்லங்காடி வருணனையில், அந்தணர் இருக்கை முதலியவற்றின் அமைப்பும், காவிதிமாக்கள் அறங்கூறவையத்தார் முதலியோர் இயல்பும், பல்வகைப்பண்டம் விற்பாரைப்பற்றிய செய்திகளும் விளக்கப்பட்டிருக்கின்றன.

பின்னர், மதுரையிலுள்ளார் மாலைமுதல் நாட்காலை வரையிற் பொழுதுபோக்கும் முறை மிக விரிவாகக் கூறப்படுகின்றது. மாலைக்காலத்தில் மங்கையர் ஒழுக்கமும், பரத்தையர் இயல்பும், கருவுயிர்த்தவர் நீராடுதல் முதலிய செயலும், இராக்காலத்தில் கள்வர் செயலும், காவலர் காக்கும் திறனும், விடியற்காலத்தில் அந்தணர் முதலியோர் வேதமோதுதல் முதலியனவும் கூறப்படுகின்றன.

இப்பாட்டில் இடையிடையே சொல்லப்பட்ட நெடுஞ்செழியன் முன்னோர்களாகிய பாண்டியர் மூவர். அவர்கள், முந்நீர் வடிம்பலம்ப நின்றபாண்டியன், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, *நிலந்தரு திருவிற்பாண்டியன் என்பார்.

மதுரையிற் கொண்டாடப்படுவனவாகக் கூறும்முறையினும் உவமை கூறும்முறையினும் திருப்பரங்குன்ற விழா, மதுரைக் கோயில்களில் நடைபெறும் விழா, அந்தி விழா, ஏழுநாள் நடைபெறும் விழா, திருவோண நாள் விழா, நன்னன் பிறந்தநாள் விழாவென்பன சொல்லப்படுகின்றன.

இதிற் கூறப்பட்ட ஊர்கள்: அழும்பில், மோகூர், மதுரை, சாலியூர், முதுவெள்ளிலை, கொற்கை, தலையாலங்கானம்.

முடிமன்னர் முதலியோர்: சேரசோழர், மானவிறல்வேள், நன்னன், பழையன், மாறன், ஐம்பெருவேளிர், நான்மொழிக் கோசர்.

இறுதியில் நெடுஞ்செழியன் நாட்காலையில் வீரர்களுக்கும் பாணர் முதலியவர்களுக்கும் களிறு முதலியவற்றை வழங்கும் நிகழ்ச்சியைக் கூறும் பகுதியில் வீரர்களாற்றிய பலவகை வீரச் செயல்கள் கூறப்படுகின்றன.

எ. நெடுநல்வாடை: இது 188 - அடிகளை உடைய ஆசிரியப்பா; பகைமேற் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப்

---

* "நிலந்தரு திருவினெடியோன்" என்பதற்குத் திருமாலெனப் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

பிரிந்து வருந்தும் தலைவிக்கு அவ்வருத்தம் தீரும்படி அவன் பகையை வென்று விரைவில் வருவானாகவென்று கொற்றவையைப் பரவுவாள் கூறியதாக அவனை நக்கீரனார் பாடியது.

இப்பெயர் நெடிதாகிய நல்ல வாடையென விரிக்கப்படும். தலைவனைப் பிரிந்திருந்து வருந்துந் தலைவிக்கு ஒருபொழுது ஒரூழி போல நெடிதாகிய வாடையாய், அரசன் போகத்தில் மனமற்று வேற்றுப் புலத்துப் போந்திருக்கின்ற இருப்பாகலின் அவனுக்கு நல்லதாகிய வாடையாயினமையின் நெடு நல் வாடை யெனப்பட்டது. "கூதிர்ப்பானாள்" (12), "கூதிர் நின்றன்றாற்போதே" (72) என்பவற்றால் வாடைக்குரிய கூதிர்க்காலமும், "வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கி" (173) என்பதனால் வாடையும், "புலம்பொடு வதியு நலங்கிள ரரிவைக், கின்னா வரும்படர் தீர" (166 - 7) என்பதனால் தலைவியின் நிலையும், "சிலரொடு திரிதரும் வேந்தன், பலரொடு முரணிய பாசறைத் தொழிலே" (187 - 8) என்பதனால் அரசன் பாசறையில் இருப்பதும், "இன்னே முடிகதில் லம்ம" (168) என்பதனாற் கொற்றவையைப் பரவுதலும் விளங்குகின்றன.

இஃது அகப்பொருட்கேற்ற செய்திகளைத் தன்பாற்கொண்டுள்ளதேனும், "வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகம்" (176) எனப் பாண்டியனது அடையாளப் பூவாகிய வேம்பைக் கூறினமையின் அகத்திணையின்பாற்படாது புறத்திணையாயிற்று. இதனை வாகைத்திணையுட் கூறிய கூதிர்ப்பாசறை யென்னும் துறையுள் அடக்குவர் நச்சினார்க்கினியர். வாகைத்திணை வெற்றியைக் குறிப்பது; இங்கே, போகம் நுகர்வார்க்குச் சிறந்த காலமாகிய கூதிர்க் காலத்து அப்போகத்தில் விருப்பின்றிப் பகைப்புலத்துப் போந்திருப்பதனால் பாண்டியன் காமத்திடத்து வெற்றியை யெய்தின காரணம்பற்றி வாகையாயிற்றென்பர்.

இதில், கூதிர்க்காலத்தில் மக்களும் விலங்கு பறவைகள் முதலியனவும் குளிரால் வருந்தியிருக்கும் நிலை முன்னர்க் கூறப்படுகின்றது. பின்பு தலைவியின் நிலையைக் கூறப்புக்க ஆசிரியர், தலைவி வதியும் அரண்மனையின் அமைப்பையும் அதன் வாயில் முதலியவற்றின் அழகையும், தலைவி பள்ளிகொள்ளும் பாண்டிற் கட்டிலின் கைத்தொழில் நலத்தையும், அதில் இட்டு வைத்துள்ள

பாயலின் அமைப்பையும் கூறித் தலைவி அரசன் பிரிவினால் வருந்தும் நிலையை அவளது பண்டைய நிலையொடு மாறுபடச் சுட்டி விரிக்கின்றார். இதனால் தலைவியின் கற்பு நிலையும் அவளுற்ற துயர் மிகுதியும் விளங்குகின்றன. அவளது வருத்தந்தீர மகளிரும் செவிலியரும் ஆற்றும் செயல்கள் பின்பு சொல்லப்படுகின்றன. இறுதிப்பகுதியில், அரசன் புண்பட்ட வீரர்கள்பால் அன்பு பூண்டு நடுயாமமென்று பாராளுகி மழை பெய்தலையும் கருதாமற் சென்று முகமலர்ந்து அவர்களைக்கண்டு ஆற்றுவிக்கும் செய்தி கூறப்படுகின்றது. இதனால் அரசனுடைய எளிமையும், செய்ந்நன்றியறிவும், வீரர்களது பெருமையும் புலப்படுகின்றன.

இடையிடையே கூறப்படும் செய்திகளால், பூ மலர்வதனாற் பொழுதை அறியும் வழக்கமும், மகளிர் மாலைக்காலத்தைக்கொண்டாடும் செயலும், மனைவகுக்கும் முறையும், வேலுக்கு அடையாளப் பூவை அணியும் மரபும் அறியப்படுகின்றன.

அ. குறிஞ்சிப் பாட்டு: இது 261 - அடிகளை உடைய ஆசிரியப்பாவாலமைந்தது. * காப்புக் கைம்மிக்குக் காமம் பெருகித் தலைவன் வரும் வழியிலுள்ள ஊறஞ்சும் காலத்துத் தலைவி பாங்கிக்கு அறத்தொடு நின்றாளாக, பாங்கி †எளித்தல், ஏத்தல், வேட்கையுரைத்தல், ஏதீடு, தலைப்பாடு, உண்மை செப்பும் கிளவியென்னும் ஆறும் கூறிச் செவிலிக்கு அறத்தொடு நின்றவழிக் கூறும் கூற்றாக ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ்ச்சுவையை அறிவுறுத்தற்பொருட்டுக் கபிலர் பாடியது.

குறிஞ்சி - புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய ஒழுக்கம். இதன்கண் இயற்கைப் புணர்ச்சியும் பின்னர் நிகழும் புணர்ச்சிகளுக்கு நிமித்தங்களும் கூறப்படுதலின் இஃது இப்பெயர் பெற்றது.

இப்பாட்டு, ‡ பெருங்குறிஞ்சி யெனவும் வழங்கப்பெறும். இதில் பிறதிணைக்குரிய முதலுங் கருவும் மயங்கிவந்தனவேனும் உரிப்பொருட் சிறப்புப்பற்றி இது குறிஞ்சியென்னும் பெயர் பெற்றது.

இதனுள் தலைவி பாங்கிக்கு அறத்தொடு நிற்றற்குக் காரணமாகிய சிறைகாவல், "காவலர் கடுகினும்" (240) என்பது

* இறை. சூ. 29. † தொல். பொருளியல், சூ. 13.
‡ பரி. கக: 77, பரிமேல்; தொல். அகத். சூ. 19, ந.

முதலிய அடிகளாலும், தலைவனுக்குவரும் ஊறஞ்சுதல், "அளைச் செறியுழுவையும்" (252) என்பது முதலிய அடிகளாலும், தலைவி பாங்கிக்கு அறத்தொடு நின்றது, "முத்தினு மணியினும்" (13) என்பது முதலியவற்றாலும் விளங்கும்.

இப்பாட்டு, களவொழுக்கத்தினைப் புலப்படுத்தி நிற்பது. களவுக்காலத்து நிகழ்வனவற்றிற் பெரும்பான்மையான செய்திகள் இதில் முறையே கூறப்பட்டுள்ளன. இஃது இத்தன்மையதாதலே, "தேற்ற, மறையோர் மணமெட்டி னைந்தா மணத்திற், குறையாக் குறிஞ்சிக் குணம்" (குறிஞ்சிப்பாட்டு, இறுதிவெண்பா) என்னும் செய்யுள் புலப்படுத்தும். ஐந்தாமணம்-காந்தருவம்; அதனிற் குறையாது ஒப்பதாவது களவு.

இதனுள் தலைவிக்கு விரகத்தால் உண்டாகிய வேறுபாடு களும் தலைவனுடைய தோற்றத்தின் இயலும், தலைவியின் மேற் சென்று அச்சுறுத்திய தனது நாயைத் தலைவன் காத்தவாறும், களிறுதரு புணர்ச்சி புனறரு புணர்ச்சி முதலிய துறையமைதி களும், மாலைக்காலத்திற் பறவைகளும் விலங்கினமும் மக்களும் செய்யும் செயல்களும் கூறப்பட்டுள்ளன.

தலைவி தோழியுடன் நீராடிப் பல பூக்களைப் பறித்துப் பாறை யிற் குவித்தாளென்ற செய்தியைக் கூறுகையில் 99-மலர்களின் பெயர்கள் சொல்லப்படுகின்றன.

தலைவி நாய்க்கு அஞ்சுகையில் தலைவன் காத்த செய்தியைக் கூறுமிடத்து, "மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத், தாகாண் விடையி னணிபெற வந்து" எனத் தலைவனுக்கு விடையை உவமையாகச் சொல்லிய ஆசிரியர் அதற்கேற்ப, தலைவியை அவ ளது ஊரளவும் கொணர்ந்து விட்டதைக் கூறுகையில், "துணை புணரேற்றி னெம்மொடு வந்து" என அவ்வுவமையையே பின் னும் சுவைபெறக் கூறியிருத்தல் அறிந்து இன்புறத்தக்கது. இதில், தலைவனது மலைவளங் கூறும் பகுதி உள்ளுறை யுவமப் பொருளமைய அமைந்துள்ளது.

தலைவன் தலைவியை வஞ்சினங் கூறித் தேற்றியதாகக் காணப் படும் பகுதியால், வரைந்துகொண்டு விருந்து புறந்தந்து இல்லறம் நிகழ்த்தும் முறையும், தலைவன் மலைமிசைக் கடவுளை வாழ்த்தி

வஞ்சினங்கூறும் தன்மையும், நீர்குடித்தலாகிய சூளுறவும் அறியப்படுகின்றன.

இது குறிஞ்சிப்பாட்டாதலின், அத்திணைக்குரிய கடவுளாகிய முருகனைப்பற்றிய செய்திகளை, "சுடர்ப்பூட் சேஎய், ஒன்னார்க் கேந்திய விலங்கிலை யெஃகின், மின்", "நெடுவேளணங்குறு மகளிர்", "பிறங்குமலை மீமிசைக் கடவுள் வாழ்த்தி" என ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார்.

ஓரரசனுக்கு இது கூறப்பட்டதாதலின் அவனுக்கேற்ப, தோழியின் நிலையை, "இகன்மீக் கடவு மிருபெரு வேந்தர், வினையிடை நின்ற சான்றோர் போல" என விளக்கியும், நாய்களுக்கு உவமை கூறுகையில், "முனைபாழ் படக்குந் துன்னருந் துப்பிற், பகைபுறங் கண்ட பல்வே லிளைஞரின்" எனச் சொல்லியும், மாலைக்காலம் பலவகை நிகழ்ச்சிகளை முன்னிட்டுக் கொண்டு வருதலை, "சினைஇய வேந்தன் செல்சமங் கடுப்பத், துனைஇய மாலை துன்னுதல் கானூஉ" என உவமைகொண்டு அறிவித்தும் அரசர்களையும் வீரர்களையும் பற்றிய செய்திகளை ஆசிரியர் எடுத்தாண்டமை பாராட்டற்பாலதாம்.

௯. பட்டினப்பாலை: இது 301 - அடிகளை உடையது; பெரும்பான்மையும் வஞ்சியடிகளாலமைந்து ஆசிரியவடிகளால் இறுவது; வேற்று நாட்டிற்குச் செல்லத்தொடங்கிய தலைவன் தனது நெஞ்சை நோக்கி, 'தலைவியைப்பிரிந்து வாரேன்' என்று செலவழுங்கிக் கூறும் கூற்றாகச் சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது.

* வஞ்சிநெடும்பாட்டெனவும் இது வழங்கப்பெறும். இப்பாட்டைப் பாடியதற்காக உருத்திரங்கண்ணனார் பதினாறுயிரம் பொன் கரிகாற்பெருவளவனாற் பரிசு பெற்றனரென்பது, "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன், பத்தொ டாறுநூ றாயிரம் பெறப், பண்டுபட்டினப் பாலைகொண்டதும்" (கலிங்க. இராச. 21) என்பதனாலறியப்படுகின்றது; "பாடிய பாக்கொண்டு பண்டு பதினாறு, கோடி பசும்பொன் கொடுத்தோனும்" (சங்கர சோழனுலா, 10), "பாடியதோர் வஞ்சிநெடும் பாட்டாற் பதினாறு,

---

* யா. வி. செய். சூ. 37; யா. கா. ஒழிபு. சூ. 4; இ. வி. சூ. 745, உரை.

கோடிபொன் கொண்டதுநின் கொற்றமே" (தமிழ்விடு. 193) என்பவற்றால் அத்தொகை பதினாறுகோடி பொன்னெனக் கூறுவாரும் உளரென்று தெரிகின்றது.

இப்பாட்டை வஞ்சிப்பாவின் இடையளவிற்கு எல்லையாகக் காட்டுவர் * நச்சினார்க்கினியர்.

பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணையாகலின் இஃது இப்பெயர்பெற்றது; பாலை - பிரிதலும் பிரிதல் நிமித்தமும். இதில் வேற்றுநாட்டிற்குத் தலைவன் பிரியும் காலத்துத் தானுறும் இடும்பையிடத்து அவன் செலவுதவிர்ந்து நெஞ்சொடு கூறினமை, "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும், வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய, வாரேன் வாழிய நெஞ்சே ..........திருமா வளவன் தெவ்வர்க் கோக்கிய, வேலினும் வெய்ய கானமவன், கோலினுந் தண்ணிய தடமென் றோளே" என்னும் அடிகளாற் புலப்படும். அவளை ஆற்றுவித்துப் பின்பு பிரிதல் கருதியே வாரேனென்றான். இது, "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்" (தோல். கற்பு. சூ. 44) என்னும் இலக்கணத்தாற் பெறப்படும். "முதல் கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே, நுவலுங் காலை முறைசிறந் தனவே" (தோல். அகத். சூ. 3) என்பதன் உரையில் உள்ள, 'முதலிற் கருவும் கருவில் உரிப்பொருளும் சிறந்து வரும்' என்பதற் கிணங்க இதில் உரிப்பொருளே சிறந்துவந்தது.

இப்பாட்டில் முதலில் சோழநாட்டின் பெருமையும் பின்பு காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பும் அதன்பின் கரிகாற் பெருவளத்தான் வீரச் செயல்களும் உறையூரை அவன் வளப்படுத்தினமையும் கூறப்படுகின்றன.

முதலில், பஞ்சகாலத்தின் காரணங்களும் இயல்புகளும், காவிரியின் சிறப்பும், சோழநாட்டுக் குடிவளமும், † இருகாமத்

* தோல். செய். சூ. 157.

† இவ்வேரிகள் சோமகுண்டம் சூரியகுண்டமென வழங்கப் பெற்று வந்தன; இவ்விரண்டும் திருவெண்காட்டிலுள்ள சோமதீர்த்தமும் சூரியதீர்த்தமுமாமென்று சில பெரியோர் கூறுவர். முற்காலத்தில் திருவெண்காடு காவிரிப்பூம்பட்டினத்தின் எல்லைக்குள் அடங்கியிருந்ததாகத் தெரிவதால் இது சரியெனவே தோற்றுகின்றது.

திண்ணையேரி, அறச்சாலை, தவப்பள்ளி, துர்க்கையின் கோயில் முதலியவற்றின் இயல்புகளும், பின்பு பரதவர்கள் பகலிலும் இரவிலும் பொழுது போக்கும் முறையைக் கூறும் பகுதியில் பரதவர் குடில்களின் தோற்றமும், அவர்கள் சுறுக்கொம்பை நட்டு வருணனை வழிபடும் மரபும், உவாக்காலத்தில் மீன் வேட்டைக்குச் செல்லாத வழக்கமும், தீவினை நீங்கக் கடலாடும் இயல்பும், கடலிற் சென்ற பரதவர் கரையிலுள்ள வீடுகளில் ஏற்றிய விளக்குக்களை எண்ணும் செயலும் காணப்படுகின்றன.

பரதவர் தெருவைப்பற்றிய செய்திகள் பின்பு கூறப்படுகின்றன. இப்பகுதியால், காவிரிப்பூம்பட்டினத்தில் கடல்வாணிகம் நிகழ்ந்து வந்ததென்பதும்; ஏற்றுமதி இறக்குமதியாகும் பண்டங்களில் சோழனுடைய அடையாளமாகிய புலிப்பொறியைப் பொறித்துவந்தனரென்பதும், அவற்றிற்குச் சுங்கம் வாங்கி வந்தார்களென்பதும், அச்சுங்கப்பொருளைத் தொகுப்பார் அரசன்மாட்டு அன்புடையராகித் தம் கடமையைக் குறைவின்றி நிறைவேற்றி வந்தனரென்பதும் அறியப்படுகின்றன. இவ்வாறு கப்பல் வியாபாரம் நடந்தமையாற் பல நாட்டிற்கும் சோழநாட்டுப் பொருள்கள் சென்றன வென்பதும், ஈழம் காழகம் முதலிய நாடுகளிலிருந்து பல பொருள்கள் சோழநாட்டிற்கு வந்தன வென்பதும் தெரிகின்றன.

அப்பால் காவிரிப்பூம்பட்டினத்து ஆவணத்தின் வளம் கூறப்படுகிறது. இப்பகுதியில், கோயில்களில் எடுத்தகொடியும், பண்டங்களை விற்றற்குத் தூக்கிய கொடியும், கற்றறிந்த ஆசிரியர்கள் வாதுகருதிக் கட்டியகொடியும், கட்கடையில் உள்ள கொடியும் சொல்லப்படுகின்றன.

பிறகு இமயம், குடகு, தென்கடல், மேல்கடல், கங்கை, காவிரி, ஈழம், காழகம் முதலிய இடங்களிலிருந்து வந்தபொருள்கள் கூறப்படுகின்றன. அதன்பின்பு வணிகர் இயல்பு சொல்லப்படுகின்றது. அவர்கள் கொலை களவு முதலிய குற்றங்களைப் பிறரிடமிருந்து நீக்கும் செயலையும், தேவர் பசு அந்தணர் முதலியோரை வழிபட்டு வந்ததையும், அவர்களது நடுவு நிலைமையையும், வாணிகமுறையையும் இப்பகுதி விளக்குகின்றது.

பின்னர், கரிகாலன் இளமையில் சிறையில் இருந்தமையும், அச்சிறையினின்றும் நீங்கி அரசுரிமையை எய்தினமையும், பகைவர் நாட்டைப் பாழ்படுத்திய முறையும், ஒளியர் அருவாளர் வடவர் குடவர் பொதுவர் இருங்கோவேள் முதலிய சிற்றரசர்களையும் பாண்டியரையும் வென்றமையும், உறையூரை விரிவுற அமைத்து அதிற் பல குடிகளை நிலைநிறுத்தி மதில் வாயில்கள் முதலியன அமைத்தமையும் சொல்லப்படுகின்றன.

கரிகாலனாற் பாழ்பட்ட பகைவர் நாடுகளைப் பற்றிக் கூறும் பகுதியில் அந்நாட்டின் பழைய நிலை மிக அழகாகவும் பாழாயின பின் அடைந்த நிலை இரக்கத்தை உண்டாக்கும் முறையிலும் விளக்கப்பட்டிருக்கின்றன.

௧0. மலைபடுகடாம்: இது, 583-அடிகளை உடைய ஆசிரியப்பாவாலாகியது; பரிசில் பெறவரும் கூத்தனொருவனைப் பரிசில் பெற்றானொருவன் செங்கண்மாத்து வேள் நன்னன்சேய் நன்னனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அந்நன்னனை இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியது. இது கூத்தராற்றுப்படை யெனவும் வழங்கும்; கூத்தர் - ஆடன் மாக்கள். இவர்களுக்குச் சாதி வரையறை இலது. இவர்கள் எண் வகைச் சுவையும் மனத்தின்கட் பட்ட குறிப்புக்களும் புறத்துப் புலப்பட ஆடுவோர். "கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ" (50) என்ற விளியினால் இது கூத்தரை ஆற்றுப்படுத்திய தென்பது அறியப்படும்.

"அலைகைத் தவிர்த்த வெண்ணருந் திறத்த, மலைபடு கடாஅ மாதிரத் தியம்ப" (347 - 8) என்ற அடிகளால் மலைக்கு யானையை உவமித்து அதன்கட்பிறந்த ஓசையைக் கடாமெனச் சிறப்பித்தவதனால் இப்பாட்டு மலைபடுகடாமென்று பெயர் பெற்றது. கடாமென்பது ஆகுபெயராய் அதனாற்பிறந்த ஓசையை உணர்த்திற்று. இவ்வாறு ஒருபாட்டினிலுள்ள பொருட்சிறப்புடைய தொடரால் அப்பாட்டின் பெயரைக் குறித்தலுண்டென்பது பதிற்றுப் பத்தினாலும் உணரப்படுகின்றது.

பரந்த மொழியால் அடிநிமிர்ந்து வந்ததோலென்னும் வனப்பிற்கு இப்பாட்டு உதாரணமாக இளம்பூரணராலும் ஆசிரியப்பா

வின் தலையளவிற்கு எல்லையாக நச்சினார்க்கினியராலும் எடுத்துக் காட்டப்பெற்றிருக்கின்றது.

இதில், பலவகை இசைக் கருவிகளின் பெயர்களும், யாழின் வருணனையும், மலைச்சாரலின் வளமும், அச்சாரலில் வாழும் குறவர்களும் காடுகாக்கும் வேடர்களும் வருவோரை விருந்தூட்டி உபசரிக்கும் இயல்பும், மலைப்பக்கத்தில் நிகழும் பலவகை ஓசைகளைப்பற்றிய செய்திகளும், கோவலரும் நாடுகாக்கும் வேடரும் உழவர்களும் தம்பால் வருவோரை உபசரிக்கும் திறமும், நன்னனது ஊரின் பெருமையும், அவன் அரண்மனை வாயிலில் அவனது காட்சியைக் கருதிநிற்பார் கொண்டுவந்த கையுறை வகைகளும், அவனைப் புகழும் முறையும், அவன் தன்பால் வந்த கூத்தர் விறலியர் முதலியோருக்குப் பரிசில் நல்கி விடுக்கும் வண்மையும் கூறப்படுகின்றன.

இடையிடையே அவ்வவ்விடங்களிலுள்ளார் தத்தமக்கேற்றவாறு உதவும் உணவுவகைகளும், இடைவழியில் வழிச்செல்வார்க்கு நிகழும் இடையூறுகளும், அவற்றை நீக்கிக்கொண்டு செல்லும் உபாயமும் மிக விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன.

நன்னனுக்குரிய நவிரமலையில் உள்ள காரியுண்டிக் கடவுளது கோயிலைப்பற்றிய செய்திகளும் சேயாற்றின் பெருமையும் இதிற் காணப்படும். "குன்றுசூழிருக்கை நாடுகிழ வோனே" (583) என்பதனால் நன்னனுடைய ஊரமைந்துள்ள பல்குன்றக் கோட்டம் சொல்லப்பட்டிருக்கிறது.

வரகின்கவைக்கதிருக்கு வாதியின் கையை உவமை கூறியிருத்தலும், குறமகளிர் தம் கணவர் புண்ணுறப்படும் வருத்தத்தைப் பாட்டுப்பாடித் தணித்தலும், யானையைக் கந்திற்பிணிக்கும் பாகர் யானைப் பேச்சான சில வடமொழிகளைப் பயிற்றும் வழக்கமும், வழிக்கு அடையாளமாகக் கவர்த்த வழிகளின் தொடக்கத்தில் புல்லை முடிந்து வைத்தலும், கற்புக்குக் கொடியுண்மையும், பாணருக்குப் பொற்றாமரைப் பூவையும் விறலியருக்கு இழைகளையும் உபகாரிகள் அளித்தலும் பிறவுமாகிய செய்திகள் இதனால் அறிதற்பாலன.

இன்ன இன்ன செய்திகளைக் கூறுவேன் கேளெனத் தொகுத்துச்சுட்டிப் பின்புவிரிக்கும் முறை இவ்வாற்றுப்படையில் மட்டும் காணப்படுகின்றது.

கூத்தனை ஆற்றுப்படுத்துகையில், இன்ன இன்ன இடங்களில் இன்ன இன்ன செயல்களைச் செய்க வெனக் குறிப்பிடுகையில், "நறுங்கா ரடுக்கத்துக் குறிஞ்சி பாடி" (359) எனவும், "எருதெறி களமரோதையொடு நல்யாழ், மருதம் பண்ணி யசையினிர் கழிமின்" (469 - 70) எனவும் அவ்வத்திணைக்கேற்ற பண்களைப் பாடுமாறு சொல்லப்படுதல் அறிந்து மகிழத்தக்கது.

ஆங்காங்கு ஆசிரியர் பலவகை உவமைகளைக் கூறிப் பொருளை விளக்கிச் செல்கின்றார். அவற்றுள், கூத்தருக்குத் தக்கபடி, "விரலூன்று படுகண் ணாகுளி கடிப்பக், குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கம்" (140 - 41) எனவும், "சுரஞ்செல் கோடியர் முழவிற் றாங்கி, முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்குசினைப் பலவே" (143 - 4) எனவும், "கானப்பலவின் முழவுமருள் பெரும்பழம்" (511) எனவும், "வராஅற், றுடிக்க ணன்ன குறையொடு" (457 - 8) எனவும் ஆகுளி முழவு துடியென்னும் இசைக்கருவிகளையும், "கோளி யாலத்துக், கூடியத் தன்ன குரல் புணர் புள்ளின்" (268 - 9) எனவும், "அருவி நுகரும் வானர மகளிர், வருவிசை தவிராது வாங்குபு குடைதொறுந், தெரியிமிழ் கொண்ட நும் மியம்போ லின்னிசை" (294 - 6) எனவும் இசைக் கருவிகளின் ஓசையையும், நுகர் பொருள்கள் ஒன்றையொன்றொவ்வா இனிமையையுடையன வென்பதைப் புலப்படுத்துவாராய், "நல்லியாழ்ப், பண்ணுப் பெயர்த்தன்ன காவும் பள்ளியும்" (450 - 51) என அவற்றிற்கு ஒன்றையொன்றொவ்வா இனிமையையுடையனவாகிய பண்களையும், "கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும்" (236 - 7) எனக் கூத்தர் பிள்ளைகளையும், நன்னன் மலையில் உள்ள ஆரவாரத்தையும் பிறவற்றையும் கூறியபின்பு அம்மலையைச் சிறப்பிப்பாராய், "முழவுத்துயி லறியா வியலு ளாங்கண், விழவி னற்றவன் வியன்கண் வெற்பே" (350 - 51) எனக் கூத்தர்கள் தொக்குத் தம் வன்மையைக்காட்டும் விழாவையும் உவமையாக எடுத்தாண்டிருத்தல் ஆசிரியருடைய பேரறிவாற்றலைப் புலப்படுத்திப் படிப்போரை இன்புறுத்துகின்றது.

சீவகசிந்தாமணியை யான் முதன்முறை பதிப்பித்து வந்த பொழுது நச்சினார்க்கினியர், தம் உரையிற் காட்டும் மேற்கோள்களுக்குப் பின் அவற்றின் இடத்தை உணர்த்தாமல், 'என்றார் பிறரும்' என எழுதிச் செல்லுவதையறிந்து அவற்றிற்கு ஆகரங்களைத் தெரிந்துகொள்ள நினைந்து பழைய ஏட்டுச்சுவடிகளைப் படித்துப் பார்த்துவந்தேன். திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவானும் என்னுடைய தமிழாசிரியருமான திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் ஏட்டுச் சுவடிகளுள் ஒன்றிற் பொருநராற்றுப்படையென்ற பெயர் இருத்தலையறிந்து அதனையெடுத்துப் படித்துவருகையில் சில பகுதிகள் சீவகசிந்தாமணி உரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றனவாக இருந்தன. அதனால் ஊக்கம் கொண்டு மேலும் படித்துவருகையில், மதுரைக்காஞ்சி வரையில் அப்பிரதியிலிருந்தமையின் பல மேற்கோட் பகுதிகள் அவற்றிற் காணப்பட்டன; "முருகுபொருநாறு" என்னும் பழைய வெண்பாவிற் கூறப்பெற்ற நூற்பெயர்களிற் சிலவும் அவற்றின் முறையும் அமைந்திருந்தமைகண்டு அவை பத்துப்பாட்டைச் சார்ந்தனவென்றறிந்தேன். நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்பாயிரத்துள்ள, "சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரியல், ஒருபது பாட்டும்" என்னும் பகுதியினால் பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியருரையுண்டென்பதை முன்பே அறிந்திருந்தே னாதலின் அப் பிரதியிலுள்ளது அவருரையென்று தெரிந்துகொண்டேன். அதன் பிறகு, பத்துப்பாட்டுக்களை நச்சினார்க்கினியர் உரையுடன் ஆராய்ந்து வெளியிடவேண்டுமென்னும் எண்ணத்தால் பார்த்திவஸு (1883) முதல் ஏட்டுப் பிரதிகளைத் தேடிவந்தேன். இயற்றமிழாசிரியர் திருத்தணிகை ஸ்ரீ விசாகப் பெருமாளையரவர்களுடைய மருகர், வேலூர் ஸ்ரீ குமாரசாமி ஐயரென்பவர் ஒரு பிரதிதந்தார். அதில் பொருநராற்றுப்படை முதல் மலைபடுகடாமிறுதியாக உள்ள பாட்டுக்கள் ஒன்பதும் இருந்தன. பிள்ளையவர்கள் பிரதியிலும் அப்பிரதியிலும் உள்ளபாட்டுக்களுள் ஒன்றிற்கேனும் மூலம் கிடைக்கவில்லை. பாராயண நூலாக இருந்தமையால், திருமுருகாற்றுப்படைமட்டும் பல இடங்களிற் காணப்பட்டது. ஆதலின், முற்கூறிய இரண்டு பிரதிகளிலும் உரைக்கு முன்னம் சிறிது சிறிது ஒரு மொழியும் தொடர்மொழியுமாக அமைந்திருந்த மூலபதங்களையே யிணைத்து எனது சிற்றறிவிற்கு

எட்டியமட்டும் அடிவரையறைசெய்து அவ்வொன்பது பாட்டையும் எழுதிக்கொண்டேன்; உரையாசிரியர்களால் இவற்றிலிருந்து பழைய இலக்கிய இலக்கண உரைகளில் மேற்கோளாக எழுதப்பட்டவற்றுள் கிடைத்த சில பகுதிகள் இவற்றின் மூலங்களை இணைக்குங்காலத்துப் பேருதவியாக இருந்தன. இவ்வாறு உரையிலிருந்து மூலங்களைக் கண்டுபிடித்துத் தொகுத்தது அளவிறந்த துன்பத்தை உண்டாக்கிவிட்டது.

பின்பு கிடைத்த பிரதிகளுள் ஆறுமுக மங்கலத்துப் பிரதியில் திருமுருகாற்றுப்படை மூலமும் பொருநராற்றுப்படை மூலமும் சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதியில் பெரும்பாணாற்றுப்படை மூலமும் முல்லைப்பாட்டு மூலமும் இருப்பக்கண்டு அவற்றோடு நான் எழுதி வைத்திருந்த மூலங்களை ஒப்புநோக்கிக் கொண்டேன். ஷை புத்தக சாலைப் பிரதியில், "முருகாறு பொருநாறு சிறுபாணாறு முல்லைபெரும் பாணாறு மதுரைக் காஞ்சி, பரிதாய பொருடமூவா நெடுநல் வாடை பட்டினப்பாலைகுறிஞ்சி மலைகடாமும், மருவாரும் பொழில்புடைசூழ் களந்தை மூதூர் வருசிவப்ப பூபனருள் வேல பூபன், உரையோடு மெழுதினனு தலினு லன்னுனுங்குபெருஞ் செல்வமிசை யுற்று வாழி" என்னும் பாடலொன்று எழுதப்பட்டிருந்தது. குறிஞ்சிப்பாட்டில் 64-ஆம் அடிக்குமேற் சில அடிகள் விட்டுப்போனதுபோற் றோற்றியது. தருமபுரமடத்திலிருந்து கிடைத்த ஒற்றையேடுகளுள் ஒன்றில் அப்பகுதி யிருப்பதைக்கண்டு அதனைச் சேர்த்துக்கொண்டேன். இப்பிரதிகளுள் ஒன்றிலேனும் சிறிய தொடர்கள் சிலவற்றிற்கு உரை கிடைக்கவில்லை.

பத்துப்பாட்டு மூலமும் உரையும் 1889-ஆம் வருடத்தில் முதற் பதிப்பாக வெளியிடப் பெற்றன.

அப்பதிப்பிற்கு உதவியாக இருந்த ஏட்டுப் பிரதிகள்

1. திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவான் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் பிரதி .... க
2. தருமபுர ஆதீனத்துப் புத்தகசாலைப் ,, .... க

3. வேலூர் ஸ்ரீ குமாரசாமி ஐயர் அவர்கள் பிரதி .... க
4. ஆறுமுகமங்கலம் ஸ்ரீ குமாரசாமிபிள்ளை அவர்கள் „ .... க
5. திருநெல்வேலி ஸ்ரீ கவிராஜ நெல்லையப்ப பிள்ளை அவர்களும் அவர்களுடைய தம்பி ஸ்ரீ கவி ராஜ ஈசுவரமூர்த்திப் பிள்ளையவர்களும் உதவிய „ .... க
6. திருநெல்வேலியைச்சார்ந்த வண்ணாரப்பேட்டை ஸ்ரீ திருப்பாற்கடனாத கவிராயர் அவர்கள் „ .... க
7. ஆழ்வார்திருநகரி ஸ்ரீதேவர்பிரான் கவிராயரவர்கள் „ .... க
8. பொள்ளாச்சி வித்வான் ஸ்ரீசிவன்பிள்ளை அவர்கள் „ .... க
9. ஸ்ரீ திருவம்பலத்தின்னமுதம்பிள்ளை அவர்கள் „ .... க
10. ஸ்ரீ ம. வி. கனகசபைப் பிள்ளை அவர்கள் „ .... க
11. சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைப் பிரதி .... க

இவற்றுள் உரைமட்டுமிருந்த பூர்த்தியான பிரதிகள், 3, 4, 6 - என்ற எண்களுள்ளவைகளே.

பின்பு, 1918 - ஆம் ௵ இரண்டாவது பதிப்பு வெளியிடப் பட்டது. அப்பதிப்பிற்கு உதவியாகக் களக்காடு ஸ்ரீசாமிநாத தேசிகரவர்களால் ஒரு கையெழுத்து மூலப்பிரதியும், சில உரைப் பிரதிகளும் கிடைத்தன; அவற்றாலும் நாளடைவிற் செய்துவந்த ஆராய்ச்சிகளாலும் பத்துப்பாட்டின் மூலமும் உரையும் சில சில திருத்தங்களை அடைந்தன.

உரையாசிரியர்களால் இப்பாட்டுக்களிலிருந்து மேற்கோள் களாக எடுத்தாளப்பட்டிருக்கும் பகுதிகளையும் இடங்களையும் ஞாபகத்துக்கு வந்த அளவு விளக்கியும், திருமுருகாற்றுப் படைக்குமட்டும் வேறுரையொன்று கிடைத்தமையால் அதிற் காணப்பட்ட விசேடமான வேறுபாடுள்ள பகுதிகளையும் பாட பேதங்களையும் அதனுரையில் அங்கங்கே கீழ்க் குறிப்பாகப் புலப் படுத்தியும், மூலத்திற்குரிய அடியெண்களை உரைப்பகுதியில் உரிய இடங்களில் அமைத்தும், உரையிலுள்ள அருஞ்சொற்களுக்குப் பொருளும் விளக்கமும் எழுதியும், உரையிற் சொற்களின் முத லிறுதிகள் தோன்றப் பிரித்துக்காட்டியதன்றி மையீற்றுப் பண் புப் பெயர்களுள் நிச்சயமாகத் தெரிந்த முதனிலையைப் புலப்

# பாடப்பட்டோர் வரலாறு.

---

க. ஆரியவரசன் பிரகத்தன்: இவன் பத்துப்பாட்டினுள்ளெட்டாவதாகிய குறிஞ்சிப்பாட்டைக் கேட்டுத் தமிழ்ச்சுவையை யறிந்து இன்புற்றவன்; கபிலர் காலத்தவன். இவனைப்பற்றி இப்பொழுது வேறு யாதொன்றும் விளங்கவில்லை. குறுந்தொகையில், "அறிகரி பொய்த்த லான்றோர்க் கில்லை" (184) என்னுஞ் செய்யுளை இயற்றியவன்பெயர் ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தனென்று தெரிகின்றது. சிலப்பதிகாரத்தில் ஆரியமன்னரென்னும் ஒருவகையரசர் கூறப்படுகின்றனர்; இவன் அவருள் ஒருவனோ வேறோ தெரியவில்லை.

உ. ஓய்மானாட்டு நல்லியக்கோடன்: இவன் பத்துப்பாட்டினுள் மூன்றாவதாகிய சிறுபாணாற்றுப்படைத்தலைவன்; இவன் காலத்தில் இவனைப்போன்ற பெருங்கொடையாளிகள் யாரும் இலர்; பேகன் முதலிய எழு வள்ளல்களுக்கும் இவன் காலத்தாற் பிந்தியவன்; இவை முறையே இப்பாட்டிலுள்ள, "வஞ்சியும் வறிதே", "மதுரையும் வறிதே", "உறந்தையும் வறிதே" என்பவற்றாலும் 84 - ஆம் அடிமுதலியவற்றாலும் விளங்கும். புறநானூற்றில் "ஓரையாயம்" என்னும் 176-ஆம் செய்யுளைப் பெற்றவன்; இவன் ஓய்மானல்லியக்கோடனெனவும் வழங்கப் பெறுவன்; இதனை மேற்கூறிய புறப்பாட்டின் பின்னுள்ள வாக்கியத்தாலறிக. இவன் பரம்பரையில்ஓய்மானல்லியாதன் ஓய்மான் வில்லியாதனென்ற இரண்டு உபகாரிகள் இருந்து விளங்கினார்களென்று புறநானூற்றால் தெரிகின்றது. இவன் காலத்து நல்லிசைப்புலவர்கள் நல்லூர்நத்தத்தனாரும், மேற்கூறிய, "ஓரையாயம்" என்னும் பாடலையியற்றிய புறத்திணைநன்னாகனாரென்பவரும் ஆவர். இவனுடையதாகச் சொல்லப்பட்ட கிடங்கிலென்னும்ஊர் இப்பொழுது திண்டிவனத்தைச் சார்ந்துள்ளது; கிடங்காலெனவும் வழங்கும். திண்டிவனத்திலுள்ள தீண்டீசுவரமென்னும் சிவபெருமான் திருக்கோயில் இக்கிடங்கிலிலிருந்ததாகச் சாஸனங்களால் தெரியவருதலின் இப்பொழுது திண்டிவனமென்று வழங்கும் பெரிய ஊரும் அதனைச் சார்ந்த இடங்களும் சேர்ந்த பெரியதொரு நகரமாகக் கிடங்கில் இருந்திருக்கவேண்டுமென்று தோற்றுகின்றது இவ்வூர், காவிதிக்கீரங்கண்ணனார், காவிதிப் பெருங்கொற்றனார், குலபதி நக்கண்ணனாரென்னும் மூன்று நல்லிசைப் புலவர்களுக்குரிய இடமாகத் தெரிகின்றது. யாப்பருங்கல விருத்தியின் மேற்கோளாகிய, "கிடங்கிற் கிடங்கில்" என்னும் வெண்பாவில் வந்துள்ள கிடங்கிலென்னுமூர் இதுவே. இதிற் சிதைந்த அகழியும் இடிந்த கோட்டையும் இன்றும் காணப்படுகின்றன.

இவனுடைய ஊர்களுள் ஒன்றாகிய மாவிலங்கை யென்பது, புன்னாட்டுக்கு வடக்குள்ள அருவாநாடு, அருவாவடதலை நாடென்ற இரண்டும் சேர்ந்த இடமென்று கூறுவர்; அவ்வூர் புறநானூற்றாலும் இவனதென்று தெரிகின்றது. இவனுடைய மற்ற ஊர்களுள் எயிற்பட்டினம், வேலூர், ஆமூரென்பவை தொண்டை நாட்டிலுள்ள இருபத்து நான்கு கோட்டங்களுள் மூன்று கோட்டங்களுக்குத் தலைநகரங்களாகவுள்ளவை; வேலூர் உப்புவேலூரென்று இக்காலத்து வழங்குகின்றதென்பர். சிறுபாணாற்றுப்படை, 172 - 3-ஆம் அடிகளுக்கு நச்சினார்க்கினியர் எழுதிய விசேடவுரையால் இவன் தன்பகை மிகுதிக்கு அஞ்சி முருகக்கடவுளை வழிபட்டானெனவும் அப்பொழுது அக்கடவுள் கனவில் எழுந்தருளிஇவ்வூரிலுள்ள ஒரு கேணியிற் பூத்தபூவைப் பறித்துப் பகைவர்பால் விடுக்குமாறு கட்டளையிட்டருளினாரெனவும் அவ்வாறே இவன் அப்பூவைப் பறித்து அதனையே வேலாகக்கொண்டு பகைவரை வென்றானெனவும் இக்காரணத்தால் இது வேலூரெனப் பெயர்பெற்றதெனவும் அறியப்படுகின்றது. "உறுபுலித் துப்பி னோவியர் பெருமகன்" (சிறுபாண். 122) என்றதனால், இவன் ஓவியர் குடியிற் பிறந்தவனென்று எண்ணப்படுகின்றான். ஓவியர்குடி நாகர் வகுப்பினுள் ஒருபிரிவென்பர்.

ரு. குமரவேள்: இவருடைய பெருமைகள் பலநூல்களாலும் விளங்கத்தெரிந்தவையே. திருமுருகாற்றுப்படையிற் கூறப்பெற்ற இவருடைய படைவீடுகள், திருப்புகழ் முதலியவற்றிலும், அவற்றுள் திருப்பரங்குன்றம், மதுரைக்காஞ்சியிலும், பரிபாடலிலும், "ஒன்னாதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற, வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்" எனக் (27) கலித்தொகையிலும், "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற், சீர்மிகு முருகன் றண்பரங் குன்றத், தந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை, யின்றீம் பைஞ்சுனை", "கூடற் குடாஅது, பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய, வொடியா விழவி னெடியோன் குன்றத்து, வண்டுபட நீடிய குண்டுசுனை" என (59, 149) அகநானூற்றிலும், கல்லாடத்திலும், திருச்சீரலைவாய் (செந்தில்) "திருமணி விளக்கி னலைவாய்ச், செருமிகு சேஎயொ டுற்ற சூளே" (அகநா. 266), "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை" (புறநா. 55), "சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்று, மேரகமும், நீங்கா விறைவன்" (சிலப். குன்ற.), "நஞ்செந்தின்மேய, வள்ளிமணாளர்க்குத் தாதை கண்டாய்" (தே. மறைக்காடு) எனப் புறநானூறு முதலியவற்றிலும் பாராட்டப்பெற்றிருத்தல் காண்க. இங்கே காட்டிய சிலப்பதிகாரச் செய்யுளில் ஏரகமும் கூறப்பெற்றுள்ளது. பழமுதிர் சோலையில் முருகக்கடவுளின் தலம்

இருந்ததென்பதை "புண்ணிய சரவணம்" (சிலப் கக: 94) என்னும் பொய்கையின் பெயரும், அஃது அப்பெயருடன் இக்காலத்தும் அங்கே யிருத்தலும் புலப்படுத்தும்.

திருப்பரங்குன்றம் முதலிய ஆறுபடை வீடுகளும் திருமுருகாற்றுப் படையிற் கூறிய முறைப்படியே கந்தரந்தாதியின் முதற் செய்யுளிலும் கந்தபுராணக் கடவுள் வாழ்த்திலும் பிறவற்றிலும் அமைந்துள்ளன. அலைவாயை நாமனூரலைவாயென்றும், திருவேரகத்தை மலைநாட்டி லுள்ளதொரு திருப்பதியென்றும் கூறுவர் நச்சினார்க்கினியர்; திருவே ரகம் சுவாமிமலையென்பது அருணகிரியார் முதலியோர் கொள்கை. திரு வாவினன்குடி, சித்தன்வாழ்வென்றும் வழங்கப்படுமென்று தெரிகிறது.

ச. சோழன் கரிகாற்பெருவளத்தான்: இவன், இப்பாட்டுக் களுள், பொருநராற்றுப்படைக்கும் பட்டினப்பாலைக்கும் தலைவன்; சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியின் புதல்வன்; நாங்கூர் வேளிடை மகட்கொண்டோன்; இவற்றைப் பொருநராற்றுப்படை, 130 - ஆம் அடியாலும், தொல்காப்பியத்துள்ள அகத்திணையியல், 30 - ஆம் சூத்திரம் நச்சினார்க்கினியருரையாலுமுணர்க. தம்முள் மாறுபட்டு வந்து தன்னை இளையனென்றிகழ்ந்த முதியோர் பொருட்டுத் தான் முதி யன்போல் வந்து அவர்கள் வழக்கைத் தீர்த்தானென்றும், தான் கருவூரி லிருக்கையில் கழுமலமென்னுமூரிலிருந்த யானையாற் கொண்டுவரப் பட்டு அரசாட்சிக்கு உரியனாயினானென்றும், இளமையில் நெருப்பாற் சுடப்பட்டு உயிர்பிழைத்தானென்றும், இரும்பிடர்த் தலையாரை அம்மா னாக உடையனென்றும் பழமொழி 21, 62, 105 - ஆம் வெண்பாக்க ளாலும் அவற்றின் உரைகளாலும் மணிமேகலையாலும் விளங்குகின்றன.

பட்டினப்பாலையைக் கேட்டுக் கடியலூருருத்திரங்கண்ணனாருக்கு இவன் பதினாறுநூறாயிரம் பொன் பரிசளித்தானென்று கலிங்கத்துப் பரணி, இராசபாரம்பரியம் 21 - ஆம் செய்யுளால் விளங்குகின்றது.

வெண்ணியென்னுமூர்ப்புறத்தேயுள்ள போர்க்களத்திற் சேரமான் பெருஞ்சேரலாதனோடு போர்செய்து அவனை வென்றான்; அவனோடு அக்களத்தில் ஒரு பாண்டியனையும் இவன் வென்றானென்று பொரு நராற்றுப்படையால் விளங்குகின்றது. இவன் காவிரிப்பூம்பட் டினத்திலிருந்து அரசாட்சி செய்தானென்பதும், ஒருகாலத்தில் இமய மலைவரையிற்சென்று இடையிலுள்ள அரசர்களை வென்றானென்பதும் சிலப்பதிகாரம், அதனுரை, கலிங்கத்துப்பரணி, பெரியபுராணம், காஞ்சிப்புராணம் முதலியவற்றால்தெரிகின்றன. இவன் உறையூரைத் தனது இராசதானியாகத் தேர்ந்தெடுத்து அதனை வளம்படுத்தினான். இவன் வீரருட்சிறந்தவீரன். இவன்பெயர் சோழன் கரிகால் வளவனெனவும்

கரிகாலனெனவும் கரிகாலெனவும் வழங்கும். இவனைப் பாடியவர்கள் கருங்குழலாதனார், வெண்ணிக்குயத்தியார்; இவருள் இவன் இறந்த பின்பும் இருந்தோர் கருங்குழலாதனார்.

ரு. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன்: இவன், மதுரைக்காஞ்சியும் நெடுநல்வாடையும் பெற்றோன்; இளமைப்பருவத்தில் * தலையாலங்கானத்திற் கோச்சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையோடு போர்செய்து அவனைச் சிறைப்படுத்தியதன்றிச் சோழன் திதியன் எழினி எருமையூரன் இருங் கோவேண்மான் பொருநன் என்பவரையும் வென்றான்; வேள் எவ்வியின் மிழலைக்கூற்றத்தையும் பழைய வேளிருடைய முத்தூற்றுக்கூற்றத்தை யும் கைக்கொண்டான்; மறக்கள வேள்வியும் அறக்களவேள்வியும் செய்தான்; "நகுதக்கனரே" (புறநா. 72) என்னும் செய்யுளை இயற் றியவனாதலால், இவன் நல்லிசைப்புலவர் வரிசையில் விளங்கியவனென் றும் தெரிகின்றது; புலவர்களிடத்து மிக்க அன்புள்ளவன்; மாங்குடி மருதனார் முதலிய நல்லிசைப் புலவர்கள் பலரை ஆதரித்தோன்; உத் தமகுணங்கள் பலவு முடையோன். இவன் பெருமைகள் விரிப்பிற் பெருகும். இவன்பெயர் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனெனவும், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனெனவும், நெடுஞ்செழியனெனவும் வழங்கும். இவனைப் பாடிய புலவர்கள்: குடபுலவியனார், கல்லாடனார், மாங்குடிகிழார், இடைக்குன்றூர்கிழார்.

சு. தொண்டைமானிளந்திரையன்: இவன் நான்காம்பாட்டா கிய பெரும்பாணாற்றுப் படைக்குத் தலைவன்; இவனுடைய பிறப்பின் வர லாறு இப்புத்தகம் 214 - ஆம் பக்கத்தால் அறியலாகும்; அதில் நாக கன்னியென்றது மணிமேகலை 24 - ஆம் காதையின் 57 - ஆம் அடி யிற்கூறப்பெற்ற பீலிவளையேயென்றும் அதற்குத்தக்க ஆதாரம் சாஸ னத்திலும் நூல்களிலுமுள்ளதென்றும் சொல்லுகின்றனர்; முடியுடை மன்னர் மூவரொடு சேர்த்து எண்ணப்படும் பெருமைவாய்ந்தவனேனும், "வில்லும் வேலும்" என்னும் (தொல். மரபு. சூ. 83) சூத்திரவுரையில், 'மன்பெறு மரபி னேனோ ரெனப்படுவோர், அரசுபெறுமரபிற் குறுநில மன்ன ரெனக்கொள்க; அவை பெரும்பாணாற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காணப்படும்' எனப் பேராசிரியர் எழுதியிருத்தலால் இவனைக்குறுநில மன்னனாகப் பண்டையோர் கொண்டிருந்தனரென்று தெரிகின்றது. இப்பெயர் இளந்திரையனெனவும் திரையனெனவும் திரையலெனவும்

* தலையாலங்கானம் - தலையாலங்காடு; சோழநாட்டுச் சிவஸ்த லங்களுள் ஒன்று.

நூல்களில் வழங்கும். இவனியற்றிய பாடல்களாக நற்றிணையில் மூன்றும் புறநானூற்றில் ஒன்றும் காணப்படுதலால், இவன் நல்லிசைப்புலவர் வரிசையிற்சேர்ந்த பெருமைவாய்ந்தவனென்றும் தெரிகின்றது. இளந்திரையமெனை ஒரு நூல் இவனாற் செய்விக்கப்பெற்றதென்று இறையனாரகப்பொருளுரை, நன்னூன் மயிலைநாதருரை முதலியன தெரிவிக்கின்றன; நன்னூல் மயிலை நாதருரையில், (ப. 245) திரையனூரென்பதற்குத் திரையனாற்செய்யப்பட்ட ஊர், திரையனது ஊர் என்றுபொருள் செய்திருத்தலின், இப்பெயருள்ள ஊரொன்று பண்டைக்காலத்தில் இவனால் நிருமிக்கப்பெற்றதென்று தெரிகிறது.

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்
டோங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்"
(அகநானூறு, 213)

"பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவீற் றிருந்த புலவீர்காள் பாடுகோ
ஞாயிற் றொளியான் மதிநிழற்றே தொண்டையார்
கோவீற் றிருந்த குடை"

"வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவன்
நான்மாடக் கூடலிற் கல்வலிது
சோழ னுறந்தைக் கரும்பினிது (?) தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது"

"ஆழி யிழைப்பப் பகல்போ யிரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும் - வாழி
நறுமாலை தாராய் திரையவோ வென்னும்
செறுமாலை சென்றடைந்த போது"
(பழைய மேற்கோள்கள்)

என்பவற்றால் இவன்பரம்பரையோருடைய பெருமை புலப்படும்.

எ. நன்னன்: பத்தாவதாகிய மலைபடுகடாத்தின் தலைவனாகிய இவன் வரலாற்றை அறிவதற்கு அந்நூலும் அதன் இறுதியிலுள்ள பழையவாக்கியமும், அகநானூறு, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, புறநானூறு, மதுரைக்காஞ்சி முதலியவற்றின் சில பகுதிகளுமேயன்றி வேறுகருவி கிடைத்திலது. இவன் வேளிர் குலத்தைச் சேர்ந்தவன்; பிறநூல்களில் நன்னன் வேண்மானெனக் கூறப்பெறுபவன் இவனே (அகநா. 97); வேண்மான் - வேளிர்தலைவன். இவன் தந்தையின் பெயரும் நன்னனென்பது.

இவனுடைய, ஆட்சிக்குட்பட்ட பெரும் பிரிவான இடம் பல்குன்றக்கோட்டம்; நகர் செங்கண்மா (மலைபடுகடாத்தின் இறுதிவாக்கியத்தைப் பார்க்க); மலை நவிரமலை; ஆறு சேயாறு; இவற்றுள்,

பல்குன்றக்கோட்டமென்பது தொண்டைநாட்டின் பெரும்பிரிவாகிய உ௪-கோட்டங்களுள் ஒன்று. பல குன்றங்களைத் தன்பாற் பெற்றிருத்தலின் இக்கோட்டம் இப்பெயர் பெற்றது. கோட்டமென்பது நாட்டின் பெரும்பிரிவிற்குச் சங்கேதமாக வழங்கி வருகின்றது. 'பல்குன்றக் கோட்டத்துச் சிலைநாட்டுத் திருவேங்கடம்' என்னும் சிலாசாஸன வாக்கியத்தால், திருவேங்கடமலை (திருப்பதி) யும் பல்குன்றக் கோட்டத்துள்ளதென்று தெரிகிறது; "குன்றுசூ ழிருக்கை நாடுகிழ வோனே" (மலைபடு. 583) என்பது இதனை வலியுறுத்தும்.

செங்கண்மா என்னும் ஊர் திருவண்ணுமலைக்கு மேற்றிசையில் உள்ளது; இது செங்கண்மானெனவும், செங்கமா எனவும் இக்காலத்து வழங்கும். இந்நகரில், பண்டைக்காலத்தில் அகழி, கோட்டை, பெரிய வீதி, கடைத்தெரு, குறுந்தெரு, சிங்காதனமமைந்த இராசசபை, நாளோலக்கம், அரியகாவல்களையும் நன்னனைப் பார்த்தற்குப் பலரும் தத்தமக்குரிய காணிக்கைகளைக் கொணர்ந்து வைத்துக் காத்திருக்கும் முன்றிலையுமுடைய கோபுரவாசல் முதலியவற்றையுடைய அரண்மனை, அயலூரிலிருந்து வருபவர்கள் கவலையின்றித் தங்குவற்குரிய பொதுவிடமாகிய மன்று ஆகிய இவைகள் இருந்தனவென்று அந்நூல் தெரிவிக்கின்றது.

நவிரமலை: இது மிக்க வளத்தையும் புகழையும் உடையது; இதில், 'காரியுண்டிக்கடவுள்' (83) என்று திருநாமம்பெற்ற சிவபெருமானுடைய திருக்கோயிலுண்டு; சேனைகளை அமைத்து நன்னன் அக்கோயிலைப் பரிபாலித்து வந்தனன் (226-30); இம்மலை இக்காலத்தில் திரிசூலகிரி, பர்வதமலை என வழங்கப்படுகின்றது. சிவபெருமானுக்கு அங்கே இக்காலத்து வழங்குந் திருநாமமும் ஸ்ரீகாளகண்டேசுவாரென்பது. இம்மலை திருவண்ணுமலையின் வாயுதிக்கில் உள்ளது ; ஆதாரம், அக் கோயிற் சாஸனமும், திரிசூலகிரிப்புராணமும். இதனால் நன்னனைச் சைவசமயாபிமானியென்று நினைத்தற்கிடமுண்டு.

சேயாறு : இது, "காணுநர் வயாஅங் கட்கின் சேயாறு", "கடுவரற் கலுழிக் கட்கின் சேயாறு" (476, 555) என அந்நூலுள்ளே பாராட்டிக் கூறப்படும்; இக்காலத்துச் சண்முகநதியென வழங்கும் நதி இதுவே (அருணசல புராணம், திரிசூலகிரிப்புராணம்.)

இவன் மேன்மையையுடையவன்; மிக்ககொடையாளி; பிறருடைய குற்றங்களை உள்ளடக்கிக் குணங்களையே பாராட்டி அவர்களை மேம்படுத்

தும் சிறந்த சுற்றத்தையுடையவன்; பொய்யா வாய்மையினன்; மிக்க வீரன்; ஒவ்வொன்றையும் ஆராய்ந்து செய்பவன்; ஐம்பொறிகளையும் வென்றவன்.

மானவிறல்வேள், செருச்செய்முன்பிற் குருசில், திருந்துவேலண்ணல், செருமிக்குப்புகலுந் திருவார்மார்பன், தேம்பாய்கண்ணித் தேர்வீசுகவிகை ஓம்பாவள்ளல், வண்டுபடக் கமழுந் தேம்பாய்கண்ணித் திண்டேர் நன்னன், வெல்போர்ச் சேஎய்ப் பெருவிறல், குன்றாநல்லிசைச் சென்றோரும்பல் என அந்நூலுட் பாராட்டப்பெற்றிருத்தலின் இவனுடைய மேம்பாடுகள் புலனாகின்றன.

இவன்மனைவி கற்பிற்சிறந்தவள்; கற்பிற்கு அறிகுறியாகக் கொடியைப் பெற்றவள் (424.)

"பேரிசை நன்னன் பெரும்பெயர் நன்னாட், சேரி விழவி னார்ப்பெழுந் தாங்கு" (மதுரை. 618-9) என்பதனால், நன்னனென்னு மொருவனுடைய பிறந்தநாட்கொண்டாட்டம் பண்டைக்காலத்தில் நடைபெற்று வந்ததாகத் தெரிகின்றது.

இவன் காலத்துப்புலவர் பரணர், பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார், மாங்குடிமருதனார், மாமூலனார் முதலியோர்.

# நச்சினார்க்கினியர் வரலாறு.

## உரைச்சிறப்புப்பாயிரச் செய்யுட்கள்.*

### வெண்பா.

† க. பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்கும்—சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே.

உ. தொல்காப் பியத்திற் றொகுத்த பொருளனைத்தும்
எல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான்—சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

### ஆசிரியப்பா.

ங. பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ளுண்ணிதி னுணர்ந்த
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தின்
நாற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
(ரு) தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
எழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்றும்
இழுக்கற வாய்ந்த வழுக்கிறெரல் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறைவு மின்றி யென்றும்
க0 கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியும்
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியும்
உரையிடை யிட்ட காண்டிகை யுரைத்தும்
கரு ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து

---

* இந்தச் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் நான்கும் பண்டைக் காலத்தனவே.

† இந்தவெண்பா, திருவாவடுதுறை யாதீன மடத்துப் புத்தகசாலையிலுள்ள ஒரு பழைய திருக்குறட் பரிமேலழகருரைப் புத்தகத்திறுதியில், "நற்றிணை நல்ல", "முருகுபொருநாறு", "நாலடிநான்மணி" என்னும் வெண்பாக்கள் மூன்றனோடும் எழுதப்பட்டிருந்தது.

சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரியல்
ஒருபது பாட்டு முணர்பவர்க் கெல்லாம்
உரையற முழுதும் புரைபட வுரைத்தும்
ஒலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்கும்
உ0 கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமும்
தெள்ளிதிற் றெரிந்து தினைப்பொருட் கேற்ப
உள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
உரு இறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
௩0 பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
௩ரு சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து
௪0 வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
௪ரு இதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்
தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்
எண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத் துவாசன்
ரு0 நான்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாளன்

நவின்ற வாய்மை நச்சினார்க் கினியன்
இருவினை கடியு மருவியம் பொதியின்
றிரு மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
ஊழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை யானே.

ஆசிரிய விருத்தம்.

௬. பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
எச்சினாற் றிசையு முண்ணு மமிழ்தென வெழுநா வெச்சில்
மெச்சினா ளனும் விண்ணோர் மிசைகுவர் வேத போதன்
நச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.

பாண்டி மண்டல சதகம்.

கரைபெற்ற தோர்பஞ்ச லட்சண மானதொல் காப்பியமும்
தரைமுற்றும் போற்றிய சிந்தா மணியுந் தமிழ்ச்சங்கத்தின்
நிரைபெற் றுயர்பத்துப் பாட்டும் விளங்க நிசவுரையை
வரைநச்சி னார்க்கினி யன்னையன் பாண்டிய மண்டலமே.

பத்துப்பாட்டின் உரையாசிரியராகிய ஆசிரியர் நச்சினார்க்கினியர், பாண்டிவள நாட்டுள்ள மதுராபுரியிற் பிராமண வருணத்திற் பாரத்து வாசகோத்திரத்திற் பிறந்தவர். தமிழ்மொழியிலுள்ள பலவகையான நூல்களிலெல்லாம் மிக்க பயற்சியுள்ளவர்; சைவசமயத்தினர்; இவர் இன்னராதல், உரைச்சிறப்புப் பாயிர அகவலின் 47-ஆம் அடி முதலிய வற்றால் விளங்கும். சிவதலங்களுட் சிறந்த சிதம்பரத்தினது திருநாமங் களாகிய 'திருச்சிற்றம்பலம்', 'பெரும்பற்றப்புலியூர்' என்பவற்றை முறையே ஆறெழுத் தொருமொழிக்கும் ஏழெழுத் தொருமொழிக்கும் உதாரணமாக, "ஓரெழுத்தொருமொழி" (தொல். மொழிமரபு. சூ. 12) என்னுஞ் சூத்திரத்து விசேடவுரையிற் காட்டியிருத்தலாலும், சைவசமயத்துச்சிறந்த நூல்களாகிய திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவையார் திருவுலாப்புறம் முதலியவற்றினின்றும் தமது உரைகளிற் பலவிடங் களில் இலக்கியவிலக்கணப் பொருள்களுக்கும் தத்துவப்பொருளுக்கும் மேற் கோள்கள் எடுத்துக்காட்டி யிருத்தலாலும், அங்ஙனம் மேற்கோள் கொண்ட சில இடங்களில் எழுதியுள்ள விசேட வுரைகளாலும், சீவக சிந்தாமணி 362,1141-ஆம் செய்யுட்களுக்கு எழுதிய விசேடவுரையாலும் திருமுருகாற்றுப்படையுரையிற் காட்டிய சில நயங்களாலும், மற்றுஞ் சிலவற்றாலும் இவர் சைவசமயியாதல்வெளியாகும். இவருடைய பெயர், சிவபெருமானுடைய திருநாமமாகவே எண்ணப்படுகின்றது:

"கச்சைசே ரரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொண் டுண்பர் போலும் பேரரு ளாளர் போலும்
இச்சையான் மலர்க ளேவி யிரவொடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலு நாகவீச் சுரவ னாரே"

(திருநா. திருநாகேச்சுரம், தே.)

"பச்சிலை பழம்போ தேனும் பறித்திட்டுப் பத்தி செய்வோர்க்
கெச்சமி லிருமைப் பேறு மளித்தரு ளிறைவா போற்றி
முச்சக முதலே போற்றி மூலச்சுவட் டணியாய் போற்றி
நச்சினார்க் கினியாய் போற்றி யெனத்துதி நவிலுங் காலை"

(காஞ்சிப்புராணம், சத்ததான. 11.)

இவர் இப்பத்துப்பாட்டிற்கன்றித் தொல்காப்பியத்திற்கும் கலித்தொகைக்கும் சீவகசிந்தாமணிக்கும் குறுந்தொகையிற் பேராசிரியர் பொருளெழுதாதொழிந்த இருபது செய்யுட்களுக்கும் உரைசெய்தருளினர்; இன்னும் சில நூல்களுக்கு இவர் உரையியற்றினரென்பர்; அவை இவை யென்று புலப்படவில்லை.

இவர் பதஸாரம் எழுதுதல் மிகப்பாராட்டற்பாலது.

இவர் பழைய செய்யுட்களையேனும் அவற்றின் கருத்தையேனும் உரைநடையாக எழுதுவதுண்டு.

மேற்கோளாக எடுத்துக்காட்டும் நூலின்பெயரையாவது நூலாசிரியரின் பெயரையாவது எடுத்துக்கூறுதல் பெரும்பாலும் இவருக்கு வழக்கமின்று.

வெளிப்படையாகக் கூறப்படாமலிருந்தும் சில சில குறிப்பைக்கொண்டு ஊகித்தறிந்து இன்ன காலத்தில் இன்னசெய்தி நிகழ்ந்தது, இன்னகாலத்தில் இன்னசெய்தி நிகழ்ந்ததென்று சீவக சிந்தாமணியில் அவ்வவ்விடத்துக் கதைநிகழ்ந்த காலத்தை விளக்கிக்கொண்டே போவர்; (21, 413, 493, 590, 851, 1564, 2029, 2033, 2106, 2706-ஆம் கவிகளின் உரைகளைப்பார்க்க).

"அறுவர்தந் நூலு மறிந்துணர்வு பற்றி
மறுவரவு மாறுன நீக்கி—மறுவரவின்
மாசா ரியனாய் மறுதலைச்சொன் மாற்றுதலே
ஆசா ரியன தமைவு" (ஏலாதி, 76)

என்றபடி நூலின் சமயத்தையும் நூலாசிரியருடைய கொள்கையையும் அவர் கருத்தையும் அறியவேண்டிய அளவு உழைத்தறிந்து அவற்றிற் கேற்பவே உரையெழுதுதல் இவருக்கு இயல்பு; இவருடைய உரைவிகற்பங்கள் இன்னும் பலவகை,

பொருநராற்றுப்படை 141, 143, 159 - ஆம் அடிகளுக்கும், சிறுபாணாற்றுப்படை 9-11, 28-30, 140-43-ஆம் அடிகளுக்கும், பெரும் பாணாற்றுப்படை 183 - ஆம் அடிக்கும், மதுரைக்காஞ்சி 468, 764-5 - ஆம் அடிகளுக்கும் எழுதியுள்ள விசேட இலக்கணக்குறிப்பாலும், கலித்தொகை 39, 127 - ஆம் கலிகளின் விசேடவுரையாலும், சீவகசிந்தாமணி 72, 892, 893, 1913, 2690 - ஆம்செய்யுட்களின் விசேட வுரைகளாலும் தொல்காப்பியத்திற்கே முதலில் இவர் உரை இயற்றினாரென்று தெரிகின்றது.

இவர் சீவகசிந்தாமணிக்கு முதன்முறை ஒருரையெழுதி, அக்காலத்திற் புகழ்பெற்றிருந்த சைனவித்துவான்கள் சிலருக்குக்காட்ட, மற்றைப் பகுதிகள்போலத் தங்கள் சமயக்கொள்கைகள் முறையே அறிந்து எழுதப்படவில்லையென்றுகூறி அவர்கள் அவ்வுரையை அங்கீகரிக்கவில்லையென்றும் அப்பால் இவர் ஆருகதநூல்கள்பலவற்றையும் அறிந்தோரிடம் முறையே கேட்டறிந்து நலமுற ஆராய்ந்து இரண்டாமுறை உரையெழுதி அவர்களுக்குக் காட்ட அவர்கள் உற்றுநோக்கி மகிழ்ந்து பாராட்டி அதனை அங்கீகரித்தார்களென்றும் சைனர்களுள்ளும் ஏனையோருள்ளும் கன்னபரம்பரையில் ஒருவரலாறு வழங்குகின்றது.

தொல்காப்பியவுரை முதலியவற்றில் வேதம், வேதாங்கமுதலியபல நூல்களிலிருந்தும் அவற்றின் உரைகளிலிருந்தும் பல அரியவிஷயங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி விளக்கிப் போகின்றமையாலும் பிறவாற்றாலும் இவரை வடமொழியிலும் பயிற்சியுள்ளவராகச் சொல்லுவதுடன் பலவகையான கலைகளிலும் பயிற்சியுள்ளவரென்று சொல்லுதற்கு இடமுண்டு.

இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், ஆளவந்தபிள்ளையாசிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக் கூறப்பட்டிருத்தலின் அவர்களுக்கும், திருமுருகாற்றுப்படையுரையில் பரிமேலழகர் கொள்கையை மறுத்திருத்தலின் அவருக்கும் இவர் பிற்காலத்தவரென்று தெரிகின்றது.

தொல்காப்பியவுரை முதலியவற்றில் இவரால் எடுத்துக் காட்டப்பட்டுள்ள மேற்கோளமைந்த நூற்பெயர்கள் முதலியவற்றுள் இதுகாறும் விளங்கியவை வருமாறு:—

அகத்தியம்.
அகநானூறு.
அணியியல்.
அவிநயம்.
௫. அறநெறிச்சாரம்.
ஆசாரக்கோவை.
ஆசிரியமாலை.
இராமாயணவெண்பா.
இறையனாரகப் பொருள்.
௧0. எலாதி.
ஐங்குறுநூறு.
ஐந்திணையெழுபது.
ஐந்திணையைம்பது.
ஔவையார்பாடல்.
௧௫. கடகண்டு.
கலித்தொகை.
களவழிநாற்பது.
காக்கை பாடினியம்.

அமிழ்தினுமினிய தமிழ்மடவரல்செய் அருந்தவத்தின் பெரும்பயனை அவதரித்தருளிய இம்மகோபகாரியின் அருமை பெருமைகள் விரிவஞ்சி எழுதாமல் இவ்வளவோடே நிறுத்தப்பெற்றன; பிறவரலாறுகளைச் சீவகசிந்தாமணியின் மூன்றாம் பதிப்பு முதலியவற்றிற்காண்க.

## ஆசிரிய விருத்தம்.

எவனுலை வாயிடைவர் தமுதவா யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனச்சி னார்க்கினிய னெனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெப்போது மலர்கவென தகத்து மன்றே.

உ

கணபதிதுணை.

# பத்துப்பாட்டு

## நச்சினார்க்கினியருரை.

---

முதலாவது

## திருமுருகாற்றுப்படை.

[க.—திருப்பரங்குன்றம்.]

1 உலக முவப்ப வலனேர்பு திரிதரு

---

(குறிப்பு)

1. நூல்களின்முதலில் மங்கலமொழிகளுள் உலகமென்பதைத் தனித்தேனும் அடைமொழியுடன் சேர்த்தேனும் அமைத்தலும் அதன் பரியாயமொழிகளை அவ்வாறே அமைத்தலும் மரபு. அவற்றுட் சில வருமாறு:— "உலகந் திரியா" (மணி. க: 1); "உலகமூன்றும்" (வளையா. கட.); "உலகெலா முணர்ந்து" (பெரிய. கட. 1); "உலகம் யாவையும்" (கம்ப. கட. 1.) இவற்றில், உலகமென்பது தனித்து வந்தது.

"நனந்தலை யுலகம்" (முல்லை. 1); "ஆர்கலி யுலகத்து" (முது. க: 1); "மூவாமுதலா வுலகம்" (சீவக. 1); "அலையார்ந்த கடலுலகம்" (ஆளுடைய. சலம். 1); "மலர்தலை யுலகத்து" (நாற். 1); "நீடாழி யுலகத்து" (வில்லி. கட. 1.) இவற்றில், உலகமென்பது அடையடுத்து வந்தது.

"வையகம் பனிப்ப" (நெடு. 1); "பார்மண் டலத்தினில்" (ஆளுடைய. திருவந். 1.) இவற்றில், உலகமென்பதன் பரியாயமொழிகள் தனித்து வந்தன.

"மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை" (சிறுபாண். 1); "மாநிலஞ் சேவடி யாக" (நற். கட.); "கண்ணகன் ஞாலம்"

பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்

(திரி. 1); "இருநிலமடந்தை" (திருவோற்றியூரொருபா. 1.) இங்கே பரியாய மொழிகள் அடையடுத்துவந்தன.

வலனேர்புதிரிதரு: "நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு" பட். 67.

இந்த அடி, ஆசிரியத்துட் பிறதளை விரவிவந்ததற்கும் (தொல். செய். சூ. 28. பேர்.), தாஅ வண்ணத்திற்கும் (ஷை ஷை சூ. 261. ஷை), சீர்வகை இணைமோனைக்கும் (ஷை ஷை சூ. 92. ந.) மேற்கோள்.

"அது வடமொழியன்று; ஈண்டு உலகமென்றது உயிர்க்கிழவனை; 'உலகமுவப்ப' என்றதுபோல" (சீவக. 1. ந.); '"உலகமுவப்ப வலனேர்புதிரிதரு"........என்பனபோல, 'புகழ்தரு' ஒருசொல்'' தஞ்சை. 407 - உரை.

2. ஞாயிறு புகழப்படுதல்: "முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி, யேமுற விளங்கிய சுடர்" (நற். உஅங: 6 - 7), "தயங்கு திரைப் பெருங்கட லுலகுதொழத் தோன்றி, வயங்குகதிர் விரிந்த வுருகெழு மண்டிலம்" (அகநா. உகூங: 1-2), "ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும், காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு, மேருவலந் திரிதலான்", "உலகுதொழு மண்டிலம்" (சிலப். ச: 4 - 6, கச: 4), "பேராழி யுலகனைத்தும் பிறந்தகலி யிருணீங்க, வோராழி தனை நடத்து மொண்சுடரைப் பரவுதுமே" (கலிங்க. 7); "ரவிவாழி", "அகலிடந்தொழுந் துவாதசாதித்தர்" (தக்க. 9, 354), "பலர் புகழ் ஞாயிறு படரி னல்லதை" (சிவ. போ. சிறப்பு.), "இகன் மைந்தன், றனைய னித்திமற் றென்னினு மிருநிலந் தாடொழத் தக்கோனே" வி. பா. சம்பவச். 35.

இவ்வடி முருகன் செந்நிற முடையோன் என்பதற்கும் (சிலப். க: 36 - 9, அடியார். பக். 39), வினையுவமத்தின் கண்ணும் (தொல். உவம. சூ. 12. இளம்.), உருவுவமத்தின் கண்ணும் (ஷை ஷை சூ. 16. பேர்.) ஆங்கென்பது வருமென்பதற்கும், ஆங்கு உவம உருபென்பதற்கும் (தஞ்சை. 283 - உரை) மேற்கோள். 'ஆங்கு' என்பது வினையெச்சமென்று பொருள்படும்படி இவ்வடியை எடுத்துக் காட்டுவர்; இ. கொ. சூ. 86 - உரை.

1-2. இவ்வடிகள் ஈரசைச் சீர்களுக்கு மேற்கோள்; தொல். செய். சூ. 12 - பேர்.

3. சேண்விளங் கவிரொளி: முருகு. 18.

4. நோன்றாள்: "வன்றாளிணை" திவ். பெருமாள். கூ: 1.

5 செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇப தண்ணறுங் கானத்

---

5. செறுநர்த் தேய்த்த: "செறுநர்த் தேய்த்து" (முருகு. 99); "படியோர்த் தேய்த்த" (மலைபடு. 423; பதிற். எக: 6.)

செல்லுறழ் தடக்கை: "நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை" பதிற். ௫உ: 10.

இவ்வடி கட்டளைப் பொழிப்பு மோனைக்கும் (தொல். செய். சூ. 92-ந.), உறழென்பது வினையுவமத்திற்கும் (ஷை. உவம. சூ. 12-இளம்.), பயனிலை யுவமத்திற்கும் (ஷை. ஷை. சூ. 14-பேர்.) உரிய உவமவுருபாமென்பதற்கும் மேற்கோள்.

6. "செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ" புறநா. ௩: 6.

மறுவில் கற்பு: "செயிர்தீர் காட்சிக் கற்பு" (தொல். களவு. சூ. 22:2); "தீதிலா வடமீனின் றிறம்" சிலப். க: 27.

5-6. "படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை நெடுவேள்" அகநா. 22: 5-6.

1-6. செய்யுளுறுப்பாகிய நோக்கின்வகை மூன்றனுள் இடையிட்டு நோக்கும் நோக்கிற்கு இவ்வடிகள் மேற்கோள்; 'உலகம் ......... கணவனென்ற வழி, ஒளியென்பது அதன் அயற்கிடந்ததனை நோக்காது கணவனை நோக்குதலின், இடையிட்டு நோக்கிற்று' தொல். செய். சூ. 98-இளம்.

7. கமஞ்சூன் மாமழை: "முழங்கு கடன் முகந்த கமஞ்சூன் மாமழை" (நற். ௩௪எ: 1.); "கமஞ்சூன் மாமழை கார்பயந் திறுத்தென" அகநா. க௩௪: 2.

"கமநிறைந் தியலும்" என்பதற்கு இது மேற்கோள்; தொல். உரி. சூ. 57-இளம். சே. ந.; இ-வி. சூ. 290-உரை.

8. வாள்போழ் விசும்பு: "வாள்போழ் வானத்து வயங்குகதிர் சிதறி" (நம்பி. சூ. 147. மேற்.); "விண்ணம் போழும் வாள்" பாக. க. 8: 13.

வள்ளுறை: "மைப்பனை யனைய நுந்தம் வள்ளுறை சிதறி" திருவால. ௪உ: 6.

8-9. வள்ளுறை......தலைஇய........கானம்: "நுண்ணுறை யழிதுளி தலைஇய" (குறுந். ௩௫: 4), "துளிதலைத் தலைஇய சாரல்" அகநா. க௩உ: 9.

10 திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
15 கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி

---

10. இருள்படப் பொதுளிய: சிலப். உசு: 108.

"பராரை - பருவரை; செய்யுள் முடிவு 'பராரை மராஅத்து' எனவும், வழக்கு முடிவு பருவரை யெனவும் முடியும்" (தக்க. 156 - உரை); பராரை, மராத்தென்பன பரியஅரை மராவத்தென்பவற்றின் திரிபுகள்; இ. கோ. சூ. 125 - உரை.

9 - 10. "தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று, முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும்" கலி. க0க: 1 - 2.

11. மராஅத்துருள் பூ: "உருள்பூங் கடம்பின் பெருவாயில்" (பதிற். ச - ஆம் பத்தின்பதிகம்), "உருள்பூங் கடம்பி னெலிதா ரோயே", "உருளிணர்க் கடம்பி னொன்றுபடு கமழ்தார்", "உருளிணர்க்கடம்பி னெடுவேட்கு" (பரி. ரு: 81; உக: 11, 50), "உருளிணர்க் கடம்பி னெடுந்தார்க் கண்ணியன்" (கல்.), "உருள்பசுந் தாரவன்" (காசி. 1 - 25 : 10), "உருள்பசுந்தா ரிளங்குமரன்" ஷை. ஷை. 32: 1.

கார்காலத்திற்குரியது கடம்பென்பதும் அது முருகற்குரியதென்பதும்: "கார்நறுங் கடம்பின் கண்ணிசூடி...முருகே" (நற். ருச: 8—11), "கார்நறுங் கடம்பின்......தெரியற், சூர்நவை முருகன்" (புறநா. உரு: 3 - 4), "கார்க்கடப்பந் தாரெங் கடவுள்" (சிலப். உச - பாட்டுமடை, "நேரிழை"), "காரலர் கடம்பன்" மணி. ச: 49.

13. "கிண்கிணி கவைஇய தெய்வச் சிற்றடிக் கமலப் போது" பாக. கo. 1: 46.

15. "'வெண்டுகில்' என்றும், 'கோபத்தன்ன தோயாப்பூந்துகில்' என்றுங் கூறலின், துகில் வெண்மை செம்மை யிரண்டிற்கும் பொது"; "என்றது, அரத்தந் தோயாமல் அரத்த நிறத்தை இயல்பாகக் கொண்ட துகிலாயிற்று; 'கோபத்தன்ன தோயாப் பூந்துகில்' போல இத்துகிலும் இவர்க்குள்ள தென்றார்" சீவக. 34, 2685 - ந.

16. "பல்காசு நிரைத்த கோடேந் தல்குல்" (அகநா. எரு: 19), "பல்காசு நிரைஇய வல்குல்" பெருங். 1. 40: 99.

17. வனப்பென்பது பல உறுப்புந்திரண்டவழிப் பெறுவதோர் அழகென்பர்; தொல். செய். 235 - பேர். ந.

ளுவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
20 துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சிறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
25 மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிணா ரட்டிக்

---

18. பொலம்புனையவிரிழை: "பொலம்புனை யவிரிழை கலங்கலம் புனன்மணி" பரி. கக: 6.

இழை - இழைக்கப்பெற்ற அணி. தேவர்களும் செயற்கையணிகளை அணிவரென்பது இங்கே உணரற்பாலது. "பணிகள் செய்வார் மயன் முதலியோர்; 'நாவலொடு.........இழை' என்றார் பிறரும்" (சீவக. 2811 - ந.) பெயரிய வென்பது பெயரடியாகப் பிறந்தவினை; இ. கொ. சூ. 68 - உரை, மேற்.

21. செங்கால்வெட்சி: "செங்கால் வெட்சியு நரந்தமு நாக மும்" மணி. ௩: 161 - 2.

23. தெய்வவுத்தி: 'தெய்வவுத்தி யென்னும் பூண்' கலி. கக: 13 - ந.

தெய்வவுத்தியும் வலம்புரியும் கூந்தலில் அணியப்படுதல்: "தெய்வ வுத்தியொடு செழுநீர் வலம்புரி...............மையீ ரோதிக்கு மாண்புற வணிந்து" சிலப். ௬: 106 - 8.

24. மு. "திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்" (நற். கஉ: 6), "தேங்கமழ் திருநுதற் றிலகந்தைஇயும்"(அகநா. ௩அக: 3.) தேங்கமழ் திருநுதல்: "தேமூ ரொண்ணுதல்" குறுந். உஉ: 5.

25. மகரப்பகுவாய்: "எறிமகர வலய மணிதிகழ் நுதலியர்" (பரி. க௦: 77);" பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை" கலி. ௫௪: 6.

26. "இலக்கணமெல்லாம் முற்றச்செய்தகுழல் என்றது திருமுருகாற்றுப்படையில், 'துவரமுடித்த துகளறு முச்சி' என்பதற்கு முற்ற முடித்த வுச்சியெனப் பொருள்கொண்டவா றுணர்க" தஞ்சை. 7 - உரை.

28. மருதினொள்ளிணர்: "தேங்கமழ் மருதிணர்" முருகு. 34.

26 - 8. "செருகல் - செருகுதல்; 'துவர......மருதின்' எனத்

கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
30 பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
35 குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்

---

திருமுருகாற்றுப்படையுட் செரீஇ யென்பதற்குச் செருகியென உரை கூறியவாறு கண்டுகொள்க" தஞ்சை. 42 - உரை.

29. "கிளைக்கழு நீர்க்கணுஞ் சிவப்பிற் கேழ்த்தவே" (சீவக. 1016); "கண்ணும் நீர்க்கீழரும்பினது சிவப்பினுஞ் சிவந்தன" ஷை. ந.

30. இணைப்புறு பிணையல்: "இணைத்த கோதை"; முருகு. 200.

31. காதில் அசோகந்தளிரைச் செருகல்: "செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்" (முருகு. 207), "சாய்குழைப் பிண்டித் தளிர் காதிற் றையினள்", "கடிமலர்ப் பிண்டிதன் காதிற் செரீஇ" பரி. கக: 95, கஉ: 88.

வேங்கைத்தாதை அணிதல்: "புலியுரு மருளப் பூத்த பூந் துணர் வேங்கை யொள்வீப், பலபறித் துகுத்த தாது பைந்தொடி மகளிர் நீட்ட, வலர்கரத் தேந்தி யம்பொற் சுணங்கெனும் வேங்கை யோடுங், குலவவெங் களபக் கொங்கைக் குவட்டின்மேற் செறியப் பெய்தும்" காஞ்சிப். திருக்கண். 256.

35 - 6. நகிலிற்குக் கோங்கரும்பு: "யாணர்க், கோங்கி னவிர் முகை யெள்ளிப், பூணகத் தொடுங்கிய வெம்முலை" (சிறுபாண். 25 - 6), "முலையேர் மென்முகை யவிழ்ந்த கோங்கின்" (குறுந். உருச: 2), "முதிர் கோங்கின் முகையென.........பெருத்தநின் னிளமுலை" (கலி. ருசு: 23 - 4), "கோங்குமுகைத் தன்ன குவிமுலை" (அகநா. உச0: 11), "கோங்கின், முகைவனப் பெய்திய விளமுலை" புறநா. ௩௩௬:9-10.

37. தளிர்களை அப்புதல்: "பொறிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி, சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி" நற். கூ: 5 - 6.

24 - 37. "தேங்கமழ் திருநுதல் திலகந் தைஇயும், பல்விரு ழெதிர்மலர் கிள்ளி வேறுபட, நல்லிள வனமுலை யல்லியொ டப்பியும்" அகநா. ௩அக: 3 - 5.

கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
40 சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
45 பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவே
லுலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்

---

38. வென்றடு விறல்: "வென்றடு விறற்களம்" முருகு. 55.

கோழிக்கொடி : முருகு. 219.

38 - 9. கொடியை வாழ்த்தல்: "கொடிபாடித் தேர்பாடி" (முத்.), "பாம்புண் பறவைக் கொடிபோல வோங்குக......கொடி" பு. வெ. 227.

43. சுடர்ப்பூங்காந்தள் : "தீயி னன்ன வொண்செங் காந்தள்" (மலைபடு. 145) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

இவ்வடி பெருமையிற் சிறப்பிற்றீராக் குறிப்பின் வந்த உவமத்திற்கு மேற்கோள்; தொல். உவம. சூ. 10 - பேர்.

42 - 3. மந்தியு மறியா.........காந்தள் : "கலைகையற்ற காண்பி னெடுவரை" (மலைபடு. 315), "மந்தியு மறியா மரம்பயி லொருசிறைக், குன்றக வெற்பன்" (நற். கக௪ : 7), "கடுவனு மறியாக் காடிறந் தோரே" (ஐங். ௬௭௪ : 4), "மந்தியு மறியா மரம்பயி லிறும்பி, ஞெண்செங் காந்த ளவிழ்ந்த வாங்கண்", "உயர்வரை மருங்கிற் காந்தளஞ் சோலைக், குரங்கறி வாரா மரம்பயி லிறும்பில்" அகநா. கூ௨ : 8 - 9, ௬௬௮ : 8 - 9.

45. "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு" (பரி. ரு : 1); "பாருடைப் பனிக்கடல்" (சீவக. 274); "பார்முதிர் பனிக்கடல்" பாக. 3. கருத்தமன். 50.

46. "சூர் மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்" அகநா. ருக : 10.

45 - 6. "வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற, பைம்பூட் சேஎய்" பெரும்பாண். 457 - 8.

"தடிதல் - வெட்டுதல்; 'சூர்முதல்.........நெடுவேல்' என்பதனு ணுணர்க" தஞ்சை. 405 - உரை.

கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
50 பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
55 வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
விருபே ருருவி னொருபே ரியாக்கை
யறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
யவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
60 மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்

---

49. கழல்கட் கூகை : "கழல்கட் கூகை குழறுகுரற் பாணி" பதிற். உஉ : 36.

50 - 51. "மோடேந் தரிவை...........சார்ந்தோர் துட்கெனும் பேஎ யுருவம்" பெருங். 2. 8 : 106 - 10.

53. கண்டொட்டுண்ட : "கண்டொட் டுண்டு" மணி. சு :125.

56. "கொள்ளிவாய்ப்பேய் சூழ்ந்து துணங்கையிட் டோடி யாடித் தழலு ளெரியும் பிணத்தைவாங்கித் தான்றடிதின்று" காரைக். திருவாலங்காட்டு. 7.

58. அறுவேறு வகையின் : 'அறு' என்னுமுதனிலைத்தனிவினை அற்று எனப்பொருள்பட்டு வினையெச்ச மாயிற்றென்பதற்கு மேற்கோள் ; இ - கொ. சூ. 66 - உரை ; நன். வி. சூ. 351.

57 - 61. "ஈரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச், சூர்கொன்ற செவ்வேலான்" (கலி. கஉ: 25 - 6), "ஈருருவத் தொருபெருஞ்சூர் மருங் கறுத்த விகல்வெய்யோய்" தொல். செய். 152 - பேர். ந. மேற். "செஞ்சுடர்"

59 - 61. "கூடார் மெலியக் கொலைவே லினைந்தான்"; "அவர் வருந்தும்படி வேல் நினைந்தான் என்றது முருகனை ; 'அவுணர்........ சேஎய்'என்றார்" சீவக. 2328, ந.

45 - 61. "மாக்கடன் முன்னி, யணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சின விறல்வேள்" (பதிற். கக : 3 - 6); "கடுஞ்சூர் மாமுத றடிந்தறுத்தவே, லடுபோராளா", "நீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச், சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" (பரி. ரு : 70 - 71, கஅ : 3 - 4); "உரவுநீர் மாகொன்ற

சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
65 னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
வின்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி

---

வென்வேலான்", "மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப் போர், வேல்வல்லான்" (கலி. உஎ : 15-6, கoச : 13-4); "உரவுநீர் மாகொன்ற வேல்", "பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட், சூர்மாத் தடிந்த சுடரிலைய வெள்வேலே" (சிலப். குன்றக். பாட்டுமடை, 'உரையினி'); "அகறிரைப் பரப்பிற் சடையசைந் தலையாது, கீழிணர் நின்ற மேற்பகை மாவின், ஒருட விரண்டு கூறுபட விடுத்த.........அமையா வென்றி யரத்தநெடு வேலோய்", "கட்டுடைச் சூருடல் காமங் கொண்டு, பற்றியுட் புகுந்து பசுங்கடல் கண்டு, மாவொடுங் கொன்ற மணி நெடுந் திருவேல்", "கடன்மாக் கொன்ற தீப்படர் நெடுவேல்", "கருங் கடல் குடித்தலிற் பெருந்தழற் கொழுந்து, மாவுயிர் வௌவலிற் றீவிழிக் கூற்றும்.........ஆகிய மணிவேற் சேவலங் கொடியோன்", "மணி திரைக் கடலுண் மாவெனக் கவிழ்ந்த, களவுடல் பிளந்த வொளிகெழு திருவேற், பணிப்பகை யூர்தி", "மாவெனக் கவிழ்ந்த மறிகட லொன்றுங், கடுங்கனற் பூழி படும்படி நோக்கிய, தாரையெட் டுடைய கூரிலை நெடுவேற், காற்படைக் கொடியினன்", "மேல்கடற் கவிழ்முகப் பொரியுடன் மாவு, நெடுங்கடற் பரப்பு மடிந்தொழி லரக்கரு, மென்னுளத் திருளு மிடைபுகுந் துடைத்த, மந்திரத் திருவேன் மறங்கெழு மயிலோன்", "நீர்மாக் கொன்ற சேயோன்", "பெருங்கள விணர்தங் தவை கீழ்க் குலவிய, விடமாக் கொன்ற நெடுவேற் குளவன்" (கல்.); "கருங் கடலுண் மாத்தடிந்தான்" பு. வெ. 103.

62. செம்மலுள்ளம் : "செம்ம லுள்ளமொடு செல்குவி ராயின்" (சிறுபாண். 145), "செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு" (குறுந். உஎo : 5 ; உஎ௬ : 5), "அருந்தொழின் முடித்த செம்ம லுள்ளமொடு" அகநா. கஅச : 5.

63. 'புலம் புரிந்துறையும்' என்பதும் பாடம்.

65. 'இன்னிசை' என்பதும் பாடம்.

67. "ஆரெயில் கொளக்கொள, நாடோறெடுத்த நலம்பெறு புனை கொடி" (மதுரை. 367 - 8); "வென்றெழு கொடியொடு" (நெடுநல். 87); "மலைநீர், வென்றெழு கொடியிற் றோன்றும்" (மலைபடு. 581-2);

வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
70 றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்

"வான்றோய் வெல்கொடி" (பதிற். சுக: 1); "வென்று வென்றெடுத்த கொடிதான் நுடங்குமதில்" சிலப். கடு: 217 - அடியார்.

68. மதில்மேற்பந்தும் பாவையும் நாற்றல்: "பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலு, மென்றிவை பலவுஞ் சென்றுசென் றெறியு, முந்தை மகளிரை யியற்றி" (தொல். புறத்திணை. சூ. 12 - ந. மேற்.), "பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலும் பலவுஞ்சென் றெறிகிற்கு, முந்தை மாதரை யியற்றுபு பின்றைமொய்ப் பகழிவா யிலிற்றூக்கி" (தணிகை. சீபரிபூரண. 58), "பகைவரைப் பாவை மாரெனத் தெரிப்பப் பந்தொடு பாவைக ணேங் கித், தகைசிறி தறியா வாயில்சா ளுஞ்சிற் றடப்பெரு ஞொச்சியும்" திருநாகைக். திருநகரப். 90.

வரிப்புனைபந்து: "வரியணி பந்தும்" (நற். ௩௦௫: 1), "வரிப் பந்துகொண்டொளித்தாய்" பு. வெ. 238.

வரியென்னு முதனிலைத்தனிவினை வரிந்தென்று வினையெச்சப் பொருள்பட்டு வந்தது; வரிப்புனை பந்து, வரிந்து புனைந்த பந்தென வருதல் பற்றித் தொகைவிரியென இரண்டேயென்பர்; இ. கோ. சூ. 66, 84 - உரை; நன். வி. சூ. 351.

69. போரருவாயில்: "புலாஅ லம்பிற் போரருங் கடிமிளை" புறநா. கஅக: 5.

70. திருவீற்றிருந்ததீதுதீர்: "திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பின்" (நெடுநல். 89); ழ. "திருவீற் றிருந்த திருநகர் வரைப்பின்" பெருங். 1. 40: 232.

71. "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்" (மதுரை. 429); "மாடமலி மறுகிற் கூட லாங்கண்" (அகநா. ௩௪௬: 20); "மாட மறுகின் மருவி மறுகுறக், கூடல் விழையுந் தகைத்து", "நான்மாடக் கூட னகர்" (பரி. ௨௦: 25 - 6, "உலகமொரு"); "மதிமலி புரிசை மாடக் கூடற் பதி" (திருமுகப்பாசுரம்); "கொடிமாடக்கூடல்" சிலப். குன்ற.

73. இது வல்லிசை வண்ணத்திற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 217 - பேர்; யா. வி; யா. கா. ஒழிபு. சூ. 8 - உரை.

71 - 3. "முருகாற்றுப்படையுள், 'மாடமலி.......துஞ்சி' என்ற வழி, ஒருமுகத்தாற் பாண்டியனையும் இதனுட் சார்த்தியவாறு காண்க" தொல். புறத். சூ. 27 - இளம்.

கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
75 கண்போன் மலர்ந்த காமரு சுனைமல
ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று

[உ.—திருச்சீரலைவாய்.]

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
80 படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்

---

நகரோடு திசைசுட்டிக் குன்றத்தைக் குறித்தல்: "கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது, நெடும்பெருங் குன்றத்து" அகநா. ச: 14-5.

75. "கண்போ னெய்தல்", "கழிசேர் மருங்கிற் கணைக்கா னீடிக், கண்போற் பூத்தமை கண்டு நுண்பல, சிறுபா சடைய நெய்தல் குறுமோ" (நற். அ: 8, உஎ: 9-12); "பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்......... கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந். க: 4-6); "கண்போ னெய்தல்" (ஐங். கடுக:3); "மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென் பதோ.........பல்லிதழ் மலருண்கண்" (கலி. சடு: 9-11); "நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலம், கண்ணென மலர்ந்த சுனையும்", "இருங்கழி மலர்ந்த கண்போ னெய்தல்" (அகநா. ҡஅ: 10-11, கஎ0: 4); "கண்ணவிழ் நெய்தலும்" (சிலப். கச:77); "கண்ணின் மலரக் கருநீலம்", "குறுஞ்சுனை மலர்ந்தன தடம்பெருங் கண்ணே" பு. வெ. 205, 290.

76. "அஞ்சிறை வண்டி னரியின மொய்ப்ப" ஐங். சஅக.

73-6. "முட்டாள சுடர்த்தாமரை, கட்கமழு நறுநெய்தல், வள்ளிதழவிழ்நீலம்.........வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கை" மதுரை. 249-53.

77. "குன்றமர்ந்து" பரி. கஎ: 29.

71-7. கூடற்குடவயிற் பரங்குன்று: "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற் சீர்மிகு முருகன் றண்பரங் குன்றத்து" (அகநா. டுக: 10-11); "கொடிநுடங்கு மறுகிற்கூடற் குடாது, பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய, ஒடியா விழவி னெடியோன் குன்றத்து; வண்டுபட நீடிய குண்டு சுனை நீலத்து" அகநா. கசக: 14-7.

80. படுமணியிரட்டு மருங்கு: "படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தா, ணெடுநல் யானை", "ஒளிதிக ழோடை பொலிய மருங்கிற் படுமணி யிரட்ட வேறி", "தாடாழ் படுமணி யிரட்டும் பூநுத லாடியல் யானை" புறநா. எஉ: 3-4, கசுக: 18-9, கசுடு: 6-7.

81. மு. "கூற்றத் தன்ன மாற்றரு முன்பின்" புறநா. ҡசுஉ: 7.

கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
85 மின்னுறழ் இமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
யகலா மீனி னவிர்வன விமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
90 மனனேர் பெழுதரு வாணிற முகனே
மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக

82. காற்று செலவுக்கு: (முருகு. 170); "கால்கிளர்ந் தன்ன வூர்தி" (பதிற். "இருங்கண்யானை"); "வளியி னியன்மிகுந் தேருங் களிறும்" (கலி. கூo: 15); "நீலயானை......கால்கிளர்ந்து" (மணி. கக: 20-22); "காலிற்கடியது" (பெருங். 1. 42: 226); "காற்றன்றேற், கடுமை யென்னும்......மத்தயானை" கம்ப. அதிகாயன். 216.

81-2. "கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு" (பதிற். கக: 6); "ஊர்ந்ததை, எரிபுரை யோடையிடை யிமைக்குஞ் சென்னிப், பொரு சமங் கடந்த புகழ்சால் வேழம்" (பரி. உக: 1-2); "காற்றி னியிர்ந்த செலவிற்றாய்க் - கூற்றுங், குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே... களிறு" (முத்.); "காற்றெனக் கடுங்கட் கூற்றென.........தோன்றிய தடலருங் கடாக்களிறு", "காற்றெனக் கடலெனக் கருவரை யுருமெனக், கூற்றெனக் குஞ்சரங் கொண்டுபுக் கானரோ" (சீவக. 973, 1837); "பாகன், காற்றெ னத்தெறு கனலெனக் கனைகட லென்னக்,கூற்ற மென்னமேற் றூண்டினன் குவலயா பீடம்" பாகவதம், கo. 17 : 14.

83-4. ஐவகை யுருவின்முடி: "உவமை நீங்கிய வைவகைத் தாய வேற் றுருவின், மவுலி" கந்த. முதனாட்பானு. 252.

85. உறழ் : வினைப்பா லுவமம்; தொல். உவம. சூ. 12. பேர். மேற்.

89. தாவில் கொள்கை : (முருகு. 175.) மு. "தவஞ் செய் வார் தங்கருமஞ் செய்வார்" (குறள். 266); "என்னுயிர்க் குறுவதுஞ் செய்ய வெண்ணினேன்" கம்ப. அயோத்தி.மந்திர. 15.

91. மாயிருண் ஞாலம்: "இருள்தருமா ஞாலம்" திவ்.

95 மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
100 கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே யொருமுகங்
குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே
யாங்கம், மூவிரு முகனு முறைநவின் றொழுகலி
னாரந்தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
105 செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்

---

95. "மரபுளிவழாஅ வந்தணர் - முறைமையின் வழுவாத அந்தண ரென ஐந்தாவதுவிரிதலானும்" தொல். இடை. சூ. 2-ந.

95-6. மந்திரவிதியின் மரபுளி வழாஅ வந்தணர்: "மந்திர விதியி னந்த ணாளன்" பெருங். 3.6:42.

99-100. பகைவரை வென்று களவேள்வி வேட்டல்: "அரசுபட வமருழக்கி.........களம்வேட்ட, அடுதிறலுயர் புகழ்வேந்தே" (மதுரை. 128-30); "அரைசுபட வமருழக்கி.........அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய", "புலவுக்களம் பொலிய வேட்டோய்" (புறநா. உசு:6-11, நஎஉ: 12); "பாண்டியன் சோழற் காய்ந்து, பெருங்கள வேள்வி செய்த பீடுடைக் காட்டு நாட்டு" (திருவால. சச: 54); களவேள்வி யென்பது வாகைத் திணையுள் ஒரு துறைக்குப் பெயர்; "அடுதிற லணங்கார, விடு திறலான் களம் வேட்டன்று" (பு.வெ.160) என்பது அதன் இலக்கணம்.

104. மு. (புறநா. கூக: 1, கடுஉ: 10); "தாழாரமார்பினன்" பு. வெ. 43.

104-5. மார்பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பில்: "பொறி யுடைமார்ப" (பெருங். 5. 2: 8); "பொறிகுலாய்க் கிடந்த மார்பிற் புண் ணியன்" (சீவக. 1706); "செவ்வரை யாகத்தான்" சீகாளத்திப். நக்கீர. நடு.

104-6. "மார்பிடை வரையு மூன்றுள" என்பதற்கு இவ்வடி மேற்கோள்; சீவக. 1462-ந.

106. வண்புகழ்: "வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென" (முருகு. 285); "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" (தொல். செய். சூ. 79); "வண்புகழ் பாரி காரி" திருப்புகழ்.

விண்செலன் மரபி னையர்க் கேந்திய
தொருகை யுக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொருகை
110 யங்குசங் கடாவ வொருகை யிருகை
யையிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை
115 பாடின் படுமணி யிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட
வாங்கப், பன்னிரு கையும் பாற்பட வியற்றி
யந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்

---

வசிந்து வாங்கென்பது ஆசிரியவுரிச் சீராகிய நிரைபு நேர்புக்கு உதாரணம்; தொல். செய். சூ. 13-பேர். ந.

111. ஐயிருவட்டம்: "கையொடு வானிடைச் செல்வ கணிப்பி, லையிரு வட்டம்" கந்த. சூரபன்மன்வதை. 123.

114. "தொடியணி தோளன்" (முருகு. 211), "கழறொடிச் சேய்" குறுந். க: 3.

115. "பாடின் படுமணி யூடுறுத் திரங்க" (பெருங். 1. 38: 153); "பாடின் படுமணி யார்த்திடும்" கந்த. திருவிளை. 12.

116. நீனிறவிசும்பு: (பெரும்பாண். 135; மதுரை. 581: பட். 67); "இருணிற விசும்பில்" மலைபடு. 1.

118. இனைத்தென அறிந்த சினைக்கிளவி வினைகொண்டு முடியுமிடத்து உம்மைபெறு மென்பதற்கு இது மேற்கோள்; தொல். கிளவி. சூ. 33 - சே. ந.; "பன்னிரு.........இயற்றி யென்புழியும், தொகுதிப் பெயர் வினையோடு தொடராது கையென்பதனோடு ஒட்டி நிற்றலின், வினைப்படுதொகுதி யன்றாகலான், உம்மைவேண்டா பிறவெனின், அங்வனம் ஒட்டிநின்றதாயினும், நான்மறை முதல்வர், ஐந்தலைநாக மென்பன போலாது, இருசொல்லும் ஒருபொருண்மேல் வருதலிற் கையென்பதனோடு ஒட்டி யியைந்த இயற்றியென்னும் வினை தொகுதிப் பெயரோடும் இயைந்ததாம்; அதனான் அது வினைப்படு தொகுதியாமாகலின், உம்மை வேண்டு மென்க" இ. வி. சூ. 315 - உரை.

90-118. கந்தர்கலிவெண்பா, 42-53 கண்ணிகளிற் கூறப்பட்டுள்ள முருகக்கடவுளின் திருமுகங்கள் திருக்கரங்கள் இவற்றின்செயல்கள் பெரும்பாலும் இவ்வடிகளைத்தழுவியே விளக்கப்பட்டிருக்கின்றன.

120 வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல
வுரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
யுலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
125 ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே யதா அன்று

---

120. வயிரும்வளையும் இணைத்துச் சொல்லப்படுதல்: "வயிரும் வளையு மார்ப்ப" (முல்லை. 92); "வளைநரல வயிரார்ப்ப" (மதுரை. 185); "பயிர்வளை யரவமொடு வயிரெடுத் தூதி" (பெருங். 1.38: 4); "சங்குங் கருங்கோடும்......ஆர்ப்ப", "வளைகள் வயிரியம்பும் வாட்டானை வேந்தே" பு. வெ. 24,207.

121. உருமுடி முரசம்: "முரசதிர்ந் தன்ன இன்குர லேற்றொடு, நிரைசெல னிவப்பிற் கொண்மூ" (குறிஞ்சி. 49-50); "விண்ணதி ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்துத், திண்வார் விசித்த முழவு", "மழையெதிர் படுகண் முழவுகண் ணிகுப்ப" (மலைபடு. 2-3, 532); "இன்னிசை முரசினியங்கி......சென்மழை தழுவ" (நற். கள: 10-12); "கடிப்பிகு முரசின் முழங்கி" (குறுந்.உஎ0: 3); "படுமழைமுரசினிரங்கி" (புறநா. நடு0: 4); "இடிமுரசியம்ப", "முரசதிர் பவைபோன் முழங்கிடி பயிற்றி" (பரி: ச: 19, உஉ: 4); "இடியுமிழ் முரசம்" (அகநா. நடுச:2, சீவக. 2900); "உருமினிடி முரசார்ப்ப" (முத்.) "கோல மார்முர சிடியுமிழ் தழங்கென முழங்க" (சீவக. 2392); "இடியார் பணைதுவைப்ப" (பு. வெ. 121); "முழங்கின முகிலென முரசமே" தக்க. 530.

முருகனுக்கு மயிற்கொடியு முரியது: "மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடி" (பரி. கஎ: 48), "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய" (அகநா. கசக: 15), "மணிமயி லுயரிய மாறா வென்றிப், பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. மசு:7-8.) 'தேவசேனாபதியுடைய கொடிகளாகிய மயில்கள்', 'பிள்ளையாருடைய துவசவாகனமான தோகைமயில்கள்' தக்க. 23, 114-உரை.

"முருகக்கடவுளின்கொடி கோழிக் கொடியன்றோ வெனின் அவர் மயிற் கொடியையு முடையார் 'பல்பொறி..... அகவ' திருமுருகாற்றுப் படை; மற்றும் புராணங்களிற் கண்டுகொள்க" தக்க. 23-உரை.

124. "உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்" மணி. க: 1.

125. "வரைவயிறு கிழித்த நிழறிகழ் நெடுவேற், றிகழ்பூண் முருகன் றீம்புன லலைவாய்" (தொல். களவியல், சூ. 23. மேற். "பையுண்மாலை"); "திருமணி விளக்கி னலைவாய்ச், செருமிகு சேஎய்" (அகநா. உசுசு: 20-21); "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி,

[ரு.—திருவாவினன்குடி.]

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி
130 னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
135 கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசி றூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
140 செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி
னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்

---

னெடுவே ணிலை இய காமர் வியன்றுறை" (புறநா. ருரு : 18-9); "சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்று, மேரகமு நீங்கா விறைவன்" (சிலப். குன்றக்); "நஞ்செந்தின் மேய வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்" தே. மறைக்காடு.

127. புரையென்பது மரபுபற்றி வருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உவம. சூ. 17 - இளம்.

128. "மாசற விளங்கிய யாக்கையர்" மதுரை. 456.

130. "உயிர்நிலைமற் றென்பியக்கங் கண்டும் புறந்தரார்" நீதிநெறி. 87.

138. "புகைவிரிந் தன்ன பொங்குதுகில்" (புறநா. ருகசு:20); "ஆவி யன்ன பூந்துகில்", "ஆவி யந்துகி லாரமர்ந் தார்களே", "பாலாராவிப் பைந்துகில்" (சீவக. 67, 873, 1094); "ஆவி நுண்டுகில் யாப்புறத் தாயினும்", "ஆவி நுண்டுகில் யாப்புறுத்து", "ஆவிநுண்டுகி லணிநலம்" (பெருங். 1. 36 : 64, 165; 1. 40 : 228); "கரியவன் வெண்டுகில் கவர்தல் காட்டுவான், விரிமலர்ப் பசுந்தொடை வேனின் மன்னவன், பொருகணை முகத்தெழு புகைமு கந்தற, நிரைவளைச் செங்கர நீட்டு வார்சிலர்" பாகவதம், கோவியரைமணந்த. 55.

140-41. "குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பு" மலைபடு. 23.

மென்மொழி மேவல ரின்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவி
னவிர்தளிர் புரையு மேனிய ரவிர்தொறும்
145 பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
150 பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு

---

143-4. "தேமா மேனிச் சில்வளை யாயம்" (சிறுபாண். 176); "நறுவடிப், பைங்கண் மாஅத் தந்தளி ரன்ன, நன்மா மேனி" (குறுந். ளஉக: 5-7); "கழிகவி னிளமாவின் றளிரன்னாய்" (கலி. ௫எ: 13); "மாந்தளிரே மாமேனி" சீவக. 652.

145. பசலைக்குப் பொன்: "பொன்னிற் பசந்து", "பொற்சுணங் கேர்வர மாமுலை" (பாண்டிக்கோவை); "நின்மேனி, பொன்னிற் பசந்து புலம்புவதென்" கிளவித்தெளிவு.

கடுக்குமென்பது உருவுவமத்தின்கண் வருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உவம. சூ. 16, இளம்.பேர்; இ. வி. சூ. 642-உரை.

151. புள்ளணி நீள்கொடி: "புள்ளணி நீள்கொடி புணர்நிலை தோன்றும்" (சிலப். கக: 136); "மண்ணுறு திருமணி புரையு மேனி, விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்" புறநா. ௫௬: 5-6.

150-51. "பூவைப்பூ மேனியான், பாம்புண் பறவைக் கொடி" பு. வெ. 227.

151-2. வெள்ளேறு வலவயினுயரிய: "ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த, சீர்கெழு கொடியு மவ்வே றென்ப" "ஏற்று வலனுயரிய" (புறநா. க: 3-4; ௫௬: 1); "அரசப் பெருங்கொடி யொருவலத் துயரி" பெருங். 3. 19: 196).

153-4. "உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக், கண்ணணங் கவிரொளிக் கடவுள்" (பெருங். 1. 53: 15-6; 5.4: 51-2); "எண்ணார் மும்மதி லெய்த விமையா முக்கண்........பிஞ்ஞகனே" (தே. திருக்கள்ளில், 3); "இமையாத முக்கண் மூவரிற் பெற்றவர்" திருச்சிற். 14.

155 நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
160 நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கு மொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
வேமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
165 நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்
பகலிற் றோன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரொ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
170 வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
வுருமிடித் தன்ன குரலினர் விழுமிய
வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை சொண்மா
ரந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்

---

"'இமையா.........செல்வனும்' திருமுருகாற்றுப்படை; இமைத்தகண் விழித்ததுபோல விழிக்க வெனச் சொல்லியது: விழித்தலாவது பிரச்சுவலித்தல்" தக்க. 334-உரை.

164-5. "நான்முக வொருவற் பயந்த பல்விதழ்த், தாமரைப் பொகுட்டின்" பெரும்பாண். 403-4.

167. நால்வே றியற்கைப் பதினொரு மூவர்: "நாலெண் டேவரு நயந்துநிற் பாடுவோர்" பரி. ஈ: 28.

167-8. "நால்வகைத் தேவரு மூவறு கணங்களும்" சிலப். ரு: 176.

169. "மீன்பூத் தன்ன வான்கலம்" பெரும்பாண். 477.

170-71. வளியிடைத் தீயெழுந் தன்னதிறல்: "கான்முளை, யெரிநிகழ்ந் தன்ன நிறையருஞ் சீற்றம்" (நற். "இருங்கண்"), "வளித்தலைஇய தீயும்" புறநா. உ: 4.

173. உருமிடித்தன்ன குரலினர்: "இடியன்ன பெருங்குரலான்" தகடூர்.

175 தாவில் கொள்கை மடந்தையொடு சின்ஞ
ளாவி னன்குடி யசைதலு முரிய னதாஅன்

[ச.—திருவேரகம்.]

றிருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
யறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
180 டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
185 யுச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலு முரிய னதாஅன்று

---

175. "தாவில் கொள்கைத் தந்தொழில்" முருகு. 89.

177. "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" (தொல். புறத். 20); "ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்த, லீத லேற்றலென் றாறுபுரிந் தொழுகும், அறம்புரி யந்தணர்" பதிற். உச : 6-8.

181-2. "அந்தண ருருங்கட னிறுக்கு, முத்தீ", "ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர், முத்தீ" புறநா. உ:22-3, ருசுஎ: 12-3.

179-82. "ஒன்றுபுரி கொள்கை யிருபிறப் பாளர், முத்தீச் செல் வத்து நான்மறை முற்றி, யைம்பெரு வேள்வியுஞ் செய்தொழி லோம்பு, மறுதொழி லந்தணர்" சிலப். உரு : 67-70.

183. "ஒன்பது போலவர் மார்பினி னூலிழை" தே. திருநா.

181-4. "புன்மயிர்ச் சடைமுடிப் புலரா வுடுக்கை, முந்நூன் மார் பின் முத்தீச் செல்வத், திருபிறப் பாளர்" சிலப். உசு : 126-8.

185. "அட்டா னனே குட்டுவன், உச்சிக் கூப்பிய கையின ரென் றற் போல்வன கடைச் சங்கத்திற்கு ஆயின சொற்கள் இக்காலத்திற்கு ஆகாவாயின" (தொல். செய். சூ. 80-ந.) வினைக்குறிப்புமுற்று வினை யெச்சமாயிற்றென்பதற்கு இவ்வடிமேற்கோள்; நன். வி. சூ. 351.

186-7. "நாவியன் மந்திர நடுங்கா தோதி" மணி. உரு: 52.

[ரு.—குன்றுதோறாடல்.]

190 பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேல
னம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணிய
னறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
195 நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்

---

192. "வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்" பட். 85.

191-2. "குல்லை குளவி கூதளங் குவளை" (நற். கூஎகூ : 5); "கூத ளங் கவினிய குளவி முன்றில்", "நாறிதழ்ந் குளவியொடு கூதளங் குழைய" புறநா. கஙூஅ : 12, கூஅ0 : 7.

193. "நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்" அகநா. உகூ : 14.

195. "வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்", "திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்" (மலைபடு. 171,522); "ஆம்பகம் பழுநிய தீம்பிழி" (பதிற். அக : 21); "நெடுங்க ணுடமைப் பழுநிக் கடுந்திறற், பாப்புக் கடுப்பன்ன, தோப்பி", "அம்பணை விளைந்த தேக்கட் டேறல்" அகநா. கூசஅ : 6-7, கூகூஅ : 14.

194-7. கட் குடித்துக் குரவை யயர்தல் : "அருங்குறும் பெறிந்த கானவ ருவகை, திருந்துவே லண்ணற்கு விருந்திறை சான்மென, நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு, மான்ஞேற் சிறுபறை கறங்கக் கல்லென, வான்றோய் மீமிசை யயருங் குரவை" (மலைபடு. 318-22); "பெருமலை, வாங்கமை பழுநிய நறவுண்டு, வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே" (நற். உஎகூ : 8-10); "குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள், வாங்கமைப் பழுநிய தேறன் மகிழ்ந்து, வேங்கை நீழற் குரவை யயரும்" புறநா. கஉக : 1-3.

196-7. "தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ, மறு கிற் றூங்குஞ் சிறுகுடிப் பாக்கத்து" (அகநா. ககஅ : 3-4); "தொண் டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்" சிலப். உச: 16.

198-200. "தண்கயத் தமன்ற வொண்பூங் குவளை, யரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி, பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி" (அகநா. கஅ0 : 5-7); "கூருகிர் விடுத்ததோர் கோல மாலை" சீவக. 1466.

குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
200 யிணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ
205 மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு

---

199. "குண்டுசுனைக் குவளையொடு" (குறுந். ருக: 2) "குண்டுசுனைபூத்த வண்டுபடு கண்ணி, நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ யென்பன, பூத்தபூவான் இயன்ற கண்ணி, நூலாத நூலான் இயன்ற கலிங்கமென ஒற்றுமை நயம் பற்றிச் செயப்படு பொருண்மேல் நின்றன" (தொல். வினை. சூ. 37-ந.) ; இவ்வடி, பெயரெச்சம், செய்வ தாதி அறுபொருட் பெயரன்றிப் பிற பெயர் எஞ்ச நின்றதற்கு மேற் கோள் ; நன். வி. சூ. 340. "நுண்டுகில், குண்டு......கண்ணி என் றாற்போல ஒற்றுமை நயம்பற்றி, நுண்ணிய நூலாற் செய்ததுகிலென்று கொள்க" தஞ்சை. 217-உரை.

200. "இணைப்புறு பிணையல்" முருகு. 30.

202. "செங்கான் மராஅத்து" (நற். கசஅ: 5, ஐங். ருஅக: 2.) வாலிணர்: "மராத்து வாஅன் மெல்லிணர்" (அகநா. கஉஎ: 13); "மரா அத்து......வலஞ்சுரி வாலிணர்" ஐங். ருஅரு: 2-3.

203. "சுரும்புண விரிந்த பெருந்தண் கோதை" அகநா. கருக: 4.

201-4. "பல்பூம் பகைத்தழை நுடங்கு மல்குல்" (நற். அ: 2); "தண்ணறும் பிடவமும் தவழ்கொடித் தளவமும், வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையு, மன்னவை பிறவும் பன்மலர் துதையத், தழையுங் கோதையு மிழையு மென்றிவை, தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடு, மடமொழி யாயத்தவர்" (கலி. க0உ: 2-7); "அம்பூந் தொடலை யணித்தழை யல்குற், செம்பொறிச் சிலம்பி னிளை யோள்" (புறநா. ருசக: 2-3); "அந்தழை யல்குலும்" பு. வெ. 123.

205. மயில் கண்டன்ன மடநடை: "மடநடை மஞ்ஞை" (முருகு. 310); "பீலி மஞ்ஞையி னியலி" (பெரும்பாண். 331); "நன்மா மயிலின் மென்மெல வியலி" (மதுரை. 608); "அணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியை" (ஐங். உருஅ: 2); "மணிமயிற் றெழில்" (பரி. "வானுறெழிலி", 62); "வருநல மயிலன மட நடை மலைமகள்" (தே. இடைமருது.); "மயிலெனப் போந்து" (திருச்சிற். 224); "நடை மயிலே" பிரயோக. 42.

"மயில்......மகளிர்", "கண்டன்ன" இ-கொ. சூ. 86, 117-மேற்.

செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
210 தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடிய னெடியன் றொடியணி தோள
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு

---

206. "பவழத் தன்ன மேனித் திகழொளிக், குன்றி யேய்க்கு முடுக்கை......சேவலங் கொடியோன்" (குறுந். கடவுள். 2-5); "உடையு மொலியலுஞ் செய்யை......உருவு முருவத்தீ யொத்தி" (பரி. கக: 97-9); "குன்றியுங் கோபமு மொன்றிய வுடுக்கை" (தொல். உவம. சூ. 11, பேர். மேற்.); "குன்றி கோபங் கொடிவிடு பவள, மொண்செங் காந்த ளொக்கு நின்னிறம்" (தொல். சொல். சே. மேற்.); "வென்றிச் செவ்வேள்" சிலப். உ௫ : 25.

207. முருகு. 31-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; "ஒண்பூம் பிண்டி யொருகாது செரீஇ" குறிஞ்சி. 119.

208. "கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்" அகநா. எகூ : 7.

209. "வல்லானென்னும் வினைக்குறிப்புமுற்று வினையெச்சமாய் நின்றது; என்னை? திருமுருகாற்றுப்படையுள், குழலன் கோட்டன் குறும்பல்லியத்த னென்பதற்குக் குழலை யூதிக் கோட்டைக் குறித்துப் பல்லியத்தை ஒலிப்பித்தென முற்றுவினையை எச்சமாக நச்சினார்க்கினியர் கூறியவுரையிற் கண்டு கொள்க" தஞ்சை. 8-உரை.

211. நெடியன்: "உருகெழு நெடுவேள்" (முருகு. 273); "கடம்பமர் நெடுவேள்" (பெரும்பாண். 75); "நெடியாய்" (பரி. கக : 84); "நெடுவேட் பேண", "வெறிகமழ் நெடுவேள்", "நெடுவேண் மார்பி னாரம் போல", "காடுகெழு நெடுவேள்" (அகநா. உஉ : 6, கூஅ : 27, கஉ0 : 1, ௬அஉ : 5); "நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை" (புறநா. ௫௫ : 19.) தொடியணி தோளன் : "கழறொடிச் சேஎய்" குறுந். க : 3.

210-11. "சேவலங் கொடியோன் காப்ப" (குறுந். கடவுள். 5); "சேவற் கொடியன் றொடியணி தோளன்........எனத் தொடர்மொழி யீற்றின் விகுதி பொருந்தியது" இ-கொ. சூ. 117. உரை.

212. "நரம்பின் முரலு நயம்வரு முரற்சி, விறலியர்" (மதுரை. 217-8); "நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக், கடவ தறிந்த வின்குரல் விறலியர்" (மலைபடு. 535-6); "நரம்பார்த் தன்ன தீங்கிள

குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
215 முழவுறழ் தடக்கையி னியல வேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே யதாஅன்று

[ரு.—பழமுதிர்சோலை.]

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
220 யூரூர் கொண்ட சீர்கெழு விழவினு
மார்வல ரேத்த மேவரு நிலையினும்

---

வியளே" (ஐங். கஅ௬ :4); "இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்தி வள் பாடினளோ, நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந் தார்" சீவக. 658.

215. உறழென்பது மெய்யுவம வுருபாய் வருமென்பதற்கு இவ் வடி மேற்கோள்; தொல். உவம. சூ. 15, இளம். பேர்.

214-6. "மைந்த, ரெல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து" புறநா. உச : 9.

217. "குன்றுதொறு............பண்பேயெனத் தொறுவென்பது தான் சார்ந்த மொழிப் பொருட்குப் பன்மையும் இடமாதலும் உணர்த்தி நிற்கும்" (தொல். இடை. சூ. 48, சே. ந.; இ-வி. சூ. 279, உரை.) 'தொறு' என்னும் இடைச்சொல் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; நன். சூ. 420, மயிலை.

208-17. "முருகாற்றுப்படையுள், கச்சினன் கழலினன்......... பண்பே யென்புழி வந்த வினையெச்ச வினைக்குறிப்புமுற்றுக்கள் ஆக் கம் பெற்றுப் பொருளுணர்த்துங்கால், கச்சைக் கட்டிக் கழலையணிந்து கண்ணியைச் சூடிக் குழலையூதிக் கோட்டைக் குறித்துப் பல்லியங்களை யெழுப்பித் தகரைப் பின்னிட்டு மயிலையேறிக் கொடியையுயர்த்து வளர்ந்து தோளிலே தொடியையணிந்து துகிலையுடுத்து ஏந்தித் தழீஇத் தலைக்கை கொடுத்து ஆடலும் அவற்கு நிலைநின்ற பண்பெனச் செய்தெ னெச்சப் பொருளை உணர்த்தி நின்றவாறு காண்க" தொல். எச்ச. சூ. 63-ந.

218. "மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇ" (குறுந். உருங: 1); "உருவச் செந்தினை குருதியொடு தூஉய்" அகநா. உஉ : 10.

219. வாரணக்கொடி: முருகு. 38, 227.

கோழியை வாரணமென்றற்கு இவ்வடி மேற்கோள்; தொல். மரபு. சூ. 68, உரை.

வேலன் றைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
225 சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பி யைதுரைத்துக்

---

222. "சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி" (முருகு. 283); "வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்" (குறுந். ருஉ:3); "வேலன் வெறியயர் வியன்களம்" (அகநா. கஅ: 18-9); "வெறியயர் வெங் களத்து வேன்மகன்" (நாலடி. இளமை. 6); "வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து" சிலப். குன்றக்.

வேலன் ஆடுதல் சிறுபான்மை புறத்திற்குங் கோடற்கு இவ்வடி மேற்கோள்; தொல். புறத். சூ. 5, ந.

224. "ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவுங், கால்வழக் கறு நிலைக் குன்றமும் பிறவு, மவ்வவை மேய வேறு வேறு பெயரோ, யெவ்வயி னோயுநீயே" (பரி. ச: 67-70); "பெருவேண் மறைந்து பெரும்புன லாடும்" (பெருங். 1.42: 56.) "துறைபிசை-நீர்த் துறையில்; நீர்த்துறையில் நின் திருவடியைச் சூளுறு மவரென்க; யாறுங் குளனுமென்றா ராகலின்" சிலப். குன்ற. அரும்பத.

225. கடம்பு முருகக்கடவுளுக்கு இடம்: "கடம்பமர் நெடு வேள்" (பெருங் மாண. 75); "கடம்பமர்ந்து", "கடம்பம ரணி நிலை" (பரி. கக: 2,104); "செல்வக் கடம்பமர்ந்தான்" (ஐந். ஐம். 1); "செவ்வேள்.........மராஅத்தண் சாயை நின்றணங்கும்" (தஞ்சை. 132); "கடம்பமர் மன்றற் றொங்கற் கந்தனைச் சிந்தை செய்வாம்" (திருவால. கடவுள். 18); "கடம்பமர் காளை" கந்த. வள்ளியம்மை. 69.

224-5. "துறையு மாலமுந் தொல்வலி மராஅமு, முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர்" கலி. ௧0௧: 13-4.

226. மன்றமும் பொதியிலும்: "மாதவ ரிடங்களு மன்றமும் பொதியிலும்" (மணி. உ0: 30); "மன்றும் பொதியிலு மாமயில்சேர்" தஞ்சை. 34.

225-6. "மன்றமும் பொதியிலுஞ் சந்தியுஞ் சதுக்கமும்" மணி. உஅ: 59.

228. நெய்யோ டையவி யப்பி: "ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை" (நெடுநல். 86); "நெய்யோ டிமைக்கு மையவித் திரள்காழ்" (நற். ௩௭0: 3); "ஐயவி யப்பிய நெய்யணி முச்சி" மணி. 3: 134.

குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
230 முரண்கொ ளுருவி னிரண்டுட னுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
235 சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற வறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
240 யிமிழிசை யருவியொ டின்னியங் கறங்க
வுருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகண்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக

---

229. "குடந்தம் பட்டுச் சூழ்போந்து குழைந்து வழுத்தி" கூர்ம. தக்கன்வேள்வி. 52.

233. "குருதிச் செந்தினை பரப்பி" முருகு. 242.

232-3. "மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி" (பெரும்பாண். 143); "விடையும் வீழ்மின்" புறநா. உசுஉ : 1.

234. "பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ", "அறிதல் வேண்டு மெனப் பல்பிரப் பிரீஇ" (அகநா. கூ௮ : 9, உசஉ: 9); "பரந்தெலாப் பிரப்பும் வைத்து" (சீவக. 369); "அகவற் கொண்ட வலியும் பிரப்பும்" பெருங். 1. 34: 186.

232-4. "பலிகொடுத் துருவச் செந்தினை குருதியொடு தூஉய்" (அகநா. உஉ : 9-10); "கொழுவிடைக்கறை விராவிய பலிக்குறை நிரப்பி, வழுவில் பல்பிரப் பிரீஇவெறி யாட்டயர் மன்றத்து" தணிகை. நாடு. 46.

233-4. "சில்பலி யரிசியும்" மணி. சு : 95.

239. நறும்புகை யெடுத்து : "நறையி னறும்புகை நனியமர்ந் தோயே" (பரி. கச : 20.) மு. "குறிஞ்சிபாடுமி னறும்புகை யெடுமின்" (சிலப். குன்றக்.); "ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர் தூய்க், கொய்யாக் குறிஞ்சி பலபாடி" பு. வே. 79.

245 ராடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி
யோடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
வாண்டாண் டுறைதலு மறிந்த வாறே
250 யாண்டாண் டாயினு மாக காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்

---

245. "வெறியயர் வியன்களம் பொலிய வேத்தி" (அகநா. உசஉ:11.) ஆடுகளம்: "அணங்குறு மகளி ராடுகளங் கடுப்ப" (குறிஞ்சி. 175); "யானுமோ ராடுகள மகளே" குறுந். ருக : 4.

236-45. "களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி, வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத், துருவச் செந்தினை குருதியொடு தூஉய், முரு காற்றுப் படுத்த வுருகெழு நடுநாள்" அகநா. உஉ : 8-11.

246. "கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்" சிலப். உச : 17.

247. ஓடாப் பூட்கை : "ஓடாப் பூட்கை யுறந்தையும் வறிதே" (சிறுபாண். 83) பிணிமுகம் - முருகக்கடவுளின் ஊர்தியாகிய யானை : "சேயுயர் பிணிமுக மூர்ந்து", "பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ" (பரி. ரு :2, கள : 49);"பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. ருசு : 8); "பிணிமுக மேற்கொண்டு" (சிலப். உச. "உரையினி"); "பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு" (கல். 7, மயிலேறும். மேற்.) யானையை வாழ்த்துதல் : "கடம் புங்களிறும் பாடி" (தொல். பொருளியல், சூ. 16, ந. மேற்.) ஓடாப் பூட்கை : நன். சூ. 166, மயிலை. மேற்.

246-7. "தசும்புசே ரின்னியங் கறங்கக் கைதொழூ, துருகெழு சிறப்பின் முருகு மனைத்தரீஇக், கடம்புங் களிறும் பாடி" அகநா. கஙஅ : 9-11.

248. வேண்டுநர் வேண்டியாங் கெய்தல் : "வேண்டிய வேண்டி யாங் கெய்தலால்" (குறள், 265); "வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்", "மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் நீயே" தே. மறைசை, ஐயாறு.

249. "திசைநாறிய குன்றமர்ந் தாண்டாண்டு" (பரி. கள : 29); "ஆண்டாண் டுறைகுவர்" கலி. ருரு : 21.

250. பி-ம். 'ஆங்காங்காயினுமாக்'.

251. "முகனமர்ந் தின்சொலனாகி" (குறள், 92.) பி-ம். 'முக மலர்ந்தேத்தி.'

கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவரு ளொருவ னங்கை யேற்ப
255 அறுவர் பயந்த வாறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
260 வானோர் வணங்குவிற் றானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவி லொருவ பொருவிறன் மள்ள

---

253-5. "கடவு ளொருமீன் சாலினி யொழிய, அறுவர் மற்றை யோரும்..............நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனைப், பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்" (பரி. ரு : 44-9); "சரவணப்பூம் பள்ளி யறைத் தாய்மா ரறுவர், திருமுலைப்பா லுண்டான்" சிலப். உச: "உரையினி."

256. ஆல்கெழு கடவுட் புதல்வ: "ஆலமர் செல்வற் கமர்ந்த னன் கொடுப்ப" (சிறுபாண். 97); "ஆலமர் செல்வ னணிசார் பெரு விறல்", "ஆலமர் செல்வ னணிசான் மகன்" (கலி. அக: 7, அ௩: 14); "ஆலமர் கடவு ளன்னநின் செல்வம்"; (புறநா. ககஅ: 9); "ஆலமர் செல்வன் புதல்வன்" (சிலப். குன்றக்.); "ஆலமர் செல்வன் மகன்" மணி. ௩: 144.

257. மலைமகண் மகனே: "மலைமகண் மகனை" (சிலப். குன்றக்.); "மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே யென்றற் றொடக்கத் தன காரணக்குறியாக்கந் தொடர்ந்தன" நன். வி. சூ. 275.

258. கொற்றவை சிறுவ: "சேய்பயந்த மாமோட்டுத் துணங்கை யஞ் செல்விக்கு" பெரும்பாண். 458-9.

259. பழையோள்: "தொல்லைநாயகி" தக்க. 120.

261. நூலறி புலவ: "நூலறி புலவரை நோக்க" (சிலப். உரு: 116.) புலவ: "பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே", "புலமை யோய்" (முருகு. 268, 280); "சங்கத் தமிழின் றலைமைப் புலவா" முத்துக்குமார. தாலப்.

262. பொருவிறல் மள்ள: "பொருமறையார் கழல்வீரர் வீரன்" சிவஞானசித். முருகக்.

வந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
யங்கையர் கணவ மைந்த ரேறே
265 வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
யரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக
270 நசையுநர்க் கார்த்து மிசைபே ராள
வலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்று டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேஎள்
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
275 சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி

---

266. "குருகு பெயர்க்குன்றங் கொன்ற நெடுவேலே", "குருகு பெயர்க்குன்றங் கொன்றான்" (சிலப். உச); "குருகுபெயர்க் குன்றங் கொன்றோன்" (மணி. ரு : 13); "மலையைக் கொல்லுமென்றது, மலை பண்டு பிராணனுடையவாய்ப் பறந்து திரிந்தமையின்; 'குன்றம்...... ......கொற்றத்து' இது திருமுருகாற்றுப்படை" தக்க. 170, உரை.

267. "விண்பொரு நெடுவரைப் பரிதியின்" (முருகு. 299.) "விண்குத்து நீள்வரை வெற்ப" நாலடி. 226.

குறிஞ்சிக்கிழவ: "குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே" கந்தரலங்காரம், 5.

269. பெரும்பெயர்: "பெரும்பெய ரியவுள்" (முருகு. 274); "தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி (பெரும்பாண். 460); "பெரும் பெயர் முருக" (பரி. ரு : 50); "செல்வன் பெரும்பெய ரேத்தி" (அகநா. கஅ : 18); "பெரும்பெயர் வேந்தன்" (பு. வெ.); "பெரும் பெயர்ப் பிரமன்" (சீவக. 207); "பெரும்பெயர்க் கடவுளிற் கண்டு" (சிவஞானபோதம், சிறப்பு.); "பெரும்பெயரே பெயராக வந்த, வொரு வாய்மை தன்னை நினையினு முள்ள முருகுவதே" பஞ்சாக்கர. 5.

271. அலந்து, இடுக்கண் பட்டென்பதற்கு இவ்வடி மேற்கோள் தஞ்சை. 352, உரை.

272. "மண்டமர் பலகடந்து" கலி. க : 8.

273. நெடுவேள்: 211-ஆம் அடிக் குறிப்பைப் பார்க்க.

275. "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற், சீர்மிகு முருகன்" (அகநா. ருகூ : 10-11.) சூர்மருங்கறுத்த: "மன்மருங்கறுத்த மழுவா

போர்மிகு பொருந குரிசி லெனப்பல
யானறி யளவையி னேத்தி யானாது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையி
னின்னடி யுள்ளி வந்தனெ னின்னொடு
280 புரையுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
யளியன் றானே முதுவா யிரவலன்
285 வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தெனை
யினியவு நல்லவு நனிபல வேத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
யணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
290 மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி

ணெடியோன்" (மணி. உஉ: 25); "மழுவாளான் மன்னர் மருங் கறுத்த மால்போல்" தொல். புறத். சூ. 13, ந. உரை. மேற்.

279-80. நின்னொடு புரையுந ரில்லாப் புலமையோய்: "நின்னொ வார் பிறரின்றி நீயே யானாய்" (தே. தனித்திருத்தாண்டகம்); "மற்றொ ருத் தன்னொப்பா ரில்லாதான் காண்" (ஷை திருவாரூர்); "தனக்குவ மையில்லாதான்" குறள், 7.

281. "நீசில மொழியா வளவை" சிறுபாண். 235.

283. "சாறயர் களத்தின் வீறுபெறத் தோன்றி" (சிலப். கூ: 162.) பி-ம். 'வேறுபெறத் தோன்றி.'

282-3. "சாறுகொண்ட களம்போல, வேறுவேறு பொலிவுத் தோன்ற" புறநா. உஉ: 16-7.

284. "முதுவா யிரவல" (சிறுபாண். 40); "செல்லு முதுவா யிரவல" (பதிற். கூகூ: 3); "முதுவா யிரவல" புறநா. சஅ: 7.

285. "வந்தேன் பெரும வாழிய நெடிதென" பெரும்பாண். 461.

290. "பூவந்த வுண்கண் பொறுக்கென்று மேவித்தன், மூவா விளநலங் காட்டி" சிலப். க: 34-5.

289-90. "அறுமுகமில்லை; அணிமயில் இல்லை யென்று சொல்லு வார்களென்று வேறு காட்டினாள்; தலைமகள் கடம்புசூடி உடம்பிடி யேந்தித் தன்னைக் குமரனென்று பிறர் கருத வந்த காரணம், 'பண்டை ......காட்டி' என்றாராதலால்" சிலப். குன்றக். அரும்பத.

யஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென
வன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகித் தோன்ற விழுமிய
295 பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன்
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்பவேர் கீண்டு

---

292. அன்புடை நன்மொழி : "ஈர நன்மொழி", "ஆர்வ நன்மொழி" (சிறுபாண். 93, 99); "இன்சொலா லீர மளைஇ..............சொல்" (குறள், 91); "அன்புட னளைஇய வருண்மொழி" மணி. ௫ : 63.

294. பி-ம். 'ஒரு நீயாக.'

294-5. இவ்வடிகள், "இன்மை யுரைத்தாற் கதுநிறைக்க லாற்றாக்காற், றன்மெய் துறப்பான் மலை" என்பதற்கு மேற்கோள் ; கலி ௪௩, ந.

63-295. "முருகாற்றுப்படையுள், புலம் பிரிந்துறையும் சேவடியெனக் கந்தழிகூறி நின்னெஞ்சத்து இன்னசை வாய்ப்பப் பெறுதியெனவும் கூறி அவனுறையு மிடங்களுங்கூறி ஆண்டுச்சென்றால் அவன்விழுமிய பெறலரும் பரிசில் நல்குமெனவுங்கூறி ஆண்டுத் தான்பெற்ற பெருவளம் அவனும் பெறக் கூறியவாறு காண்க. இதனைப் புலவராற்றுப்படை யென்று உய்த்துணர்ந்து பெயர் கூறுவார்க்கு முருகாற்றுப்படையென்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமையான் மறுக்க. இனி, முருகாற்றுப்படை யென்பதற்கு முருகன்பால் வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை ஆற்றுப்படுத்ததென்பது பொருளாகக் கொள்க" தொல். புறத். சூ. 36, ந.

296. அருவிக்குத்துகில் : "அவிர்துகில் புரையு மவ்வெள் ளருவி" (குறிஞ்சி. 55); "அறுவைத், தூவிரி கடுப்பத் துவன்றி மீமிசைத், தண்பல விழிதரு மருவி" (புறநா. ௧௫௪ : 10-12); "மாநீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி, மானீல மால்வரை நாடகேள்" (திணைமா. 6); "நதிதோறுந் துகில்புரை நறுநீரிற் றோய்வன" (கம்ப.வனம்புகு. 11); "பௌவநீ ராடைத் தரணிமான் மார்பிற் பயிலுமுத் தரியமும் போன்று .........தெய்வமா நதிநீர் பரக்கும்" வி. பா. சிறப்பு. 8.

297. ஆரமுழுமுதல் : "வாழை முழுமுதல்" மருது. 307.

298. "பூவுடை யலங்குசினை புலம்பத் தாக்கிக், கல்பொரு திரங்குங் கதழ்வீ ழருவி" குறுந். ௧௬௪ : 4-5.

விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
300 தண்கமழ் அலரிறால் சிதைய நன்பல
வாசினி முதுகளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுத
லிரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
305 முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப்பொன் கொழியா
வாழை முழுமுத றுமியத் தாழை
யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
310 மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலொ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
315 டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிதரு மருவிப்

---

300. அலர்தல் - பரத்தலென்பதற்கு இவ்வடி மேற்கோள் தஞ்சை. 269, உரை.

304-5. "யானை, முத்துடை மருப்பின்" மலைபடு. 517-8.

309. "கறிக்கருந்துணருகுப்ப" திருவிளை. நாடு. 35.

310. முருகு. 205-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

312-3. "இரும்பனஞ் செறும்பி னன்ன பரூஉமயிர்ச், சிறுகட் பன்றி" (அகநா. ௨௭௭ : 7-8); "பனஞ்செறும் பன்ன பன்மயிர் முன்கை" (பெருங். 2. 8 : 107); "பெண்ணைவன் செறும்பிற் பிறங்கிச் செறி, வண்ண வன்மயிர்" (கம்ப. கங்கை. 33); "இரும்பனை வெளிற் றின் புன்சா யெனமலி மயிரி னாக்கைக், கரும்பெருங் கரடி" விநாயக. நாடு. 26.

315. சிலைத்தல் இசைப்பொருளை உணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 62, பேர். சே. ந; இ. வி. சூ. 285, உரை.

316. "இழுமென்று வந்திங் கிழியு மலையருவி" (சிலப். குன் றக்.); "இழுமெ னோதையி னிழிதரு மருவி" (ஆனைக்கா. நாடு. 14); "வெள்ளருவி யிழுமெ னோதையும்" தணிகை. நாடு. 46.

292-316. தொல். இடை. சூ. 27, ந. மேற்.

பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

317. மலைகிழவோனே : "ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே" (பெரும்பாண். 500); "நிலைபெறு தணிகை மலைகிழ வோனே" தணிகையாறு. 417.

தொல். பெயர். சூ. 11, கல். மேற். பெயரிடத்து னகர வீற்றயலகரம் ஓகாரமா மென்பதற்கு இவ்வடி மேற்கோள்; இ. வி. சூ. 326, உரை; நன். வி. சூ. 353.

## இதன் பொருள்.

### க.—திருப்பரங்குன்றம்.

1. உலகமென்பதுமுதற் கணவன் (6) 1 என்னுந்துணையும் ஒரு தொடர்.

உலகம் உவப்ப—சீவான்மாக்கள் உவப்ப,

உலகமென்பது பலபொருளொருசொல்லாய் நிலத்தையும் உயிர்களையும் ஒழுக்கத்தையும் உணர்த்திநிற்குமேனும் ஈண்டு உவப்பவென்றதனான், மண்ணிடத்துவாழும் சீவான்மாக்களை உணர்த்திற்று.

[வலனேர்பு திரிதரு :] ஏர்பு வலன் திரிதரு - எழுந்து 2 மகாமேருவை வலமாகத்திரிதலைச்செய்யும்,

2. பலர் புகழ் ஞாயிறு - எல்லாச்சமயத்தாரும் புகழும் ஞாயிற்றை,

கடற் கண்டாங்கு - கடலிடத்தே கண்டாற்போல,

இது வினையெச்சவுவமம்; 3 "விரவியும் வரூஉ மரபின வென்ப" என்பதனால் தொழிலுவமமும் வண்ணவுவமமும் பற்றிவந்தது; என்னை? ஞாயிறு இருளைக்கெடுக்குமாறுபோலத் தன்னை மனத்தால் நோக்குவார்க்கு மாயையைக் கெடுத்தலிற் றொழிலுவமமும், தன்னைக் கட்புலனால் நோக்குவார்க்குக் 4 கடலிற் பசுமையும் ஞாயிற்றின் செம்மையும்

1 ( ) இந்த நகவளைவுக்குட்பட்ட எண்ணும், இப்படியே பின்னர் ஆங்காங்குப் பதிப்பிக்கப்படும் எண்களும் தத்தம் முன்புள்ள மொழிகளையேனும், அம்மொழிகளைப் பொருளாகப் பெற்ற மொழிகளையேனு முடைய மூலத்தின் வரியைப் புலப்படுத்தும்.

2 "ஞாயிறு போற்றுதும்........மேருவலந்திரிதலான்" சிலப். மங்கல.

3 தொல்காப்பியம், உவமவியல், சூ. 2.

4 "மாக்கட னிவந்தெழுதரு,செஞ்ஞா யிற்றுக் கவினை" (புறநா. ௪: 15 - 6); "உததியிடை கடவுமரகதவருண குலதுரக வுபலளித கனகரத சதகோடி சூரியர்கள், உதயமென வதிகவித கலபகக மயிலின் மிசை யுகமுடிவி னிருளகல வொரு சோதி வீசுவதும்" திருவகுப்பு, ஸ்ரீபாத.

போல மயிலிற் பசுமையும் திருமேனிச் செம்மையும் தோன்றலின் வண்ணவுவமமும் கொள்ளக்கிடந்தமை காண்க.

3. [ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி :]

[1] ஓ அற இமைக்கும் அவிர் ஒளி - இருவகையிந்திரியங்களும் தாம் செல்லுதற்குரிய பொருள்கண்மேற் சென்றுதங்குதல் இல்லையாக இமைத்துப் பார்த்தற்குக் காரணமாகும், விளங்குகின்ற ஒளி.

ஓ என்பது ஓரெழுத்தொருமொழியாகிய தொழிற்பெயர். இமைத்தல் - கண்களின் இதழ்களிரண்டினையும் குவித்தல்; அது [2] "நுதல திமையா நாட்டம்" என்பதனாலுணர்க.

சேண் விளங்கு ஒளி - கட்புலனால்நோக்குவார் கண்ணிடங்களெல்லாவற்றினும் சென்று விளங்குகின்ற ஒளியினையும்,

உவப்ப எழுந்து திரியும் (1) ஞாயிற்றைக் கடற்கண்டாங்கு (2) அவிர்கின்ற ஒளி (3) யெனத்தொழிலுவமம் கொள்ளுங்கால் வினைமுடிக்க. உவப்ப எழுந்து திரியுஞாயிற்றைக் கடற்கண்டாங்குச் சேண்விளங் கொளியென வண்ணவுவமங் கொள்ளுங்கால் வினைமுடிக்க.

4. உறுநர் தாங்கிய [3] மதன் உடை நோன்றாள்— தன்னைச்சேர்ந்தவர்கள் தீவினையைப்போக்கி அவரைத் தாங்கிய, அறியாமையை உடைத்தற்குக் காரணமாகிய வலியினையுடைய தாளினையும்,

5. செறுநர் தேய்த்த [4] செல் உறழ் தட கை - அழித்தற்குரியாரை அழித்த இடியைமாறுபட்ட பெருமையினையுடைய கையினையும் உடைய,

6. மறு இல் கற்பின் வாள் நுதல் கணவன்—[5] மறக்கற்பில்லாத

---

1 ஓவற - ஒழிவற. இமைக்கும் - விட்டுவிளங்கும். அவிர்தல் - பாடஞ் செய்தல் (வேறுரை.)

2 அகநா. கடவுள். 4. 3 மதனுடை - அழகுடைய (வேறுரை.)

4 செல்உறழ் - மேகத்தைஒத்த (வேறுரை.)

5 மறக்கற்பு அறக்கற்பு: மறக்கற்பு சீறிய கற்பென்றும் கொடுங்கற்பென்றும், அறக்கற்பு ஆறிய கற்பென்றும் அருட்கற்பென்றும் வழங்கப்பெறும்; 'வருத்தமில்லாத அருட்கற்பினையுடைய தெய்வயானையார்' (முருகு. 175, ந.); "ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை, வண்டார் கூந்த லொண்டொடி கணவ" (பதிற். ௯0: 49-50); 'வீரபத்தினி மறக்கற்புடையாள்; கோப்பெருந்தேவி அறக்கற்புடையாள்; ஆக ஆறியகற்பும் சீறியகற்புமெனக் கற்பு இருவகை' (சிலப். பதிகம், 38-54, அடியார்.); "கொந்தளக மலர்சரியக் கூப்பிடுவாள் கொடுங்கற்பும்" வி. பா. சூதுபோர். 253.

1 அறக்கற்பினையும் ஒளிபொருந்திய நுதலினையுமுடைய இந்திரன் மகள் தெய்வயானையார் கணவன் ;

இப்பெயரை முற்கூறினார், படைத்தற்கும் காத்தற்கும் உரிமை தோன்ற.

2 மறுவில் கற்பின்வாணுதல் | கணவனென்பது ஈண்டு முருகனென் னுந் துணையாய் நின்றது.

ஒளியினையும் (3) தாளினையும் (4) கையினையும் (5) உடைய கண வனென முடிக்க.

7. கார்கோளென்பது முதல் மார்பினன் (11) என்னுந்துணையும் ஒரு தொடர்.

கார்கோள் முகந்த கமஞ்சூல் மா மழை - கடலிலே முகந்த தனாலுண்டாகிய நிறைவினையுடைத்தாகிய சூலினையுடைய பெருமையை யுடைய மழை,

கார் முகக்கப்படுதலிற் கடல் கார்கோளென்று பெயர் பெற்றது ; ஆகுபெயர்.

8. 3 வாள் போழ் விசும்பில் வள் உறை சிதறி - திங்களும் ஞாயி றும் இருளை நீக்கும் ஆகாயத்தே பெருமையையுடைய துளியை முற் படச்சிதறி,

வாள்: ஆகுபெயர்.

9. தலைப்பெயல் 4 தலைஇய தண் நறு கானத்து—கார்காலத்து முதற்பெயலைச் சொரிந்த தண்ணிய நறிய காட்டிடத்து,

10. இருள் பட 5 பொதுளிய பராரை மராஅத்து — இருட்சி யுண்டாகத் தழைத்த பரிய அடியினையுடைய 6 செங்கடம்பினது,

பராரை: பண்புத்தொகைச்சந்திமுடிபு வேற்றுமையென்றுணர்க.

11. 7 உருள் பூ தண் தார் புரளும் மார்பினன்—தேருருள் போலும் பூவாற் செய்யப்பட்ட குளிர்ந்த மாலையசையும் மார்பினை யுடையவன் ;

---

1 பி - ம். அருட்கற்பு.

2 'கொடியோள் கணவன்.........இது நன்னனென்னும் பொருட் டாய் நின்றது' (மலைபடு. 424, ந.) என்றது இங்கே அறியத்தக்கது.

3 வாள் போழ் - திங்களும் ஞாயிறும் அளவிடப்பட்டாற்போன்ற (வேறுரை.) 4 தலைஇய - தழைத்த (வேறுரை.)

5 பொதுளிய - நெருங்கிய (வேறுரை.)

6 பி-ம். வெண்கடம்பினது.

7 உருள்பூ - தேருருள்போன்ற வட்டப்பூ (வேறுரை.)

உருள்பூ உவமத்தொகையாகலின் உருள்பூ உருட்பூவென உறழ்ச்சி முடிபெய்தும்; இனி உருண்டபூ உருளும்பூவென வினைத்தொகையுமாம்.

மழை சிதறித் தலைஇய கானத்து மராஅத்துத் தார் புரளும் மார்பினனென முடிக்க.

இது [1] போகத்திற்குரிய தார்; இதனை முற்கூறினார், வாணுதல் கணவன் (6) என்றதனைநோக்கி.

12. மால்வரை என்பதுமுதற் சென்னியன் (44) என்னுந்துணையும் ஒரு தொடர்.

மால் வரை நிவந்த சேண் உயர் வெற்பில் - பெருமையையுடைய மூங்கில் வளர்ந்த தேவருலகளவாகச் செல்லவுயர்ந்த மலையில், [2] வரைகளை யுடைமையின் வரையாயிற்று; இஃது ஆகுபெயர்; [3] "பெரிய வரைவயிரங் கொண்டு" என்றார் பிறரும்; இனித் திருமால் போலும் குவடுகளோங்கிய வெற்பென்றுமாம்; [4] "மாயோ னன்ன மால் வரைக் கவாஅன்" என்றார் பிறரும்.

13. கிண்கிணி [5] கவைஇய ஒள் செஞ்சீறடி - சிறுசதங்கை சூழ்ந்த ஒள்ளிதாகிய சிவந்த சிறிய அடியினையும்,

14. கணை கால் - திரண்ட காலினையும்,

வாங்கிய நுசுப்பின் - வளைந்து நுடங்கிய இடையினையும்,

பணை தோள் - பெருமையையுடைய தோளினையும்,

மூங்கில்போலும் தோளென்றுமாம்.

15. கோபத்து அன்ன தோயா [6] பூ துகில் - இந்திர கோபத்தை யொத்த நிறம்பிடியாத இயல்பான சிவப்பாகிய பூத்தொழிலினையுடைய துகிலினையும்,

---

1 "மாலைமார்ப" என்றதில் மாலையென்பது இன்பத்திற்குரிய மாலையென்பர்; புறநா. 261, ந.

2 "வரை, கண்களை யுடைமையான் ஆகுபெயரான் மூங்கிற்குப் பெயராயிற்று. வரை மலையாகாதோவெனின்...........'மால்......... வெற்பில்' எனக் கூறியதனான் உணர்க" தஞ்சை. 49, உரை.

3 "அரிய வரைகீண்டு காட்டுவார் யாரே, பெரிய வரைவயிரங் கொண்டு - தெரியிற், கரிய வரைநிலையார் காய்ந்தாலென் செய்வார், பெரிய வரைவயிரங் கொண்டு" யா. வி. சூ. 60, மேற்.

4 நற்றிணை, ௩௨ : 1.

கவைஇய - கட்டிய (வேறுரை.)

6 இவ்வாறே பூங்கலிங்கமென்பதற்குப் பூத்தொழிலையுடைய கலிங்கமென்று பொருளெழுதுவர் (கலி. ௬௬ : 11 - ந.) பூத்தொழிலையுடைய துகில்: சிலப். ப. 180, 196, 352; "சித்திரப்படாம்" சிலப். எ : 1.

தெய்வத்தின் ஆணையால் தானே சிவந்திருத்தலின், தோயாத்துகி லென்றார்.

16. பல் காசு நிரைத்த சில் காழ் அல்குல்—பலமணிகள்கோத்த ஏழுவடமாகிய 1 மேகலையையணிந்த அல்குலினையும்,

அஃது, 2 "எண்கோவை காஞ்சி யெழுகோவை மேகலை - பண் கொள் கலாபம் பதினாறு - கண்கொள், பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" 3 என்பதனானுணர்க.

17. கை புனைந்து இயற்றா கவின் பெறு 4 வனப்பின்-ஒருவர் கையாற் சிறப்பித்துப் பிறப்பியாத அழகைத் தமக்கு இயல்பாகப்பெறு கின்ற அழகினையும்,

என்றது : மானிடமகளிர்க்குத் 5 தாயர்பலரும் கைசெய்து பிறப்பிக் கும் அழகன்றி இவர் தெய்வத்தன்மையான் இயல்பாகப்பெற்ற அழகினை யுடைய ரென்றவாறு.

18. 6 நாவலொடு பெயரிய பொலம் புனை அவிர் இழை - 7 சாம்பூ நதமென்று நாவலோடடுத்துப் பெயர்பெற்ற பொன்னால் நிருமித்து விளங்குகின்ற பூணினையும்,

பொலம்: 8 "பொன்னென் கிளவி" என்பதனான் முடிக்க.

19. சேண் இகந்து விளங்கும் செயிர் தீர் மேனி - சேய்நிலத் தைக் கடந்து விளங்குகின்ற குற்றந்தீர்ந்த நிறத்தினையுமுடைய சூரா மகளிர் (41) என்க.

---

1 "பல்காழ்" (பொருந. 39) என்பதற்கும் மேகலையென்றே பொரு ளெழுதுவர்.

2 "எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை, பண்கொள் கலாப மிருபத்தொன்று - கண்கொள், பருமம் பதினான்கு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" எனவும் பாடம்.

3 இந்தச் செய்யுளின் பொருண்முறை திவாகரம், பிங்கலம், சூடா மணி என்பவற்றிலும், இதன் பாடபேதச்செய்யுளின் பொருண் முறை "எண்ணிரண்டிரட்டி" (திருவிளை. திருமண. 158) என்னும் செய் யுளிலும் காணப்படுகின்றன.

4 வனப்பு - இளமைநிறம் (வேறுரை.)

5 ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓலுறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாயெனத் தாயர் ஐவராதலின், 'தாயர் பலரும்' என்றார் (சீவக. 363, ந.) இவரை, "அடியோர் பாங்கு" என்பர் ; சிலப். கஅ: 85, அடியார்.

6 நாவற்பழத்துச் சாறுபட்டுப் பேதமான பொன்னால் (வேறுரை.)

7 "பொன்னுக்குச் சாம்புநதம்" திருவள்ளுவ.

8 தொல். புள்ளிமயங்கியல், சூ. 61.

20. துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி - ஆயத்தார் நன்றென்று ஆராய்ந்த கடையொத்த நெய்ப்பினையுடைய மயிரிலே,

21 - 2. [செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு, பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளி :] செங்கால் வெட்சி சிறு இதழ் இடை பைந்தாள் குவளை தூ இதழ் கிள்ளி இடுபு - சிவந்தகாலையுடைய வெட்சியுடைய சிறிய பூக்களை 1 விடுபூவாகத் தூவி அதற்குநடுவே பசுத்த தண்டினையுடைய குவளையினது தூய இதழ்களைக் கிள்ளியிட்டு,

23. தெய்வவுத்தியொடு 2 வலம்புரி வயின் வைத்து - 3 சீதேவியென்னும் தலைக்கோலத்துடனே வலம்புரிவடிவாகச் செய்த தலைக்கோலத்தையும் வைத்தற்குரிய இடத்தே வைத்து,

24 - 5. 4 திலகம் தைஇய தேம் கமழ் திரு நுதல் மகரப்பகுவாய் தாழ மண்ணுறுத்து—திலகமிட்ட மணநாறுகின்ற அழகினையுடைய நெற்றியின்கண்ணே சுறவினது அங்காந்த வாயாகப்பண்ணின தலைக்கோலம் தங்கப்பண்ணி,

மகரப்பகுவாய்: ஆகுபெயர். மண்ணுறுத்தலை, 5 "ஆவுதி மண்ணி" என்றாற்போலக் கொள்க. இனி மண்ணுறுத்துத் துவரமுடித்தவெனமேலேகூட்டி, கழுவி முடித்தவென்றுமாம்.

26 - 7. துவர முடித்த துகள் அறும் முச்சி பெரு தண் சண்பகம் செரீஇ - வேண்டுவனகூட்டி முற்றமுடித்த குற்றமறுகின்ற கொண்டையிலே பெரிய குளிர்ந்த சண்பகப்பூவைச் செருகி,

27 - 8. கரு தகடு 6 உளை பூ மருதின் ஒள் இணர் அட்டி - கரிய புறவிதழினையும் மேலில் துய்யினையுமுடைய பூக்களையுடைய மருதினது ஒள்ளிய பூங்கொத்துக்களை அதன் மேலேயிட்டு,

இது 7 முதலாகிய பொருட்கேற்ற அடையடுத்து நின்றது.

29 - 30. கிளை கவின்று எழுதரு கீழ்நீர் செவ்வரும்பு இணைப்பு உறு பிணையல் வளைஇ - பச்சென்ற அரும்புகளினின்றும் மேலேபோந்து

1 விடுபூ - கட்டாதபூ ; பூக்கள் விடுபூ, தொடைப்பூ, கட்டுப்பூவென மூவகைப்படுமென்பர் ; சிலப். ௫ : 14, அடியார்.

2 வலம்புரி - வலம்புரிச்சங்கின்ற முத்தின்மாலை, நந்தியாவட்டப்பூ. (வேறுரை.)

3 "செந்திருவுந் திங்களும் பூவுந் தலைசிறப்ப" தண்டி. உரை, மேற்.

4 பொட்டு அணிந்தின (வேறுரை.)

5 மதுரைக்காஞ்சி, 494.

6 உளைப்பூ - விரிந்தபூ (வேறுரை.) "உளைப்பூ மருதத்து" ஐங். எ.

7 முதலென்றது மருதமரத்தை; அடையென்றது உளைப்பூவென்றதனை.

அழகுபெற்றுத் தோன்றுகின்ற நீர்க்கீழ் நின்ற சிவந்த அரும்பைக் கட்டுதலுறுகின்ற மாலையை வளையவைத்து,

கவினென்னும் பண்படியாகக் கவின்றென்னுந் தொழில் பிறந்தது. கீழ்நீர்: நீர்க்கீழென்னும் இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ.

அது மிகச்சிவத்தலின் 1 ஒப்பனைக்குக் கொள்வர்.

30 - 32. [துணைத்தக, வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர், நுண்பூ ணாகந் திளைப்ப :] வள் காது துணை தக நிறைந்த பிண்டி ஒள் தளிர் நுண்பூண் ஆகம் திளைப்ப - வளவிய காதிலே தம்மில் ஒத்தற்குப் பொருந்த இட்டுநிறைந்த பிண்டியினது ஒள்ளிய தளிர் நுண்ணிய பூணையுடைய மார்பிடத்தே அசையாநிற்க,

32 - 5. திண் காழ் நறு குறடு உரிஞ்சிய பூ கேழ் தேய்வை தேகமழ் மருது இணர் கடுப்ப கோங்கின் குவி முகிழ் இளமுலை கொட்டி - திண்ணிய வயிரத்தையுடைய நறிய சந்தனத்தையுரைத்த பொலிவினையுடைய நிறத்தை யுடைத்தாகிய குழம்பை மணநாறுகின்ற மருதம்பூவை அப்பினுலொப்பக் கோங்கினது குவிந்த அரும்பையொத்த இளமுலையிலே யப்பி,

மருதிணர் நிறத்திற்குவமம்.

35 - 6. விரி மலர் வேங்கை நுண் தாது அப்பி - அவ்வீரம்புலர்வதற்கு முன்னே விரிந்த மலரையுடைய வேங்கைப்பூவினது நுண்ணிய தாதையும் அதன் மேலே அப்பி,

36 - 7. [காண்வர, வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா :] வெள்ளில் குறுமுறி கிள்ளுபு காண் வர 2 தெறியா - விளவினது சிறிய தளிரைக் கிள்ளி அழகுவர ஒருவர்மேல் ஒருவர் தெறித்துத் தப்பாமற்பட்டபொழுது,

38 - 9. [கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி, வாழிய பெரிதென் றேத்தி :] வென்று அடு விறல் கோழி ஓங்கிய கொடி பெரிது வாழிய என்று ஏத்தி - வஞ்சியாது எதிர்நின்று அடுகின்ற வெற்றியையுடைய கோழிமேலாய் நின்றகொடி நெடுங்காலம் வாழ்வதாகவென்று வாழ்த்தி,

39 - 41. [பலருடன், சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச், சூரரமகளி ராடுஞ் சோலை:] சூர் அரமகளிர் 3 பலருடன் சீர் திகழ் சிலம்பு அகம் சிலம்ப பாடி ஆடும் சோலை - கொடுமையையுடைய தெய்வமகளிர் பலருங்கூடிச் சீர்மை விளங்குகின்ற மலையிடமெல்லாம் ஆரவாரிக்கப் பாடி ஆடும் சோலையினையுடைய,

---

1 ஒப்பனை - அலங்காரம்.

2 பிள்ளையார் சீபாதங்களை உள்ளித்தெறித்து (வேறுரை.)

3 பி-ம் 'பலவுடன்.' பலவுடன்-பலதோத்திரங்களினுலே (வேறுரை.)

42. 1 மந்தியும் அறியா மரன் பயில் அடுக்கத்து - மரமேறுதற்றொழிலிற் சிறப்பையுடைய மந்திகளும் மரங்களின் நீட்டத்தால் ஏறியறியாத மரநெருங்கின பக்கமலையிடத்து நின்ற,

உம்மை: சிறப்பும்மை.

43-4. சுரும்பும் மூசா சுடர் பூ காந்தள் பெரு தண் 2 கண்ணி மிலைந்த சென்னியன் - தான் விரும்புதலிற் சுரும்பினமும் மொய்யாத நெருப்புப்போலும் பூவினையுடைய செங்காந்தளினது பெரிய குளிர்ந்த கண்ணியைச் சூடிய திருமுடியையுடையவன் ;

அடியினையும் (13) காலினையும் நுசுப்பினையும் தோளினையும் (14) துகிலினையும் (15) அல்குலினையும் (16) வனப்பினையும் (17) இழையினையும் (18) மேனியினையும் (19) உடைய சூரரமகளிர் (41) பலருங்கூடி (39) இடையிட்டு (21) வைத்துத் (23) தாழப்பண்ணிச் (25) செரீஇ (27) இணரட்டி (28) வளைஇத் (30) திளையாநிற்கக் (32) கொட்டி (35) அப்பித் (36) தெறித்து (37) எத்திப் (39) பாடி (40) ஆடுஞ்சோலையையுடைய (41) வெற்பில் (12) அடுக்கத்துக் (42) காந்தட் கண்ணி மிலைந்த சென்னியனென முடிக்க.

இதனான் 3 அடையாளப்பூக் கூறினார். இது, 4 "வெறியாட் டயர்ந்த காந்தளும்" என்பதனானுணர்க.

"5 அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு, மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தன், மாட்டெனமொழிப பாட்டியல் வழக்கின்" என்னும் 6 மாட்டிலக்கணத்தான் இப்பாட்டுக்கள்பத்துஞ் செய்தார்களாதலின் இவ்வாறே மாட்டிமுடித்தல் யாண்டும் வருமென்றுணர்க.

45. பார் என்பதுமுதற் சேய் (61) என்னுந்துணையும் ஒருதொடர்.

பார் முதிர் பனி கடல் கலங்க உள் புக்கு - பாராகிய நிலம் முற்றுப் பெற்ற குளிர்ச்சியையுடைய கடல் தன் நிலை குலையும்படி உள்ளேசென்று,

---

1 மந்தி - அருக்கன் (வேறுரை.)

2 கண்ணி - சூடும்பூவென்றும் வழங்கும் ; சீவக. 208, ந.

3 அடையாளப்பூ - ஒருவர்க்கே உரியபூ. கொன்றைமாலையைச் சிவபெருமானுடைய அடையாளப்பூவென்பர் ; சீவக. 208, ந.

4 தொல். புறத்திணை, சூ. 5. 5 தொல். செய்யுள், சூ. 211.

6 "அகன்றுவந்த மாட்டு முருகாற்றுப்படை முதலியவற்றுட் காண்க ; மொழிமாற்றுவது கேட்டோர் கூட்டியுணருமாற்றான் ஈரடிக்கண்ணே வருவதென்றும், மாட்டென்னுமுறுப்பாவது இரண்டிறந்த பலவடிக்கண்ணும் பல செய்யுட்டொடரின் கண்ணும் அகன்றும் அணுகியும் வருமென்றுமுணர்க" தொல். எச்ச. சூ. 13, ந.

பார் - பாறை; மண்ணிடத்தே முதிர்ந்த கடலென்றுமாம்.

46. சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடு வேல் - சூரபன்மாவாகிய தலைவனைக்கொன்ற எரிகின்ற இலைத்தொழிலையுடைய நெடிய வேலாலே,

47. உலறிய கதுப்பின் - காய்ந்த மயிரினையும்,

பிறழ் பல் - நிரை ஒவ்வாத பல்லினையும்,

பேழ் வாய் - பெருமையையுடைய வாயினையும்,

48. சுழல் விழி பசு கண் - கோபத்தாற் சுழலும் விழியையுடைய பசிய கண்ணினையும்,

1 சூர்த்த நோக்கின் - கொடுமைசெய்த பார்வையினையும்,

49 - 50. 2 கழல் கண் கூகையொடு கடு பாம்பு தூங்க பெரு முலை அலைக்கும் காதின் - பிதுங்கிய கண்ணையுடைய கூகையோடே கடிய பாம்பு தூங்குகையினாலே பெரிய முலையை வருத்துகின்ற காதினையும்,

பிணர் மோட்டு - சருச்சரையையுடைய பெரிய உடலினையும்,

மோடு - வயிறுமாம்.

51. உரு கெழு செலவின் - கண்டார் உட்குதல் பொருந்தும் நடையினையுமுடைய,

அஞ்சுவரு பேய்மகள் — கண்டார்க்கு அச்சம் தோன்றுகின்ற பேயாகிய மகள்,

52 - 3. குருதி ஆடிய கூர் உகிர் கொடு விரல் கண் தோட்டு உண்ட கழிமுடை கரு தலை — உதிரத்தையளைந்த கூரிய உகிரினையுடைய கொடிய விரலாலே கண்களைத் தோண்டி உண்ணப்பட்ட மிக்க முடைநாற்றத்தையுடைய கரிய தலையை,

இனி, தொட்டென்பதனை வினையெச்சமாக்காது தொழிற்பெயராக்கிக் கண் தோண்டுதலுண்டவென்று கூறுதலுமாம்.

54. ஒள் தொடி தட கையின் ஏந்தி - ஒள்ளிய தொடியினையுடைய பெருமையையுடைய கையிலே எடுத்து,

54 - 5. வெரு வர வென்று அடு விறற்களம் பாடி — அவுணர்க்கு அச்சந்தோன்ற அஞ்சியாது எதிர்நின்று கொல்கின்ற வெற்றிக்களத்தைப் பாடி,

தோள் பெயரா — தோளையசைத்து,

56. நிணம் தின் வாயள் - நிணத்தைத் தின்கின்ற வாயினையுடையளாய்,

1 சூர்த்தம் - நடுக்கம் (வேறுரை.)

2 கழல்கண் - கழன்று விழுவதுபோலும் கண். கடும்பாம்பு - கோபத்தையுடைய பாம்பு. (வேறுரை.)

வாயள்: வினையெச்சமுற்று.

1 துணங்கை தூங்க - துணங்கைக்கூத்தாட,

2 "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத், துடக்கிய நடையது துணங்கை யாகும்."

கதுப்பு (47) முதலியவற்றையுடைய பேய்மகள் (51) தலையை (53) ஏந்தி (54) வாயளாய்ப் (56) பாடித் (55) தூங்கவென முடிக்க.

57. 3 இரு பேர் உருவின் ஒரு பேர் யாக்கை - மக்கள் வடிவும் லங்கின் வடிவுமாகிய 4 இரண்டு பெரிய வடிவினையுடைய ஒன்றாகிய பரிய உடல்,

58. அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி - ஆறாகிய வேறு ட்ட கூற்றாலே அச்சந்தோன்ற மிக்குச்சென்று,

என்றதனான், 5 இறைவன் உமையை வதுவை செய்துகொண்ட ாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிர வேண்டுமென்று வேண் க்கொள்ள அவனும் அதற்கு உடம்பட்டு அது தப்பாதாகிப் புணர்ச்சி விர்ந்து கருப்பத்தை இந்திரன் கையிற் கொடுப்ப அதனை இருடிக நணர்ந்து அவன் பக்கனின்றும் வாங்கித் தமக்குத் தரித்தல் அரிதாகை லாலே இறைவன் கூறாகிய முத்தீக்கட்பெய்து அதனைத் தம்மனைவியர் கையிற் கொடுப்ப அருந்ததியொழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப் பொய்கையிற் 6 பதுமப்பாயலிலே

1 சிங்கிக் கூத்து (வேறுரை.)

2 "முடக்கிய விருகை பழுப்புடை யொற்றத், துடக்கிய நடையது துணங்கை யாகும்" (திவா. பிங்கல.) எனவும் பாடம்.

3 இரு பேர் உரு - சூரனென்றும் பதுமனென்றும் இரண்டு பேரை புடைய வடிவம் (வேறுரை.)

4 இரண்டு பெரிய வடிவினையுடைய ஒன்றாகிய உடலென்றது, குதிரை முகமும் மக்களுடலுங்கொண்ட சூரபன்மாவின் உடலத்தை; "ஈரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச் சூர்" (கலி. ௯௩ : 25-6) என்பதற்கு, 'கெடாத விரதத்தாலே முகம் குதிரைமுகமும் உடல் மக் களுடலுமாகிய இரண்டு அழகுக்குப் பொருந்திய சூரபன்மா' என் றெழுதிய நச்சினார்க்கினியர் உரையும், "சூரொடும்பொர வஞ்சிகுடிய பிள்ளை யார்படை தொட்டநாள், ஈருடம்பு மிசைந்திரண்டுதி ரப் பரப்பு மிரைத்தனம்" (தக்க. 231) என்பதனுரையில் அதனுரையாசிரி யர் எழுதிய, 'சூரபன்மாவான.........அசுரசேனாபதி பட்டுவிழ அவனு டைய குதிரையும் அசுரனுமான இரண்டு வடிவம்' என்ற பகுதியும் இங்கே கருதத்தக்கன.

5 254, 255-ஆம் அடிகளின் விசேடவுரையிலும் இக்கதை எழுதப் பட்டுள்ளது. 6 "பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்" பரி. ௫: 49.

பயந்தாராக, ஆறுகூறுகி வளர்கின்ற காலத்து இந்திரன்தான் இருடிகளுக்குக் கொடுத்தநிலையை மறந்து ஆண்டுவந்து வச்சிரத்தான் எறிய அவ்வாறு வடிவும் ஒன்றாய் அவனுடனே பொருது அவனைக் கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறுகிய வேறுபட்ட கூற்றுலே மண்டிச்சென்றதென்று புராணங்கூறிற்று. இதனை, 1 "பாயிரும் பனிக்கடல்" என்னும் பரிபாடற்பாட்டானுணர்க. இவ்வாறன்றி 2 வேறு வேறு புராணங் கூறுவாருமுளர்.

இனி அவனுடல் அற்று வேறுவேறும் வகையாலென்றுமாம்.

59. அவுணர் நல் வலம் அடங்க - அவனையொழிந்த அவுணருடைய நல்லவெற்றி இல்லையாம்படி,

அடங்க என்றது, 3 "கணனடங்க" என்றாற்போலக் கொள்க.

59 - 60. 4 கவிழ் இணர் மா முதல் தடிந்த - கீழ்நோக்கின பூங்கொத்துக்களையுடைய மாமரத்தை வெட்டின,

என்றது, அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்ததொருமாவை வெட்டினனென்றவாறு.

மறு இல் கொற்றத்து - குற்றமில்லாத வெற்றியினையும்,

61. எய்யா நல் இசை - 5 ஒருவரானும் அளந்தறியவொண்ணாத நல்ல புகழினையுமுடைய,

செ வேல் சேஎய் - செய்ய வேலையுடைய சேய்,

எக்காலமும் போர்செய்தலிற் செவ்வேலென்றார். 6 செய்யவனென்பது சேஎயென விகாரத்தால் நீண்டதென்றுமாம்,

கடல் கலங்க உள் புக்குச் (45) சூர் முதலின் (46) ஒரு பேரியாக்கை (57) அறுவேறுவகையின் அஞ்சுவர மண்டிச்சென்று (58) பேய்மகள் (51) துணங்கை தூங்கும்படியாக (56) அச்சூர்முதல் தடிந்த வேலானே (46) பின்னும் அவுணர் நல்வலமடங்க (59) மாமுதல் தடிந்த கொற்றத்தினையும் (60) நல்லிசையினையுமுடைய சேயெனமுடிக்க.

கணவன் (6) மார்பினன் (11) சென்னியனாகிய (44) சேயென்பன ஒரு பொருள் குறித்த வேறுபெயராய் நின்றன.

---

1 ௫-ஆம் செய்யுள்.

2 வேறு வேறு புராணமென்றது கந்தபுராணம், குமாரஸம்பவம் முதலியவற்றிற் கூறப்படும் செய்திகளை. 3 சிறுபஞ்ச. 31.

4 மாயையினாலே கீழ் நோக்கிப் பூத்த மாவாய் நிற்குஞ் சூரபன்மனை முதலோடே தடிந்த (வேறுரை.)

5 "தின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையின்" புறநா. 278.

6 செய்யவன் - சிவந்தவன்; "செய்யன்" புறநா. 206.

62 - 3. [சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு, நலம்புரி கொள் கைப் புலம்பிரிந்துறையும் :]

1 புலம் பிரிந்து உறையும் அடி - மெய்ஞ்ஞானத்தான் அறிதலைக் கைவிட்டுத் தங்கும் திருவடி,

திருவடியே வீடாயிருக்குமென்றார் ; அது, 2 "தென்னன் பெருந் துறையான், காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித், தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி" 3 என்பதனானும் பிறரும் திருவடியைக் கூறுமாற்றானு முணர்க.

சேவடி படரும் நலம் புரி கொள்கை செம்மல் உள்ளமொடு - அத் திருவடியிற் செல்லுதற்குக் காரணமான நல்வினைகளைப் பலபிறப்புக் களிலும் விரும்பி நிகழ்த்தின கோட்பாட்டாலே தலைமையினையுடைத் தாகிய உள்ளத்தோடே,

64. செலவு நீ நயந்தனை ஆயின் - செல்லுஞ்செலவை நீ விரும் பியே விட்டாயாயின்,

64 - 6. [பலவுட, னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப, வின்னே பெறுதிநீ முன்னிய வினையே :] நீ முன்னிய வினை பலவுடன் நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப இன்னே பெறுதி - நீ முற்பிறப்பிற் கரு திச்செய்த நல்வினையாலே வீடுபெறுவார்க்கு உரியனவாகக்கூறிய நற் குணங்கள் பலவுஞ்சேர நன்றாகிய நெஞ்சத்திலுண்டாகிய இனிய வீடு பேற்றைத் தப்பாமல் இப்பொழுதே பெறுவை ;

67. செரு புகன்று எடுத்த சேண் உயர் நெடு கொடி - போரை வென்று விரும்பிக் கட்டின சேய்நிலத்தே சென்றுயர்ந்த நெடிய கொடிக்கு அருகே,

68. வரி புனை பந்தொடு பாவை தூங்க - நூலால் வரிந்து புனை யப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையின் தூங்கியேவிடும்படி,

என்றது : 4 பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற் குத் தூக்கின வென்றவாறு.

---

1 தேசத்தைவிட்டு (வேறுரை.) 2 திருவாசகம், திருவம்மானை, 6.

3 முருகவேளுக்கும் சிவபெருமானுக்கும் வேறுபாடின்மையின் இங்கே திருவாசகத்தை யெடுத்துக்காட்டினர் ; 100 - 102 ஆம் அடி களின் உரைக்கும் இஃது ஒக்கும்; "ஆதலி னமது சத்தி யறுமுக னவனும் யாமும், பேதக மன்றா னம்போற் பிரிவிலன் யாண்டு நின்றான், ஏதமில் குழவி போல்வான் யாவையு முணர்ந்தான் சீரும், போதமு மழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்" (கந்த. திருவிளை. 19) என்பது இங்கே அறியத்தக்கது.

4 "செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கும்..... புரிசை" (பதிற். ருங : 6 - 9) என்பதற்கு, 'சிலம்பும் தழையும் புரிசைக்கண்

69. பொருநர் தேய்த்த போர் அரு வாயில் - பொருவாரை இல்லையாக்குகையினாலே எக்காலமும் போர்த்தொழில் அரிதாகிய வாயி லினையும்,

70. திரு [1] வீற்றிருந்த தீது தீர் நியமத்து - திருமகள் வருத்த மின்றியிருந்த குற்றந்தீர்ந்த அங்காடித்தெருவினையும்,

71. மாடம் மலி மறுகில் கூடல் குடவயின் - மாடங்கள்மிக்க எனைத்தெருக்களையுமுடைய மதுரையின் மேற்றிசையிடத்து,

அம் சிறை வண்டின் அரி கணம் (76) - அழகினையுடைத்தாகிய சிறகையுடைய வண்டினுடைய அழகினையுடைய திரள்,

72. இரு சேறு அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த - கரிய சேற்றினையுடைய அகன்ற வயலிலே முறுக்குநெகிழ்ந்து பின்பு தாதும் [2] அல்லியும் தோன்றமலர்ந்த,

75. முள் தாள் தாமரை துஞ்சி - முள்ளையுடைத்தாகிய தாளை யுடைய தாமரைப்பூவிலே இராப்பொழுது துயில்கொண்டு,

73-4. வைகறை கள் கமழ் நெய்தல் ஊதி - விடியற்காலத்தே தேன் நாறுகின்ற நெய்தற்பூவை யூதி,

எல் பட - ஞாயிறு தோன்றின காலத்தே,

75-7. [கண்போன் மலர்ந்த காமரு சுனைமல, ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங், குன்றமர்ந் துறைதலு முரியன்:]

அஞ்சிறைவண்டி னரிக்கணமென்பது முன்னேகூட்டிற்று.

கண் போல் மலர்ந்த காமரு சுனை மலர் ஒலிக்கும் குன்று அமர்ந்து உறைதலும் உரியன் - கண்ணையொக்க விரிந்த [3] விருப்பமருவின சுனைப்

---

தங்கினவென்றது, ஈண்டுப் பொருவீருளீரேல் நும்காலிற் கழலினையும் அரையிற் போர்க்குரிய உடையினையும் ஒழித்து இச்சிலம்பினையும் தழையினையும் அணிமினென அவரைப் பெண்பாலாக இகழ்ந்தவா றென்க' என்றெழுதிய விசேடவுரை இங்கே ஒப்பு நோக்கற்பாலது.

[1] வீற்றிருந்த வென்பதற்கு இங்கே கூறியவாறே சீவகசிந்தாமணி யிலும் பொருளெழுதுவர். [2] அல்லி - அகவிதழ்.

[3] "காமருதும்பி" (சிறுபாண். 77), "காமருருவின்" (மதுரை. 422) என்பவற்றில், 'காமரு' என்பதற்கு இங்கே எழுதியவாறே விருப் பம் மருவினவென்றே பொருளெழுதுவர்; "காமரு நோக்கினை" (கலி. ௮0 : 14) என்பதில், 'காமரு' என்பதற்கு விருப்ப மருவுகின்ற வென் றெழுதிய பொருளும், "காமர்: கடைக்குறைந்து நின்றது; மருவும்: ஈற்றுமிசை உகரம் மெய்யொடுங் கெட்டு மவ்வீறு சந்தியாற் கெட்டது" என்ற இலக்கணக் குறிப்பும் இங்கே பயன்படுவனவாம். "காமம் வரு மென்பது விகாரத்தாற் காமருவென நின்று கண்டார்க்கு விருப்பம் வருமென்பதாயிற்று" என்பர் அடியார்க்குநல்லார்; சிலப். ௬ : 40.

பூக்களிலே சென்று ஆரவாரிக்கும் திருப்பரங்குன்றிலே நெஞ்சமர்ந்திருத்தலுமுரியன்.

உம்மை: எதிரது தழீஇய எச்சவும்மை.

கூடற்குடவயிற் (71) குன்று; வண்டின் அரிக்கணம் (76) துஞ்சி (73) ஊதி (74) ஒலிக்குங் (76) குன்று.

அதாஅன்று - அதுவன்றி,

அதாஅன்றெனை அகரமிட்டெழுதுக, இதனை [1] "அன்றுவருகாலை" என்பதனானும், [2] "இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி" என்பதனுள், "தோன்றியன் மருங்கின்" என்பதனானு முடிக்க.

உ.—திருச்சீரலைவாய்.

78. வைந்நுதி யென்பது முதல் அலைவாய்ச்சேறல் (125) என்னுந்துணையும் ஒரு தொடர்.

வைந்நுதி பொருத வடு ஆழ் வரி நுதல் - கூர்மையுடைத்தாகிய தோட்டி வெட்டின வடுவழுந்தின புகரையுடைய மத்தகத்தே,

வைந்நுதி: ஆகுபெயர்.

79. வாடா மாலை ஓடையொடு துயல்வர - பொன்னரிமாலை பட்டத்தோடே கிடந்து அசைய,

80. [3] படும் மணி இரட்டும் மருங்கின் - தாழ்கின்ற மணி மாறி யொலிக்கின்ற பக்கத்தினையும்,

கடு நடை - கடிய நடையினையும்,

81. கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின் - கூற்றுவனை யொத்த பிறரால் தடுத்தற்கரிய வலியினையுமுடைய,

82. கால் கிளர்ந்தன்ன வேழம் மேல்கொண்டு - ஓடுங்காற் காற்றெழுந்தாலொத்த களிற்றை யேறி,

மருங்கு (80) முதலியவற்றையுடைய வேழத்தை நுதலிலே மாலை பட்டத்தோடே யசைய ஏறியென முடிக்க.

83-4. ஐ வேறு உருவின் செய்வினை முற்றிய முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி - ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய முடிக்குச் செய்யுந் தொழிலெல்லாம் முற்றுப்பெற்ற முடியோடேகூடி விளங்கிய ஒன்றற்கொன்று மாறுபாடுமிகும் அழகினையுடைய மணி,

ஐவேறுருவு: [4] "தாம முகுடம் பதுமங் கிம்புரி, கோடக மிவை முடிக் கைவே றுருவே."

---

1 தொல். உயிர்மயங். சூ. 56. 2 ஷை ஷை சூ. 35.

3 ஓசைமணி (வேறுரை.)

4 "தாம முகுடம் பதுமங் கோடகங், கிம்புரி முடியுறுப் பைந்தெனக் கிளப்பர்" (திவாகரம்); "கோடகங் கிம்புரி முகுடந் தாமம், பதும முடியுறுப் பிவையைந் தாகும்" பிங். 1169.

85. மின் உறழ் இமைப்பின் சென்னி பொற்ப - மின்னோடே மாறுபடுகின்ற விளக்கத்தோடே முடியிலே பொலிவுபெற,

86. நகை தாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலங்குழை - ஒளி தங்கி அசையும் தொழிற்கூறமைந்த பொன்னாற்செய்த மகரக்குழை,

87 - 8. சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ அகலா மீனின் அவிர்வன இமைப்ப - சேய்நிலத்தே சென்று விளங்கும் இயல்பினையுடைய ஒளியையுடைய மதியைச்சூழ்ந்து நீங்காத மீன்கள்போல விளங்குவனவாய் ஒளியைக்கால,

மீன் - உரோகிணி முதலியன; வியாழமும் வெள்ளியுமாம்.

89. தா இல் கொள்கை தம் தொழில் முடிமார் - வருத்தமில்லாத விரதங்களையுடைய தவத்தொழிலை முடிப்பாருடைய,

90. மனன் நேர்பு எழுதரு [1] வாள் நிறம் முகன் - மனத்திலே பொருந்தித் தோன்றுகின்ற ஒளியையுடைய நிறத்தையுடைய முகங்களிலே,

பொற்ப (85) இமைப்ப (88) எழுதருமுகனென்க.

முகனென்றது ஆறற்கும் பொது.

91 - 2. [மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப், பல்கதிர் விரிந்தன் றொருமுகம் :] ஒருமுகம் மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்க பல்கதிர் விரிந்தன்று - ஒருமுகம் பெருமையையுடைத்தாகிய இருட்சியையுடைய உலகம் குற்றமின்றாய் விளங்கும்படி பலகிரணங்களையும் தோற்றுவித்தது;

ஒரு முகமென்று முன்னே கூட்டிப் பொருள் கொள்க.

92 - 4. ஒருமுகம் [2] ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகி காதலின் உவந்து வரம் கொடுத்தன்று - ஒருமுகம் தன்மேல் அன்புசெய்தவர்கள் துதிக்க அதற்குப் பொருந்தி அவர்க்கு இனிதாக நடந்து அவர்மேற் சென்ற காதலாலே மகிழ்ந்து வேண்டும் பொருள்களை முடித்துக் கொடுத்தது;

94-6. ஒருமுகம் மந்திர விதியின் [3] மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும் - ஒருமுகம் மந்திரத்தையுடைய வேதத்திற்கூறிய முறைமையிடத்துத் தப்பாத அந்தணருடைய யாகங்களில் தீங்குவராதபடி நினையாநிற்கும்;

---

1 ஒளி விடுகின்ற ஆறுதிருமுகங்களை யுடையவன்; அந்தத்திருமுகங்களினுடைய படிவஞ்சொல்லின் (வேறுரை.)

2 ஏழையர் இரந்து துதிக்க (வேறுரை.)

3 மரபுளி: உளி, மூன்றுருவதன் பொருள்படுவதோரிடைச்சொல். அந்தணர் - அழகிய தட்பத்தினையுடையார். ஓர்க்கும் - திருவுள்ளத்து அடைக்கும் (வேறுரை.)

1 அந்தத்தை அணவுவார் அந்தணர்; என்றது, வேதாந்தத்தையே நோக்குவாரென்றவாறு.

96 - 8. [ஒருமுக, மெஞ்சிய பொருள்களை 2 யேமுற நாடித், திங்கள் போலத் திசைவிளக் கும்மே :] ஒரு முகம் எஞ்சிய பொருள்களை நாடி ஏம் உற திங்கள் போல திசை விளக்கும் - ஒருமுகம் ஈண்டு வழங்காத வேதங்களிலும் நூல்களிலுமுள்ள பொருள்களை ஆராய்ந்து இருடிகள் ஏமமுறும்படி உணர்த்தித் திங்கள் போலத் திசைகளெல்லாம் விளக்குவிக்கும்;

ஏமம் - இரட்சை. 3 கலைநிறைதலிற் றிங்கள் உவமையாயிற்று.

98 - 100. [ஒருமுகஞ், செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக், கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே :] ஒருமுகம் செல் சமம் முருக்கி கறுவுகொள் நெஞ்சமொடு செறுநர் தேய்த்து 4 களம் வேட்டன்று - ஒருமுகம் திருவுள்ளத்துச் செல்கின்ற நடுவுநிலைமையைக் கெடுத்து இவர்களைக் கொல்லவேண்டுமென்று கறுவுதல் கொண்ட திருவுள்ளத்தோடே செறப்படும் அசுரர் முதலியோரைப் பொன்றக் கெடுத்துக் களவேள்வியை வேட்டது;

சமம் - நடுவு நிலைமை; அதனைக் கெடுத்தலாவது, தேவரையும் அசுரரையும் ஒப்பக்கருதாது தேவரைக்காத்து அசுரரையழித்தல்.

100 - 102. [ஒருமுகங், குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின், 5 மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே :]

ஒருமுகம் குறவர் மடமகள் 6 கொடி போல் நுசுப்பின் வள்ளியொடு நகை அமர்ந்தன்று - ஒருமுகம் குறவருடைய மடப்பத்தையுடைய மகளாகிய வல்லிபோலும் இடையினையுடைய வள்ளியுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று;

---

1 "அந்தணர் - வேதாந்தத்தை எக்காலமும் பார்ப்பார்" (மதுரை. 474, ந.); "அந்தத்தை யணவுவார் அந்தணர்; என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பாரென்றவாறு" கலி. கட. 3, ந.

2 ஏமுறநாடி - இரக்கைபொருந்த ஆராய்ந்து; ஏமம் கடைக்குறை பட்டது (வேறுரை.)

3 "கலைகள் நிறைந்திருந்தமைபற்றித் தலைவற்கு ஈண்டு மதி உவமையாயிற்று" (சிறுபாண். 220, ந.); "நாடோறும் நிறைந்தமதி உலகறியக் கலை நிரம்பினமை தோற்றுவித்தலின், உவமையாம்" சீவக. 454, ந.

4 போர்க்களத்தை விரும்பாநிற்கும் (வேறுரை.)

5 கற்பின் வரலாற்றினையுடைய வள்ளிநாய்ச்சியார் (வேறுரை.)

6 வல்லிசாதக்கொடி (வேறுரை.)

மடவரல் நகையெனக் கூட்டித் தனக்கு ஓரறியாமைதோன்றுந் தன்மையுடைத்தாகிய நகையென்று கூறுக.

அவளொடு 1 நகையமர்தலின் அறியாமை கூறினார். காமநுகர்ச்சி யில்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான், உலகில் இல்வாழ்க்கை நடத்தற்கென்றுணர்க. அது, 2 "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்" என்பதனுள், "பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர், விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ" என்பதனு னுணர்க.

விரிந்தன்று (92) கொடுத்தன்று (94) வேட்டன்று (100) நகை யமர்ந்தன்று (102) ஓர்க்கும் (96) விளக்கும் (98) என்பன முற்றுச் சொல்.

102 - 3. [ஆங்கம் மூவிரு முகனு முறைநவின் றொழுகலின் :]

அ மூவிரு முகனும் - அவ்வாறு முகமும்,

ஆங்கு முறை நவின்று ஒழுகலின் - அத்தொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயின்று நடத்துகையினாலே அம்முகங்களுக்குப் பொருந்த,

104 - 6. [ஆரந் தாழ்ந்த வம்பகட்டு 3 மார்பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு, வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர் தோள்:]

ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின் செம்பொறி வாங்கிய தோள் - பொன்னாற்செய்த ஆரந்தாங்கிய அழகையுடைத்தாகிய பெருமையையுடைய மார்பிற்கிடக்கின்ற உத்தம இலக்கணமாகிய சிவந்த மூன்றுவரியினையும் தன்னிடத்தே வந்து விழும்படி வாங்கிக்கொண்ட தோள்,

வாங்கிய வென்றார், அவ்வரி தோளளவும் வந்துகிடந்தமை தோன்ற; 4 "வரையகன் மார்பிடை வரியு மூன்றுள" என்றார் பிறரும்.

மொய்ம்பின் வண்புகழ் நிறைந்து - தம்முடைய வலியினாலே பெரிய புகழ் நிறையப்பட்டு,

சுடர் விடுபு வசிந்து வாங்குதோள் - சுடரையுடைய படைக்கலங் களை யெறிந்து பகைவர்மார்பைப் பிளந்து அவற்றை வாங்குதோள், சுடரையுடைய படைக்கலங்களைச் சுடரென்றார்; அஃது ஆகுபெயர்.

---

1 (பி-ம்.) 'நகையமர்தல் இன்றி யமையாமை'

2 திருவாசகம், திருச்சாழல், கூ.

3 மார்பிலே சீதேவியைக் கைக்கொண்ட வலியினையுடைய, ஒளி விட்டு வளவியபுகழ் நிறைந்து வளர்ந்து நீண்டுநிமிர்ந்த தோள்கள் (வேறுரை.)

4 சீவக. 1462.

நிமிர் தோள் - பெருகு தோள்;
நிறைந்து நிமிர்தோளென்க.

வசிந்தென்பது பிளந்தென்னும் பொருட்டாதலின், செய்வதன் தொழிற்கும் செய்விப்பதன் தொழிற்கும் பொது. அசுரர் முதலியோரை அழிக்குங்காலத்துப் பன்னிருகையினும் படைக்கலமேந்துவனென்று உணர்க; அஃது அறுவேறுவகையி னஞ்சுவர மண்டி (58) என்றதனு னுணர்க.

வசிந்தென்பதற்குப் படைக்கலங்களால் வடுப்பட்டென்று பொருளுரைத்தல் 1 இறைவனுதலிற் பொருந்தாது.

இனி மொய்ம்பினையுடைத்தாய் ஒளிவிட்டு நிறைந்து வளையவேண்டுமிடம் வளைந்து நிமிரவேண்டுமிடம் நிமிரும் தோளென்றும் உரைப்பர். இதற்கு வசிந்தென்பதனைத் தொடியொடுதொட்ப (114) மணியிரட்ட (115) என மேலே கூட்டுக.

இனி, அவை போர்செய்யாக்காலத்து இங்ஙனமிருக்குமென்று அவற்றின் இயல்பு கூறுகின்றார்.

அத்தோள்களில் ஒருகையென்க.

107. [விண்செலன் மரபி னையர்க் கேந்திய தொருகை :] ஒருகை 2 விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது - ஒருகை எக்காலமும் ஆகாயத்தே இயங்குதல் முறைமையினையுடைய தெய்வவிருடிகளுக்குப் பாதுகாவலாக வெடுத்தது;

108. [உக்கஞ் சேர்த்திய தொருகை :] ஒருகை உக்கம் சேர்த்தியது - ஏந்தியகைக்கு இணைத்தகை மருங்கிலே வைத்தது;

என்றது : ஞாயிற்றின்வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தலாற்றாவென்று கருதித் 3 தமதருளினாற் சுடரொடுதிரிந்து அவ்வெம்மையைப் பொறுக்கின்ற முனிவரைப்பாதுகாக்கவே உலகத்தைத் தாங்கிக் காத்ததாயிற்று. இதனானே இக்கை மாயிருண்ஞாலமறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்த முகத்திற்கு (91 - 2) ஏற்ற தொழில்செய்ததாயிற்று. இது, 4 "நிலமிசை வாழ்ந ரலமர றீரத், தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்

1 இங்கே இவ்வாறு கூறியது, "வாண்மிகு வயமொய்ம்பின்" (பரி. க : 57) என்பதற்குப் பரிமேலழகர், 'வாட்டழும்பு நெருங்கிய வெற்றிமொய்ம்பினையுடைய முருகன்' என்றெழுதிய உரையைக் கருதிப்போலும்.

2 ஆகாயத்திலே இயக்கத்தை முறைமையாகவுடைய தேவர்க்கு (வேறுரை.)

3 "சுடரொடு திரிதரு முனிவரு மமரரும்" சிலப். வேட்டுவ.

4 செய்யுள், சஙு : 1 - 4.

கி, காலுண வாகச் சுடரொடு கொட்கும், அவிர்சடை முனிவரு மருள ”
என்ற புறப்பாட்டானுணர்க.

மனமும் முகமும் கையும் ஒருதொழிலைச் செய்தலின், ஏனைக்கை
தொழிலின்றி மருங்கிலே கிடந்தது.

109-10. [நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய
தொருகை, யங்குசங் கடாவ வொருகை :] ஒருகை அங்குசம் கடாவ
ஒருகை நலம்பெறு 1 கலிங்கத்து குறங்கின்மிசை அசைஇயது - ஒருகை
தோட்டியைச் செலுத்தாநிற்க மற்றைக்கை செம்மைநிறம்பெற்ற
ஆடையையுடைத்தாகிய துடையின் மேலே கிடந்தது ;

இஃது யானையேறுவார்க்கு இயல்பென்று கூறினார். தன்னை வழி
படுவாரிடத்து வருங்கால் யானை மேல்வந்து அருள்செய்தல் இயல்
பாகலின், இக்கைகள் காதலினுவந்து வரங்கொடுத்த முகத்திற்கு (94)
ஏற்றவாறுணர்க.

110-11. இருகை 2 ஐ இரு வட்டமொடு எஃகு 3 வலம்திரிப்ப -
இரண்டுகைகள் வியப்பையும் கருமையையுமுடைய பரிசையுடனே வேலை
யும் வலமாகச் சுழற்ற,

இதனானே, 4 அசுரர்வந்து வேள்வியைக் கெடாமல் அவரை ஓட்டு
தற்கு இவற்றைச் சுழற்றுதலின் வேள்வி ஓர்க்குமுகத்திற்கு (96) இக்கை
கள் ஏற்றவாறுணர்க.

111-3. ஒருகை 5 மார்பொடுவிளங்க ஒருகை 6 தாரொடு
பொலிய - முனிவர்க்குத் தத்துவங்களைக்கூறி உரையிறந்தபொருளை
உணர்த்துங் காலத்து ஒருகை மார்போடே விளங்காநிற்க, ஒருகை மார்
பின்மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்து அழகுபெற,

என்றது : இறைவன் மோனமுத்திரையத்தனாய்த் தானேயே யிருந்து
காட்ட 7 ஊமைத்தசும்புள் நீர்நிறைந்தாற்போல ஆனந்த மயமான ஒளி

1 புடைவை (வேறுரை.)

2 ஐந்தாகிய பெருத்த பரிசை; பத்துத் திருமுகத்தினையுடைய கேட
கமெனினுமமையும் (வேறுரை.) 3 வெற்றிபெறச் சுழற்ற (வேறுரை.)

4 “ அந்தண்மறை வேள்வி காவற்கார ” (திருப்.) ; “ அறங்குலவு
மகத்தழலு மவுணமட வார்வயிற்றி னழலு மூள, மறங்குலவு வேலெடுத்த
குமரவேள் ” திருவிளை. கடவுள்.

5 மார்பினிடத்தே மௌனமந்திரத்தைப் பேணுநிற்க (வேறுரை.)

6 தார் - மார்பிலுள்ளமாலை ; “ வண்ண மார்பிற் றாருங் கொன்றை”
புறநா. கடவுள்.

7 ஊமைத்தசும்பு - வாயில்லாதகுடம் ; “ குவிவா யமையாக் குட
நிறை தீநீர்,.........துரியமு மிறந்த தூயோன் றூய்மை, யருளினன் ”
ஞானமிர்தம், ௬௭.

மாணாக்கர்க்கு நிறைதலின், அதற்குரிய மோனமுத்திரைகூறிற்று; 1 " தன்னை யுன்னி யென்னை யாக்கிய போழ்தே யானவ னாயினேன் " என்பதனானுணர்க.

இக்கைகள் எஞ்சியபொருள்களை விளக்கு முகத்திற்கு (97 - 8) ஏற்றவாறுணர்க.

113 - 5. [ஒருகை, கீழ்வீழ் 2 தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை, பாடின் படுமணி யிரட்ட:] ஒருகை தொடியொடு மீமிசை கொட்ப கீழ் வீழ் ஒருகை பாடு இன் படு மணி இரட்ட - ஒருகை தொடியொடு மேலே சுழன்று களவேள்விக்கு முத்திரை கொடுப்பக் கீழேவீழ்ந்த மற்றைக்கை ஓசையினிதாகிய ஒலிக்கின்றமணியை மாறி யொலிக்கப்பண்ண,

இக்கை களவேள்வி வேட்கின்ற முகத்திற்கு (99 - 100) ஏற்றவா றுணர்க.

115 - 7. ஒருகை நீல் நிற விசும்பின் மலி துளி பொழிய ஒருகை வான் அரமகளிர்க்கு வதுவை சூட்ட - ஒருகை நீலநிறத்தையுடைய மேகத்தாலே மிக்க மழையைப் பெய்வியாநிற்க, ஒருகை தெய்வமக ளிர்க்கு மணமாலையைச் சூட்ட,

என்றது: வள்ளியொடு நகையமர்ந்தமுகம் (100 - 102) உலகிற்கு இல்வாழ்க்கை நிகழ்த்துவித்ததாகலின், 3 அவ்வில்வாழ்க்கை நிகழ்த்து தற்கு மழையைப் பெய்வித்தது ஒருகை; ஒருகை இல்வாழ்க்கை நிகழ்த் தற்பொருட்டு மணமாலையைச் சூட்டிற்றென்றவாறு.

117 - 8. 4 ஆங்கு அ பன்னிருகையும் பால் பட இயற்றி - அப் படியே அந்தப் பன்னிரண்டுகையும் முகத்தின் பகுதியிலே படும்படி தொழில்செய்து,

முகங்களில் ஒருமுகம் ஓர்க்கும் (96) ஒருமுகம் விளக்கும் (98) ஒருமுகம் வேட்டன்று (100) ஒருமுகம் அமர்ந்தன்று (102) ஒருமுகம் விரிந்தன்று (92) ஒருமுகம் கொடுத்தன்று (94) அம்மூவிருமுகனும் அத்தொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயின்று நடத்துகை யினாலே (103) அம்முகங்களுக்குப் பொருந்தத் தோள்களில் (106) இருகை (110) திரிப்ப (111) ஒருகை விளங்க (112) ஒருகை பொலிய (113) ஒருகை கொட்ப (114) ஒருகை இரட்ட (115) ஒருகை பொழிய (116) ஒருகை சூட்ட (117) ஒருகை ஐயர்க்கேந்தியது (107) ஒருகை உக்கஞ் சேர்த்தியது (108) ஒருகை கடாவ (110) ஒருகை அசைந்தது

1 கலி. சஉ, ந. மேற். 2 பாரவளையோடே (வேறுரை.)

3 " நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும், வானின் றமையா தொழுக்கு " குறள். 20.

4 ஆங்கு - ஆக (வேறுரை.)

(109) அப்படியே பன்னிருகையும் முகத்தின் பகுதியிலே படும்படி தொழில் செய்தென இச்சொன் முடிபுக்கேற்பக் கைகளையும் முகங்களையும் 1 மாட்டாக முடிக்க.

திரிப்பவென்பதுமுதலிய நிகழ்காலச் செயவெனெச்சங்கள் எந்தியது சேர்த்தியதென முற்றுவினைகொண்டு முடிந்தன.

119. அந்தரம் பல்லியம் கறங்க - ஆகாயத்தினது துந்துமி ஒலிப்ப,

119 - 20. திண் 2 காழ் வயிர் எழுந்து இசைப்ப - திண்ணிய வயிரத்தையுடைய கொம்பு மிக்கொலிப்ப,

வால் வளை ஞரல - வெள்ளிய சங்கு முழங்க,

121. உரம் தலை கொண்ட உரும் இடி முரசமொடு - வலியைத் தன்னிடத்தே கொண்ட உருமேற்றினது இடிப்புப்போலும் ஓசையையுடைய முரசுடனே,

122. பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ—பலபீலியையுடைய மயில் அவனுணையினுலே 3 வென்றெடுத்த கொடியிலேயிருந்து ஒலியாநிற்க,

பொறி: ஆகுபெயர்.

123. விசும்பு ஆறாக - ஆகாயமே வழியாக,

விரை செலல் முன்னி - விரைந்த செலவினை மேற்கொண்டு,

124. [உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர்:] ஓங்கு உலகம் புகழ்ந்த உயர் 4 விழுச்சீர்—நன்மையோங்கும் நன்மக்கள் புகழ்ந்த உயரும் சீரினையுடைய புகழினையுடைய,

125. அலைவாய் 5 சேறலும் நிலைஇய பண்பு - நாமனூரலைவாயென்னும் திருப்பதியேற எழுந்தருளுதலும் அவற்கு நிலைபெற்ற குணம்;

குன்றமர்ந்துறைதலுமுரியன்; அதாஅன்று (77) வேழமேல்கொண்டு (82) இயற்றிக் (118) கறங்க (119) இசைப்ப ஞரல (120) அகவ (122) முன்னி (123) அலைவாய்ச்சேறலும் நிலைஇயபண்பெனமுடிக்க.

அதாஅன்று - அதுவன்றி,

ங - திருவாவினன்குடி.

126. சீரை தைஇயவென்பதுமுதல் முனிவர் முற்புக (137) என்னுந்துணையும் ஒருதொடர்.

---

1 மாட்டு : 43 - 4-ஆம் அடிகளின் விசேடவுரையைப் பார்க்க.

2 கரிய கொம்பு (வேறுரை.)

3 "செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி" முருகு. 67.

4 விழுமிய அழகு (வேறுரை.) 5 சேறல் - செறிதல் (வேறுரை.)

சீரை 1 தைஇய உடுக்கையர் - மரவுரியை உடையாகச் செய்த உடையினையுடையர்,

இதற்குச் 2 கற்றோய்த்தல் முதலியன செய்த உடுக்கையரென்பாரு முளர்.

126 - 7. சீரொடு வலம்புரி புரையும் வால் 3 நரை முடியினர் - அழகோடு வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச்சங்கினை யொக்கும் வெள்ளிய நரைமுடியினையுடையர்,

128. மாசு அற இமைக்கும் உருவினர் - 4 எக்காலத்தும் நீராடுதலின் அழுக்கற விளங்கும் வடிவினையுடையர்,

128 - 30. மானின் உரிவை தைஇய ஊன் கெடு மார்பின் என்பு எழுந்து இயங்கும் யாக்கையர் - கிருட்டிணசினம் போர்த்த விரதங்களால் விட்ட பட்டினியால் தசைகெடுகின்ற மார்பினெலும்புகள் கோவைதோன்றி உலவும் உடம்பினையுடையர்,

தைஇய மார்பென்க.

130 - 31. நன்பகல் பல உடன் கழிந்த உண்டியர் - எப்பொருளும் நுகர்தற்கு நன்றாகிய பகற்பொழுதுகள் பலவும் சேரக்கழிந்த உணவினையுடையர்,

இது மாதோபவாசங்கூறிற்று.

131 - 2. இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர் - மாறுபாட்டோடே நெடுங்கால நிற்கும் செற்றத்தினையும்போக்கிய மனத்தினையுடையர்,

பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம்.

132 - 3. [யாவதுங், கற்றோ ரறியா வறிவினர்] 5 கற்றோர் யாவதும் அறியா அறிவினர்—பலவற்றையும் கற்றோர் சிறிதும் அறியப்படாத இயல்பான அறிவினையுடையர்,

133 - 4. கற்றோர்க்கு தாம் வரம்பு ஆகிய தலைமையர் — பலவற்றையும் கற்றோர்க்குத் தாம் எல்லையாகிய தலைமையையுடையர்,

என்றது கல்வியைக் கரைகண்டாரென்றவாறு.

134 - 5. காமமொடு கடு சினம் கடிந்த 6 காட்சியர்—ஆசையோடே கடிய சினத்தையும்போக்கின அறிவினையுடையர்,

---

1 தைத்த (வேறுரை.)

2 கற்றோய்த்தல் - காவிக்கல்லைக்கரைத்த நீரில் தோய்த்தல்.

3 நரைக்கொண்டையினை யுடையார் (வேறுரை.)

4 "நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடீஇ" பு. வெ. 168.

5 யாவதும் கற்றோர்—எவ்வகைப்பட்ட பொருளினையும் கற்று வல்லுநர் (வேறுரை.) 6 தோற்றத்தினை யுடையார் (வேறுரை.)

1 கோபத்தின் பின்னுகச் சிறிதுபொழுது நிற்பது சினம்.

135-6. இடும்பை யாவதும் அறியா இயல்பினர்—2 தவத்தான் மெய்வருத்தம் உளவேனும் மனத்தான் வருத்தம் சிறிதுமறியப்படாத இயல்பினையுடையர்,

மே வர - திருவுள்ளம் பொருந்துதல் வர,

137. 3 துனி இல் காட்சி முனிவர் முன் புக—ஒருவருடனும் வெறுப்பில்லாத நல்ல அறிவினையுடைய முனிவர் முன்னே செல்ல,

உடுக்கையர் (126) முடியினர் (127) உருவினர் (128) யாக்கையர் (130) உண்டியர் (131) மனத்தினர் (132) அறிவினர் (133) தலைமையர் (134) காட்சியர் (135) இயல்பினராகிய (136) முனிவர் (137) மேவர (136)முற்புக (137)வென முடிக்க.

138. புகைமுகந்தன்ன என்பதுமுதல் மேவலர் (142) என்னுந் துணையும் பாடுவோரைக் கூறிற்று.

4 புகை முகந்தன்ன மாசு இல் தூ உடை - புகையை முகந்தாலொத்த தெய்வத்தன்மையால் அழுக்கேறாத தூய உடையினையும்,

139. 5 முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்து - முகை வாய் நெகிழ்ந்த மாலை சூழ்ந்த மார்பினையும்,

கட்டுதலிற் றகையென்றார், மாலையை; ஆகுபெயர்.

140-41. செவி நேர்பு வைத்த செய்வு உறு திவவின் நல் யாழ் நவின்ற - 6 எஃகுச் செவியாலே சுருதியையளந்து நரம்பைக்கட்டின சுற்றுதலுறும் வார்க்கட்டினையுடைய நன்றாகிய யாழின் இசையிலே பயின்ற,

141-2. நயன் உடை நெஞ்சின் 7 மென்மொழி மேவலர் இன் நரம்பு உளர - ஈரமுடைய நெஞ்சாலே எக்காலமும் மெல்லிய வார்த்தை சொல்லுதலைப் பொருந்திய கந்தருவர் இனிய நரம்பை வாசிக்க,

நவின்ற நயனென்க.

---

1 "கோபம் நீட்டித்து நிற்கின்றது சினம்" என்பர் பின்; சிறுபாண். 210, உரை.

2 "இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக், கையாறாக் கொள்ளாதா மேல்" குறள், 627. 3 துயரமில்லாத தோற்றம் (வேறுரை.)

4 புகையைக் கையாலே முகந்தாற்போன்றுநொய்யவாய(வேறுரை.)

5 மொட்டுப்பூக் கிண்கிணிவாய்க் கொண்ட பக்குவத்திலே கட்டின மாலை சூழ்ந்த மார்பினையும் (வேறுரை.)

6 எஃகுச் செவி - மூவகைச் செவியிலும் தலையான கூரிய செவி; "எஃகுநுண் செவிகள் வீழ" (சீவக. 2718); "எஃகுச் செவித்தேவர்கள்" தக்க. 610, உரை.

7 மெத்தென்ற சொற்சேர்ந்தோராகிய வித்தியாதரர் (வேறுரை.)

143. நோயின்றென்பது முதல் மகளிர் (147) என்னுந்துணையும் பாடு மகளிரைக் கூறிற்று.

நோய் இன்று இயன்ற யாக்கையர் - மக்களுக்குரியநோய் இல்லையாக நிருமித்த உடம்பினையுடையராய்,

143-4. மாவின் அவிர் தளிர் புரையும் மேனியர் - மாவினது விளங்குகின்ற தளிரையொக்கும் நிறத்தினையுடையராய்,

144-5. அவிர்தொறும் பொன் உரை கடுக்கும் திதலையர் - விளங்குந்தோறும் பொன்னுரை விளங்கினாற்போலும் துத்தியினையுடையராய்,

145-7. இன் நகை [1] பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல் [2] மாசு இல் மகளிரொடு - கட்கினிய ஒளியினையுடைய பதினெண் கோவையாகிய [3] மேகலை யணிந்த தாழவேண்டியவிடம் தாழ்ந்து உயரவேண்டியவிடம் உயர்ந்த அல்குலையுடைய குற்றமில்லாத கந்தருவ மகளிரோடே,

மறு இன்றி விளங்க - குற்றமின்றாய் விளங்கா நிற்க,

உடையினையும் (138) ஆகத்தினையுமுடைய (139) மென்மொழி மேவலர் (142) யாக்கை (143) முதலியவற்றையுடையராய், மாசில்லாத மகளிரோடே மறுவின்றி விளங்க (147) இன்னரம்புளர (142) வென முடிக்க.

148. [4] கடுவொடு ஒடுங்கிய தூம்பு உடை வால் எயிறு-நஞ்சுடனே உறைக்குள்ளே கிடந்த துளையினையுடைய வெள்ளிய எயிற்றினையும்,

மிடற்றினஞ்சு தன்னிடத்தேதோன்றுதலின், 'கடுவொடு' என்றார். [5] எயிறு : காளி, காளாத்திரி, யமன், யமதூதியென நான்காம்.

149. அழலென உயிர்க்கும் அஞ்சு வரு கடு திறல் - நெருப்பென்னும்படி நெட்டுயிர்ப்புக்கொள்ளும் கண்டார்க்கு அச்சந்தோன்றும் கடிய வலியினையுமுடைய,

150. பாம்பு பட புடைக்கும் - பாம்பு படும்படி அடிக்கும்,

---

1 அரைப்பட்டிகை (வேறுரை.)

2 தெய்வக் குறத்திகளோடே (வேறுரை.)

3 மேகலை யென்பது காஞ்சி முதல் விரிசிகை யீறாக உள்ளவற்றிற்குப் பொதுப்பெயர் (பரி. ௧௦ : 11, பரிமேல்.) ; "எண்கோவையாகிய மேகலை" கலி. ௫௬ : 9-12, ந.

4 ஒடொடுங்கிய - ஒடுங்கி ஓடப்பட்ட (வேறுரை.)

5 இப்பற்களின் இயல்பு, சீத்தாரநாடகம், சிந்தாமணி முதலியவற்றிற் கூறப்பட்டுள்ளது ; "காளி காளாத்திரி தூதி யமதூதி" என்பர் ; தக்க. 155, உரை.

150-51. பல் வரி கொடு சிறை புள் அணி நீள் கொடி செல்வனும் - பலவரியினையுடைத்தாகிய வளைந்த சிறகினையுடைய கருடனை யணிந்த நீண்ட கொடியினையுடைய திருமாலும்,

151-4. [வெள்ளேறு, வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ, ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண், மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும் :]

1 வலம் வயின் வெள்ளேறு உயரிய செல்வன் - வெற்றிக்களத்தே வெள்ளிய ஏற்றினை வெற்றிக்கொடியாக எடுத்த உருத்திரன்,

உமை அமர்ந்து விளங்கும் செல்வன் - இறைவி ஒருபாகத்தே பொருந்தி விளங்கும் செல்வன்,

பலர் புகழ் திணி தோள் - பலரும் புகழ்கின்ற சிக்கென்ற தோளினையும்,

இமையா முக்கண் செல்வன் - இதழ் குவியாத மூன்றுகண்ணினையுமுடைய செல்வன்,

மூ எயில் முருக்கிய முரண் மிகு செல்வனும் - முப்புரத்தையெரித்த மாறுபாடு மிக்க செல்வனும்,

155. நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து - நூற்றைப்பத்தாக அடுக்கிய கண்ணினையும்,

என்றது ஆயிரங்கண்ணென்றவாறு.

155-6. நூறு பல் வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து - நூறென்னும் எண்ணுகிய பலவேள்விகளை வேட்டுமுடித்ததனாற்பெற்ற பகைவரை வென்றுகொல்கின்ற வெற்றியினையும்,

157. [ஈரிரண் டேந்திய மருப்பின் :] ஏந்திய ஈரிரண்டு மருப்பின் - தலைகள் ஏந்தியிருக்கின்ற நான்காகிய கொம்பினையும்,

எழில் நடை - அழகினையுடைய நடையினையும்,

158. தாழ் பெரு 2 தட கை-3 நிலத்தே கிடக்கின்ற பெரிய வளைவினையுடைய கையினையுமுடைய,

158-9. உயர்த்த யானை எருத்தம் ஏறிய திரு கிளர் செல்வனும் - எல்லாரானும் உயர்த்துச் சொல்லப்படுகின்ற யானையின் புறக்கழுத்திலே ஏறிய திருமகள் விளங்கும் இந்திரனும்,

உயர்ந்த உயர்த்தவென விகாரமுமாம்.

நாட்டத்தினையும் (155) கொற்றத்தினையுமுடைய (156) செல்வனென்க.

---

1 வலவயின் உயரிய - வெற்றியினால் ஏறிய (வேறுரை.)

2 "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" தொல். உரி. சூ. 23.

3 "ஈர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கை" (சிறுபாண். 19) "இரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்தி" குறிஞ்சி. 163.

மருப்பு (157) முதலியவற்றையுடைய யானை (158) யென்க.

160-61. நால் பெரு தெய்வத்து நல் நகர் நிலைஇய உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கை - நான்காகிய பெரிய தெய்வத்தையுடைய நன்றாகிய ஊர்கள் நிலைபெற்ற உலகத்தைக் காக்கும் ஒரு தொழிலையே விரும்பிய கோட்பாட்டையுடைய செல்வன் (151) என முன்னேகூட்டித் திருமாலுக்கு அடையாக்குக.

1 நாற்பெருந் தெய்வமாவன: இந்திரன், யமன், வருணன், 2 சோமனென்னும் தெய்வங்கள்.

162. பலர் புகழ் மூவரும் தலைவராக - பலரும் புகழ்கின்ற அயன் அரி அரனென்னு மூவரும் தத்தமக்குரிய தொழில்களை முன்புபோல நிகழ்த்தித் தலைவராகவேண்டி,

என்றது: பிள்ளையார் அயனைச்சபித்தலின், அயன் படைத்தற்றொழிலைத் தவிரவே ஏனையிருவர்க்கும் காத்தற்றொழிலும் அழித்தற்றொழிலும் இன்றாமாகலின் மூவரும் தத்தமக்குரிய தொழில்களைப் பெற்றுத் தலைவராகவென்றார்.

163-5. [3 ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித், 4 தாமரை பயந்த தாவி லூழி, நான்முக வொருவற் சுட்டி :]

ஞாலம் தன்னில் தோன்றி 5 ஏம் உறு நான்முக ஒருவன் சுட்டி - பிள்ளையார் சபித்தலாலே மண்ணிடத்தே தோன்றி மயக்கமுறுகின்ற நான்கு முகத்தையுடைய அயனைப் பழையநிலையிலே நிறுத்தக் கருதி,

தாமரை பயந்த ஊழி தா இல் ஒருவன் - திருமாலுடைய திருவுந்தித் தாமரை பெற்ற ஊழிகடோறும் தன் படைத்தற்றொழிலில் வருத்தமில்லாத ஒருவன் (165),

---

1 நாற்பெருந் தெய்வம் - அந்தணர் தெய்வம், அரையர்தெய்வம், வசியர் தெய்வம், சூத்திரர் தெய்வம்; என்பதைச் சிலப்பதிகாரத்துக் (அழற்படுகாதை) கண்டு கொள்க (வேறுரை.)

2 சோமன் - குபேரன்.

3 ஏமுறு ஞாலம் - ஐயம் மிக உடைத்தாய பூமி (வேறுரை.)

4 தாமரை பயந்த தாவி லூழி நான்முகவொருவற் சுட்டி தோன்றி - தாமரைப்பூவின்கட்டோன்றி, கேடில்லாத காலத்தினையுடைய நான்முகனாகிய அயனுக்காக முன் சொன்ன மூவரும் பூமியின் கண் வந்து தோன்றி; அது, பிள்ளையார் அயனைச் சிறையிடுகையில் அவர் எழுந்தருளியிருக்கும் திருவாவினன்குடியிற் சென்று அயனை விடுவிக்கப் பூமியின்கண் வந்ததெனக் கொள்க (வேறுரை.)

5 "ஏமுறுகடுந்திண்டேர் - பகைவர் மயக்கமுறுதற்குக் காரணமான கடிய திண்ணியதேர்" கலி. உஎ: 25, ந.

இனித் தாமரையென்னும் எண்ணைத்தந்த அழிவில்லாத ஊழிக் காலத்தையுடைய அயனுமாம்.

பயந்த ஒருவனென்க.

சாபமென்றது: பிள்ளையார் அசுரரையழித்துத் தேவரைக் காத்தற்கு இந்திரன்மகள் தெய்வயானையாரை அவர்க்குக் கொடுத்தவிடத்தே, பிள்ளையார் தம் கையில் வேலை நோக்கி, "நமக்கு எல்லாந்தந்தது இவ் வேல்" என்ன, அருகிருந்த அயன், "இவ்வேலிற்கு இந்நிலை என்னால் வந்ததன்றோ" என்றானாக, "நங்கையில் வேலுக்கு நீ கொடுப்பதொரு சத்தியுண்டோ" என்று கோபித்து, "இங்ஙனங் கூறிய நீ மண்ணிடைச் செல்வாய்" என்ற சாபத்தை.

1 காண் வர - அழகு தோன்ற,

166. 2 பகலில் தோன்றும் இகல் இல் காட்சி - ஒருபொருள் பலவாமாறு பகுத்துக்காண்டற்கண் வேறுபடத் தோன்றும் தம்முள் மாறுபாடில்லாத அறிவினையுடைய,

167. 3 நால் வேறு இயற்கை பதினொரு மூவரொடு - நான்காகிய வேறுபட்ட இயல்பினையுடைய முப்பத்துமூவரும்,

என்றது: ஆதித்தன், உருத்திரன், வசு, மருத்துவனென்னும் ஒரோவோர் பொருள்கள் பலவாகப் பகுக்குங்காற் பன்னிருவர் பதினொருவர் எண்மர் இருவராகப் பகுக்க, நான்கு கூறாய் முப்பத்துமூவராயினாரென்றவாறு; பதினொருவராகிய மூவரென்க. அவர் ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவருமாம்.

ஒடு: எண்ணொடு.

168. 4 ஒன்பதிற்று இரட்டி உயர் நிலை பெறீஇயர் - பதினெண் வகையாகிய உயர்ந்த நிலையைப் பெற்றவரும்,

என்றது பதினெண்கணங்களை. அவர் தேவரும், அசுரரும், தைத்தியரும், கருடரும், கின்னரரும், கிம்புருடரும், இயக்கரும், விஞ்சையரும், இராக்கதரும், கந்தருவரும், சித்தரும், சாரணரும், பூதரும்,

---

1 காண்வர - காட்சிபெற (வேறுரை.)

2 பகலாகிய அருக்கனைப் போலத் தோன்றாநின்ற (வேறுரை.)

3 நால் வேறு இயற்கை - சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் (வேறுரை.)

4 பதினெண் பூமியின் மிக்க பதங்களைப் பெற்றுடையார் (வேறுரை.)

பைசாசகணமும், தாராகணமும், நாகரும், ஆகாயவாசிகளும், போகபூமியோருமெனவிவர்; இதற்குப் 1 பிறவாறு முரைப்பர்.

பெறீஇயர்: தொழிற் பெயர்.

169. மீன் பூத்தன்ன தோன்றலர் - உடுக்கள் பொலிவுபெற்றுத் தோன்றினாலொத்த தோற்றத்தையுடையராய்,

169-70. மீன் சேர்பு வளி கிளர்ந்தன்ன செலவினர் - மீன்களுலாவுகின்ற விடத்தைச் சேர்ந்து காற்று எழுந்தாலொத்த செலவினையுடையராய்,

170-71. வளி இடை தீ எழுந்தன்ன திறலினர் - காற்றிடத்தே நெருப்பெழுந்தாலொத்த வலியினையுடையராய்,

171-2. தீ பட உரும் இடித்தன்ன குரலினர் - நெருப்புப் பிறக்க உருமேறு இடித்தாற் போன்ற குரலினையுடையராய்,

இவை வினையெச்சமுற்று.

172-3. [விழுமிய, வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்:] தம் விழுமிய பெறுமுறை குறை உறு மருங்கில் கொண்மார்- 2 தம்முடைய சீரிய படைத்தல் காத்தல் அழித்தலென்னும் தொழில்களைப் பண்டுபோலப் பெறுமுறைமையினைக் குறைவேண்டி நின்று பெறுங்கூற்றாலே முடித்துக்கோடற்கு,

174. அந்தரம் கொட்பினர் - ஆகாயத்தே சுழற்சியினையுடையராய்,

[வந்துடன் காண:] உடன் வந்து காண-சேரவந்து காணும்படியாக,

175. தா இல் கொள்கை மடந்தையொடு - வருத்தமில்லாத 3 அருட்கற்பினையுடைய தெய்வயானையாருடன்,

---

1 புறநானூறு, கடவுள் வாழ்த்து உரையில் பதினெண்கணங்களை இங்குக் கூறப்பட்டவற்றிற்குப் பெரும்பாலும் ஒப்பவே விரிப்பர்; "கின்னரர் கிம்புருடர் விச்சா தரர்கருடர், பொன்னமர் பூதர் புகழியக்கர் - மன்னும், உரகர் சுரர்சா ரணர்முனிவர் மேலாம், பரகதியோர் சித்தர் பலர்", "காந்தருவர் தாரகைகள் காணாப் பசாசகண, மேந்து புகழ் மேய விராக்கதரோ - டாய்ந்ததிறற், போகா வியல்புடைய போகபூமி யோருடனே, யாகாச வாசிகளா வார்" (சிலப். ௫: 176-8, அடியார். மேற்.); பிங்கலந்தை முதலிய நிகண்டுகளில் இவ்வாறே கூறப்பெற்றிருக்கின்றன. "பேயும் பூதமும் பாம்புமீறாகிய பதினெண்கணம்" (தொல். பொருள். சூ. 256) என்று பேராசிரியரும், "பதினெண்கணங்களாவன தேவகணம் பிதிரர்கணம் முதலியன" (136) என்று தக்கயாகப்பரணி உரையாசிரியரும் எழுதுவர்.

2 162-ஆம் அடியின் உரையைப் பார்க்க.

3 6-ஆம் அடி உரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

175-6. [சின்னாள், ஆவினன்குடி யசைதலு முரியன் :] ஆவினன்குடி சின்னாள் அசைதலும் உரியன் - ஆவினன்குடியென்னும் ஊரிலே சிலநாள் இருத்தலுமுரியன் ;

பலர்புகழ் மூவரும் தலைவராகவேண்டி (162) அதற்குக் குறைபாடுண்டாக்கின நான்முகவொருவனைக் கருதி (165) ஒன்றுபுரிகொள்கைப் (161) புள்ளணி நீள்கொடிச் செல்வனும் (151) முரண்மிகு செல்வனும் (154) யானையெருத்தமேறிய செல்வனும் (159) முப்பத்துமூவரும் (167) பதினெண்கணங்களும் (168) தோன்றலர் (169) செலவினர் (170) திறலினர் (171) குரலினர் (172) கொட்பினராய் உடன்வந்து (174) தம் (173) விழுமிய (172) பெறுமுறை குறையுறுமருங்கின் முடித்துக் கோடற்கு (173) மென் மொழிமேவலர் இன்னரம்புளர (142) முனிவர் (137) மேவர (136) முற்புகக் (137) காணத் (174) தான் ஆவினன்குடியிலே காண்வர(165) அசைதலு முரியனென முடிக்க.

கந்தருவர் பாட்டால் (141 - 2) முனிவுதீர்ப்பார்.

முனிவர் தம்மை மருமைபற்றி முன்னேசென்றார்.

இனிச் சித்தன்வாழ்வென்று சொல்லுகின்றவூர் முற்காலத்து ஆவினன்குடியென்று பெயர்பெற்றதென்றுமாம். அது, "நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன்வாழ், வில்லந் தொருமூன் றெரியுடைத்து - நல்லரவப், பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின், னாட்டுடைத்து நல்ல தமிழ்" என்று ஔவையார் கூறியதனாலுணர்க ; [1] சித்தனென்பது பிள்ளையாருக்குத் திருநாமம்.

அதாஅன்று - அதுவன்றி.

## ச.—திருவேரகம்.

177. இரு மூன்று எய்திய [2] இயல்பினின் வழாஅது - ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றலென்னும் ஆறாகிய நன்மை பொருந்திய இலக்கணத்தில் வழுவாமல்,

வழாது, வழாமல் வழுவாமலெனத் திரிக்க.

178. இருவர் சுட்டிய பல்வேறு தொல் குடி - தாயும் தந்தையுமாகிய இருவர் குலத்தையும் உலகத்தார் நன்றென்று மதித்த பலவாய் வேறுபட்ட பழைய குடியிற் பிறந்த இருபிறப்பாளர் (182),

குடி - [3] குண்டினர், காசிபர் என்றாற்போல்வன.

---

1 இது முருகக்கடவுள் ஆயிரநாமத்துள் ஒன்று.

2 இயல்பினின் - ஒழுக்கத்தினின் ; அது வைதீக ஆசாரம் (வேறுரை.)

3 பி-ம். 'குண்டலர்'

179-80. [அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண், டாறினிற் கழிப்பிய :] அறுநான்கு இரட்டி ஆண்டு நல்லிளமை ஆறினில் கழிப்பிய - இருபத்துநான்கின் இரட்டியாகிய நாற்பத்தெட்டியாண்டு நல்லிளமையை வேதங்கூறிய நெறியிலே போக்கிய இருபிறப்பாளர் (182),

இவர் 1 பிரமசரியங்காத்த அந்தணர்.

அறன் நவில் கொள்கை - அறத்தை எப்பொழுதும் கூறுகின்ற கோட்பாட்டினையும்,

181. மூன்று வகை குறித்த 2 முத்தீ செல்வத்து—நாற்சதுரமும் முச்சதுரமும் வில்வடிவுமாகிய 3 மூன்று வகையைக் கருதின ஆகவனீயம் தக்கிணாக்கினி காருகபத்தியம் என்னும் மூன்று தீயானுண்டாகிய செல்வத்தினையுமுடைய,

182. இருபிறப்பாளர் - உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இருபிறப்பினையுமுடைய அந்தணர்,

4 பொழுது அறிந்து நுவல - தாங்கள் வழிபடுங்காலமறிந்து தோத்திரங்களைக் கூற,

183. ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண் - முந்நூல் கொண்டு முப்புரியாக்குதலின், ஒன்பதாகிய நூலைத் தன்னிடத்தே கொண்ட ஒரு புரி மூன்றாகிய நுண்ணிய பூணுநூலையும்,

ஞாணினையும் (183) கொள்கையினையும் (180) செல்வத்தினையுமுடைய (181) இருபிறப்பாளர் (182) என்க.

184. புலரா காழகம் புலர உடீஇ - நீராடுங்கால் தோய்க்கப்பட்ட கலிங்கம் உடம்பிலே கிடந்து புலர உடுத்து,

என்றது, ஈரத்துடனேயிருந்து வழிபடுதல் கூறிற்று.

185. உச்சி கூப்பிய கையினர் தன் புகழ்ந்து - தலைமேலே வைத்த கையினையுடையராய்த் தன்னைத் துதித்து,

---

1 “நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங்காத்தான்.” தொல். களவு. சூ. 1, உரை; இறை. சூ. 1, உரை.

2 முத்தீ : மூன்றாவன ஒன்று வேதத்தை வழங்கவும் ஒன்று தேவர்கட்குத் தட்சிணை கொடுக்கவும் ஒன்று பூலோகத்தை ரட்சை பண்ணவும் இவ்வாறாய முத்தீ (வேறுரை.)

3 இவற்றுட் பின்னைய இரண்டன் வகையும் இக்காலத்து வழங்குவனவற்றிற்கு வேறுபட்டிருத்தலின், இம்மூன்று வகையும் சாகாபேதமாக இருத்தல் வேண்டுமெனக் கூறுகின்றனர்.

4 உதயகாலத்தும் மத்தியான்ன காலத்தும் அத்தமன காலத்தும் தாபனம் அநுட்டானம் பூசையாகிய மூன்று தொழிலையும் முயன்று செய்ய (வேறுரை.)

186. ஆறெழுத்து அடக்கிய அரு மறை கேள்வி - ஆறெழுத்தினைத் தன்னிடத்தே அடக்கியிருக்கின்ற கேட்டற்கரிய,[1] மறையா உச்சரிக்கப்படும் மந்திரத்தை,

அது,[2] "நமோகுமாராய" என்பதாம்.

187. நா இயல் மருங்கில் நவில பாடி - நாப் புடைபெயரும் அளவிலே பயில உச்சரித்து,

188. விரை உறு நறு மலர் ஏந்தி - மணமிக்க நறிய பூவை எடுத்து,

188-9. பெரிது உவந்து ஏரகத்து உறைதலும் உரியன் - பெரிது மகிழ்ந்து ஏரகமென்கின்ற ஊரிலே இருத்தலுமுரியன்;

இருபிறப்பாளர் (182) புலரவுடீஇத் (184) தற்புகழ்ந்து (185) நறுமலரேந்திக் (188) கூப்பியகையராய் (185) நவிலப்பாடிப் (187) பொழுதறிந்து நுவல (182) அதற்குப் பெரிதுமகிழ்ந்து (188) ஏரகத்துறைதலும் உரியனென முடிக்க.

[3] ஏரகம் - மலைநாட்டகத் தொரு திருப்பதி.

அதாஅன்று - அதுவன்றி.

## ரு.—குன்றுதோறாடல்.

190. [4] பைங்கொடி - பச்சிலைக் கொடியாலே.

எல்லாவற்றினும் பசத்திருத்தலிற் பச்சிலையென்று பெயர்பெற்றது; பச்சிலை யென்னுது சினைவினை முதன்மேலேற்றிப் பைங்கொடியென்றார்.

நறை காய் - நறுநாற்றத்தையுடைய காயை,

அது சாதிக்காய்.

---

1 "ஐதுரைத்து" (முருந. 228) என்பதற்கு, 'தான் வழிபடுதற்குரிய மந்திரத்தைத் தோன்றாமல் உச்சரித்து' என்றெழுதிய உரை இங்கே கருதத்தக்கது.

2 பி-ம். 'நமக்குமாராய'

3 இதனைச் சோழ நாட்டிலுள்ள சுவாமிமலை யென்னும் தலமென்று கொள்வர் அருணகிரிநாதர் முதலியோர்; "காவிரி யாற்றுக்கு ளேவரு, வளமைச் சோழநன்னாட்டுக்கு ளேரக, நகரிற் சீர் பெறு மோட்சத்தையேதரு பெருமாளே", "யாவு மலைகொண்டு கைத்த காவிரி புறம்பு சுற்று மேரகமமர்ந்த பச்சை மயில்வீரா" (திருப்புகழ்); "சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்றும், ஏரகமு நீங்கா விறைவன்" (சிலப். குன்றக்.)என்பதன்உரையினால் ஏரகம் சுவாமிமலையினும் வேறான ஒருதலமென்று அரும்பதவுரையாசிரியர் கருதுவதாகத் தெரிகின்றது.

4 "பைங்கொடிப்படலை-பச்சிலைமாலை" சிலப். உசு : 44, அரும்பத.

இடை இடுபு - நடுவேயிட்டு,

வேலன் - படிமத்தான்,

191. அம் பொதி புட்டில் - அழகினையுடைத்தாகிய பொதிதலையுடைய தக்கோலமென்னும் மூதலின் காய்,

அது புட்டில்போறலிற் புட்டிலென்றார்.

விரைஇ - கலந்து,

1 குளவியொடு - காட்டு மல்லிகையுடனே,

192. 2 வெள் கூதாளம் தொடுத்த கண்ணியன் - வெண்டாளியையும் கட்டின கண்ணியையுடையனாய்,

193. நறு சாந்து அணிந்த கேழ் கிளர் மார்பின் - நறிய சந்தனத்தைப் பூசிய நிறம் விளங்கும் மார்பினையுடைய வேலன் (190),

வேலன் பைங்கொடியாலே (190) புட்டில்விரைஇ (191) நறைக்காய் இடையிடுபு (190) குளவியொடு (191) கூதாளத்தையுங் கட்டிய கண்ணியனாய் (192),

கண்ணியன்: வினையெச்சவினைக் குறிப்புமுற்று.

194. கொடு தொழில் வல் வில் கொலைஇய கானவர் - 3 கொடிய தொழிலையுடைய வலியவில்லாற் கொல்லுதலைச் செய்த குறவர்,

'குலைஇய' என்ற பாடத்திற்கு வில்லைவளைத்த கானவரென்க; எனவே கோறல் பெற்றாம்.

195. 4 நீடு அமை விளைந்த தேன் கள் தேறல் - நெடுகின மூங்கிலிலே யிருந்து முற்றின தேனாற்செய்த கட்டெளிவை,

196. குன்றகம் சிறுகுடி கிளையுடன் மகிழ்ந்து - மலையிடத்துச் சிறிய ஊரிலே இருக்கின்ற சுற்றத்தோடே உண்டுமகிழ்ந்து,

197. தொண்டகம் சிறு பறை குரவை அயர - அந்நிலத்துக்குரிய தொண்டகமாகிய சிறுபறையினது தாளத்திற்குக் குரவையாட,

கானவர் தேறலைமகிழ்ந்து குரவையாடவென்க.

198-9. [விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற், குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி :]

விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறு கான் கண்ணி - விரலது அலைப்பாலே 5 வலிய அலர்த்த அலர்ந்த பூவாகலின் வேறுபடுகின்ற

---

1 தாளிப்பூவோடு (வேறுரை.)

2 வெள்ளைக் கூதாளப்பூவையும் (வேறுரை.)

3 "கோட்டமை வல்விற் கொலைபிரியா வன்கண்ணர்" ஐந். ஐம்.

4 நெடிய மூங்கிலரிசியில் உண்டாகச்சமைத்திட்டு இனிமைக்கு இடமாகிய மதுவை (வேறுரை.)

5 "திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்து" (மதுரை. 567) என்பதும், அதனுரையும், "அகைமத்தம்" (தக்க. 98) என்பதனுரை

கறியமணத்தினையுடைய தலையிற்சூடும் மாலையினையும்,

குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி - அதுதான் ஆழ்ந்த சுனையிற்பூத்த பூவாற்செய்த வண்டுவீழ்கின்ற கண்ணி,

இஃது ஒற்றுமை நயம்பற்றிச் செயப்படுபொருண்மேல் நின்றது.

'கார்க் குண்டுசுனை' என்று பாடமாயின், கரிய ஆழ்ந்த சுனையென்க.

200. இணைத்த கோதை - இதழ்பறித்துக்கட்டின மாலையினையும்,

அணைத்த கூந்தல் - சேர்த்தின கூந்தலினையும்,

201. முடித்த குல்லை - இலையைத் தலையிலே யணிந்த [1] கஞ்சங் குல்லையினையும்,

இலை உடை நறு பூ - இலையையுடைய நறிய பூங்கொத்துக்களையும்,

202-3. செ கால் மரா அத்த வால் இணர் இடை இடுபு சுரும்பு உண தொடுத்த பெரு தண் மா தழை - செவ்விய காலினையுடைய மராத்திடத்தனவாகிய வெள்ளிய கொத்துக்களை நடுவே வைத்துச் சுரும்பு தேனை யுண்ணும்படி தொடுத்த பெரிய குளிர்ந்த அழகினையுடைய தழையை,

குல்லையையும் பூவையும் வாலிணர் இடையிட்டுத் தொடுத்த தழையென்க.

204. [திருந்துகா ழல்குறி் திளைப்ப வுடீஇ :] [2] காழ் திருந்து அல்குல் திளைப்ப உடீஇ - வடங்கள் திருந்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்து,

அல்குற்றிளைப்பவென்னும் வல்லொற்று விகாரமாயிற்று.

205. [மயில் கண்டன்ன மடநடை மகளிரொடு :]

மயில் கண்டன்ன மகளிரொடு - [3] சாயலுடைமையான் மயிலைக் கண்டாற்போன்ற மகளிரொடு,

மடநடை மகளிர் - மடப்பம்பொருந்திய ஒழுக்கத்தினையுமுடைய மகளிர்.

தழையை யுடுத்து மயில்கண்டன்ன மகளிரென்க.

உடுத்தென்னும் வினையெச்சம் அன்னவென்னும் பெயரெச்சமாகிய உவம உருபோடு முடிந்தது.

---

யில் உள்ள, 'அகைத்தல் - ஒலிய மலர்த்தலுமாம்' என்ற பகுதியும் இங்கே கருதத்தக்கன.

1 "கஞ்சங் குல்லை கஞ்சா வாகும்" திவா.

2 காழ் - புடைவை (வேறுரை.)

3 "மயிலியன் மடவரல்" (சிலப். குன்றக்.); "அயில்வே லண்ணல் கூறிய, மயிலேர் சாயல் வண்ணமு மதுவே" (பொருளியல்); "விளங் கியலான் மயிலாம்" திருச்சிற். 29.

கண்ணியினையும் கோதையினையும் சேர்த்தின கூந்தலினையும் மட[1]நடையினையுமுடைய மகளிரென்க.

இம்மகளிர் தன்னைச் சேவிக்கு மகளிர்.

206. செய்யன் - சிவந்தவன்,

206-7. சிவந்த ஆடையன் செ அரை செயலை தண் தளிர் துயல் வரும் காதினன் - சிவந்த ஆடையுடுத்துச் சிவந்த அரையினையுடைய அசோகிற் குளிர்ந்த தளிர் அசையுங்காது பொருந்தி,

208. கச்சினன் கழலினன் செச்சை கண்ணியன் - கச்சைக் கட்டிக் கழலையணிந்து வெட்சிமாலையைச் சூடி,

209. குழலன் கோட்டன் [2] குறு பல்லியத்தன் - குழலையூதிக் கொம்பைக் குறித்துச் சிறிய பல்லியங்களை எழுப்பி,

210-11. தகரன் மஞ்ஞையன் புகர் இல் சேவலங்கொடியன் - கிடாயைப் பின்னிட்டு மயிலையேறிக் குற்றமில்லாத கோழிக்கொடியை உயர்த்து,

நெடியன் - தான் வேண்டிய வடிவுகோடலிற் பிள்ளையாயிராது [3] நெடிக வளர்ந்து,

தொடி அணி தோளன் - தோளிலே தொடியையணிந்து,

212. நரம்பு ஆர்த்தன்ன இன் குரல் தொகுதியொடு - நரம்பு ஆர வாரித்தாலொத்த இனிய மிடற்றையுடைய பாடு மகளிரோடே,

இவர்கள் தன்னைச் சேவித்துப்பாடுமகளிர்.

213-4. [குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன், மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன் :]

மருங்கில் கட்டிய குறும்பொறி கொண்ட - இடையிலே இறுகக் கட்டிய உதரபந்தத்தின் மேலே உடுப்பதாக உட்கொண்ட,

[4] நிலன் நேர்பு நறு தண் சாயல் துகிலினன் - நாலவிட்டமையால் நிலத்தைப் பொருந்தி நறிய குளிர்ந்த மென்மையை உடைத்தாகிய துகிலினையுடுத்து,

215-6. [முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து :]

---

[1] மகளிர் நடைக்கு மயிலினடையை உவமை கூறுதலும் பண்டையாசிரியர் வழக்கம்; முருகு. 205-ஆம் அடி மூலத்தின் அடிக் குறிப்பைப் பார்க்க.

[2] நெடும்பல்லியத்தனாரென்று ஒரு நல்லிசைப் புலவரின் பெயர் பழைய நூல்களிற் காணப்படுகிறது ; இயங்கள் குறும்பல்லியம் நெடும் பல்லியமென இருவகைப்படுவனபோலும்.

[3] "வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி" முருகு. 288.

[4] "நிலந்தோய் புடுத்த நெடுநுண்ணுடையர்" பெருங், க. 32: 64.

மெல் தோள் பல் பிணை இயல - மெல்லிய தோளினையுடைய பல வாகிய மான்பிணைபோலும் மகளிர் குரவையாடி அசைய,

இவர்கள் மெய்தீண்டி விளையாடுதற்குரிய மகளிர்.

முழவு உறழ் தட கையின் தழீஇ எந்தி தலைத்தந்து - தன்னுடைய முழவையொத்த பெருமையையுடைய கையினாலே அவர்கள் கையினைத் தழீஇ எடுத்துக்கொண்டு முதற்கை கொடுத்து,

217. [குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே :] குன்றுதொறு ஆடலும் தன் நின்ற பண்பு - மலைகடோறுஞ்சென்று விளையாடுதலும் தனக்கு நிலைநின்ற குணம் ;

ஆடையன் (206) கண்ணியன் (208) என்பன முதலியன வினையெச்ச வினைக்குறிப்புமுற்று ; [1] "முன்னத்தி னுணருங் கிளவியு முளவே" என்னுஞ் சூத்திர விதியால் செய்தெனெச்சப் பொருளை உணர்த்தின.

கானவர் (194) குரவையயர (197) அதனைக்கண்டு மென்றோட் பல் பிணை (216) குரவையாடியசைய (215) அதனைப்பொருதே செய்யன் (206) வேலன் (190) தொடுத்த கண்ணியைச்சூடி (192) உடுத்துப் (206) பொருந்திக் (207) கட்டி அணிந்து சூடி (208) ஊதிக் குறித்து எழுப்பிப் (209) பின்னிட்டு எறி (210) உயர்த்து வளர்ந்து தொடியை யணிந்து (211) துகிலையுடுத்துத் (214) தொகுதியுடனே (212) மகளிரோடே (205) மலைகடொறுஞ் சென்று (217) தழீஇ (216) எந்தித் (215) தலைத்தந்து (216) ஆடலும் நின்ற தன்பண்பென வினை முடிக்க.

[2] "குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் வென்றியு, மெய்தக் கூறு மியல்பிற் றாகும்" எனவரும்.

அதாஅன்று - அதுவன்றி,

### சு.—பழமுதிர்சோலை.

218. சிறு தினை மலரொடு விரைஇ மறி அறுத்து - சிறிய தினை யரிசியைப் பூக்களோடே கலந்து பிரப்பரிசியாகவைத்து மறியையறுத்து,

219. வாரணம் கொடியொடு வயின் பட நிறீஇ - கோழிக்கொடியோடே தான் அவ்விடத்தே நிற்கும்படி நிறுத்தி,

220. [3] ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும் - ஊர்தோறும் ஊர்தோறும் எடுத்துக்கொண்ட தலைமை பொருந்தின விழாவின் கண்ணும்,

---

1 தொல். எச்சவியல், சூ. 63.

2 சிலப். பதிகம், 77, அடியார். மேற். "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோத், தந்நிலைக் கொட்ப நின்றாட லாகும்" (ஷை ஷை) ; "குரவைக் கூத்தே கைகோத் தாடல்" திவா.

3 அடுக்கு, பன்மை (வேறுரை.)

221. [1] ஆர்வலர் ஏத்த மே வரு நிலையினும் - தன்மேல் அன்புடையார் ஏத்துதலாலே தன் மனம் பொருந்துதல் வருகின்ற இடத்தினும்,

222. வேலன் தைஇய வெறி அயர் களனும் - படிமத்தான் இழைத்த வெறியாடுகளத்தினும்,

பிள்ளையார்வேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின், வேலனென்றார்; இது, [2] "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்" எனப் புறத்திற்கும் கூறியது.

223. காடும் காவும் கவின் பெறு துருத்தியும் - காட்டினும் பொழிலினும் அழகுபெறுகின்ற ஆற்றிடைக்குறையினும்,

224. யாறும் குளனும் - ஆறுகளினும் குளங்களினும்,

வேறு பல் வைப்பும் - முற்கூறிய ஊர்களன்றி வேறுபட்ட பலவாகிய ஊர்களினும்,

225. சதுக்கமும் - நாற்சந்தியினும்,

சந்தியும் - முச்சந்தியினும் [3] ஐஞ்சந்தியினும்,

புது பூ கடம்பும் - புதிய பூக்களையுடைய கடம்பினும்,

226. மன்றமும் - ஊர்க்குநடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடியினும்,

[4] பொதியிலும் - அம்பலத்தினும்,

[5] கந்து உடை நிலையினும்-ஆதீண்டுகுற்றியையுடைய இடத்தினும்,

227. [மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர :] மாண் தலை கொடியொடு உரு கெழு வியனகர் (244) அமைவர மண்ணி - மாட்சிமைப்பட்ட தலைமையினையுடைய கோழிக்கொடியோடே உருகெழு வியனகரை அமைவரப் பண்ணி,

ஒடு: வேறுவினையொடு.

இனி, [6] 'ஆண்டலைக்கொடி' என்று பாடமாயின், பேய் முதலியன

---

1 ஆர்வலர் - ஒன்ற்றுக்குறையுடையார் (வேறுரை.)

2 தொல். புறத்திணை. சூ. 5.

3 "சந்தி யைந்துந் தம்முடன் கூடி, வந்துதலை மயங்கிய வான்பெரு மன்றத்து" (சிலப். க0: 19-20); "காளத்தி, வருமைஞ் சந்தி மழை மத யானையே" **சீகாளத்தி.** காப்பு.

4 பொதியமலை யென்பாருமுளர் (**வேறுரை.**)

5 யானைத் தறியிடத்தினும்; பசுமுதலானவை உரிஞ்சுதறி யெனினு மமையும் (**வேறுரை.**)

6 ஆண்டலைக் கொடி - மயிற்கொடி (**வேறுரை.**)

பலியை நுகராமல் 1 தலை ஆண்மகன்றலையும், உடல் புள்ளின் வடிவுமாக எழுதின கொடி யென்க.

228. நெய்யோடு ஐயவி அப்பி - நெய்யோடே வெண்சிறுகடுகை யும் அப்பி,

2 ஐது உரைத்து - தான் வழிபடுதற்குரிய மந்திரத்தைத் தோன்றா மல் உச்சரித்து,

229. குடந்தம்பட்டு - வழிபட்டு,

வணக்கம் பட்டென்று உரைப்பர்; குடவென்பது தடவென்பது போல வளைவை உணர்த்துவதோர் உரிச்சொல்லாதலின், அதனடியாகப் பிறந்த பெயருமாம்.3

கொழு மலர் சிதறி - அழகியமலர்களைத் தூவி,

230. முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ - தம்மிற் பகைத்தல்கொண்ட வடிவினையுடைய இரண்டு அறுவையை உள்ளொன் றும் புறம்பொன்றுமாக உடுத்து,

231. செ நூல் யாத்து - சிவந்தநூலைக் கையிலே காப்புக்கட்டி, நூலொழுக்கி எல்லைப்படுத்தென்றுமாம்.

வெள் பொரி சிதறி - வெள்ளிய பொரியைத்தூவி,

232. மத வலி நிலைஇய மா தாள் 4 கொழு விடை - மிகுதியை யுடைய வலி நிலைபெற்ற பெருமையையுடைத்தாகிய காலையுடைய கொழுவிய கிடாயினது,

233. குருதியொடு விரைஇய தூ வெள் அரிசி - உதிரத்தோடே பிசைந்த தூய வெள்ளரிசியை,

234. சில் பலி செய்து - சிறுபலியாக இட்டு,

பல் பிரப்பு இரீஇ - பலபிரப்பும் வைத்து,

இனிப் பிரப்புக்கூடை யென்பாருமுளர்.

235. 5 சிறு பசுமஞ்சளொடு நறு விரை தெளித்து - சிறிய பசு மஞ்சளோடே நறிய சந்தன முதலியவற்றையும் தெளித்து,

---

1 ஆண்டலை ஆண்மகன்றலை போன்றதென்பதும் பிறவும், "வெறுந்தலையே தலையாகி.........ஆண்டலையா யற்றனமே" (தக்க. 234) என்பதனாலும் அதன் விசேடக் குறிப்பினாலும் விளங்கும்.

2 சிறிது மந்திரங்களையுமோதி (வேறுரை.)

3 இதன்பின்னே, "குடந்தமாவது: நால்விரன் முடக்கிப் பெரு விர னிறுத்தி, நெஞ்சிடை வைப்பது குடந்த மாகும்" என்பது ஒரு பிரதியிலுள்ள பாடம்.

4 யானைத்திரள் (வேறுரை.)

5 காட்டு மஞ்சள் (வேறுரை.)

இனிச் சிறுபசுமஞ்சள் மஞ்சளில் ஒரு சாதிவிசேடமுமாம்.

விரை: ஆகுபெயர்.

236-7. [பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை, துணையற வறுத்துத் தூங்க நாற்றி:]

பெரு தண் கணவீரம் மாலை - பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும்,

நறு தண் மாலை - ஒழிந்த நறிய குளிர்ந்த மாலைகளையும்,

அறுத்து - தலையொக்க அறுத்து,

1 துணை அற தூங்க நாற்றி - தமக்கு ஒப்பில்லாதபடி அசையத் தூக்கி,

இனித் தம்மில் இணையொத்த அறுப்பாக அறுத்தென்றுமாம்.

238. நளி மலை சிலம்பில் நல் நகர் வாழ்த்தி - செறிந்த மலைப் பக்கத்திலுள்ள நல்ல ஊர்களைப் 2 பசியும் பிணியும் பகையும் நீங்குக வென்று வாழ்த்தி,

நகர் - பிள்ளையார் கோயிலென்றுமாம்.

239. நறு புகை எடுத்து - நறிய தூபங்கொடுத்து,

குறிஞ்சி பாடி - அந்நிலத்திற்கு அடைத்த குறிஞ்சிப்பண்ணைப்பாடி,

240. இமிழ் இசை அருவியோடு இன்னியம் கறங்க - முழங்குகின்ற ஓசையினையுடைய அருவியோடே இனிய பல்லியங்களும் ஒலியாநிற்க,

241-2. உருவம் பல் பூ தூஉய் வெருவர 3 குருதி செந்தினை பரப்பி - சிவந்த நிறத்தினையுடைய பல பூக்களையும் தூவி அச்சம் வரும்படி உதிரமளைந்த சிவந்த தினையினையும் பரப்பி,

242-4. குறமகள் 4 முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க 5முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு வியன் நகர் - குறச்சாதியாகிய மகள் முருகனுவக்கும் வாச்சியங்களை வாசிக்கப்பண்ணித் தெய்வமின்றென்பார் அஞ்சும்படியாகப் பிள்ளையார் வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்தின அகற்சியையுடைய நகரின் கண்ணே,

---

1 துணை அற அறுத்து - இணையொக்க நறுக்கி, தூங்கநாற்றி - அசைதரப் பூங்கோயிலாகத் தூக்கி (வேறுரை.)

2 "பசியும் பிணியும் பகையு நீங்கி, வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி" சிலப். ரு: 72-3; மணி. க: 70-71.

3 உதிரம் போன்ற செந்தினை (வேறுரை.)

4 முருகியம் - துடி; தொண்டகப்பறையெனினும் அமையும் (வேறுரை); முருகியமும் தொண்டகப்பறையும் குறிஞ்சிக்குரிய பறையென்பர்; தொல். அகத். சூ. 18, ந.

5 பிள்ளையாரைத் தம்வழிப் படுத்தின (வேறுரை.)

1 "வேலன் வெறியாட் டயர்ந்த" என்புழிச் சிறுபான்மை ஏனை யோரும் ஆடுவாரென்றலின் குறமகள் வெறியாட்டுக் கூறினர்.

குறமகள் (242) மண்ணி (227) அப்பி உரைத்துப் (228) பட்டுச் சிதறி உடீஇ யாத்துச் சிதறிச் செய்து இரீஇத் தெளித்து நாற்றி வாழ்த்தி எடுத்துப் பாடிக் கறங்காநிற்கத் தூஉய்ப் பரப்பி நிறுத்து ஆற்றுப்படுத்த நகரென வினை முடிக்க.

சாந்திசெய்ய ஆற்றுப்படுத்தாள்.

245. ஆடு களம் சிலம்ப பாடி - அவ்வெறியாடுகின்ற களம் ஆரவாரிப்ப அதற்கு ஏற்பனவற்றைப்பாடி,

245 - 6. [பலவுடன் கோடுவாய் வைத்து :] கோடு பல உடன் வாய் வைத்து - கொம்புகள் பலவற்றையும் சேரவூதி,

கொடு மணி இயக்கி — கொடிய மணியையும் ஒலிப்பித்து,

247. ஓடா பூட்கை 2 பிணிமுகம் வாழ்த்தி - கெடாத வலியினையுடைய பிணிமுகமென்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி,

3 பிணிமுகம் - மயிலுமாம்.

248. வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட - காரியங்களை விரும்புவோர் தாங்கள் விரும்பின காரியங்களை விரும்பினாற்போலப் பெற்றுநின்று வழிபட,

நகரிலே (244) பாடி வைத்து இயக்கி வாழ்த்தி வழிபட உறைதலுமுரியன் (189) என்க.

விழவின்கண்ணும் (220) நிலையின்கண்ணும் (221) கந்துடை நிலையின்கண்ணும் (226) உறைதலுமுரியன் (189) என்க.

249. ஆண்டு ஆண்டு உறைதலும் - களனும் (222) காடும் காவும் துருத்தியும் யாறும் குளனும் வைப்பும் சதுக்கமும் சந்தியும் கடம்பும் மன்றமும் பொதியிலுமாகிய அவ்வவ்விடங்களிலே உறைதலுமுரியனென்க.

அறிந்தவாறே - யான் அறிந்தபடியே கூறினேன் ;

250. ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக - யான் முற்கூறிய அவ்வவ்விடங்களிலேயாயினுமாக, பிறவிடங்களிலேயாயினுமாக,

உம்மை: ஐயவும்மை.

250 - 51. [காண்டக, முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்தி :] முந்து நீ கண்டுழி காண் தக முகன் அமர்ந்து ஏத்தி - முற்பட நீ கண்ட பொழுது அழகு தக்கிருக்கும்படி முகம் விரும்பித் துதித்து,

---

1 தொல். புறத்திணையியல், சூ. 5.

2 பிணிமுகமென்பது பிள்ளையார் பவனிவரும் யானை (வேறுரை.)

3 " பிணிமுக வூர்தி " (புறநா. ருசு : 8), " பிணிமுக மேற்கொண்டு " (சிலப். குன்றக்.) என்பவற்றில் பிணிமுகமென்பதற்கு மயிலென்றே உரையாசிரியர்கள் பொருளெழுதியுள்ளார்கள்.

முகனமர்ந்தென்றார், 1 அவன் தெய்வத்தன்மையைக் கண்டபொழுது அச்சம் பிறவாது நிற்க வேண்டுமென்றற்கு.

252. கை தொழூஉ பரவி - முன்னர்க் கையைத் தலைமேலே வைத்து வாழ்த்தி,

கால் உற வணங்கி - பின்னர்த் திருவடி தலையிலேயுறும்படி தண்டனிட்டு,

253. நெடு பெரு சிமையத்து 2 நீலம் பைஞ்சுனை - நெடிய பெரிய இமவானுச்சியில் தருப்பைவளர்ந்த பசிய சுனையிடத்தே,

நீலமென்றார், அதினின்ற நீலநிறத்தையுடைய தருப்பையை. அஃது ஆகுபெயர் ; என்றது சரவணப் பொய்கையென்றவாறு.

254. ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப - விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் தீ தன்அங்கையிலே ஏற்ப,

3 சதாசிவனும் மயேச்சுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்குத் தெய்வமாகலின், ஐவரென்றார் ; ஐவருளொருவனென்றது உருத்திரன் தெய்வமாகிய தீயை.

அவன் அங்கையேற்பவென்றது, இறைவனிடத்தினின்றும் இந்திரன் வாங்கிய கருப்பத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறைவன்கூறுகிய முத்தீக்குண்டத்திட்டதனைக் கூறிற்று.

255. அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ - அருந்ததியொழிந்த அறுவராலே பெறப்பட்ட ஆறுவடிவு பொருந்திய செல்வ,

என்றது : 4 அங்ஙனம் அங்கியின்கணிட்டுச் சத்தி குறைந்த கருப்பத்தை முனிவரெழுவரும் வாங்கித் தம்மனைவியர்க்குக் கொடுப்ப அருந்ததியொழிந்தார் விழுங்கிச் சூன்முதிர்ந்து, சரவணப் பொய்கையிற் பதுமப்பாயலிலே பெற ஆறுவடிவாக வளர்ந்தமை கூறிற்று.

ஏற்கையினுலே (254) அறுவராற் பைஞ்சுனையிலே (253) பயக்கப்பட்ட செல்வ (255) வென்க ; இது பரிபாடலில், "பாயிரும் பனிக்கடல்" என்னும் 5 பாட்டானுணர்க.

---

1 "அணங்குசா லுயர்நிலை தழீஇ" (முருகு. 289) என்பது இக் கருத்தை வலியுறுத்தும்.

2 நீலோற்பல முதலாகவுள்ள பூக்கள் மிடைந்து கிடக்கின்ற சரவணப் பொய்கையில் (வேறுரை.)

3 "ஐவகைப் பூதத்திற்கு நாயகரான பிரமாவிட்டுணு ருத்திர ஈசுவர சதாசிவர்கள்" (தக்க. 138, உரை) ; "பாராதி யைந்துக்கும் பன்னுமதி தெய்வங்கள், ஆரா ரயனாதி தேவராம்" உண்மைவிளக்கம், 8.

4 58 - ஆம் அடியின் விசேடவுரையாலும் இது விளங்குகின்றது.

5 பாட்டு, 5.

256. ஆல் கெழு கடவுள் புதல்வ - கல்லாலின் கீழிருந்த கடவுளினுடைய புதல்வ,

கடவுளரென உயர்திணையாய் நில்லாது கடவுளென்பது தெய்வமென்னும் பொருட்டாய் அஃறிணை முடிபுகொள்ளும் உயர்திணையாய் நிற்றலின், அஃறிணைப்பாற்பட்டு, 1 "உணரக்கூறிய" என்னும் புறனடையான் முடிந்தது.

256 - 7. 2 மால் வரை மலை மகள் மகனே - பெருமையையுடைய மலையாகிய மலையரையன் மகளுடைய மகனே,

வரை - மூங்கிலுமாம்.

மாற்றோர் கூற்றே - பகைவர்க்குக் கூற்றுவனே,

258. [வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ :]

வெற்றி கொற்றவை சிறுவ - வெற்றியை உலகத்திற்குக் கொடுக்கும் 3 வனதுர்க்கையினுடைய புதல்வ,

வெல் போர் கொற்றவை - தான் வெல்லும்போரைச் செய்யுங் கொற்றவை,

என்றது, மகிடனைச் செற்றதனை.

259. இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி - பூணணிந்த தலைமையினையுடைய காடுகாளுடைய குழவி,

காடுகிழாளென்பது இக்காலத்துக் 4 காடுகாளென மருவிற்று. அவளும் இறைவனுடைய சத்தியாகலின், அவளுடைய குழவியென்றார்.

260. [வானோர் வணங்குவிற் றானைத் தலைவ :]

வானோர் தானை தலைவ - தேவர்கள் படைத்தலைவ,

என்றது, தேவசேனாபதி என்றதாம்.

வணங்கு வில் - வளையும் வில்லையும்,

வில்லையும் தேவராகிய தானையையுமுடைய தலைவவென்க.

261. மாலை மார்ப - 5 இன்பத்திற்குரிய மாலையணிந்த மார்ப,

6 நூல் அறி புலவ - எல்லா நூல்களையும் அறியும் புலவ,

---

1 தொல். புள்ளி. சூ. 110.

2 மால்போலும் வரையினையுடைய மலையரையன் திருமகளார் மகனே (வேறுரை.)

3 "கானநாடி - வனதுர்க்காதேவி" தக்க. 54, உரை.

4 "கையார் வளைக்கைக் காடுகாளோடு முடனாய்க், கொய்யார் பொழிற் கோடியே கோயில் கொண்டாயே" தே.

5 இன்பத்திற்குரிய மாலை - கடப்பமாலை ; ௫௩. 11-ஆம் அடியின் உரையைப் பார்க்க.

6 வேதாகமங்கள் முதலிய பல சாத்திரங்களையும் ஓதாதுணர்த்தும் பண்டிதனே (வேறுரை.)

புலவன் - அறிவுடையவன்.

262. செருவில் ஒருவ - போர்த்தொழிலில் ஒருவனாகி நிற்பாய்,

[1] பொரு விறல் மள்ள - பொருகின்ற வெற்றியினையுடைய மள்ள, மள்ளன் - இளமைப்பருவத்தோன்.

263. [2] அந்தணர் வெறுக்கை - அந்தணருடைய செல்வமாயிருப்பாய்,

அறிந்தோர் [3] சொல் மலை - சான்றோர் புகழ்ந்து சொல்லப்படும் சொற்களின் ஈட்டமாயிருப்பாய்,

264. மங்கையர் கணவ - தெய்வயானையாரும் வள்ளிநாய்ச்சியாருமாகிய மகளிர்க்குக் கணவ,

மைந்தர் ஏறே - வீரர்க்கு இடபமே,

265. வேல் கெழு தட கை சால் பெரு செல்வ - வேல்பொருந்தின பெருமையையுடைய கையானமைந்த பெரிய செல்வ,

என்றது, வேல் வெற்றியாற்பெற்ற அச்செல்வத்தை.

266 - 7. [குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து, விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ :]

குன்றம் கொன்ற குன்றா கொற்றத்து கிழவ - [4] குருகாற் பெயர் பெற்ற மலையைப் பிளந்த குறையாத வெற்றியையுடைய கிழவ,

விண் பொரு நெடு வரை குறிஞ்சி கிழவ - தேவருலகைத் தீண்டும் நெடியவரைகளையுடைய குறிஞ்சிநிலத்துக்கு உரிமையுடையாய்,

அதற்கு உரியனாதல், [5] "சேயோன் மேய மைவரை யுலகமும்" என்பதனாலுணர்க.

268. பலர் புகழ் நல் மொழி புலவர் ஏறே - பலரும் புகழ்ந்து சொல்லும் நன்றாகியசொற்களையுடைய பரசமயத்தினுள்ளார்க்கு ஏற்றின் தன்மையை உடையவனே,

என்றது : கல்விமதத்தையுடைய யானைபோல்வார்க்குச் சிங்கவேறு போல்வாயென்றதாம்.

269. [அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக :] பெறல் அரு மரபின் பெரும்பெயர் முருக - பிறர்க்குப் பெறலரிய முறைமையினையுடைய பெரும்பொருளையுடைய முருக,

---

1 வீரராயிருப்பார்க்கு வீரராயிருப்பவனே (வேறுரை.)

2 "வேதியர் வெறுக்கையும்" திருவருப்பு, வேலைக்காரன்.

3 "சொன்மலை யல்லன தொடுகட லமிர்தம்" கம்ப. நாட்டுப். 47.

4 குருகு - கிரவுஞ்சமென்னும் பறவை ; அதனாற் பெயர்பெற்ற மலை கிரவுஞ்சமலை.

5 தொல். அகத்திணை. சூ. 5.

பெயர் - பொருள். 1 "பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" எனவும், 2 "சொற்பெயர் நாட்டம்" எனவும் வரும். பெரும்பொருளென்றது வீட்டினை.

270. [நசையுநர்க் கார்த்து மிசைபே ராள :] நசையுநர்க்கு ஆர்த்தும் பேர் இசை ஆள - அவ்வீட்டைப் பெறவேண்டுமென்று நச்சிவந்தார்க்கு அதனை நுகர்விக்கும் பெரியபுகழை ஆளுதலையுடையாய்,

பேரிசையென்று மாறுக.

271 - 2. [அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய், மண்டமர் கடந்தநின் வென்ரு டகலத்து :]

அலந்தோர்க்கு அளிக்கும் சேஎய் - பிறரால் இடுக்கட்பட்டு வந்தோர்க்கு அருள்பண்ணும் சேய்,

மண்டு அமர் கடந்த வென்று ஆடு நின் அகலத்து பொலம்பூண் சேஎய் - மிக்குச் செல்கின்ற போர்களை முடித்த வென்றடுகின்ற நினது மார்பிடத்தே பொன்னாற்செய்த பேரணிகலங்களையணிந்த சேயென்க.

273. பரிசிலர் தாங்கும் உரு கெழு நெடு வேள் - இரந்துவந்தோரை வேண்டுவன கொடுத்துப் பாதுகாக்கும் உட்குதல் பொருந்திய நெடியவேளே,

274. பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள் - தேவரும் முனிவரும் ஏத்தும் பெரிய திருநாமத்தையுடைய தலைவனே,

இயவுள் - கடவுளுமாம்.

275 - 6. [சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி, போர்மிகு :] 3 போர் மிகு மொய்ம்பின் சூர் மருங்கு அறுத்த மதவலி - போர்த்தொழிலிலே மிகுகின்ற மொய்ம்பாலே சூரபன்மாவின் குலத்தை இல்லையாக்கின மதவலியென்னும் பெயரையுடையாய்,

பொருந - உவமிக்கப்படுவாய்,

பொருவப்படுமவன், பொருநனென நின்றது.

குரிசில் - தலைவனே,

276 - 7. [எனப்பல, யானறி யளவையி னேத்தி யானாது :] என யான் அறி அளவையின் ஆனாது பல ஏத்தி - என்று யானறிந்து நினக்குக்கூறிய அளவாலே நீயும் அமையாதே பலவற்றையும் கூறிப் புகழ்ந்து,

278. நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின் - நின் தன்மை யெல்லாம் முற்ற அளவிட்டறிதல் பல்லுயிர்க்கும் அரிதாகையினாலே,

279. நின் அடி உள்ளி வந்தனென் - நின் திருவடியைப் பெறவேண்டுமென்று நினைந்துவந்தேன் ;

---

1 பதிற்றுப்பத்து, கo : 23. 2 பதிற்றுப்பத்து, உக : 1.

3 போர்மிகுபொருந - போரை மிகப்பொர வல்லவனே (வேறுரை.)

279-80. நின்னொடு புரையுநர் இல்லா புலமையோய் - நின்னோடு ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை உடையோய்,

280-81. என குறித்தது மொழியா அளவையில் - என்றுசொல்லி நீ கருதிய வீடுபேற்றினை விண்ணப்பஞ் செய்வதற்கு முன்னே,

முந்துநீகண்டுழி முகனமர்ந்து (251) மகனே கூற்றே (257) குழவி (259) வெறுக்கை சொன்மலையாயிருப்பாய் (263) மைந்தரேறே (264) புலவரேறே (268) சேஎய் (271) வேஎள் (273) இயவுளே (274) மதவலி (275) குரிசில் (276) புலமையோய் (280) என்று முன்னர் எதிர்முகமாக்கி ஏத்தி (251) யென அண்மைவிளியல்லாதனவற்றை முன்னர்க் கூட்டி முடிக்க. அங்ஙனம் எதிர்முகமாக்கி யேத்திப் பின்னர்ப்பரவி வணங்கிச் (252) செல்வ (255) புதல்வ (256) சிறுவ (258) தலைவ (260) மார்ப புலவ (261) ஒருவ மள்ள (262) கணவ (264) செல்வ (265) கிழவ (267) முருக (269) இசைபேராள (270) பொருந (276) என்று அண்மையாக விளித்து, மன்னுயிர்க்கருமையின் (278) யானறி யளவையினேத்தி (277) நின்னடியுள்ளிவந்தனென் (279) என்று நீ குறித்தது மொழியா வளவையினென முடிக்க.

281-2. [குறித்துடன், வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர் :] வேறு பல் உருவில்[1] குறு பல் கூளியர் உடன் குறித்து - வேறுவேறாகிய பலவடிவினையுடைய சிறிய பலராகிய சேவித்துநிற்பார் சேரக்கருதி,

[2] "நின், கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்" என்றார் பிறரும்.

283. சாறு அயர் களத்து வீறு பெற தோன்றி - விழாவெடுத்த களத்தே தாங்கள் பொலிவுபெறத் தோன்றி,

284. [அளியன்றானே [3] முதுவா யிரவலன் :] முது வாய் இரவலன் தான் அளியன் - அறிவு முதிர்ந்த வாய்மையையுடைய புலவன் றான் அளிக்கத்தக்கான்.

285-6. [வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென, வினியவு நல்லவு நனிபல வேத்தி :] பெரும நின் வள் புகழ் நயந்து இனியவும் நல்லவும் நனி பல ஏத்தி வந்தோன் என - பெரும, நினது வளவிய புகழினைக்கூற விரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதிபயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்தி வந்தோனென்றுகூற,

கூளியர் (282) குறித்துத் (281) தோன்றி (283) அளியன் (284) பெரும நின் வண்புகழைக் கூறநயந்து (285) இனியவும் நல்லவுமாக ஏத்தி (286) வந்தோன் (285) என்று கூறவென முடிக்க.

---

1 குறும்பல் கூளியர் - குறியவாயிருப்பன பல பூதங்கள்; கூளிகளென்று பேய்க்கும் பெயராம் (வேறுரை.)

2 புறநா. உக : 4-5.

3 நிரம்பவோதிய புலவன் (வேறுரை.)

287. தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின் - தெய்வத்தன்மை யமைந்த வலிவிளங்கும் வடிவினையும்,

288. வான் தோய் நிவப்பின் தான் வந்து எய்தி - வானைத்தீண்டும் வளர்ச்சியினையுமுடைய தான் அவையை வந்தணுகி,

289. அணங்கு சால் உயர் நிலை தழீஇ - வருத்தமமைந்த தெய்வத் தன்மையை உள்ளடக்கிக்கொண்டு,

289 - 90. [பண்டைத்தன், மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி :] மணம் கமழ் தெய்வத்து பண்டை தன் இளநலம் காட்டி - மணம் நாறுகின்ற தெய்வத்தன்மையையுடைய முன்புண்டாகிய தன் இளையவடிவைக்காட்டி,

291. [அஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென :] நின் வரவு அறிவல் அஞ்சல் ஓம்புமதி என - நீ வீடுபெற நினைத்துவந்த வரவை யான் முன்னே யறிவேன்; அது நினக்கு எய்தலரிதென்று அஞ்சுதலைப் பரிகரியென்று,

292. அன்புடை நன்மொழி அளைஇ - நின்மேல் அன்புடையவாகிய நல்ல வார்த்தைகளைப் பலகாலும் அருளிச்செய்து,

292 - 4. [விளிவின்று, இருணிற முந்நீர் வளைஇய வுலகத், தொருநீ யாகித் தோன்ற :] இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து ஒரு நீ ஆகி விளிவு இன்று தோன்ற - இருண்ட நிறத்தையுடைய கடல் சூழ்ந்த உலகத்திடத்தே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரியையாய்க் கேடின்றித் தோன்றும்படி,

294 - 5. விழுமிய பெறல் அரு பரிசில் நல்குமதி - சீரிய பிறராற் பெறுதற்கரிய வீடுபேற்றினைத் தருவன்;

1 "இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடுந், தகுநிலை யுடைய வென் மனார் புலவர்" என்றதனானுதல், 2 "அவ்வச் சொல்லிற்கு" என்னும் புறனடையதனானுதல் மதி படர்க்கைக்கண் வருதல் கொள்க.

இனி மதிபலவுடனெனக் கூட்டி, அறிவுகள்பலவுடனே பரிசில் நல்குமென்று கூறுவாருமுளர்.

295 - 6. [பலவுடன், வேறுபஃ றுகிலி னுடங்கி :] வேறு பல் துகிலின் பல உடன் நுடங்கி - வேறுபட்ட பலவாகிய துகிற்கொடிகளைப் போலத் தாம் பலவும் கூடவசைந்து,

296 - 7. அகில் சுமந்து ஆரம் முழு முதல் உருட்டி - அகிலை மேற்கொண்டு சந்தனமாகிய பெரிய மரத்தைத் தள்ளி,

---

1 தொல். இடை. சூ. 27; இச்சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் இப்பகுதியை மேற்கோள் காட்டியதன்றி அங்கே பொருளும் இங்ஙனமே எழுதினர். 2 தொல். இடை. சூ. 47.

297 - 8. வேரல் பூ உடை அலங்கு சினை புலம்ப வேர் கீண்டு - சிறுமூங்கிலினது பூவுடைத்தான அசைகின்ற கொம்பு தனிப்ப வேரைப் பிளந்து,

299 - 300. விண் பொரு நெடு வரை பரிதியின் தொடுத்த தண் கமழ் அலர் இறால் சிதைய - தேவருலகத்தைத் தீண்டுகின்ற நெடிய மலையிடத்தே ஞாயிற்றின் மண்டிலத்தைப்போல ஈ வைக்கப்பட்ட தண்ணியவாய் மணக்கின்ற விரிந்த தேன்கூடு கெட,

300 - 301. நல் பல ஆசினி முது சுளை கலாவ - நன்றாகிய பல [1] ஆசினிகளினுடைய முற்றிய சுளை தன்னிடத்தே கலக்க,

301 - 2. மீ மிசை நாகம் நறு மலர் உதிர - மலையினுச்சியிலுண்டான சுரபுன்னையின் நறிய மலர்கள் உதிர,

302 - 3. யூகமொடு [2] மா முகம் முசு கலை பனிப்ப - கருங்குரங்கோடே கரிய முகத்தையுடைய முசுக்கலைகளும் நடுங்க,

[3] "கலையென் காட்சி யுழைக்கு முரித்தே", [4] "நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும்" என்றார்.

303 - 4. பூ நுதல் இரு பிடி குளிர்ப்ப வீசி - புகரையணிந்த மத்தகத்தையுடைய பெரிய பிடி குளிரும்படி வீசி,

304 - 5. பெரு களிறு முத்து உடை வான் கோடு தழீஇ - பெரிய யானையினுடைய முத்தையுடையவாகிய வெள்ளிய கொம்புகளை உள்ளடக்கி,

305 - 6. [தத்துற்று, நன்பொன் மணிநிறங் கிளர:] நல் பொன் மணிநிறம் கிளர தத்துற்று - நல்ல பொன்னும் மணியும் நிறம் விளங்கும்படி மேலே கொண்டுகுதித்து,

தத்துற்று - தத்துதலையுற்று.

பொன் கொழியா - பொடியான பொன்னைத் தெள்ளி,

307 - 8. வாழை முழு முதல் துமிய தாழை இளநீர் விழு குலை உதிர தாக்கி - வாழையினது பெரிய முதல் துணியத் தெங்கினது இளநீரையுடைய சீரிய குலை உதிர அவ்விரண்டினையும் மோதி,

309. கறி கொடி கரு துணர் சாய - மிளகினது கொடியின் கரிய கொத்துக்கள் சாய,

309 - 11. [பொறிப்புற, மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக், கோழி வயப்பெடை யிரிய:] பொறிபுற [5] மட நடை மஞ்ஞை கோழி

---

[1] ஆசினி - ஈரப்பலா.

[2] "மைபட் டன்ன மாமுக முசுக்கலை" குறுந். கஉக : 2.

[3] தொல். மரபியல், சூ. 45. [4] தொல். மரபியல், சூ. 46.

[5] மடப்பத்தினையும் நடையினையும் உடைய மயில்கள் (வேறுரை.)

வயம் பெடை வெரீஇ பலவுடன் இரிய - பீலியையுடைத்தாகிய இடத்தினையும் மடப்பத்தை யுடைத்தாகிய ஒழுக்கத்தினையுமுடைய மயில்களோடே கோழியினுடைய வலியையுடைய பெடை வெருவிப் பலவும் சேரக்கெட,

311 - 4. [கேழலொ,டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன,குரூஉ மயிர் யாக்கைக் குடாவடி யுளியம், பெருங்கல் விடரளைச் செறிய :] கேழலொடு வெளிற்றின் இரு பனை புல் சாய் அன்ன குரூஉ மயிர் யாக்கை [1] குடாவடி உளியம் பெரு கல் விடர் அளை செறிய - ஆண் பன்றியுடனே உள்ளே வெளிற்றினையுடைத்தாகிய கரிய பனையினது புல்லிய செறும்பையொத்த கரிய நிறத்தையுடைத்தாகிய மயிரினையுடைய உடம்பினையும், வளைந்த அடியினையுமுடைய கரடி பெரிய கல்விண்ட முழைஞ்சிலே சேர,

314 - 5. கரு கோடு ஆமா நல் ஏறு சிலைப்ப - கரிய கொம்பினையுடைய ஆமாவினுடைய நன்றாகிய ஏறுகள் முழங்க,

315 - 6. சேண் நின்று இழுமென இழிதரும் அருவி - மலையின் உச்சியினின்றும் இழுமென்னும் ஓசைபடக் குதிக்கும் அருவியையுடைய,

317. பழம் முதிர் சோலை [2] மலை கிழவோனே - பழம் முற்றின சோலைகளையுடைய மலைக்கு உரிமையை யுடையோனே.

அடங்கிச் சுமந்து (296) உருட்டிக் (297) கீண்டு (298) சிதையக் (300) கலாவ (301) உதிரப் (302) பனிப்ப (303) வீசித் (304) தழீஇத் தத்துற்றுக் (305) கொழியாத் (306) தூய்ய (307) உதிரத்தாக்கிச் (308) சாய (309) இரியச் (311) செறியச் (314) சிலைப்ப (315) இழிதரும் அருவி (316) யென முடிக்க.

கிழவோனென்ற பெயர், [3] உடம்படுபுணர்த்தலாற் கொள்க.

கணவன் (6) மார்பினன் (11) சென்னியனுகிய (44) சேயுடைய (61) சேவடி படரும் உள்ளத்தோடே (62) செல்லுஞ்செலவை நீ நயந்தனையாயின் (64) நன்னர் நெஞ்சத்து இன்னசைவாய்ப்ப (65) இன்னே பெறுதி (66); அது பெறுதற்கு அவன் யாண்டுறையுமென்னிற் குன்றமர்ந்துறைதலுமுரியன்; அதுவன்றி (77) அலைவாய்ச்சேறலும் நிலைஇய பண்பு; அதுவன்றி (125) ஆவினன்குடி அசைதலுமுரியன்; அதுவன்றி (176) ஏரகத்துறைதலுமுரியன்; அதுவன்றிக் (189) குன்றுதொறாடலும் நின்றதன் பண்பு; அதுவன்றி (217) விழவின்கண்ணும் (220) நிலையின்கண்ணும் (221) கந்துடை நிலையின்கண்ணும் (226) உறைதலுமுரியன் (189); களனும் (222) காடும் (223) முதலியன ஆண்டாண்டுறை

---

[1] குடமுழவுபோன்ற அடி (வேறுரை.)

[2] 317 : நன். சூ. 164, மயிலை. மேற்.

[3] பி-ம். உடம்பொடு புணர்த்தல்.

தலும் (249) உரியன் (189); நகரிலே (244) பாடி (245) வைத்து இயக்கி (246) வாழ்த்தி (247) வழிபட (248) உறைதலுமுரியன் (189); இஃது யானறிந்தபடியே கூறினேன் (249); இனி ஆண்டாண்டாயினுமாக, பிறவிடங்களிலே யாயினுமாக (250), முந்துநீகண்டுழிமுகனமர்ந்து முன்னர் எதிர்முகமாக்கிஏத்திப் (251) பரவி வணங்கிப் (252) பின்னர் அண்மையாகவிளித்து யானறியளவையினேத்தி (277) நின்னடி யுள்ளி வந்தேனென்று (279) நீ குறித்தது மொழிவதற்குமுன்னே (281) கூளியர் (282) குறித்துத் (283) தோன்றிப் (288) பெரும (285) இரவலன் நீ அளிக்கத்தக்கான் (284) வந்தோனென்றுகூற (285) மலைகிழவோனாகிய (317) குரிசிலும் (276) தான்வந்தெய்தித் (288) தழீஇக் (289) காட்டி (290) அஞ்சலோம்புமதியென்று (291) அன்புடை நன்மொழியளைஇ (292) ஒரு நீயாகித் தோன்றும்படி (294) பெறலரும்பரிசில் நல்குவ (295) னென வீடுபெறக் கருதிய இரவலனை நோக்கி வீடுபெற்றானொருவன் ஆற்றுப்படுத்ததாக வினைமுடிக்க.

இது புறத்திணையியலுள், [1] "தாவினல்லிசை" என்னுஞ் சூத்திரத்துள், "ஆற்றிடைக்காட்சி யுறழத் தோன்றிப்,பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்" என்பதனால் கந்தழியைப் பெற்றானொருவன் அதனைப் பெறாதானொருவனுக்குப் பெறுமாறு கூறி அவனை வழிப்படுத்துக் கூறுவானென்பது பற்றிச் செய்யுள் செய்தாராயிற்று.

கந்தழியாவது ஒருபற்றுமற்று அருவாய்த் தானேநிற்கும் தத்துவங் கடந்த பொருள்; அது, [2] "சார்பினுற் றோன்றாது தானருவாய்......மைதீர் சுடர்" என்பதாம்; இதனை, [3] "உற்ற யாக்கையி னுறுபொரு ணறுமல ரெழுதரு நாற்றம்போற், பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்" என அதனை உணர்ந்தோர் கூறியவாற்றானுணர்க.

முருகாற்றுப்படையென்றதற்கு வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்ததென்று பொருள் கூறுக.

குமாரவேளை மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார்பாடிய திருமுருகாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

---

1 தொல். புறத்திணை. சூ. 36.

2 "சார்பினுற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ், சார்பெனநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ, வாய்மொழியான் மெய்யான் மனத்தா னறிவிறந்த, தூய்மையதா மைதீர் சுடர்" தொல். புறத்திணை. சூ. 33, ந. மேற்.

3 திருவா. அதிசயப்பத்து, 9.

# வேலுமயிலுந்துணை.



அடியிலுள்ள பாடல்கள், பத்துப் பாட்டும் சேர்ந்துள்ள பழைய ஏட்டுப்பிரதிகளிலில்லாமல் திருமுருகாற்றுப்படை மட்டுமுள்ள புதிய ஏட்டுப்பிரதிகளிலும் அச்சுப்பிரதிகளிலும் இருந்தமையால் தனியே பதிப்பிக்கப்பெற்றன; திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திலுள்ள, "உயர்வுற வுலக முவப்பவென் றெடுத்தாங் கொண்டமிழ்த் தண்டல முவப்ப, வியனுற வுரைப்பக் கேட்டலு மடைந்து வெற்பகந் திறக்கவேல் விட்டு, நயனொடு மெடுத்து வினைகடீர்த் தருளு நன்சுனை காட்டிநீ ராட்டி, அயிலுடை நம்மைக் கிழவனென் றனையென் றுலயத் தடைந்தனன் காண", "இனிதொர்கவி குன்றமெறிந் தாயெனப்பி னென்றுமிளை யாயழகி யாயென் னுங்கான், மனமகிழ்ந்தீ தியார்பகர்வா ரவர்க்கு வேண்டும் வரங்கொடுப்போ மதுரையிற்போ கென்னப் போந்து, கனமலிசங் கத்துரைப்பக் கேட்டி யாருங் களிகூர்ந்தார் தமிழ்முருக னருளை வாழ்த்தி" (சச: 27-8) என்னும் வரலாற்றை நோக்குங்கால், "குன்ற மெறிந்தாய்" என்னும் வெண்பா அந்நூலாசிரியர் காலத்தே வழங்கி வந்ததாகத் தெரிகின்றது.

1. குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய் - [1] என்றும்
இளையா யழகியா யேறார்ந்தா னேறே
உளையாயென் னுள்ளத் துறை.

2. குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் [2] கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல்.

3. வீரவே லுரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே ளிருக்கைவேல் - வாரி

---

[1] "என்றுமழி யாத விளமைக்கார" திருப்புகழ்.

[2] பொதும்பு - முழை. கற்பொதும்பிற் காத்த வரலாற்றை, திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் சச - ஆம் திருவிளையாடலாலும், சீகாளத்திப்புராணம் நக்கீரச்சருக்கத்தாலும் அறியலாகும்.

குளித்தவேல் கொற்றவேல் [1] சூர்மார்புங் குன்றும்
துளைத்தவே லுண்டே துணை.

4. இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா - முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

5. [2] உன்னை யொழிய ஒருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன் - பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

6. அஞ்சு முகந்தோன்றி னாறு முகந்தோன்றும்
[3] வெஞ்சமரி லஞ்சலென வேறோன்றும் - நெஞ்சில்
[4] ஒருகா லினைக்கி னிருகாலுந் தோன்றும்
முருகாவென் றோதுவார் முன்.

7. முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே - ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுதும்
நம்பியே கைதொழுவே னன்.

8. காக்கக் [5] கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் [6] பரமா மறுமுகவா - பூக்கும்
கடம்பா [7] முருகா கதிர்வேலா நல்ல
இடங்கா ணிரங்கா யினி.

---

1 "உழல்குரு மலைமார்பு முடனூடுறப் பொருது" (தக்க. 5) என்பதும், 'சூரபன்மாவுக்கு மறைவாய் ஓடிவரலான மலையினுடைய மார்பும் சூரபன்மாத்தானும் ஒக்க ஒரேகாலத்திலே ஊடுருவும்படி வேலேறுபடப் பொருதருளி' என்ற அதனுரையும் இங்கே கருதத்தக்கன.

2 "உன்னையலா லொருதெய்வ முள்கே னென்றும்" (தே. திருநா); "உள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க ளுத்தமனே" நவா.

3 பி - ம். 'வெஞ்ச மரந்தோன்றில் வேறோன்றும்'

4 ஒருகால் - ஒரு முறை; இருகால் - இரண்டு திருவடிகள்.

5 பி - ம். 'கடன்காணீ' 6 பி-ம். 'பயங்கா ணறுமுகவா' 7 பி-ம். 'குமரா கதிர்வேலா'

9. பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு - சுருங்காமல்
ஆசையா னெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்.

10. நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால் - முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும்.

---

பின்னருள்ள கட்டளைக்கலித்துறை, திருமுருகாற்றுப்படையை நியமமாகப் பாராயணஞ் செய்யுங்காலத்துப் பெரியோர்களால் தொன்று தொட்டு ஓதப்பெற்று வருகின்றது.

"ஒருமுரு காவென்ற னுள்ளங் குளிர வுவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம் பாநிற்பத் தையன்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே."

---

"வளவாய்மை சொற்ப்ரபந்த முளகீர னுக்குகந்து மலர்வாயிலக் கணங்க ளியல்போதி, அடிமோனை சொற்கிணங்க வுலகாமு வப்ப வென்று னருளா லளிக்குகந்த பெரியோனே", "மருகு மாமது ரைக் கூடன் மால்வரை வளைவுளாகிய நக்கீர ரோதிய வளமை சேர்தமி ழுக்காக நீடிய கரவோனே", "கீதவிசை கூட்டி வேதமொழி சூட்டு கீரரியல் கேட்ட க்ருபைவேளே" (திருப்புகழ்), "நக்கீரர் சொற்றித் தித்ததே" (கந்தரந்தாதி)

என அருணகிரிநாதராலும்,

"இன்னன நினைந்து கீர னிலங்கிலை நெடுவேற் செம்மல்
பன்னிரு செவியு மாரப் பருகமு தாகி யோதின்
உன்னிய வுன்னி யாங்கிங் குதவுவ தாகிப் பாவுண்
முன்னுற வந்து நிற்கு முருகாற்றுப் படைமொ ழிந்தான்"

(சீகாளத்திப். நக்கீரச். 115.)

எனக் கவிஞர்களிற் பெரும்புகழ்வாய்ந்த துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிர காச ஸ்வாமிகளாலும் திருமுருகாற்றுப்படை பாராட்டப்பெற்றிருத்தல் காண்க.

---

இரண்டாவது

# *பொருநராற்றுப்படை.



அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது
வேறுபுல முன்னிய விரகறி பொருந
குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்
5 விளக்கழ லுருவின் விசியுறு பச்சை
யெய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்
றைதுமயி ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
யளைவா ழலவன் கண்கண் டன்ன
10 துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி
யெண்ணாட் டிங்கள் வடிவிற் றாகி
யண்ணா வில்லா வமைவரு வறுவாய்ப்

---

* பொருநராற்றுப்படைக்கு இந்நூலை மேற்கோளாகக் காட்டினர்; தொல். புறத். சூ. 36, ந.

2. "சாறு - விழா; 'சாறு......உறாது' இது பொருநராற்றுப் படை" தக்க. 394, உரை.

1-2. "கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற், புல் லென்ற களம்போலப் புலம்புகொண்டு - கல்லென்னும் ஓசையுண்டாக அழகு பெற்ற திருநாளை வழிப்படுத்திவிட்ட பிற்றைநாள் பொலி வழிந்த இடம் போலத் தனிமைகொண்டு" கலி. ௫ : 10-11, ந.

5. "விளக்கழ லுறுத்த போலும் விசியுறு போர்வை" (சீவக. 559, ந.) என்பதற்கு இவ்வடி மேற்கோள்.

'வள் - தோல்; விளக்கழல்.........பச்சை' கல். "வள்ளுறை" மயிலேறும். மேற்.

7. பி - ம். 'ஒழுங்கிய'

8. "பழையதோர் பொல்லம் பொத்திய" திருவிளை. விறகு. 13.

11. "பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை" பெரும் பாண். 11.

10-11. "கொளத்தகு திவவுத் திங்கட் கோணிரைத் தனைய வாணி" சீவக. 559.

12. "சுனைவறந் தன்ன விருளேங்கு வறுவாய்" பெரும்பாண். 10.

பாம்பணந் தன்ன வோங்கிரு மருப்பின்
மாயோண் முன்கை யாய்தொடி கடுக்குங்
15 கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவி
னாய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்
கேள்வி போகிய நீள்விசித் தொடையன்
மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன
20 வணங்குமெய்ந் நின்ற வமைவரு காட்சி
யாறலை கள்வர் படைவிட வருளின்
மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை
வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்துஞ்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி
25 யறல்போற் கூந்தற் பிறைபோற் றிருநுதற்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்க
ணிலவிதழ் புரையு மின்மொழித் துவர்வாய்ப்
பலவுறு முத்திற் பழிதீர் வெண்பன்
மயிர்குறை கருவி மாண்கடை யன்ன
30 பூங்குழை யூசற் பொறைசால் காதி
னாணடச் சாய்ந்த நலங்கிளர் ரெருத்தி

---

14-5. "நெடும்பணைத் திரடோண் மடந்தை முன்கைக், குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவு" (பெரும்பாண். 12-3); "தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவு" மலைபடு. 21.

19-20. "மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்தி.........குற்ற நீங்கிய யாழ்" சிலப். எ : 2-4.

21. பி-ம். 'படையிட'

23. "வார்தல் வடித்த லுந்த லுறழ்தல்" சிலப். கானல்.

16-24. "ஆய்தினை யவைய லனையவா நரம்பாங் கணிபெற வாரியும் வடித்தும், எயுற முறையே யுந்தியு முறழ்ந்து மியைந்தநீ ரோடு நன் மொழிக, டேய்வற வெடுத்துச் சிதறியும் பல்காற் றேனுற ழின்னிசை யெழுப்பி" இலிங்க. நாரதர்கூகை. 24.

29-30. "மயிரெறிகத்தரிகை யனையவாய்" (சீவக. 168); "மயிரெறி கருவி வள்ளை" (கந்த. மாயைப். 46); "மயிரெறி கருவி தனதிழி தொழிலை மதித்துமஞ் சிகனுறை தூங்க" ஆனைக்கா. அகிலாண்ட. 38.

னுடைமைப் பணைத்தோ ளரிமயிர் முன்கை
நெடுவரை மிசைஇய காந்தண் மெல்விரற்
கிளிவா யொப்பி னொளிவிடு வள்ளுகி
35 ரணங்கென வுருத்த சுணங்கணி யாகத்
தீர்க்கிடை போகா வேரிள வனமுலை
நீர்ப்பெயர்ச் சுழியி னிறைந்த கொப்பூ
ழுண்டென வுணரா வுயவு நடுவின்
வண்டிருப் பன்ன பல்கா ழல்கு
40 லிரும்பிடித் தடக்கையிற் செறிந்துதிரள் குறங்கிற்
பொருந்துமயி ரொழுகிய திருந்துதாட் கொப்ப

32. அரிமயிர் முன்கை: "அரிமயிர்த் திரண்முன்கை, வாலிழை மடமங்கையர்" புறநா. கக: 1-2.

33. காந்தள் மெல் விரல்: "முளிதயிர் பிசைந்த காந்தண் மெல் விரல்" குறுந். கசுஎ: 1.

34. உகிருக்குக் கிளிமூக்கு: "கிளிவா யன்ன வொளிவா யுகிரின்", "கிள்ளை வாயி னன்ன வள்ளுகிர்" பெருங். உ. 15: 76, ச. 7: 42.

36. "இடையீர் போகா விளமுலை யாளை" (தே. திருவோத்தூர், 2); "ஈர்க்கிடை போகா விளமுலை மாதர்" (திருவா. போற்றி. 34); "ஈர்க்கிடை புகாம லடிபரந் தோங்கு மேரிள வனமுலை" நைடதம், சுயம்வரப். 77.

35-6. சுணங்கணி யாகத்து.........முலை: "சுணங்கணி வனமுலை" கலி. சுo: 1.

37. "புனற்சுழி யலைத்துப் பொருந்திய கொப்பூழ்" பெருங். உ. 15: 68.

39. "வரியல்குல் வண்டிருப் பன்ன தகைத்து" யா. வி. சூ. 84, மேற். 'கல்வின் மேல்.'

"பாடுவண் டிருந்த வன்ன பல்கலை யகலல்குல்" (சீவக. 1996, ந.) என்பதற்கு இது மேற்கோள்.

40. யானைத்துதிக்கை மகளிர் துடைக்கு: "இரும்பிடித் தடக் கையிற் சேர்ந்துடன் றிரண்ட, குறங்கின்" (சிறுபாண். 19-20); "சிறுபிடித் தடக்கையிற் செறிவொடு புணர்ந்து, மென்மையி னியன்று செம்மைய வாகி, நண்புவீற் றிருந்த நலத்தகு குறங்கினள்" (பெருங். ரு. 5: 12-4); "கரிக்கைக் கவான்" (யா. கா. க-றை. 14); "மால் யானைக் கைபோலக், கொல்லத் திரண்ட குறங்கினாள்" விக்கிரம. உலா.

வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி
யரக்குருக் கன்ன செந்நில னொதுங்கலிற்
பரற்பகை யுழந்த நோயொடு சிவணி
45 மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்கு
ளன்பக லந்தி நடையிடை விலங்கலிற்
பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி
பாடின பாணிக் கேற்ப நாடொறுங்
களிறு வழங்கதர்க் கானத் தல்கி
50 யிலையின் மராஅத்த வெவ்வந் தாங்கி
வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கிற்
காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றைப்
பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாண்

---

42. "உயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ, வயங்கிழை யுலறி யவடி" (சிறுபாண். 17-8); "மதந்தபு ஞமலி நாவி னன்ன, துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடி" (மலைபடு. 42-3); "முயல்வேட் டெழுந்த முடுகுவிசைக் கதநாய், நன்னாப் புரையுஞ் சீறடி" (நற். உருஉ: 10-11); "நாய் நாச் சீறடி" (சீவக. 2694); "இளைப்புறு ஞமலி நலத்தகு நாவிற், செம்மையு மென்மையுஞ் சிறந்துவனப் பெய்தி........உறாஉஞ் சேவடி" (பெருங். உ. 19: 176 - 85); "வருந்துநாய் நாவி னணிகொள் சீறடி", "வருந்துநாய் நாவி னன்ன மலரடி" (கூர்ம. இராமன் வனம். 15, இராமன் வைகுந்த. 28) "வருந்து நாயினது நாவினை வாட்டித், திருந்து வெண்மையெழில் சேர்ந்த மலர்த்தாள்" இலிங்க. அம்பரீடனை. 37.

43. "அரக்குவிரித் தன்ன செந்நிலம்" (மலைபடு. 507); "அரக்கத் தன்ன நுண்மணற் கோடுகொண்டு" (பதிற். நO: 27); "அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழி" அகநா. கச: 1.

45. "அடுமரன் மொக்குளில்" (நற். உ௭அ: 2); "மரற்பல் பழம்போன்று கொப்புள்" சீவக. 2339.

44-5. இஃது இடத்திற்கு எற்ற உவமைக்கு மேற்கோள்; இ-வி. சூ. 639, உரை.

47. முருகு. 205 - ஆம் அடி உரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

செய்யுட்கண் பல தொகையும் விராய்வந்து ஒரு சொல் நடையவாதற்கு இது மேற்கோள்; தொல். எச்ச. சூ. 24, ந.

50-51. "கனையெரி நிகழ்ந்த யிலையி லங்காட், டுழைப்புறத் தன்ன புள்ளி நீழல், அசைஇய பொழுதில்" அகநா. ௩எக: 19-21.

முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
55 யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
கோடியர் தலைவ கொண்ட தறிந
வறியா மையி னெறிதிரிந் தொராஅ
தாற்றெதிர்ப் படுதலு நோற்றதன் பயனே
60 போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந
வாடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு
நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்
றெழுமதி வாழி யேழின் கிழவ
பழுமர முள்ளிய பறவையின் யானுமவ
65 னிழுமென் சும்மை யிடனுடை வரைப்பி

---

54. "முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்" (பெரும்பாண். 33; புறநா. ருகூ: 4); "முரசுமுழங்கு தானை யரசொடு வேண்டினும்" பெருங். ச. 13: 227.

தொல். களவி. சூ. 33, சே. ந. உரை. மேற்.

54-5. முரசடுத்தற்கு மேற்கோள்; தொல். புறத். சூ. 31, ந.

54-7. இவை சிறப்புப்பற்றி வந்த உவமத்திற்கு மேற்கோள்; தொல். உவம. சூ. 4, இளம். ந; இ-வி. சூ. 639.

59. "பொழுதெதிர்ந்த, புள்ளினிர் மன்ற வெற்றுக் குறுதலின்" மலைபடு. 65-6.

61. ஒருபொருட்பன்மொழிக்கு இவ்வடி மேற்கோள்; நன். சூ. 397, மயிலை; நன்-வி. சூ. 398.

64. "பழுமரந் தேரும் பறவை போல" (பெரும்பாண். 20); "பழந்தேர் வாழ்க்கைப் பறவை போல" (மதுரை. 576); "தாஅ வஞ்சிறை நொப்பறை வாவல், பழுமரம் படரும்" (குறுந். கஎஉ: 1-2); "யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன" (புறநா. கஎங: 3); "மாக்களாற், புட்பயில் பழுமரப் பொலிவிற்று", "பார் தெழு பழுமரப் பறவை" (சீவக. 93, 828); "மரஞ்சேர் பறவையுந், தொக்குட னீண்டிச் சூழ்ந்தன விடாஅ, பழுமரத் தீண்டிய பறவையி னெழூஉம்" (மணி. 14: 24-6); "கனிவளங் கவர்ந்து பதிவயிற் பெயரும், பனியிறை வாவற் படர்ச்சி யேய்ப்ப" (பெருங். உ. 8: 119-20); "பாய தொன்மரப் பறவைபோல்" திருவிளை. திருநகரப். 67.

னசையுநர்த் தடையா நன்பெரு வாயி
லிசையேன் புக்கென் னிடும்பை தீர
வெய்த்த மெய்யே னெய்யே னாகிப்
பைத்த பாம்பின் றுத்தி யேய்ப்பக்
70 கைக்கச டிருந்தவென் கண்ணகன் றடாரி
யிருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடிய
லொன்றியான் பெட்டா வளவையி னொன்றிய
கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி
75 வேளாண் வாயில் வேட்பக் கூறிக்
கண்ணிற் காண நண்ணுவழி யிரீஇப்
பருகு வன்ன வருகா நோக்கமோ

---

66. "பொருநர்க் காயினும் புலவர்க் காயினு, மருமறை நாவி னந்த ணர்க்காயினும்......அடையா வாயில்" (சிறுபாண். 203 - 6); "நசையு நர்க் கடையா நன்பெரு வாயில்" கூர்ம. சூரியன்மரபு. 13.

66 - 7. பி - ம். 'நசையுநர்க் கடையா.........இசையெனப் புக்கு' நன். சூ. 457, மயிலை; நன். வி. சூ. 458, மேற்.

68. நன். சூ. 451, மயிலை. மேற்.

69. பைத்த - சோபித்த வென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தக்க. 466. உரை.

72. "விளக்குறு வெள்ளி முளைத்துமுன் றோன்ற" (பெருங். க. 53 : 81); "வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று" திருப்பாவை, 13.

73. "ஒன்றியான் பெட்டா வளவை யன்றே" புறநா. ருகக : 29.

70 - 75. "வெள்ளி முளைத்த விடியல் வயல்யாமை, அள்ளகட் டன்ன வரிக்கிணை - வள்ளியோன், முன்கடை தட்டிப் பகடுவாழ் கென்னுமுன், என்கடை நீங்கிற் றிடர்" பு. வெ. 206.

76. "கண்ணிற் காண நண்ணுவழி யிருந்து" குறுந். உ0ரு : 3.

77. "பருகு வன்ன காத லுள்ளமொடு" (அகநா. ருகக : 4); "பருகு காதலிற் பாடி யாடினர்" (சீவக. 1765); "பருகு வன்ன நோக்க மொடு" (பெருங். ரு. 7 : 80); "பருகுவான் போல நோக்கும்", "பருகுவனள் போனோக்கி" (பாகவதம், ச: துருவன்பதம். 35; க0: சகடமுதைத்த. 21); "மலர்த்தடங் கண்ணே வாயாப் பருகுவான் போல நோக்கி" (கூர்ம. திருக்கல்யாண. 61); "பருகுவ னன்ன வார்வத்த னாகி" நன். சூ. 40.

"பருகுவார் போலினும்" (குறள். 811) என்பதற்கு இவ்வடி மேற்கோள்; பரிமேல்.

டுருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ
யீரும் பேனு மிருந்திறை கூடி
80 வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்
தரவுரி யன்ன வறுவை நல்கி
மழையென மருளு மகிழ்செய் மாடத்

---

79. பி - ம். 'இரீர்ந்திறை கூடி'

80. "தொன்றுபடு துளையொடு பருவிழை போகி" புறநா. நஎசு : 10.

81. "துன்னற் சிதாஅர் நீக்கி" (பொருந. 154); "சிதாஅருடுக்கை முதாரிப் பாண", "தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கி" புறநா. கநஅ : 5, நகந : 16.

80 - 81. "அரையது, வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅ, ரோம்பி" புறநா. சுக : 2 - 4.

79 - 81. "யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப, இழைவலந்த பஃறுன்னத், திடைப்புரைபற்றிப் பிணிவிடா, ஈர்க்குழாத்தோ டிறைகூர்ந்த, பேஎற் பகையென வொன்றென்கோ" புறநா. கநசு : 1 - 5.

82. பி - ம். 'நோக்குநுழை வேலா'

83. ஆடைக்குப் பாம்புரி : "பாப்புரி யன்ன மீக்கொ டாளை" (பெருங். க. 42 : 244) ; "அரவுரி.........துகிற்கொடி நிகர்ப்பன" (கம்ப. சித்திர. 4) ; "அரிவை துகிலெனகி மூல்கு லரவி, னுரிவை விடுபட மொத்தாள்" (குலோத். உலா) ; "குரவ மெல்லரும் பன்னவெங் கூரெயிற் றரவின், உரிவை யன்னவா னுண்டுகில்" (பாகவத. க௦. கோவியர்துகில். 9) ; "பாழிவா யரவி னுரிநிக ராடை" (இலிங்க. அம்பரீடனை. 56) ; "பையர வுரியி னன்ன நடைப்படாம்" திருவிளை. திருமண. 147.

82 - 3. நோக்கு நுழைகல்லா நுண்மைய......அறுவை : "கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை, வண்ண வறுவையர்" (மணி. உஅ : 53 - 4) ; "அணங்கு நுண்டுகில் - இழை தெரியாது வருந்தும் நுண்ணிய துகில்" (சீவக. 344, ந.) ; "கண்கொளாப் பட்டுடுத்தாள்" (சீவக. 2444) ; "நோக்குநுழை கல்லாச் செய்ய, அணங்கரவி னுரி யன்ன பட்டாடை யொடு" வாயுசங்கிதை, கிரியா. 13.

84. "மலையென மழையென மாட மோங்கி" (மலைபடு. 484); ந: "சேறுசெய் மாரியி னளிக்குநின், சாறுபடு திருவி னனைமகி ழானே" பதிற். சுடு : 16 - 7.

85 திழையணி வனப்பி னின்னகை மகளிர்
போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட
வார வுண்டு பேரஞர் போக்கிச்
செருக்கொடு நின்ற காலை மற்றவன்
90 றிருக்கிளர் கோயி லொருசிறைத் தங்கித்
தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅ
ததன்பய மெய்திய வளவை மான
வாறுசெல் வருத்த மகல நீக்கி
யனந்தர் நடுக்க மல்ல தியாவது
95 மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து
மாலை யன்னதோர் புன்மையுங் காலைக்
கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையுங்

---

85. "இழையணி சிறப்பிற் பழையோள் குழவி" முருகு. 259. இன்னகை மகளிர்: "இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (சிறுபாண். 220); "நகைத்துணை யாய மெதிர் கொள" பெருங். க. 48 : 70.

86 - 8. பகரவுகரம் இறந்தகால வினையெச்சமாக வருமென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். வினை. சூ. 31, ந; இ - வி. சூ. 246.

85 - 8. "இலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு, மகிழ்ந்தினி துறைமதி பெரும" (மதுரை. 779 - 81); "தண்கமழ் தேறல், பொன்செய் புனைகலத் தேந்தி நாளு, மொண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து" புறநா. கூ௬ : 18 - 20.

91 - 2. "இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேண......, உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்", "இறைவன் சொல்லெனு மின்னற வருந்தினர் யாரும்........, உறையும் விண்ணக ருடலொடு மெய்தின ரொத்தார்", "இம்மையே மறுமை தானு நல்கினை யிசையோ டென்றுள்" கம்ப. கடிமணப். 1, மந்திர. 75, உருக்காட்டு.71.

94. "துழந்தடு கள்ளின் றோப்பியுண் டயர்ந்து, பழஞ்செருக்குற்ற வனந்தர்ப் பாணியும்" (மணி. எ : 71 - 2); "அரிய லார்ந்த வனந்தர்" தணிகைப். நாடு. 100.

96 - 7. காலைக்கண்டோர் மருளும்......நிலை: "பண்டறி வாரா வுருவோடு" (புறநா. ௩எ௬ : 9); "நின்னை வருத லறிந்தனர் யாரே"

கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப
வல்லஞர் பொத்திய மனமகிழ் சிறப்பக்
100 கல்லா விளைஞர் சொல்லிக் காட்டக்
கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉ
யதன்முறை கழிப்பிய பின்றைப் பதனறிந்து
துராஅய்த் துற்றிய துருவையம் புழுக்கின்
பராஅரை வேவை பருகெனத் தண்டிக்
105 காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
யூழி னூழின் வாய்வெய் தொற்றி
யவையவை முனிகுவ மெனினே சுவைய
வேறுபல் லுருவின் விரகுதந் திரீஇ
மண்ணமை முழவின் பண்ணமை சீறியா
110 ழொண்ணுதல் விறலியர் பாணி தூங்க
மகிழ்ப்பதம் பன்னாட் கழிப்பி யொருநா
ளவிழ்ப்பதங் கொள்கென் றிரப்ப முகிழ்த்தகை
முரவை போகிய முரியா வரிசி
விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்
115 பரல்வறைக் கருனை காடியின் மிதப்ப
வயின்ற காலைப் பயின்றினி திருந்து

---

(ஷை. கஅ: 11) என்பதற்கு, 'நின்னை அறிவாரும் அறியாத தன்மையை யாவை' என்றெழுதிய விசேடவுரை இங்கே அறிதற்பாலது.

98. "கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப, நனவி னல்கியோ னசைசா லேரன்றல்", "கனவென மருள வல்லே நனவி, னல்கி யோனே நசைசா லேரன்றல்" புறநா. ௩௭௭ : 19 - 20, ௩௮௭ : 26 - 7.

101. "வம்மெனக் கூஉய்" மணி. கக : 98.

105. காழிற் சுட்ட கோழூன் : "காழ்க்கோத்த சூட்டென்கோ" யா. வி. மேற்.

107 - 8. "ஊனு மூனு முனையி னினிதெனப், பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவு, மளவுபு கலந்து மெல்லிது பருகி" புறநா. ௩௮௧ : 1 - 3.

115. 'பால்வறைக்கருனை' எனவும் படிப்பதுண்டு.

113 - 5. "முரவை போகிய முரிவில்வான் மூரல்பால் வறையல், கருனை" திருவிளை. குண்டோதரனுக்கு. 14.

கொல்லை யுழுகொழு வேய்ப்பப் பல்லே
யெல்லையு மிரவு மூன்றின்று மழுங்கி
யுயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாட்
120 செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக வல்லே
யகறி ரோவெம் மாயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு
125 துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையிற் றரத்தர யானு
மென்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண்
டின்மை தீர வந்தனென் வென்வே
130 லுருவப் பஃறே ரிளையோன் சிறுவன்

---

117 - 8. கொல்லை யுழுகொழு வேய்ப்ப......மழுங்கி: "தேமுரம் புழுவார் சாற்றிற் கொழுவெனத் தேய்ந்து" திருநூற். கவுற்சனச். 28.

121 - 2. "செல்வேஎ் நில்லவெஎ் தொல்பதிப் பெயர்ந்தென, மெல்லெனக் கூறி விடுப்பின்" மலைபடு. 567 - 8.

125. பி - ம். 'துடிபுரை யடிய.'

"துடியடிக்கயந்தலை" (கலி. கக: 8); "துடியடிக் குழவிய" புறநா. கூக: 26.

125 - 6. "இருபெயர்ப் பேராயமொ, டிலங்குமருப்பிற் களிறு கொடுத்தும்" மதுரை. 101 - 2.

126 - 7. யானை கொடுக்கப்படுதலைப் புறநானூறு, 129, 130, 131, 135,. 151, - ஆம் பாட்டுக்கள் முதலியவற்றானுணர்க; "குன்றுறழ் யானை நுழைந்து கொடுக்கச் சென்றோர் முகக்கும்" தந்தை. 149.

128. "என்னறி யளவையி னெண்ணுதல் கொண்ட" பெருங். i: 364.

129. பி - ம். 'வெல்வேல்'

119 - 29. பரிசிலன் யான் போகல் வேண்டுமெனக்கூறி, விடுத்த பின் தலைவன் தந்த வளனை உயர்த்துக் கூறியதற்கு இது மேற்கோள்; தொல். புறத். சூ. 36, ந.

130. 'உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும், அவன் மகனாகிய கரிகாற்பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட்கோடலும்' தொல். அகத். சூ. 30, ந.

முருகற் சீற்றத் துருகெழு குருசி
ருய்வயிற் றிருந்து தாய மெய்தி
யெய்யாத் தெவ்வ ரேவல் கேட்பச்
செய்யார் தேஎந் தெருமரல் கலிப்பப்
135 பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி
வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்குப்
பிறந்துதவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தநன்
னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப
வாளி நன்மா னணங்குடைக் குருளை
140 மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத்
தலைக்கொள் வேட்டங் களிறட் டாஅங்
கிரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலு

---

131. மு: "முருகற் சீற்றத் துருகெழு குருசில்" (புறநா. கக: 12); "முருகி னன்ன சீற்றத்து" அகநா. கஙஅ : 16.

132. "உருகெழு தாய மூழி னெய்தி" பட்டினப். 227.

134. உரிச்சொல் வகைக்கு மேற்கோள்; தொல். கிளவி. சூ. 1, கல்.

137. தவழ் கற்றல்: "கரியவன் றவழ்கற்றனன்" பாகவத. க0. சகடமுதைத்த. 11.

பி - ம். 'கற்றது தொட்டுஞ் சிறந்த'

140. "மீளி மொய்ம்பின்" பெருங். ௩ : ௯ : 44.

139 - 42. "ஆளி நன்மா னணங்குடை யொருத்தல், மீளி வேழத்து வெண்கோட்டுத் தொடர்த்தகை புலம்ப, வேர்தல் வெண்கோடு வாட்கிக் குருகுருந் தும்" (அகநா. ௩அக : 1 - 3. "வேண்டார் பெரியர் விறல்வேலோன் றனிளையன், பூண்டான் பொழில்காவ லென்றுரையா - மீண்டு, மருளன் மின் கோள்கருது மால்வரை யாளிக், குருளையுங் கொல்களிற்றின் கோடு" (பு. வெ. 245) என்பது இவ்வடிகளின் கருத்தோடு ஒப்பு நோக்கத்தக்கது.

சிங்கக்குருளை களிற்றையடல்: "சிங்கமொரு கன்றீனும், பாவனை போ லெழுதிப் பக்கத்தில் - ஓவியமாக், காரானை யொன்றெழுதிக் காட்டவரிக் கன்றுதுள்ளிப், போராடிப் பாய்ந்தகதை பொய்யலவே" விறலிவிடு. 203 - 4.

144. "அரவாய்க் கடிப்பகை" (மணி. எ : 73); "அரவிக ரிலை நிம்பத்தார்" திருவிளை. அன்னக்குழியும். 21.

145 மோங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
விருபெரு வேந்தரு மொருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்
றாணிழன் மருங்கி லணுகுபு குறுகித்
150 தொழுதுமுன் னிற்குவி ராயிற் பழுதின்
றீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கிநுங்
கையது கேளா வளவை யொய்யெனப்

---

145. "ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைய" சிலப். ௨௬ : 220.

147. பி - ம். 'வெண்ணிற் றாக்கிய'

148. "கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்" சிறுபாண். 65.

137 - 48. "மூலமுத றறந்த வன்றே மூரித்தா ளாளி யானைத், தலைநிலம் புரள வெண்கோ டுண்டதே போன்று தன்கைச், சிலையிடம் பிடித்த ஞான்றே தெவ்வரைச் செகுத்த நம்பி, நிலவுமிழ் குடையி னீழற் றுஞ்சுக வைய மென்பார்" சீவக. 2554.

149. பி - ம். 'மருங்கி னணுகுபு'

151. "ஆன்கணம், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர" (குறிஞ்சி. 217 - 8); "கறவை கன்றுவயிற் படர" (குறுந். ௧0அ : 2); "தாவா விருப்பொடு கன்றியாத் துழிச்செல்லு, மாபோற் படர்தக நாம்", "கறவைதம் பதிவயிற், கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர" (கலி. அ௧ : 36 - 7, ௧௧௯ : 9 - 10); "பதவுமேய லருந்து மதவுநடை நல்லான், வீங்குமாண் செருத்த தீம்பால் பிலிற்றக், கன்று பயிர் குரல மன்றுநிறை புகுதரும்", "மதவுநடைத், தாம்பசை குழவி வீங்குசுரை மடியக், கனையலங் குரல காற்பரி பயிற்றிப், படுமணி மிடற்ற பயநிரை யாயம்......... ஆங்க" (அகநா. ௧௪ : 9 - 11, ௫௪ : 6 - 11); "குவளை மேய்ந்த குடக்கட் சேதா, முலைபொழி தீம்பா லெழுதுக ளவிப்ப, கன்றுநினை குரல மன்றுவழிப் படர" (மணி. ரு : 130 - 32); "கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவா.); "கன்றுகாண் கறவையிற் சென்றவட் பொருந்தி", "தனிக்கன் றுள்ளிய புனிற்றாப் போல, விரைவிற் செல்லும் விருப்பின னாகி" (பெருங். ௨. 10 : 41, 18 : 10 - 11); "கன்றுகாண் கறவையிற் கசிந்து போற்றினுள்" பாகவதம், ௧0. திருவவதார. 58.

பி - ம். "போற்றுவனனோக்கி'

152. ஒய்யென : முல்லை. 83.

பி - ம். 'கையது கொள்ளா'

பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர் நீக்கித் தூய
155 கொட்டைக் கரைய பட்டுடை நல்கிப்
பெறலருங் கலத்திற் பெட்டாங் குண்கெனப்
பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர
வைகல் வைகல் கைகவி பருகி
எரியகைந் தன்ன வேடி றாமரை
160 சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கரின் மாலை

---

153. பி - ம். 'மாசொடு மிடைந்த'

154. பொருந. 81-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

153 - 4. "பாசி யன்ன சிதர்வை" பெரும்பாண். 468.

153 - 7. "என்னரை, முதுநீர்ப் பாசி யன்ன வுடைகளைந்து, திரு மல ரன்ன புதுமடிக் கொளீஇ, மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியும், அமிழ்தென மரபி னூன்றுவை யடிசில், வெள்ளி வெண்கலத் தூட்டல்", "ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி, வேர்புரை சிதாஅர் நீக்கி நேர் கரை, நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத், தேட்கடுப் பன்ன நாட் படு தேறல், கோண்மீ னன்ன பொலங்கலத் தளீஇ, ஊண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை, விருந்திறை நல்கி யோனே" புறநா. ௩௯0 : 13 - 8, ௩௯௨ : 13 - 9.

159. "எரியகைந் தன்ன தாமரை" அகநா. ௧0௬ : 1, ௧௧௬ : 1.

160. சுரியிரும்பித்தை : "சுரியிரும் பித்தை சூழ்ந்துபுறந் தாழ்ந்த, விரிபூ மாலை" மணி. ௨௨ : 149 - 50.

159 - 60. பாணன் பொற்பூச் சூடல் : "பாணர் தாமரை மலையவும்", "அழல்புரிந்த வடர்தாமரை, யைதடர்ந்த நூற்பெய்து, புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல், பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப், பாண்முற் றுகநின் னுண்மகி ழிருக்கை", "ஆடும் வண் டிமிராத் தாமரை, சூடா யாத லதனினு மிலையே", "ஒன்னார் யானை யோடைப் பொன்கொண்டு, பாணர் சென்னி பொலியத் தைஇ, வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்" (புறநா. ௧௨ : 1, ௨௧ : 1 - 5, ௬௧ : 20 - 21, ௧௨௬ : 1 - 3); "பூப்புனையு, நற்குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல்புலவீர்", "இன்றொடை நல்லிசை யாழ்ப்பாண வெம்மைப்போற், கன்றுடை வேழத்த கான்கடந்து - சென்றடையிற், காமரு சாயலாள் கேள்வன் கயமலராத், தாமரை சென்னி தரும்" (பு. வெ. 31, 216); "பாடினர்க்கு, வற்றாத மானத வாவியில் வாடாத, பொற்றா மரையே புனைகென்றான்" இராச. உலா.

வாலொளி முத்தமொடு பாடினி யணியக்
கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தே
ரூட்டுளை துயல்வர வோரி நுடங்கப்
165 பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்
காலி னேழடிப் பின்சென்று கோலின்
றுறுகளைந் தேறென் றேற்றி வீறுபெறு
பேர்யாழ் முறையுளிக் கழிப்பி நீர்வாய்த்

---

159-62. பாணன் பொற்றாமரை பெறுதலும் பாடினி மாலை முதலி யன பெறுதலும்: "ஆடுவண் டிமிரா வழலவிர் தாமரை, நீடிரும் பித்தை பொலியச் சூட்டி,.........புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன் னின், தொடையமை மாலை விறலியர் மலைய" (பெரும்பாண். 481-6); "தலைவன் றாமரை மலைய விறலியர், சீர்கெழு சிறப்பின் விளங்கிழை யணிய" (மலைபடு. 569-70); "பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி, யொண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டி" (பதிற். சஅ: 1-2); "மறம் பாடிய பாடினியும்மே, யேருடைய விழுக்கழஞ்சிற், சீருடைய விழை பெற்றிசினே, யிழைபெற்ற பாடினிக்குக், குரல்புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே, எனவாங், கொள்ளழல் புரிந்த தாமரை, வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே", "பாடினி மாலை யணிய, வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே", "வாடா மாலை பாடினி யணியப், பாணன் சென் னிக் கேணி பூவா, வெரிமரு டாமரைப் பெருமலர் தயங்க" புறநா. கக: 11-7, கஉக: 14-5, கசுச: 1-3.

163. "மருப்பிய வூர்தி" (பெருங். க. 38: 11); "கோட்டி னிற்புரி கொடுஞ்சியந்தேர்", "யானைக் கோட்டினி லியற்று திண் டேர்" பாகவத. க. தன்மபுத்திரனரசு. 18; ஷை. கo. திருவ வதார. 18.

ஐந்தாம் வேற்றுமை ஆக்கப்பொருளில் வந்ததற்கு இவ்வடி மேற் கோள் (தொல். வேற்றுமையியல், சூ. 17, ந.; இ. வி. சூ. 202, உரை); கருவிப் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; நன். 298, மயிலை.

165. "வளைகண் டன்ன வாலுளைப் புரவி, துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி" பெரும்பாண். 488-9.

"நால்குப் பண்ணினர் நால்வரு மேறினூர்" என்ற அடியுரையில் நால்கென்பதற்கு மேற்கோள்; சீவக. 1774, ந.

167. பி-ம். 'களைதந் தேறென் றேற்றி'

168. பி-ம். 'முறையுளி கழிப்பி'

*தண்பணை தழீஇய தளரா விருக்கை*
170 *நன்பல் லூர நாட்டொடு நன்பல்*
*வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை*
*வெருவரு செலவின் வெகுளி வேழந்*
*தரவிடைத் தங்கலோ விலனே வரவிடைப்*
*பெற்றவை பிறர்பிறர்க் கார்த்தித் தெற்றெனச்*
175 *செலவுக்கடைக் கூட்டுதி ராயிற் பலபுலந்து*
*நில்லா வுலகத்து நிலைமை தூக்கிச்*
*செல்கென விடுக்குவ னல்ல னொல்லெனத்*
*திரைபிறழிய விரும்பௌவத்துக்*
*கரைசூழ்ந்த வகன்கிடக்கை*
180 *மாமாவின் வயின்வயினெற்*
*றூழ்தாழைத் தண்டண்டலைக்*
*கூடுகெழீஇய குடிவயினாற்*

---

169. மு. "*தண்பணை தழீஇய தளரா விருக்கை*" சிறுபாண். 78; பெரும்பாண். 242.

"*தண்பணை தழீஇய, சயந்தியம் பெரும்பதி*" பெருங். உ. 10: 3-4.

172. பி-ம். '*வெருவருஞ் செலவின்*'

171-2. "*நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறை யறைந் தல்லது செல்லற்க*" (*கலி. ருசு: 32-3*); "*தெண்கணை முன்னர்க் களிற்றி னியலி*" (புறநா. எக: 3); "*பாகும் பறையும்........ அலவுற்று விளிப்ப*", "*பணையெழுந் தார்ப்ப, மாலை நெற்றி வான் பிறைக் கோட்டு, நீல யானை மேலோ ரின்றிக், காமர் செங்கை நீட்டி*" (மணி. ச: 41-2, கக: 18-21); "*பறைநிறை கொல்யானை*", "*அறை பறை யானை*" (முத்.); "*முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்க ளேத்த*" (தே. ஆரூர்.); "*பறைவன் களிற்று*" வி. பா. சூது போர். 225.

176. பி-ம். '*நிலைமை நூக்கி*'

மு. "*நில்லா வுலகத்து நிலைமை தூக்கி*" பெரும்பாண். 466.

180. பி-ம். '*வயின் வயினின்*'

181. *வெண்பாவுரிச்சீரால் தூங்கலோசை பிறந்ததற்கு இவ்வடி மேற்கோள்*; தொல். செய். சூ. 22, பேர்.

182. பி-ம். '*கூடு குழீஇய*'

செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை கவவுமுனையின்
185 மனைநொச்சி நிழலாங்க
ணீற்றியாமைதன் பார்ப்போம்பவு
மிளையோர் வண்ட லயரவு முதியோ
ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவு
முடக்காஞ்சிச் செம்மருதின்
190 மடக்கண்ண மயிலாலப்
பைம்பாகற் பழந்துணரிய
செஞ்சுளைய கனிமாந்தி
யறைக்கரும்பி னரிநெல்லி
னினக்களம ரிசைபெருக
195 வறளடும்பி னிவர்பகன்றைத்
தளிர்ப்புன்கின் றாழ்காவி
னனைஞாழலொடு மரங்குழீஇய
வவண்முனையி னகன்றுமாறி
யவிழ்தளவி னகன்றோன்றி
200 நகுமுல்லை யுகுதேறுவீப்
பொற்கொன்றை மணிக்காயா
நற்புறவி னடைமுனையிற்

183 - 4. காக்கை பலியை உண்ணல்: "வெண்ணெல் வெஞ்சோ, றொருகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி,.. ......விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே" (குறுந். உகo: 3-6); "வரக்கரைந்தா, லுணங்கலஞ் சாதுண்ண லாமொண் ணிணப்பலி யோக்குவன்மாக், குணங்களஞ் சாற்பொலி யுந்நல சேட்டைக் குலக்கொடியே" திருச்சிற். 235.

188. பி - ம். 'பகைமுரண் சொலவும்'

190 - 92. மயில் பாகற்பழத்தை யுண்ணல்: "பாக லார்கைப் பறைக்கட் பீலித், தோகை", "பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக், கான மஞ்ஞைக் கமஞ்சூன் மாப்பெடை, யயிரியாற் றடைகரை வயிரி னரலும்" அகநா. கா : 4 - 5, கஎஎ : 9 - 11.

"பாகல் - பலா ; ......... 'பைம்பாகற்.....மாந்தி' எனவுஞ் சொன்னார் பாட்டினும்" சிலப். கூ : 22 - 8, அடியார்.

201. மணிக்காயா : "மணியெனத் தேம்படு காயா" (ஐங். 420); "மணிபுரை யுருவின காயாவும்" கலி. கoக : 5.

202. பி - ம். 'முனையின்'

சுறவழங்கு மிரும்பௌவத்
திறவருந்திய வினைநாரை
205 பூம்புன்னைச் சினைச்சேப்பி
ஞோங்குதிரை யொலிவெரீஇத்
தீம்பெண்ணை மடற்சேப்பவுங்
கோட்டெங்கின் குலைவாழைக்
கொழுங்காந்தண் மலர்நாகத்துத்
210 துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்
தியாழ்வண்டின் கொளைக்கேற்பக்
கலவம்விரித்த மடமஞ்ஞை
நிலவெக்கர்ப் பலபெயரத்
தேனெய்யொடு கிழங்குமாறியோர்
215 மீனெய்யொடு நறவுமறுகவுந்
தீங்கரும்போ டவல்வகுத்தோர்
மான்குறையொடு மதுமறுகவுங்
குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்
னறும்பூங் கண்ணி குறவர் சூடக்
220 கானவர் மருதம் பாட வகவர்
நீனிற முல்லைப் பஃறிணை நுவலக்
கானக்கோழி கதிர்குத்த
மனைக்கோழி தினைக்கவர

---

210. "விரலூன்று படுக ணாகுளி கடுப்பக், குடிஞை யிரட்டு நெடுமலை" (மலைபடு. 140-41); "உருமிடி மகுளியிற் பொருடெரிந் திசைக்குங், கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்றம்" (அகநா. கக: 4-5); "கடுந்துடி, புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோ டிரட்டு மலை", "அத்தக் குடிஞைத் துடிமரு டீங்குரல்" புறநா. கஎ0 : 6-8, நஎ0 : 6.

213. மணலுக்கு நிலவு: "நிலவுக் கானல்" (மதுரை. 114); "நிலவடைந்த விருள்போல, வலையுணங்கு மணன்முன்றில்" (பட். 32-3); "நிலவுக் குவித்தன்ன மோட்டுமண லடைகரை", "நிலவுத் தவழ் மணற்கோடு" (நற். கடுக : 4, கசுரு : 5); "நிலவுக் குவித்தன்ன வெண்மண லொருசிறை", "நிலவுநிற வெண்மணல்" (குறுந். கஉரு : 2, ருஉ0 : 3); "நிலாவி னிலங்கு மணன்மலி மறுகில்" (அகநா. உ00 : 1); "நிலவுமணல் வியன்கானல்" (புறநா. கஎ : 11); "நிலா வெழுந்த வார்மண னீடி" திணைமாலை. 29.

வரைமந்தி கழிமூழ்கக்
225 கழிநாரை வரையிறுப்பத்
தண்வைப்பினு ணாடுகுழீஇ
மண்மருங்கினுன் மறுவின்றி
யொருகுடையா னென்றுகூறப்
பெரிதாண்ட பெருங்கேண்மை
230 யறனொடு புணர்ந்த திறனறி செங்கோ
லன்னோன் வாழி வென்வேற் குருசில்
மன்னர் நடுங்கத் தோன்றிப் பன்மா
ணெல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்
குல்லை கரியவுங் கோடெரி நைப்பவு
235 மருவி மாமலை நிழத்தவு மற்றக்
கருவி வானங் கடற்கோண் மறப்பவும்
பெருவற னாகிய பண்பில் காலையு
நறையு நரந்தமு மகிலு மாரமுந்
துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி
240 நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதொறும்
புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்
கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து
சூடுகோ டாகப் பிறக்கி நாடொறுங்
குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை

---

226. பி - ம். 'நாடு கெழீஇ'

231. பி - ம். 'வெல்வேற் குரிசில்'

234. "பரந்துபடு கூரெரி கான நைப்ப, மரந்தீ யுற்ற" நற். கஎஎ : 1 - 2.

236. கருவி வானம் : "கருவி வானங் கான்ற" சீவக. 725.

238 - 41. "நறுவீ நாகமு மகிலு மாரமுந், துறையாடு மகளிர்க் குத் தோட்புணை யாகிய, பொருபுன றரூஉம் போக்கரு மரபின்" சிறுபாண். 116 - 8.

"கொடுவாய்க்குயம் - கோடின வாயையுடைய அரிவாள் ; 'கூனி .........அரிந்து' என்றார் பொருநராற்றுப்படையினும்" சிலப். கஈ : 30, அடியார்.

243. "வயங்கொள்வார் சாலிச் சூடும் வளர்ந்துபோய் வானைச் சூடும்" திருவால. திருநக. 9.

244. "குடகாற் றெறிந்த குப்பை வடபாற், செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றும்" பெரும்பாண். 240 - 41.

245 கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்குஞ்
சாலி நெல்லின் சிறைகொள் வேலி
யாயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கு நாடுகிழ வோனே.

246-7. "வேலி யாயிரம் விளைகநின் வயலே" (புறநா. ௩௯௧: 21); "வாலி தாமுளை யொருபுறம் வளர்செறு வொருசார், பாலி னெல்லொரு சாரொரு சாரரிப் பறம்பு, சாலி வேலையோர் சாரிவை தலைமயக் குறலால், வேலி யாயிரம் விளையுளென் பதுமிதன் மேற்றே" சீகாழித். திருநகரப். 9.

தெரிநிலையுடன் கூடிய டகரவுகரம் தொழிலடியாக வந்ததற்கு மேற்கோள் (தொல். வினை. சூ. 24, ந.); "தாங்காவிளையுள் - நிலம் பொறாத விளைத்தல்; 'வேலி.........ஆக' என்றாராகலின். விளைத்த லென்பது விளையுளென மருவிற்று; புலிப்பாய்த்துள், தேரைப் பாய்த்து ளென்பன போல" சிலப். ௯: 30, அடியார்.

248. "காவிரி புரக்கு நாடுகிழ வோற்கென்று" (சிலப். உ௭: 171); "கங்கை புரக்கு நாடுகிழவோன்" பாகவதம், ௧0. 20 : 7.

248. நன். சூ. 182, மயிலை. மேற்; நன் - வி. சூ. 183, மேற்.

246 - 8. இ - வி. சூ. 102, மேற்.



## இதன்பொருள்.

1. அறாஅ யாணர் அகல் தலை பேர் ஊர் - இடையறாத செல்வ வருவாயினையுடைய அகன்ற இடத்தையுடைய பெரிய ஊர்களிடத்து,

2. சாறு கழி வழி நாள் சோறு நசை உறாது - விழாக்கழிந்த பின்னில் ஆண்டுப் பெறுகின்ற சோற்றை விரும்புதல் செய்யாது,

3. வேறு புலம் முன்னிய விரகு அறி பொருந - விழாக்கொண் டாடும் வேற்றுப்புலத்தைக் கருதிய [1] விரகையறிந்த பொருந,

இஃது அண்மைவிளி.

4. குளப்பு வழி அன்ன கவடு படு பத்தல்-மான் குளம்பு அழுத்திய இடத்தையொத்த இரண்டருகும் தாழ்ந்து நடுவுயர்ந்த பத்தலினையும்,

5. விளக்கு அழல் உருவின் விசி உறு பச்சை - விளக்கினது எரி கின்ற நிறத்தையுடைய விசித்துப் போர்த்தலுற்ற தோல்,

6. எய்யா இள சூல் செய்யோள் அ வயிறு - பிறரால் அறியப்படாத இளைய சூலையுடைய சிவந்த நிறத்தையுடையோளது அழகினையுடைய வயிற்றின்,

1 விரகு - உபாயம்; 'உபாயங்களாற் பண்ணுதலின் விரகென்றார்' பொருந. 107-8, ந.

செய்யோளென்றார், மயிரொழுங்கு விளங்கித் தோற்றுதற்கு.

7. [1] ஐது மயிர் ஒழுகிய தோற்றம்போல - ஐதாகிய மயிர் ஒழுங்கு படக் கிடந்த [2] தோற்றரவுபோல,

8. பொல்லம் பொத்திய பொதி உறு போர்வை - இரண்டு தலையும் கூட்டித்தைத்த மரத்தைப் பொதிதலுறும் போர்வையினையும்,

9-10. அளை வாழ் அலவன் கண் கண்டன்ன துளை வாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி - [3] முழையிலே வாழ்கின்ற ஞெண்டின்கண்ணைக் கண்டாலொத்த பத்தலிரண்டுஞ் சேர்த்தற்குத் திறந்த துளைகளின் வாய் மறைதற்குக் காரணமாகிய முடுக்குதலமைந்த ஆணியினையும்,

தோல் ஞெகிழாமல் முடுக்கின ஆணியென்று முரைப்பர்.

அன்ன ஆணி யென்க.

11-2. எண்ணாள் திங்கள் வடிவிற்று ஆகி அண்ணா இல்லா அமை வரு வறு வாய் - உவாவிற்கு எட்டாநாளில் திங்களின் வடிவை உடைத்தாய் உண்ணாக்கில்லாத பொருந்துதல் வந்த வறிய வாயினையும்,

13. பாம்பு அணந்தன்ன ஓங்கு இரு மருப்பின் - பாம்பு தலையெடுத்தாலொத்த ஓங்கின கரிய தண்டினையும்,

14. [4] மாயோள் முன்கை ஆய் தொடி கடுக்கும் திவவின் (15) - கரிய நிறத்தையுடையோளுடைய முன்கையில் அழகினையுடைய நேர்ந்த தொடியை யொக்கும் வார்க்கட்டினையும்,

15. கண்கூடு இருக்கை திண் பிணி திவவு - ஒன்றோடொன்று நெருங்கின இருப்பையுடைத்தாகிய திண்பிணிப்பினையுடைய திவவு.

இது நரம்பு துவக்கப்படுவது.

16-8. ஆய் தினை அரிசி அவையல் அன்ன வேய்வை போகிய விரல் உளர் நரம்பின் கேள்வி போகிய நீள் விசி தொடையல் - அழகினையுடைய தினையரிசியிற் குத்தலரிசியை ஒத்த குற்றம்போகிய விரலாலசைக்கும் நரம்பினையுடைய இசைமுற்றுப்பெற்ற நீண்ட விசித்தலையுடைய தொடர்ச்சியினையும்,

19. மணம் கமழ் மாதரை மண்ணி அன்ன காட்சி (20) - கலியாணஞ் செய்தமை தோற்றுகின்ற மாதரை [5] ஒப்பித்தாலொத்த அழகினையுமுடைய,

20. அணங்கு மெய் நின்ற அமை வரு காட்சி - [6] யாழிற்குரியதெய்வம் தன்னிடத்தேநின்ற இலக்கணம் அமைதல்வரும் அழகு.

---

1 ஐதாகிய - மெல்லியதாகிய; சிறுபாண். 13, உரை.

2 தோற்றரவு - தோன்றுதல்; பொருந. 55, உரை.

3 முழை - வளை.

4 "மாயோள் - கருநிறத்தையுடையாள்" தக்க. 101, உரை.

5 ஒப்பித்தாலொத்த - அலங்கரித்தாலொத்த.

6 யாழிற்குரிய தெய்வம் மாதங்கி; சீவக. 411, 550, ந.

21. ஆறு அலை கள்வர் படைவிட - வழியையலைக்கின்ற கள்வர் தம் கையிற் படைக்கலங்களைக் கைவிடும்படி,

21 - 2. அருளின் மாறு தலை பெயர்க்கும் மருவு இன் பாலை - அருளினது மாருகிய மறத்தினை அவர்களிடத்துநின்று பெயர்க்கும் மருவுதலினிய பாலையாழை,

பாலை : ஆகுபெயர்.

"கோடே பத்த ராணி நரம்பே, மாடக மெனவரும் வகையின தாகும்" என்றதனால் மாடகமொழிந்தன கூறினார்.

பத்தலினையும் (4), பொல்லம்பொத்திய (8) பச்சையாகிய (5) போர்வையினையும் (8), ஆணியினையும் (10), வறுவாயினையும் (12), மருப்பினையும் (13), வார்க்கட்டினையும் (15), நரம்பின்றொடர்ச்சியினையும் (18), காட்சியினையும் (20) உடைய பாலையாழெனை முடிக்க.

"கொன்றை கருங்காலி குமிழ்முருக்குத் தணக்கே" என்பதனால் கோட்டிற்கு மரம் கொன்றையும் கருங்காலியுமாம்; பத்தற்கு மரம் குமிழும், முருக்கும், தணக்குமாம்.

23. [1] வாரியும் - நரம்புகளைக் கூடத் தழுவியும்,

[2] வடித்தும் - உருவியும்,

[3] உந்தியும் - தெறித்தும்,

[4] உறழ்ந்தும் - ஒன்றைவிட்டு ஒன்றைத்தெறித்தும்,

வடித்தல் - நரம்பெறிதலென்று முரைப்பர்.

24. சீர் உடை நல் மொழி நீரொடு சிதறி - சீரையுடைத்தாகிய [5] தேவபாணிகளை நீர்மையுடன் பரக்கப்பாடி,

---

1 "வார்தலென்றது சுட்டுவிரற் செய்தொழில்" சிலப். எ. கட்டுரை, 12, அரும்பத.

2 "வடித்தலென்றது சுட்டுவிரலும் பெருவிரலுங்கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்" ஷை. ஷை. ஷை.

3 "உந்தலென்றது நரம்புகளை உந்தி வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டதும் நிரலிழிபட்டது மென்றறிதல்" ஷை. ஷை. ஷை.

4 "உறழ்தலென்றது ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் ஆராய்தல்" ஷை. ஷை. ஷை.

5 தேவபாணியென்பது தேவர்ப்பரவலென்றும், அது பெருந்தேவபாணி சிறுதேவபாணியென இருவகைப்படுமென்றும், அவை முத்தமிழ்க்கும் பொதுவென்றும், இசைத்தமிழில் வருங்கால் செந்துறை முதலிய இசைப்பாக்கள் பத்தின் பாற்படுமென்றும் கூறுவர்; சிலப். கூ: 35, அடியார்.

1 சீரெனவே பாணியும் தூக்கும் உளவாயின.

25. அறல் போல் கூந்தல் - ஆற்றறல்போலும் கூந்தலினையும்,

பிறை போல் திரு நுதல் - பிறைபோல அழகினையுடைய நுதலினையும்,

26. கொலை வில் புருவத்து - கொலைத்தொழிலையுடைய விற்போலும் புருவத்தினையும்,

கொழு கடை மழை கண் - அழகிய கடையினையுடைய குளிர்ச்சியையுடைய கண்ணினையும்,

27. இலவு இதழ் புரையும் இன் மொழி துவர் வாய் - இலவினது இதழையொக்கும் இனிய சொல்லையுடைய செம்மையுடைத்தாகிய வாயினையும்,

28. பல உறு முத்தின் பழி தீர் வெள் பல் - பலவுஞ்சேர்ந்த முத்துக்கள் போற் குற்றந்தீர்ந்த வெள்ளிய பல்லினையும்,

பலமுத்தென்றார், ஒருகோவையாயிருத்தலின்; இனிப் பலவிலையுற்ற முத்தென்றுமாம்.

29-30. [மயிர்குறை கருவி மாண்கடை யன்ன, பூங்குழை யூசற் பொறைசால் காதின் :]

மயிர் குறை கருவி மாண் கடை அன்ன (29) காதின்(30) - மயிரை வெட்டுகின்ற கத்தரிகையினுடைய மாட்சிமைப்பட்டகுழைச்சையொத்த காதினையும்,

பூ குழை 2 ஊசல் பொறை சால் காது (30) - பொலிவினையுடைய மகரக்குழையினுடைய அசைவினைப் பொறுத்தலமைந்த காது.

31. நாண் அட சாய்ந்த நலம் கிளர் எருத்தின் - நாணம் வருத்தலாற் பிறரை நோக்காது கவிழ்ந்த நன்மை விளங்குகின்ற கழுத்தினையும்,

32. ஆடு அமை பணை தோள் - அசைகின்ற மூங்கில்போலும் பெருத்தலையுடைய தோளினையும்,

அரி மயிர் முன்கை - 3 ஐம்மைமயிரினையுடைய முன்கையினையும்,

33. நெடுவரை மிசைய காந்தள் மெல் விரல் - நெடிய மலையின் உச்சியிடத்தனவாகிய காந்தள்போலும் மெல்லிதாகிய விரலினையும்,

34. கிளி வாய் ஒப்பின் ஒளி விடு வள் உகிர் - கிளியினது வாயோடு ஒப்பினையுடைய ஒளிவிடுகின்ற பெருமையையுடைத்தாகிய உகிரினையும்,

---

1 சீர் முதலியவை தாளவிசேடங்கள் ; சீர், முடியுங்காலத்தைத் தன்னிடத்தே உடையது ; பாணி, எடுக்குங் காலத்தைத் தன்னிடத்தே உடையது ; தூக்கு, நிகழுங் காலத்தைத் தன்னிடத்தே உடையது ; கலி. கடவுள். ந.

2 ஊசல் - அசைவு ; "ஊசலாடும் - அசைகின்ற" சீவக. 68, ந.

3 "ஐதுமயிரொழுகிய" பொருந. 7.

35. அணங்கு என உருத்த சுணங்கு அணி ஆகத்து முலை (36) - பிறர்க்கு வருத்தமெனத் தோற்றின சுணங்கணிந்த மார்பிடத்து முலையினையும்,

36. ஈர்க்கு இடை போகா ஏர் இள வனம் முலை - ஈர்க்கும் நடுவே போகாத எழுச்சியையுடைய இளைய அழகினையுடைய முலை.

37. நீர் பெயர் சுழியின் நிறைந்த கொப்பூழ் - நீரிடத்துப் பெயர் தலையுடைய சுழிபோல உத்தம இலக்கணங்கள் நிறைந்த கொப்பூழினையும்,

38. உண்டென உணரா உயவும் நடுவின் - உண்டென்று பிற ருணரப்படாத வருந்துமிடையினையும்,

உயவினென்று பாடமாயின், வருந்துதலையுடையவென்க.

39. வண்டு இருப்பு அன்ன [1] பல் காழ் அல்குல் - பல வண்டினங் களின் இருப்பையொத்த பல மணிகோத்த வடங்களையுடைய மேகலை யணிந்த அல்குலையும்,

காழ் : ஆகுபெயர்.

40. இரு பிடி தட கையின் செறிந்து திரள் குறங்கின் - பெரிய பிடியினுடைய பெருமையையுடைய கைபோல ஒழுகவந்து மெல்லி தாகத் தம்மில் நெருங்கி ஒன்றித்திரண்ட [2] குறங்கினையும்,

41. பொருந்து மயிர் ஒழுங்கிய திருந்து தாட்கு ஒப்ப-கணைக்காற்கு இலக்கணமென்றற்குப் பொருந்தின மயிர் ஒழுங்குபட்ட ஏனையிலக் கணங்கள் திருந்தின கணைக்காலுக்குப் பொருந்த,

42. [வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி :]

வருந்து நாய் நாவின் சிறு அடி - ஓடியிளைத்த நாயினது நாப்போலச் சிறிய அடியினையும்,

41 - 2. தாட்கு ஒப்ப பெரு தகு அடி - தாளுக்குப் பொருந்தப் பெருமை தக்கிருக்கும் அடி யென்க.

[3] பெருவென்னு முதனிலை பெருமையையுணர்த்தி நின்றது.

43. அரக்கு உருக்கு அன்ன செ நிலன் ஒதுங்கலின் - சாதிலிங் கத்தை உருக்கின தன்மையையொத்த செய்யநிலத்தே நடக்கையினாலே,

44. பரல் பகை உழந்த நோயொடு சிவணி - சுக்கான்கல்லாகிய பகையாலே வருந்தின நோயோடே பொருந்தி,

---

[1] முருகு. 16, உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

[2] குறங்கு - துடை.

[3] " கருவார் பொழில் " (தே. பிரமபுரம்), " கருக்கொள் சோலை " (தே. ஆரூர்) என்பவற்றில், கருவென்னும் முதனிலை கருமையையுணர்த்தி நிற்றமை காண்க.

45. மரல் பழுத்தன்ன மறுகு நீர் மொக்குள் - மரல் பழுத்தாற் போன்ற துளும்புநீரையுடைய கொப்புளம்,

46. 1 நல் பகல் அந்தி நடை இடை விலங்கலின் - நன்றாகிய உச்சிக்காலமான சந்தியிலே நடத்தலை நடுவே தவிர்தலாலே,

47. பெடை மயில் உருவின் பெரு தகு பாடினி - பெடைமயிலருகுநின்ற மயில்போலும் சாயலினையுமுடைய கல்விப்பெருமை தக்கிருக்கின்ற பாடினி,

கூந்தலினையும் நுதலினையும் (25) புருவத்தினையும் கண்ணினையும் (26) வாயினையும் (27) பல்லினையும் (28) காதினையும் (30) எருத்தினையும் (31) தோளினையும் கையினையும் (32) விரலினையும் (33) உகிரினையும் (34) முலையினையும் (36) கொப்பூழினையும் (37) நடுவினையும் (38) அல்குலினையும் (39) குறங்கினையும் (40) சீறடியினையும் (42) உருவினையுமுடைய பாடினியென்க.

இங்ஙனம் சீறடியுங்கூட்டி எண்ணுக்கால் தலைமுதல் அடியீறின்றாகக் கூறிற்றும்.

48. பாடின பாணிக்கு ஏற்ப - பாடின தாளத்திற்குப் பொருந்த,

48 - 9. நாள் தொறும் களிறு வழங்கு அதர் கானத்து அல்கி - நாடோறும் யானையுலாவரும் வழியையுடைய காட்டிடத்தே தங்கி,

50 - 51. [இலையின் மராத்த வெவ்வந் தாங்கி, வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கின் :]

இலை இல் மராத்த வலை வலந்தன்ன மெல் நிழல் மருங்கில் - இலையில்லாத 2 மராத்திடத்தனவாகிய வலையை மேலே கட்டினாலொத்த மெல்லிய நிழலினிடத்தே,

எவ்வம் தாங்கி - கொப்புளால் (45) வந்த வருத்தந்தாங்கி,

இனி, ஞாயிற்றின் வெம்மையால் தனக்குவந்த எவ்வத்தைத்தாங்கி இலையில்லாத மராமரமெனா மராமரத்தின்மேல் ஏற்றுதலுமாம்.

52. காடு உறை கடவுள் கடன் கழிப்பிய பின்றை - காட்டின் கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச் செய்யும் முறைமைகளைச் செய்து விட்டபின்பு,

பொருந (3), பாடினி (47) செந்நிலனொதுங்கலின் (43) அவளடிகள் (42) பரற்பகை யுழந்த நோயொடுசிவணித் (44) தம்மிடத்தே கொண்ட மொக்குளால் (45) தனக்கு வந்த வருத்தத்தைத் தாங்கித் (50) தான் நடையைத்தவிர்தலாலே (46) கானத்தின் (49) மென்னிழன் மருங்கில் (51) தங்கிப் (49) பாலையாழை (22) வாரியும் வடித்தும் உந்தி

1 நன்பகல் - உச்சிக்காலம் ; கலி. எச : 10, ந; பு. வெ. 39, உரை.
2 மரா - மராமரம் ; மலைபடு. 395 ; இது சுள்ளியெனவும் வழங்கும் குறிஞ்சி. 66, ந.

யும் உறழ்ந்தும் (23) வாசித்து, பாடின பாணிக்கேற்பச் (48) சீருடை நன்மொழி நீரொடுசிதறிக் (24) காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றையென முடிக்க.

கடன்கழித்தல் - தடாரியை வாசித்தல்.

53 - 4. பீடு கெழு திருவின் பெரு பெயர் நோன் தாள் முரசு முழங்கு தானை 1 மூவரும்கூடி - பெருமை பொருந்தின செல்வத்தையும் பெரிய பெயர்களையும் வலியையுடைய முயற்சியையும் வெற்றிமுரசு முழங்கும் படையினையுமுடைய சேர சோழபாண்டியர் தம்மிற் பகைமை நீங்கிச் சேர்ந்து,

55. அரசு அவை இருந்த தோற்றம் போல - செல்வக்குறை பாடின்றி அரசிருத்தற்குரிய அவையாகவிருந்த தோற்றரவுபோல,

தோற்றம்போல இன்மைதீரவந்தனென் (129) என மேலேகூட்டுக.

இனி, அரசவையிருந்த தோற்றம்போல வலிவும் மெலிவும் சமனு மாகப் பாடுதலைப் பற்றியவென்று பாட்டின் மேலேற்றிப் பொருள் கூறின், குலமும் செல்வமும் வீரமுமுதலியவற்றால் தம்மில் ஒத்தாரை உவமித்தலின், அவர்க்கும் வலிவும் மெலிவும் சமனுமென்னுங் குணங் கள் எய்துமாதலின், அங்ஙனங்கூறல் பொருந்தாமையுணர்க; அன்றியும் பயனே ஈண்டு உவமை யென்று உணர்க.

இனிப்பாட்டு 2 நிருத்த கீதவாச்சியத்தை யுடைமையின், அரசரோடு உவமித்தாரென்பாருமுளர்.

56 - 7. பாடல் பற்றிய பயன் உடை எழாஅல் கோடியர் தலைவ - மிடற்றுப்பாடலைத் தொடங்கி யெழுந்திருந்த பயன்களைத் தன்னிடத்தே யுடைத்தாகிய யாழையுடைய கூத்தர்க்குத் தலைவனே,

இவன் 3 போர்க்களம்பாடும் பொருநனாதலானும், கூத்தரில் இவ னிற் சிறந்த கூத்தர் இன்மையானும் இங்ஙனம் கூறினார்.

57. கொண்டது அறிந - பிறர் மனத்துக்கொண்டதனைக் குறிப் பால் அறியவல்லாய்,

---

1 மூவரென்பது சேர சோழபாண்டியர்களைக் குறிக்கும் தொகைக் குறிப்புச் சொல்லாகத் தொன்று தொட்டு வழங்கப்படும்; "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" தொல். செய். சூ. 79.

2 இவை மூன்றும் 'கொட்டாட்டுப்பாட்டு' எனத் தமிழில் வழங் கப்பெறும்; "கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானை", "கொட்டாட்டுப் பாட்டொலியோவாத்துறையூர்" (தே.); "கொட்டாட்டுப் பூசாந்தும்" தக்க. 114, உரை.

3 'பொருநரும் ஏர்க்களம்பாடுநரும் போர்க்களம் பாடுநரும் பரணி பாடுநருமெனப் பலராம்' தொல். புறத்திணை. சூ. 36, ந.

58. அறியாமையின் நெறி திரிந்து ஒராஅது - வழியறியாமையினாலே இவ்வழியைத் தப்பி வேறொரு வழியிற் போகாதே,

59. ஆறு எதிர் படுதலும் நோற்றதன் பயனே - இவ்வழியிலே என்னைக் காண்டலும் நீ முற்பிறப்பிற்செய்த நல்வினைப்பயன்,

60. [போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந:] புகழ் மேம்படுந போற்றி கேண்மதி - புறத்தார்புகழை அரசவைகளிலே மேம்படுத்தவல்லாய், யான்கூறுகின்றவற்றை விரும்பிக்கேட்பாயாக;

61-2. ஆடு பசி உழந்த நின் இரு பேர் ஒக்கலொடு நீடு பசி ஒராஅல் வேண்டின் - அடுகின்ற பசியாலேவருந்தின நின்னுடைய கரியபெரிய சுற்றத்தோடே [1] தொன்று தொட்டு வந்த பசி நின்னைக்கைவிடுதல் விரும்புவையாயின்,

62-3. நீடு இன்று எழுமதி - நீட்டித்தலின்றி எழுந்திருப்பாயாக; வாழி - நீவாழ்வாயாக;

63. எழின் கிழவ - குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரமென்னும் நரம்பு எழின்கண்ணும் உரிமையுடையாய்,

64. [பழுமர முள்ளிய பறவையின் யானும்:]
யானும் பழுமரம் உள்ளிய [2] பறவையின் - செல்வமெய்திய யானும் முன்பு பழுத்தமரத்தை நினைத்துச் செல்கின்ற புட்போல,

64-5. அவன் இழுமென் சும்மை இடன் உடை வரைப்பின் - அவனுடைய இழுமென்றெழும் ஓசையினையுடைய அகலமுடைத்தாகிய மதிலில்,

66. நசையுநர் தடையா நல் பெரு வாயில் - நச்சிவந்தார்க்குத் தடையில்லாத நன்றாகிய பெரிய கோபுரவாயிலின் கண்ணே,

67. இசையேன் புக்கு - வாயிலோனுக்குக் கூறாமற்புகுந்து,
என் இடும்பை தீர - என்னுடைய மிடிதீர்தல் காரணமாக,

68. எய்த்த மெய்யேன் எய்யேனாகி - [3] முன்பு இளைத்த உடம்பையுடைய யான் அவ்வாயிற்குள்ளே சென்ற உவகையாலே பின்பு இளைப்புத்தீர்ந்து,

69-70. பைத்த பாம்பின் துத்தி எய்ப்ப கை கசடு இருந்த என் கண் அகல் தடாரி - படம்விரித்த பாம்பினது பொறியையொப்பக் கையினது வடுப்பட்டுக்கிடந்த எனது கண்ணகன்ற உடுக்கையிற் றோற்றுவித்த,

---

[1] "பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு" பெரும்பாண். 25.

[2] பறவை - வௌவால்.

[3] "வெள்வே லண்ணற் காணா வூங்கே, நின்னினும் புல்லியே மன்னே யினியே, இன்னே மாயினே மன்னே" புறநா. கசக: 7-9.

71 - 3. 1 [இருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர், வெள்ளி முளைத்த நள்ளிருள் விடிய, லொன்றியான் பெட்டா வளவையின் :]

இரு சீர் பாணிக்கு ஏற்ப ஒன்று யான் பெட்டா அளவையின் - இரட்டைத் தாளத்திற்குப் பொருந்த ஒருபாட்டினை யான் பேணிப் பாடு வதற்கு முன்னே,

விரி கதிர் வெள்ளி முளைத்த நள் இருள் விடியல் - விரிகின்ற கிர ணங்களையுடைய வெள்ளியெழுந்த செறிந்த இருளையுடைய விடியற் காலத்தே,

73 - 4. ஒன்றிய கேளிர் போல கேள் கொளல் வேண்டி - முன்பே தன்னோடு பொருந்திய நட்டாரைப்போல என்னுடன் உறவுகொள்ளு தலை விரும்பி,

75. வேளாண் வாயில் வேட்ப கூறி - தான் உபகரித்தற்கு வழி யாகிய 2 இரப்பினையே யான் எப்பொழுதும் விரும்பும்படி உபசாரங் களைக்கூறி,

76. கண்ணில் காண நண்ணு வழி இரீஇ - தன் கண்ணிலே காணும்படி தனக்கு அண்ணிதான இடத்திலே என்னை இருத்தி,

77. பருகு அன்ன அருகா நோக்கமோடு - தன்னைக் கண்ணாற் பருகுந் தன்மையையொத்த கெடாத பார்வையாலே,

78. [உருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ :] என்பு உருகு பவைபோல் குளிர்கொளீஇ - என்பை, உருகும் மெழுகு முதலியனபோல் நெகிழும்படி குளிர்ச்சியைக் கொளுத்தி,

நோக்கத்தாலே (77) கொளுத்தியென்க.

79. ஈரும் பேனும் இருந்து இறைகூடி - ஈரும்பேனும் கூடி யிருந்து அரசாண்டு,

80 - 81. [வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர் துவர நீக்கி :]

வேரொடு நனைந்து வேறு இழை நுழைந்த துன்னல் சிதாஅர் நீக்கி - வேர்ப்பாலே நனைந்து சரடுகள் உள்ளே ஓடுதற்குக் காரண மாகிய தைத்தற்றொழிலையுடையனவாகிய சீரையை என்னிடத்தினின் றும் போக்கி,

---

1 பொருநர் விடியற்காலத்தே சென்று தடாரி கொட்டிப் பாடுதலும் கேட்ட உபகாரிகள் அப்பொருநர்க்கு வேண்டியவற்றை அளித்தலும் பண்டைக்கால வழக்கம் ; பு. வெ. 206.

2 "இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பின், அவர்பழி தம்பழி யன்று", "கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின், றிரப்புமோ ரேஎ ருடைத்து", "இரத்தலு மீதலே போலுங் கரத்தல், கனவிலுந் தேற்றாதார் மாட்டு" குறள், 1051, 1053 - 4.

82 - 3. நோக்கு நுழைகல்லா நுண்மைய பூ கனிந்து அரவு உரி அன்ன அறுவை துவர (81) நல்கி - கண்ணிற்பார்வை இஃது இழை போன வழியென்று குறித்துப்பார்க்கவாராத நுண்மையையுடையவாய்ப் [1] பூத்தொழில் முற்றுப்பெற்ற தன்மையாற் பாம்பினது தோலையொத்த துகிலை மிகநல்கி,

துவரவென்பதனை இதனோடு கூட்டுக.

84 - 5. [மழையென மருளும் மகிழ்செய் மாடத், திழையணி வனப்பி னின்னகை மகளிர் :]

இழை அணி வனப்பின் இன் நகை மகளிர் - இழைகளையணிந்த அழகினையுடைய பாட்டாலும் கூத்தாலும் வார்த்தையாலும் அரசனுக்கு இனிய மகிழ்ச்சியைச் செய்யுமகளிர்,

இதனை, "இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (220) என்றார், சிறுபாணாற்றிலும்.

84 - 7. [போக்கில் பொலங்கல நிறையப் பல்கால், வாக்குபு தரத்தர :]

84 - 7. மருள் செய்யும் மகிழ் மழையென மாடத்து பல்கால் வாக்குபு - உண்டார் மயங்குதலைச் செய்யுங் கள்ளை மழையென்னும்படி மாடத்திடத்தே பல்காலும் வார்த்து,

மகிழ் : ஆகுபெயர்.

86 - 7. போக்கு இல் பொலங்கலம் நிறைய தர தர - ஓட்டமற்ற பொன்னாற் செய்த வட்டில்நிறையத் தரத்தர,

87 - 8. வருத்தம் வீட ஆர உண்டு பெரு அஞர் போக்கி - வழிபோன வருத்தம் போம்படி நிறையவுண்டு கள்ளுண்ணப்பெறுகிலே மென்று நெஞ்சிற் கிடந்த பெரிய வருத்தத்தையும் போக்கி,

89. செருக்கொடு நின்ற காலை - மகிழ்ச்சியுடனே நான் நின்ற அந்திக் காலத்தே,

89 - 90. மற்று அவன் திரு கிளர் கோயில் ஒருசிறை தங்கி - இங்ஙனம் மிடிதீர்ந்த பின்பு அவனுடைய செல்வம் விளங்குகின்ற கோயிலில் ஒருபக்கத்தே கிடந்து,

அவனைச் சேவித்து நிற்கின்ற நங்குலத்திலுள்ள மகளிர் (85) பொலங்கல நிறைய (86) மகிழை (84) வார்த்துத் தரத்தர (87) உண்டு போக்கிக் (88) கோயிலில் ஒருசிறைத் தங்கியென முடிக்க.

91 - 2. தவம் செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது அதன் பயம் எய்திய அளவை மான - மிக்க தவத்தைச் செய்கின்ற மாக்கள் தம்

[1] 35-ஆம்பக்கம் 6-ஆவது அடிக் குறிப்பைப் பார்க்க.

முடைய தவஞ்செய்த உடம்பைப் 1 போகடாதேயிருந்து அத்தவத்தாற் பெறும் பயனைப்பெற்ற தன்மையையொப்ப,

2 மக்களென்னுது மாக்களென்றார், வீடுபேறு குறியாது செல்வத்தைக் குறித்தலின்,

93. ஆறு செல் வருத்தம் அகல நீக்கி - வழிபோன வருத்தத்தை என்னிடத்துச் சிறிதும் நில்லாமற்போக்கி,

94 - 5. [அனந்தர் நடுக்க மல்ல தியாவது, மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து :]

அனந்தர் நடுக்கம் அல்லது மனம் கவல்பு யாவதும் இன்றி எழுந்து - கள்ளின் செருக்காலுண்டான மெய்ந்நடுக்கமல்லது வேறுமனக்கவற்சி சிறிதுமின்றித் துயிலுணர்ந்து,

கவல்பு, கவற்சியெனப் பெயராய் நின்றது.

96. மாலை அன்னதோர் புன்மையும் - யான் அவனைக் காண்பதற்கு முன்னுளின் மாலைக்காலத்தில் என்னிடத்தில் நின்ற சொல்லிற்கெட்டாத மிடியையும்,

3 அன்னது : நெஞ்சறிசுட்டு.

---

1 போகடலென்பது பண்டைக்கால வழக்கு; அஃது இப்போது போடலென வழங்கும்; "மத்த ளந்தான், விண்டெ வெறிந்து போகட்டோடினன் விரைந்து வீரன்" பிரபு. மாயைகோலா. 39.

2 "மாவு மாக்களு மையறி வினவே", "மக்க டாமே யாறறி வுயிரே" (தொல். மரபு. சூ. ௩உ, ௩௩) என்பவையும், "பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள்" (முல்லை. 55) என்பதில் மாக்களென்பதற்கு அறிவில்லாதோரென்றும், "மடக்குறு மாக்களோடு" (கலி. அஉ : 9) என்பதற்கு, 'மடப்பத்தையுடைய சிறிய அறிவில்லாத மகளிரோடே' என்றும், "மூவறு பாடை மாக்கள்" (சீவக. 93) என்பதன் விசேட வுரையில், 'மிலேச்சராதலின் ஐயறிவிற்குரிய மாக்களென்னும் பெயராற் கூறினர்' என்றும், "கோயின்மாக்கள்" (சீவக. 1278) என்பதில், 'மக்கட்குரிய மனனின்றி அறிவு கெட்டமையின், ஐயறிவுடையாரென்று மாக்களென்றார்' என்றும் நச்சினார்க்கினியர் எழுதிய உரைகளும், "மக்கட் பதடியெனல்" (குறள். 196) என்புழி, 'அறிவென்னும் உள்ளீடின்மையின் மக்கட்பதடி யென்றார்' என்று பரிமேலழகர் எழுதிய விசேட வுரையும் இங்கே கோடற்குரியன.

3 "உண்டுவைத் தனைய நீயும்" (சீவக. 271) என்பதில், 'அனைய, நெஞ்சறி பொருண்மேற்று' என்பர் ந.; "ஆடரவக் கிண்கிணிக் காலன்னுளோர் சேடனை" (தே. திருநா. ஆரூர்) என்பதில் அன்னுளென்பதும் இத்தகையதே.

96-7. காலை கண்டோர் மருளும் வண்டு சூழ் நிலையும் மாழாந்து (95) - அவனைக்கண்ட மற்றை நாட்காலத்தில் என்னைக் கண்டவர் நெருநல் வந்தவனல்லனென்று மருளுதற்குக் காரணமான வண்டுகள் இடையறாது மொய்க்கின்ற தன்மையையும் யான் கண்டு மயங்கி,

மாழாந்தென்பதனை இதனோடு கூட்டுக.

பல நறுநாற்றங்களும் தானுடைமையின், வண்டுசூழ் நிலையென்றான்.

98. கனவு என மருண்ட என் நெஞ்சு ஏமாப்ப - இது கனவாயிருக்குமென்று கலங்கிய என்னுடைய நெஞ்சு நனவென்று துணிய,

99. வல் அஞர் பொத்திய மனம் மகிழ் சிறப்ப - வலிய மிடியானுண்டாகிய வருத்தம் பொதிந்த கூட்டத்தார் மனம் மகிழ்ச்சி மிக,

100. கல்லா இளைஞர் சொல்லி காட்ட - அவற்குரிய புகழ்களைத் தாங்கள் முற்றக்கற்று என்பின்னின்ற இளையவர் அவற்றைச் சொல்லிக்காட்ட,

கல்லாவென்பது செய்யாவென்னுமெச்சம்.

இனித் தத்தம் சிறுதொழிலன்றி வேறொன்றுங்கல்லாத இளைஞர் நெருநல்வந்தவன் இவனென்று அரசனுக்குச் சொல்லிக்காட்ட வென்றுமாம்; என்றது, இவன் வேறுபாடு 1 கூறிற்றும்.

101. கதுமென கரைந்து வம்மென கூஉய் - அதுகேட்டு அவர்களைக் கடுக அழைத்துவாருமென்று வாயிலோர்க்குக் கூறி யாங்கள் சென்றபின் தான் அணுகவாருமென்று அழைக்கையினாலே,

2 "ஏனோருந் தம்மென" என்புழித் தம்மென்பது தாருமென நின்றாற்போல வம்மென்பது வாருமென்னும் பொருட்டாய்நின்றது.

102. அதன் முறை கழிப்பிய பின்றை - அக்காட்சியிடத்துச் செய்யும் முறைமைகளை யாங்கள் செய்து முடித்தபின்பு,

பதன் அறிந்து - காலமறிந்து,

103-4. துராஅய் துற்றிய துருவை அம் புழுக்கின் பராஅரை வேவை பருகு என தண்டி - அறுகம்புல்லாற்றிரித்த பழுதையைத்தின்ற செம்மறிக்கிடாயினது அழகினையுடைய புழுக்கினதிற் பரிய மேற்குறங்கு நெகிழவெந்ததனை விழுங்கென்று 3 பலகாலலைத்து,

105-6. [காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை, யூழி னூழின் வாய்வெய் தொற்றி :] காழின் கொழு ஊன் சுட்ட கொழுகுறை

1 "காலைக் கண்டோர் மருளும் வண்டு சூழ்நிலை" (பொருந. 96-7) என்றதைக் காண்க.

2 மதுரைக்காஞ்சி, 747.

3 "உண்ணீருண் ணீரென் றுபசரியார் தம்மனையி, லுண்ணாமை கோடி பெறும்" (தனிப்.) என்பது இங்கே நினைவிற்கு வருகின்றது.

வெய்து வாய் ஊழின் ஊழின் ஒற்றி - இருப்பு நாராசத்தே கொழுத்த இறைச்சிகளைக் கோத்துச் சுட்ட கொழுவிய பெரிய தசைகளின் வெம்மையை வாயிடத்தே இடத்தினும் வலத்தினும் சேர்த்தி ஆற்றித் தின்று,

107. அவை அவை முனிகுவம் எனினே - புழுக்கின இறைச்சியையும் சுட்டிறைச்சியையும் யாங்கள் இனிவேண்டேமென்கையினாலே,

107 - 8. சுவைய் வேறு பல் உருவின் விரகு தந்து இரீஇ - இனிமையுடையவாய் வெவ்வேறாகிய பலவடிவினையுடைய 1 பண்ணியாரங் கொண்டுவந்து அவற்றைத் தின்னும்படி எங்களையிருத்தி,

உபாயங்களாற் பண்ணுதலின், விரகென்றார் ; ஆகுபெயர்.

109 - 10. [மண்ணமை முழவின் பண்ணமை சீறியா, ழொண்ணுதல் விறலியர் பாணி தூங்க :] பண் அமை சிறு யாழ் ஒள் நுதல் விறலியர் மண் அமை முழவின் பாணி தூங்க - பண் குறைவற்ற சிறிய யாழையுடைய ஒள்ளிய நுதலினையுடைய 2 விறல்படப் பாடியாடுவோர் மார்ச்சனையமைந்த முழவினது தாளத்திற்கு ஆடும்படி,

111. மகிழ் பதம் பல் நாள் கழிப்பி - மகிழ்ச்சியையுடைய கள்ளுண்டலிலே பலநாள் போக்கி,

இனி, பதம் காலமுமாம்.

111 - 2. ஒருநாள் அவிழ் பதம் கொள்க என்று இரப்ப - ஒருநாள் சோறாகிய உணவையும் கொள்வாயாகவென்று வேண்டிக்கொள்கையினாலே,

112 - 4. முகிழ் தகை முரவை போகிய முரியா அரிசி விரலென நிமிர்ந்த நிரல் அமை புழுக்கல் - முல்லைமுகையின் தகைமையினையுடைய வரியற்ற இடைமுரியாத அரிசி விரலென்னும்படி நெடுகின ஒன்றோடொன்று சேராத சோற்றையும்,

பழுத்த அரிசியை ஆக்கினமைதோன்ற நிரலமை புழுக்கலென்றார்.

115 - 6. பரல் வறை கருனை 3காடியின் மிதப்ப அயின்ற காலை - பரலைப் பொரித்து அதனோடேகூட்டிய பொரிக்கறிகளையும் கழுத்திடத்தே வந்து நிரம்பும்படி விழுங்கினகாலத்தே,

இனி, காடியைப் புளிங்கறியாக்கிப் புளிங்கறியோடே நிரம்ப விழுங்கின காலையென்றுமுரைப்பர்.

116. பயின்று இனிது இருந்து - அவனைவிடாதே இனிதாக விருந்து,

---

1 பி-ம். ‘ பண்ணிகாரம் ’

2 விறலை வடநூலார் சத்துவமென்பர்.

3 காடி கழுத்தென்பதை, “ காடியிழந்து கவந்தமதாய் ” (**கந்த. சூரபன்மன்வதை.** 136) என்பதனானுமுணர்க.

117-8. [கொல்லை யுழுகொழு வேய்ப்பப் பல்லே, யெல்லையு மிரவு மூன்றின்று மழுங்கி:] பல்லே கொல்லை உழு கொழு ஏய்ப்ப எல்லையும் இரவும் ஊன் தின்று மழுங்கி - எம்முடைய பற்கள் கொல்லைநிலத்தே யுழுத கொழுவை யொப்பப்பகலும் இரவும் இறைச்சியைத்தின்று முனைமழுங்கி,

119. உயிர்ப்ப இடம் பெறாஅது ஊண் முனிந்து - இளைப்பாற இடம் பெறாதே இவ்வுணவுகளை வெறுத்து,

முற்கூறியனவெல்லாம் உண்டற்றொழிற்கு உரிமையுடைமையின், ஊண் முனிந்தென்றார்.

119-22. [ஒருநாட், செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய, செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென, மெல்லெனக் கிளந்தன மாக :]

செயிர்த்து எழு தெவ்வர் திறை துறை போகிய செல்வ - குற்றத்தைச் செய்தெழுந்த பகைவரைத் திறைகொள்ளும் கூறுபாடுகளெல்லாம் முடியப்போன செல்வா,

பெயர்ந்து எம் தொல் பதி சேறும் என மெல்லென ஒருநாள் கிளந்தனமாக - இனி மீண்டு எம்முடைய பழைய ஊரிடத்தே செல்வேமென்று மெத்தென ஒருநாளிலே சொன்னேமாக,

தொல்பதியென்றார், இதுவும் தமக்குப்பதியென்பது தோன்ற.

122-4. [வல்லே, யகறிரோவெம் மாயம் விட்டெனச், சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு :] சிரறியவன்போல் செயிர்த்த நோக்கமொடு எம் ஆயம் விட்டு வல்லே அகறிரோ என - அதுகேட்டுக் கோபித்தான்போல எமக்கு வருத்தத்தைச் செய்த பார்வையுடனே எம் திரளைக்கைவிட்டு விரைந்து போகின்றீரோவெனச் சொல்லி,

125-6. [துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு, பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென:]

1 பிடி புணர் வேழம் அடி துடி அன்ன தூங்கு நடை குழவியொடு கொள்க என - பிடியொடு புணர்ந்தகளிறுகளைத் தம் அடிகள் 2 துடியின் கண்ணை யொத்த அசைந்த நடையினையுடைய கன்றுகளுடனே கைக்கொள்வாயாக வென்று சொல்லி,

127. [தன்னறி யளவையிற் றரத்தர :] பெட்டவை (126) தன் அறி அளவையில் தர தர - பின்னும் தான் விரும்பியிருந்த ஊர்திகள் ஆடைகள் அணிகலங்கள் முதலியவற்றைத் தான் அறிந்த அளவாலே மேன்மேலேதர,

---

1 பரிசிலர்க்குக்களிற்றோடு கன்றையும் பிடியையும் வழங்குதல் பண்டைக்கால வழக்கம்; "மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு கறையடி யானை யிரியல் போக்கும், மலைகெழு நாடன் மாவே ளாஅய்" புறநா. கங௯ : 11-3. 2 துடி - உடுக்கை.

127 - 8. யானும் என் அறி அளவையின் வேண்டுவ முகந்து கொண்டு - யானும் என்னுடைய குறைகளை யானறிந்த அளவாலே வேண்டுவனவற்றை வாரிக்கொண்டு,

129. இன்மை தீர வந்தனென் - மிடி எக்காலமும் இல்லையாம்படி வந்தேன் ;

யானும் அவன் (64) வரைப்பின் (65) வாயிற்கண்ணே (66) புக்கு என் இடும்பைதீர்தல் காரணமாக (67) எய்யேனுகி (68) விடியற்காலத்தே (72) ஒன்று யான்பெட்டா அளவையிற் (73) கொளல்வேண்டிக் (74) கூறி (75) இருத்தி (76) நோக்கத்தாலே (77) குளிர்கொளுத்திச் (78) சிதார்நீக்கித் துவர (81) நல்கி (83) மகளிர் (85) மகிழை (84) வார்த்துத்தரத்தர (87) உண்டுபோக்கி (88) நின்றகாலைத் (89) தங்கி (90) நீக்கி (93) எழுந்து (95) ஏமாப்பச் (98) சொல்லிக்காட்டக் (100) கூவுகையினுலே (101) கழிப்பிய பின்றைத் (102) தண்டி (104) ஒற்றி (106) வேண்டேமென்கையினுலே (107) இரீஇத் (108) தூங்கக் (110) கழிப்பி (111) இரப்ப (112) அயின்றகாலத்திலே இருந்து (116) மழுங்கி (118) முனிந்து (119) சேறுமென (121) ஒருநாட் (119) கிளந்தனமாக (122) அகறிரோவெனச் சொல்லித் (123) தரத்தர யானும் (127) தவஞ்செய்மாக்கள் (91) அதன் பயமெய்திய அளவைமான (92) வேண்டுவ முகந்துகொண்டு (128) அரசவையிருந்ததோற்றம்போல (55) இன்மைதீர வந்தனெனென வினைமுடிக்க.

129 - 30. வென் வேல் உருவம் பல் தேர் இளையோன் சிறுவன் - வென்ற வேலினையுடைய அழகினையுடைய பலதேரினையுடைய இளஞ்சேட்சென்னியுடைய புதல்வன்,

வென்ற வேற்புதல்வன்.

131. முருகன் சீற்றத்து உருகெழு குருசில் - முருகனது சீற்றம் போலும் சீற்றத்தையுடைய உட்குதல்பொருந்திய தலைவன்,

132. தாய் வயிற்று இருந்து தாயம் எய்தி பிறந்து (137) - தாயுடைய வயிற்றிலேயிருந்து அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்து,

1 தான் பிறக்கின்ற காலத்துப் பிறவாதே நல்லமுகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினுலே அரசவுரிமையைப் பெற்றுப் பிறந்தென்றூர்.

133. எய்யா தெவ்வர் ஏவல் கேட்ப - முன்பு தன்வலியறியாத பகைவர் பின்பு தன்வலியினையறிந்து ஏவின தொழிலைச் செய்ய,

---

1 **கோச்செங்கட்சோழநும்** பிறக்கின்ற காலத்துப் பிறவாது நல்ல முகூர்த்தம் வருமளவும் தாயினுடைய வயிற்றிலேயிருந்து பிறந்தாரென்றும், அக்காரணத்தால் அவர் சிவந்த கண்ணையுடையராயினுரென்றும் கூறுவர் ; இத்தகையோரை, " கருவிலே திருவுடையவர் " என்பர்.

134. *செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப* - ஏவல்செய்யாத பகைவர் தேசம் மனக்கவற்சி பெருக,

135-6. 1 [*பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி, வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்கு*:] *வெ வெ செல்வன் பௌவம் மீமிசை பகல் கதிர் பரப்பி விசும்பு படர்ந்தாங்கு* - வெம்மையையுடைய 2 எல்லாரும் விரும்பப்படும் இளஞாயிறு கடலின்மீதே பகற்பொழுதைச் செய்யுங் கிரணங்களைப் பரப்பிப் பின்னர் விசும்பிலே மெத்தெனச் சென்றாற்போல,

137. [*பிறந்துதவழ் கற்றதற் றொட்டு*:]

*தவழ் கற்றதன் தொட்டு* - தவழ்தலைக் கற்றநாள் தொடங்கி,

*பிறந்து*, முன்னேகூட்டிற்று.

137-40. [*சிறந்தநன், னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப, வாளி நன்மா னணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி*:]

*மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி* (140) - 3 கூற்றுவனுடைய வலியிற்காட்டில் மிகுகின்றவலியாலே கலித்து,

*செல்வன் விசும்புபடர்ந்தாங்குத்* (136) *தவழ்கற்றதற்றொட்டு* (137) *மிகுகின்றவலி* (140) *யென்க*.

இவன் பின்பு அரசாட்சி பெற்றானாதலின், *தவழ்கற்றதற்றொட்டு நாடுசெகிற் கொண்டானென்றல் பொருந்தாமையுணர்க*.

*சிறந்த நல்* (137) *நாடு செகில் கொண்டு நாள் தொறும் வளர்ப்ப* (138) - ஏனையோர் நாட்டிற்சிறந்த நன்னாட்டைத் தோளிலே வைத்துக் கொண்டு நாடோறும் வளர்த்தல் காரணமாக,

தோள்வலியாலே பகைவென்று நாடுகாத்தமைபற்றி, *நாடுசெகிற் கொண்டென்றார்*.

141. [*முலைக்கோள் விடாஅ மாத்திரை*:] *ஆளி நல் மான் அணங்கு உடை குருளை* (139) *முலை கோள் விடாஅ மாத்திரை* - ஆளியாகிய நல்ல

1 "பொருகடற் பருதி போலப் பொன்னனான் பிறந்த போழ்தே, மருளுடை மாத ருற்ற மம்மர்நோய் மறைந்த தன்றே" (சீவக. 304) என்பதும், 'ஞாயிறு தோற்றத்தில் இருளைப் போக்கிப் பின் மதியத்தைக் கெடுக்குமாறு போல, இவனும் பிறந்தபொழுதே தேவியிருளைப் போக்கிப் பின்பு பகைவெல்லுமென்பது கருத்து' (ந.) என்ற அதன் விசேடவுரைப்பகுதியும் இங்கே கோடற்குரியன.

2 "வெம்புஞ் சுடரிற் சுடருந்திரு மூர்த்தி" சீவக. 2.

3 "தோற்ற நிகர்ப்போ ரின்றி யாற்றல், காலனோ டொக்கு ஞாலப் பெரும்புகழ், புகரின் றோங்கிய நிகரில் கேள்வியன்" பெருங். ௪. 36 : 100 - 102.

மானினது வருத்துதலையுடைய குருளை முலையையுண்டலைக் கைவிடாத இளைய பருவத்தே,

யாளியை ஆளியென்றார், 1 "கடிசொ லில்லை" என்பதனான். 2 "நாயே பன்றி" என்னும் சூத்திரத்து, 'ஆயுங்காலை' என்பதனாற் குருளையென்பது முடித்தாம்.

141. ஞரேரொன - கடுக,

142. தலை கோள் வேட்டம் களிறு அட்டாங்கு - முற்பட இரையைக் கோடற்குக் காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற் போல,

143. 3 இரு பனம்போந்தை தோடும் - கரிய பனங்குருத்தில் அலர்ந்த வலப்பக்கத்து ஓலையும்,

4 "தோடே மடலே" என்னுஞ் சூத்திரத்து, 'பிறவும்' என்றதனாற் போந்தை முடித்தாம். அதனிடத்தினின்றும் போந்ததனாற் போந்தையென்றார்; "இரும்பனைக் கொண்டு கடைகழுமிய வடங்கு சிறை வலனகலத்து" என்றார் பிறரும்.

143 - 4. [கருஞ்சினை, யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்:] கரு சினை வேம்பின் அரம் வாய் அம் குழை தெரியலும் - கரியகொம்பினையுடைய வேம்பினுடைய 5 வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிராற்செய்த மாலையும்,

145 - 6. ஓங்கு இரு சென்னி மேம்பட மிலைந்த இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய - நறிய மாலைகளில் மேலாதற்குக் காரணமான பெரியதலையிலே ஏனையோர்சூடும் அடையாளப்பூக்களிற் சிறப்ப அவற்றைச்சூடிய சேரனும் பாண்டியனும் ஒருகளத்தே படும்படி,

147 - 8. 6 வெண்ணி தாக்கிய வெரு வரு நோன் தாள் கண் ஆர்

---

1 தொல். எச்சவியல், சூ. 56. 2 தொல். மரபியல், சூ. 8.

3 "மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ", "வட்கர் போகிய வளரிளம் போந்தை, உச்சிக் கொண்ட வூசிவெண் டோடு......விரைஇ" (புறநா. உஉ : 21, ௧00 : 3 - 5) ; "வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன்......சூட்டி" சிலப். உ௫ : 146 - 7. 4 தொல். மரபியல், சூ. 86.

5 வாளரம் - ஒருவகை அரம் ; "வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த" (அகநா. உ௪ : 1); "வாளரந் துடைத்த வைவேல்" சீவக. 461.

6 கரிகாற் பெருவளத்தான் வெண்ணிப் பறந்தலையிற் பொருதமை, "கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப், பொருதுபுண் ணாணிய சேர லாதன்", "காய்சின முன்பிற் பெரும்பெயர்க் கரிகால், ஆர்கலி நறவின் வெண்ணி வாயிற், சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின், இமிழிசை முரசம் பொருகளத் தொழியப், பதினொரு வேளிரொடு வேந்தர் சாய, மொய்வலி யறுத்த ஞான்றை" (அகநா. ௫௫ : 10 - 11, உ௪௬ : 8 - 13) என்பவற்றால் அறியலாகும்.

கண்ணி கரிகால் வளவன் - 1 வெண்ணி யென்கின்ற ஊரிடத்தேபொருத அச்சந்தோன்றுகின்ற வலியையுடைய முயற்சியையும் 2 கண்ணுக்கு அழகுநிறைந்த ஆத்திமாலையினையுமுடைய கரிகாற்சோழன்,

3 "முச்சக் கரமும்" என்னுங் கவியானே கரிகாலாதலுணர்க.

தாயமெய்திப் (132) பிறந்து (137) மிகுவலிசெருக்கித் (140) தெவ்வர் ஏவல் கேட்பச் (133) செய்யார் தேஎம் தெருமரல்கலிப்ப (134) நாடு செகிற்கொண்டு நாடொறும் வளர்த்தல் காரணமாகக் (138) குருளை (139) களிறட்டாங்கு (142) இருபெரு வேந்தரும் அவியத் (146) தாக்கிய (147) கரிகால்வளவனென முடிக்க.

149 - 50. [தாணிழன் மருங்கி லணுகுபு குறுகித், தொழுது :] 4 நிழல் மருங்கில் தாள் அணுகுபு குறுகி தொழுது - அருளைத் தன்னிடத் திலேயுடைய திருவடிகளை அண்ணிதாக நின்றுசேர்ந்து வணங்கி,

150. முன் நிற்குவிராயின் - நும்முடைய வறுமைதோன்ற முன்னே நிற்பீராயின்,

150 - 51. [பழுதின், றீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கி :] ஈற்று ஆ விருப்பின் பழுதின்று போற்றுபு நோக்கி - ஈற்றுத்தொழிலையுடைய பசு தனது கன்றுக்குப் பால்சுரந்து கொடுக்கவேண்டுமென்னும் விருப்பம்போல நும்மிடத்து நிற்கின்ற மிடி இன்றாம்படி பேணிப்பார்த்து,

151 - 2. நும் கையது கேளா அளவை - நும்மிடத்துள்ள கலையைத் தான் கேட்பதற்கு முன்னே,

152. 5 ஒய்யென - கடுக,

153 - 4. பாசி வேரின் மாசொடு குறைந்த துன்னல் சிதாஅர் நீக்கி - கொட்டைப் பாசியினது வேர்போலே அழுக்கோடே குறைந்த தையலையுடைய துணிகளைப்போக்கி,

154 - 5. தூய 6 கொட்டை கரைய பட்டு உடை நல்கி - தூயவாகிய திரள முடிந்த முடிகளைக் கரையிலேயுடைய பட்டாகிய உடைகளைத் தந்து,

---

1 பி - ம். 'வெண்ணில்'

2 "கண்ணார்ந்த நலத்தாரை - கண்ணுக்கு நிறைந்த நலத்தையுடைய மகளிரை" கலி. ௬௦ : 5, ந.

3 இக்கவியைப் பொருநராற்றுப்படை உரையின்இறுதியிற் காண்க.

4 நிழல் - அருள் ; "புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கை" (பட். 204) என்ற அடியின் உரையில் நிழலென்பதற்கு அருளென்றே பொருளெழுதுவர் ; ந.

5 "ஒய்யென-விரைய" முல்லை. 83, ந; கலி. ௩௭ : 18, ந.

6 "கொட்டையம் புரோசை - தலையில் மணிமுடியையுடைய புரோசைக்கயிற்றை" சீவக. 1835, ந.

கொட்டை - தும்புமாம்.

156. பெறல் அரு கலத்தின் பெட்டாங்கு உண்க என - பெறுதற் கரிய பொற்கலத்தே விரும்பினபடியே உண்பாயாகவென்று சொல்லி,

157-8. [பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர, வைகல் வைகல் கைகவி பருகி:] பூ கமழ் கை கவி தேறல் வாக்குபு தர தர வைகல் வைகல் பருகி - 1 தீம் பூ நாறுகின்ற தன்கடுமையாற் சிறிதமையுமென்று 2 கைகவித்தற்குக் காரணமான கட்டெளிவை மேன்மேலே வார்த்துத் தரத்தர நாடோறும் நாடோறும் பருகி,

3 "தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" என்றார் பிறரும்.

159. எரி அகைந்தன்ன எடு இல் தாமரை - நெருப்புத் தழைத்தா லொத்த ஒருவன் செய்ததன்றித் தனக்கென இதழில்லாத தாமரையை,

எனவே பொற்றாமரைக்கு வெளிப்படை கூறினர். 4 "தோடே மடலே" என்னுஞ் சூத்திரத்தே கூறினும்.

160. சுரி இரு பித்தை பொலிய சூட்டி - கடைகுழன்ற கரிய மயி ரிலே பொலிவுபெறச் சூட்டி,

161-2. நூலின் வலவா நுணங்கு அரில் மாலை வால் ஒளி முத்த மொடு பாடினி அணிய - நூலாற்கட்டாத நுண்மையையும் பிணக்கத் தையு முடைய பொன்னரிமாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முத் தத்தோடே பாடினி சூட,

163. கோட்டின் செய்த கொடுஞ்சி நெடு தேர் - யானைக்கொம் பாற்செய்த தாமரை முகையினையுடைய நெடிய தேரிலே,

164. ஊட்டு உளை துயல்வர ஓரி நுடங்க - சாதிலிங்கம் ஊட்டின தலையாட்டம் பொங்கக் கழுத்தின் மயிரசைய,

165. பால் புரை புரவி நால்கு உடன் பூட்டி - பாலையொத்த நிறத் தினையுடைய குதிரைகள் நான்கினைச் சேரப்பூட்டி,

நான்கு, நால்கெனப் பெயர்த்திரிசொல்.

166. காலின் ஏழடி பின்சென்று - தான் காலாலே ஏழடி பின்னே வந்து,

5 ஏழடிவருதல் ஒருமரபு; ஏழிசைக்கும் வழிபாடுசெய்தானைக் கருதுதலின்.

---

1 தீம்பூ - பஞ்சவாசத்துள் ஒன்றான குங்குமப்பூ.

2 'கைகவி நறுநெய் - கைகவித்தற்குக் காரணமான நெய்' சீவக. 400, ந.

3 புறநா. நகஉ: 16. 4 தொல். மரபியல், சூ. 86.

5 "ஒன்பதின் சாணடப்பினும்" (சீவக. 179) என்றதன் விசேட வுரையில், 'ஏழடியென்றல் மரபாயிருக்க, ஒருகாதமென்னுமெழுத்து நோக்கி, ஒன்பதின் சாணென்றாரேனும் அடியிடுமளவில் ஏழாம்' (ந.)

1 "செலவினும் வரவினும்" என்னும் சூத்திரத்துப் பொதுவிதியாற் சென்றென்பது வந்தென்னும் பொருட்டாய்நின்றது.

166-7. [கோலின், ருறு களைந்து :] இன் தாறு கோல் களைந்து - செலுத்துதற்கு இனிதாகிய செலவு முடுக்குங்கோலைப் போக்கி,

என்றதனாற் கடுவிசைக்கு இவர் இருத்தலாற்றாரென்று கருதி இயற்கையிற்சேறல் அமையுமென்றான்.

167. ஏறு என்று ஏற்றி - இங்ஙனம் ஏறென்று ஏறவிட்டு,

167-8. வீறு பெறு பெரு யாழ் முறையுளி கழிப்பி - 2 ஏனையாழ்களின் வீறுபெற்ற யாழ்ப்பாணர்க்குக் கொடுக்கு முறைமைகளை நினக்குத் தந்துவிட்டு,

168-70. நீர் வாய் தண் பணை தழீஇய தளரா இருக்கை நல் பல் ஊர நாட்டொடு - நீரை எப்பொழுதும் தன்னிடத்தேயுடைத்தாகிய தண்ணிய மருத நிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப்பினையுடைய நன்றான பல ஊர்களையுடைய நாடுகளுடனே,

170-72. [நன்பல், வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம் :]

பறை வெரூஉ நுவலும் (171) வேழம் (172) - பறை எல்லார்க்கும் அச்சத்தைச் சாற்றுதற்குக் காரணமாகிய யானை,

பரூஉ பெரு தட கை (171) வெரு வரு செலவின் வெகுளி (172) நல் பல் (170) வேழம் (172) - பருத்த பெரிய வளைவினையுடைய கையினையும் அச்சந்தோன்றும் ஓட்டத்தினையும் கோபத்தினையுமுடைய நன்றாகிய பலயானைகள்,

173. தரவு இடை தங்கல் ஓவிலன் - தருதற்றொழிலிடத்தே நிலைபெறுதலை ஒழிதலிலன் ;

இனித் தரலிடத்துத் தாழ்த்தலிலனென்றுமாம்.

173-4. வரவிடை பெற்றவை பிறர்பிறர்க்கு ஆர்த்தி - வருதலிடத்துப் பெற்றபொருள்களைப் பிறர்க்குப்பிறர்க்குக் கொடுத்து,

174-5. தெற்றென செலவு கடைக்கூட்டுதிர் ஆயின் - கடுக அவ்விடத்து நின்றும் போகின்றபோக்கை முடிவுபோக்குவீராயின்,

175. பல புலந்து - அதுபொறாமற் பலகாலும் வெறுத்து,

176. நில்லா உலகத்து நிலைமை தூக்கி - செல்வமும் யாக்கையு முதலியன நிலைநில்லாத உலகத்துப் புகழைச் சீர்தூக்கிப் பார்த்து,

---

என்றெழுதியிருப்பதும், "எழுமேழடி யூக்கி நடந்து செலா" (சீவக. 1384), "ஏழடி யெழுத லாற்றா தாயினும்" (பெருங். க. 53 : 132) என்பவையும் இம்மரபைப் புலப்படுத்தும்.

1 தொல். கிளவியாக்கம், சூ. 28.

2 ஏனையாழ்களென்றது பாலையாழொழிந்தவற்றை.

1 நிலைபெறுந் தகைமையுடைத்தாகலிற் புகழை நிலைமையென்றார்; ஆகுபெயர்.

177. செல்க என - இங்ஙனம் போகெனக்கூறி,

விடுக்குவன் அல்லன் - நும்மைக் கடுக விடுவானல்லன்;

தொழுது முன்னிற்குவிராயின் (150) நோக்கி (151) நல்கிப் (155) பாடினி அணியாநிற்கச் (162) சூட்டி (160) வாக்குபு தரத்தரப் (157) பருகித் (158) தெற்றெனச் (174) செலவுகடைக்கூட்டுதிராயின் அதற்குப் பலபுலந்து (175) தேரிலே (163) குதிரையைப்பூட்டி (165) ஏற்றி (167) முறையுளிக்கழிப்பி (168) விடுக்குவனல்லன் (177); பின்னர் நின்னைநோக்கி நில்லாத உலகத்து நிலைமையைச் சீர்தூக்கி (176) வரவிடைப் (173) பெற்றவை பிறர் பிறர்க்கு ஆர்த்தி (174) இங்ஙனஞ் செல்வாயாக வெனக்கூறி (177) அங்ஙனம் நீபோதற்கு நாட்டொடு (170) வேழம் (172) தரவிடைத்தங்கல் ஓவிலன் (173) என முடிக்க.

நில்லாவுலகத்து நிலைமைதூக்கிப் (176) பலபுலந்து (175) செல்லென விடுக்குவனல்லன் (177) என்பாருமுளர்.

177-9. ஒல்லென திரை பிறழிய இரு பௌவத்து கரை சூழ்ந்த அகல் கிடக்கை மண் மருங்கினுள் (227) நாடு (248) - ஒல்லென்னும் ஓசைபடத் திரைமுறிந்த கரியகடலினது கரைசூழ்ந்த அகன்ற பரப்பினையுடைய இவ்வுலகத்து ஒரு கூற்றின்கண் உளதாகிய சோழநாடு,

180-82. [மாமாவின் வயின்வயினெற், றாழ்தாழைத் தண்டண்டலைக், கூடுகெழீஇய குடிவயினான்:]

மாமாவின் வயின் வயின் நெல் கூடு கெழீஇய நாடு (248) - ஒரு [2] மாநிலத்தில் ஒருமாநிலத்தில் திடர்தோறும் திடர்தோறும் நெற்கூடுகள் பொருந்தின சோழநாடு.

3 தாழ் தாழை தண் தண்டலை குடிவயினான் - தாழ்ந்த தெங்கினையுடைய குளிர்ந்த மரச்சோலைகளிலிருக்கின்ற குடிமக்களிடத்தில்,

183-4. செ சோற்ற பலி மாந்திய கரு காக்கை - உதிரத்தாற் சிவந்தசோற்றையுடையவாகிய பலியை விழுங்கின கரியகாக்கை,

184-6. [கவவுமுனையின், மனைநொச்சி நிழலாங்க, ணீற்றியாமை தன் பார்ப்போம்பவும்:] மனை நொச்சி நிழல் ஆங்கண் ஈற்று யாமை

1 "மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே", "தம்புகழ் நிறீஇச் சென்றுமாய்ந் தனரே" (புறநா, ௧௬௫ : 1-2, ௩௬௬ : 5), "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன் றில்" (குறள். 233), "இந்நிலத்து, மன்னுதல் வேண்டி னிசைநடுக" (நான்மணிக். 15) என்பவையும், புறநானூறு, ௧௬௫ : 2-3-ஆம் அடிகளின் அடிக்குறிப்பும் இங்கே கருதற்பாலன.

2 மா - நூறுகுழி. 3 இது முதல் திணைமயக்கம் கூறப்படுகிறது.

நன் பார்ப்பு கவவு முனையின் ஓம்பவும் - மனையைச் சூழ்ந்த நொச்சியின் நிழலிடத்துக் கிடந்த ஈற்றுத் தொழிலையுடைத்தாகிய யாமையினுடைய பார்ப்பைத் தான் தின்றலை வெறுத்ததாயின், அதனைப்பின்பு பசித்தகாலத்துத் தின்பதாகப் பாதுகாத்து வைப்பவும்,

எனவே, மருதநிலத்திலிருக்குங்காக்கை நெய்தனிலத்துப் பார்ப்பைத் தின்னுமென்றார்.

1 "தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன" என்பதனாற் பார்ப்பென்றார்.

187. இளையோர் வண்டல் அயரவும் - அவ்வுழவர் மகளிர் நெய்தல் நிலத்தின் மணற்குன்றிலே வண்டலிழைத்து விளையாடவும்,

187-8. [முதியோர், அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்] பகை முதியோர் அவை புகு பொழுதில் தம் முரண்செலவும் - பகைமை முதிர்ந்தோர் தனது அரசவையிற்சென்று புகுங்காலத்துத் தம் மாறுபாட்டைப் போக்கும்படியாகவும், பெரிதாண்ட (229) என மேலே கூட்டுக.

என்றது, 2 வழக்குமாறுபட்டு வந்தோர்க்கு அவ்வழக்குவீடுறுப்பனென்றவாறு; 3 "உரை முடிவு காணான்" (உக) என்னும் பழமொழி கூறினார்.

189-92. [முடக்காஞ்சிச் செம்மருதின், மடக்கண்ண மயிலாலப், பைம்பாகற் பழந்துணரிய, செஞ்சுளைய கனிமாந்தி:] பை பாகல் பழம் செ சுளைய துணரிய கனி மாந்தி முடம் காஞ்சி செ மருதின் மட கண்ண மயில் ஆல - பசிய பாகற்பழத்தையும் சிவந்த சுளையையுடையவாகிய குலைகொண்ட பலாப்பழத்தையும் தின்று வளைவையுடைய காஞ்சிமரத்திலும் செவ்விய மருதிலுமிருந்த மடப்பத்தைத் தம்மிடத்தேயுடைய

---

1 தொல். மரபியல், சூ. 5.

2 "இளமை நாணி முதுமை யெய்தி, உரைமுடிவு காட்டிய வுரவோன்" மணி. ச: 107-8.

3 "உரைமுடிவு காணா னிளமையோ னென்ற, நரைமுது மக்களுவப்ப - நரைமுடித்துச், சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை, கல்லாமற் பாகம் படும்" என்பது பாட்டு; 'தம்முள் மறுதலையாயினாரிருவர் தமக்கு முறைமை செயவேண்டி வந்து சிலசொன்னால் அச்சொன் முடிவுகண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவுநிரம்பாத இளமைப் பருவத்தானென்றிகழ்ந்த நரைமுதுமக்கள் உவக்கும் வகை நரைமுடித்துவந்து முறைவேண்டிவந்த இருதிறத்தாரும் சொல்லிய சொற்கொண்டே ஆராய்ந்தறிந்து முறைசெய்தான் கரிகாற்பெருவளத்தானென்னுஞ் சோழன்; ஆதலால், தத்தங்குலத்துக்குத்தக்க விச்சைகள் கற்பதற்குமுன்னே செம்பாகமுளவா மென்றவாறு' என்பது இதனுரை.

வாகிய பெடைமயில்கள் ஆரவாரித்து அழைக்கும்படி அங்குநின்றும் போந்து,

193 - 213. [அறைக்கரும்பி னரிநெல்லி, னினக்களம ரிசை பெருக, வறளடும்பி னிவர்பகன்றைத், தளிர்ப்புன்கின் ருழ்காவி, னனை ஞாழலொடு மரங்குழீஇய, வவண்முனையி னகன்றுமாறி, யவிழ்தளவி னகன்றோன்றி, நகுமுல்லை யுகுதேறுவீப், பொற்கொன்றை மணிக்காயா, நற்புறவி னடைமுனையிற், சுறவழங்கு மிரும்பௌவத், திறவருந்திய வினைநாரை, பூம்புன்னைச் சினைச்சேப்பி, னோங்குதிரை யொலி வெரீஇத், தீம்பெண்ணை மடற்சேப்பவும், கோட்டெங்கின் குலைவாழைக், கொழுங்காந்தண் மலர்நாகத்துத், துடிக்குடிஞைக் குடிப்பாக்கத், தியாழ்வண்டின் கொளைக்கேற்பக், கலவம்விரித்த மடமஞ்ஞை, நில வெக்கர்ப் பலபெயர :]

யாழ் வண்டின் கொளைக்கு ஏற்ப (211) கலவம் விரித்த மட மஞ்ஞை (212) நிலவு எக்கர் பல பெயர (213) - 1 யாழோசைபோலும் வண்டினது பாட்டினைக்கேட்டு அதற்குப் பொருந்தத் தோகையை விரித்த அறியாமையையுடைய மயில் நிலவுபோலும் இடுமணலிலே பல பகுதிப்பட ஆடவும்,

பெடை தங்குகின்ற மருதநிலத்தைவிட்டுப் பாட்டைக்கேட்டு நெய் தனிலத்தே போந்தமைபற்றி மடமஞ்ஞையென்றார்.

அகவர் (220) அறை கரும்பின் அரி நெல்லின் (193) இனம் களமர் இசைபெருக (194) வறள் அடும்பின் இவர் பகன்றை (195) தளிர் புன்கின் தாழ் காவின் (196) நனை ஞாழலொடு மரம் குழீஇய (197) அவண் முனையின் அகன்று மாறி (198) நீல் நிறம் முல்லை பல் திணை நுவல (221) - நாட்டில் வாழ்வார் அறுத்தலைச்செய்யும் கரும்பின்கண்ணும் அரிகின்ற நெல்லின்கண்ணும் எழுப்பின திரண்ட களமருடைய ஓசை மிகுகையினாலே நீரற்ற இடத்திலெழுந்த அடும்பினையும் படர்கின்ற பகன்றையினையும் தளிரையுடைத்தாகிய புன்கினையும் தாழ்ந்தசோலை களையுமுடையதாய் அரும்பின ஞாழலோடே ஏனைமரங்களும் திரண்ட அந்நாட்டை வெறுத்தார்களாயின் அவ்விடத்தை நீங்கி நெஞ்சாலே கைவிட்டு நீலநிறத்தையுடைய முல்லைக்கொடி படர்ந்த பல காட்டு நிலத்தேசென்று அந்நிலத்தைக் கொண்டாடவும்,

அகவர் (220) இசைபெருக (194) முனையின் அகன்று மாறிப் (198) பஃறிணை நுவல (221) வென முடிக்க.

---

1 "மழலை வண்டின நல்லியாழ் செய்ய", "பொங்கர் வண்டின நல்லி யாழ் செய்ய" (மணி. ச : 4, கக : 58); "வண்டொடு, திருந்தியாழ் முரல்வதோர் தெய்வப் பூம்பொழில்" சீவக. 1936.

கானவர் (220) அவிழ் தளவின் அகல் தோன்றி (199) நகு முல்லை வீ உகு தேறு (200) பொன் கொன்றை மணி காயா (201) நல் புறவின் நடை முனையின் (202) மருதம் பாட (220) - முல்லைநிலத்து வாழ்வார் அவிழ்கின்றதளவினையும் பரந்ததோன்றியினையும் அலர்கின்ற முல்லையினையும் பூ உகுகின்ற தேற்றாவினையும் பொன்போலும் பூவினையுடைய கொன்றையினையும் நீலமணிபோலும் பூவினையுடைய காயாவினையுமுடைய நல்லகாட்டில் உறைகின்ற ஒழுக்கத்தை வெறுக்கின் மருதநிலத்தே சென்று அவ்வொழுக்கத்தைப் புகழவும்,

1 தளவு - முல்லைவிசேடம்.

சுற வழங்கும் இரு பௌவத்து (203) இறவு அருந்திய இனம் நாரை (204) பூ புன்னை சினை சேப்பின் (205) ஓங்கு திரை ஒலி வெரீஇ (206) தீ பெண்ணை மடல் சேப்பவும் (207) - சுறாத்திரியும் கரிய கடலின்கண் இறவைத்தின்ற திரண்டநாரைகள் பூக்களையுடைய புன்னைக்கோட்டிலே தங்கின் அதன்மேலே முறிகின்ற உயர்ந்ததிரையினது ஆரவாரத்திற்குவெருவி மருதநிலத்தில் இனியபனையினது மடலிலேதங்கவும்,

கோள் தெங்கின் குலை வாழை (208) கொழு காந்தள் மலர்நாகத்து (209) துடி குடிஞை குடி பாக்கத்து (210) பரதவர் (218) அவண் முனையின் (198) குறிஞ்சி பாட (218) - குலைகொண்ட தெங்கினையும் குலையினையுடைய வாழையினையும் கொழுவிய காந்தளினையும் மலர்ந்த சுரபுன்னையினையும் துடியோசைபோலும் ஓசையினையுடைய பேராந்தையினையுமுடைய குடியிருப்பையுடைத்தாகிய பாக்கத்தில் வாழும் பரதவர் அவ்விடத்தைவெறுப்பின் குறிஞ்சிநிலத்தே சென்று அவ்விடத்தைப் புகழவும்,

214 - 5. தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர் மீன் நெய்யொடு நறவு மறுகவும் - 2தேனாகியநெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள் மீனினது நெய்யோடே நறவையும் கொண்டுபோகவும்,

216 - 7. தீ கரும்பொடு அவல் வகுத்தோர் மான் குறையொடு மது மறுகவும் - இனிய கரும்போடே அவலைக் கூறுபடுத்தி விற்றவர்கள் மானினது தசையோடே கள்ளையும் கொண்டுபோகவும்,

218 - 9. [குறிஞ்சி பரதவர் பாட நெய்த, னறும்பூங் கண்ணி குறவர் சூட :]

குறவர் நெய்தல் நறு பூ கண்ணி சூட - குறவர் அந்நிலத்துப் பூக்களை வெறுக்கின் நெய்தலினது நறிய பூவாற்செய்த கண்ணியைச்சூடவும்,

---

1 "தளவம் - செம்முல்லை" குறிஞ்சி. 80, ந.

2 "தேனெய் தோய்ந்தன" சீவக. 2747; தேன் நெய்யென்றும் வழங்கும். தேனை வடிகட்டுதற்குக் கருவியாயிருத்தலின் பன்னாடை நெய்யரியெனப் பெயர்பெற்றது.

220 - 22. [கானவர் மருதம் பாட வகவர், நீனிற முல்லைப் பஃ றிணை நுவலக், கானக்கோழி கதிர்குத்த :]

கானம் கோழி கதிர் 1 குத்த - காட்டிடத்துக் கோழிகள் நெற்கதிரைத் தின்னவும்,

223. மனை கோழி தினை கவர - மருதநிலத்தின் மனையிற்கோழிகள் தினையைத் தின்னவும்,

224. வரை மந்தி கழி மூழ்க - மலையிடத்திற்குரிய மந்திகள் கழியிலே மூழ்கவும்,

225. கழி நாரை வரை யிறுப்ப - கழியிற்றிரியும் நாரைகள் மலையிலே கிடக்கவும்,

226. தண் வைப்பின் நால் நாடு குழீஇ - குளிர்ந்த வைப்புக்களையுடைய நான்குகூறாகிய நாடுகள் திரண்டு,

நால் நாடென்றார், 2 " நடுவ ணைந்திணை நடுவண தொழிய" என்னுஞ் சூத்திரத்தால்.

குழீஇயென்னும் செய்தெனெச்சம் பிறவினைகொண்டது, 3 " அம் மூக்கிளவியும்" என்னும் சூத்திரவிதியால்.

பார்ப்போம்பவும் (186) அயரவும் (187) மயிலால (190) மடமஞ்ஞை (212) பலபெயரவும் (213) நாரை (204) சேப்பவும் (207) அகவர் (220) அகன்றுமாறிப் (198) பஃறிணை நுவலவும் (221) கானவர் (220) நடைமுனையின் (202) மருதம்பாடவும் (220) பாக்கத்துப் (210) பரதவர் குறிஞ்சிபாடவும் (218) கிழங்கு மாறியோர் (214) நறவுமறுகவும் (215) அவல்வகுத்தோர் (216) மதுமறுகவும் (217) குறவர் கண்ணிசூடவும் (219) கோழி கதிர்குத்தவும் (222) மனைக்கோழி தினைக்கவரவும் (223) மந்தி மூழ்கவும் (224) நாரை வரையிறுப்பவும் (225) நாலுகுழீஇ (226) மாமாவின் வயின்வயின் நெற் (180) கூடு கெழீஇய (182) நாடு (248) என வினைமுடிக்க.

227 - 31. [மண்மருங்கினான் மறுவின்றி, யொருகுடையா னொன்று கூறப், பெரிதாண்ட பெருங்கேண்மை, யறனொடு புணர்ந்த திறனறி செங்கோ, லன்னோன் வாழி வென்வேற் குருசில் :]

மறு இன்றி (227) அறனொடு புணர்ந்த திறன் அறி செ கோல் (230) ஒரு குடையான் ஒன்று கூற (228) முதியோர் (187) முரண் செல (188) பெரு கேண்மை பெரிது ஆண்ட (229) வென் வேல் குருசில் (231) - குற்றமின்றித் தருமத்தோடுகூடிய வழியை உலகம் அறிதற்குக் காரண

1 குத்தல்: "கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன், குத்தொக்க சீர்த்த விடத்து" குறள். 490.

2 தோல். அகத்திணையியல், சூ. 2.

3 தோல். வினையியல், சூ. 34.

மாகிய செவ்விய கோலாலும் தண்ணளிசெய்தற்கெடுத்த ஒரு குடையாலும் தனது ஆணையையே உலகங்கூறும்படியாகவும் முதியோர் மூரண் செல்லும்படியாகவும் பெரியநட்புடனே நெடுங்காலம் உலகையாண்ட வெல்கின்ற வேலையுடைய தலைவன்,

ஒருகுடை என்றதனானும், ஒன்றுகூற என்றதனானும் இவன் மண் முழுதும் ஆண்டானென்றார்.

அன்னோன் - யான்கூறிய அத்தன்மைகளையுடையோன்,

வாழி - வாழ்வாயாக;

இறுதி யகரம் கெட்டுநின்றது.

232 - 3. [மன்னர் நடுங்கத் தோன்றிப் பன்மா, ணெல்லை தருநன் பல்கதிர் பரப்பி :]

மன்னர் நடுங்க தோன்றி - பகையரசர் நடுங்கும்படி விளங்கி,

பல் மாண் எல்லை தருநன் பல் கதிர் பரப்பி - பல்லுயிர்களும் மாட்சிமைப்படுதற்குக் காரணமாகிய பகற்பொழுதைத்தருங்கதிரோன் தன்னிலையைவிட்டுப் பலகிரணங்களைப் பரப்புகையினாலே,

234. குல்லை கரியவும் - 1 கஞ்சங்குல்லை தீயவும்,

கோடு எரி நைப்பவும் - மரங்களினுடைய கொம்புகளை நெருப்புத் தின்னவும்,

235. [அருவி மா மலை நிழத்தவும் :] மா மலை அருவி 2 நிழத்தவும் - பெருமையையுடைய மலை தன்னிடத்து அருவிகளை இல்லையாக்கவும்,

235 - 6. மற்ற கருவி வானம் கடல் கோள் மறப்பவும் - இடையொழிந்த தொகுதியையுடைய மேகம் கடலிடத்து முகத்தலை மறப்பவும்,

237. பெரு வறன் ஆகிய பண்பு இல் காலையும் - பெரிய வற்கடமுண்டாகிய நற்குணமில்லாத காலத்தும்,

கரியவும் நைப்பவும் (234) நிழத்தவும் (235) மறப்பவும் (236) வறனாகிய காலையுமெனமுடிக்க.

238 - 9. [நறையு நரந்தமு மகிலு மாரமுந், துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி:] நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும் பொறை துறைதுறை தோறும் உயிர்த்து ஒழுகி - நறைக்கொடியும் நரந்தப்புல்லும் அகிலும் சந்தனமுமாகிய சுமையைத் துறைதோறும் துறைதோறும் இளைப்பாறத் தள்ளிப்போய்,

240. நுரை தலை குரை புனல் - நுரையைத் தலையிலேயுடைய ஆரவாரத்தையுடைய நீர்,

வரைப்பு அகம் புகுதொறும் - குளத்திலும் 3 கோட்டகத்திலும் புகுதோறும்,

1 கஞ்சா. 2 தொல். உரியியல், சூ. 32. 3 ஒருவகை நீர்நிலை.

1 வரைக்கப்படுதலின், வரைப்பு; ஆகுபெயர்.

241. புனல் ஆடும் மகளிர் கதுமென குடைய - நீராடுமகளிர் கடு கக் குடைந்து விளையாட,

புனல் ஒழுகிப் புகுதொறும் மகளிர் குடையவென்க.

242. கூனி குயத்தின் வாய் நெல் அரிந்து - வளைந்துநின்று அரி வாளின் வாயாலே நெல்லையறுத்து,

நெல்லு மிகக்காய்த்துத் தரையிலே விழுதலின், வளைந்துநிற்க வேண்டுமென்றார்.

243. சூடு கோடு ஆக பிறக்கி - சூட்டை மலையாக அடுக்கி,

243-4. நாள் தொறும் குன்று என குவைஇய குன்றா குப்பை - நாடோறும் கடாவிட்டு மேருவென்னும்படி திரட்டின தொலையாத நெற்பொலி,

245-8. [கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்குஞ், சாலி நெல்லின் சிறைகொள் வேலி, யாயிரம் விளையுட் டாகக், காவிரி புரக்கு நாடுகிழ வோனே :]

கடு தெற்று மூடையின் இடம் கெட கிடக்கும் - நெருங்கத்தெற் றின குதிரின்கண்ணே வெற்றிடம் இல்லையாம்படி கிடத்தற்குக்காரண மான,

கடுந்தெற்றுமூடை - 2 கோட்டையுமாம்.

சிறை கொள் 3 வேலி ஆயிரம் சாலி நெல்லின் விளையுட்டாக - வரம்பு கட்டின வேலிநிலம் ஆயிரக்கலமாகிய செந்நெல்லின்விளையுட்டாக,

காவிரி புரக்கும் நாடு கிழவோன் - காவிரி பாதுகாக்கும் நாடு தனக்கே உரித்தாம் தன்மையுடையோன்.

வறனுகிய காலையும் (237) புனல் (240) ஒழுகிப் (239) புகுதொறும் (240) மகளிர் குடைந்து விளையாடக் (241) கூனி அரிந்து (242) பிறக் கிக் (243) குவைஇய குப்பை (244) கிடத்தற்குக்காரணமான (245) விளையுட்டாகக் (247) காவிரி புரக்குநாடு (248) என வினைமுடிக்க.

பொருந (3), கோடியர்தலைவ, கொண்டதறிந (57), புகழ்மேம்படுந, (60), எழின்கிழவ (63), காடுறை கடவுட்கடன் கழிப்பியபின்றை (52) நெறிதிரிந்தொராஅது (58) ஆற்றெதிர்ப்படுதலும் நோற்றதன்பயனே (59), போற்றிக்கேண்மதி (60); நின்னிரும்பேரொக்கலொடு (61) பசி ஒராஅல்வேண்டின், நீடின்று (62) எழுமதி (63); யானும் (64) இன்மை தீர வந்தனென் (129); உருகெழு குருசிலாகிய (131) உருவப்பஃறே ரிளையோன் சிறுவன் (130), கரிகால்வளவன் (148), நாடுகிழவோன்

---

1 எல்லை கோலப்படுதல். 2 நெற்கோட்டை. 3 உ0-மாவையுடையது

(248), குருசில், அன்னோன் (231) தாணிழன்மருங்கிற் குறுகி (149) மன்னர் நடுங்கத்தோன்றி (232), வாழியெனத் (231) தொழுது முன்னிற்குவிராயின் (150), நாட்டொடு (170) வேழம் (172) தரவிடைத் தங்கலோவிலன் (173) எனக்கூட்டி வினை முடிவுசெய்க.

1 "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி.........வேண்டும்" என்பதனான், இங்ஙனமுடிந்தது.

2 "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு, மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்று பய னெதிரச் சொன்ன பக்கமும்" என்பது இதற்கு விதி.

3 "ஆசிரிய நடைத்தே வஞ்சி" என்பதனாற் பின்னர் வஞ்சி மிகவும் வந்தனவென்றுணர்க.

சோழன் கரிகாற்பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர்செய்த உரை முற்றிற்று.

---

வெண்பா.

1 4 ஏரியு மேற்றத்தி னானும் பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளனெல்லாந் - தேரின்
அரிகாலின் கீழுகூஉ மந்நெல்லே சாலுங்
கரிகாலன் காவிரிசூழ் நாடு.

2 அரிமா சுமந்த வமளிமே லானைத்
5 திருமா வளவனெனத் தேறேன் - திருமார்பின்
மானமா லென்றே தொழுதேன் றொழுதகைப்
போனவா பெய்த வளை.

3 6 முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்
இச்சக் கரமே யளந்ததாற் - செய்ச்செய்
அரிகான்மேற் றேன்றொடுக்கு மாய்புனனீர் நாடன்
கரிகாலன் கானெருப் புற்று.

---

1 "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி, பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே, யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்" தொல். எச்ச. சூ. 66. 2 புறத். சூ. 36. 3 செய். சூ. 108.

4 தொல். புறத்திணை. சூ. 31, ந. மேற்.

5 "திருமாவளவன்" (பட். 299); "செருவெங் காதலிற் றிருமா வளவன்" சிலப். 5 : 90.

6 இச்செய்யுள் பட்டினப்பாலையின் இறுதியிலும் காணப்படுகிறது.

# மூன்றாவது

# * சிறுபாணாற்றுப்படை.



மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை
யணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச்
செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்த்த
5 புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்
கதுப்புவிரித் தன்ன காழக நுணங்கற
லயிலுருப் பனைய வாகி யைதுநடந்து

---

*இந்நூல் பாணாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத். சூ. 36, ந.

1. மணிமலை: "மணி நெடுங்குன்று" (குறுந். உ௪0: 7; ஐங். உ0எ: 4, உ0க: 5); "மணிவரை" ஐங். உ௫0: 2; பரி. கங: 1, ப. 169: 3.

2. பி-ம். 'துயல்வரும்'

2-3. ஆற்றிற்கு ஆரம்: "செய்யவ ளணியகலத் தாரமொ டணி கொள்பு.........வையைவா ரவிரற விடைபோழும்" (கலி. உ௮: 5-7); "மாயோன் மார்பி லாரம் போல, மணிவரை யிழிதரு மணிகிள ரருவி" (தொல். செய். சூ. 78, பேர். மேற்.); "இலங்கு நீண்முடி யிந்திரன் மார்பின் மேல், விலங்கி வீழ்ந்தமுத் தாரமும் போன்றவை" (சீவக. 35); "காவிரி, மாதர்மண் மடந்தைபொன் மார்பிற் றாழ்ந்ததோர், ஓதநீர் நித்திலத் தாம மொக்குமால்" (பெரிய. திருநாட்டுச். 2); "பேரார நிபுடமாலை மால்யாறு நிமிர வீழ்வ போல்வீழ", "நதிக்குப் போத வொழுகு முத் தாரமும்" தக்க. 106, 280.

1-3. "அலைநீ ராடை மலைமுலை யாகத், தாரப் பேரியாற்று மாரிக் கூந்தற், கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை" சிலப். ௧0: 1-3.

5-6. "பொன்னிதழிற் பைந்தாதும் போதும் புறம்புதைத்த, வின்னறல்போ லேழை யிருங்கூந்தல்" தண்டியலங்காரம்.

6. கூந்தலுக்கு அறல் உவமை: "அறலார் குழலை யறியேனெனல்" ஒரு பழைய இலக்கணநூல்.

7. பி-ம். 'அயிலுருக்கனையவாகி', 'அயிலுருத்தனையவாகி'

வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப
வேனி னின்ற வெம்பத வழிநாட்
10 காலுறா யிற்றுக் கதிர்கடா வுறுப்பப்
பாலை நின்ற பாலை நெடுவழிச்
சுரன்முதன் மராஅத்த வரிநிழ லசைஇ
யைதுவீ ழிருபெய லழகுகொண் டருளி
நெய்கனிந் திருளிய கதுப்பிற் கதுப்பென
15 மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயின்மயிற் குளிக்குஞ் சாயற் சாஅ

---

7-8. "அயில்காய்ந் தன்ன கூர்ங்கல்" (மலைபடு. 373); "கொல்லடைந்த வேலன்ன கூர்ம்பரல்" (யா. வி. மேற்.); "எரியுந், தீமேலயில்போற் செறிபரற் கானில்" திருச்சிற். 228.

10-11. "பாலை யென்பது உட்டினைத்துக்குப் பெயருமாம்; 'காலை.........வழி' இது சிறுபாணாற்றுப்படை" தக்க. 68, உரை.

11-2. "நெறியயன் மராஅத், தல்குறு வரிநிழ லசைஇ" அசநா. கஉக: 8 - 9.

14. "எண்ணெயு நானமு மிவைமூழ்கி யிருடிருக்கிட்டு......... கடைகுழன்ற கருங்குழல்கள்" சீவக. 164.

15. பி - ம். 'மணிமயிற்கலாபம்'

14-5. மகளிர் கூந்தலுக்கு மயிற்கலாவம்: "அகிலுண விரிந்த வம்மென் கூந்தலின், மணிமயிற் கலாப மஞ்சிடைப் பரப்பி" (சிறுபாண். 263 - 4); "கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ" (மலைபடு. 44); "அணிகிளர் கலாவ மைதுவிரித் தியலு, மணிபுரை யெருத்தின் மஞ்ஞைபோலநின், வீபெய் கூந்தல் வீசுவளி யுளர", "கலிமயிற் கலாவத் தன்ன விவள், ஒலிமென் கூந்தல்" (நற். உகச: 3 - 5, உகரு: 8 - 9); "கலிமயிற் கலாவத் தன்னவிவள், ஒலிமென் கூந்த லுரியவா நினக்கே" (குறுந். உ௨௫: 6-7); "கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன, ஒலிமென் கூந்தல்" (புறநா. கசக: 8 - 9); "பூம்புகை, மாட மாலை மேனலார் மணிக்குழலின் மூழ்கலிற், கோடுயர்ந்த குன்றின்மேற் குழீஇய மஞ்ஞை தஞ்சிற, காடுமஞ்சி னுள்விரித் திருந்த வண்ண மன்னரே", "கோல நெடுங்கண் மகளிர் கூந்தல் பரப்பி யிருப்பப், பீலி மஞ்ஞை நோக்கிப் பேடை மயிலென் றெண்ணி" சீவக. 71, 919.

16. பி - ம். 'மயிற்கொளிக்கும்'

"மயிலன்ன சாயலாய்" (ஏலாதி. 28); கூச - ஆம் பக்கம், 3 - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

யுயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ
வயங்கிழை யுலறிய வடியி னடிதொடர்ந்
தீர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கையிற்
20 சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்

---

17 - 8. பொருநராற்றுப்படை, 42-ம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

19. நிலந்தோயும் பிடித்தடக்கை: ௫௬ - ஆம் பக்கம், 3 - ஆம் அடிக் குறிப்பைப் பார்க்க.

20. 'சேர்ந்துடன் செறிந்தகுறங்கு', 'சேர்ந்து செறிகுறங்கின்' என்பது, சேர், திரட்சிப் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 67, சே. தெ. தெ. சூ. 65, ந. இ - வி. சூ. 290.

19 - 20. பொருந. 40-ஆவது அடியின் அடிக்குறிப்பைப்பார்க்க.

21. இஃது, ஒழுகல் நெடுமைப் பண்பு உணர்த்தியதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 21, சே; தெ. தெ. சூ. 19, ந. இ - வி. சூ. 284.

21 - 2. மகளிர் கூந்தலுக்கு வாழைப்பூ: "வாழை யீன்ற வை யேந்து கொழுமுகை, மெல்லியன் மகளி ரோதி யன்ன, பூவொடு துயல் வரு மால்வரை நாடனை" நற். ௨௨௫ : 3 - 5.

19 - 22. அந்தாதி யுவமைக்கு இவ்வடிகள் மேற்கோள்; மாறன். சூ. 101.

19 - 23. "'ஈர்ந்து நிலந்தோயும்.........நச்சி' என்பதூஉம், அடுக் கிய தோற்றமெனப் படாதோவெனின், படாதன்றே; யானைக்கை போலுங்குறங்கு, குறங்குபோலும் வாழையென அடுக்கிச் சொல்லாது. குறங்கினையுடையாளென்று துணித்துக் கூறிய பின்னர்க் குறங்கென மால்வரை யொழுகிய வாழை யென்றானுதலி னென்பது" தொல். உவம. சூ. 36, பேர், உரை.

23 - 4. "வேங்கை வென்ற சுணங்கின்" (ஐங். ௩௨௪); "வேங் கைவீ, முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்" (கலி. ௯௪ : 26 - 7); "பொன்வீ வேங்கைப் புதுமலர் புரைய, நன்னிறத் தெழுந்த சுணங்கணி வனமுலை" (அகநா. ௩௧௯ : 8 - 9); "நாகிள வேங்கையிற், கதிர்த் தொளி திகழு நுண்பல் சுணங்கின், மாக்கண் மலர்ந்த முலையள்" புறநா. ௩௫௨ : 12 - 4.

25 தியாணர்க் கோங்கி னவிர்முகை யெள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கி
னின்சே றிகுதரு மெயிற்றி னெயிறெனக்
குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த
30 முல்லை சான்ற கற்பின் மெல்லியன்
மடமா னோக்கின் வாணுதல் விறலியர்
நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி
கல்லா விளையர் மெல்லத் தைவரப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பி
35 னின்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ

---

25 - 6. "யாணர்க் கோங்கின் குவிமுகை யெள்ளிப், பூணகத் தொடுங்குமுலை" (ஞானமிர்தம்); "யாணர்க் கோங்கின் மென்முகிழ் முலை" (பாகவத. கO. கோவியர். 13); முருகு. 34 - 5 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

27. இவ்வடி, நுங்கென்பது புல்லொடு வந்ததற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. 86, பேர். உரை.

28. பி - ம். 'செறி நீர்தரும்'

19 - 28. "'ஈர்ந்து நிலந்தோயும்.........எயிற்றின்' என்னும் இச் சந்தானவுவமை மாலையுவமையின்பாற்படும்" (இ - வி. சூ. 645); பாடபேதமுண்டு.

30. "முல்லை சான்ற கற்பின், மெல்லியற் குறுமகள்" நற். கசஉ : 10 - 11; அகநா. உஎச : 13 - 4.

"தேவி முல்லை வளர்த்தற்குக் காரணம் கற்புடைமை யென வுணர்க; 'முல்லைசான்ற கற்பின் மெல்லியல்' இது சிறுபாணாற்றுப் படை" தக்க. 75.

32. பி - ம். 'நலமென் சீறடி'

33. "கல்லா மறவர் கணைமாரி" பு. வே. 66.

34. "பொன்றிரித் தன்ன நிறத்தன.........நரம்பு" பெருங். ரு. 15 : 53 - 4.

34 - 5. "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின், றொடையமை கேள்வி யிடவயிற் றழீஇ" (பெரும்பாண். 15 - 6); "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின், மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்" (புறநா. ருOஅ : 1 - 2); "நந்தாது பொன் வார்ந்தன யாழி னரம்புளர்ந்து" பாகவத. கO. கோவத்தன. 39.

நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க
வியங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்
துனிகூ ரெவ்வமொடு துயராற்றுப் படுப்ப
40 முனிவிகந் திருந்த முதுவா யிரவல
கொழுமீன் குறைய வொதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவா யெருமை
பைங்கறி நிவந்த பலவி னீழன்
மஞ்சண் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர
45 விளையா விளங்கா றைமெல்குபு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளுங்
குடபுலங் காவலர் மருமா னொன்னார்
வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த
வெழுவுறழ் திணிதோ ளியறேர்க் குட்டுவன்
50 வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே யதாஅன்று
நறவுவா யுறைக்கு நாகுமுதிர் நுணவத்
தறைவாய்க் குறுந்துணி யயிலுளி பொருத

---

36. பி - ம். 'பழுனிய'

36 - 7. "நைவளம் பழுநிய பாலை வல்லோன்" குறிஞ்சி. 146.

38 - 9. கூர்ப்பு, முன்சிறவாதுள்ளதொன்று சிறத்தலாகிய குறிப் புணர்த்து மென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 18, சே. நை. சூ. 16, ந. இ - வி. சூ. 281, உரை.

40. "முது வாயொக்கல்", "முதுவாய்க் கோடியர்" (பட்டின. 214, 253); "நீயும் வம்மோ முதுவா யிரவல" (புறநா. கஅ0 : 9); முருகு. 284 - ஆம் அடியின் அடிக்குறிப்பையும் பார்க்க.

45. "நெய்தல், விளையா விளங்கா றை" அகநா. ௪00 : 21 - 2.

42 - 7. "தடமருப் பெருமை தாமரை முனையின், முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியுங், குடநாடு" அகநா. கூக : 15 - 7.

50. பி - ம். 'புனல் வஞ்சிவாயிலும் வறிதே'

"'வஞ்சியும் வறிதே, மதுரையும் வறிதே, உறந்தையும் வறிதே' என்றாராகலின், இதனைப் பேராச்சிறப்பினையுடைய புகாரென்றார்" சிலப். பதிகம் : 12 - 20, அடியார்.

51. நாகு பெண்மையே யன்றி இளமையுமுணர்த்து மென்பதற்கு, 'நாகுமுதிர் நுணவம்' என்பது மேற்கோள்; சீவக. 74, ந.

நாகுமுதிர் நுணவம் : "நாகுமுதிர் நாகத்து" சிறுபாண். 108.

கைபுனை செப்பங் கடைந்த மார்பிற்
செய்பூங் கண்ணி செவிமுத றிருத்தி
55 நோன்பகட் டுமண ரொழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித்
தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பி
60 னுளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடுந்
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்
றென்புலங் காவலர் மருமா னொன்னார்
மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக்
65 கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்
றமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே யதாஅன்று

---

53. பி - ம். 'கைபுனை சேயங்கடைந்த'

55. உமணரொழுகை: "பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச், சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப், பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி" பெரும்பாண். 63 - 5.

56. மகாரன்னமந்தி: "கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும்" (மலைபடு. 236 - 7); "உச்சிக் கிவருங் கட்கின் கடுவன், வீழ்ந்த திங்களை விசும்புகொண் டேறுந், தெய்வ மகாரி னையுறத் தோன்றி" பெருங். க. 40 : 73 - 5.

57. பி - ம். 'நகாஅ வன்ன'

நகார்: "பறிமுறை நேர்ந்த நகாராகக் கண்டோர்க்கு" கலி. கங: 18.

57 - 62. கொற்கைமுத்து: "விளைந்துமுதிர்ந்த விழுமுத்தி, னிலங்குவளை யிருஞ்சேரிக், கட்கொண்டிக் குடிப்பாக்கத்து, நற்கொற்கையோர் நசைப்பொருந" (மதுரை. 135-8); "பல்லரண் கடந்த பசும்பூட் பாண்டியன், மல்குநீர் வரைப்பிற் கொற்கை முன்றுறை, யூதை யீட்டிய வுயர்மண லடைகரை, யோத வெண்டிரை யுதைத்த முத்தம்" தொல். களவு. சூ. 11, ந. மேற். "கண்ணே"

65. "கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" பொருந. 148.

66. தாங்கரு மரபின்: சிறுபாண். 127.

67. மதுரையும்வறிதே: சிலப். பதிகம், 12-20, அடியார். மேற்.

நறுநீர்ப் பொய்கை யடைகரை நிவந்த
துறுநீர்க் கடம்பின் றுணையார் கோதை
70 யோவத் தன்ன வுண்டுறை மருங்கிற்
கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின்
வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை
யாசி லங்கை யரக்குத்தோய்ந் தன்ன
75 சேயிதழ் பொதிந்த செம்பொற் கொட்டை
யேம வின்றுணை தழீஇ யிறகுளர்ந்து
காமரு தும்பி காமரஞ் செப்புந்
தண்பணை தழீஇய தளரா விருக்கைக்
குணபுலங் காவலர் மருமா னொன்னா
80 ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியுந்
தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பிய

---

69. கடம்பின்துணையார் கோதை : "திணிநிலைக் கடம்பின் றிரளரை வளைஇய, துணையமை மாலை" (குறிஞ்சி. 176 - 7); "கடம்பு சூடிய கன்னிமாலை" (சீவக. 990); "செந்தொடையுஞ் செய்யுட்பொலிவு செய்யுங்காற் கொன்றையுங் கடம்பும்போல நின்றவாறே நின்று தொடைப் பொலிவு செய்யுமென்பதாம்" தொல்.செய்யுளியல், சூ. கச, பேர்.

துணையார்கோதை : "துணைமலர்ப் பிணைய லன்னவிவர்", "துணைத்த கோதைப் பணைப்பெருந் தோளினர்" (குறுந். உ௨க : 6, ௩உசு : 1); "தாநீர் பயந்த துணையமை பிணையல்" அகநா. ௫ : 23.

70. பி - ம். 'வண்டுறை'

71. பி - ம். 'கோபத்தன்ன'

72 - 3. தொல். உவம. சூ. 9, பேர். உரை, மேற்.; இ - வி. சூ.640, உரை, மேற்.

78. "தண்பணைதழீஇய விருக்கை" (யா. வி. மேற். "சுறமறிவன", "குருகுநாரை"); பொருந. 169 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப்பார்க்க.

81 - 2. "வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப, வெயின்மூன் றெறிந்த விகல்வேற் கொற்றமும்", "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்" (சிலப்: உ௭ : 164 - 5, உக : "வீங்குநீர்"); "தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" (மணி. க : 4); "ஒன்னாருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்"

னோடாப் பூட்கை யுறந்தையும் வறிதே யதாஅன்று
வானம் வாய்த்த வளமலைக் கவாஅற்
85 கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
வருந்திற லணங்கி னாவியர் பெருமகன்
பெருங்க னாடன் பேகனுஞ் சுரும்புண
நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
90 பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்
பறம்பிற் கோமான் பாரியுங் கறங்குமணி

---

(புறநா. ௩௯: 5-6); "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும் பிற், றூங்கு மெயிலுந் தொலைத்தலால்" (பழமொழி, 49); "திறல் விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த, விறன்மிகு முரசின் வெல்போர்ச் சோழன்" (தொல். களவு. சூ. 11, ந. "கண்ணே"); "தேங்கு தூங்கெயி லெறிந்த வவனும்" (கலிங்க. இராச. 17); "கூடார்தந், தூங்கு மெயி லெறிந்த சோழனும்" (விக்கிரம. 8-9); "தூங்கெயில் கொண்ட சுடர் வாளோன்" (குலோத். உலா); "வாங்குந் திருக்கொற்ற வாளொன்றின் வாய்வாய்ப்பத், தூங்கும் புரிசை துணித்தகோன்" இராசராச. 13.

83. ஓடாப்பூட்கை: "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. 247) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

உறந்தையும் வறிதே: சிலப். ப. 20, அடியார். மேற்.

84. மலைக்கவான்: "குறங்கு - மலையடிவாரம்; 'வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்' இது சிறுபாணாறு" தக்க. 540, உரை.

86. ஆவியர் பெருமகன்: "அதுமனெம் பரிசி லாவியர் கோவே" புறநா. ௧௪௭: 9.

84-7. "உடாஅ போரா வாகுத லறிந்தும், படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ, கடாஅ யானைக் கலிமான் பேகன்" புறநா. ௧௪௧: 10-12.

86-7. "அருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப், பெருங்க னாடன் பேகனும்" புறநா. ௧௫௮: 11-2.

88. பி-ம். 'நறவுவா யுறைக்கும்'

91. "கொடுக்கிலா தானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப் பாரிலை" தே. புகலூர், சுந்.

90-91. "நெடுவரைக், கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும், பறம்பிற் கோமான் பாரியும்" புறநா. ௧௫௮: 2-4.

89-91. "பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை, நாத்தழும் பிருப்பப் பாடா தாயினுங், கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த,

வானுளைப் புரவியொடு வையக மருள
ஈர நன்மொழி யிரவலர்க் கீந்த
அழறிகழ்ந் திமைக்கு மஞ்சுவரு நெடுவேற்
95 கழறொடித் தடக்கைக் காரியு நிழறிகழ்
நீல நாக நல்கிய கலிங்க
மாலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோ
ளார்வ நன்மொழி யாயு மால்வரைக்
100 கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த
வுரவுச்சின் கனலு மொளிதிகழ் நெடுவே
லரவக்கடற் றானை யதிகனுங் கரவாது

யரந்தோங்கு சிறப்பிற் பாரி", "தேருடன், முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப், படுமணி யானைப் பறம்பிற் கோமான், நெடுமாப் பாரி" புறநா. உ00: 9-12, உ0க: 2-5.

84-91. "முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையு, மெல்லை நீர் ஞாலத் திசைவிளங்கத் - தொல்லை, யிரவாம லீந்த விறைவர்" பு. வெ. 194.

93. ஈரநன்மொழி: "ஆர்வநன்மொழி" (சிறுபாண். 99); முருகு. 292-ஆம் அடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

94. "உரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவேல்" சிறுபாண். 102.

95. கழறொடித்தடக்கை: "கழறொடி கவைஇய கலம்பொழி தடக்கை" பெருங். க. 35: 102.

91-5. பாரி, காரி: "வண்புகழ் பாரி காரி" திருப். "வஞ்சக"

97. ஆலமர்செல்வன்: முருகு. 256-ஆம் அடியையும் அதன் அடிக்குறிப்பையும்பார்க்க.

98. பி-ம். 'சாபந் தாங்கிய'

99. ஆர்வ நன்மொழி: "ஈரநன்மொழி" சிறுபாண். 93.

100-101. நெல்லி யமிழ்துவிளை தீங்கனி: "நிறைசுவை யமுத நெல்லியின் கனியும்" வி. பா. பழம் பொருந்து. 22.

100-103. "பூங்கமல வாவிசூழ் புள்வேளூர்ப் பூதனையும், ஆங்கு வரு பாற்பெண்ணை யாற்றினையும் - ஈங்கே, மறப்பித்தாய் வாழதிகா வன் கூற்றி னுவை, அறுப்பித்தா யாமலகந் தந்து" (ஔவையார் பாட்டு); "இனிய கனிகளென்றது ஔவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தா வனவற்றை" குறள். 100, பரி. உரை.

நட்டோ ருவப்ப நடைப்பரி கார
105 முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாட னள்ளியு நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த
110 காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
வோரிக் குதிரை யோரியு மெனவாங்
கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோ
ளெழுவர் பூண்ட வீகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
115 வொருதான் றாங்கிய வுரனுடை நோன்றா
ணறுவீ நாகமு மகிலு மாரமுந்
துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய

---

106. பி - ம். 'தளிமழை'

105 - 7. "தள்ளா தீயுந் தகைசால் வண்மைக், கொள்ளா ரோட்டிய நள்ளியும்" புறநா. ௧௫௮ : 15 - 6.

110. "காரி யூர்ந்து பேரமர்க் கடந்த, மாரி யீகை மறப்போர் மலையன்" (புறநா. ௧௫௮ : 6 - 7) ; காரிக்குதிரை : 'காரியென்னும் பெயரையுடைய குதிரையைச் செலுத்தி' ஷை ஷை ஷை, உரை.

110 - 11. காரியும் ஓரியும் பொருதமை, "செவ்வேன், முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வி, லோரிக் கொன்று" (அகநா. ௨0௯ : 11 - 14) என்பதனாலும் விளங்கும்.

84 - 111. எழு வள்ளல்களின் சரிதைகள் இங்கே கூறியபடி புறநானூறு, ௧௫௮ - ஆம் செய்யுளிலும் ஒருங்கே காணப்படும்.

112. எழுவுறழ்திணிதோள் : "எழுவுறழ் திணிதோ ளியறேர்க் குட்டுவன்" சிறுபாண். 49.

113. ஈகைச் செந்நுகம் : "பழிபடா வகையிற் காக்கும் படுநுகம் பூண்ப லென்றான்" சீவக. 203.

117. பி - ம். 'புணையாக'

தோட்புணை : "புணைகை விட்டுப் புனலோ டொழுகி, ணெண்டும் வருகுவள்" நற்றி. 222 : 3 - 4.

116 - 7. "நறையு நரந்தமு மகிலு மாரமுந், துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி, நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதொறும், புனலாடு மகளிர் கதுமெனக் குடைய" பொருந. 238 - 41.

பொருபுன றரூஉம் போக்கரு மரபிற்
றொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய
120 நன்மா விலங்கை மன்ன ருள்ளு
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வா
ளுறுபுலித் துப்பி னோவியர் பெருமகன்
களிற்றுத்தழும் பிருந்த கழறயங்கு திருந்தடிப்
பிடிக்கணஞ் சிதறும் பெயன்மழைத் தடக்கைப்
125 பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை
நல்லியக் கோடனை நயந்த கொள்கையொடு
தாங்கரு மரபிற் றன்னுந் தந்தை
வான்பொரு நெடுவரை வளனும் பாடி
முன்னாட் சென்றன மாக விந்நா
130 டிறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பான்முலை கவர்த னோனாது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லெ னட்டில்
காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த

---

124. பி-ம். 'கணஞ்சிந்தும்'
"புன்றலை மடப்பிடி பரிசி லாக" புறநா. ௧௫௧ : 4.
பெயன்மழைத்தடக்கை : "பொழிபெயல் வண்மையான்" கலி. ௫௭ : 12.

125-6. பேரிசை நல்லியக் கோடன்: "செல்லிசை நிலைஇய பண்பி, னல்லியக் கோடனை" சிறுபாண். 268-9.

119-26. "பெருமா விலங்கைத் தலைவன் சீறியா, ழில்லோர் சொன்மலை நல்லியக் கோடனை", "நெல்லமல் புறவி னிலங்கை கிழவோன்" புறநா. ௧௭௬ : 6-7, ௩௭௯ : 6.

127. தாங்கரு மரபின் : (சிறுபாண். 66) ; "நலம்பொறுக் கலாத பிண்டி" சீவக. 402.

127-8. மலையைப்பாடுதல் : "அவர், நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே" (குறுந். ௨௩ : ௫) ; "அணிநெடுங் குன்றம் பாடுதும்" (பரி. ௧௭ : 51) ; "பயமலை யேத்தி யகவினம் பாடுவாநாம்" (கலி. ௪௦ : 6-7); "தேமுயர் சிமயக் குன்றம் பாடும்" (அகநா. ௨௦௮ : 2); "நின்னு நின் மலையும் பாட" புறநா. ௧௪௩ : 12.

130. நாய்க்குட்டியைக் குருளை யென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். மரபு. சூ, 8, பேர்.

பூழி பூத்த புழற்கா ளாம்பி
135 யொல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளை யுப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடையடைத்
திரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையு
140 மழிபசி வருத்தம் வீடப் பொழிகவுட்
டறுகட் பூட்கைத் தயங்குமணி மருங்கிற்
சிறுகண் யானையொடு பெருந்தே ரெய்தி
யாமவ ணின்றும் வருது நீயிரு
மிவணயந் திருந்த விரும்பே ரொக்கற்
145 செம்ம லுள்ளமொடு செல்குவி ராயி
னலைநீர்த் தாழை யன்னம் பூப்பவுந்

---

134. ஆம்பி: "ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவா" புறநா. கசுச: 2.

138. "பெருமடமென்பது அஞ்ஞானம்; 'மடவோர்............ கடையடைத்து' என்பது சிறுபாணாற்றுப்படை" தக்க. 173, உரை.

140. அழிபசி: "அற்று ரழிபசி தீர்த்தல்" (குறள். 226); "அழிபசிப் பேயைப் பாராய்" தக்க. 787.

142-3. பரிசிலர்க்கு யானையொடு தேரை வழங்குதல் முதலியன: (பொருந. 163-73); "வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்து கொண், டியாமவ ணின்றும் வருதும்" (பெரும்பாண். 27-8); "தேரோடு மாசிதறி" (மதுரைக். 224); "தூமலர் துவன்றிய கரை பொரு நிவப்பின், மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங், கியாமவ ணின்றும் வருதும்" (மலைபடு. 51-3); "களிறுந் தேரும், வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசி" (பதிற். உo: 15-6); "நீயே, வளியி னியன்மிகுந் தேருங் களிறுந், தளியிற் சிறந்தனை வந்த புலவர்க், களி யொடு கைதூ வலை" (கலி. ருo: 15-7); "தேரோ, டொளிறுமருப் பேந்திய செம்மற், களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே", "இரவன் மாக்கள், களிறொடு நெடுந்தேர் வேண்டினுங் கடவ" புறநா. உoரு: 12-4, ஙகங: 3-4.

தும்மீற்றுத் தன்மைப்பன்மைவினைமுற்று நிகழ்காலமும் சிறு பான்மை காட்டுமென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். வினை. சூ. 5, ந; இ-வி. சூ. 50, உரை.

145. முருகு. 62-ஆவது அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

தலைநாட் செருந்தி தமனிய மருட்டவுங்
கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவு
நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவுங்
150 கானல் வெண்மணல் கடலுலாய் நிமிர்தரப்
பாடல் சான்ற நெய்த னெடுவழி
மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவிற் பட்டினம் படரி
னோங்குநிலை யொட்டகந் துயின்மடிந் தன்ன
155 வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகிற்
கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோண்
மதியேக் கறாஉ மாசறு திருமுகத்து
நுதிவே னோக்கி னுளைமக ளரித்த
பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்
160 கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்
றளையவிழ் தெரியற் றகையோற் பாடி
யறற்குழற் பாணி தூங்கி யவரொடு
வறற்குழற் சூட்டின் வயின்வயிற் பெறுகுவிர்
பைந்நனை யவரை பவழங் கோப்பவுங்

---

147. செருந்திமலர்க்குப் பொன்: "செருந்திபொன் சொரிதருந் திருநெல்வேலியுறை செல்வர்" தே. திருஞா.

148. கடுஞ்சூல்: "கடுஞ் சூலாநாகு" (கலி. ககO: 14); "கடுஞ் சூன் மகளிர்" மணி. எ: 82.

148. "மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானல்" (மதுரைச். 96); "மணிமருண் மலர முள்ளி" அகநா. உருகூ: 1.

149. "மண்ணாப் பசுமுத் தேய்ப்பக் குவியிணர்ப், புன்னை யரும்பிய புலவுநீர்ச் சேர்ப்ப" (நற். கூச: 5-6); "மண்ணா முத்த மரும்பிய புன்னை" அகநா. ந௦: 13.

152. பி-ம். 'வைப்பின்'

மணிநீர்: "மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்" (மதுரைக். 351); "மணிமரு டெண்ணீர்" (மலைபடு. 250); "மணிநீர்ச் சேர்ப்பன்" (ஐங். ககஎ: 4); "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்" குறள். 742.

153. படு-மடு; "படுவெழுந் நடுவெழும்" தக்க. 720.

155. "விரைமர முருட்டுந் திரையுலாப் பரப்பின்" மணி. அ: 5.

164. "பனிப்புத லிவர்ந்த பைங்கொடி யவரைக், கிளிவா யொப்பி னொளிவிடு பன்மலர்" குறுந். உசO: 1-2.

165 கருநனைக் காயாக் கணமயி லவிழவுங்
கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவுஞ்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவுங்
கொல்லை நெடுவழிக் கோப மூரவு
முல்லை சான்ற முல்லையம் புறவின்
170 விடர்கா லருவி வியன்மலை மூழ்கிச்
சுடர்கான் மாறிய செவ்வி நோக்கித்
திறல்வே லுதியிற் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூ ரெய்தி
னுறுவெயிற் குலைஇய வுருப்பவிர் குரம்பை
175 யெயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை யாயமொ

---

165. காயாவிற்கு மயிற்கழுத்து: "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென்மயி லெருத்திற் றோன்றும், கானவைப்பு" (குறுந். கஅரு: 5-7); "மயிலெருத்துறழணி மணிநிலத்துப் பிறழ - மயிலினது கழுத்தை மாறுபடுகின்ற அணியப்பட்ட காயாம்பூவாற் செய்த கண்ணிகள் பவளம்போலுநிறத்தையுடைய நிலத்தே மாறுபட்டு" (கலி. க0௲: 59, ந.); "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" சீவக. 1558.

166. பி-ம். 'கொட்டை கொள்ளவும்'

முசுண்டை: "அகலிரு விசும்பி னுஅல் போல, வாலிதின் விரிந்தன புன்கொடி முசுண்டை" மலைபடு. 100-101.

கொட்டம்: "கொட்டங் கொண்டோர் கட்டழ லுயிரா" பெருங். க: 46: 217.

167. "காந்தண் முகைபுரை விரல்" (புறநா. கசச: 8-9); பொருந. 33-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

169. முல்லையென்ற சொற்குப் பொருள் இருத்தலென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். அகத். சூ. 5, ந.

172. ஐந்தாவதன் உருபு உவமப்பொருளில் வருவதற்கு இவ்வடி மேற்கோள்; நன். மயிலை. சூ. 298; நன். வி. சூ. 299.

173. பி-ம். 'வென்றியவன் வேலூர்'

175. இன்புளி வெஞ்சோறு: "இன்புளிக் கலந்து.........குறமகளாக்கிய வாலவிழ் வல்சி" மலைபடு. 179-83.

176. முருகு. 143-4-ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.

டாமான் சூட்டி னமைவரப் பெறுகுவிர்
நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்
குறுங்காற் காஞ்சிக் கொம்ப ரேறி
180 நிலையருங் குட்ட நோக்கி நெடிதிருந்து
புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்
வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை
முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்குகவர் நீலச் செங்கட் சேவன்
185 மதிசே ரரவின் மானத் தோன்று
மருதஞ் சான்ற மருதத் தண்பணை
யந்தண ரருகா வருங்கடி வியனக
ரந்தண் கிடங்கினவ ளெழு ரெய்தின்
வலம்பட நடக்கும் வலிபுண ரெருத்தி
190 னுரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை
பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப

176-7. பி-ம். 'ஆயமொடி யாமான்'

180. நிலையருங்குட்டம்: "நிலையருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து" புறநா. ௨௪௩: 9, பி-ம்.

181. பி-ம். 'கயலெறிந்த'

"செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங், கெறிந்தது பெருஅத் திரையிழுந்து வருந்தி, மறிந்துநீங்கு மணிச்சிரல்" மணி. ௪: 22-4.

183. "முட்டாட் டாமரை" (முருகு. 73); "முட்டாள சுடர்த் தாமரை" மதுரை. 249.

186. "'மருதஞ் சான்ற.........பணை' என்புழி, மருதமென்றது ஊடியும் கூடியும் போகம் நுகர்தலை" தொல். அகத். சூ. 5, ந.

187. பி-ம். 'கடிவரைப்பின்'

190. மகளிரை இன்னாருடைய தங்கையெனக் கூறுதல் மரபு: "வல்விற் கானவர் தங்கை", "சிறுதினைத், துளரெறி நுண்டுகட் களைஞர் தங்கை" (குறுந். ௩௩௫: 6, ௩௯௨: 4-5); "கொலைவி லெயினர் தங்கை" (ஐங். ௩௬௩: 2); "கானவர் தங்கை" அகநா. ௧௩௨: 5.

190-91. பி-ம். 'தங்கைப்பிடி'

192. மகமுறை: (பெரும்பாண். 478); "மகமுறை தடுப்ப" மலை படு. 185.

191-2. "சிறுகண், ணிரும்பிடித் தடக்கை மான நெய்யருந், தொருங்குபிணித் தியன்ற வெறிகொ ளைம்பால்", "பிடிக்கை யன்ன

விருங்கா ழூலக்கை யிரும்புமுகந் தேய்த்த
வவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு
195 கவைத்தா ளலவன் கலவையொடு பெறுகுவி
ரரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக்
கருமறிக் காதிற் கவையடிப் பேய்மக
ளிணைனுண்டு சிரித்த தோற்றம் போலப்
பிணனுகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தா
200 ளண்ணல் யானை யருவிதுக ளவிப்ப
நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்
சேய்த்து மன்று சிறிதுநணி யதுவே
பொருநர்க் காயினும் புலவர்க் காயினு
மருமறை நாவி னந்தணர்க் காயினுங்
205 கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன
வடையா வாயிலவ னருங்கடை குறுகிச்
செய்ந்நன்றி யறிதலுஞ் சிற்றின மின்மையு
மின்முக முடைமையு மினிய ளுதலுஞ்

---

பின்னகந் தீண்டித், தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று" (அகநா. கஎஎ: 3-5, க: 22-3); "மாரிப் பிடிக்கை நால்புறல் கடுப்ப, நீர் பொறை யாற்றாது நெகிழ்ந்துவீ ழிசைந்த, காரிருங் கூந்தல்" (பெருங். க. ௪௦: 193-5); "பிடிக்கைக் கூந்தல்" சீவக. 2663.

194. "அவைப்புமா ணரிசி" அகநா. ௩௯௪: 3.

அமலைவெண்சோறு: "அமலைக் கொழுஞ்சோறு" புறநா. ௩௪: 14.

196. பி-ம். 'நாவிலங் கெயிற்று'

197. கவர்வு விருப்பாகு மென்னுஞ் சூத்திரத்தில், "கவைத்தாற் சொற்புறநடையாற் கொள்க" என்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 64, ந.

"கண்டொட் டுண்டு கவையடி பெயர்த்து" மணி. ௬: 125.

199-200. "முடியுடைக் கருந்தலை புரட்டு முன்று, ளுகிருடை யடிய வோங்கெழில் யானை" பட். 230-31.

201. "களிறுகா லுதைத்த புஞ்சப் பூழியொடு, மான்றுக ளவிய மதுப்பலி தூவவும்" பெருங். க. 33: 85-6.

206. "அடையாத வாயிலகம்" (நள. 65); "விலக்கிய வடையா நெடுங்கடை மருவி" திருக்காளத்திப். பரத்துவாச. 35.

203-6. "நசையுநர்த் தடையா நன்பெரு வாயில், இசைபெண் புக்கென் னிடும்பை தீர" பொருந. 66-7.

செறிந்துவிளங்கு சிறப்பி னறிந்தோ ரேத்த
210 வஞ்சினர்க் களித்தலும் வெஞ்சின மின்மையு
மாணணி புகுதலு மழிபடை தாங்கலும்
வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்தக்
கருதியது முடித்தலுங் காமுறப் படுதலு
மொருவழிப் படாமையு மோடிய துணர்தலு
215 மரியே ருண்க ணரிவைய ரேத்த
வறிவுமடம் படுதலு மறிவுநன் குடைமையும்
வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்தப்
பன்மீ னடுவட் பான்மதி போல
220 வின்னகை யாயமோ டிருந்தோற் குறுகிப்

---

212. "ஒன்னா ரோட்டிய செருப்புகன் மறவர், வாள்வலம் புணர்ந்தநின் றாள்வலம் வாழ்த்த" (மதுரை. 726 - 7); "வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த" (புறநா. உச : 29); "வாய்வாண் மறவரும் வாள்வல னேத்த" சீலப். உகூ : 77.

214. பி - ம். 'ஊடிய துணர்தலும்'

"சூட்டியன் றேகிற்ப தோடிய வாறிவ ளுள்ளம்" திருச்சிற். 284.

'ஓடுதல் - கெடுதல்' என்பதற்கு இது மேற்கோள்; சீவக. 2381.

216. பி - ம். 'அறிமடம்'

217. வரிசையறிதல்: "பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி", "பரிசின் மாக்கள், வரிசை யறிதலோ வரிதே பெரிது, மீத லெளிதே" (புறநா. சு : 16, கஉக : 2 - 4); "வேந்தன் வரிசையா நோக்கி, னது நோக்கி வாழ்வார் பலர்" குறள். 528.

219. "பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்", "மாரி வானத்து மீனாப்பண், விரிகதிர வெண்டிங்களின்" (புறநா. கரு: 6, ௩கூகூ: 26 - 7); "மன்ன ராதிபன் றாரகா கணத்திடை மதியெனப் புறப்பட்டான்" வி. பா. சூதுபோர். அஅ.

220. இன்னகையாயம்: "நகையம ராய நடுங்க நடுங்கா" (பு. வெ. 75); பொருந. 85 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

219 - 20. "பன்மீ னடுவட் டிங்கள் போலவும், பூத்த சுற்றமொடு பொலிந்து" (மதுரை. 769 - 70); "பன்மீ னாப்பட் டிங்கள் போலப், பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை" (பதிற். கூ0 : 17 - 8); "விசும்பிற், கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்ற மொத்தே" சீவக. 882, ந. மேற்.

பைங்க ணூகம் பாம்புபிடித் தன்ன
வங்கோட்டுச் செறிந்த வவிழ்ந்துவீங்கு திவவின்
மணிநிரைத் தன்ன வனப்பின் வாயமைத்து
வயிறுசேர் பொழுகிய வகையமை யகளத்துக்
225 கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு தேம்பெய்
தமிழ்துபொதிந் திலிற்று மடங்குபுரி நரம்பிற்
பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்விக்
கூடுகொ ளின்னியங் குரல்குர லாக
230 நூனெறி மரபிற் பண்ணி யானாது
முதுவோர்க்கு முகிழ்த்த கையினை யெனவு
மிளையோர்க்கு மலர்ந்த மார்பினை யெனவு
மேரோர்க்கு நிழன்ற கோலினை யெனவுந்
தேரோர்க் கழன்ற வேலினை யெனவு
235 நீசில மொழியா வளவை மாசில்
காம்புசொலித் தன்ன வறுவை யுடீஇப்

222. கோடு: "மகர யாழின் வான்கோடு தழீஇ" மணி. ச: 56.

227. "ஆசில் பாட லமிழ்துறழ் நல்யாழ்" பெருங். க. 37: 150.

226-7. "தீந்தே, னணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்" சீவக. 722.

228. "பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே" (புறநா. உக: 11); "பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தன்" சிலப். உஎ: 46.

229. இயம் - யாழ்: "இயம்வெளிப் படுத்தபி னிசைவெளிப் படீஇய" பெருங். க. 37: 118.

232. "வணங்குசிலை பொருதநின் மணங்கமழ் அகலம், மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே" (பதிற். கூ௩: 4-5), "மகளிர் மலைத்த லல்லது மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" (புறநா. க0: 9-10); "சோலைமயி லார்கடுணை வெம்முலைக டுஞ்சுங், கோலவரை மார்பு" சீவக. 283.

233. 'நிழன்று - நிழல் செய்து' என்பதற்கு இவ்வடி மேற்கோள். சீவக. 1270, ந.

235. நீசில மொழியாவளவை: "குறித்தது மொழியா வளவை யின்" முருகு. 281.

236. புறநா. ௩அ௩: 9-11.

பாம்புவெகுண் டன்ன தேற னல்கிக்
காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப்
பூவிரி கச்சைப் புகழோன் றன்முன்
240 பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்
பனுவலின் வழாஅப் பல்வே றடிசில்
வாணிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த
விளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி
245 யானா விருப்பிற் றானின் றூட்டித்
திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புல மகற்றி
விறல்வேன் மன்னர் மன்னெயின் முருக்கி
நயவர் பாணர் புன்கண் டீர்த்தபின்
வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு
250 பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி

237. "பாப்புக்கடுப் பன்ன தோப்பி" (அகநா. ருசஅ: 7); "அரவுவெகுண் டன்ன தேறலொடு" (புறநா. ருஎசு: 14); "நச்சரா வெயிறுகதுவிய தனைய கடுநற" துலோத். பிள்ளைத்.

238-9. "உரக்குரங் குயர்த்த வொண்சிலை யுரவோன், காவெரி யூட்டிய நாள்" (சிலப். உஉ: 111-2); "தீவயி றார்த்திய திறலோன் போல" பெருங். க. 46: 91.

"'காவெரி........முன்' எனப் பீமசேனற்குப் பெயராயிற்றெனவு ணர்க. இது சிறப்புடைத்தான சிறுபாணாற்றுப்படை" தக்க. 10, உரை.

240. "பொன்வரை யன்ன பொருவி லாகத்து" பெருங். உ.10: 5.

238-41. "ஐவரு ளொருவ னன்ன அடிசினூன் மடையன்" (சீவக. 2735); "மடைநூற் செய்தியும்" மணி. உ: 22.

243. மு. "இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து" மணி. பதி.1.

244. பி-ம். 'விரும்பினன் பேணி'

245. மு. "ஆனா விருப்பிற் றானின் றூட்டி" பெரும்பாண். 479.

247-8. "ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தொழித்த, விசும்புசெ லிவுளியொடு பசும்படை தரீஇ" (பெரும்பாண். 491-2), "செய்வி னைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக், கடற்படை குளிப்ப மண்டி யடர்ப் புகர்ச், சிறுகண் யானை செவ்விதி னேவிப், பாசவற் படப்பை யாரெயில் பலதந், தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம், பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி" (புறநா. சு: 11-6); "குரிசி லடையாரைக் கொண்ட கூட் டெல்லாம், பரிசின் முகந்தன பாண்" பு. வெ. 51.

250. பாற்கதிர்: "பான்முகந் தன்ன பசுவெண் ணிலவின்" (நற். கககு: 2); "பாலெனப் பரத்தரு நிலவின் மாலை" (அகநா. உகூக: 9);

யுருவ வான்மதி யூர்கொண் டாங்குக்
கூருளி பொருத வடுவாழ் நோன்குறட்
டாரஞ் சூழ்ந்த வயில்வாய் நேமியொடு
சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத்
255 ததர்பிணி யவிழ்ந்த தோற்றம் போல
வுள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக்
கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி
யூர்ந்துபெயர் பெற்ற வெழினடைப் பாகரொடு
மாசெல வொழிக்கு மதனுடை நோன்றாள்
260 வாண்முகப் பாண்டில் வலவனொடு தரீஇ
யன்றே விடுக்குமவன் பரிசின் மென்றோட்
டுகிலணி யல்குற் றுளங்கியன் மகளி
ரகிலுண விரித்த வம்மென் கூந்தலின்
மணிமயிற் கலாப மஞ்சிறைப் பரப்பித்
265 துணிமழை தவழுந் துயல்கழை நெடுங்கோட்
டெறிந்துரு மிறந்த வேற்றருஞ் சென்னிக்
குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்
செல்லிசை நிலைஇய பண்பி
னல்லியக் கோடனை நயந்தனிர் செலினே.

---

"பானிலா வெண்கதிர்" (சிலப். ௧௩: 27); "தீம்பால் கதிர்மணிக் குடத்தி னேந்தி, வீழ்தரச் சொரிவ தேபோல் விளங்கொளித் திங்கட் புத்தேள், சூழிருட் டொழுதி மூழ்கத் தீங்கதிர் சொரிந்து" (சீவக. 1541); "பானிலாவை" தக்க. 605.

254 - 5. "சிதவற் றுணியொடு சேணோங்கு நெடுஞ்சினைத், ததர் வீழ் பொடித்து" மணி. ௩ : 106 - 7.

260. "பொற்றார் புனைந்த புள்ளியற் பாண்டில்", "பாண்டில் வையம்" பெருங். ௧. 36 : 32 ; ௩. 5 : 65.

263. "அகிலுண விரிந்த வம்மென் கூந்தல்" (சிலப். ௨அ : 17); "அகிலுண விரிந்த கூந்த லாய்ச்சியர்" பாகவதம், ௧௦. 19 : 18.

263 - 4. இப்பாட்டின், 14-5-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

267. கொய்தளிர்க்கண்ணி : "கொய்தார மார்பினெங் கோ "கொய்தார மார்பிற் கொழுநன்" பு. வெ. 95, 278.

268. "நல்லிசை தம்வயி னிறுமார் வல்வேல், வானவரம்பனன் னுட் டும்பர்" அகநா. ௩அக: 15 - 6.

## இதன்பொருள்.

1-2. [மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை, யணிமுலைத் துயல்வரூஉ மாரம் போல:] பணை தோள் மா நிலம் மடந்தை மணி மலை அணி முலை துயல்வரூஉம் ஆரம் போல - மூங்கிலாகிய தோளையுடைய பெருமையினையுடைய மண்மகளுடைய 1 மணிகள் தங்கின 2 மலையாகிய அழகினையுடைய முலையிற் கிடந்தசையும் முத்துவடம்போல,

3-4. [செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக், கொல்கரை நறும்பொழில்:] சேய் வரல் கரை கொல் கான்யாறு செல் புனல் உழந்த நறு பொழில் - 3 மலைத்தலையினின்றும் வருதலையுடைய கரையைக் குத்துகின்ற காட்டாற்றிடத்து ஓடுகின்ற புனலாலே வருந்தின நறிய பொழிலிடத்து,

இரண்டு மலையினின்றும் வீழ்ந்து இரண்டு ஆற்றிடைக்குறையைச் சூழ வந்து பின்னர்க் கூடுதலின், முத்துவடம் உவமையாயிற்று; இது மெய்யுவமம். பெருக்காற் கோடுகள் வருந்துதலின், உழந்தவென்றார். இதனாற்பயன்: 4 ஆற்றிடைக்குறையில் நின்றமரம் இளவேனிற்காலத்து மிகவும் பூத்ததாயிற்று.

4-8. [குயில்குடைந் துதிர்த்த, புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடை நெறித்துக், கதுப்புவிரித் தன்ன காழக நுணங்கற, லயிலுருப் பனைய வாகி யைதுநடந்து, வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப:]

காழ் அகம் நுணங்கு அறல் (6) குயில் குடைந்து உதிர்த்த (4) புது பூ செம்மல் சூடி புடை நெறித்து (5) கதுப்பு விரித்தன்ன (6) வேனில் நின்ற (9) - கருமையை இடத்தேயுடைய நுண்மையையுடைய அறல் குயில்கள் அலகாலுளர்ந்து உதிர்த்த புதிய பூக்களாகிய வாடலைச்சூடித் தம்மிடமெல்லாம் அறல்பட்டு மயிரை விரித்தாலொத்த தன்மையவாக இளவேனில் நின்றவென்க.

பொழிலிடத்து (4) அறலென்க.

---

1 "மாமலை பயந்த காமரு மணியும்", "மலைபயந்த மணியும்" புறநா. உகஅ: 2, ௩௭௭: 16.

2 "சோதிமதி வந்துதவழ் சோலைமலை யோடிரண்டாய், மேதினி யாள் கொங்கைநிகர் வேங்கடமே" (திருவேங்கட மாலை), "கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றும்" திருவிளை. ௩கர. 2.

3 "மலைத்தலைய கடற்காவிரி" (பட். 6); "கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்" கம்ப. ஆற்றுப். 19.

4 "வீமலி கான்யாற்றின் றுருத்தி" (பரி. க0: 30); "நிலம்பூத்த மரம்" கலி. உ௭: 9.

வெயில் உருப்பு உற்ற வெம்பரல் (8) - வெயிலால் வெம்மையுற்ற வெவ்விய பருக்கை,

அயில் உருப்பு அனைய ஆகி (7) கிழிப்ப (8) சுரன் மராத்த வரி நிழல் முதல் அசைஇ (12) ஐது நடந்து (7) - வேல் காய்ந்த தன்மையவாய் அடியைக் கிழிக்கையினாலே அருங்கானகத்துநின்ற கடம்பினுடைய செறியாத நிழலை உடைத்தாகிய அடியிலே இளைப்பாறிப் பின்பு போக வேண்டுதலின் மெத்தென நடந்து,

9-11. [வேனி னின்ற வெம்பத வழிநாட், காலைஞா யிற்றுக் கதிர்கடா வுறுப்பப், பாலை நின்ற பாலை நெடுவழி :] வேனில் நின்ற காலை வழிநாள் ஞாயிறு கதிர் கடாவுறுப்ப வெம்பதம் பாலை நின்ற பாலை நெடு வழி - இளவேனில் நிலைபெற்ற காலத்திற்குப் பின்னாகிய நாளிலே ஞாயிற்றினுடைய கதிர் வெம்மையைச் செலுத்தலைச் செய்கையினாலே வெய்ய செவ்வியையுடைய [1] பாலைத்தன்மை நிலைபெற்றமையாற் பிறந்த பாலைநிலமாகிய தொலையாத வழியினையுடைய சுரனென்க (12);

[2] "நடுவுநிலைத் திணையே" என்னுஞ் சூத்திரத்துரையாற் பாலைத் தன்மை கூறினும்; அதுகொண்டு உணர்க. பாலைநின்ற பாலைவழி, "ஆறுசென்ற வியர்" போல நின்றது.

12. [சுரன்முதன் மராஅத்த வரிநிழ லசைஇ] என்பதனை முன்னே கூட்டுக.

13-4. [ஐதுவீ ழிகுபெய லழகுகொண் டருளி, நெய்கனிந் திருளிய கதுப்பின் :] அருளி ஐது வீழ் இகு பெயல் அழகு கொண்டு நெய் கனிந்து இருளிய கதுப்பின் - உலகிற்கு அருளுதலைச்செய்து மெல்லி தாய் வீழ்ந்து தாழ்கின்ற மழையினது அழகைத் தன்னிடத்தே கொண்டு [3] எண்ணெயிலே முற்றுப்பெற்று இருண்ட மயிரினையும்,

14-6. [கதுப்பென, மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன், மயின்மயிற் குளிக்குஞ் சாயல் :] மயில் பலவுடன் மணி வயின் கலாபம் கதுப்பு என பரப்பி மயில் [4] குளிக்கும் சாயல் - மயில்கள் பலவுங்கூடி [5] நீலமணிபோலுங் [6] கண்ணினையுடைய தோகைகளை மகளிர் மயிரை

---

[1] பாலைத்தன்மையாவது காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை கூரச் சோலைதேம்பிக் கூவல் மாறி நீரும்நிழலுமின்றி நிலம்பயந்துறந்து புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெறுவது தொல். அகத். சூ. 9, ந.

[2] தொல்காப்பியம், அகத்திணையியல், சூ. 9.

[3] "எண்ணெயு நானமு மிவைமூழ்கி" சீவக. 164.

[4] குளிக்கும் - மறைதற்குக் காரணமான: "குளித்தொழுகினாய் - மறைந்து நடந்தாய்" கலி. கஅ : 22.

[5] "ஒள்ளொளி மணிப்பொறி யான்மஞ்ஞை" பரி. கஅ : 7.

[6] கண் - பீலியிடத்ததாகிய கண்.

விரித்தாற்போல விரித்துப்பார்த்து இவர்கள் சாயற்கு ஒவ்வேமென்று பேட்டிற்குள்ளே சென்று மறைதற்குக் காரணமாகிய 1 கட்புலனாகிய மென்மையினையும்,

16-8. சாஅய் உயங்கு நாய் நாவின் நல் எழில் அசைஇ வயங்கு இழை உலறிய அடியின் - ஓடியிளைத்து வருந்துகின்ற நாயினது நாக்கி னுடைய நல்ல அழகை வருத்தி வறுமையாலே விளங்குகின்ற சிலம்பு முதலியனவின்றிப் பொலிவழிந்த அடியினையும்,

18-9. [அடிதொடர்ந், தீர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கை யின் :] ஈர்ந்து நிலம் தோயும்,இரு பிடி தட கையின் அடி தொடர்ந்து - இழுக்கப்பட்டு நிலத்தே செறியும் கரிய பிடியினது பெருமையையுடைய கைபோலத் தாமும் அடியோடே தொடர்புபட்டு முறையாற் பருத்து,

20-21. [சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென, மால்வரை யொழுகிய வாழை :]

மால் வரை ஒழுகிய வாழை என சேர்ந்து - பெருமையையுடைய மலையிலே ஒழுங்குபட வளர்ந்த வாழையெனத் திரண்டு,

2 சேரென்னு முரிச்சொல் முதனிலையாகச் சேர்ந்தென்னும் வினை யெச்சம் வந்தது.

குறங்குடன் செறிந்த குறங்கின் - ஒரு குறங்குடனே ஒரு குறங்கு நெருங்கியிருக்கின்ற குறங்கினையும்,

21-2. வாழை பூ என பொலிந்த ஓதி - வாழையினது பூவென் னும்படி அழகுபெற்ற 3 பனிச்சையினையும்,

22-4. [ஓதி, நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக், களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்து :] களி சுரும்பு நளி சினை வேங்கை நாள் மலர் நச்சி ஓதி அரற்றும் சுணங்கின் சுணங்கு பிதிர்ந்து - களிப் பினையுடைய சுரும்புகள் செறிவினையுடைத்தாகிய கொம்பினையுடைய வேங்கையினது நாட்காலத்து மலரென்று விரும்பிப்பாடி ஆரவாரிக்கும் ஓரிடத்திற்றோன்றிய சுணங்குடனே ஓரிடத்திற்றோன்றிய சுணங்கு பிதிர்பட்டு,

---

1 "சாயலென்னுஞ்சொல், மெய் வாய் கண் மூக்குச் செவி யென் னும் ஐம்பொறியானுநுகரும் மென்மையை உணர்த்தும்" (தொல். உரி. சூ. 27, ந.); "'சாயன் மென்மை' என்று பொதுப்படச் சூத்திரஞ் செய்தது ஐம்பொறியானு நுகருமென்மையெல்லாம் அடங்குதற்கு" சீவக. 8, ந.

2 "சேரே திரட்சி" தொல். உரி. சூ. 65.

3 பனிச்சை - மகளிர்கூந்தலின் ஐம்பால்களுள் ஒன்று (முன்னுச்சி மயிர்); தக்க. 25, உரை.

25-6. யாணர் கோங்கின் அவிர் முகை எள்ளி பூண் அகத்து ஒடுங்கிய வெம்முலை - புதிதாகப் பூத்தலையுடைய கோங்கினது விளங்குகின்ற முகையை இகழ்ந்து மெல்லிய பணிகள் இடையிலே கிடக்கின்ற விருப்பத்தையுடைய முலையினையும்,

26-8. [முலையென, வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கி, னின்சே றிகுதரு மெயிற்றின் :] வள் கோள் பெண்ணை முலையென வளர்த்த நுங்கின் இன் சேறு இகுதரும் எயிற்றின் - பெரியகுலையினையுடைய பனை முலையென்னும்படி வளர்த்த நுங்கினது இனிய செறிந்த நீர் தன்னீர்மையாற் ருழும் எயிற்றினையும்,

28-30. [எயிறெனக், குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த, முல்லை சான்ற கற்பின் :] குல்லை அம் புறவில் குவி முகை எயிறென அவிழ்ந்த முல்லை சான்ற கற்பின் - கஞ்சங்குல்லையையுடைய அழகிய காட்டகத்தே குவிந்த அரும்பு எயிறென்னும்படி நெகிழ்ந்த முல்லைசூடுதற்கமைந்த கற்பினையும்,

கற்பின் மிகுதிதோன்ற 1 முல்லை சூடுதல் இயல்பு.

கதுப்பிற் கதுப்பென்பது (14) முதல் இத்துணையும் இயைபுத் தொடை திரிந்து வந்ததென்றறிக; 2 "இறுவாயொன்றல்" என்னுஞ் சூத்திரத்துட் கூறினும்.

30-31. மெல்லியல் மடம் மான் நோக்கின் வாள் நுதல் விறலியர் - மெல்லிய இயல்பினையும், மடப்பத்தினையுடைய மான்போலும் பார்வையினையும், ஒளியையுடைத்தாகிய நுதலினையுமுடைய 3 விறல்பட ஆடுமகளிர்,

---

1 "பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார்" (சீவக. 624) என்பதற்கு, 'முல்லைச் சூட்டைக் கற்பிற்குத் தலையிலே சூட்டினாரென்க' என்றும், "முல்லைச்சூட்டு மிலைச்சி" (சீவக. 2438) என்பதற்கு, 'முல்லைச்சூட்டைக் கற்பிற்கு மிலைச்சி' என்றும் நச்சினார்க்கினியர் எழுதிய உரையும், "வாணுத லரிவை முல்லை மலைய" (ஐங். ௪0௮), "முடிச்சூட்டு முல்லையோ முதற்கற்பு முல்லையோ" (தக்க. 119), "முல்லை யங்தொடையருந்ததி" (பிரபு. கைலாய. 27), "முல்லைசான் மனையு லோபா முத்திரை" (சீகாளத்தி. பொன்முகரி. 21) என்பவையும் இக்கருத்தை வலியுறுத்தும்.

2 தொல். செய். சூ. 96; இப்பொழுது வழங்கும் நச்சினார்க்கினியர் உரையில் இப்பகுதி காணப்படவில்லை.

3 விறல் - சத்துவம்; வேம்புதின்றார்க்குத் தலை நடுங்குவதுபோல அஞ்சத்தக்கது முதலியவற்றைக் கேட்டவிடத்துப் பிறந்த உள்ளநிகழ்ச்சியால் தாமே தோன்றும் நடுக்கமுதலாயின.

கதுப்பினையும் (14) ஓதியினையும் (22) நுதலினையும் நோக்கினையும் (31) எயிற்றினையும் (28) முலையினையும் (26) குறங்கினையும் (20) அடியினையும் (18) சாயலினையும் (16) மெல்லிய இயல்பினையும் கற்பினையு (30) முடைய விறலியரென்க.

32 - 3. நடை மெலிந்து அசைஇய நல் மெல் சிறு அடி கல்லா இளையர் மெல்ல தைவர - நடையால் இளைத்து ஓய்ந்த நன்மையையுடைய மெல்லிய சிறிய அடியைத் [1] தம்தொழிலையொழிய வேறு கல்லாத இளையர் மெத்தென்று வருட,

34 - 5. பொன் வார்ந்தன்ன புரி அடங்கு நரம்பின் இன் குரல் சிறு யாழ் இடம் வயின் தழீஇ - பொற்கம்பியினையொத்த முறுக்கடங்கின நரம்பினது இனிய ஓசையையுடைய சிறிய யாழை இடப்பக்கத்தே தழுவி,

36 - 7. நைவளம் பழுநிய நயம் தெரி பாலை கை வல் பாண்மகன் கடன் அறிந்து இயக்க - நட்டபாடையென்னும்பண் முற்றுப்பெற்ற இனிமை தெரிகின்ற பாலையாழை வாசித்தலைவல்ல பாணனாகியமகன் வாசிக்குமுறைமையை அறிந்து வாசிக்க,

38. இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇ - வள்ளியோரின்மையின் பரிசிலர் செல்லாத உலகத்தே பரிசில்தருவாரை விரும்பி,

இனி இயங்கும்வையம் சகடமாகலின், உலகத்திற்கு இயங்காவையமென வெளிப்படை கூறிற்றுமாம்.

39. துனி கூர் எவ்வமொடு துயர் ஆற்றுப்படுப்ப - தன்னை வெறுத்தல் மிக்க வருத்தத்தோடே கூடின வறுமை நின்னைக் கொண்டுபோகையினாலே,

40. முனிவு இகந்து இருந்த முது வாய் இரவல - வழிவருத்தந் தீர்ந்திருந்த பேரறிவுவாய்த்தற்றொழிலை யுடையையாய இரவல,

துயர் ஆற்றுப்படுக்கையினாலே போந்து (39) விறலியர் தம்முடைய (31) சீறடியை (32) வெம்பரல் (8) அயிலுருப்பனையவாகிக் (7) கிழிக்கையினாலே (8) வரிநிழலசைஇப் (12) பின்னும் ஆற்றுந்தகைபெற ஐது நடந்து (7) அந்நடையால் இளைத்து ஓய்ந்த அடியை (32) இளையர் தைவரப் (33) பாண்மகன் (37) பாலையை (36) இயக்க (37) வள்ளியோர் நசைஇச் (38) சீறியாழ் இடவயிற்றழீஇ (35) முனிவிகந்திருந்த இரவலவென முடிக்க.

41 - 2. கொழு மீன் குறைய ஒதுங்கி வள் இதழ் கழுநீர் மேய்ந்த கய வாய் எருமை - கொழுவிய மீன் துணிய நடந்து வளவிய இதழை

---

[1] " கல்லா விளைஞர் " (பொரு௩. 100) என்பதன் உரையில், 'இனி, தத்தம் சிறுதொழிலன்றி வேறொன்றுங் கல்லாத இளைஞர்........என்றுமாம்' என்றெழுதிய பகுதியைக் காண்க.

யுடைத்தாகிய செங்கழுநீர்ப்பூவைத் தின்ற பெரிய வாயையுடைய எருமை,

43-4. பைங்கறி நிவந்த பலவின் நீழல் மஞ்சள் மெல் இலை மயிர் புறம் தைவர - பசிய மிளகுகொடி படர்ந்த பலாவின் நீழலிலே மஞ்சளினது மெல்லிய இலை தனது மயிரையுடைய முதுகைத்தடவ,

45. விளையா இள கள் நாற மெல்குபு பெயரா - முற்றாத இளைய தேன் நாறமென்று [1] அசையிட்டு,

46. குளவி பள்ளி பாயல் கொள்ளும் - காட்டுமல்லிகையாகிய படுக்கையிலே துயில்கொள்ளும்,

47. குட புலம் காவலர் மருமான் - மேற்றிசைக்கணுள்ள நிலத்தைக் காத்தற்றொழிலையுடைய சேரர் குடியிலுள்ளோன்,

எருமை (42) நீழலிலே (43) தைவரப் (44) பெயராக் (45) கொள்ளும் (46) குடபுலமென முடிக்க.

47-9. ஒன்னார் வடபுலம் இமயத்து வாங்கு வில் [2] பொறித்த எழு உறழ் திணி தோள் இயல் தேர் குட்டுவன் - பகைவருடைய வடக்கின் கண் உள்ளதாகிய நிலத்திடத்தே நிற்கும் இமவானின்கண்ணே வளையும் வில்லை வைத்த கணையத்தைமாறுபடும் திணிந்த தோளினையும் நடக்கின்ற தேரினையுமுடைய குட்டநாட்டை யுடையோன்,

50. வரு புனல் வாயில் வஞ்சியும் வறிது - பெருகுகின்ற நீரையும் கோபுரவாயிலையுமுடைய வஞ்சியென்னும் ஊரும் தரும்பரிசில் சிறியதாயிருக்கும்;

மருமான் (47) குட்டுவன் (49) அவனுடைய வஞ்சியும் வறிதென முடிக்க.

50. அதாஅன்று - அவ்வூரன்றி,

51-2. நறவு வாய் உறைக்கும் நாகு முதிர் நுணவத்து அறை வாய் குறு துணி - தேனைப் பூக்கள் தம்மிடத்தினின்று துளிக்கும் இளமைமுதிர்ந்த நுணமரத்தினது வெட்டின வாயையுடைய குறிய [3] குறட்டை,

52-3. [அயிலுளி பொருத, கைபுனை செப்பங் கடைந்த மார்பின்:] அயில் உளி கடைந்த கைபுனை செப்பம் பொருத மார்பின் மந்தி (56) - கூர்மையையுடைய உளிகள் உள்ளேசென்று கடைந்த சாதிலிங்கந் தோய்ந்த [4] சேப்புச்சேர்ந்த மார்பின் மந்தி,

---

1 அசை போடலெனவும் இத்தொடர் வழங்கும்.

2 பொறித்தல் - வைத்தல்: "மாபொறித்த மால் - திருமார்பிடத்தே திருமகளை வைத்த மால்" முல்லை. 2 - 3, ந. 3 குறடு - கட்டை.

4 சேப்பு - செம்மைநிறம்; "கழற்கால் சேக்குஞ், சேப்புடையார்" திருவாப்பனூர்ப்புராணம், பாயிரம், 3.

54. செய் பூ கண்ணி செவி முதல் திருத்தி - [1] கிடேச்சையாற் செய்த பூவினையுடைய மாலையைச் செவியடியிலே நெற்றிமாலையாகக் கட்டி,

55. நோன் பகடு உமணர் ஒழுகையொடு வந்த மந்தி (56) - வலியினையுடைத்தாகிய எருத்தினையுடைய உப்புவாணிகருடைய சகடவொழுங்கோடே கூடவந்த மந்தி,

56. மகாஅர் அன்ன மந்தி - அவர்கள் வளர்த்தலின் அவர்கள் பிள்ளைகளையொத்த மந்தி,

56 - 8. மடவோர் [2] நகாஅர் அன்ன நளி நீர் முத்தம் வாள் வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி - அவ்விடத்து மடப்பத்தையுடைய மகளிருடைய எயிற்றையொத்த செறிந்த நீர்மையையுடைய முத்தை வாள் வாய்போலும் வாயையுடைய கிளிஞ்சிலின் வயிற்றிடத்தே இட்டுப் பொதிந்து,

59 - 60. [தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பி, னுளரிய லைம்பா லுமட்டிய சீன்ற :]

நுசுப்பின் நல்கூர் புறம் தோள் மறைக்கும் உமட்டியர் - நுசுப்பினது நல்கூர்ந்த [3] புறத்தைத் தோள் மறைக்கும் உமட்டியர்,

என்றது : இடை தனது நுண்மையால் நெகிழமுயங்குங்காலத்து ஊற்றின்பம்பெறாது மிடிப்பட்ட புறத்தினைத் தோள் இறுகமுயங்கி அவ்வின்பத்தைக் கொடுத்தற்குக் காரணமான உமட்டியரென்றவாறு.

ஊற்றின்பம் பெற்றறியாதென்னும் புறங்கூற்றையென்றுமாம்,

உளர் இயல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற - அசைகின்ற இயல்பினையுடைய ஐந்துபகுதியாகிய மயிரினையுடைய உப்புவாணிகத்தியர்பெற்ற,

61. கிளர் பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும் - விளங்குகின்ற பூணையுடைய பிள்ளைகளுடனே தானும் கிலுகிலுப்பை கொண்டு விளையாடும்,

62. தத்து நீர் வரைப்பின் கொற்கை கோமான் - முரிகின்ற நீரைத் தனக்கு எல்லையாகவுடைய கொற்கையென்னும் ஊர்க்கு அரசன்,

மந்தி முத்தையடக்கி உமட்டியரீன்ற புதல்வரோடே ஆடுங் கொற்கையென முடிக்க.

63. தென் புலம் காவலர் மருமான் - தெற்கின் கண்ணதாகிய நிலத்தைக் காத்தற்றொழிலையுடையார் குடியிலுள்ளோன்,

63 - 5. [ஒன்னார், மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக், கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்:]

---

[1] கிடேச்சை - நெட்டி. [2] "நகார் : ஆகுபெயர்" கலி. கூ : 18, ந. [3] புறம் - இடம்.

ஒன்னார் மண் மாறு கொண்ட செழியன் - பகைவர் நிலத்தை மாறு பாட்டாலே கைக்கொண்ட பாண்டியன்,

மாலை வெண்குடை கண் ஆர் கண்ணி கடு தேர் செழியன் - முத்த மாலையையுடைய 1 கொற்றக்குடையினையும் 2 கண்ணிற்கு அழகு நிறைந்த கண்ணியினையும் கடிய தேரினையுமுடைய செழியன்,

66 - 7. [தமிழ்நிலைபெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே :] நனை மகிழ் தாங்கரு மரபின் தமிழ் நிலைபெற்ற மறுகின் மதுரையும் வறிது - தன்னிடத்துத் தோன்றிய மனமகிழ்ச்சி பொறுத்தற்கரிய முறைமையினையுடைய தமிழ் வீற்றிருந்த தெருவினையுடைய மதுரையும் வறிது ;

நனைமகிழ் : வினைத்தொகை.

கோமான் (62) மருமான் (63) செழியன் (65) அவனுடைய மதுரையும் தரும் பரிசில் சிறிதாயிருக்கும்.

67. அதாஅன்று - அவ்வூரன்றி,

68. [நறுநீர்ப் பொய்கை யடைகரை நிவந்த :] பொய்கை நறு நீர் அடைகரை நிவந்த - 3 பொய்கையிடத்து நறிய நீரடைகரையிலே நின்று வளர்ந்த,

69. துறு நீர் கடம்பின் துணை ஆர் கோதை - நெருங்குகின்ற தன்மையையுடைய கடம்பினுடைய இணைதல்நிறைந்த மாலை,

கோதைபோலப் பூத்தலிற் கோதையென்றார்.

70 - 71. [ஊவத் தன்ன வுண்டுறை மருங்கிற், கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின் :] கோவத்து அன்ன கொங்கு உறைத்தலின் சேர்பு ஊவத்து அன்ன உண் துறை மருங்கின் - தன்னிடத்து இந்திர கோபத்தையொத்த தாதையுதிர்த்தலின் அத்தாதுசேர்ந்து சித்திரத்தை யொத்த உண்ணும் துறையிடத்தே நின்ற,

72 - 3. வரு முலை அன்ன வள் முகை உடைந்து திரு முகம் அவிழ்ந்த தெய்வம் தாமரை - எழுகின்ற பெரியமுலையையொத்த பெரிய மொட்டுநெகிழ்ந்து அழகினையுடைய முகம்போல மலர்ந்த தெய்வத்தன்மையையுடைய தாமரையிடத்து,

4 "பொருளே யுவமஞ் செய்தனர்" என்னுஞ்சூத்திரத்தாற் 5 பொருளை உவமஞ் செய்தார்.

74 - 6. ஆசு இல் அகம் கை அரக்கு தோய்ந்தன்ன செ இதழ் பொதிந்த செ பொன் கொட்டை ஏமம் இன் துணை தழீஇ - குற்றமில்லாத

1 கொற்றக்குடை - அரசவுரிமைக்குரிய குடை.

2 பொருந. 148, உரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

3 பொய்கை - மானிடராக்காத நீர்நிலை; சீவக. 337, ந.

4 தொல்காப்பியம், உவமவியல், சூ. 9. 5 பொருள் - உபமேயம்.

அங்கையைச் சாதிலிங்கந்தோய்ந்தாலொத்த சிவந்த இதழ்சூழ்ந்த செம்பொன்னாற் செய்தாலொத்த 1 பீடத்திலே தன்னுயிர்க்குக் காவலாகிய இனிய பெடையைத் தழுவித்துயில்கொண்டு,

76 - 8. இறகு உளர்ந்து 2 காமரு தும்பி காமரம் செப்பும் தண் பணை தழீஇயதளரா இருக்கை - இத்துயிலெழுந்து விருப்பமருவின தும்பி சீகாமரமென்னும் பண்ணைப்பாடும் மருதநிலஞ் சூழ்ந்த அசையாத குடியிருப்பினையுடைய,

79. குணபுலம் காவலர் மருமான் - கிழக்கின்கண்ணதாகிய நிலத்தைக் காத்தற்றொழிலை யுடையார் குடியிலுள்ளோன்,

79 - 81. [ஒன்னார், ஓங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியுந், தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை :] கதவம் ஓங்கு எயில் உருமு சுவல் சொறியும் ஒன்னார் தூங்கு எயில் எறிந்த தொடி விளங்கு தட கை - கதவத்தையுடைய உயர்ந்த மதிற்றலையிலே உருமேறு தன் கழுத்தைத் தினவாற்றேய்க்கும் பகைவர் தூங்கெயிலை அழித்த தொடி விளங்கும் பெருமையையுடைய கையினையும்,

82. நாடா நல் இசை நல் தேர் செம்பியன்-ஐயுற்று ஆராயப்படாத உலகறிந்த நல்லபுகழினையும் நல்ல தேரினையுமுடைய சோழனது,

83. ஓடா பூட்கை உறந்தையும் வறிது - தன்னிடத்திருந்தோர் ஓடாமைக்குக் காரணமாகிய மேற்கோளினையுடைய உறந்தையென்னும் ஊரும் தரும்பரிசில் சிறிதாயிருக்கும் ;

அது, 3 " முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய, புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென் " என்பதனானுணர்க.

அதாஅன்று - அவ்வூரன்றி,

84 - 5. வானம் வாய்த்த வளம் மலை கவாஅன் கானம் மஞ்ஞைக்கு கலிங்கம் நல்கிய - மழை பருவம்பொய்யாமற் பெய்கையினாலே உண்டான செல்வத்தையுடைய மலைப்பக்கத்திற் காட்டிடத்தேதிரியும் மயில் கூவியதற்குக் குளிர்ந்துகூவிற்றென்று அருள்மிகுதியாற் போர்வையைக் கொடுத்த,

86. அரு திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்-பெறுதற்கரிய வலியையுடைத்தாகிய வடிவினையுடைய ஆவியர்குடியிற் பிறந்த பெரியமகன்,

87. 4 பெரு கல் நாடன் பேகனும் - பெரிய மலைநாட்டையுடைய பேகனென்னும் வள்ளலும்,

---

1 " பதுமபீடத் தன்னகர் " கம்ப. கையடை. 7.

2 கஉ-ஆம் பக்கத்திலுள்ள 3-ஆவது அடிக்குறிப்பைப் பார்க்க.

3 சிலப்பதிகாரம், நாடுகாண்காதை, 247 - 8.

4 சிலபிரதிகளில், பெருங்கடனாட னென்ன மூலத்தும் பெரிய கடனாடனென்ன உரையிலும் வேறுபாடுண்டு.

நல்கிய பெருமகனாகிய பேகனுமெனா முடிக்க.

87-8. சுரும்பு உண நறு வீ உறைக்கும் நாகம் நெடு வழி - சுரும் புண்ணும்படி நறியபூத் தேனைத் துளிக்கும் சுரபுன்னையை யுடைத்தாகிய நெடிய வழியினின்ற,

89. சிறு வீ முல்லைக்கு பெரு தேர் நல்கிய - சிறிய பூக்களையுடைய முல்லைக்கொடி தடுத்தற்கு அது வேண்டிற்றாகக்கருதிப் பெரிய தேரைக் கொடுத்த,

90-91. பிறங்கு வெள் அருவி வீழும் சாரல் பறம்பின் கோமான் பாரியும் - மிகுகின்ற வெள்ளிய அருவி குதிக்கும் பக்கத்தினையுடைய பறம்பென்னும் மலைக்கரசனாகிய பாரியென்னும் வள்ளலும்,

91-3. கறங்கும் மணி வால் உளை புரவியொடு வையகம் ஈரம் நல் மொழி மருள இரவலர்க்கு ஈந்த காரி (95) - ஒலிக்கும் மணியினையும் வெள்ளிய தலையாட்டத்தினையுமுடைய குதிரையோடே தனதுநாட்டினையும், அருளினையுடைய நன்றாகிய மொழியினையும் ஏனையோர் கேட்டு வியக்கும்படி இரவலர்க்குக் கொடுத்த காரி,

ஈரநன்மொழிமருள வென்றுமாறுக.

94-5. அழல் திகழ்ந்து இமைக்கும் அஞ்சு வரு நெடு வேல் கழல் தொடி தட கை காரியும் - [1] தன்னிடத்துறையும் கொற்றவையுடைய கோபத்தின் மிகுதியினாலே தான்விளங்கும் அச்சந்தோன்றும் நெடிய வேலினையும் உழலுந்தொடியினை யணிந்த பெருமையையுமுடைய கையினையுமுடைய காரியென்னும் வள்ளலும்,

95-7. [நிழறிகழ்,நீல நாகநல்கிய கலிங்க, மாலமர் செல்வற் கமர்ந்த னன் கொடுத்த :] நாகம் நல்கிய நிழல் திகழ் நீலம் கலிங்கம் ஆல் அமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த ஆய் (99) - பாம்பு ஈன்றுகொடுத்த ஒளிவிளங்கும் நீலநிறத்தையுடைய உடையினை ஆலின்கீழிருந்த இறைவனுக்கு நெஞ்சுபொருந்திக் கொடுத்த ஆய்,

98-9. சாவம் தாங்கிய சாந்து புலர் திணி தோள் ஆர்வம் நல் மொழி ஆயும் - வில்லையெடுத்த சந்தனம் பூசிப்புலரும் திண்ணிய தோளி

---

1 'அழல்' என்பதற்கு ஈண்டு உரை எழுதப்பட்டிருத்தல் போல, இந்நூல் 102-ஆம் அடியிலுள்ள 'சினம்' என்பதற்கும் பொருளெழுதப் பெற்றுள்ளது. ஆயுதங்களிற் கொற்றவை யிருத்தல்: "வருங்கொற்ற மார்க்கு மணங்கினுடனே, மருங்கிற் றிருவுடைவாள் வாய்ப்ப" (விக்கிரம. உலா, 49); "வென்றி மங்கை வேடர் வில்லின் மீதுமேவு பாத முன், சென்று மீளு மாறு போல்வ" (பெரிய. கண்ணப்ப. 68); "போர்விசையமான்..........வாளிடையும்..........தழைந் தோங்க" வனச. 2 - 4.

னையும் 1 கேட்டோர்க்கு விருப்பத்தைச் செய்யும் நன்றாகிய சொல்லி னையுமுடைய ஆயென்னும் வள்ளலும்,

99-101. மால்வரை கமழ் பூ சாரல் கவினிய நெல்லி அமிழ்து விளை தீ கனி 2 ஔவைக்கு ஈந்த அதிகன் (103) - பெருமையையுடைய மலையிற் கமழும்பூக்களையுடைய பக்கமலையிலே நின்று அழகுபெற்ற கரு நெல்லியினது அமிழ்தின் தன்மை தன்னிடத்தேயுண்டான இனிய பழத் தைத் தான் நுகர்ந்து உடம்புபெறாதே ஔவைக்குக்கொடுத்த அதிகன்,

102-3. உரவு சினம் கனலும் ஒளி திகழ் நெடு வேல் அரவம் கடல் தானை அதிகனும்- 3 தன்னிடத்துறையும் கொற்றவையது வலியினை யுடைய சினம் நின்றெரியும் ஒளிவிளங்கும் நெடிய வேலினையும் ஆர வாரத்தையுடைய கடல்போலும் படையினையுமுடைய அதிகமானென் னும் வள்ளலும்,

103-5. கரவாது நட்டோர் உவப்ப நடை பரிகாரம் முட்டாது கொடுத்த நள்ளியும் (107) - தன்மனத்து நிகழ்கின்றனவற்றை மறை யாதுகூறி நட்புச் செய்தோர் மனமகிழும்படி அவர்கள் இல்லறம் நடத்து தற்கு வேண்டும்பொருள்களை நாடோறும் கொடுத்த நள்ளியும்,

105-7. முனை விளங்கு தட கை துளி மழை பொழியும் வளி துஞ்சு நெடு கோடு நளி மலைநாடன் நள்ளியும் - பகைப்புலத்தே கொலைத் தொழிலான் விளங்கும் பெருமையையுடைய கையினையும் துளியை யுடையமழை பருவம் பொய்யாது பெய்யும் உயர்ச்சியாற் காற்றுத்தங்கும் நெடிய சிகரங்களையுடைய செறிந்த மலைநாட்டையுமுடையவனாகிய நள்ளி யென்னும் வள்ளலும்,

107-9. நளி சினை நறு போது கஞலிய நாகு முதிர் நாகத்து குறு பொறை நல் நாடு கோடியர்க்கு ஈந்த ஓரி (111) - செறிந்த கொம்பு களிடத்தே நறிய பூக்கள் நெருங்கின இளமையையுடைய முதிர்ந்த சுர

---

1 "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழி வதாஞ் சொல்" குறள். 643.

2 ஔவை அதிகமானிடத்து நெல்லிக்கனி பெற்றமையைப் பின் வருஞ் செய்யுளானு முணர்க: "வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார், களம்படக் கடந்த கழலொடித் தடக்கை, யார்கலி நறவி னதியர் கோமான், போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி, பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி, நீல மணிமிடற் றொருவன் போல, மன்னுக பெரும நீயே தொன்னிலைப், பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட, சிறி யிலை நெல்லித் தீங்கனி குறியா, தாத னின்னகத் தடக்கிச், சாத னீங்க வெமக்கீத் தனையே" புறநா. கக.

3 94-5-ஆம் அடியின் உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

புன்னையையும் குறிய மலைகளையுமுடைய நன்றாகிய நாடுகளைக் கூத்தாடு வோர்க்குக்கொடுத்த ஓரி,

110-11. காரி குதிரை காரியொடு மலைந்த ஓரி குதிரை ஓரியும் - காரியென்னும் பெயரையுடைத்தாகிய குதிரையையுடைய காரியென்னும் பெயரையுடையவனுடனே போர்செய்த ஓரியென்னும் பெயரையுடைத்தாகிய குதிரையையுடைய ஓரியென்னும் வள்ளலும்,

காரி கரிய குதிரையென்றும் ஓரி பிடரிமயிரென்றும் கூறுவாரு முளர்.

111-3. [எனவாங், கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோ, ளெழுவர் பூண்ட வீகைச் செந்நுகம் :]

என எழுவர் ஆங்கு பூண்ட ஈகை செ 1 நுகம் - என்று சொல்லப் பட்ட எழுவரும் அக்காலத்தே மேற்கொண்ட கொடையாகிய செவ்விய பாரத்தை,

எழு சமம் கடந்த எழு உறழ் திணி தோள் எழுவர் - தம்மேலே வருகின்ற போர்களைக்கடந்த கணையத்தோடு மாறுபடுகின்ற திணிந்த தோளினையுடைய எழுவர்,

114-26. [விரிகடல் வேலி வியலகம் விளங்க, வொருதான் றாங்கிய வுரனுடை நோன்றா, ணறுவீ நாகமு மகிலு மாரமுந், துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய, பொருபுன றரூஉம் போக்கரு மரபிற், றொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய, நன்மா விலங்கை மன்ன ருள்ளும், மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வா, ளுறுபுலித் துப்பி னோவியர் பெருமகன், களிற்றுத்தழும் பிருந்த கழறயங்கு திருந்தடிப், பிடிக்கணஞ் சிதறும் பெயன்மழைத் தடக்கைப், பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை, நல்லியக் கோடனை நயந்த கொள்கையொடு :]

விரி கடல் வேலி வியலகம் விளங்க (114) ஒரு தான் தாங்கிய (115) நல்லியக் கோடனை நயந்தனிர் செலின் (269)-பரந்த கடலாகிய வேலியை யுடைய உலகமெல்லாம் விளங்கும்படி ஒருவனாகிய தானே பொறுத்த நல்லியக் கோடனை விரும்பிச் செல்லின்,

மறு இன்றி விளங்கிய (121) உரன் உடை நோன்றாள் (115) வடு இல் வாய் வாள் (121) உறு புலி துப்பின் ஓவியர் பெருமகன் (122) - குற்றமின்றி விளங்கிய அறிவையுடைத்தாகிய வலியையுடைய முயற்சி யினையும் பகைவர்முகத்தினும்மார்பினும் வெட்டின வாய்த்தவாளையும் மிக்க புலிபோலும் வலியினையுமுடைய ஓவியருடைய குடியிலுள்ளோன்,

1 நுகம் - பாரம் : "பருநுகம் - பெரிய பாரத்தை" (சீவக. 203, ந.) ; "நோன்மை நுகம் பூண்டார்" (சீவக. 2794) ; "பொழில்கண் விளக்குந் தொழினுகம் பூண்டு" பெருங். க. ௩௩ : 54.

நறு வீ நாகமும் அகிலும் ஆரமும் (116) துறை ஆடும் மகளிர்க்கு தோள்புணை ஆகிய (117) பொரு புனல் தரூஉம் (118) இலங்கை (119)- நறிய பூக்களையுடைய சுரபுன்னையையும் அகிலையும் சந்தனத்தையும் குளிக்குந்துறையிலே புனலாடுமகளிருடைய தோள்களுக்குத் தெப்பமாகக் கரையைக்குத்துகின்ற நீர்தருமிலங்கை,

கருவொடு (119) பெயக்கரு மரபின் (118) இலங்கை (119) - [1] கருப்பதித்த முகூர்த்தத்தாலே ஒருவராலும் அழித்தற்கரிய முறைமையினையுடைய இலங்கை,

[2] தொல் மா இலங்கை பெயரிய (119) நல் மா இலங்கை (120) - பழையதாகிய பெருமையினையுடைய இலங்கையினது பெயரைப்பெற்ற நன்றாகிய பெருமையையுடைய இலங்கை,

மன்னருள்ளும் (120) ஓவியர் பெருமகன் (122) - அவ்விலங்கைக்குரிய அரசர் பலருள்ளும் ஓவியர்குடியிற் பிறந்தோன்,

களிறு தழும்பு இருந்த கழல் தயங்கு திருந்து அடி (123) - யானையைச் செலுத்துதலாலுளதாகிய தழும்புகிடந்த வீரக்கழல் கிடந்தசையும் பிறக்கிடாத அடியினையும்,

பிடி கணம் சிதறும் கை (124) - பிடித்திரளைப் பலர்க்குங் கொடுக்குங்கை,

பெயல் மழை தட கை (124) - பெய்தற்றொழிலையுடைய மழை போன்ற பயனையுடைய பெரிய கையினையுமுடைய,

பல் இயம் கோடியர் புரவலன் (125) - பல வாச்சியங்களையுடைய கூத்தரைப் புரத்தலை வல்லவன்,

பெரு இசை (125) நல்லியக்கோடனை நயந்த கொள்கையொடு (126)- பெரிய புகழையுடைய நல்லியக்கோடனைக் காண்டற்குவிரும்பிய கோட்பாட்டுடனே,

பெருமகன் (122) புரவலனாகிய (125) நல்லியக்கோடனென முடிக்க.

127. தாங்கரு மரபின் தன்னும் - பிறராற் பொறுத்தற்கரிய குடிப்பிறந்தோர்க்குரிய முறைமைகளையுடைய தன்னையும்,

127 - 8. தந்தை வான் பொரு நெடு வரை வளனும் பாடி - அவன் தந்தையுடைய தேவருலகத்தைத்தீண்டும் நெடிய மலையிற் செல்வத்தையும் பாடி,

129. முன் நாள் சென்றனம் ஆக - [3] நாலுபத்துநாளைக்கு முன்னே போனேமாக,

---

[1] கருப்பதித்த முகூர்த்தம் - இந்நகரை அமைக்கத் தொடங்கிய காலம்; "கருவைக்கு நெடுநகரை" கம்ப. ஊர்தேடு. 232.

[2] தொன்மா விலங்கை யென்றது இராவணனது இராசதானியாகிய இலங்கையை.

[3] நாலு பத்துநாள்-சில நாளென்னும் பொருளைத்தரும் ஒருவழக்கு.

இந்நாள் - இற்றைநாள்,

130. திறவா கண்ண சாய் செவி குருளை - விழியாத கண்ணை யுடையவாகிய வளைந்த செவியினையுடைய குட்டி,

1 "நாயே பன்றி புலிமுய லென்கு, மாயுங் காலைக் குருளை யென்ப."

131. கறவா பால் முலை கவர்தல் நோனாது - பிறராற் கறக்கப் படாத பாலினையுடைய முலையையுண்ணுதலைத் தன்பசிமிகுதியாற் பொறுத்தலாற்றாது,

132. புனிறு நாய் குரைக்கும் புல்லென் அட்டில் - ஈன்றணிமையையுடைய நாய் கூப்பிடும் பொலிவழிந்த அடுக்களையில்,

133. காழ் சோர் அட்டில் (132) - கழிகள் 2 ஆக்கையற்று விழுகின்ற அட்டில்,

முது சுவர் கணம் சிதல் அரித்த அட்டில் (132) - பழைய சுவரிடத் தெழுந்த திரண்ட கறையான் தின்ற அட்டில்,

134. [பூழி பூத்த புழற்கா ளாம்பி :] பூழி புழல் 3 காளாம்பி பூத்த அட்டில் (132) - நனைந்தபுழுதி உட்பொய்யாகிய காளானைப் பூத்த அட்டில்,

135-6. [ஒல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல், வளைக்கைக் கிணைமகள் :] ஒடுங்கு பசி உழந்த ஒல்கு நுண் மருங்குல் வளை கை கிணைமகள் - ஒடுங்குதற்குக் காரணமான பசியாலே வருந்தி நுடங்கும் நுண்ணிய இடையினையும் வளையலையணிந்த கையினையுமுடைய 4 கிணைவனுடையமகள்,

136-7. வள் உகிர் குறைத்த குப்பை வேளை உப்பிலி வெந்ததை - பெரிய உகிராற்கிள்ளின குப்பையினின்ற வேளை உப்பின்றாய் அட்டிலிலே (132) வெந்ததனை,

138-9. மடவோர் காட்சி நாணி கடை அடைத்து இரு பெரு ஒக்கலொடு ஒருங்கு உடன் மிசையும் - வறுமையுறுதலும் இயல்பென் றறியாது புறங்கூறுவோர் காண்டற்கு நாணித் தலைவாசலையடைத்து

---

1 தொல். மரபு. சூ. 8.

2 ஆக்கை - கழிகளைக் கட்டும் கயிறு முதலியன; "கால்கொடுத் தெலும்பு மூட்டிக் கவினரம் பாக்கை யாத்துத், தோலுடுத் துதிர மட்டித் தொகுமயிர் வேய்ந்த கூரை" (தேநா. திருக்கொண்டீச்சரம்); "நரம்பாலாக்கையிட்டுத் தசைகொண்டு வேய்ந்த வகம்" கந்தாலங்.

3 "ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பி, னாம்பி பூப்ப" (புறநா. கசுச : 1-2); "சாம்பல்கண் டறியா வாம்பி பூத்த, வெலிதுயி லடுப்பு" காசிக். 57.

4 கிணைவன் மகள் - கிணைப்பறை கொட்டுவோனுடைய மனைவி; மகள் - மனைவி; மணி. உச : 30.

மிடியாற் கரிய பெரிய சுற்றத்தோடே கூடவிருந்து அடையத் தின்னும்,

140. [1] அழி பசி வருத்தம் வீட - அறிவுமுதலியன அழிதற்குக் காரணமான பசியாலுளதாகிய வருத்தங்கள் விட்டுப்போம்படி,

140-43. பொழி கவுள் தறுகண் பூட்கை மணி தயங்கும் மருங்கின் சிறு கண் யானையொடு பெரு தேர் எய்தி யாம் அவண் நின்றும் வருதும் - மதம் வீழ்கின்ற கதுப்பினையும் கடுகக்கொல்லுதலாகிய மேற்கோளினையும் மணியசையும் பக்கத்தினையும் சிறிய கண்ணையுமுடைய யானையுடனே பெரியதேரையும் பெற்று யாம் அவ்விடத்துநின்றும் வாராநின்றேம்,

தும் நிகழ்காலத்து வருதல், [2] "உம்மொடு வரூஉங் கடதற" என்புழிக் கூறினும்.

143-5. நீயிரும் நயந்து இவண் இருந்த இரு பெரு ஒக்கல் செம்மல் உள்ளமொடு செல்குவிர் ஆயின் - நீங்களும் மூவேந்தர்பாற்பெறும் பரிசிலை விரும்பி இவ்விடத்திருந்த வறுமையாற் கரியவாகிய பெரிய சுற்றத்தினது தலைமையை யுடைத்தாகிய நெஞ்சுடனே அவனிடத்தே போவீராயின்,

146-50. [அலைநீர்த் தாழை யன்னம் பூப்பவுந், தலைநாட் செருந்தி தமனிய மருட்டவுங், கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவு, நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவுங், கானல் வெண்மணல் கடலுலாய் நிமிர்தர :]

கடல் உலாய் நிமிர்தர (150) அலை நீர் (146) கானல் வெள் மணல் (150) - கடல்பரந்து எற்றிப் பொருதலாலே அலையுநீரையுடைய கரையில் வெள்ளிய மணலிடத்து நின்ற,

---

1 "அற்றா ரழிபசி தீர்த்தல்" (குறள். 226) என்பதில், 'அழிபசி' என்பதற்கு உரையில் மிக்க பசி யென்றும், அதன் விசேட வுரையில், 'எல்லா நன்மைகளும் அழிய வருதலின் அழிபசி யென்றார்' என்றும் பரிமேலழகர் எழுதியிருத்தல் இங்கே அறிதற்குரியது. பசி, அறிவு முதலியவற்றை அழிக்குமென்பதை, "அறிவுகெட நின்ற நல்கூர் மையே" (புறநா. உகங: 13), "தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக, நல்குர வென்னு நசை" (குறள். 1043), "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும், பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம், நாணணி களையு மாணெழில் சிதைக்கும்.........பசிப்பிணி யென்னும் பாவி" (மணி. கக: 76-80), "மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயற்சி தாளாண்மை - தேனின், கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந் திடப்போம் பறந்து" (நல்வழி) என்பவற்றால் உணர்க. 2 தொல். வினை. சூ. 5.

தாழை அன்னம் பூப்பவும் (146) - தாழை அன்னம்போலப் பூக்கையினாலும்,

தலை நாள் செருந்தி தமனியம் மருட்டவும் (147) - இளவேனிற் காலந் தொடங்குகின்ற நாளிலே 1 செருந்தி தன்னைக் கண்டாரைப் பொன்னென்று மருளப் பண்ணுகையினாலும்,

கடு சூல் முண்டகம் கதிர் மணி கழாஅலவும் (148) - 2 முதற் சூலையுடைய கழிமுள்ளி ஒளியையுடைய நீலமணிபோலப் பூக்கையினாலும்,

3 கன்னியாய் நின்று அரும்புதலிற் கடுஞ்சூல்.

கழாஅல - கழற்ற.

நெடு கால் புன்னை நித்திலம் வைப்பவும் (149) - நெடிய தாளினையுடைய புன்னை நித்திலம்போல அரும்புகையினாலும்,

151. பாடல் சான்ற நெய்தல் நெடு வழி பட்டினம் (153) - புகழ் தலைமைந்த நெய்தனிலத்து நெடியவழியிற் பட்டினம்,

152. மணி நீர் வைப்பு பட்டினம் (153) - நீலமணிபோலும் கழி சூழ்ந்த ஊர்களையுடைய பட்டினம்,

மதிலொடு பெயரிய பட்டினம் (153) - மதிலோடே பெயர் பெற்ற பட்டினம்,

என்றது 4 எயிற்பட்டின மென்றதாம்.

153. பனி நீர் படுவின் பட்டினம் படரின் - குளிர்ச்சியையுடைய நீரையுடைய குளங்களையுடைத்தாகிய எயிற்பட்டினத்தே செல்வீராயின்,

படு : மடுவுமாம்.

154. ஓங்கு நிலை ஒட்டகம் துயில் மடிந்தன்ன - உயர்ந்த தன்மையையுடைய ஒட்டகம் உறக்கத்தே கிடந்தாலொத்த,

---

1 "பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்திப், பன்மலர் வேய்ந்த" அகநா. உஅ0 : 1 - 2.

2 "கடுஞ்சூன் மந்தி - முற்பட்ட சூலையுடைய மந்தி" (பெரும்பாண். 395, ந.), "கடுஞ்சூல் மகளிர் - முதற் சூல் கொண்ட மகளிர்" (மதுரைக். 609, ந.), "கடுஞ்சூலா நாகு - முதற்சூல் கொண்ட பசு" (கலி. கக0 : 14) என்று பிறவிடங்களிலும் நச்சினார்க்கினியர், 'கடுஞ்சூல்' என்பதற்கு இவ்வாறே பொருளெழுதல் அறியத்தக்கது; "பிணங்கடுங்கனலும்" (தக்க. 50) என்பதன் உரையில், 'கடுங்கனல் - புதுக்கனல்' என்று அதன் உரையாசிரியர் எழுதியிருத்தலால், கடுமையென்பது புதுமையென்னும் பொருடருவதென்று அறியப்படுதலின், அப்பொருளை உட்கொண்டு இவ்வாறு எழுதி வருகின்றாரென்று தோற்றுகின்றது. 3 பி - ம். 'கண்ணியாய்'

4 எயிற்பட்டினம் : "இம்மென் முழவி னெயிற்பட் டினநாடன்" சிறுபாண். இறுதிவெண்பா.

155. வீங்கு திரை கொணர்ந்த விரை மரம் விறகின் - மிகுகின்ற திரை கொண்டுவந்த மணத்தையுடைய அகிலாகிய விறகாலே,

156. கரு புகை செ தீ மாட்டி - கரிய புகையையுடைய சிவந்த நெருப்பை யெரித்து,

156-8. பெரு தோள் மதி [1] எக்கறூஉம் மாசு அறு திரு முகத்து நுதி வேல் நோக்கின் நுளைமகள் அரித்த - பெரிய தோளினையும் மதி இத்தன்மை பெற்றிலேமேயென்று விரும்புதற்குக் காரணமான மறுவறுகின்ற அமைதியினையுடைய முகத்தினையும் முனையினையுடைத்தாகிய வேல்போலும் பார்வையினையுமுடைய நுளைச்சாதியிற்பிறந்த மகளாலே அரிக்கப்பட்ட,

159. பழ படு தேறல் பரதவர் மடுப்ப - பழையதாகிய களிப்புமிகுகின்ற கட்டெளிவைப் பரதவர் எடுத்துவந்து வாயிடத்தே வைக்க,

160-61. கிளை மலர் படப்பை கிடங்கில் கோமான் தளை அவிழ் தெரியல் தகையோன் பாடி - கொத்திலெழுந்த பூக்களையுடையவாகிய தோட்டங்களையுடைய கிடங்கிலென்னும் ஊர்க்கு அரசனாகிய அரும்பு நெகிழ்ந்த மாலையினையுடைய அழகையுடையோனைப் பாடி,

162. அறல் குழல் பாணி தூங்கியவரொடு - தாளவறுதியையுடைய குழலோசையின் தாளத்திற்கொப்ப ஆடின மகளிரோடே,

163. வறல் குழல் சூட்டின் - உலர்தலையுடைய குழன்மீனைச் சுட்டதனோடே,

வயின் வயின் பெறுகுவிர் - மனைதோறும் மனைதோறும் பெறுகுவிர்;

பட்டினம் படரிற் (153) கிடங்கிற்கோமானாகிய (160) தகையோனைப் பாடி (161) ஆடினமகளிரோடே (162) நீங்களும் சூட்டோடே (163) தேறலைப் பரதவர் மடுப்ப (159) அவற்றை வயின்வயிற் பெறுகுவிரென முடிக்க.

164. பை நனை அவரை பவழம் கோப்பவும் - பசுத்த அரும்புகளையுடைய அவரை பவழம்போலப் பூக்களை முறையே தொடாநிற்கவும்,

165. கரு நனை காயா கணம் மயில் அவிழவும் - கரிய அரும்பினையுடைய காயாக்கள் திரண்ட மயிலின் கழுத்துப்போலப் பூவாநிற்கவும்,

166. கொழு கொடி முசுண்டை கொட்டம் கொள்ளவும் - கொழுவிய கொடியினையுடைய முசுட்டை [2] கொட்டம்போலும் பூவைத் தன்னிடத்தே கொள்ளாநிற்கவும்,

[3] கொட்டை: நூற்கின்ற கொட்டையுமாம்.

---

[1] "கடைக்க ணேக்கற" சீவக. 1622.

[2] கொட்டம்-பனங்குருத்தாற் செய்யப்படும்ஒருவகைச் சிறியபெட்டி.

[3] கொட்டையென்று பாடங்கொண்டு அதற்கெழுதிய குறிப்பாக இதனைக் கொள்ள வேண்டுமென்று தோற்றுகிறது.

167. செழு குலை காந்தள் கைவிரல் பூப்பவும் - வளவிய குலையினை யுடைய காந்தள் கைவிரல்போலப் பூவாநிற்கவும்,

168. கொல்லை நெடு வழி கோபம் ஊரவும் - கொல்லையிடத்து நெடிய வழிகளிலே இந்திரகோபம் ஊராநிற்கவும்,

இச் செயவெனெச்சமெல்லாம் ஈண்டு நிகழ்கால முணர்த்தியே நின்றன; ஞாயிறுபட வந்தானென்றாற்போல.

169. முல்லை சான்ற [1] முல்லை அம் புறவின் - இவைகாலமுணர்த்தி இங்ஙனம் நிகழ்த்தாநிற்கவும், கணவன்கூறிய சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்து ஆற்றியிருந்த தன்மையமைந்த முல்லைக்கொடி படர்ந்த அழகினையுடைய காட்டிடத்து,

இது, [2] "மாயோன் மேய" என்னும் சூத்திரத்தானுணர்க.

170-71. விடர் கால் அருவி வியல் மலை சுடர் மூழ்கி கான்மாறிய செவ்விநோக்கி - முழைஞ்சுகளிலே குதிக்கும் அருவியினையுடைய பெரிய அத்தகிரியிலே ஞாயிறுமறைந்து அவன் கிரணங்கள்போன அந்திக்காலத்தைப் பார்த்து,

172-3. [திறல்வே னுதியிற் பூத்த கேணி, விறல்வேல் வென்றி வேலூ ரெய்தின்:] திறல் வேல் நுதியின் கேணி பூத்த விறல் வேல் வென்றி வேலூர் எய்தின் - முருகன்கையில் வலியினையுடைத்தாகிய வேலின் நுதிபோலே கேணி பூக்கப்பட்ட வெற்றியையுடைய வேலாலே வெற்றியையுடைய வேலூரைச் சேரின்,

என்றது: நல்லியக்கோடன் தன்பகைமிகுதிக்கு அஞ்சி முருகனை வழிபட்டவழி அவன் இக்கேணியிற் பூவைவாங்கிப் பகைவரை எறியென்று கனவிற்கூறி அதிற் பூவைத் தன் வேலாக நிருமித்ததொரு கதை கூறிற்று. இதனானே வேலூரென்று பெயராயிற்று.

174. உறு வெயிற்கு உலைஇய உருப்பு அவிர் குரம்பை - மிகுகின்ற வெயிலுக்கு உள்ளுறைகின்றோர் வருந்தப்பட்ட வெப்பம் விளங்குகின்ற குடிலிலிருக்கின்ற,

---

[1] "முல்லை சான்ற புறவு - இருத்தலாகிய உரிப்பொருளமைந்த காடு" (மதுரைக். 285, ந.) என்றும், முல்லைப்பாட்டின் முதலில், "இல்லற நிகழ்த்துதற்குப் பிரிந்து வருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன்கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை முல்லையாமென்று கருதி இருத்தலென்னும் பொருட்கு முல்லை யென்று இச்செய்யுட்கு நப்பூதனார் பெயர் கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள் கூறலே அவர் கருத்தாயிற்று" என்றும் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தல் காண்க.

[2] தொல். அகத். சூ. 5.

175. எயிற்றியர் அட்ட இன் புளி வெ சோறு - எயினக்குலத்தின் மகளிராலே அடப்பட்ட இனிய 1 புளிங்கறியிடப்பட்ட வெவ்விய சோற்றை,

புளி : தித்திப்புமாம்.

176. தேமா மேனி சில் வளை ஆயமொடு - தேமாவின் தளிர் போலும் மேனியையும் 2 சிலவாகிய வளையினையுமுடைய நும்மகளிருடைய திரளுடனே,

177. ஆமான் சூட்டின் - ஆமானினது சூட்டிறைச்சியை யுடைய, அமைவர பெறுகுவிர் - பசிகெடப் பெறுகுவிர் ;

வேலூரெய்திற் (173) சூட்டினையுடைய (177) சோற்றை (175) ஆயத்தோடே (176) அமைவரப் பெறுகுவிரென முடிக்க.

முல்லையும் குறிஞ்சியும் சேர்ந்திருத்தலிற் சேரக்கூறினர், 3 இரண்டுங்கூடி யல்லது பாலைத்தன்மை பிறவாமையின்.

178 - 9. [நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக், குறுங்காற் காஞ்சிக் கொம்ப ரேறி :] நாள் கோதை தொடுத்த நறு பூ சினை குறு கால் காஞ்சி கொம்பர் ஏறி - நாட்காலத்தே மாலைகட்டினாற்போல இடையறாமற் றொடுத்த நறிய பூக்களையுடைய சிறிய கொம்புகளையும் குறிய தாளினையுமுடைய காஞ்சிமரத்தின் பெரிய கொம்பரிலேயேறி,

180. நிலை அரு குட்டம் நோக்கி நெடிது இருந்து - ஒரு காலத்தும் நிலைப்படுதல் அரிதாகிய ஆழத்திற்றிரிகின்ற மீன்களை எடுக்குங் காலத்தைக் கருதி நெடும்பொழுதிருந்து,

181 - 2. புலவு கயல் எடுத்த பொன் வாய் மணி சிரல் வள் உகிர் கிழித்த வடு ஆழ் பசு அடை - புலானாற்றத்தையுடைய கயலை முழுகியெடுத்த பொன்னிறம்போலும் வாயையுடைய நீலமணிபோன்ற சிச்சிலியினது பெரிய உகிர்கிழித்த வடுவழுந்தின பசிய இலையினையுடைய,

183. முள் அரை தாமரை முகிழ் விரி நாள் போது - முள்ளையுடைத்தாகிய தண்டினையுடைய வெண்டாமரையினது அரும்புவிரிந்த நாட்காலத்திற் பூவை,

---

1 புளி - புளிங்கறி : " புளியுஞ் சோறுமென் புந்தியிற் செந்தமிழ், தெளியும் போதெலாந் தித்தியா நிற்குமே " **தமிழ்நா.**

2 " சில்வளை விறலி யென்றது பல்வளையிடுவது பெதும்பைப் பருவத்தாகலின், அஃதன்றிச் சில்வளையிடும் பருவத்தாளென அவள் ஆடல் முதலிய துறைக்குரியளாதல் கூறிற்று " **பதிற்.** ருள : 6, உரை.

3 " முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் " **சிலப்.** காடுகாண். 64 - 6.

184. கொங்கு கவர் நீலம் செ கண் சேவல் - தேனை நுகர்கின்ற நீலநிறத்தினையும் சிவந்த கண்ணினையுமுடைய வண்டொழுங்கு,

பூவைத் தேனையென்றது, 1 "தெள்ளிது" என்றதனன் முடிக்க.

185. மதி சேர் அரவின் மான தோன்றும் - திங்களைச் சேர்கின்ற கரும்பாம்பை யொப்பத் தோன்றும்,

186. மருதம் சான்ற மருதம் தண் பணை - ஊடியுங்கூடியும் போகம் நுகருந் தன்மை யமைந்த மருதநிலத்திற் குளிர்ந்த வயலிடத்து,

187 - 8. [அந்தண ரருகா வருங்கடி வியனக, ரந்தண் கிடங்கினவ னாமூ ரெய்தின் :] அம் தண் கிடங்கின் அரு கடி வியன் நகர் அந்தணர் அருகா அவன் ஆமூர் எய்தின் - அழகினையுடைய குளிர்ந்த கிடங்கினையும் அரிய காவலையும் அகற்சியையுடைய அகங்களையுமுடைய அந்தணர் சுருங்காத அவனுடைய ஆமூரைச் சேர்வீராயின்,

189 - 90. [வலம்பட நடக்கும் வலிபுண ரெருத்தி, னுரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை :] வலி புணர் எருத்தின் வலம் பட நடக்கும் நோன் பகடு உரன்கெழும் உழவர் தங்கை - இழுத்தற்குரிய வலிபொருந்தின கழுத்தினலே வெற்றியுண்டாக நடக்கும் மெய்வலியினையுடைத்தாகிய எருத்தினையுடைய அறிவுபொருந்தின உழவருடைய தங்கையாகிய,

உரன் - அறிவு ; 2 "உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும்" என்றாற்போல.

191 - 2. பிடி கை அன்ன பின்னு வீழ் சிறு புறத்து தொடி கை மகடூஉ - பிடியினது கையை யொத்த பின்னினமயிர் வீழ்ந்து கிடக்கின்ற சிறிய முதுகினையும் தொடியணிந்த கையினையுமுடைய மகள்,

192. மக முறை தடுப்ப - உழவர் தங்கையாகிய (190) மகடூஉ (192) தான் உள்ளே யிருந்து தன் பிள்ளைகளைக்கொண்டு நும்மை அடையவே எல்லாரையும் போகாது விலக்குகையினலே,

இனி, பிள்ளைகளை உபசரிக்குமாறுபோல உபசரித்து விலக்க வென்றுமாம்.

193 - 4. இரு காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த அவைப்பு மாண் அரிசி அமலை வெள் சோறு - கரிய வயிரத்தையுடைய உலக்கையினது பூணினையுடைய முகத்தைத் தேயப்பண்ணின குற்றுதல் மாட்சிமைப்பட்ட அரிசியாலாக்கின கட்டியாகிய வெள்ளியசோற்றை,

195. கவை தாள் அலவன் கலவையொடு பெறுகுவிர்—கவைத்தகாலினையுடைய ஞெண்டும் பீர்க்கங்காயுங்கலந்த கலப்புடனே பெறுகுவிர் ;

1 "முதன்மு னைவரிற் கண்ணென் வேற்றுமை, சினைமுன் வருத றெள்ளி தென்ப" தொல். வேற்றுமைமயங்கு. சூ. 5.

2 பதிற்றுப்பத்து, எரு : 1.

தண்பணையின் (186) ஆமூரெய்தின் (188) உழவர் தங்கையாகிய (190) மகடூஉத் தடுக்கையினாலே (192) சோற்றைக் (194) கலவையொடு பெறுகுவிரெனமுடிக்க.

196 - 201. [எரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக், கருமறிக் காதிற் கவையடிப் பேய்மக, ணிணனுண்டு சிரித்த தோற்றம் போலப், பிணனுகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தா, ளண்ணல் யானை யருவி துக ளவிப்ப, நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர் :]

எரி மறிந்தன்ன நாவின் (196) - மேனோக்கியெரிகின்ற நெருப்புச் சாய்ந்தாலொத்த நாவினையும்,

கரு மறி காதின் (197) - வெள்யாட்டுமறிகளை அணிந்த காதினையும்,

கவை அடி பேய் மகள் (197) - கவைத்த அடியினையுமுடைய பேய்மகள்,

நிணன் உண்டு சிரித்த (198) இலங்கு எயிறு (196) தோற்றம் போல (198) - நிணத்தைத் தின்று சிரித்த விளங்குகின்ற எயிற்றினது தோற்றரவு போல,

பிணன் உகைத்து சிவந்த பெரு உகிர் பணை தாள் (199) அண்ணல் யானை அருவி துகள் அவிப்ப (200) நீறு அடங்கு தெருவின் ஊர் (201) - தாம் கொன்ற பிணங்களின் தலைகளைக் காலாலேதள்ளிச் சிவந்த பெரிய உகிரினையும் பெருமையையுடைய கால்களையுமுடைய தலைமையையுடையவாகிய யானைகளின் மதவருவி எழுந்த துகளை அவிக்கையினாலே புழுதியடங்கின தெருவினையுடைய ஊர்,

அவன் சாறு அயர் மூதூர் (201) - அவனுடைய விழா நடக்கின்ற பழைய ஊர்,

202. சேய்த்தும் அன்று சிறிது நணியதுவே - தூரிய இடத்தது மன்று; சிறிதாக அண்ணிய இடத்ததே;

மூதூர் நணியதென்க.

203 - 6. [பொருநர்க் காயினும் புலவர்க் காயினு, மருமறை நாவி னந்தணர்க் காயினுங், கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன, வடையா வாயிலவ னருங்கடை குறுகி :]

பொருநர்க்கு அடையாஆயினும் புலவர்க்கு அடையாஆயினும் அரு மறை நாவின் அந்தணர்க்கு அடையாஆயினும் அரு கடை வாயில் குறுகி - கிணைப் பொருநர்க்கு அடைக்கப்படாவாயினும், அறிவுடையோர்க்கு அடைக்கப்படாவாயினும், அரியவேதத்தை யுடைத்தாகிய நாவினையுடைய அந்தணர்க்கு அடைக்கப்படாவாயினும் ஏனையோர்க்கு உள்ளே சேறற்கரிய தலைவாயிலையணுகி,

அடையாவென்றபன்மை நான்குவாயிலையுங்கருதியது.

கடவுள் மால் வரை கண் விடுத்தன்ன அவன் வாயில் - அதுதான் 1 தெய்வங்களிருக்கின்ற பெருமையையுடைய மேரு ஒரு கண்ணை விழித்துப்பார்த்தாலொத்த அவனுடைய கோபுரவாசல்.

அன்றிப் பொருநர்க்காயினும் புலவர்க்காயினும் அருமறைநாவினந்தணர்க்காயினும் அடையாவாயிலென்றுற் பொருளின்மையுணர்க.

207. செய் நன்றி அறிதலும் - பிறர் தனக்குச்செய்த நன்றியையறிந்து அவர்க்குத் தானும் நன்மைசெய்தலையும்,

2 சிற்றினம் இன்மையும் - அறிவும் ஒழுக்கமுமில்லாத மாக்கள் திரள் தனக்கு இல்லாமையும்,

208. இன் முகம் உடைமையும் - நோக்கினோர்க்கு இனியமுகத்தை எக்காலமும் உடையனாதலையும்,

இனியன் ஆதலும் - 3 முகத்தி னினிய நகாஅ அகத்து இன்னாதவனாகாமல் நெஞ்சு முகத்திற்கேற்ப இனியனாதலையும்,

209. செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த - எக்காலமும் தன்னுடனே செறிந்து விளங்குகின்ற தலைமையினையுடைய பல கலைகளையுணர்ந்தோர் புகழ,

210. அஞ்சினர்க்கு அளித்தலும் - தன்வீரத்தைக்கண்டு அஞ்சி வந்து 4 அடிவீழ்ந்தார்க்கு அருள்செய்தலையும்,

வெ சினம் இன்மையும் - கொடிய சினமில்லாமையையும்,

5 கோபம் நீட்டித்து நிற்கின்றது சினம்.

211. ஆண் அணி புகுதலும் - வீரர் நின்ற அணியிலேசென்று அவ்வணியைக் குலைத்தலையும்,

6 "ஆண்பாலெல்லா மாணெனற் குரிய" என்றுகூறி, 7 "பெண்ணு

---

1 மேருவிற் றேவர்கள் இருத்தலால் அதற்குச் சுராலயமென ஒரு பெயருண்டு.

2 "சிறியவினமாவது நல்லதன்நலனும் தீயதன்தீமையும் இல்லெனபோரும் விடரும்தூர்த்தரும் நடருமுள்ளிட்டகுழு; அறிவைத்திரித்து இருமையுங் கெடுக்குமியல்பிற்று" என்பர் பரிமேலழகர்; திருக்குறள், 46 - ஆம் அதி. அவதாரிகை.

3 "முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா, வஞ்சரை யஞ்சப் படும்" திருக்குறள், 824.

4 "வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற், றண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே", "மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி, யீயென விரக்குவ ராயிற் சீருடை, முரசுகெழு தாயத் தரசோ தஞ்ச, மின்னுயி ராயினுங் கொடுக்குவென்" புறநா. ௧0: 5 - 6, ௭௩: 1 - 4.

5 முருகு. 134 - 5, உரையைப்பார்க்க.

6 தொல். மரபியல். சூ. 50. 7 ஷை. ஷை. ஷை. 69.

ரானும் பிள்ளையு மவையே" என்றதனால், [1] ஆணென்றது ஆண்பாலையே யுணர்த்துமேனும் அணிபுகுதலென்றதனால் ஈண்டு வீரரை யுணர்த்திற்று.

[2] அழி படை தாங்கலும் - தனது கெட்ட படையிடத்தே தான் சென்று பகைவரைப் பொறுத்தலையும்,

212. வாள் மீ கூற்றத்து வயவர் ஏத்த - வாள்வலியாலே மேலாகிய சொல்லையுடைய வீரர் புகழ,

213. கருதியது முடித்தலும் - தன்னெஞ்சு கருதிய புணர்ச்சியைக் குறைகிடவாமல் முடிக்கவல்ல தன்மையையும்,

நுகர்தற்குரிய மகளிரை நுகர்ந்து பற்றறுக்காற் பிறப்பறுமையிற் கருதியதூ முடிக்கவேண்டுமென்றார்.

காமுற படுதலும் - அங்ஙனம் தானே இன்பமுறுதே அம்மகளிரும் தம்மாலே மிக்க இன்பத்தைப்பெறும் தன்னை விரும்பப்பட்டிருத்தலையும்,

214. ஒரு வழி படாமையும் - அவர்கள் அங்ஙனம் விரும்பினார்க ளென்று அவர்கள் வசத்தனாகாமையும்,

ஓடியது உணர்தலும் - தான் அவர் வசத்தனாகாமையின் அவர் வருந்திய தன்மையையுணர்ந்து அவரைப்பாதுகாத்தலையும்;

இனி, அவர்கள் நெஞ்சில் நிகழ்ந்ததனையுணர்ந்து அவர் குறை முடித்தலென்றுமாம்.

215. அரி ஏர் உண் கண் அரிவையர் ஏத்த - செவ்வரிபொருந் தின மையுண்கண்ணினையுடைய மகளிர்புகழ,

216. அறிவு மடம் படுதலும் - தான்கூறுகின்றவற்றை உணரும் அறிவில்லாதார்மாட்டுத் தான் அறியாமைப்பட்டிருத்தலையும்,

அறிவு நன்கு உடைமையும் - தன்னைப்போல் அறிவுடையார் மாட்டு நன்றாக அறிவுடையனாயிருத்தலையும்,

[3] "ஒளியார்மு னொள்ளிய ராதல் வெளியார்முன், வான்சுதை வண்ணங் கொளல்" என்றார் பிறரும்.

217. வரிசை அறிதலும் - பரிசிலருடைய தரமறிந்து அவர்பெறு முறைமையே கொடுத்தலையும்,

கொடுத்தல் இதற்குங்கூட்டுக.

---

1 "விந்தா சனிகொண்கன் வேந்தரி லாண்பிள்ளை" (வங்கர் கோவை) என்றவிடத்தும் ஆணென்பது வீரரென்னும் பொருள் தருதல் காண்க.

2 அழிபடை தாங்கலென்னும் பெயரிய புறத்துறை ஒன்றுண்டு; "இழிபுடன் றிகல்பெருக, அழிபடை யரண்காத்தன்று" (பு. வெ. 93) என்பது அதன் இலக்கணம்.

3 திருக்குறள், 714.

1 வரையாது கொடுத்தலும் - அங்ஙனம் கல்விமிகுதியில்லாத பரி சிலர்க்குக் கொடாதிருத்தலை மேற்கொள்ளாதே அவர்கள் அளவிற்குத் தக்கனவற்றைக் கொடுத்தலையும்,

இனித் தனக்கென ஒன்றும் வரைந்துவையாமற் கொடுத்தலென் றுமாம்.

218. பரிசில் வாழ்க்கை பரிசிலர் ஏத்த - பிறர்கையிலேற்ற பொரு ளால் இல்வாழ்க்கை நடத்துதலையுடைய பாணர் கூத்தர் முதலியோர் புகழ,

219. பல் மீன் நடுவண் பால் மதிபோல - பலமீன்களுக்கு நடுவி ருந்த பால்போலும் ஒளியையுடைய கலைநிறைந்தமதிபோல,

220. இன் நகை ஆயமோடு இருந்தோன் குறுகி - 2 இயலிசை நாட கத்தாலும் இனிய மொழிகளாலும் இனியமகிழ்ச்சியைச் செய்யும் திர ளோடே இருந்தவனையணுகி,

3 கலைகள் நிறைந்திருந்தமைபற்றித் தலைவற்கு ஈண்டு மதி உவமை யாயிற்று.

221-2. பைங்கண் ஊகம் பாம்பு பிடித்தன்ன அம் கோடு செறிந்த அவிழ்ந்து வீங்கு திவவின் - பசியகண்களையுடைய கரியகுரங்கு பாம் பின்றலையைப் பிடித்தகாலத்துஅப்பாம்புஒருகாலிறுகவும் ஒருகால் நெகிழ வும் அதன்கையைச் சுற்றுமாறுபோன்ற அழகினையுடைய தண்டிடத்தே செறியச் சுற்றின நெகிழவேண்டுமிடத்து நெகிழ்ந்தும் இறுகவேண்டு மிடத்து இறுகியும் நரம்பு துவக்கும் வார்க்கட்டினையும்,

223. [மணிநிரைத் தன்ன வனப்பின்வா யமைத்து :]

மணி நிறைத்தன்ன வனப்பின் - இரண்டுவிளிம்புஞ் சேரத்தைத்து முடுக்கின ஆணிகளாலே மணியை நிரைத்துவைத்தாலொத்த அழ கினையும்,

வாயமைத்து - பொருந்தப்பண்ணி,

224. வயிறு சேர்பு ஒழுகிய வகை அமை அகளத்து - வயிறு சேர்ந்து ஒழுங்குபட்ட தொழில்வகை யமைந்த பத்தரினையும்,

வயிறு - பத்தரினடு. தாழிபோலப் புடைபட்டிருத்தலின், அகள மென்றார்.

225-6. கானம் குமிழின் கனி நிறம் கடுப்ப புகழ் வினை பொலிந்த பச்சையொடு - காட்டிடத்துக் குமிழினுடைய பழத்தினது நிறத்தை

1 "வரையா வீகைக் குடவர் கோவே" புறநா. கஎ : 40.

2 "பாட்டாலும் கூத்தாலும் வார்த்தையாலும் அரசனுக்கு இனிய மகிழ்ச்சியைச் செய்யுமகளிர்" என்றார் முன்; பொருந. 84-5, ந.

3 சஎ-ஆம் பக்கம், 3-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

யொப்பப் புகழப்படும் துவருட்டின கைத்தொழிலாற் பொலிவுபெற்ற போர்வையோடே,

226-7. [தேம்பெய், தமிழ்துபொதிந் திலிற்று மடங்குபுரி நரம்பின்:] தேம் பெய்து புரி அடங்கு நரம்பின் - தேனொழுகுகின்ற தன்மையைத் தன்னிடத்தே பெய்துகொண்டு முறுக்கடங்கின நரம்பினையு முடைய,

அமிழ்து பொதிந்து 1 இலிற்றும் நரம்பு - அமிழ்தத்தைத் தன்னிடத்தே பொதிந்து துளிக்கும் நரம்பு,

இஃது ஓசையினிமைக்குக் கூறிற்று; 2 "தீந்தே, னணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்" என்றார் பிறரும்.

228. பாடு துறை முற்றிய - நீர் பாடுந்துறைகளெல்லாம் முடியப் பாடுதற்கு,

முற்றிய: செய்வியவென்னும் வினையெச்சம்.

228 - 9. பயன் தெரி கேள்வி கூடு கொள் இன் இயம்-தனது பயன் விளங்குகின்ற இசைகளைத் தான் கூடுதல்கொண்ட இனிய யாழை,

பச்சையோடே (226) வாயமைக்கப்பட்டு வனப்பினையும் (223) திவவினையும் (222) அகளத்தினையும் (224) நரம்பினையுமுடைய (227) இன்னியமென முடிக்க.

229 - 30. [குரல்குர லாக, நூனெறி மரபிற் பண்ணி:] நூல் நெறி மரபின் குரல் குரல் ஆக பண்ணி-இசைநூல் கூறுகின்ற முறைமையாலே 3 செம்பாலையாக வாசித்து,

பாடுதுறை முற்றுதற்கு இன்னியத்தைக் குரல் குரலாகப் பண்ணியென முடிக்க.

230 - 31. [ஆனாது, முதுவோர்க்கு முகிழ்த்த கையினை யெனவும்:] முதுவோர்க்கு ஆனாது முகிழ்த்த கையினை எனவும் - 4 அரசன் உவாத்தியாயன் தாய் தந்தை தன்முன்முதலியோர்க்குப் பலகாலுங் குவித்த கைகளையுடையை யென்றும்,

---

1 இலிற்றும்: பிலிற்றுமென்பதன் சிதைவுபோலும்.

2 சீவகசிந்தாமணி, 722.

3 "குரல் குரலாகப் பண்ணி" (சீவக. 723) என்பதற்கு, 'செம்பாலையைப் பண்ணி' என்று பிற இடத்திலும் நச்சினார்க்கினியர் இவ்வாறே எழுதுதல் காண்க; "குரல் குரலாகிய அரும்பாலை" என்பர் சிலப்பதிகார உரையாசிரியர்கள்; சிலப். ப. 69, 113.

4 "அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்மு, னிகரில் குரவ ரிவரிவரைத், தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே, யாவருங் கண்ட நெறி" ஆசாரக்கோவை, 16.

232. இளையோர்க்கு மலர்ந்த மார்பினை எனவும் - வீரரெறிதற்கு மனமகிழ்ந்து கொடுத்த மார்பினையுடையையென்றும்,

1 "விருந்தாயினை யெறிநீயென விரைமார்பகங் கொடுத்தாற், கரும் பூணற வெறிந்தாங்கவ னினதாழினி யெனவே" என்றார் பிறரும்.

இளையோர் : மகளிருமாம்.

2 "வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகல, மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே", 3 "மகளிர் மலைத்த லல்லது மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" என்றார்.

233. ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும் - ஏரினையுடைய குடிமக்களுக்கு நிழல் செய்த செங்கோலையுடையையென்றும்,

234. தேரோர்க்கு அழன்ற வேலினை எனவும் - தேரினையுடைய அரசர்க்கு வெம்மை செய்த வேலையுடையை யென்றும்,

235. நீ சில மொழியா அளவை - நீ சில புகழினைக் கூறுதற்கு முன்னே,

235-6. [மாசில், காம்புசொலித் தன்ன வறுவை யுடீஇ :] காம்பு சொலித்தன்ன மாசு இல் அறுவை உடீஇ - மூங்கில் ஆடையை யுரித்தாலொத்த மாசில்லாத உடையினை உடுக்கப்பண்ணி,

இனி, மூங்கின்முளையிற் பட்டையுமாம்.

237. பாம்பு வெகுண்டு அன்ன தேறல் நல்கி - 4 பாம்பேறி மயக்கினாற்போல மயக்கின கட்டெளிவைத் தந்து,

238-40. [காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப், பூவிரி கச்சைப் புகழோன் றன்முன், பனிவரை மார்பன் பயந்த :] கா எரி ஊட்டிய கணை கவர் தூணி பூ விரி கச்சை புகழோன் தன்முன் பனிவரை மார்பன் பயந்த - காண்டவ வனத்தை நெருப்புண்ணும்படியெய்த கணையை உள்ளடக்கின ஆவநாழிகையினையும் பூத்தொழில் பரந்த கச்சையினையுமுடைய அருச்சுனன் தமையனாகிய இமவான்போலுமார்பனான வீமசேனன் கண்ட,

240-41. நுண் பொருள் பனுவலின் வழாஅ பல் வேறு அடிசில் - கூரியபொருளையுடைய மடைநூனெறியிற் றப்பாத பல வேறுபாட்டையுடைய அடிசிலை,

242-4. [வாணிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த, விளங்கதிர் ஞாயிறெள்ளுந் தோற்றத்து, விளங்குபொற் கலத்தில் :] விசும்பில் வாள் நிறம் கோள் மீன் சூழ்ந்த இள கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து விளங்கு பொன் கலத்தில் - ஆகாயத்தில் ஒளியையுடைத்தாகிய நிறத்தினையுடைய

1 சீவக. 2265. 2 பதிற். கூடு : 4-5.
3 புறநா. கo : 9-10. 4 பாம்பு - பாம்பின்விடம்.

கோளாகிய மீன்கள் சூழ்ந்த இளைய கிரணங்களையுடைய ஞாயிற்றை இகழுந் தோற்றரவையுடைய விளங்குகின்ற பொற்கலத்திடத்தே,

விரும்புவன பேணி - நீ விரும்புவனவற்றை விரும்பியுட்கொண்டு

245. ஆனு விருப்பின் தான் நின்று ஊட்டி - நும்மிடத்து மிகுகின்ற விருப்பத்தாலே தான் நின்று உண்ணப்பண்ணி,

ஆனுமரபினென்றும் பாடம்.

நீ சிலமொழியாவளவை (235) விரும்புவன பேணி (244) உடீஇ (236) நல்கி (237) அடிசிலைக் (241) கலத்தேயிட்டுத் (244) தான் நின்று ஊட்டி யென்க.

246. திறல் சால் வென்றியொடு தெவ்வு புலம் அகற்றி - வலியமைந்த வெற்றியோடே பகையைத் தத்தம் நிலத்தைக் கைவிட்டுப் போகப்பண்ணி,

247. விறல் வேல் மன்னர் மன் எயில் முருக்கி - வெற்றியையுடைத்தாகிய வேலினையுடைய முடிவேந்தர்மன்னும் அரண்களை யழித்து,

248. நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின் - அவ்விடங்களிற் பெறற் பொருளாலே விரும்பிவந்தவர் புன்கண்மையையும் பாணர் புன்கண்மையையும் போக்கினபின்பு,

249. வயவர் தந்த வான் கேழ் நிதியமொடு - தன்படைத்தலைவர் மிக்கனவாய்க் கொண்டுவந்துதந்த நன்றாகிய நிறத்தினையுடைய பொருட்டிரளுடனே,

தன்படைத்தலைவர், குறுநிலமன்னரையும் அரசரையுமழித்து நயவர்க்கும் பாணர்க்குங்கொடுத்து மிக்குக்கொண்டுவந்த நிதியமென்க.

250 - 51. [பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி, யுருவ வான்மதி யூர்கொண் டாங்கு :] பருவ வானத்து உருவ வான் மதி பால் கதிர் பரப்பி ஊர்கொண்டாங்கு- 1 கூதிர்க்காலத்தையுடைய வானிடத்தே வடிவுநிறைதலையுடைய வெள்ளிய மதி பால்போலுங்கிரணங்களைப் பரப்பிப் பரத்தலைக் கொண்டாற்போல,

252 - 3. கூர் உளி பொருத வடு ஆழ் நோன் குறடு ஆரம் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு - கூரிய சிற்றுளிகள் சென்று 2 செத்தின உருக்கள் அழுந்தின வலியினையுடைய குறட்டிடத்திற்றைத்த ஆர்களைச்சூழ்ந்த சூட்டினையுடைய உருளையோடே,

---

1 கூதிர்க்காலத்து மதி சாலவிளங்குமென்பது, "இரவுநன் பகலுமாறி யிரவியு மதியுமாறி, வருவனவென்ன வெய்யோ னொளிமிக மழுங்கிச் செல்லப், பரவுபைங் கிரணக்கற்றைப் பானிலாச் சாலக் கான்று, விரவியமாந்தர்க்கின்பம் விளைத்தது பனிவெண்டிங்கள்" (காஞ்சிப். கழுவாய். 180) என்பதனல் விளங்கும். 2 செத்தின - செதுக்கின.

குறடு - அச்சுக்கோக்குமிடம். அயில்வாய் - கூரியவாய்; என்றது சூட்டிற்கு ஆகுபெயர்.

254-5. [சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத், ததர் பிணி யவிழ்ந்த தோற்றம் போல:] முருக்கின் சேண் ஓங்கு நெடு சினை ததர் நனை சிதர் பிணி அவிழ்ந்த தோற்றம் போல - முருக்கினுடைய விசும்பிலே செல்ல வளர்ந்த நெடியகொம்பிற் செறிந்த அரும்புகள் வண்டிற்குப் பிணியவிழ்ந்த தோற்றரவுபோல,

ததர்: கொத்துமாம். சிதர்: சிந்துதலுமாம்; 1 சிச்சிலியுமாம்.

256-8. [உள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக், கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி, யூர்ந்துபெயர் பெற்ற வெழினடைப் பாகரொடு:]

கரு தொழில் வினைஞர் கைவினை முற்றி (257) உருக்குறு அரக்கு உள் எறிந்த போர்வை (256) பாகர் (258) - வலிய தொழிலைச்செய்யுந் தச்சருடைய கையாற் செய்யும் உருக்களெல்லாம் முற்றுப்பெற்று உருக்கப்படுஞ் சாதிலிங்கம் உள்ளே நிரம்ப வழித்த பலகையையுடையபாகர்,

தேர்த்தட்டு வெளிமறையப் பாவின பலகையைப் போர்வை யென்றார். அதன் மேலே சுற்றிச்சுவராகப் பலகையாற்செய்த சுவரைப் பாகரென்றார். பாகரையுடையதேரைப் பாகரென்றார், ஆகுபெயரால்.

ஊர்ந்து பெயர் பெற்ற எழில் நடை பாகரொடு (258) - ஏறிப் பார்த்து உண்மையாக ஓட்டமுண்டென்று பெயர்பெற்ற அழகினையுடைத்தாகிய நடையினையுடைய தேரோடே,

நேமியோடே (253) போர்வையையுடைய (256) பாகரென முடிக்க.

259-60. மா செலவு ஒழிக்கும் மதன் உடை நோன்றாள் வாள் முகம் பாண்டில் - தன்கடுமையாற் குதிரையின்செலவைப் பின்னே நிறுத்தும் வனப்புடைத்தாகிய வலியினையுடைய தாளினையும் ஒளியினை யுடைத்தாகிய முகத்தினையுமுடைய நாரையெருத்தையும்,

260. வலவனொடு - அதனைச்செலுத்தும் பாகனோடு,

260-61. [தரீஇ, யன்றே விடுக்குமவன் பரிசில்] பரிசில் தரீஇ அவன் அன்றே விடுக்கும் - யானை குதிரை அணிகலமுதலிய பரிசில்களை யுந்தந்து அவன் அன்றேவிடுக்கும்;

நிதியத்தோடே (249) பாகரோடே (258) வலவனோடே பாண்டிலை யும் (260) பரிசிலையுந் (261) தரீஇ (260) அவன் அன்றேவிடுக்குமென முடிக்க.

261-3. மெல் தோள் துகில் அணி அல்குல் துளங்கு இயல் மகளிர் அகில் உண விரித்த அம் மெல் கூந்தலின் - மெல்லிய தோளினையும்,

1 சிச்சிலி - மீன்கொத்திப் பறவை.

துகில் சூழ்ந்த அல்குலினையும், அசைந்த இயல்பினையுமுடைய மகளிர் அகிற்புகையை உண்ணும்படியாக விரித்த அழகையுடைய மெல்லிய கூந்தல்போலே,

264-5 [மணிமயிற் கலாப மஞ்சிடைப் பரப்பித், துணிமழை தவழுந் துயல்கழை நெடுங்கோட்டு :]

துணி மழை மணி மயில் கலாபம் இடை மஞ்சு பரப்பி தவழும் கோடு - தெளிந்தமேகம் நீலமணிபோலும் மயிலினுடைய விரிந்த தோகைக்கு நடுவே தனது மஞ்சைப்பரப்பித் தவழுமலை,

சிறிதுநீர் உட்கொண்டு பக்கம் வெள்ளியமாசாயிருத்தலின், மேகம் மஞ்சைப்பரப்பியென்றார்.

இனி, 'மணிமயில் கலாபம்' என்று பாடமாயின், மயில் தன் கலாபத்தை மஞ்சிடையிலே பரப்புதலைச்செய்து துயல் கோடென்க; துயலல் - ஆடுதல்.

துயல் கழை நெடு கோடு - அசைகின்ற மூங்கிலையுடைய நெடிய மலையிடத்தையுடைய குறிஞ்சி (267.)

266. [எறிந்துரு மிறந்த வேற்றருஞ் சென்னி :] ஏற்று அரு உரும் எறிந்து இறந்த சென்னி கோடு (265) - ஏறுதற்றொழில் அரிதாகிய உருமேறு தான் ஏறுதற்காக இடித்து வழியாக்கிப்போன சிகரத்தையுடையமலை,

இக்குதிரையேற்றரிதென்ப.

267. குறிஞ்சி கோமான் - குறிஞ்சியாகிய ஒழுக்கத்தையுடைய நிலத்திற்கு அரசன்,

267-9. 1 கொய் தளிர் கண்ணி செல் இசை நிலைஇய பண்பின் நல்லியக்கோடனை - கொய்யப்பட்ட தளிர்விரவின மாலையினையும், பிறரிடத்து நில்லாமற்போகின்ற புகழ் தன்னிடத்தே நிற்றற்குக் காரணமான குணத்தினையுமுடைய நல்லியக்கோடனை,

269. நயந்தனிர் செலின் - விரும்பிச்செல்லின்,

முதுவாயிரவல (40) பெருமகன் (122) புரவலனாகிய (125) நல்லியக்கோடனை நயந்தகொள்கையோடே (126) முன்னாட்சென்றனமாக, இந்நாள் (129) அழிபசிவருத்தம்வீட (140) யானையோடே தேரெய்தி (142) யாம் அவணின்றும்வருகின்றோம்; இனி நீயிரும் (143) மூவேந்தரிடத்துச் செல்குவிராயின் (145) வஞ்சியும் வறிது; அதுவன்றி (50) மதுரையும் வறிது; அதுவன்றி (67) உறந்தையும் வறிது; அதுவன்றி (83) எழுவர்பூண்ட ஈகைச்செந்நுகம் (113) ஒருதானாங்கிய (115) குறிஞ்சிக் கோமானாகிய(267)நல்லியக்கோடனை நயந்தனிர்செலின்(269)

1 'கொய்' என்பதற்கு, 'கத்தரிகையாலே மட்டஞ்செய்த' என்று உரையெழுதுவர் புறப்பொருள் வெண்பாமாலை உரையாசிரியர்.

வழியிற் பெறுமவற்றை யாங்கூறக்கேண்மின் ; பட்டினம்படரின் (153) வயின் வயிற்பெறுகுவிர் (163) ; அதன்பின்னர் வேலூரெய்தின் (173) அமைவரப் பெறுகுவிர் (177) ; அதன்பின்னர் அவன் ஆமூ ரெய்திற் (188) கலவையொடுபெறுகுவிர் (195) ; அவற்றைப் பெற்ற பின், அவன் மூதூர் (201) சேய்த்துமன்று ; சிறிது நணியதுவே யாயிருக்கும் (202) ; ஆண்டுச் சென்று முன்னர் அவன் கடைவாயிலைக் குறுகிப் (206) பின் அறிந்தோரேத்த (209) வயவரேத்த (212) அரி வையரேத்தப் (215) பரிசிலரேத்த (218) இருந்தோனை யணுகிப் (220) பாடுதுறைமுற்றுதற்கு (228) இன்னியத்தைப் (229) பண்ணிக் (230) கையினையென்றும் (231) மார்பினையென்றும் (232) கோலினையென்றும் (233) வேலினையென்றும் (234) நீ சிலமொழியா அளவை (235) அவன் (261) நீவிரும்புவனபேணி (244) உடீஇ (236) நல்கி (237) அடிசிலைக் (241) கலத்தேயிட்டுத் (244) தான்நின்று ஊட்டி (245) திகி யத்தோடே (249) பாகரோடே (258) வலவனோடே பாண்டிலையும் (260) பரிசிலையும் (261) தரீஇ (260) அன்றேவிடுக்கும் (261) என வினைமுடிவுசெய்க.

1 ஓய்மானாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத் தனார்பாடிய சிறுபாணாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

வெண்பா.

1. அணியிழையார்க் காரணங் காகிமற் றந்நோய்
தணிமருந்துந் தாமேயா மென்ப—மணிமிடைபூண்
இம்மென் முழவி னெயிற்பட் டினநாடன்
செம்மல் சிலைபொருத தோள்.

2. நெடுவரைச் சந்தன நெஞ்சங் குளிர்ப்பப்
படுமடும் 2 பாம்பேர் மருங்குல்—3 இடுகொடி
4 ஓடிய 5 மார்ப னுயர்நல் லியக்கோடன்
6 சூடிய கண்ணி சுடும்.

———

1 பி - ம். 'எறுமாநாடு'

'ஓய்மான் நல்லியக்கோடன்' என்றும் இவன் வழங்கப்பெறுவன் ; புறநா. கஎசு.

2 பி - ம். 'பாம்போர்', 'பாம்பேய்' 3 பி - ம். 'இடுகிடையாய்'

4 பி - ம். 'ஓட்டிய' 5 பி - ம். 'மார்பின்'

6 பி - ம். 'சூட்டிய'

# * பெரும்பாணாற்றுப்படை.



அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி

---

* பெரும்பாணர் - குழலர்பாணர் முதலாகிய பெரிய இசைக்காரர் (சிலப். ரு: 37, அடியார்); "பெரும்பா ணிருக்கையும்" (மதுரை. 342); "பெரும்பாண் காவல் பூண்டென" நற். சo: 3.

இந்நூலின் பெயர் பாணாறு எனவும் வழங்கும்; தக்க. 562, உரை.

1. நாற்சீரடி பதின்மூன்றெழுத்தால் வந்ததற்கும் (தொல். செய். சூ. 50, இளம்.), நேரும் நிரையுமொன்றி நேரொன்றாசிரியத்தளை நிரையொன்றாசிரியத்தளை ஆயதற்கும் (ஷை ஷை ஷை 56, பேர். ந.) இவ்வடி மேற்கோள்.

2. "கல்சேர்கையினாலே இருள் வாராநிற்க அது பொருது மதி தோன்ற என ஒரு வினையாக முடிக்க; 'பகல் கான்......பருதி' என்றார் பிறரும்" (கலி. ககக, ந.); "கதிர் காற்றியும் - கிரணங்களைக் கக்கியும்" (கல். "நண்ணியபாதி" மயிலேறு.) என்பதற்கும், "கான்று என்னு மிடக்கர் அணிகுறித்துப் பிறிதொரு பொருண்மேனிற் றலின் மறைக்கப்படாது; தன் பொருண்மேல் நின்றுழி மறைக்கப் படும்" (தொல். எச்ச. சூ. 47, சே. ந; நன் - வி. சூ. 267; இ - வி. சூ. 168, உரை; நன். சூ. 267, இராமாநுச.) என்பதற்கும் இவ்வடி மேற்கோள்.

1-2. "வெயில்கான் றிருள்சீத்தெழு வெங்கதிர்ச் செல்வன்" கூர்ம. இராவணவதை. 17.

அடியெதுகைக்கும் வழக்கொடுபட்ட மரபு பிறழவும் செய்யுளின் பம்படின் அவ்வாறு செய்க (தொல். செய். சூ. 93, ஷை மரபு. சூ. 1, பேர்.) என்பதற்கும், செய்தென்னும் வாய்பாடு செய்யாநின் றெனச் சிறுபான்மை நிகழ்காலப் பொருளிலும் வரும் (தொல். வினை. சூ. 31. ந; இ - வி. சூ. 246, உரை; கல். "பாய்திரை", "கண்ட காட்சி" மயிலேறும்.) என்பதற்கும், கட்டளையடிச் சீர்வகையடி தொடுத்த அடியெதுகைக்கும் (தொல். செய். சூ. 93, ந.), சமாதி யென்னுமலங்காரத்திற்கும் (தண்டி. பொது. 25; இ - வி. சூ. 635) இவ்

காய்சினந் திருகிய கடுந்திறல் வேனிற்
பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
5 வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்தத
னுள்ளகம் புரையு மூட்டுறு பச்சைப்
பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக்
கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை
யுருக்கி யன்ன பொருத்துறு போர்வைச்
10 சுனைவறந் தன்ன விருடேங்கு வறுவாய்ப்
பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை
நெடும்பணைத் திரடோண் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவின்
மணிவார்ந் தன்ன மாயிரு மருப்பிற்
15 பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
றொடையமை கேள்வி யிடவயிற் றழீஇ

---

வடிகள் மேற்கோள்; விட்டும்விடாத இலக்கணைக்கு இவ்வடிகள் உதா-ரணமாகக் காட்டப்படும்; நன். சூ. 269, இராமாநுச.

"உயிருண்ணவும் பருகவும் படுவதன்றாயினும் அவ்வாறு கூறுதல், 'அகலிரு......பருதி' என்றாற்போல ஓரணி குறித்து நின்றது" புறநா. உரு௦, விசேடவுரை.

3. காய்சினந்திருகிய : "கடுஞ்சினந்திருகி" மணி. உஉ : 157.

4. பி - ம். 'ஒழிந்த பராஅரை'

5. பி - ம். 'வகிர்ந்ததன்'

5 - 6. பி - ம். 'வைத்ததனுள்ளம்'

7. பி - ம். 'பாளையின் பசும்பூ', 'பாளையின் பசுங்காய்'

8. பி - ம். 'சிறுதுளை'

7 - 8. அன்ன : மெய்யுவமவுருபு; தொல். உவம. சூ. 13, இளம். மேற்.

9. "விசியுறு போர்வை" என்பதற்குத் தெரியாமற் போர்த்த போர்வை யெனப் பொருள்கூறி இவ்வடியை மேற்கோள் காட்டினர்; சீவக. 559, ந.

10. வறுவாய் : பொருந. 12.

13. ஏய்க்குமென்பது உவமவுருபு (தொல். உவம, சூ. 17, இளம்.) என்பதற்கும், வினையுவமவுருபு (ஷை ஷை ஷை 12, பேர்.) என்பதற்கும் இவ்வடி மேற்கோள்.

12 - 3. பொருந. 14 - 5; மலைபடு. 21.

15 - 6. சிறுபாண். 34-5-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப்பார்க்க.

வெந்தெறற் கனலியொடு மதிவலந் திரிதருந்
தண்கடல் வரைப்பிற் றாங்குநர்ப் பெறாது
பொழிமழை துறந்த புகைவேய் குன்றத்துப்
20 பழுமரந் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்
புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண
பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக்
கருவி வானந் துளிசொரிந் தாங்குப்
25 பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு
வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி
வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்துகொண்

---

17. பி - ம். 'வெங்கதிர்க்கனலி', 'வெந்திறற்கனலி'
வெந்தெறற்கனலி: "தெறுகதிர்க் கனலி வெம்மை" புறநா. ௬௫ : 2.

18. பி - ம். 'தண் கடல் வையத்து'
தாங்குநர்ப்பெறாது: "புரவல ரின்மையின்" புறநா. ௬௧ : 2.

17 - 8. முக்காலத்துமுள்ள இயல்பையுடைய பொருளை நிகழுங் காலத்து மெய்ந்நிலைப் பொதுச் சொல்லாற் சொல்லவேண்டும் (தொல். வினை. சூ. 43, சே. ந ; இ - வி. சூ. 303) என்பதற்கு மேற்கோள்.

20. பொருந. 64-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

21. கல்லென் சுற்றம் : "கல்லென் சுற்றக் கடுங்குரல்" (குறிஞ்சி. 151) ; "வரிசை யறியாக் கல்லென் சுற்றம்", "கல்லென் சுற்றமொடு கையழிந்து" புறநா. ௧௮௪ : 8, ௨௪௦ : 12.

22. புல்லென்யாக்கை : "நின்னினும் புல்லியே மன்னே" புறநா. ௧௪௧ : 8.

24. பி - ம். 'துளி சொரிந்தாங்கு'
"கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென" சீவக. 2752.

23 - 4. "கார்பெற்ற புலமேபோற் கவின்பெறும்", (கலி. ௩௮ : 12) ; "நெடுவேனில் சுடச்சுட நின்றுலறிக், கார்வந்து தொடத்தொட வுய்ந்திளகுங் காடொத்தனன்" (தக்க. 200) ; "காரிற் குளிர்ந்து குழைந்தசெழுங் கானம் பூத்த தெனக்கவினி" வி. பா. 12-ஆம் போர். 82.

25. பி - ம். 'என்னிரும்பேர்'
"ஆடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு" (பொருந. 61) ; புறநா. ௩௭௦ : 3-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

டியாமவ ணின்றும் வருது நீயிரு
மிருநிலங் கடந்த திருமறு மார்பின்
30 முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபி னுரவோ னும்பன்
லர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கு
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளு
மிலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
35 வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி
னல்லது கடிந்த வறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையற் படர்குவி ராயிற்
கேளவ னிலையே கெடுகநின் னவல
மத்தஞ் செல்வோ ரலறத் தாக்கிக்
40 கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புல
முருமு முரறு தரவுந் தப்பா
காட்டுமாவு முறுகண் செய்யா வேட்டாங்
கசைவுழி யசைஇ நசைவுழித் தங்கிச்
45 சென்மோ விரவல சிறக்கநின் னுள்ளங்
கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து
முழவி னன்ன முழுமர வுருளி
யெழூஉப்புணர்ந் தன்ன பரூஉக்கை நோன்பார்
மாரிக் குன்ற மழைசுமந் தன்ன

---

28. பு. சிறுபாண். 143; மலைபடு. 53.

27-8. சிறுபாண். 142-3-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

29. திருமறு மார்பு: "திருமறு மார்பநீ யருளல் வேண்டும்" (பரி. க: 36); "திருமகளாதலால், 'புனைமறு' என்றார்" ஷை. ச: 59, பரிமேல்.

30. பி-ம். 'புறங்கடை'

33. பொருந. 54-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

36. பி-ம். 'அல்லவை'

38. "கேட்டிசின் வாழி கெடுகநின் னவலம்" மதுரைக். 208.

40. "களவேர் வாழ்க்கையர்" மணி. உரு: 126.

40-41. "தனிநீர் கழியினுந் தகைக்குந ரில்லென" சிலப். கரு: 134.

50 வாரை வேய்ந்த வறைவாய்ச் சகடம்
வேழங் காவலர் குரம்பை யேய்ப்பக்
கோழி சேக்குங் கூடுடைப் புதவின்
முளையெயிற் றிரும்பிடி முழந்தா ளேய்க்குந்
துளையரைச் சீறூ ராங்கத் தூக்கி
55 நாடக மகளி ராடுகளத் தெடுத்த
விசிவீங் கின்னியங் கடுப்பக் கயிறுபிணித்துக்
காடி வைத்த கலனுடை மூக்கின்
மகவுடை மகடூஉப் பகடுபுறந் துரப்பக்
கோட்டிணர் வேம்பி னோட்டிலை மிடைந்த
60 படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோண்
முடலை யாக்கை முழுவலி மாக்கள்
சிறுதுளைக் கொடுநுக நெறிபட நிரைத்த
பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்
சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப்
65 பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி
யெல்லிடைக் கழியுநர்க் கேம மாக
மலையவுங் கடலவு மாண்பயந் தரூஉ
மரும்பொரு ளருத்துந் திருந்துதொடை நோன்று
ளடிபுதை யரண மெய்திப் படம்புக்குப்
70 பொருகணை தொலைச்சிய புண்டீர் மார்பின்
விரவுவரிக் கச்சின் வெண்கை யொள்வாள்

50. பி - ம். ‘வார்வை வேய்ந்த’
ம். “ஆரை வேய்ந்த வறைவாய்ச் சகடத்து” அகநா. நூ0க : 7.
52. பி - ம். ‘கூட்டுடை’
53. இரும்பிடி முழந்தாள்: “முழந்தா ளிரும்பிடி” குறுந். நூகச : 1.
60. படலைக்கண்ணி: (பெரும்பாண். 174); “முறிமிடை படலை மாலை” (சீவக. 1889; சூளா. துறவு. 23); “இலைபுனைந்த கள்ளவிழ் கண்ணி”, “இலைப்பொலிதார்”, “முறிமலர்த்தார்” பு. வெ. 6, 74, 136.
60 - 61. ம். நெடுநல். 31 - 2.
63 - 5. ஒழுகையும் உமணரும்: சிறுபாண். 55.
69. படம் புகுதல்: “படம்புகு மிலேச்சர்” முல்லை. 66.
70. “பொருகணை தழிச்சிய புண்டீர் மார்பின்” (தொல். புறத். சூ. 8. ந. மேற்.) என்று ஓரடி காணப்படுகிறது.

வரையூர் பாம்பிற் பூண்டுபுடை தூங்கச்
சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக
கருவி லோச்சிய கண்ணக னெறுழ்த்தோட்
75 கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்
தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியற்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
80 தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கு
முல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட் டியவி
னீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
85 வரிப்புற வணிலொடு கருப்பை யாடா
தியாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தக

---

73. "சுரிகையம் பூங்கச்சிடைக் கோத்து வாங்கி" சீவ 698, மேற்.

75. கடம்பமர் நெடுவேள் : முருகு. 225-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

நெடுவேள் : "வென்றி நெடுவேள்" (குறுந். கககூ : 2); "நெடுவேள் குன்ற மடிவைத் தேறி" (சிலப். உரு : 190); முருகு. 211-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

75 - 6. உவமையிற் பால் மயங்கியதற்கு இவை மேற்கோள்; தொல். உவம. சூ. 6, பேர்.

78. பி - ம். 'கடுப்ப நெறியல்', 'கடுப்ப நெரியல்.'

80. அணர்ச்செவிக் கழுதை : "அணர்ச்செவிக் கழுதையா யாண்டுத் தோன்றிய" பாகவதம், க0. அரவின்மேலாடிய. 6.

79 - 80. பி - ம். 'நோன்புறக் கணர்ச் செவி'

83. பி - ம். 'நீள்வரை'

83 - 5. இலவங்காய் அணிலுக்கு உவமை : "தோன்றுபூ விலவத் தங்கட் டொகையணி லனைய பைங்காய், கான்றமென் பஞ்சி" சீவக. 1701.

87. "கருவி நுதிகொ ணெறியிலை யீந்து" கல். "பொருப்பு"

ரீத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை
மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
90 மீன்பிணை யொழியப் போகி நோன்கா
ழிரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோ
லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி
யிருநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்பு லடக்கிய வெண்ப லெயிற்றியர்
95 பார்வை யாத்த பறைதாள் விளவி
னீழன் முன்றி னிலவுரற் பெய்து
குறுங்கா ழுலக்கை யோச்சி நெடுங்கிணற்று

---

88. புல்லினுள் ஒரு சாரன இலையெனவும் பெறுமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். மரபு. சூ. 87, பேர்.

87 - 8. பி - ம். 'நெடுந்தோட்டீந்திலை', 'நெடுந்திடீத்திலை'

85 - 8. "ஈந்து மேய்ந்திடைக், கருப்பையா டாக்குடில் களுல்வ" ஆனைக்காப். நாடு. 112.

83 - 8. தொல். உவம. சூ. 34, பேர். மேற்.

89. மான்றோற்பள்ளி: "வரியதட் படுத்த சேக்கைத் தெரி யிழை" (அகநா. ௫அ: 4); "சீரூர் மரையத ளிற்றங்கு கங்குற் சிறு துயிலே" திருச்சிற். 398.

தொல். மரபு. சூ. 23, பேர். மேற்.

88 - 9. ஈத்திலை வேய்ந்த குரம்பை, தோற்பள்ளி: "இலைவேய் குரம்பை யுழையதட் பள்ளி" மதுரைக். 310.

90. பிணை உயர்திணைப் பெண்பான் மரபுப் பெயர்; தொல். மரபு. சூ. 61, பேர். மேற்.

93. பி - ம். 'இடு நிலக்கரம்பை'

94. பி - ம். 'நுண்புலடுக்கிய'

95. பி - ம். 'பறைத்தாள்'

விளவில் விலங்குகளைக் கட்டுதல்: "கொடுஞ்செவி ஞமலி யாத்த, வன்றிரள் விளவின்" பெரிய. கண்ணப்ப. 3.

89 - 96. "அவை, 'மான்றோற்........பெய்து' என்றவழி உவமஞ் செய்யாது அந்நிலத்தியல்பு கூறப்பட்டதாயினும் உவமத்தாற் பொருட்பெற்றி தோன்றச் செய்தார்போல அந்நிலத்திற்கும் பயம்பாடு வெளிப்படச் செய்யாமையின் உவம இலக்கணத்துள் இதனையும் இலேசினாற் கொண்டாமென்பது" (தொல். உவம. சூ. 34, பேர்.); தொழிற் றன்மையணி; தண்டி. பொருளணி. சூ. 3, மேற்.

97. ஓச்சி - குத்தி; பெரும்பாண். 118.

வல்லூற் றுவரி தோண்டித் தொல்லை
முரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி
100 வாரா தட்ட வாடுன் புழுக்கல்
வாடாத் தும்பை வயவர் பெருமக
ேனாடாத் தானை யொண்டொழிற் கழற்காற்
செவ்வரை நாடன் சென்னிய மெனினே
தெய்வ மடையிற் றேக்கிலைக் குவைஇநும்
105 பைதீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்
மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்
வான்மடி பொழுதி னீர்நசைஇக் குழித்த
வகழ்சூழ் பயம்பி னகத்தொளித் தொடுங்கிப்
புகழா வாகைப் பூவி னன்ன
110 வளைமருப் பேனம் வரவுபார்த் திருக்கு
மரைநாள் வேட்ட மழுங்கிற் பகனுட்

---

100. பி - ம். 'ஆறுதட்ட', 'வாறுதட்ட.'

102. பி - ம். 'ஒண்பொறிக்'

ஓடாத்தானை: "ஓடாத தானை யுருமுக்குர லோடையானை" (சீவக. 7); "ஓடாத தானை நளனென் றுளனொருவன்" நள. சுயம் வர. 18.

104. பி - ம். 'மடைவயிற்'

இலை - மரத்துறுப்பினைச் சொல்லும் வாய்பாடு; தொல். மரபு. சூ. 87, பேர். மேற்.

103 - 5. "மான விறல்வேள் வயிரிய மெனினே, நும்மில் போல நில்லாது புக்குக், கிழவிர் போலக் கேளாது கெழீஇச், சேட்புலம் பகல வினிய கூறிப், பருஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு, குரூஉக்க ணிறடிப் பொம்மல் பெறுகுவிர்" மலைபடு. 164 - 9.

107. பி - ம். 'வானமடி' என்றும் கொள்ள இடமுண்டு.

110. பி - ம். 'வளையெயிற்றேன வரவு'

109 - 10. ஏனக்கொம்பிற்கு அகத்திப்பூ: "அப்பன்றியைக் கொன்றருளி அதன் கொம்பைச் செவ்வகத்திப் பூவாகச் சாத்தி யருளின கதை" தக்க. 630, உரை.

108 - 10. பயம்பினிருந்து ஏன வேட்டையாடுதல்: "சேணோ னகழ்ந்த மடிவாய்ப் பயம்பின், வீழ்முகக் கேழ லட்ட பூசல்" மதுரைக். 294 - 5.

பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி
முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையு
115 நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇக்
கடுங்கட் கானவர் கடறுகூட் டுண்ணு
மருஞ்சுர மிறந்த வம்பர்ப் பருந்துபட
வொன்னாத் தெவ்வர் நடுங்க வோச்சி
வைந்நுதி மழுங்கிய புலவுவா யெஃகம்
120 வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாட்
சாபஞ் சார்த்திய கணைதுஞ்சு வியனக
ரூகம் வேய்ந்த வுயர்நிலை வரைப்பின்
வரைத்தேன் புரையுங் கவைக்கடைப் புதையொடு
கடுந்துடி தூங்குங் கணைக்காற் பந்தர்த்
125 தொடர்நா யாத்த துன்னருங் கடிநகர்
வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பைக்
கொடுநுகந் தழீஇய புதவிற் செந்நிலை
நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயிற்

112. பைம்புதலெருக்கி: "சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி" முல்லை. 25.

114. முள்ளரைத் தாமரை: சிறுபாண். 183-ம் அடியின் அடிக் குறிப்பைப் பார்க்க.

தாமரைப் புல்லிதழ்: "புலிநா வன்ன புல்லிதழ்த் தாமரை" தண்டி. மேற்.

117. பி - ம். 'இறந்த வும்பர்'

119 - 20. எஃகம் பலகையொடு நிரைஇ: "பூந்தலைக் குந்தங் குத்திக் கிடுகுநிரைத்து" (முல்லை. 41); "கிடுகுநிரைத் தெஃகூன்றி" பட். 78.

121. பி - ம். 'சாத்திய'

125. "கடுங்குரற் கதநாய் நெடுந்தொடர் பிணித்துப், பாசந் தின்ற தேய்கா லும்பர், மரையதண் மேய்ந்த மயிர்ப்புன் குரம்பை" திருவாரூர் மும். கூ: 10 - 12.

126. வாழ்முள்வேலி......படப்பை: "இடுமுள் வேலி யெருப் படு வரைப்பின்" பெரும்பாண். 154.

128. கழு நிரைத்த வாயில்: "எறிவேற் பெருங்கடை", "பல் வேன் முற்றம்", "பொருவேன் முற்றம்" பெருங். க. ௩௪: 39, ௩௫: 66, ௩௭: 98.

கொடுவி லெயினக் குறும்பிற் சேப்பிற்
130 களர்வள ரீந்தின் காழ்கண் டன்ன
சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி
ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்
வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்
யானை தாக்கினு மரவுமேற் செலினு
135 நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ்
சூன்மகண் மாறா மறம்பூண் வாழ்க்கை
வலிக்கூட் டுணவின் வாட்குடிப் பிறந்த
புலிப்போத் தன்ன புல்லணற் காளை
சென்னா யன்ன கருவிற் சுற்றமொடு
140 கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவுநொடை தொலைச்சி

---

129. பி - ம். 'எயினர் குறும்பிற்'

132. "மனுவனைய மென்சூன் மடவுடும்பு" சீவக. 2784.

ஞமலி - திசைச்சொல்; தொல். மொழி. சூ. 31, ந. இ - வி. சூ. 27, மேற்.

135. நீனிற விசும்பு: முருகு. 116-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

134 - 6. அணங்கும் விலங்கும் பொருளாக அச்சம் பிறத்தல் இயல்பென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். மெய். சூ. 8, பேர்.

138. பி - ம். 'அணர்க்காளை'

வீரனுக்குப் புலிப்போத்து உவமை: "உறுபுலித் துப்பி னோவியர் பெருமகன்" (சிறுபாண். 122); "புலிக்கணமும்......போல்வார்", "குயவரி வேங்கை யனைய - வயவர்", "இனவேங்கை யன்ன விகல் வெய்யோர்" (பு. வெ. 25, 58, 63); "வயப்புலிப் போத்தன்னார்" பெரிய. எனாதி. 13.

புலிப்போத்து: "பொறிவரி யிரும்புலிப் போத்துநனி வெரீஇ" (பெருங். க. ருச: 37); "புலிப்போத்துக் கொடி" தக்க. 4, 8, உரை.

புல்லணற்காளை: "மையணற் காளை" ஐங். நஅக; புறநா. அந: 1; பு. வெ. 12.

போத்தென்னும் பெயர் இளமைக்கும் ஆண்பாற்கும் முறையே யுரித்து; தொல். மரபு. சூ. 24, 41, பேர். மேற்.

139. பி - ம். 'செந்நாய்'

141. நாளா: "தாளித் தண்பவர் நாளா மேயும்" குறுந். கOச: 3.

யில்லடு கள்ளின் றேப்பி பருகி
மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி
மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்பச்
145 சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சி வலன்வளையூஉப்
பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை
முரண்டலை கழிந்த பின்றை மறிய
குளகரை யாத்த குறுங்காற் குரம்பைச்
செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்
150 கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பி
னதளோன் றுஞ்சுங் காப்பி னுதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றிற்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கு
மிடுமுள் வேலி யெருப்படு வரைப்பி

---

கள்விலைக்கு ஆவைத்தரல்: "முருந்தே ரிளநகை காணாய் நின்னை யர், கரந்தை யலறக் கவர்ந்த வினநிரைகள், கள்விலை யாட்டி......முன்றி னிரைந்தன" (சிலப். வேட்டுவ.); "அரூஉ நிலைச்சாடி யாடுறு தேறன், மரூஉன் மழைத்தடங் கண்ணி - பொரூஉன், கடுங்கண் மறவன் கழல் புனைந்தான் காலை, நெடுங்கடைய நேரார் நிரை", "வெங்கட்கு வீசும் விலையாகும் - செங்கட், செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி, வரிச் சிலையாற் றந்த வளம்" பு. வெ. 2, 16.

142. தோப்பி: "தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக் கும்", "பாப்புக்கடுப் பன்ன தோப்பி" (அகநா. ௩௫: 9, ௩௪௮: 7); "துழந்தடு கள்ளின் றேப்பியுண் டயர்ந்து" மணி. ௭: 71.

143. மத விடை: இ - வி. சூ. 282, மேற்.

பி - ம். 'விடைதெண்டி'

142 - 3. "நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்" (புறநா. உ௬உ: 1); "செங்கண் மழவிடை கெண்டிச் சிலைமறவர், வெங்கண் மகிழ்ந்து விழவயர" பெரும்பொருள்.

144. "மடிவாய்த் தண்ணுமை நடுவ ணார்ப்ப" நற். ௧௩௦: 2.

146. பி - ம். 'முனைதலையிருக்கை'

134 - 46. மற்கடைக் கூட்டிய துடிநிலை யென்னும் புறத்திணைத் துறைக்கு இவை மேற்கோள்; தொல். புறத். சூ. 4, இளம்.

151 - 2. பி - ம். 'உதணெடுந்தாம்பு'

தொல். மரபு. சூ. 47, பேர். மேற்.

154. இடுமுள்வேலி: அகநா. ௩௯௪: 8; சிலப். ௧உ: 10; ௧௩: 42.

155 னள்ளிருள் விடியற் புள்ளெழப் போகிப்
புலிக்குரன் மத்த மொலிப்ப வாங்கி
யாம்பி வான்முகை யன்ன கூம்புமுகி
ழுறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
160 நாண்மோர் மாறு நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வருங் காதிற் பணைத்தோட்
குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மக
ளளவிலை யுணவிற் கிளையுட னருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளா
165 ளெருமை நல்லான் கருநாகு பெறாஉ
மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பி
னிருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்
தொடுதோன் மரீஇய வடுவாழ் நோனடி

---

155. "புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்" மலைபடு. 448.

156. தயிர்கடையும் ஓசைக்குப் புலிமுழக்கு: "கடையலங் குரல வாள்வரி யுழுவை" (அகநா. உஎஎ: 5); "இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந்நாகு, நாட்டயிர் கடைகுரல் கேட்டொறும் வெரூஉம்" (தொல். அகத். சூ. 41, ந; நம்பி. சூ. 182, மேற்.); "கடைதயிர்க் குரல வேங்கை" (சீவக. 2717); "தயிர் கடையு மோதை, கொல்புலி முழக்க மென்ன வயின்றொறுங் குழுமும்" நைடத. நாட்டுப். 15.

157. பி-ம். 'வான்முகிழ்' 'கூம்புமுகை'

157-8. தயிர்க்கு ஆம்பி: "புனிற்று, எழுந்த வாம்பிக ளிடறின செறிதயி ரேய்த்த" (கம்ப. கார்காலப். 47); "அளைசித றியபோற், கிடந்தன வாம்பி" கல். "சலியாப்பராரை"

159. பூஞ்சுமட்டிரீஇ: "பூஞ்சுமட் டிரீஇப் போற்றுவனர் தந்த" பெருங். உ. ரு: 49.

163. அளைவிலையுணவு: "அளைவிலை யுணவி னாய்ச்சியர் தம்மொடும்" சிலப். கசு: 3.

164. "நெய்விலைப் பசும்பொற் றோடும்" சீவக. 488.

165. நாகு: தொல். மரபு. சூ. 26, 62, பேர். மேற்.

166. மடிவாய்க் கோவலர்: "மடிவிடு வீளையர்" (குறிஞ்சி. 161); "இடையன், மடிவிடு வீளை கடிதுசென் றிசைப்ப" (அகநா. உஎச: 8-9); "நாத்தலை மடிவிளிக் கூத்தொடு குயிறா" (சீவக. 120); "செந்நா மடிவிளி" கூர்ம. பிலக்கமுத. 40.

170 விழுத்தண் டூன்றிய மழுத்தின் வன்கை
யுறிக்கா வூர்ந்த மறுப்படு மயிர்ச்சுவன்
மேம்பா லுரைத்த வோரி யோங்குமிசைக்
கோட்டவுங் கொடியவும் விரைஇக் காட்ட
பல்பூ மிடைந்த படலைக் கண்ணி
175 யொன்றமரு டுக்கைக் கூழா ரிடையன்
கன்றமர் நிரையொடு கானத் தல்கி
யந்து ணவிர்புகை கமழக் கைம்முயன்று
ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலி
180 னின்றீம் பாலை முனையிற் குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன்புலம் போகி முள்ளுடுத்
185 தெழுகா டோங்கிய தொழுவுடை வரைப்பிற்
பிடிக்கணத் தன்ன குதிருடை முன்றிற்
களிற்றுத்தாள் புரையுந் திரிமரப் பந்தர்க்
குறுஞ்சாட் டுருளையொடு கலப்பை சார்த்தி
நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டிற்
190 பருவ வானத்துப் பாமழை கடுப்பக்

---

171. "உறிக்கா வாளரொடு" சிலப். கடு : 205.

174. பி - ம். 'பன்மலரடுக்கிய', 'பன்மலர்மிடைந்த.'

படலைக்கண்ணி: பெரும்பாண். 60-ஆம் அடியின் அடிக் குறிப்பைப் பார்க்க.

176. "கன்றமரா யங் கானத் தல்கவும்" புறநா. உருo: 1.

177. பி - ம். 'புகை பிறப்ப'

178. ஞெலி யென்பது வினைச்சொல்லென்பதற்கு இவ்வடி மேற்கோள்; கலி. கoக, ந.

179. 'தொட்ட' என்றும் கொள்ள இடமுண்டு.

183. பல்காற் பறவை: "மழலைப் பல்காற் பறவை" பாகவத. கோவியரை. 28.

188. பி - ம். 'சாட்டுருளி' 'சாத்தி'

190. பி - ம். 'பாய்மழை'

கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்
நெடுங்குரற் பூளைப் பூவி னன்ன
குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றிப்
புகரிணர் வேங்கை வீகண் டன்ன
195 அவரை வான்புழுக் கட்டிப் பயில்வுற்
றின்சுவை மூரற் பெறுகுவிர் ஞாங்கர்க்
குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்
நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்
பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சி
200 லுடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
யரிபுகு பொழுதி னிரியல் போகி
வண்ணக் கடம்பி னறுமல ரன்ன
வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
205 கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்
வன்புல மிறந்த பின்றை மென்றோன்
மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன

---

192. பி - ம். 'நெடுங்காற்'

194 - 5. அவரைப்புழுக்கிற்கு வேங்கைப்பூ : "செவ்வீ வேங் கைப் பூவினன்ன .........அவரை" மலைபடு. 434 - 6.

195 - 6. பி - ம். 'அட்டிப் பயற்றின் நீஞ்சுவை மூரல்'

199. "வேழம், வறனுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ் சேர" (கலி. அ : 4 - 5) ; "யானைத், தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து, நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள" (புறநா. கக: 9 - 11) ; "வெள்ளிவெண் ணாஞ்சிலான் ஞால முழுவனபோ, லெல்லாக் களிறு நிலஞ்சேர்ந்த" (களவழி. 40) ; "கையும் மத்தகமும் கொம்பும் கலப் பைக்கு ஒப்பென்பது" (தக்க. 259, உரை) ; "அலப்படை யனைய தூங்குவாய் நெடுங்கை யலைசெவி வாரணம்" விநாயக. நகரப். 21.

200. "உடுப்பு முகத்த கூர்ங்கொழுவி னுழுநற்செயல்" கூர்ம. வருணச். 15.

205. "கட்சி - காடு ; 'கறை.........சேக்கும்' இது பெரும பாணாறு" தக்க. 102, உரை.

206 - 7. மென்றோன் மிதியுலை : "உலைவாங்கு மிதிதோல் போல" குறுந். கஎ௨ : 6.

கவைத்தா ளலவ னளற்றளை சிதையப்
பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்
210 காரேறு பொருத கண்ணகன் செறுவி
னுழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்
முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவிற்
களைஞர் தந்த கணைக்கா னெய்தற்
கட்கமழ் புதுப்பூ முனையின் முட்சினை
215 முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
கொடுங்கான் மாமலர் கொய்துகொண் டவண
பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டிப்
புணர்நார்ப் பெய்த புனைவின் கண்ணி
யீருடை யிருந்தலை யாரச் சூடிப்
220 பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பி

207 - 8. அலவன்தாளுக்கு முறிந்த கொடிறு: "கொடிறு முறித் தன்ன கூன்று ளலவன்" கபிலர்சீவ. திருவிரட்டை. 28.

209. பி - ம். 'பஞ்சாய்'

211. பி - ம். 'உழவுநுண்'

உழாஅ நுண்டொளி: "உழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய" சிலப். கo: 120.

217 - 8. பல்லிற் சவட்டிய நாரினுல் மாலை கட்டல்: "பல்லினுற் சுகிர்ந்த நாரிற் பனிமலர் பயிலப் பெய்த, முல்லையங் கண்ணி" (சீவக. 438); "பல்லினுற் சுகிர்ந்த நாரில்.........போதுகட்டிய குழங்கன் மாலை" கூர்ம. பிலக்க. 43.

220. பி - ம். 'சண்பின்'

பொன்காண் கட்டளை: "பொன்னின், உரைதிகழ் கட்டளை" (குறுந். ககஉ: 3 - 4); "வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத், தலங்கு குலை யலரி தீண்டித் தாதுகப், பொன்னுரை கட்டளை கடுப்ப" அகநா. களஅ: 9 - 11.

கண்பு: மதுரைக். 172; "கண்பகத்தின் வாரணமே" திருஞா. தே. திருத்தோணிபுரம்.

220 - 21. இரட்டைக்கிளவி இரட்டை வழித்தானதற்கு இவ்வடி களை மேற்கோள் காட்டி, "கண்பின் சுண்ணம் புடைத்த செஞ்சுவட் டினையும் மார்பினையும் பொன்னுரையோடும் கல்லோடும் உவமித்தமை யின் இரட்டைக்கிளவி இரட்டை வழித்தாயிற்று" என்றெழுதுவர்; தொல். உவம. சூ. 22, பேர்.

ஞிரும்புவடித் தன்ன மடியா மென்றோற்
கருங்கை வினைஞர் காதலஞ் சிறாஅர்
பழஞ்சோற் றமலை முனைஇ வரம்பிற்
225 புதுவை வேய்ந்த கவிகுடின் முன்றி
லவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல
கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉ
நீங்கா யாணர் வாங்குகதிர்க் கழனிக்
கடுப்புடைப் பறவைச் சாதி யன்ன
230 பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
றாம்புடைத் திரடா டுமித்த வினைஞர்
பாம்புறை மருதி னோங்குசினை நீழற்
பலிபெறு வியன்கள மலிய வேற்றிக்
கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடுந்
235 துணங்கையம் பூதந் துகிலுடுத் தவைபோற்
சிலம்பி வானூல் வலந்த மருங்கிற்
குழூமுநிலைப் போரின் முழூமுத றொலைச்சிப்
பகடூர் பிழிந்த பின்றைத் துகடப

226. விறந்து: தொல். உரி. சூ. 50, சே. ந. தெய்வச். இ - வி. சூ. 282, மேற்.

226 - 7. உலக்கையிடிக்குப் பறவைகள் அஞ்சல்: "பாசவ லிடித்த பெருங்கா ழுலக்கைக், கடிதிடி வெரீஇய கமஞ்சூல் வெண் குருகு" அகநா. கசக : 18 - 9.

230. பி - ம். 'செய்நெல்லின்'

229 - 30. "மென்செந் நெல்லி, னம்பண வளவை யுறைகுவித் தாங்குக், கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்" பதிற். எக : 4 - 6.

234. பி - ம். 'கைபிணைந்து'

235. துணங்கை : முருகு. 56; தக்க. 53-ஆம் தாழிசையின் விசேடக் குறிப்பைப் பார்க்க.

235 - 6. சிலம்பிநூலுக்குத் துகில்: "சிலம்பி கோலிய வலங் கற் போர்வையின்" (பதிற். கூக : 13); "சிலம்பிபொதி செங்காய், துகில்பொதி பவள மேய்க்கும்" (யா. கா. மேற்); "முழுமெய்யுஞ் சிலம்பி வலந்ததுபோற் போர்வை போர்த்து" (சீவக. 340); "நூட் சிலம்பி வலந்தன நுண்டுகில்" (கம்ப. எழுச்சி. 46); "பாடி வீடுகொள் படங்கெனக்.........சிலம்பி நூல்கொடு கவிக்குமே" (தக்க. 54); "சிலம்பி, பொருவினால் வலந்து தங்கிய வலையம்" தணிகைப். நந்தி யுபதேச. 29.

வையுந் துரும்பு நீக்கிப் பைதறக்
240 குடகாற் றெறிந்த குப்பை வடபாற்
செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றுந்
தண்பணை தழீஇய தளரா விருக்கைப்
பகட்டா வீன்ற கொடுநடைக் குழவிக்
கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்கு
245 லேணி யெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரி மூத்த கூடோங்கு நல்லிற்
றச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
வூரா நற்றே ருருட்டிய புதல்வர்
250 தளர்நடை வருத்தம் வீட வலர்முலைச்
செவிலியம் பெண்டிர்த் தழீஇப் பாலார்ந்
தமளித் துஞ்சு மழகுடை நல்லிற்
றொல்பசி யறியாத் துளங்கா விருக்கை
மல்லற் பேரூர் மடியின் மடியா
255 வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி

---

239. பி-ம். 'துரும்பும் போக்கி'

240-41. நெற்குவியலுக்குப் பொன்மலை: பொருந. 244, ந.

237-41. "சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக், காலிரும் பகடு போக்குங் கரும்பெரும் பாண்டி லீட்டம்,.........மிக்க தன்றே", "வைதெரிந் தகற்றி யாற்றி மழைபெயன் மானத் தூற்றிச், செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பு மென்னக், கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றால்" பெரிய. திருநாட்டுச். 24-5.

242. மு. பொருந. 169-ஆம் அடியையும், அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

243. பி-ம். 'தளர் நடைக்குழவி'

247. குமரி மூத்த: "குமரி மூத்த வென் பாத்திரம்" மணி. ௧௪: 77.

246-7. பழம்பல்லுணவிற் குமரி.........கூடு: "குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு" சிலப். ௧௦: 123.

248-9. "தச்சன் செய்த சிறுமா வைய, மூர்ந்தின் புறாஅ ராயினுங் கையி, னீர்த்தின் புறூஉ மிளையோர்" குறுந். ௬௧: 1-3.

249-50. "தேரொடு, தளர்நடைப் புதல்வனை" ஐங். ௬௬: 2-3.

மனைவா ழுளகின் வாட்டொடும் பெறுகுவிர்
மழைவிளை யாடுங் கழைவள ரடுக்கத்
தணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன்
கணஞ்சால் வேழங் கதழ்வுற் றாஅங்
260 கெந்திரஞ் சிலைக்குந் துஞ்சாக் கம்பலை
விசய மடூஉம் புகைசூ ழாலைதொறுங்
கரும்பின் றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்
வேழ நிரைத்து வெண்கோடு விரைஇத்
தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த
265 குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றிற்
கொடுங்காற் புன்னைக் கோடுதுமித் தியற்றிய
பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்த
ரிளையரு முதியருங் கிளையுடன் றுவன்றிப்
புலவுநுனைப் பகழியுஞ் சிலையு மானச்
270 செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழு
மையிருங் குட்டத்து மகவொடு வழங்கிக்
கோடை நீடினுங் குறைபட லறியாத்

---

256. பி - ம். 'மனையுறை'

மனை வாழுளகு: "மனையளகு, வள்ளைக் குறங்கும் வளநாட" திருவள்ளுவ. 5.

அளகு - கோழி: இவ்வடி, தொல். மரபு. சூ. 56, பேர். மேற்.

257. மழை விளையாடும் அடுக்கம்: "மழை விளையாடுங் குன்று" நற்றி. கOஅ: 1.

260. எந்திரம்: "கழைக்கரும் பெறிந்துகண் ணுடைக்கு மெந்திரம்" சீவக. 1614.

259 - 60. "கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிற்றும்" (ஐங். ருரு); "இரும்பினன்ன.........ஆலையெந் திரங்கள்" திருவிளை. திருநகர. 11.

268. பி - ம். 'கிளையுடன் குழீஇ'

269. புலவுநுனைப்பகழி: "புலாஅ லம்பிற் போருங் கடியிலை" (புறநா. கஅக: 5); "புலவுக்கணை" பு. வெ. 10.

269 - 70. இறவுக்குச் சிலை: "இறவுக்கலித்துப், பூட்டறு வல்விலிற் கூட்டுமுதற் றெறிக்கும்" (அகநா. கக: 1 - 2); "முடங்கிறவு பூட்டற்ற வில்லேய்க்கும்" (திணைமாலை. 131); "பூட்டுசிலை யிறவி னொடு" சீவக. 1788.

தோடாழ் குளத்த கோடுகாத் திருக்குங்
கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பி
275 னவையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவிற் புலர வாற்றிப்
பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்
பூம்புற நல்லடை யளைஇத் தேம்பட
வெல்லையு மிரவு மிருமுறை கழிப்பி
280 வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த
வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி
தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவிர்
பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோற்
கோள்வல் பாண்மகன் றலைவலித் தியாத்த
285 நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண்கொளீஇக்
கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை
நீர்நணிப் பிரம்பி னடுங்குநிழல் வெரூஉ
நீத்துடை நெடுங்கயந் தீப்பட மலர்ந்த
290 கடவு ளொண்பூ வடைதல் லோம்பி
யுறைகான் மாறிய வோங்குயர் நனந்தலை

---

277. புற்றிற் குரும்பி: "புற்றத் தீர்ம்புறத் திறுத்த, குரும்பி" அகநா. அ: 1 - 2.

280 - 81. "வழைச்சறு சாடிமட் டயின்று" (சீவக. 1614); "பாளைவிண் டொழுகு வழைச்சறு தேறல்" இலிங்க. சூரியன் வங்கிச. 11.

284. பி - ம். 'கொலைவல் பாண்மகன்' 286. 'வடிதலை'

290. "தாமரையை, 'கடவுள்.........ஓம்பி' எனக்கூறுத லானும் அவர் பறியாராயிற்று" சீவக. 51, ந.

289 - 90. தாமரைக்கு நெருப்பு: "சுடர்த்தாமரை" (மதுரைக். 249); "விளக்கி னன்ன சுடர்விடு தாமரை" (நற். ௩௧0: 1); "சுடர்ப் பூந் தாமரை", "எரியகைந் தன்ன தாமரை" (அகநா. ௬: 16, ௧0௬: 1, ௧௧௬: 1); "செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை, அறுதொழி லந் தண ரறம்புரிந் தெடுத்த, தீயொடு விளங்கு நாடன்" (புறநா. ௩௯௭: 19 - 21); "தாமரை யழற்போது" (பெருங். ௧. 40: 245); "நிரை நெடுங்கய நீரிடை நெருப்பெழுந் தனைய, விரை நெகிழ்ந்த செங்கமல மென் பொய்கையின் மேவி" பெரிய. உருத்திர. 5.

யகலிரு வானத்துக் குறைவி லேய்ப்ப
வரக்கிதழ்க் குவளையொடு நீல நீடி
முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கைக்
295 குறுந ரிட்ட கூம்புவிடு பன்மலர்
பெருநா ளமையத்துப் பிணையினிர் கழிமின்
செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்ப்
பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
300 வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்று
மறைகாப் பாள ருறைபதிச் சேப்பிற்
பெருநல் வானத்து வடவயின் விளங்குஞ்
சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்
வளைக்கை மகடூஉ வயினறிந் தட்ட
305 சுடர்க்கடைப் பறவைப் பெயர்ப்படு வத்தஞ்
சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்
துருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து
கஞ்சக நறுமுறி யளைஇப் பைந்துணர்

---

292 - 4. பல நிறமலர்களுக்கு இந்திரவில்; "சிலைத்தார் - இந்திரவிற் போலுமாலை" (புறநா. ௬0 : 10, ௩௬ : 12, ௬௪ : 14, உரைகள்); "பொருகடல் வண்ணன் புனைமார்பிற் றார்போற், றிருவில் விலங்கூன்றித் தீம்பெயறாழ, வருதும்" கார். 1.

298. பைஞ்சேறு : "பைஞ்சேறு மெழுகாப் பசும்பொன் மண்டபம்" மணி. ௧௬: 115.

300. வளைவாய்க் கிள்ளை : "கிள்ளை, வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்", "வளைவாய்ச் சிறுகிளி" குறுந். ௬௭ : 1 - 2, ௧௪௧ : 1.

299 - 301. அந்தணர் தெருவில் கோழியும் நாயும் துன்னாமை : "பார்ப்பாரிற் கோழியு நாயும் புகவின்றே" இன்னா. 3.

302 - 4. கற்புக்கு அருந்ததி : "அருந்ததி யனைய கற்பின்" (ஐங். ௪௪௨); "வடமீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பினாள்" (கலி. ௨ : 21); "வடமீன் புரையுங் கற்பின் மடமொழி யரிவை" (புறநா. ௧௨௨ : 8 - 9); "தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்று, மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக், காதலாள்", "வடமீன் கற்பின் மனையுறை மகளிர்" சிலப். ௧ : 27 - 9. ரு : 229

305. பி - ம். 'பெயர்ப்படுபெத்தம்'

நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்த்த
310 தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவிர்
வண்ட லாயமொ டுண்டுறைத் தலைஇப்
புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை
யிரைதேர் மணிச்சிர லிரைசெத் தெறிந்தெனப்
புள்ளார் பெண்ணைப் புலம்புமடற் செல்லாது
315 கேள்வி யந்தண ரருங்கட னிறுத்த
வேள்வித் தூணத் தசைஇ யவன
ரோதிம விளக்கி னுயர்மிசைக் கொண்ட
வைகுறு மீனிற் பையயத் தோன்று
நீர்ப்பெயற் றெல்லைப் போகிப் பாற்கேழ்
320 வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉ
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
மாட மோங்கிய மணன்மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பி
325 னெல்லுழு பகட்டொடு கறவை துன்னா
மேழகத் தகரோ டெகினங் கொட்குங்
கூழுடை நல்லிற் கொடும்பூண் மகளிர்
கொன்றை மென்சினைப் பனிதவழ் பவைபோற்
பைங்கா ழல்கு லுண்டுகி லுடங்க
330 மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும்
பீலி மஞ்ஞையி னியலிக் கால

309. கொக்கின் நறுவடி: "நறுவடிமா" மலைபடு. 512.
312. "புனலாடு மகளி ரிட்ட வொள்ளிழை" ஐங். ௧00 : 1.
313. மணிச்சிரல்: சிறுபாண். 181; மணி. ௪: 24.
315 - 6. "அந்தி யந்தண ரருங்கட னிறுக்கு முத்தீ" புறநா. [௨ : 22 - 3.
318. பி - ம். 'பையத்தோன்றும்'
பையய: பெரும்பாண். 334.
319. பி - ம். 'நீர்ப் பெயர்த்தெல்லை போகிப் பொற்கேழ்'
319 - 20. பாற்கேழ்ப் புரவி: "பால் புரை புரவி" பொருந. 165.
325 - 6. பி - ம். 'துன்னு தேழகத்தகரோடு'
330 - 31. மகளிர்நடைக்கு மயில் நடை: "மணிவரைச் சாரல் மஞ்ஞை போல, அணிபெற வியலி யடிக்கல மார்ப்ப" (பெருங். ௩. 13 : 50 - 51); முருகு. 205-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

தமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை
வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇக்
கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய
335 முத்த வார்மணற் பொற்கழங் காடும்
பட்டின மருங்கி னசையின் முட்டில்
பைங்கொடி நுடங்கும் பலர்புகு வாயிற்
செம்பூத் தூய செதுக்குடை முன்றிற்
கள்ளடு மகளிர் வள்ள நுடக்கிய
340 வார்ந்துகு சின்னீர் வழிந்த குழம்பி
னீர்ஞ்சே றாடிய விரும்பல் குட்டிப்
பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது
நென்மா வல்சி தீற்றிப் பன்னாட்

---

333. வரிப்பந்து: "வரிப்பந்து கொண்டோடி" (கலி. ருக: 3); முருகு. 68-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

331 - 3. "காதுடனே காதுங் கயலிரண்டுஞ் செங்கமலப், போதுடனே நின்று புடைபெயரத் - தாதுடனே, வண்டாடுஞ் சோலை மயில்போல் வரிப்பந்து, கொண்டாட நான்கண்டேன் கொம்பு" கிளவித்தெளிவு.

334. பி - ம். 'கைப்புனை', 'பைப்பய'

335. முத்தவார் மணல்: "முதிர்வா ரிப்பி முத்த வார்மணல்" புறநா. ருஙு: 1.

பொற்கழங்காடுதல்: "குறுந்தொடி மகளிர், பொலஞ்செய் கழங் கிற் றெற்றி யாடும்" (புறநா. ருசு: 3 - 4); "கைச்செம் பதுமரா கக் கழங்கும் பொற்கழங்கும், பச்சை மயிலியலின் பைங்கழங்கும் - மெச்ச வெடுத்து" திருக்காளத்திநாதருலா, 302.

337. கள்விற்போர் கடையிற் கொடிகட்டுதல்: "கள்ளின் களி நவில் கொடியொடு" (மதுரைக். 372); "கட்கொடி நுடங்கு மாவ ணம் புக்கு" (பதிற். சுஅ: 10); "நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறு கில்" அகநா. கஉகூ: 10.

337 - 8. கள்விற்போர் கடைவாயிலில் கொடிகட்டிப் பூவைத் தூவுதல்: "மணற்குவைஇ மலர்சிதறி, பலர்புகுமனைப் பலிப்புதவி, னறவுநொடைக் கொடியோடு, பிறபிறவு நனிவிரைஇப், பல்வே றுருவிற் பதாகை நீழற், செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பில்" பட். 178 - 83.

343. "நுறுங்குபெய் தாக்கிய கூழார வுண்டு, பிறங்கிரு கோட் டொடு பன்றியும் வாழும்" அறநெறிச். 78.

குழிநிறுத் தோம்பிய குறுந்தா ளேற்றைக்
345 கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவிர்
வான மூன்றிய மதலை போல
ஏணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்
திரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி
350 யுரவுநீ ரழுவத் தோடுகலங் கரையுந்
துறைபிறக் கொழியப் போகிக் கறையடிக்
குன்றுறழ் யானை மருங்கு லேய்க்கும்
வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த
மஞ்சண் முன்றின் மணநாறு படப்பைத்
355 தண்டலை யுழவர் தனிமனைச் சேப்பிற்
றாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம்
வீழி றாழைக் குழவித் தீநீர்க்
கவைமுலை யிரும்பிடிக் கவுண்மருப் பேய்க்குங்
குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழந்
360 திரளரைப் பெண்ணை நுங்கொடு பிறவுந்
தீம்பஃ றார முனையிற் சேம்பின்
முளைப்புற முதிர்கிழங் கார்குவிர் பகற்பெயன்
மழைவீழ்ந் தன்ன மாத்தாட் கமுகின்
புடைசூழ் தெங்கின் மூப்புடைத் திரள்கா
365 யாறுசெல் வம்பலர் காய்பசி தீரச்
சோறடு குழிசி யிளக விழூஉம்
வீயா யாணர் வளங்கெழு பாக்கத்துப்
பன்மர நீளிடைப் போகி நன்னகர்
விண்டோய் மாடத்து விளங்குசுவ ருடுத்த

---

348. "விண்டோய் மாடத்து" பெரும்பாண். 369.

349-51. "இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்" சிலப். ௬ : 141.

357. குழவி ஓரறிவுயிரின் இளமைப்பெயர்: தொல். மரபு. சூ. 24, பேர். மேற்.

363. "மேகமேய்க்கு மிளங்கமுகம் பொழில்" தே. பிரமபுரம், "விளங்கயனூர்"

370 வாடா வள்ளியின் வளம்பல தரூஉ
நாடுபல கழிந்த பின்றை நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னங்கண்
வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்க்
375 குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்
பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூக்
காரகற் கூவியர் பாகொடு பிடித்த
விழைசூழ் வட்டம் பால்கலந் தவைபோ
னிழறாழ் வார்மண னீர்முகத் துறைப்பப்
380 புனல்கால் கழீஇய பொழிலொருங் திரள்காற்
சோலைக் கமுகின் சூல்வயிற் றன்ன
நீலப் பைங்குடந் தொலைச்சி நாளும்
பெருமகி ழிருக்கை மரீஇச் சிறுகோட்டுக்
குழவித் திங்கட் கோணேர்ந் தாங்குச்
385 சுறவுவா யமைத்த சுரும்புசூழ் சுடர்நுத

370. "வாடா வள்ளியங் காடு" (குறுந். உகசு: உ); "வாடாவள்ளி வயவர்" தொல். புறத். சூ. 5.

372 - 3. "பைந்நாகப் பள்ளி மணிவண்ணனிற் பாயல்கொண்டு, கைந்நாகந் துஞ்சுங் கமழ் காந்தளஞ் சாரல் போகி" சீவக. 17.

பாம்பிற்குக் காந்தள்: "திருமணி யுமிழ்ந்த நாகங் காந்தட், கொழுமடற் புதுப்பூ வூதுந் தும்பி, நன்னிற மருளு மருவிடர்" அகநா. கந௨ : 17 - 9.

374. மு. மணி. ச : 5; "வெயிலொளி யறியாத விரிமலர்த் தண் காவிற், குயிலாலும்" (கலி. ௯0 : 7 - 8); "கதிர் நுழை கல்லா மரம் பயில் கடிமிளை (புறநா. உக : 5); "வெயில் கண் போழாப் பயில்பூம் பொதும்பு" (பெருங். க. 33 : 27.) "காய்கதிர் நுழையாக் கடி பொழில்" (பொருளியல்); "வெய்யோன், ருனுழை யாவிருளாய் .........காட்டுமொர் கார்ப்பொழிலே" திருச்சிற். 116.

377. பி - ம். 'கூவியன்'

"கூவியர் - அப்பவாணிகர்; 'காரகற்.........பிடித்த' என்றார் பெரும்பாணாற்றிலும்" சிலப். ௫ : 24, அடியார்.

380. "புனல்கால் கழீஇய மணல்வார் புறவு" மலைபடு. 48.

384 - 5. சுறவுவாயென்னும் தலையணிக்கு அரவு: "எரிகதிர் மகரவாய் பொறித்த, திலகமே லிடத்துச் செங்கதிர் தொடர்ந்த சேயொளி யரவென நாற்றி" ஆனைக்காப். அகிலாண்ட. 29.

னறவுபெயர்த் தமைத்த நல்லெழின் மழைக்கண்
மடவரன் மகளிரொடு பகல்விளை யாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைச்
390 செவ்விகொள் பவரோ டசைஇ யவ்வயி
னருந்திறற் கடவுள் வாழ்த்திச் சிறிதுநுங்
கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்
காழ்மூ ரிகழ்பத நோக்கிக் கீழ
நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளங்
395 கடுஞ்சூன் மந்தி கவரும் காவிற்
களிறுகத னடக்கிய வெளிறில் கந்திற்
றிண்டேர் குழித்த குண்டுநெடுந் தெருவிற்
படைதொலை பறியா மைந்துமலி பெரும்புகழ்க்
கடைகால் யாத்த பல்குடி கெழீஇக்
400 கொடையுங் கோளும் வழங்குநர்த் தடுத்த
வடையா வாயின் மிளைசூழ் படப்பை
நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ்

---

390. பி - ம். 'கொள்பவரொடும்'

392. இவ்வடி, வினைமுற்று வினையெச்சமானதற்கு மேற்கோள்; நன். சூ. 350. மயிலை; நன். வி. சூ. 351.

394. பி - ம். 'நெய்ம்மிதி'

"நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ" (புறநா. ௪௪ : 2); "நெய்ம்மலி கவளங்கொள்ளா" (சீவக. 1076); "நெய்ம்மிதி கவளந் தெவிட்டிநின் றடர்க்கு நிழல்சுளி தறுகண்மால் யானை", "கைம்முகந் தெடுத்த நெய்ம்மிதி கவளங் களித்தெறி மும்மதக் களிறு" கூர்ம. சூரியன்மரபு. 8, 22.

395. கடுஞ்சூல் : ஐங். ௩௮௬; சிறுபாண். 148-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

393 - 5. மந்தி பிறர் சோர்வுற்றதை யறிந்து உணவுப் பொருளைக் கவர்தல் : "மகளிர், இருங்கல் வியலறைச் செந்தினை பரப்பிச், சுனை பாய் சோர்விடை நோக்கிச் சினையிழிந்து, பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்" குறுந். ௩௩௫ : 1 - 4.

397. "கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்" அகநா. ௩௨௪ : 4, புறநா. ௧௫ : 1.

402. "நீனிற வுருவி னேமி யோனும்" (புறநா. ௫௮ : 15) ; "நீல மேனி நெடியோன்" சிலப். ௫ : 172.

நான்முக வொருவற் பயந்த பல்விதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்
405 சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பி
னிழுமென் புள்ளி னீண்டுகிளைத் தொழுதிக்
கொழுமென் சினைய கோளி யுள்ளும்
பழமீக் கூறும் பலாஅப் போலப்
புலவுக் கடலுடுத்த வானஞ் சூடிய
410 மலர்தலை யுலகத் துள்ளும் பலர்தொழ
விழவுமேம் பட்ட பழவிறன் மூதூ
ரவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வா
யந்தி வானத் தாடுமழை கடுப்ப
வெண்கோட் டிரும்பிணங் குருதி யீர்ப்ப
415 வீரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப்
பேரமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தே
ராராச் செருவி னைவர் போல
வடங்காத் தானையோ டன்றுமேல் வந்த
வொன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்துக்

---

402-4. முருகு. 164-5.

405. பி-ம். 'நெடுமதில் வரைப்பு'

சுடும ணோங்கிய வரைப்பு: "சுடும ணோங்கிய நெடுநிலை மனை" (மணி. ங: 127); "சுடும ணெடுமதில்" பு. வெ. 113.

சுடுமண்: சிலப். கச: 146; மணி. கஅ: 33.

402-5. "மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப், பூவொடு புரையுஞ்சீரூர் பூவி, னிதழகத் தனைய தெருவ மிதழகத், தரும்பொகுட் டனையதே யண்ணல் கோயில்" (பரிபாடல்), இராசகிரிய நகரத்தைத் தாமரை மலராகவும் அந்நகரின் உறுப்புக்களை அம்மலரின் உறுப்புக் களாகவும் பெருங்கதையிற் (ட. 3: 50-114) கூறியிருத்தல் இங்கே அறிந்து மகிழத்தக்கது.

407. பி-ம். 'சினைஇய'

407-8. "கோளிப் பாகற் கொழுங்கனித் திரள்காய்" சிலப். கரு: 24.

415. "ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய" புறநா. உ: 1

416. கொடுஞ்சி நெடுந்தேர்: பொருந. 163; மதுரைக். 752.

419. "ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தொழித்த" (பெரும்பாண். 491); "ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்தென" மலைபடு. 386.

420 கச்சி யோனே கைவண் டோன்ற
னச்சிச் சென்றோர்க் கேம மாகிய
வளியுந் தெறலு மெளிய வாகலின்
மலைந்தோர் தேஎ மன்றம் பாழ்பட
நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப
425 நட்புக்கொளல் வேண்டி நயந்திசி னோருந்
துப்புக்கொளல் வேண்டிய துணையி லோருங்
கல்வீ ழருவி கடற்படர்ந் தாங்குப்
பல்வேறு வகையிற் பணிந்த மன்ன
ரிமையவ ருறையுஞ் சிமையச் செவ்வரை
430 வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்
பெருநீர் போகு மிரியன் மாக்க
ளொருமரப் பாணியிற் றூங்கி யாங்குத்
தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச்
435 செவ்வி பார்க்குஞ் செழுநகர் முற்றத்துப்

---

398-420. இவ்வடிகளிற் காஞ்சிநகரத்தின் சிறப்புக் கூறப்பட்டது.

421. பி-ம். 'ஏமமாக'

422. பி-ம். 'அளியுந்தெறலுந்தனக் கெளிய'

அளியும் தெறலும்: "வலியுந் தெறலு மளியு முடையோய்" (புறநா. உ: 8); "குடையையும் வாளையு முடையோ னெனவே அளியுந்தெறலு முடைமை கூறினர்" சிலப். கக: 19-20, அடியார்.

423-4. கருத்து: "நீ, உடன்று நோக்கும் வாயெரி தவழ, நீ, நயந்து நோக்கும் வாய்பொன் பூப்ப" புறநா. நஅ: 5-6.

427. "இருங்கடற் கூங்கிவரும் யாறெனு" பரி. கசு: 27.

429. பி-ம். 'இமையோர்'

மேருமலையில் தேவருறைதல்: "தெய்வத வரையே மேலைத் தேவரா லயமே" (திருவிளை. மேருவைச். 24); "சுராலயமே மேரு" சூடாமணி. ரு: 13.

432. பி-ம். 'நீர்ப்போகும்'

ஒரு மரம்: "ஒரு மரத்தோணியும் மேல் கொண்டு" பு. வெ. 111, உரை.

428-35. மன்னர்.........செவ்விபார்க்கும் முற்றம்: "கோக்கள் வைகும் முற்றத்தான்" கம்ப. குகப். 65.

பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்குங்
கருங்கைக் கொல்ல னிரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்
திறையுறை புறவின் செங்காற் சேவ
440 லின்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர்
குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பட்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி
445 யிடைத்தெரிந் துணரு மிருமுது காட்சிக்
கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத்
துரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப்
பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்
கொடுவரிக் குருளை கொளவேட் டாங்குப்
450 புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினு
மொன்றல் செல்லா வுரவுவாட் டடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக
455 மள்ளர் மள்ள மறவர் மறவ

---

441 - 2. பொருந. 135 - 6.

443 - 5. "முறை வேண்டினார்க்கும் குறை வேண்டினார்க்கும் காண்டற் கெளியனாய்" (குறள். 386, பரிமேல்.); "முறைவேண்டு பொழுதிற் பதனெளியோர்" புறநா. ௩௫ : 15.

445. பி - ம். 'இடைதெரிந்து'

446. "கொடைக்கட னிறுத்த செம்மலோய்" (மலைபடு. 543); "கொடைக்கட னிறுக்கு மிக்குவா குப்பெயர்ப் பெரியோன்" கூர்ம, சூரியன்மரபு. 8.

447. பி - ம். 'உருப்பில்'

"உரும்பில் கூற்றத் தன்ன" பதிற். ௨௬ : 13.

இவ்வடியின் பாடபேதம் போற்றோற்றும், "உருமில் சுற்றம்" என்னும் பகுதியை, உருமென்பது அச்சமென்னும் பொருள் தருதற்கு மேற்கோளாகக் காட்டினர்; தொல். உரி. 67, இளம். சே. ந.

448 - 9. பொருந. 140 - 42.

451. "தொல்லிலங்கை குடுமி கொண்டு" கூர்ம. சுவேத. 5.

செல்வர் செல்வ சேருமேம் படுந
வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்குத்
460 தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி
வந்தேன் பெரும வாழிய நெடிதென
விடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்
கடனறி மரபிற் கைதொழூஉப் பழிச்சி
நின்னிலை தெரியா வளவை யந்நிலை
465 நாவலந் தண்பொழில் வீவின்று விளங்க

---

455 - 6. இடையினை வெதுகைக்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். செய். சூ. 94, பேரா. ந.

457 - 8. முருகக்கடவுள் கடலிற் சூர்கொன்றமை: முருகு. 45 - 6-ஆம் அடிகளின் அடிக்குறிப்பையும், ஷை 45-61 ஆம் - அடிகளின் அடிக் குறிப்பையும் பார்க்க.

454 - 8. "'தொண்டையோர் மருக........சேய்' என்றாற்போல் வன எகாரத்தாற் பொருள் கூறுமாறு உணர்க" தொல். விளி. சூ. 34, ந.

459. பி - ம். 'நொடிந்தாங்கு'

துணங்கை: பெரும்பாண். 235-ஐப் பார்க்க.

"பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்நொடித் தாங்கு" (கலி. அக: 8), "காடுகெழு செல்விக்குப் பேய் கூறும் அல்லல்போல" (தொல். மெய்ப். சூ. 12, பேரா.) என்பவற்றாலும் பாணி நூல்களில் உள்ள, 'காளிக்குக் கூளி கூறியது' என்னும் பகுதியாலும் இங்கே கூறப்படும் செய்தி அறியப்படும்.

458 - 9. முருகு. 258.

460. தண்டா வீகை: "தண்டா வீகைத் தகைமாண் குடுமி" (புறநா. கூ: 26); "தண்டாம லீவது தாளாண்மை" தனிப்.

பெரும்பெயர்: முருகு. 269-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

461. பி - ம். 'வாழிய பெரிதென'

முருகு. 285 - ஆம் அடியைப் பார்க்க.

463. கைதொழூஉப்பழிச்சி: "கைதொழூஉப் பரவி" முருகு. 252.

465. நாவலந்தண் பொழில்: "நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடை" (பரி. ரு: 8); "நாவலந் தண்பொழின் மன்னர்", "நாவலந் தண்பொழி னண்ணு ரொற்றும்" (சிலப். கஎ: 3, உரு: 173); "நாவலந் தண்பொழி னண்ணார் நடுக்குற" (மணி. உஉ: 29); "நாவலந் தண் பொழி னண்ணு ரோட்டிய", "நாவலந் தண்பொழி னலத்தொடு

நில்லா வுலகத்து நிலைமை தூக்கி
யந்நிலை யணுகல் வேண்டி நின்னரைப்
பாசி யன்ன சிதர்வை நீக்கி
யாவி யன்ன வவிர்நூற் கலிங்க
470 மிரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇக்
கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை
வல்லோ னட்ட பல்லூன் கொழுங்குறை
யரிசெத் துணங்கிய பெருஞ்செந் நெல்லின்
றெரிகொ ளரிசித் திரணெடும் புழுக்க
475 லருங்கடித் தீஞ்சுவை யமுதொடு பிறவும்
விருப்புடை மரபிற் கரப்புடை யடிசின்
மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி
மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்
தானா விருப்பிற் றானின் றூட்டி
480 மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கு
மாடுவண் டிமிரா வழலவிர் தாமரை
நீடிரும் பித்தை பொலியச் சூட்டி

---

தோன்றி" (பெருங். உ. 18 : 76, ௩. 3 : 185); "பூமலி நாவற்
பொழிற்கு", "பூமலி நாவற் பொழிலகத்து" பு. வெ. 208, 226.

466. பி-ம். 'நிலைமை நோக்கி'

மு. பொருந. 176.

469. "புகை முகந்தன்ன மாசி றூவுடை" (முருகு. 138) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

468-70. பொருந. 153-7-ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.

475. 'அயிரொடு பிறவும்'

477. "கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ" புறநா. ௩௯௨: 17.

479. மு. சிறுபாண். 245.

478-9. முகனமர்ந்தூட்டி: "முகனமர்ந்து நல்விருந் தோம்புவான்", "முகத்தா னமர்ந் தினிது நோக்கி" குறள். 84, 93.

481. பி-ம். 'அழலிவர்'

"ஆடும் வண்டிமிராத் தாமரை" புறநா. ௬௯: 20.

482. பி-ம். 'பித்திகை' 'நிவப்பச்சூடி'

481-2. "வண்டு இமிரா மாலை: கற்பகமாலை; 'ஆடு........ சூடி' பாணாறு" தக்க. 562, உரை.

யுரவுக்கடன் முகந்த பருவ வானத்துப்
பகற்பெயற் றுளியின் மின்னுமிமிர்ந் தாங்குப்
485 புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்
றொடையமை மாலை விறலியர் மலைய
நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல்
வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி
490 யரித்தேர் நல்கியு மமையான் செருத்தொலைத்
தொன்னாத் தெவ்வ ருலைவிடத் தொழித்த
விசும்புசெ லிவுளியொடு பசும்படை தரீஇ
யன்றே விடுக்குமவன் பரிசி லின்சீர்க்
கின்னர முரலு மணங்குடைச் சாரன்
495 மஞ்ஞை யாலு மரம்பயி லிறும்பிற்
கலைபாய்ந் துதிர்த்த மலர்வீழ் புறவின்
மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றிற்
செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்

483. பி-ம். 'புலவுக் கடல்'

486. பி-ம். 'விறலியர்வேய'

480-86. பாணர் பொற்றாமரையையும் விறலியர் மாலையையும் உபகாரிகளாற் பெறுதல்: பொருந. 159-62-ஆம் அடிகளின் அடிக் குறிப்பைப் பார்க்க.

489. நால்கு - நான்கு; "நால்கு பண்ணினர்" சீவக. 1774.

488-9. பொருந. 165.

490. பரிசிலர்க்குத் தேரைக் கொடுத்தல்: சிறுபாண். 142-3-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

491. பி-ம். 'ஒழிந்த'

"ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்து" பெரும்பாண். 419.

492. பி-ம். 'விசும்புதோயிவுளி'

490-92. சிறுபாண். 247-8-ஆம் அடிகளையும் அவற்றின் அடிக் குறிப்பையும் பார்க்க.

494. கின்னரங்கள் பாடுதல்: "பாடு கின்றன கின்னர மிதுனங் கள் பாராய்" (கம்ப. சித்திரகூட. 12); "பாடுவன பூவையோ கின்ன ரங்கள் பலவுமே" தக்க. 114.

496. பி-ம். 'மலர்சூழ்'

களிறுதரு விறகின் வேட்கு
500 மொளிறிலங் கருவிய மலைகிழ வோனே.

498-9. யானை தந்த விறகினால் முனிவர் தீவேட்டல்: "கான யானை தந்த விறகிற், கடுந்தெறற் செந்தீ வேட்டு" புறநா. உருக : 5-6.

500. மலைகிழவோன்: முருகு. 317-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

மலைகிழவோன்: "இயல்பினும் விதியினும்" என்னும் சூத்திர உரையில் விதவாதவற்றுள்ளும் உயிர்முன் ககரம் மிகாததற்கு இது மேற்கோள்; நன். சூ. 164, மயிலை.

497-500. "யானை தந்த முளிமர விறகிற், கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து, மடமான் பெருநிரை வைகுதுயி லெடுப்பி, மந்தி சீக்கு மணங்குடை முன்றில்" புறநா. உசஎ : 1-4.

## இதன்பொருள்.

1. அகல் இரு விசும்பில் பாய் இருள் பருகி - [1] தன்னையொழிந்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயத்திடத்தே தோன்றிப் பரந்த [2] இருளை விழுங்காநின்று,

அகலிருவிசும்பென்பது, [3] "நோய்தீருமருந்து" போனின்றது. பருகியென்னுஞ் [4] செய்தெனெச்சம் நிகழ்காலம் உணர்த்திநின்றது.

2. பகல் கான்று எழுதரு பல் கதிர் பருதி - மறைந்த [5] பகற்பொழுதை உலகத்தே தோற்றுவித்து எழுதலைச்செய்யும் பல கிரணங்களையுடைய கனலி,

3. காய் சினம் திருகிய கடு திறல் வேனில் - கோபிக்கின்ற [6] சினம் முறுகிய கடிய வலியையுடைய முதுவேனிற் காலத்தே,

4. பசு இலை ஒழித்த பரு அரை பாதிரி - பின்பனிக்காலத்தே பசிய இலைகளையுதிர்த்த பரிய தாளினையுடைய பாதிரியினது,

5-6. வள் இதழ் மா மலர் வயிறு இடை வருத்ததன் உள் அகம் புரையும் ஊட்டுறு பச்சை - பெருமையையுடைய இதழையுடைத்தாகிய

1 "தன்னை யொழிந்த பூதங்கள் விரிதற்குக் காரணமாகிய பெருமையையுடைய ஆகாயம்" (மதுரைக். 266-7, ந.); "அனைத்தும் வழி போம் விண்ணுநீ" தக்க. 717.

2 பி-ம். 'இருளை மறைத்து'

3 கலி. சுo : 18.

4 தொல். வினை. சூ. 42 பார்க்க.

5 "பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறும்" மதுரை. 7.

6 சினம் - வெயிலென்று கூறுவாருமுளர்.

வண்டையுடைய பூவினுடைய வயிற்றிடத்தைப் பிளந்த 1 புலாலினுடைய உள்ளிடத்தை யொக்கும் 2 நிறமூட்டுதலுற்ற தோல்,

7-8. *பரிய அரை கமுகின் பாளை அம் பசு பூ கரு இருந்தன்ன கண் கூடு செறி துளை* - பரிய தாளினையுடைய கமுகினது பாளையாகிய அழகினையுடைய பசியபூ விரியாமற் கருவாயிருந்தாலொத்த இரண்டு கண்ணுங்கூடின செறிந்ததுளை,

9. *உருக்கி அன்ன பொருத்துறு போர்வை* - உருக்கி ஒன்றாக வார்த்தாற்போன்ற தோல்களின் வேறுபாடு தெரியாமல் இசைத்தலுறும் போர்வையினையும்,

பச்சைப் (6) போர்வை ; பொருத்துறுபோர்வை; துளையினையுடைய (8) போர்வை.

10. *சுனை வறந்தன்ன இருள் தூங்கு வறு வாய்* - சுனை வற்றி உள் இருண்டாலொத்த இருள்செறிந்த 3 உண்ணாக்கினையில்லாத வாயினையும்,

11. *பிறை பிறந்தன்ன பின் ஏந்து கவை கடை* - முதற்பிறை பிறந்து ஏந்தியிருந்தாற்போன்ற பின்பு ஏந்தியிருக்கின்ற கவைத்தலையுடைய கடையினையும்,

12-3. *நெடு பணை திரள் தோள் மடந்தை முன் கை குறு தொடி ஏய்க்கும் மெலிந்து வீங்கு திவவின்* - நெடிய மூங்கிலையொத்த திரண்ட தோளினையுடைய மகளுடைய முன்கையிற் குறிய தொடியை யொக்கும் 4 நெகிழ வேண்டிய வழி நெகிழ்ந்து இறுகவேண்டியவழிஇறுகும் வார்க்கட்டினையும்,

14. *மணி வார்ந்தன்ன மா இரு மருப்பின்* - நீலமணி ஒழுகினாலொத்த கருமைநிறத்தையுடைய பெரிய தண்டினையுமுடைய,

15-6. *பொன் வார்ந்து அன்ன புரி அடங்கு நரம்பின் தொடை அமை கேள்வி* - பொன் கம்பியாய் ஒழுகினாலொத்த முறுக்கடங்கின நரம்பின் கட்டமைந்த யாழை,

கேள்வி : ஆகுபெயர்.

போர்வையினையும் (9) வாயினையும் (10) கடையினையும் (11) திவவினையும் (13) மருப்பினையுமுடைய (14) யாழையெனமுடிக்க.

---

1 பி-ம். 'பூவினுடைய'

2 "துவரூட்டின கைத்தொழிலாற் பொலிவுபெற்ற போர்வை" சிறுபாண். 225-6, ந.

3 "அண்ணா வில்லா வமைவரு வறுவாய்" பொருந. 12.

4 "நெகிழ வேண்டுமிடத்து நெகிழ்ந்தும் இறுக வேண்டுமிடத்து இறுகியும் நரம்பு துவக்கும் வார்க்கட்டினையும்" சிறுபாண். 221-2, ந.

16. இடம் வயின் தழீஇ - இடத்தோட்பக்கத்தே அணைத்து,

17. வெ தெறல் கனலியொடு மதி வலம் திரிதரும் - வெய்ய தெறு தற்றொழிலையுடைய ஞாயிற்றோடே திங்களும் [1] மேருவை வலமாகத் திரிதலைச் செய்யும்,

18. தண் கடல் வரைப்பில் தாங்குநர் பெறாது - குளிர்ந்த கடல் சூழ்ந்த உலகில் நின்னைப் புரப்பாரைப் பெறாமல்,

19. பொழி மழை துறந்த புகை வேய் குன்றத்து - பெய்கின்ற மழை துறத்தலால் நிலத்தின்கண்ணெழுந்த ஆவிசூழ்ந்த மலையிடத்தே,

20. பழு மரம் தேரும் பறவை போல - [2] பழுத்த மரத்தைத் தேடித்திரியும் பறவைகளைப்போல,

21. கல்லென் சுற்றமொடு கால் கிளர்ந்து திரிதரும் - பசிமிகுதி யால் அழுகின்ற சுற்றத்தாருடனே ஓரிடத்திராமற் பயணின்று ஓடித் திரிதலைச் செய்யும்,

22. புல்லென் யாக்கை புலவு வாய் பாண - பொலிவழிந்த வடி வினையும் கற்ற [3] கல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுமுடைய பாண,

[4] "சில்செவித் தாகிய கேள்வி நொந்து" என்றார் பிறரும்; புலால் நாறுகின்ற வாயுமாம்.

கேள்வியைத்தழீஇத் (16) தாங்குநர்ப்பெறாது (18) குன்றத்தே (19) கடுந்திறல் வேனிற்காலத்தே (3) பறவைபோலத் (20) திரிதரும் (21) பாணவென முடிக்க.

23-4. பெரு வறம் கூர்ந்த கானம் கல்லென கருவி வானம் துளி சொரிந்தாங்கு - பெரிய [5] வற்கடமிக்க காடு உழவுத்தொழில் முதலிய

---

[1] "ஏர்பு வலன் திரிதரு- எழுந்து மகாமேருவை வலமாகத் திரி தலைச் செய்யும்" முருகு. 1, ந.

[2] பறவைகள் - வௌவால்; "மரம்பழுத்தால் வௌவாலை வா வென்று கூவி, இரந்தழைப்பார் யாருமங் கில்லை" ஔவையார்.

[3] வறுமையினாற் கல்வியை வெறுத்துக் கூறுதலுக்கு, "அடகெடு வாய் பலதொழிலு மிருக்கக் கல்வி யதிகமென்றே கற்றுவிட்டோ மறி வில் லாமல், திடமுடன்மோ கனமாடக் கழைக்கூத் தாடச் செப்பிடு வித் தைகளாடத் தெரிந்தோ மில்லை, தடாகில்வே சையராகப் பிறந்தோ மில்லை சனியான தமிழைவிட்டுத் தைய லார்தம், மிடமிருந்து தூது சென்று பிழைத்தோ மில்லை யென்னசென்ம மெடுத்துலகி லிரக்கின் றோமே" (தனிப்.) என்னும் பாடலும் இதுபோன்ற பிறவும் சான் றாகும்.

[4] புறநா. கூஅ : 3. [5] பி-ம். 'வறட்காலமிக்க'

வற்றால் ஆரவாரமிகும்படி தொகுதியையுடைய மேகம் துளியைச் சொரிந்தாற் போல,

25 - 6. பழ பசி கூர்ந்த எம் இரு பெரு ஒக்கலொடு வழங்க தவாஅ பெரு வளன் எய்தி - தொன்றுதொட்ட பசிமிக்க எம்முடைய கரிய பெரிய சுற்றத்தோடே யாங்கள் பிறர்க்குக்கொடுக்கவும் மாளாத பெரிய செல்வத்தைப் பெற்று,

27 - 8. வால் உளை புரவியொடு வய களிறு முகந்துகொண்டு யாம் அவணின்றும் வருதும் - வெள்ளிய தலையாட்டத்தையுடைய குதிரை யோடே வலியினையுடைய யானைகளையும் வாரிக்கொண்டு யாம் அவனூரி னின்றும் வாராநின்றேம்;

28. நீயிரும் - நீங்களும்,

29 - 37. [இருநிலங் கடந்த திருமறு மார்பின், முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த், திரைதரு மரபி னுரவோ னும்பன், மலர்தலை யுல கத்து மன்னுயிர் காக்கு, முரசுமுழங்கு தானை மூவ ருள்ளு, மிலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும், வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி, னல்லது கடிந்த வறம்புரி செங்கோற், பல்வேற் றிரையற் படர்குவி ராயின் :]

மலர் தலை உலகத்து மன் உயிர் காக்கும் (32) முரசு முழங்கு தானை மூவருள்ளும் (33) - அகன்ற இடத்தையுடைய உலகத்தில் நிலைபெற்ற உயிர்களைப்புரக்கும் முரசு முழங்குகின்ற நாற்படையினையுமுடைய சேர சோழ பாண்டியரென்னு மூவரிலும்,

இலங்கு நீர் பரப்பின் வளை மீ கூறும் (34) வலம்புரி அன்ன வசை நீங்கு சிறப்பின் (35) - விளங்குகின்ற நீரையுடைய கடலிடத்துப் பிறந்த சங்கில் மேலாக உலகங்கூறும் வலம்புரிச்சங்கையொத்த குற்றநீங்குந் தலைமையினையும்,

அல்லது கடிந்த அறம் புரி செங்கோல் (36) - மறத்தைப்போக்கின அறத்தை விரும்பின செங்கோலினையுமுடைய,

இரு நிலம் கடந்த திரு மறு மார்பின் (29) முந்நீர் வண்ணன் பிறங்கடை (30) உரவோன் உம்பல் (31) - பெரிய நிலத்தையளந்த திருவாகிய மறுவையணிந்த மார்பினையுடைய கடல்போலு நிறத்தையுடையவன் பின் னிடத்தோனுகிய சோழன் குடியிற்பிறந்தோன்,

மூவருள்ளும் (33) சிறப்பினையும் (35) செங்கோலினையுமுடைய (36) உரவோனென்க.

1 திருமால் குடியிற்றோன்றிய உரவோன்.

அந்நீர் (30) திரை தரு மரபின் (31) பல்வேல் திரையன் (37) - அக் கடலின் திரை கொண்டுவந்து ஏறவிட்டமரபாற் பலவேற்படையினை யுடைய திரையனென்னும் பெயரையுடையவன்,

1 திருமாலென்றது இராமபிரானை.

என்றதனுல், நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாககன்னியைப் புணர்ந்த காலத்து அவள் யான் பெற்ற புதல்வனை என்செய்வேனென்றபொழுது, தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட அவன்வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பலென்று அவன்கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் [1] திரைதருதலின், திரையனென்று பெயர்பெற்ற கதை கூறினர்.

திரையன் படர்குவிராயின் (37) நின் உள்ளம் சிறக்க (45) - திரையனை நினைப்பீராயின் அவனை நினைத்தலின், நின் நெஞ்சு சிறப்புக்களைப் பெறுக ;

சிறக்கநின்னுள்ள (45) மென மேல்வருவதனை இதனேடும்கூட்டுக.

38. [கேளவ னிலையே கெடுகநின் னவலம் :]

நின் அவலம் கெடுக - நினதுமிடி கெடுவதாக ;

அவன் நிலை கேள் - அங்ஙனம் அவனை நினைத்துப்போகின்ற நீ [2] அவன் தன்மையைக் கேட்பாயாக ;

39 - 41. [அத்தஞ் செல்வோ ரலறத் தாக்கிக், கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக், கொடியோ ரின்றவன் கடியுடை வியன் புலம் :] அவன் கடி உடை வியல் புலம் அத்தம் செல்வோர் அலற தாக்கி கை பொருள் வௌவும் களவு ஏர் வாழ்க்கை கொடியோர் இன்று - அவனுடைய காவலையுடைத்தாகிய அகலத்தையுடைய நிலம், வழிப்போவாரைக் கூப்பிடும்படி வெட்டி அவர்கள் கையிலுள்ள பொருள்களைக் கைக்கொள்ளும் களவே உழவுபோலும் இல்வாழ்க்கைப் பொருளாகவுடைய கொடுமையையுடையோரில்லை ;

42 - 3. உருமும் உரறுது அரவும் [3] தப்பா காடு மாவும் உறுகண் செய்யா - உருமேறும் இடியாது ; பாம்புகளும் கொல்லுதலைச் செய்யா ; காட்டிடத்துப் புலி முதலியனவும் வருத்தஞ்செய்யா ; ஆகலின்,

இஃது [4] அவனுணை கூறிற்று.

---

1 திரைதந்தமை, “மாக்கட லார்ப்பதூஉம்,........திரையனை யான் பயந்தே னென்னுஞ் செருக்கு” பெரும்பாண். இறுதிவெண்பா.

2 ட்பி - ம். ‘அவ்வழியை அவன் தன்மையை’

3 தப்பல் - கொல்லுதல்; “ஆளன் றென்று வாளிற் றப்பார்” (புறநா. எச : 2); “மைந்துடை வாளிற் றப்பிய வண்ணமும்”, “வாளிற் றப்பிய வல்வினை யன்றே” மணி. பதிகம், 76, உக : 60.

4 “கோள்வ லுளியமுங் கொடும்புற் றகழா, வாள்வரி வேங்கையு மான்கண மறலா, அரவுஞ் சூரு மிரைதேர் முதலையும், உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா, செங்கோற் றென்னவர் காக்கு நாடென” (சிலப். கந : 5 - 9) என்பதும், ‘இவற்றுள் இவனுணையும் ஐவகை நிலத்

43 - 5. வேட்டாங், கசைவுழி யசைஇ நசைவுழித் தங்கிச் சென் மோ :]

ஆங்கு அசைவுழி அசைஇ - அக்காட்டின்கண் இளைத்தவிடத்தே இளைப்பாறி,

நசைவுழி வேட்டு தங்கி சென்மோ - எங்களிடத்தே நீ தங்கிப்போக வேண்டுமென்று நச்சினவிடத்தே நீயும் அதற்கு விரும்பித் தங்கிச் செல்வாயாக.

45. இரவல - இரத்தற்றொழிலை வல்லோய்,

45 - 7. [சிறக்கநின் னுள்ளம், கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து, முழவி னன்ன முழுமர வுருளி :]

முழவின் அன்ன முழுமரம் திருந்து நிலை ஆரத்து கொழு சூட்டு அருந்திய உருளி - மத்தளத்தையொத்த [1] குறட்டிடத்தே தைத்த சிக்கென்ற தன்மையையுடைய ஆரிடத்தே நன்றாகி வளைந்தமரம் சூழ்ந்து கிடக்கப்பட்ட உருளையையும்,

[2] அச்சுக்கோக்கின்ற இடமுமாம். அக்குறட்டிலே தைத்துக்கிடக்கின்றது ஆர். சூட்டு - விளிம்பில் வைத்த வளைந்த மரம்.

48. எழூஉ புணர்ந்தன்ன பரூஉ கை நோன் பார் - கணையமரம் இரண்டு சேர்ந்தாலொத்த பருத்த கைகளையுடைய வலிய [3] பாரையுமுடைய,

அச்சுமரத்தின் மேலே நெடியவாய் இரண்டு பக்கத்தும் நெடுகக் கிடக்கின்ற பருமரங்களைப் பரூஉக்கை யென்றார். அம்மரங்களிரண்டினையும் நெருங்கத் துளைத்துக் குறுக்கே எணிபோலக் கோத்ததனைப் பாரென்றார்.

49 - 50. [மாரிக் குன்ற மழைசுமந் தன்ன, வாரை வேய்ந்த வறை வாய்ச் சகடம் :]

குன்றம் மாரி மழை சுமந்தன்ன ஆரை வேய்ந்த அறை வாய் சகடம்-மலை மாரிக்காலத்து மேகத்தைச் சுமந்துநின்றாற் போன்ற [4] தொத்துளிப்பாயாலே வேய்ந்த ஒலிக்கின்ற வாயையுடைய சகடம்,

'ஆர்வை வேய்ந்த' என்று பாடமாயின் நிறைந்த வரகுவைக் கோலாலே வேய்ந்த வென்க.

---

திற்குரிமையும் கூறினார்' (அடியார்.) என்ற விசேட உரையும் இங்கே கருதற்குரியன.

1 இங்கே குறடென்பதற்குக் கட்டையென்று பொருள் கொள்க.

2 "குறடு - அச்சுக் கோக்குமிடம்" சிறுபாண். 252 - 3, ந.

3 பார் - பழு. 4 பி - ம். 'தொத்தளி', 'கொத்தளி.' "ஆரை கொத்தளிப்பாய்" திவா.

அந்த இரண்டு மரத்திலும் கால்களைநட்டுக் குடிலாகக்கட்டி மேலே வசம்பு முதலியவற்றைக் கயிற்றாலே கோத்தபாயெடுத்தலைக் கூறினார்.

உருளியையும் (47) பாரையுமுடைய (48) சகடமென்க.

51 - 2. வேழம் காவலர் குரம்பை ஏய்ப்ப கோழி சேக்கும் கூடு உடை புதவின் - யானையைப் புனத்தில் தின்னாமற் காக்கின்ற தொழிலையுடையார் இதண்மேலே கட்டின குடிலையொப்பச் சிறுகக்கட்டின கோழி கிடக்கும் கூட்டையுடைத்தாகிய குடிலின் வாசலிலே,

53 - 4. முளை எயிறு இரு பிடி முழந்தாள் ஏய்க்கும் துளை அரை சிறு உரல் தூங்க தூக்கி - மூங்கில்முளை போலும் கொம்பினையுடைய கரிய பிடியினது முழந்தாளையொக்குந் துளையைத் தன்னிடத்தேயுடைய சிறிய உரலை அசையும்படி தூக்கி,

கோத்து நாற்றுதற்குத் துளையிடுதலின், 'துளையரைச் சீறுரல்' என்றார்.

55 - 6. நாடகம் மகளிர் ஆடு களத்து எடுத்த விசி வீங்கு இன் இயம் கடுப்ப - நாடகமாடுமகளிர் ஆடுங்களத்தே கொண்டுவந்த வாராற் பிணித்தலிறுகின இனிய முழவை யொப்ப,

56 - 7. கயிறு பிணித்து காடி வைத்த கலன் உடை மூக்கின் - தகராதபடி கயிற்றாலே வரிந்து காடிவைத்த மிடாவையுடைய அப்பாரிற் றலையிலே,

1 புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார்; இனிக்காடி நெய்யென்பாருமுளர்; இனிப் பாரிற் 2 கழுத்தானவிடத்தேவைத்த மிடாவென்றுமாம்.

58. மக உடை மகடூஉ பகடு புறம் துரப்ப - குழவியைக் கைக் கொண்ட மகள் இருந்து பூண்ட எருத்தை முதுகிலே அடிப்ப,

சகடப் (50) புதவின் (52) மூக்கின்கண்ணே (57) வேப்பிலை மிடைந்த (59) மகடூஉ இருந்து துரப்பவென முடிக்க.

59. கோடு இணர் வேம்பின் 3 ஏடு இலை மிடைந்த மகடூஉ (58) - கொம்பிடத்தே பூங்கொத்தையுடைய வேம்பினுடைய மேன்மையை யுடைய இலையைப் பிள்ளைக்குக் காவலாகக்கொண்டிருக்கின்ற மகடூஉ,

60. படலை கண்ணி - தழைவிரவின மாலையையும்,

பரு ஏர் எறுழ் திணி தோள் - பரிய அழகினையும் வலியினையுமுடைய இறுகின தோளினையும்,

---

1 "காடி - ஊறுகறி" பெரும்பாண். 308 - 10, ந.

2 காடி - கழுத்து; பொருந. 115 - 6-ஆம் அடிகளின் உரையையும் அடிக்குறிப்பையும் பார்க்க.

3 'ஏடு' என்பதற்கு மேன்மையென்னும் பொருள், "ஏடுமதிக் கண்ணியானை" (தே. திருநா. ஐயாறு) என்றவிடத்தும் பொருந்துதல் காண்க.

61. முடலை யாக்கை - முறுக்குண்ட உடம்பினையும்,

முழு வலி மாக்கள் - நிரம்பிய மெய்வலியினையுமுடைய மாக்கள்,

62-3. [சிறுதுளைக் கொடுநுக நெறிபட நிரைத்த, பெருங் கயிற் றொழுகை :] சிறு துளை கொடு நுகம் பெரு கயிறு நெறிபட நிரைத்த ஒழுகை - சிறிய துளையினையுடைய கொடிய நுகத்தின்கண்ணே பெரிய கயிற்றாலே எருதுகளை ஒருவழிப்பட நிரைத்துக்கட்டின சகட வொழுங்கினை,

துளைகளிற் செருகினகழிகள் கழுத்தசையப் பட்டுநிற்றலின், கொடு நுகமென்றார். ஒருசகடத்திற் பலபூட்டுதல் கூறினார்.

63. மருங்கில் காப்ப - எருதுகள் திருகாமல் அச்சுமுறியாமற் பக்கத்தே காத்துச்செல்ல,

64. சில் பத உணவின் - இடப்படும் பொருளுக்குச் 1 சிறியவாக இடப்படுமுணவினது,

என்றது உப்பை. பதம் - பக்குவம்.

கொள்ளை சாற்றி - விலைசொல்லி,

65. பல் எருது உமணர் பதி போகு நெடு நெறி - இளைத்தாற் பூட்டுதற்குப் பல எருத்தையும் அடித்துக் கொண்டுபோம் உப்புவாணிகர் ஊர்கள்தோறும் செல்லும் நெடிய வழியினையும்,

பதிபோலப் போகுமென்றுமாம்.

மகவுடைத்துரப்ப (58) மாக்கள் (61) காப்பச் (63) சாற்றிப் (64) போகு நெடு நெறியையுமென்க.

66. எல் இடை கழியுநர்க்கு ஏமம் ஆக - பகற்பொழுது போவார்க்கு இளைப்புத்தீர,

67-76. [மலையவுங் கடலவு மாண்பயன் றரூஉ, மரும்பொரு ளருத்துந் திருந்துதொடை நோன்றா, ளடிபுதை யரண மெய்திப் படம் புக்குப், பொருகணை தொலைச்சிய புண்டீர் மார்பின், விரவுவரிக் கச்சின் வெண்கை யொள்வாள், வரையூர் பாம்பிற் பூண்டுபுடை தூங்கச், சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக், கருவி லோச்சிய கண்ணக னெறுழ்த்தோட், கடம்பமர் நெடுவே ளன்ன மீளி, யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர் :]

மலையவும் கடலவும் மாண் பயன் தரூஉம் (67) அரு பொருள் அருத்தும் (68) ஓடாவம்பலர் (76) - மலையிலுள்ளனவும் கடலிலுள்ளனவுமாகிய மாட்சிமையையுடைய பயனைக்கொடுக்கும் பெறுதற்கரிய

1 "உப்பமைந்தற்றால்" (குறள். 1302) என்பதன் உரையில், 'உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின்றானாற்போல' (பரிமேல்.) எனவெழுதிய உரை இக்கருத்தைக் குறிப்பித்தல் காண்க.

பொருள்களை உலகத்தோரெல்லாரையும் நுகரப்பண்ணும் பிறக்கிடாத புதியோர்,

என்றது, மாணிக்கமும், முத்தும், சந்தனமுமுதலியன கொண்டு போய் விற்றுத் திரிவாரைக்கூறிற்று.

பொரு கணை தொலைச்சிய புண் தீர் மார்பின் (70) - பொருகின்ற அம்புகள் தசையைப்போக்கின புண்கள்தீர்ந்த மார்பினையும்,

சுரிகை நுழைந்த சுற்று வீங்கு செறிவு உடை (73) - பத்திரம் செருகப்பட்ட கட்டுதலிறுகும் சேலையினையும்,

கரு வில் (74) திருந்து தொடை (68) ஓச்சிய கண் அகல் எறுழ் தோள் (74) - கொடிய வில்லைத் தப்பாததொடையிலே நிரம்பவாங்கின இடமகன்ற வலியினையுடைத்தாகிய தோளினையுமுடைய,

கடம்பு அமர் நெடு வேள் அன்ன (75) வம்பலர் (76) - கடம்பிடத் தேயிருந்த நெடிய முருகனையொத்த வம்பலர்,

மீளி (75) உடம்பிடி தட கை ஓடா வம்பலர் (76) - [1] கூற்றுவனை யொத்த வேலைப் பெருமையையுடைய கையிலேயுடைய பிறக்கிடாத வம்பலர்,

மார்பினையும் (70), உடையினையும் (73), தோளினையுமுடைய (74) வம்பலர்.

வரை ஊர் பாம்பின் (72) வெள் கை ஒள் வாள் விரவு வரி கச்சில் (71) பூண்டு புடை தூங்க (72) - மலையிடத்தே யூர்கின்ற பாம்புபோலே யானைக்கொம்பாற் கடைந்திட்ட வெள்ளிய [2] ஆசினையுடைய ஒள்ளிய வாள் தன்னிடத்தில் விரவின வரியையுடைய கச்சினாலே தோளிலே கோக்கப்பட்டு ஒருபக்கத்தே தூங்காநிற்க,

நோன் தாள் (68) [3] அடி புதை அரணம் எய்தி (69) - நடந்து வலியையுடையவாகிய காலில் அடியைமறைக்கின்ற செருப்பைக்கோத்து,

படம் புக்கு - சட்டையிட்டு,

வம்பலர் (76) தூங்க (72) எய்திப் புக்கு (69) வழங்கும் (80) பெரிய வழி (81) என்க.

77 - 8. தடவு நிலை பலவின் முழுமுதல் கொண்ட சிறு சுளை பெரு பழம் கடுப்ப - பெருமையையுடைய நிலையினையுடைய பலாவினடியிலே குலை கொண்ட [4] சிலவாகிய சுளையினையுடைய பெரிய பழத்தை யொப்ப,

---

1 "காலவேலான்" கம்ப. கையடைப். 11

2 ஆசு - கைப்பிடி.

3 அடிபுதை அரணம்: இச்சொல் பாதரட்சை யென்பதன் மொழி பெயர்ப்பாதல் காண்க.

4 பி - ம். 'சிறியவாகிய'

நல்லபழம் சுளைமிக இராநென்றூர்.

78-80. [மிரியற், புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத், தணர்ச்செவிக் கழுதை :]

மிரியல் புணர் பொறை தாங்கிய கழுதை - மிளகினது ஒத்தகன மாகச் சேர்த்த பாரத்தைத் தாங்கிய கழுதை,

வடு ஆழ் நோன் புறத்து அணர் செவி கழுதை - வடிவழுந்தின வலி யினையுடைய முதுகினையும் எடுத்த செவியினையுமுடைய கழுதை,

80-81. கழுதை சாத்தொடு வழங்கும் உல்கு உடை பெரு வழி கவலை காக்கும் - கழுதையிலே மிளகேற்றிக் கொண்டுபோகின்ற திர ளோடே வம்பலர் (76) வழங்கும் பெரியவழியில் கவர்த்தவழிகளையும் காத்திருக்கும்,

உல்கு - சுங்கம்.

82. வில்லுடை வைப்பின் - விற்படையிருக்கின்ற ஊர்களில்,

வியல் காடு இயவின் - அகன்ற காட்டுவழிகளில்,

83-5. நீள் அரை இலவத்து அலங்கு சினை பயந்த பூளை அம் பசு காய் புடை விரிந்தன்ன வரி புற அணிலொடு - நீண்ட தாளினையுடைய இலவத்தினது அசைகின்ற கொம்பு காய்த்த பஞ்சியினையுடைய அழ கினையுடைத்தாகிய பசிய காயினது முதுகு விரிந்து பஞ்சுதோன்றின லொத்த வரியை முதுகிலேயுடைய அணிலோடே,

85. கருப்பை ஆடாது - எலியும் திரியாதபடி,

86-8. [யாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல், வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தக, ரீத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை :]

யாறு அறல் புரையும் வெரிந் கொழு மடல் உடை நெடு தகர் ஈந்து - யாற்றினது அறலையொக்கும் முதுகினையும் கொழுவிய மடலினையு முடைய நெடிய மேட்டுநிலத்தில் நின்ற ஈந்து,

மடலினடி தன்னிடத்தேநிற்க மேல் அறுப்புண்ட ஈந்து அறல் போன்றிருக்குமாறு உணர்க.

வேல் தலை அன்ன வை நுதி ஈந்து இலை வேய்ந்த எய் புறம் குரம்பை - வேலின் முனையையொத்த கூர்மையினையுடைய முனையினை யுடைய ஈந்தினுடைய இலையாலேவேய்ந்த 1 எய்ப்பன்றிமுதுகுபோலும் புறத்தினையுடைய குடிலில்,

89-90. [மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி, யீன்பிண வொழி யப் போகி :] ஈன் பிணவு மான் தோல் பள்ளி மகவொடு முடங்கி ஒழிய போகி - பிள்ளையைப்பெற்ற எயிற்றி மான்றோலாகிய படுக்கையிலே அப் பிள்ளையோடே முடங்கிக்கிடக்க ஒழிந்தோர் போய்,

1 பி - ம். 'எய்ப்பன்றிபோலும்'

[1] "பெண்ணும் பிணவு மக்கட் குரிய" என்பதனால் வந்த பிணா வென்னும் [2] ஆகாரவீறு அல்வழிக்கண் வன்கணமன்மையிற் குறியதன் இறுதிச்சினை கெட்டு உகரம் பெறாதுநின்றது.

90 - 92. [நோன்காழ், இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோ, லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி :] இரும்பு தலை யாத்த திருந்து கணை நோன்காழ் விழு கோல் உளி வாய் சுரையின் மிளிர மிண்டி - பூண் தலையிலே அழுத்தின நன்றாகிய திரட்சியையும் வலியையு முடைத்தாகிய வயிரத்தினையுமுடைய சீரிய கோல் செருகின உளி போலும் வாயினையுமுடைய [3] பாரைகளாலே கட்டிகள் கீழ்மேலாகக் குத்துகையினாலே,

கோல்செருகப்படுகின்ற சுரையையுடைமையிற் சுரையென்றார் ; ஆகுபெயர் ; சுரை - குழைச்சு.

93. இரு நிலம் கரம்பை படு நீறு ஆடி - கருநிலமாகிய கரம்பை நிலத்திலுண்டாகிய புழுதியை அளைந்து,

94. நுண் புல் அடக்கிய வெள் பல் எயிற்றியர் - மெல்லிய புல்லரி சியை வாரியெடுத்துக்கொண்ட வெள்ளிய பல்லையுடைய எயின்குடியிற் பிறந்த மகளிர்,

போகி (90) மிண்டுகையினாலே (92) ஆடி (93) அடக்கிய எயிற் றியரென்க.

மிகவிளைந்து உதிர்ந்தபுல்லை எறும்பிழுத்துச் சேரவிட்டுவைத்த இட மறிந்தெடுத்தல் அந்நிலப்பண்பு.

95 - 6. பார்வை யாத்த [4] பறை தாள் விளவின் நீழல் முன்றில் நிலம் உரல் பெய்து - பார்வைமான் கட்டிநின்ற தேய்ந்ததாளினையுடைய விளவினது நிழலையுடைய முற்றத்திடத்துத் தோண்டின நிலவுரலிலே அப்புல்லரிசியைச் சொரிந்து,

97. குறு காழ் உலக்கை ஓச்சி - குறிய வயிரமாகிய உலக்கை யாலே [5] குத்தி,

97 - 8. நெடு கிணறு வல் ஊற்று உவரி தோண்டி - ஆழ்ந்த கிணற்றிற் சில்லூற்றாகிய உவரிநீரை முகந்துகொண்டு,

98 - 9. தொல்லை முரவு வாய் குழிசி முரி அடுப்பு ஏற்றி - பழைய [6] ஒறுவாய் போன பானையிலே வார்த்தவுலையை முரிந்த அடுப்பிலே வைத்து,

---

1 தொல். மரபு. சூ. 61.

2 ,, உயிர்மயங்கியல், சூ. 32. 3 பாரை - கடப்பாரை.

4 பறைதல் - தேய்தல் : "சுவர் பறைந்த - சுவரிடத்தில் தேய்ந்த" பெரும்பாண். 189, ந. 5 பி - ம். 'குற்றி' 6 பி - ம். 'வெறுவாய்'

100. [வாரா தட்ட வாடுன் புழுக்கல் :]
வாராது அட்ட புழுக்கல் - அரியாது ஆக்கின சோற்றை,
எயிற்றியர் (94) பெய்து (96) ஓச்சி (97) தோண்டி (98) எற்றி (99) அட்ட புழுக்கலெனமுடிக்க.
வாடு ஊன் - உப்புக்கண்டத்தோடே,

101 - 2. [வாடாத் தும்பை வயவர் பெருமக, னோடாத் தானை :] ஓடா தானை வாடா தும்பை வயவர் பெருமகன் - முதுகிடாத படையினை யுடைய கெடாத தும்பைசூடின போரைவல்ல வீரருடைய தலைவனாகிய,

102 - 3. [1] ஒள் தொழில் கழல் கால் செவ்வரை நாடன் சென்னியம் எனின் - ஒள்ளிய தொழில்களையுடைத்தாகிய வீரக்கழலணிந்த காலினை யுடைய செவ்விய மலைநாட்டையுடையவனுடைய [2] பாணச்சாதியே மென்று கூறுவீராயின்,

104. தெய்வம் மடையின் தேக்கிலை குவைஇ - தெய்வங்களுக்குச் சேர இட்டுவைத்த பலிபோலே புழுக்கலையும் வாடூனையும் (100) தேக்கிலையிலே குவிக்கையினாலே,

104 - 5. [நும், பைதீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர் :] பதம் நும் பைதீர் கடும்பொடு மிகப் பெறுகுவிர் - அவ்வுணவை நும்முடைய பசுமைதீர்ந்த சுற்றத்தோடே மிகப்பெறுகுவிர் ;

வியன்காட்டியவுகளில் (82) உல்குடைத்தாகிய (81) நெடுநெறியையும் (65) வம்பலர் (76) கழுதைச்சாத்தொடு வழங்கும் (80) உல்குடைப் பெருவழிக் கவலையையும் காத்திருக்கும் (81) வில்லுடைவைப்பின் (82) குரம்பையில் (88) எயிற்றியர் (94) தாங்களட்ட புழுக்கலையும் வாடூனையும் (100) எல்லிடைக்கழியுநர்க்கு ஏமமாகத் (66) தேக்கிலையிலே குவிக்கையினாலே (104) அப்பதத்தைப் (105) பெருமகனாகிய (101) வரைநாடன் சென்னியமெனின் (103) நும் (104) கடும்பொடு மிகப் பெறுகுவிர் (105) எனமுடிக்க.

உல்கு - இரண்டுவழிக்குங்கொள்க. குவைஇயென்னும் செய்தெனச்சம் காரணகாரியப்பொருட்டு.

106. [மானடி பொறித்த மயங்கதர் மருங்கின் :] மயங்கு மான் அடி பொறித்த அதர் மருங்கின் - நீரின்மையின் மயங்கித்திரியும் மானடி அழுந்திக்கிடக்கின்ற வழியிடத்திலே,

---

1 "ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்கால்" (பதிற். ௩௪ : 2) என்பதன் உரையில், 'ஒண்பொறிக் கழற்காலென்றது தாங்கள் செய்த அரிய போர்த்தொழில்களைப் பொறித்தலையுடைய ஒள்ளிய கழற் காலென்றவாறு' என்றெழுதியுள்ள பகுதி இங்கே உணரற்பாலது.

2 பி - ம். 'பாண்சாதியேம்'

107 - 8. வான் மடி பொழுதில் நீர் நசைஇ குழித்த அகழ் - மழை பெய்தலைத் தவிர்ந்தகாலத்தே நீர் நிற்கவேண்டுமென்று நச்சுதலாலே குழித்தகுளம்,

அகழப்படுதலின் அகமென்றது ஆகுபெயர்.

108. சூழ் பயம்பின் அகத்து ஒளித்து ஒடுங்கி - அதனைச் சூழப் பறித்துக்கிடக்கின்ற மட்டுக்குழிகளினுள்ளே மறைந்தொதுங்கி,

தண்ணீர்குடிக்க வருமென்று குளத்தைச் சூழப்பறித்தகுழி.

109 - 10. புகழா வாகை பூவின் அன்ன வளை மருப்பு ஏனம் வரவு பார்த்து இருக்கும் - அகத்திப்பூவினையொத்த வளைந்த கொம்பினை யுடைய பன்றியினது நீருண்ணவரும் வரவைப் பார்த்திருக்கும்,

111. அரை நாள் வேட்டம் அழுங்கின் - நடுவியாமத்து வேட்டை ஒழிந்தார்களாயின்,

பகல் நாள் - அதன் பிற்றைநாளிலே,

112 - 5. [பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித், தொகு வாய் வேலித் தொடர்வலை மாட்டி, முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையு, நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇ :]

முள் அரை தாமரை புல் இதழ் புரையும் நெடு செவி குறு முயல் போக்கு அற - முள்ளைத் தண்டிலேயுடைய தாமரையினது புறவிதழை யொக்கும் நெடிய செவியினையுடைய குறிய முயல்களை ஓரிடத்தும்போக் கில்லாதபடி,

தொகு வாய் வேலி தொடர் வலை மாட்டி வளைஇ - குவிந்த இடத்தை யுடைய வேலியிடத்தே ஒன்றோடொன்று பிணைத்த வலைகளை [1] மாட்டி வளைத்து,

பகு வாய் ஞமலியொடு பைம்புதல் எருக்கி - அங்காந்த வாயை யுடைய நாய்களுடனே சென்று பசிய தூறுகளையடித்து அவற்றிற் கிட வாமலோட்டி,

116 - 7. [கடுங்கட் கானவர் கடறுகூட் டுண்ணு, மருஞ்சுரம் :]

கடறு கூட்டுண்ணும் அரு சுரம் - காட்டிலுள்ள முயல்களைக் கொள்ளை கொண்டுண்ணும் அரிய பாலைநிலம்,

கடுங்கண் கானவர் - தறுகண்மையையுடைய கானவர்,

கானவர் (116) பயம்பின் ஒடுங்கிப் (108) பார்த்திருக்கும் (110) இராவேட்டமழுங்கிற் பகனாளிலே (111) முயலைப் போக்கறவளைத்து (115) எருக்கிக் (112) கூட்டுண்ணும் (116) அருஞ்சுரமென முடிக்க.

117. அரு சுரம் இறந்த [2]அம்பர் குறும்பில் சேப்பின் (129) - இவ் வரிய நிலத்தைக் கைவிட்ட மற்றைநிலத்திற் குறும்பிற்றங்கின்,

குறும்பிற்சேப்பின் (129) என்பதனை இவ்விடத்துக்கூட்டுக.

---

1 பி - ம். 'மூட்டிவளைத்து' 2 பி - ம். 'உம்பர்'

இதனால் [1] நண்பகலும் வேனிலுமாகிய பாலைநிலங்கூறி அதனைக் கலந்த நிலமுங் கூறினார்.

இனி நீங்கள் அருஞ்சுரத்தைக் கடந்த பின்னரென்றுமுரைப்பர்.

117-8. [பருந்துபட, வொன்னாத் தெவ்வர் நடுங்க வோச்சி :] ஒன்னா தெவ்வர் நடுங்க பருந்து பட ஓச்சி - பொருந்தாதபகைவர் அஞ்சப் பருந்துகள் படியக் குத்தி,

119-20. வை நுதி மழுங்கிய புலவு வாய் எஃகம் வடி மணி பலகையொடு நிரைஇ - கூர்மையையுடைய முனைமழுங்கின புலானாறும் வாயையுடைய வேலை வடித்த மணிகட்டின பலகைகளோடே நிரைத்து வைத்து,

120-21. முடி நாண் சாபம் சார்த்திய கணை துஞ்சு வியல் நகர் - தலையிலே முடிந்த நாணையுடைய வில்லைச்சார்த்திவைத்த அம்புதங்கும் அகற்சியையுடைய வீடுகளையும்,

122. ஊகம் வேய்ந்த உயர் நிலை வரைப்பின் - ஊகம்புல்லாலே வேய்ந்த உயர்ந்த நிலைமையினையுடைய மதிலையும்,

123-4. வரை தேன் புரையும் கவை கடை புதையொடு கடு துடி தூங்கும் கணை கால் பந்தர் - மலையிற்றேனிறாலையொக்கும் குதையினை யுடைத்தாகிய அடியினையுடைய அம்புக்கட்டுகளுடனே ஓசைகடிய துடி யும் தூங்கும் திரண்ட காலையுடைய பந்தரினையும்,

125. தொடர் நாய் யாத்த துன் அரு கடி நகர் - சங்கிலிகளாலே நாய்களைக் கட்டிவைத்த கிட்டுதற்கரிய காவலையுடைய வீட்டினையும்,

126. [வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை :] முள் வாழ் வேலி சூழ் மிளை படப்பை - முள்ளையுடைய வாழ்வேலியினையும் அதனைச்சூழ்ந்த காவற்காட்டினையுடைத்தாகிய பக்கத்தினையும்,

127. கொடு நுகம் தழீஇய புதவின் - கொடிய கணையமரம் ஏறட்ட உட்கதவையுடைய வாயிலினையும்,

127-8. செ நிலை நெடு நுதி வய கழு நிரைத்த வாயில் - செவ்விய நிலையினையும் நெடிய முனையினையுமுடைய வலியையுடைய கழுக்கள் நிரைத்த ஊர்வாசலினையுமுடைய,

பகைவரைக் குத்துதற்குக் கழுவைத்தார்.

129. கொடு வில் எயின் குறும்பில் சேப்பின் - கொடிய வில்லை யுடைய எயினச்சாதியிலுள்ளாருடைய அரணிலேதங்கின்,

கணைதுஞ்சுவியனகர் (121) முதலியவற்றையுடைய குறும்பெனக.

130-31. களர் வளர் ஈந்தின் காழ் கண்டன்ன சுவல் விளை நெல்லின் செ அவிழ் சொன்றி - களர்நிலத்தே வளர்ந்தஈந்தினது விதையைக்

1 "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு, முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" தொல். அகத். சூ. 9.

கண்டாற்போன்ற மேட்டுநிலத்தே விளைந்த நெல்லினது சிவந்த அவி ழாகியசோற்றை,

132-3. ஞமலி தந்த மனவு சூல் உடும்பின் வறை கால்யாத்தது வயின் தொறும் பெறுகுவிர் - நாய்கடித்துக் கொண்டுவந்த அக்குமணி போலும் முட்டைகளையுடைய உடும்பினது பொரியலாலே மறைத்ததனை மனைகடோறும் பெறுகுவிர்;

சேப்பிற் (129) பெறுகுவிரென்க.

134-6. யானை தாக்கினும் அரவு மேல் செலினும் நீல் நிறம் விசும்பின் வல் ஏறு சிலைப்பினும் சூல் மகள் மாறு மறம் பூண் வாழ்க்கை - யானை தன் எதிரே செல்லினும் பாம்பு தன்மேலே செல்லினும் நீல நிறத்தையுடைய மேகத்திடத்தே வலிய உருமேறு இடிப்பினும் சூற் கொண்ட மகள் அவையிற்றிற்கு அஞ்சி மீளா மறத்தைப்பூண்ட வாழ் வினையும்,

137. வலி கூட்டுணவின் வாள் குடி பிறந்த - தமது வலியாற் 1 கொள்ளை கொண்டுண்ணும் உணவினையுமுடைய வாட்டொழிலே செய் யுங் குடியிற்பிறந்த,

138. புலி போத்து அன்ன புல் அணல் காளை - புலியினது போத்தை யொத்த புல்லென்ற தாடியையுடைய அந்நிலத்துத்தலைவன்,

139-40. 2 செல் நாய் அன்ன கரு வில் சுற்றமொடு கேளா மன் னர் கடி புலம் புக்கு - தான் குறித்த விலங்கின்மேலே செல்கின்ற நாய் அதனைத் தப்பாமற் கொள்ளுமாறுபோன்ற கொடியவில்லையெடுத்த காவ லாளருடனே தன் வார்த்தைகேளாத பகைவருடைய காவலையுடைய நிலத்தேசென்று,

141. நாள் ஆ தந்து நறவு நொடை தொலைச்சி - விடியற்காலை யிலே அவர்கள் பசுக்களை அடித்துக்கொண்டு போந்து அவற்றைக் கள் ளுக்கு விலையாகப் போக்கி,

142. இல் அடு கள் இன் தோப்பி பருகி - அதற்குப் பின்பாகத் தமது இல்லிலே சமைத்த கள்ளுக்களில் இனிதாகிய நெல்லாற்செய்த கள்ளையுண்டு,

---

1 "கைப்பொருள் வெளவுங் களவேர் வாழ்க்கைக், கொடியோர்" பெரும்பாண். 40-41.

2 "நாயகர்க்கு நாய்கள்போ னட்பிற் பிறழாது, கூஉய்க் குழாஅ முடன்கொட்கு - மாய்படை, பன்றி யனையர் பகைவேந்த ராங்கவர், சென்றெறவன் செய்வர் செரு" (தொல். உவம. சூ. 37, பேர். மேற்.) என்றவிடத்து வீரர்களுக்கு நாயை உவமித்திருத்தல் காண்க.

143. மல்லல் மன்றத்து மத [1]விடை கெண்டி - வளப்பத்தினை யுடைய மன்றிலே வலியையுடைய ஏற்றை அறுத்துத்தின்று,

144. மடி வாய் தண்ணுமை நடுவண் சிலைப்ப - தோலை மடித்துப் போர்த்த வாயையுடைய மத்தளம் தங்களுக்குநடுவே முழங்காநிற்ப,

145 - 7. [சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சிவலன் வளையூஉப், பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை, முரண்டலை கழிந்த பின்றை :] சிலை நவில் எறுழ் தோள் ஓச்சி வலன் வளையூஉ பகல் மகிழ் தூங்கும் தூங்கா முரண் தலை இருக்கை கழிந்த பின்றை - வில்லுப்பயின்ற வலியை யுடைய இடத்தோளை யெடுத்து வலப்பக்கத்திலே வளைந்து பகற்பொழு திலே மகிழ்ச்சியுடனே யாடும் அசையாப் பொருதலையுடைய குடியிருப் பினைக் கடந்தபின்பு,

இதனாற் குறிஞ்சிநிலம் முற்கூறி அதன்பகைப்புலமும் பிற்கூறினார்.

147 - 8. மறிய குளகு அரை யாத்த குறு கால் - ஆட்டுமறிகள் தின்று தின்னுந் தன்மையையுடைய தழைகளைத் தம்மிடத்தே கட்டின குறிய கால்களையும்,

148 - 9. [குரம்பைச், செற்றை வாயிற் செறிகழிக் கதவின் :]

செற்றை வாயில் - சிறுதூற்றையுடைய வாயிலினையும்,

குரம்பை - குரம்பையினையும்,

கழி செறி கதவின் - கழிகளாற் கட்டப்பட்ட கதவினையும்,

150. [கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின் :] கழித்தலை கற்றை வேய்ந்த சாம்பின் - வரிந்த கழிகளிடத்தே வரகுகற்றைகளாலே வேய்ந்த சேக்கையையும்,

151. [அதளோன் றுஞ்சுங் காப்பி னுதள :] உதள அதளோன் துஞ்சும் காப்பின் - கிடாயினுடைய தோல்களைப் பாயலாகவுடைய முதி யோன் துயில் கொள்ளுங் காவலையுமுடைய,

[2] "மோத்தையுந் தகரு முதளு மப்பரும், யாத்த வென்ப யாட்டின் கண்ணே" என்றார் மரபியலில்.

காலினையும் (148) வாயிலினையும் கதவினையும் (149) சாம்பினையும் (150) காப்பினைய (151) முடைய குரம்பை (148) யென்க.

152. நெடு தாம்பு தொடுத்த குறு தறி முன்றில் - [3] தாமணி தொடுத்த நெடிய தாம்புகள் கட்டின குறியமுளைகளையுடைய முற்றத் தினையும்,

---

1 விடை - கிடாயென்று முன் எழுதினர்; முருகு. 232, ந.

2 தொல். மரபியல், சூ. 47.

3 தாமணி: (பெரும்பாண். 243 - 4, ந.); "வானவர் தேனுஞெல்லாந், தந்தா மணியிற் செறிபசுவாக" திருவாரூர்க்கோவை, 35.

153-4. கொடு முகம் துருவையொடு [1] வெள்ளை சேக்கும் இடு முள் வேலி எரு படு வரைப்பின் - வளைந்த முகத்தினையுடைய செம்மறியாட்டுடனே வெள்ளாடுங்கிடக்கும் கட்டுமுள்ளாகிய வேலியினையுடைய எருமிகுகின்ற ஊரிடத்து,

குரம்பையினையும் (148) முன்றிலினையும் (152) வேலியினையுமுடைய வரைப்பென்க.

155. [நள்ளிருள் விடியற் புள்ளெழப் போகி :]

நள் இருள் விடியல் புள் எழ - செறிந்த இருள்போகின்ற காலத்தே பறவைகள் துயிலெழாநிற்க,

போகியென்பதனை மேலே கூட்டுக.

156. புலி குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி - புலியினது முழக்கம் போலும் முழக்கத்தையுடைய மத்தை ஆரவாரிக்கும்படி கயிற்றை வலித்து,

157-8. ஆம்பி வால் முகை அன்ன கூம்பு முகிழ் உறை அமை தீ தயிர் கலக்கி - குடைக்காளானுடைய வெள்ளிய முகைகளையொத்த குவிந்த முகிழ்களையுடைய உறையாலே இறுகத்தோய்ந்த இனியதயிரைக்கடைந்து,

முகை - மொட்டு. முகிழ் - ஆடையின்மேல் புடைத்துநிற்பது.

158. நுரை தெரிந்து - வெண்ணெயையெடுத்து,

159. புகர் வாய் குழிசி பூ சுமடு இரீஇ போகி (155) - தயிர் புள்ளியாகத்தெறித்த [2] வாயையுடைய மோர்ப்பானையைப் பூவாற்செய்த சுமட்டைத் தலையிலேவைத்து முற்கூறிய குறிஞ்சி நிலத்து ஏறப்போய்,

160. நாள் மோர் மாறும் - காலையிலே மோரைவிற்கும்,

நல் மா மேனி - நன்றாகிய மாமையாகிய நிறத்தினையும்,

161. சிறு குழை துயல்வரும் காதின் - தாளுருவி அசையும் காதினையும்,

பணை தோள் - மூங்கில்போலும் தோளினையும்,

162. குறு நெறி கொண்ட கூந்தல் - குறியதாகிய அறலைத் தன்னிடத்தே கொண்ட மயிரினையுமுடைய,

ஆய் மகள் - ஆய்ச்சாதியிற்பிறந்தமகள்,

மேனி முதலியவற்றையுடையமகள்.

163. அளை விலை உணவின் கிளை உடன் அருத்தி - மோர்விற்றதனாலுண்டாகிய நெல் முதலியவற்றாலே சுற்றத்தாரெல்லாரையும் உண்ணப்பண்ணி,

---

1 வெள்ளை - வெள்ளாடு : "சிறுதலை வெள்ளைத் தோடு" குறுந். ககூ : 2.

2 பி - ம். 'நிறத்தையுடைய'

164. நெய் விலை கட்டி பசு பொன் கொள்ளாள் - பின்பு தான் நெய்யை விற்கின்றவிலைக்குக் கட்டியாகப் பசும்பொன்னை வாங்காளாய்,

[1] அட்டியென்றுபாடமோதி வார்த்தென்று கூறுதலுமாம்.

165. எருமை நல் ஆன் கரு நாகு பெறூஉம் குடி (166) - பாலெருமையையும், நல்ல பசுவையும், கரிய எருமைநாகினையும் நெய்க்கு ஒப்பாகச்சொல்லி வாங்குங்குடி,

குறிஞ்சிநிலத்தே நெய்யைவிற்று அவர்கள் அடித்துக் கொண்ட எருமை முதலாயவற்றை விலையாக வாங்கினாளென்க.

166. மடி வாய் கோவலர் - சீழ்க்கைபிடித்தலாலே மடித்த வாயையுடைய இடையர்,

குடி வயின் சேப்பின் - குடியிருப்பிலே தங்குவீராயின்,

167 - 8. [இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன, பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர் :] ஞெண்டின் இரு கிளை சிறு பார்ப்பு அன்ன பசு தினை மூரல் பாலொடும் பெறுகுவிர் - நண்டினது பெரிய சுற்றமாகிய சிறிய பார்ப்பையொத்த செவ்வித்தினையரிசியாலாக்கின சிலுத்தசோற்றைப் பாலுடனே பெறுகுவிர் ;

புள்ளெழுநிற்க (155) வாங்கிக் (156) கலக்கித் தெரிந்து (158) இரீஇப் (159) போகி (155) மாறும் (160) ஆய்மகள் (162) என்க.

மடிவாய்க்கோவலர் (166) வரைப்பிடத்து (154) ஆய்மகள் (162) அருத்திக் (163) கொள்ளாளாய்ப் (164) பெறூஉங் (165) குடிவயிற் சேப்பின் (166) மூரல் பாலொடும் பெறுகுவிரெனமுடிக்க.

169. தொடுதோல் மரீஇய வடு ஆழ் நோன் அடி - செருப்புவிடாமற் கிடந்த வடுவழுந்தின வலியையுடைய அடியினையும்,

170. விழு தண்டு ஊன்றிய கை - பசுக்களுக்கு வருத்தஞ்செய்யும் தடியையூன்றின கை,

மழு தின் வல் கை - மரங்களை [2] ஒடியெறிந்து கொடுக்கும் கோடாரியால் தழும்பிருந்த வலிய கையினையும்,

171. உறி கா ஊர்ந்த மறு படு மயிர் சுவல் - இரண்டுதலைகளிலும் உறியினையுடைய காக்கள் மேலேயிருந்ததனால் உண்டாகிய தழும்புமிக்க மயிரெழுந்த தோட்கட்டினையும்,

172. மேம் பால் உரைத்த ஓரி - எல்லாமணமும் பொருந்தும் பசுக்கறந்த பாற்கையைத் தடவின மயிரையும்,

---

[1] 'நெய்விலைக்கட்டி' (164) என்பதை நெய்விலைக்கு அட்டியெனப் பிரிக்க.

[2] ஒடியெறிதல் : "ஒடிய வெறிந்தென்பது ஒடியெறிந்தென விகாரமாயிற்று" (கலி. ௬அ : 12 - 5, ந.) ; "ஒடியெறிந்து வாரொழுக்கி" பெரிய. கண்ணப்ப. 75.

172-4. [ஓங்குமிசைக், கோட்டவுங் கொடியவும் விரைஇக் காட்ட, பல்பூ மிடைந்த படலைக் கண்ணி :] காட்ட ஓங்கு மிசை கோட்டவும் கொடியவும் பல் பூ விரைஇ மிடைந்த படலைக் கண்ணி - காட்டிடத்தனவாகிய உயர்கின்ற உச்சியினையுடைய கொம்புகளிலுள்ளவும் கொடிகளிலுள்ளவுமாகிய பல பூக்கள் கலந்துநெருங்கிய 1 கலம்பகமாகிய மாலையினையும்,

175. ஒன்று அமர் உடுக்கை - ஒன்றாய்ப்பொருந்திய உடையினையுமுடைய,

கூழ் ஆர் இடையன் - பாற்சோற்றையுண்கின்ற இடையன்,

அடி (169) முதலியவற்றையுடைய இடையன்.

176. கன்று அமர் நிரையொடு கானத்து அல்கி - கன்றுகள் பொருந்தின பசுத்திரளோடே காட்டிலேதங்கி,

177-9. [அந்நுண் ணவிர்புகை கமழக் கைம்முயன்று, ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச், செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின் :]

ஞெலிகோல் அம் நுண் அவிர் புகை கமழ கை முயன்று கொண்ட செ தீ ஞெகிழி தோட்ட கரு துளை குழலின் - தீக்கடைகோலாலே அழகிய நுண்ணியதாய் விளங்கும் புகை முற்படப்பிறக்கும்படி கையாலே கடைந்துகொண்ட சிவந்த நெருப்பினையுடைய 2 கடைக்கொள்ளியால் துளையிட்ட கரிய துளையினையுடைய குழலாலெழுப்பின,

பெருவிறலென்பதனை இடையனென்பதனோடு முன்னேகூட்டியெண்ணுக.

இனி ஞெலிகோல்-படுத்தகோல், ஞெகிழி-கடைகின்றகோலென்றுமுரைப்பர்.

180. இன் தீ பாலை முனையின் - மிகவுமினிய பாலையென்கின்ற பண்ணைத் தான் வெறுக்கின்,

180-82. [குமிழின், புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின், வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சி :] குமிழின் புழல் கோடு தொடுத்த மரல் புரி விரல் எறி நரம்பின் வில் யாழ் இசைக்கும் குறிஞ்சி - குமிழினது உட்பொய்யாகிய கொம்பிடத்தே வளைத்துக்கட்டின மரற்கயிறாகிய விரலாலே தெறித்துவாசிக்கும் நரம்பினையுடைய வில்லாகிய யாழொலிக்குங் குறிஞ்சியென்கின்ற பண்ணை,

183. பல் கால் பறவை கிளை செத்து ஓர்க்கும்-பலகாலினையுடைய வண்டுகள் தம் சுற்றத்தின்ஓசையாகக் கருதிச்செவிகொடுத்துக்கேட்கும்,

1 "களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த, அலங்கலந் தொடையல்கொண் டடியிணை பணிவான்" திவ். திருப்பள்ளி. 5.

2 "குறத்தி மாட்டிய வறற்கடைக் கொள்ளி" புறநா. கoஅ : 1.

1 "நண்டுந்தும்பியும்" என்னுஞ் சூத்திரத்திற் 2 செவிப்பொறியான்இவை உணர்தல்கூறினும்.

184. புல் ஆர் வியல் புலம் போகி - புல்லுநிறைந்த அகற்சியையுடைய நிலத்தைக் கடந்துபோய்,

முன்னர் இடையர்குடியிருப்புக்கூறிப் பின்னர் அவர்பசுக்கள்முதலியன நிற்கின்ற முல்லைநிலமும் கூறினார்.

184 - 5. முள் உடுத்து எழு காடு ஓங்கிய தொழூ உடை வரைப்பின் - முள்ளுந் தன்னிடத்தேசூழ்ந்து எழுகின்ற 3 விடத்தேதொடரி முதலிய காடுகள்சூழவளர்ந்த தொழுக்களையுடைய ஊர்களில்,

இது பசுக்கள் முதலியன மேயாமற் காக்கின்ற இளங்காட்டையுடைய படைத்தலைவரிருப்புக்கூறிற்று.

186. பிடி கணத்து அன்ன குதிர் உடை முன்றில்-பிடித்திரள் நின்றாற்போன்ற வரகுமுதலியனநிற்குங் குதிர்களையுடைய முன்றிலினையும்,

187. களிறு தாள் புரையும் திரி மரம் பந்தர் - யானையினது காலையொக்கும் வரகுதிரிகை நட்டுநிற்கும் பந்தரினையும்,

---

1 தொல். மரபியல். சூ. 31.

2 இங்கே காட்டிய சூத்திரத்திற்குரிய நச்சினார்க்கினியருரை இப்பொழுது கிடைத்திலது; எனினும் சீவகசிந்தாமணி 892 - 3-ஆம் பாட்டுக்களின் விசேடவுரையில் அவர் எழுதியுள்ள கீழ்க்கண்ட பகுதி இங்கே பயன்படும்: " 'நண்டுந்.........பிறப்பே' என்று தும்பிக்குச் செவியின்றெனவே இவற்றிற்குஞ் செவியின்றாமாதலாலே வருத்த மிகுதியான் இவற்றை நோக்கி வாளா கூறியதன்றி வேறன்று; இவை ஈண்டுவந்து கரிபோதலில; கேள்வியில்லன வருதலென்னை? என்பதுகடா; அதற்கு விடை: ஆசிரியர், 'நண்டுந்தும்பியும்' என்று தும்பியைப் பின் வைத்தது, மேல் வருஞ் சூத்திரத்தின், 'மாவுமாக்களு மையறிவென்ப' (தொல். மரபு. சூ. 32) என்ற ஐயறிவு இதற்கும் ஏறுதற்கென்றுணர்க; இதனை வாராததனால் வந்தது முடித்தலென்னும் தந்திரவுத்தியாற் கொள்க வென்று ஆண்டு உரை கூறிப்போந்தாம்; அதுவே ஆசிரியர் கருத்தென்பது சான்றோருணர்ந்தன்றே, 'பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த, தாதுண் பறவை பேதுற லஞ்சி, மணிநா யாத்த மாண்வினைத் தேரன்' (அகநா. ச: 10 - 12) என்று அப்பொருள் தோன்றக் கூறியதென்றுணர்க. இக்கருத்தான் இவரும் செவியுணர்வுண்டென்று கூறினார்."

3 விடத்தே தொடரி - ஒருவகை முள் மரம்; விடத்தர், விடத்தேர், விடத்தேரையென இப்பெயர் வழங்கும்; "திரிகாய் விடத்தரொடு" (பதிற். கரு: 14); "தள்ளாவிடத்தேர்" (கண்டி. மேற்.); "விடத்தேரை மன்னும்வனம்" திருவரங்கத்தந். 93

188 - 9. குறு சாடு உருளையொடு கலப்பை சார்த்தி நெடு சுவர் பறைந்த புகை சூழ் கொட்டில் - குறிய சகடத்திலுருளைகளோடே கலப்பையையும் சார்த்திவைக்கையினாலே நெடிய சுவரிடத்தில் தேய்ந்த புகைசூழ்ந்த கொட்டிலினையுமுடைய,

நெடுகைக்கட்டி ஒருபக்கத்திலே அடுப்பெரித்து ஒரு பக்கத்திலே தொழிலொழிந்த நாளில் சகடையிலுருளையையும் கலப்பையையுஞ் சார்த்தி எருதுகளுங் கட்டிநிற்றலிற் கொட்டிலென்றார்.

190 - 91. பருவம் வானத்து பா மழை கடுப்ப கரு வை வேய்ந்த கவின் குடி சிறு ஊர் - மாரிக்காலத்தையுடைய விசும்பிடத்தே பரந்த மேகத்தையொப்ப வரகு வைக்கோலாலேவேய்ந்த அழகினையுடைய குடியிருப்பினையுடைய சிறிய ஊர்களிலே,

சீறூர் - அம்முல்லைநிலத்து உழுதுண்பாரிருப்பு.

192 - 3. நெடு குரல் பூளை பூவின் அன்ன குறு தாள் வரகின் குறள் அவிழ் சொன்றி - நெடிய கொத்தினையுடைய சிறுபூளையினது பூவையொத்த குறிய தாளினையுடைய வரகினது சிறிய அவிழ்களாகிய சோற்றை,

194 - 5. புகர் இணர் வேங்கை வீ கண்டன்ன அவரை வால் புழுக்கு அட்டி - நிறத்தையுடைய கொத்தினையுடைய வேங்கைப்பூவைக் கண்டாலொத்த அவரைவிதையினது நன்றாகியபருப்பை மிகவிட்டு,

வேங்கைப்பூ வரிகளையுடைய விதைக்கு உவமை. புழுக்கு - புழுங்கவெந்தது; [1] கும்மாயமுமாம்; பருப்புச்சோறுமென்ப.

195 - 6. [2] [பயில்வுற், றின்சுவை மூரற் பெறுகுவிர் :]

இடையன் (175) அல்கிப் (176) பாலையைத் தான்முனையின் (180) அதனைக் கைவிட்டு விரலாலே வாசிக்குங்குறிஞ்சியைப் (182) பறவையோர்க்கும் (183) புலத்தைப் போகி (184) வரைப்புக்களின் (185) முன்றில் (186) முதலியவற்றையுடைய சீறூர்களிலே (191) வரகின்சொன்றியைப் (193) புழுக்கையட்டி (195) மூரலோடே பெறுகுவிரென முடிக்க.

---

1 கும்மாயம் - புழுக்கிய பச்சைப்பயற்றோடு சருக்கரை முதலியன கூட்டி ஆக்கப்படுவதொரு சிற்றுண்டி; இஃது இப்பெயரோடு விஷ்ணுவாலயங்களில் இக்காலத்தும் வழங்கிவருகின்றது; “ பயற்றுத் தன்மை கெடாது கும்மாய, மியற்றி ” (மணி. உ௭ : 185 - 6); “ கும்மாயத் தொடு வெண்ணெய் விழுங்கி ” (திவ். பெரியாழ்வார். ௩. 3 : 3) என்பதில் கும்மாயமென்பதற்கு ஸ்ரீமணவாளமாமுனிகள், ‘ குழையச்சமைத்த பருப்பு ’ என்று பொருள் செய்திருக்கின்றனர்; “ பயற்றது கும்மாயம் ” நன். சூ. 299, மயிலை. மேற்.

2 இதற்கு ஒருபிரதியிலும் உரைகிடைத்திலது; கலத்தலினாலே இனிய சுவையினையுடைத்தாகிய மூரலோடே பெறுகுவிரென்க.

196. ஞாங்கர் - அந்நிலத்திற்குமேல்,

197. குடி நிறை வல்சி செஞ் சால் உழவர் - அக்குடியிருப்பு நிறைந்த உணவினையுடைய செவ்விய சாலாகவுழுகின்ற உழவுத்தொழிலையுடையோர்,

ஒருசால் இருசாலென்றல் உழவுத்தொழிற்கு மரபு.

198. நடை நவில் பெரு பகடு புதவில் பூட்டி - உழவுத்தொழிலிலே பயின்ற பெரிய எருதுகளை வாயிலிலே நுகத்தைப் பூட்டிக்கொண்டுசென்று,

199 - 200. பிடி வாய் அன்ன மடி வாய் நாஞ்சில் உடும்பு முகம் முழு கொழு மூழ்க ஊன்றி - பிடியினது வாயையொத்த வளைந்தவாயையுடைய கலப்பையினுடைய உடும்பினது முகத்தையொத்த பெருங்கொழு மறைய அமுக்கி,

201. தொடுப்பு எறிந்து உழுத துளர் படு துடவை - முற்படவளையவுழுது விதைத்தபின்னர் இடையே உழுத களைகளைக் களைக்கொட்டுச்செத்திய தோட்டத்தை,

202. அரி புகு பொழுதின் - அறுக்கும்பருவம் வருங்காலத்தே,

202 - 5. [இரியல் போகி, வண்ணக் கடம்பி னறுமல ரன்ன, வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற், கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும் :]

குறு கால் (204) கறை அணல் குறும்பூழ் (205) - அதன்கட்டங்குங் குறுங்காலினையும் கருமையையுடைய கழுத்தினையுமுடைய குறும்பூழ்,

வண்ணம் கடம்பின் நறு மலர் அன்ன (203) வளர் இள பிள்ளை தழீஇ (204) - வெள்ளிய நிறத்தையுடைய கடம்பினது நறுநாற்றத்தினையுடைய பூவையொத்த வளருகின்ற இளையபிள்ளைகள் மிகவும் பறத்தலாற்றுதனவற்றையும் கூட்டிக்கொண்டு,

1 "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" என்றார்.

இரியல் போகி (202) கட்சி சேக்கும் (205) - அவர்களாரவாரத்திற் கஞ்சிக் கெடுதற்றன்மையையுடையவாய் ஆண்டு நின்றும்போய்க் காட்டிலே தங்கும்,

206. வல் புலம் இறந்த பின்றை - முல்லைநிலத்தைப் போனபின்பு,

இதனால், முற்றும் குடிச்சீறூருழவரால் உழுதற்குரிய முல்லைநிலமுங் கூறினார். இது மருதநிலத்தைச்சேர்ந்த முல்லைநிலம்.

உழவர் (197) பூட்டி (198) ஊன்றி (200) உழுததுடவை (201) அரிபுகுபொழுதில் (202) குறும்பூழ் (205) பிள்ளை தழீஇப் (204) போகிச் (202) சேக்கும் (205) வன்புலமென்க.

---

1 தொல். மரபியல், சூ. 4.

206-7. மெல் தோல் மிதி உலை கொல்லன் முறி கொடிறு அன்ன - மெத்தென்ற துருத்தியை அமுக்கி ஊதுகின்ற உலையில் கொற்றொழில் செய்கின்றவனுடைய முறிந்த கொடிற்றையொத்த,

208. கவை தாள் அலவன் அளறு அளை சிதைய - கப்பித்த காலையுடைய ஞெண்டினது சேற்றின்கண் உண்டாகிய முழைகெடும்படி,

209-10. பை சாய் கொன்ற மண் படு மருப்பின் கார் ஏறு பொருத கண் அகல் செறுவின் - பசியகோரையை அடியிலே குத்தியெடுத்த மண்கிடக்கின்ற கொம்பையுடைய கரிய கடாக்கள் தம்மிற் பொருத இடமகன்ற செய்யின்கண்,

211. உழாஅ நுண் தொளி நிரவிய வினைஞர் - தாம் உழப்படாத அந்த நுண்ணிய சேற்றை ஒக்கமிதித்தஉழவர்,

212. முடி நாறு அழுத்திய நெடு நீர் செறுவில் - முடியாகக்கிடக்கின்ற நாற்றைநட்ட நெடிய நீரையுடைய செய்களில்,

சிதையக் (208) கொன்ற மருப்பின் (209) ஏறுபொருத செறுவில் (210) தொளியைநிரவிய வினைஞர் (211) நாற்றையழுத்திய செறுவென்க.

213-4. களைஞர் தந்த கணை கால் நெய்தல் கள் கமழ் புது பூ முனையின் - அச்செய்யில் களைகளைப்பறிப்பார் பறித்து ஏறட்ட திரண்டதாளினையுடைய நெய்தலினது தேன்நாறுகின்ற புதியபூவை வெறுத்தாராயின்,

214-6. [முட்கினை, முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக், கொடுங்கான் மாமலர் கொய்து கொண்டு:] முகை சூழ் முள் சினை முள்ளி தகட்ட கொடு கால் பிறழ் வாய் மா மலர் கொய்து கொண்டு - அரும்புகள் சூழ்ந்த முள்ளையுடைய கொம்புகளையுடைய முள்ளியின் இதழையுடையவாகிய வளைந்த காலையும் மறிந்தவாயையும் 1 கருமையையுமுடைய பூவைப்பறித்துக்கொண்டு,

216-8. அவண பஞ்சாய் கோரை 2 பல்லின் சவட்டி புணர் நார் பெய்த புனைவு இன் கண்ணி - அந்நிலத்திலுண்டாகிய தண்டாணுகிய கோரையைப் பல்லாலே மென்றுமென்று கிழித்து முடிந்த நாராற்கட்டின புனைதற்கினிய மாலையை,

219. ஈர் உடை இரு தலை ஆர சூடி - ஈருடைத்தாகிய கரிய தலை நிறையும்படி சூடி,

220. பொன் காண் கட்டளை கடுப்ப 3 கண்பின் - பொன்னை யுரைத்து மாற்றுக்காணும் உரைகல்லையொப்பக் கண்பினது,

---

1 முள்ளிமலர் கரியதென்பதை, "கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவும்" (சிறுபாண். 148) என்பதனுலும் அறியலாகும்.

2 பல் - நாரைக்கிழிக்கும் ஒரு கருவி யென்றும் சொல்வதுண்டு.

3 பி - ம். 'கணப்பின்', 'சணப்பின்.'

221. புல் காய் சுண்ணம் புடைத்த மார்பின் - புல்லிய காயிற் றோன்றின தாதை அக்கதிரைமுறித்து அடித்துக்கொண்ட மார்பினையும்,

தாது நீளக்கிடந்தது உரைத்தாற்போன்றது.

222. இரும்பு வடித்தன்ன மடியா மெல் தோல் - இரும்பைத் தகடாக்கினாலொத்த திரையாத மெல்லிய தோலினையுமுடைய,

223. கரு கை வினைஞர் காதல் அம் சிறுஅர் - வலிய கையால் தொழில் செய்வாருடைய விருப்பத்தையுடைய அழகிய சிறுபிள்ளைகள்,

224. பழ சோறு அமலை முனைஇ - பழைய சோற்றினது கட்டியை வெறுத்து,

224 - 6. வரம்பில் புது வை வேய்ந்த கவி குடில் முன்றில் அவல் எறி உலக்கை பாடு விறந்து - வரம்பிடத்துப் புதிய வைக்கோலாலே வேய்ந்த கவிந்த குடிலினுடைய முற்றத்தே அவலையிடிக்கும் உலக்கையினது ஓசை செறிகையினாலே,

குடில்கள், பன்றி முதலியனவற்றைக் காத்தற்குக் கட்டினவை.

226 - 7. அயல கொடு வாய் கிள்ளை படு பகை வெரூஉம் - அதற்கு அயலிடத்தனவாகிய வளைந்த வாயையுடைய கிளிகள் தமக்குண்டாகின்ற பகையாக நினைத்து அஞ்சும்,

228. நீங்கா யாணர் வாங்கு கதிர் கழனி - இடையறாத புதுவருவாயினையுடைய வளையுங்கதிரினையுடைத்தாகிய கழனியிடத்து,

229. கடுப்பு உடை பறவை சாதி அன்ன - எறியப்பட்டார்க்குக் கடுக்குந் தன்மையைக் கொடுத்தலையுடைய குளவித்திரளையொத்த,

230. பைது அற விளைந்த பெரு செ நெல்லின் - பசுமையறும்படி முற்றின பெரிய செந்நெல்லினுடைய,

231. தூம்பு உடை திரள் தாள் துமித்த வினைஞர் - உள்ளுப் பொய்யையுடைத்தாகிய திரண்டதாளையறுத்த தொழில்செய்வார்,

232. பாம்பு உறை மருதின் ஓங்கு சினை நீழல் - பாம்புகிடக்கின்ற மருதினது உயர்ந்த கொம்பாலுண்டாகிய நிழலிலே,

பழையமரமாதலிற் பாம்புகிடக்குமென்றார்.

233. பலி பெறு வியல் களம் மலிய ஏற்றி - ஆண்டுறையுந்தெய்வங்கள் பலிபெறுகின்ற அகன்ற களங்களிலே மிகவு நிறையப் போராக விட்டு,

234 - 5. [கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடுந், துணங்கையம் பூதந் துகிலுடுத் தவைபோல் :] கணம் கொள் சுற்றமொடு கை புணர்ந்து துணங்கை ஆடும் அம் பூதம் துகில் உடுத்தவைபோல் - திரட்சி கொண்ட தம்முடைய சுற்றத்தோடே ஒழுங்காகச் செறிந்துநின்று துணங்கைக்கூத்தாடுகின்ற அழகினையுடைய பூதங்கள் வெள்ளிய துகிலையுடுத்து நின்றவைபோல,

என்றது, தம்மில் விளையாடுவதற்குத்திரண்ட பூதமென்றவாறு.

236 - 7. சிலம்பி வால் நூல் வலந்த மருங்கின் குழூஉ நிலை [1] போரின் முழு முதல் தொலைச்சி - சிலந்தியினது வெள்ளியநூல்சூழ்ந்த பக்கத்தினையுடைய பலவாகத்திரண்ட தன்மையினையுடைய போர்களி னுடைய பெரிய அடியை வாங்கிவிரித்து,

238. பகடு ஊர்பு இழிந்த பின்றை - எர்கள் கடாவிட்டுப் போன பின்பு,

238 - 9. துகள் தப வையும் துரும்பும் நீக்கி - குற்றமறும்படி வைக் கோலையும் கூளத்தையும் அதனிடத்துநின்றுநீக்கி,

239. பைது அற - [2] ஈரம் உலராநிற்க,

240. குடகாற்று எறிந்த குப்பை - மேல்காற்றாலே கையாலே தூவித்தூற்றின பொலி,

240 - 41. வடபால் செம்பொன் மலையின் சிறப்ப தோன்றும் - வடதிசைக்கண் உளதாகிய மேருவாகிய மலைபோலே மிகும்படி தோன்றும்;

242. தண் பணை தழீஇய தளரா இருக்கை - மருதநிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப்புக்களில்,

மார்பினையும் (221) தோலினையுமுடைய (222) வினைஞர்சிறார் (223) முனைஇ (224) அவலெறியுலக்கைப்பாடுவிறக்கையாலே (226) கிள்ளை வெரூஉம் (227) கழனிகளில் (228) விளைந்த நெல்லினைத் (230) துமித்த வினைஞர் (231) எற்றித் (233) தொலைச்சி (237) நீக்கி (239) எறிந்தகுப்பை (240) தோன்றும் இருக்கை யெனக்கூட்டுக.

243 - 4. பகடு ஆ ஈன்ற கொடு [3] நடை குழவி கவை தாம்பு தொடுத்த காழ் ஊன்று அல்குல் - பெருமையையுடைய பசுக்களீன்ற வளைந்த அடியையுடைய கன்றுகளைக் கட்டின [4] தாமணியையுடைய நெடியதாம்புகள் கட்டிக்கிடக்கின்ற தறிகள்நட்ட பக்கத்தினையும்,

[5] "முழுவலி துஞ்சும் நோய்தபு நோன்றொடை, நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை" என்றார்பிறரும். கவை : ஆகுபெயர்.

245. [ஏணி யெய்தா நீணெடு மார்பின் :] நீள் ஏணி எய்தா நெடு மார்பின் - நீண்ட ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினையும்,

246. முகடு துமித்து அடுக்கிய பழ பல் உணவின் - தலையைத் திறந்து உள்ளே சொரியப்பட்ட பழையவாகிய பல நெல்லினையுமுடைய,

---

1 பி - ம். 'போர்பின்'

2 "பைதுஅற - பசுமையறும்படி" பெரும்பாண். 230, ந.

3 நடை - அடி : "நடைநாலும்" தக்க. 716.

4 பெரும்பாண். 152, உரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

5 பதிற். ௪௪ : 9 - 10.

பல்லுணவென்றார், செந்நென்முதலிய சாதிப்பன்மைகருதி.

247. குமரி மூத்த கூடு ஓங்கு நல் இல் - அழியாத்தன்மையவாய் முதிர்ந்த கூடுகள் வளர்ந்த நல்ல இல்லினையும்,

அல்குலினையும், மார்பினையும், உணவினையுமுடைய கூடெனக.

248 - 9. தச்சச்சிறாஅர் நச்ச புனைந்த ஊரா நல் தேர் உருட்டிய புதல்வர் - தச்சச்சாதியிற்பிறந்த தொழில்செய்தற்குரிய சிறியோர் பிறர் விரும்பும்படி பண்ணின பிறராலே ஏறப்படாத நல்ல சிறுதேரை உருட்டிக்கொண்டுதிரிந்த பிள்ளைகள்,

250. தளர் நடை வருத்தம் வீட - தமது தளர்நடையாலுண்டான வருத்தம் தம்மைவிட்டு நீங்கும்படி,

250 - 52. அலர் முலை செவிலி அம் பெண்டிர் தழீஇ பால் ஆர்ந்து அமளி துஞ்சும் அழகு உடை நல் இல் - பால்சுரந்த முலையினையுடைய செவிலித்தாயராகிய அழகினையுடைய மகளிரைத் தழுவிக்கொண்டு அம் முலையிற் பாலை நிறையவுண்டு தமது படுக்கையிலே துயில்கொள்ளும் அழகையுடைத்தாகிய நல்ல இல்லினையும்,

செவிலியம் பெண்டிரென்பது ஒருமைபன்மைமயக்கம்.

253 - 4. தொல் பசி அறியா துளங்கா இருக்கை மல்லல் பெரு ஊர் மடியின் - ஏனை நாட்டிற்குஇயல்பாகிய பழையமிடியையறியாத அசையாத குடியிருப்பினையுமுடைய வளப்பத்தையுடைத்தாகிய பெரிய ஊரின் கண்ணே தங்கின்,

254 - 6. மடியா வினைஞர் தந்த வெள் நெல் வல்சி மனை வாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவிர் - தொழிலொழிந்திராத தொழில்செய்வார் கொண்டு வந்த வெள்ளிய நெற்சோற்றை மனையின்கண்ணேவாழும் கோழிப்பெடையினாற் சமைத்த பொரியலோடு பெறுகுவிர் ;

[1] "கோழி கூகை யாயிரண் டல்லவை, சூழுங் காலை யளகென லமையா" என்றார்.

செறுவிற் (212) புதுப்பூமுனையின் (214) மாமலர் கொய்துகொண்டு (216) சவட்டிப் (217) பெய்தகண்ணியைச் (218) சூடித் (219) தளரா விருக்கைகளிற் (242) கூடோங்கு நல்ல இல்லையும் (247) அழகினையுடைய நல்ல இல்லையும் (252) துளங்காவிருக்கையினையுமுடைய (253) பேரூரிலே தங்குவீராயின் (254) வல்சியை (255) வாட்டொடும்பெறுகுவிரெனக் கூட்டுக.

257 - 9. [மழைவிளை யாடுங் கழைவள ரடுக்கத், தணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன், கணஞ்சால் வேழங் கதழ்வுற் றாஅங்கு :] மழை விளையாடும் கழை வளர் அடுக்கத்து அணங்கு உடை யாளி தாக்கலின் கணம் சால் வேழம் பல உடன் கதழ்வு உற்றாங்கு - மேகங்கள்

---

[1] தொல். மரபியல், சூ. 55.

விளையாடித்திரியும் மூங்கில்வளர்கின்ற பக்கமலையிலே தம்மைவருத்து தலையுடைய 1 யாளிபாய்கையினாலே திரட்சியமைந்த யானைபலவுங்கூடிக் கலங்கிக் கூப்பிட்டாற்போல,

260 - 61. எந்திரம் சிலைக்கும் துஞ்சா கம்பலை விசயம் அடூஉம் புகை சூழ் ஆலைதொறும் - ஆலையாரவாரிக்கும் மாறாத ஓசையையுடைய கருப்பஞ்சாற்றைக் கட்டியாகக் காய்ச்சும் புகைசூழ்ந்த கொட்டில் கடோறும்,

ஆலை : ஆகுபெயர்.

262. கரும்பின் தீ சாறு விரும்பினிர் மிசைமின் - கரும்பினது இனிய சாற்றை முற்படக்குடித்துப் பின்னர் அக்கரும்பின் கட்டியைத் தின்பீராக ;

2 " மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி ", 3 " வீழ்களிறு மிசையாப் புலியினும் '' என மிசைதல் தின்றற்றொழின் மேனின்றது.

263 - 5. [வேழ நிரைத்து வெண்கோடு விரைஇத், தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த, குறியிறைக் குரம்பை :] வெள் கோடு விரைஇ வேழம் நிரைத்து தாழை முடித்து தருப்பை வேய்ந்த குறியிறை குரம்பை - வஞ்சிமரமும் காஞ்சிமரமுமாகிய வெள்ளிய கொம்புகளைக் கைகளுக்கு நடுவே கலந்து நாற்றி வேழக்கோலை வரிச்சாகநிரைத்துத் தாழைநாரால் கட்டித் தருப்பைப்புல்லாலே வேயப்பட்ட குறிய இறப்பையுடைய குடிலினையும்,

முடிதந்து முடித்தெனவிகாரம். குறியிறை பண்புத்தொகையாதலின், 4 மருவின்பாத்தியதாய் நின்றது.

265. பறி உடை முன்றில் - மீனைவாரியெடுக்கும் பறிகளையுடைய முற்றத்தினையுமுடைய,

266 - 7. கொடு கால் புன்னை கோடு துமித்து இயற்றிய பைங்காய் தூங்கும் பாய் மணல் பந்தர் - வளைந்த காலையுடைய புன்னைகளினது கொம்புகளை வெட்டியிட்ட பசியகாய்கள் நாலும் பரந்த மணலையுடைய பந்தரிலே,

பைங்காய் - சுரைக்காய்முதலியன ; புன்னங்காயுமாம்.

268. இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி - இளையவர்களும் முதிர்ந்தவர்களும் சுற்றத்துடனே நிறைந்திருந்து பின்பு,

269 - 71. புலவு நுனை பகழியும் சிலையும் மான செ வரி கயலொடு பசு இறா பிறழும் மை இரு குட்டத்து மகவொடு வழங்கி - புலால்நாறு முனையினையுடைய அம்பையும் வில்லையுமொப்பச் சிவந்தவரியினையுடைய

1 யாளி - இங்கே அத்தியாளி. 2 கலித்தொகை. ௫0 : 2.

3 அகநானூறு, உக : 3. 4 தொல். குற்றியலுகரப். சூ. 77.

கயல்களோடே பசிய இறப் பிறழும் கருமையையுடைய பெரிய ஆழ்ந்த குளங்களைப் பிள்ளைகளோடேஉலாவி மீனைப் பிடித்து,

272-3. கோடை நீடினும் குறைபடல் அறியா தோள் தாழ் குளத்த கோடு காத்திருக்கும் - கோடைக்காலம் நீட்டித்துநின்றதாயினும் வற்றுதலையறியாத கையை மேலே கூப்பிமுழுகி நீர்நிலைகாட்டுங்காலத்துக் கையமிழ்ந்துங் குளங்களினுடைய கரையைக்காத்திருக்கும்,

1 "வெளிற்றுடற் குருதி வெள்ள நிலைபிது வென்ப வேபோற், களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் கைகளை யுச்சிக் கூப்பி, யளித்தவை பாடி யாட" என்றார் பிறரும்.

274. கொடு முடி வலைஞர் குடி வயின் சேப்பின் - வளைந்த முடியினையுடைய வலையை வீசுவாருடைய குடியிருப்பிலே தங்குவீராயின்,

பந்தரிலே (267) துவன்றி (268) வழங்கிக் (271) காத்திருக்கும் (273) வலைஞரெனமுடிக்க.

குரம்பையினையும், முன்றிலினையு (265) முடைய குடி (274) யென்க.

275. அவையா அரிசி அம் களி துழவை - குற்றாத கொழியலரிசியை அழகினையுடைய களியாகத் துழாவியட்ட கூழை,

276. மலர் வாய் பிழாவில் புலர ஆற்றி - அகன்ற வாயையுடைய தட்டுப் பிழாவிலே உலரவாற்றி,

277-8. பாம்பு உறை புற்றின் குரும்பி எய்க்கும் பூ புறம் நல் அடை அளைஇ - பாம்புகிடக்கின்ற புற்றின்கட்கிடக்கும் புற்றாம்பழஞ் சோற்றையொக்கும் பொலிவுபெற்ற புறத்தினையுடைய நல்ல முளையையிடித்துச் சேர அதனை அதிலேகலந்து,

நெல்லடையும் பாடம்.

278-9. [தேம்பட, வெல்லையு மிரவும் மிருமுறை கழிப்பி :] தேம் பட இரு எல்லையும் இரு இரவும் முறை கழிப்பி - இனிமைபிறக்கும்படி இரண்டு பகலும் இரண்டிரவும் அரியாமல் வைத்து,

280-81. [வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த, வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி :]

வல் வாய் சாடியின் வழைச்சு அற விளைந்த - வலியவாயினையுடைய சாடியின்கண்ணே இளமையறும்படி முற்றின,

விரல் அலை அரியல் வெ நீர் நறு பிழி - விரலாலே அலைத்து அரிக்குந் தன்மையையுடைத்தாகிய வெவ்விய நீர்மையையுடைய நறியகள்ளை,

282. தண் மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவிர் - மிகவும் உலராத மீனைச்சுட்டதனோடே இளைத்த அளவிலே பெறுகுவிர் ;

ஆற்றி (276) அளைஇக் (278) கழிப்பி (279) விளைந்த (280) பிழி (281) யென்க.

1 சீவக. 804.

குடிவயிற் சேப்பின் (274) பிழியைப் (281) பெறுகுவிரெனமுடிக்க.

283. பசு ஊன் பெய்த சுவல் பிணி பைந்தோல் - செவ்வியான இறைச்சியிட்டுவைத்த தோளிடத்தே கோத்து நாற்றின பசியதோலினை யுடைய,

என்றது, தூண்டிலிற்கோக்கும் இரையிட்டுவைக்குந் தோற்பையை.

284. கோள் வல் பாண் மகன் - மீனைத் தப்பாமற்பிடிக்கவல்ல பாண்சாதியிற்பிறந்தவன்,

284-7. [தலைவலித் தியாத்த, நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண் கொளீஇக், கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப், பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை :]

நெடு கழை தலை வலித்து யாத்த நாண் தூண்டில் கொளீஇ பொதி இரை - நெடிய மூங்கிற்கோலைத் தலையிலேவலித்துக்கட்டின கயிற்றி டத்தே தூண்டிலைக் கொளுத்தி அதனை மறையப் பொதிந்த இரையை,

கொடு வாய் இரும்பின் மடி தலை புலம்ப நடுங்க கதுவிய போழ் வாய் வாளை - வளைந்த வாயினையுடைய தூண்டிலினது மடித்ததலை இரை யின்றித் தனிக்கும்படியாகக் கயிறுநடுங்க அவ்விரையைக் கௌவி அகப் படாதுபோன அங்காந்தவாயையுடையவாளைமீன்,

288-9. நீர் நணி பிரம்பின் நடுங்கு நிழல் வெரூஉம் நீத்து உடை நெடு கயம் - நீர்க்குஅணித்தாய்நின்ற பிரம்பினது காற்றுலைசையும் நிழலை நீரிற்கண்டு அஞ்சும் பெருக்கினையுடைய நெடியகுளத்திலே,

289-90. தீ பட மலர்ந்த கடவுள் ஒள் பூ அடைதல் ஓம்பி - நெருப்பின்றன்மை நீரிலே யுண்டாகப்பூத்த கடவுள்சூடுதற்குரிய ஒள்ளிய தாமரைப் பூவைப் பறித்துமுடித்தலைப் பரிகரித்து,

291-2. [உறைகான் மாறிய வோங்குயர் நனந்தலை, யகலிரு வானத்துக் குறைவி லேய்ப்ப :]

ஓங்கு உறை கால் மாறிய உயர் அகல் இரு வானத்து குறை வில் ஏய்ப்ப - ஓங்குகின்ற துளி கால்விழுதல்தவிர்ந்த உயர்ச்சியையுடைய அகன்ற பெரிய வானத்திடத்துக் குறைவில்லாகிய இந்திரவில்லை யொப்ப,

293-4. [அரக்கிதழ்க் குவளையொடு நீல நீடி, முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கை :] அரக்கு இதழ் குவளையொடு நீலம் நீடி முரண் பூ மலிந்த முதுநீர் நனை தலை (291) பொய்கை - சாதிலிங்கம்போன்ற இதழை யுடைய குவளையோடே நீலப்பூவும்வளர்ந்து ஒன்றற்கொன்று நிறம் மாறு படுதலையுடைய எனைப் பூக்களும் மிக்க முதிய நீரையுடைத்தாகிய அகன்ற இடத்தை யுடைய பொய்கைகளிடத்தே,

295-6. குறுநர் இட்ட கூம்பு விடு பல் மலர் பெரு நாள் அமயத்து பிணையினிர் கழிமின் - பறிப்பார் நுங்களுக்கிட்ட குவிதல் நெகிழ்ந்த பலபூக்களைப் பெரிதாகிய நாட்காலத்தே சூடிப்போமின்;

வாளை (287) வெரூஉம் (288) கயத்திலே மலர்ந்த (289) பூவை ஓம்பிக் (290) குறைவிலேய்ப்பப் (292) பூமலிந்த பொய்கைகளிடத்தே (294) குறுநரிட்டமலரைப் (295) பிணையினிர்கழிமினெனமுடிக்க.

297. செழு கன்று யாத்த சிறு தாள் பந்தர் - வளவிய கன்றைக் கட்டின சிறியகால்களையுடைய பந்தரினையும்,

298. [பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்:]

பைஞ்சேறு மெழுகிய நல் நகர் - ஆப்பியான் மெழுகிய நன்றாகிய அகங்களையும்,

படிவம் - தாம் வழிபடுந்தெய்வங்களையுமுடைய உறைபதி (301) யென்க.

299. மனை உறை கோழியொடு ஞமலி துன்னாது - மனைகளிலே தங்குங் கோழிகளுடனே நாயுஞ்சேராமல்,

300. வளை வாய் கிள்ளை மறைவிளி பயிற்றும் - வளைந்தவாயினையுடைய கிளிக்கு வேதத்தின் ஓசையைக் கற்பிக்கும்,

301. மறை காப்பாளர் உறை பதி சேப்பின் - வேதத்தைக் காத்தற்றொழிலைச் செய்வார் இருக்கின்ற ஊரிடத்தே தங்குவீராயின்,

துன்னாமல் (299) உறையும்பதியென்க.

302. பெரு நல் வானத்து வடவயின் விளங்கும் - பெரிய நன்றாகிய விசும்பிடத்து வடதிசைக்கண்ணே நின்றுவிளங்கும்,

303. சிறுமீன் புரையும் கற்பின் - அருந்ததியையொக்குங் கற்பினையும்,

நறு நுதல் - நறிய நுதலினையுமுடைய,

304. வளை கை மகடூஉ வயின் அறிந்து அட்ட - வளையையுடையவாகிய கையையுடைய பார்ப்பனி பதமறிந்து அட்டனவற்றை,

என்றது பாற்சோறு பருப்புச்சோறு முதலியவற்றை.

305. சுடர் கடை - ஞாயிறுபட்ட காலத்தே,

பறவை பெயர் படு வத்தம் - பறவையினது பெயரைப்பெறுநெல்லு,

என்றது, இராசான்னமென்னும் பெயர்பெறுகின்ற நெல்லென்றவாறு. ஆகுதி பண்ணுதற்கு இந்தநெல்லுச்சோறே சிறந்ததென்று இதனைக்கூறினார். இனி மின்மினி நெல்லென்பாருமுளர்; இப்பெயர் வழக்கின்மையும் ஆகுதிக்குச் சிறவாமையுமுணர்க.

306-8. [சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத், துருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து, கஞ்சக நறுமுறி யளைஇ:] மாதுளத்து பசு காய் கறி கலந்து கஞ்சகம் நறு முறி அளைஇ சேதா நறு

மோர் வெண்ணெயின் உருப்பு உறு போழொடு - 1 கொம்மட்டிமாதுளை யினுடைய பசியகாய் மிளகு பொடிகலக்கப்பட்டுக் கருவேம்பினது நறிய இலை அளாவப்பட்டுச் சிவந்தபசுவினது நறியமோரின்கண்எடுத்த வெண் ணெயின்கண்ணேகிடந்து வேகலின் வெம்மையுறுகின்ற வகிரோடே,

308 - 10. [பைந்துணர், நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்த்த தகை மாண் காடியின் :] நெடு மரம் கொக்கின் பைந்துணர் நறு வடி விதிர்த்த தகை மாண் காடியின் - நெடிய மரமாகிய மாவினது பசிய கொத்திடத்து நறிய வடுவினைப் பலவாகப்போகட்ட அழகுமாட்சிமைப் பட்ட ஊறுகறியோடே,

310. வகைபட பெறுகுவிர் - சோற்றின்கூறுகளுண்டாகப் பெறு குவிர் ;

சேப்பின் (301) மகடூஉ (304) வத்தத்தானுண்டான அரிசியை (305) அட்டனவற்றைக் (304) சுடர்க்கடையிலே (305) போழோடே (307) காடியோடே பெறுகுவிரென்க.

311 - 2. வண்டல் ஆயமொடு உண்துறை தலைஇ புனல் ஆடும் மக ளிர் இட்ட பொலங்குழை - விளையாட்டினையுடைய திரள்களோடே நீருண்ணுந் துறையிலேகூடி நீராடுகின்றமகளிர் போகட்டுப்போன பொன்னாற்செய்த மகரக்குழையினை,

313. இரை தேர் மணி சிரல் இரை செத்து எறிந்தென - இரை யைத்தேடுகின்ற நீலமணிபோலும் சிச்சிலி தனக்கு இரையாகத்துணிந் தெடுத்ததாக,

314. புள் ஆர் பெண்ணை புலம்பு மடல் செல்லாது - பறவைகள் நிறைந்திருக்கின்ற பனையில் தனித்தமடலிற்போகாமல்,

315 - 6. கேள்வி அந்தணர் அரு கடன் இறுத்த வேள்வி தூணத்து அசைஇ - நூற்கேள்வியையுடைய அந்தணர் செய்தற்கரிய கடனைச் செய்து முடித்த யாகசாலையிடத்துநட்ட யூபத்தின்மேலேயிருந்து,

316 - 7. [யவன, ரோதிம விளக்கி னுயர்மிசைக் கொண்ட :] யவ னர் உயர்மிசை கொண்ட ஓதிம விளக்கின் - சோனகர் கூம்பின்மேலிட்ட அன்ன விளக்குப்போல,

ஈண்டுக் 2 காரன்னமென்றுணர்க.

---

1 "மாதுளங்காய் - கொம்மட்டிமாதுளங்காய் ; புளித்தகறி ஆக்கு தற்குக் கொம்மட்டி மாதுளங்காய் சிறக்கும்" சிலப். கரு : 52, அரும்பத.

2 "காரன்ன முண்மையின், வெள்ளையன்னம் இனஞ் சுட்டிய பண்பு" (சீவக. 930, ந.) என்பதனாலும், "பள்ள நீர்குடைந் தஞ் சிறைப் பாசிபோர்த் தெழுந்த, வெள்ளை யன்னத்தைக் காரன. மெனப் பெடை வீழ்ந்த, உள்ள மீட்டலமர"(திருவிளை. நகரச். 12) என்பதனாலும்.

318. வைகுறும் மீனின் - இராக்காலம் விடிதற்குக் காரணமான [1] வெள்ளியாகிய மீன்போல,

பைபய தோன்றும் - ஒளி விட்டுவிளங்காது தோன்றும்,

319. [2] நீர்ப்பெயற்று எல்லை போகி - நீர்ப்பெயற்றென்னும் ஊரி னெல்லையிலேபோய்,

அசைஇ (316) விளக்கின் (317) மீனிற்றோன்றும் (318) நீர்ப்பெயற் றென்க.

319 - 21. பால் கேழ் வால் உளை புரவியொடு வடவளம் தரூஉம் நாவாய் சூழ்ந்த நளி நீர் படப்பை - பால்போலும் வெள்ளியநிறத்தினையும் வெள்ளிதாகிய தலையாட்டத்தினையுமுடைய மேற்றிசைக்கணுளவாகிய குதிரைகளுடனே வடதிசைக்கணுளவாகிய நுகரப்படும்பொருள்களைக் கொண்டுவந்துதரும் மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கப்பட்ட பெருமையை யுடைய கடற்பக்கத்தினையும்,

322 - 4. [மாட மோங்கிய மணன்மலி மறுகிற், பரதர் மலிந்த பல் வேறு தெருவிற், சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பின் :]

மணல் மலி மறுகின் சிலதர் காக்கும் சேண் உயர் வரைப்பின் - மணல் மிக்க தெருவுகளில் தொழில்செய்வார் காக்கப்படும் மிகவுமுயர்ந்த பண்டசாலைகளையும்,

தொழில்செய்வார் - கம்மகாரர்.

பரதர் மலிந்த மாடம் ஓங்கிய பல்வேறு தெருவின் - [3] பரதவர்மிக்க மாடங்களுயர்ந்த பலவாய் வேறுபட்ட தெருக்களையும்,

325 - 7. நெல் உழு பகட்டொடு கறவை துன்னு மேழகம் தகரோடு எகினம் கொட்கும் கூழ் உடை நல் இல் - நெல்லினைப் பெறுதற்கு உழுகின்ற எருதுகளுடனே பசுக்கள் நெருங்காவாய் மேழகக்கிடாயோடே நாயும் சுழன்று திரியும் சோறுடைய நன்றான அகங்களையுமுடைய பட்டினம் (336),

இது [4] திமிலர்முதலியோரிருப்புக் கூறிற்று.

327. [கொடும்பூண் மகளிர் :]

"காரணங் குலாய்ப்படிந்த காட்சியொப்ப" (காஞ்சிப். கழுவாய்ப். 16) என்பதனாலும் காரன்னமுண்மை அறியப்படும்.

1 பி - ம். 'வெள்ளியதாகிய மீன்'

2 மதுராந்தகம் தாலூகாவில் நீர்ப்பேர் என வழங்கும் ஒருருண்டு: அஃது இதுவாக விருக்கலாமென்று தோற்றுகின்றது.

3 "விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமும்" சிலப். சு: 142.

4 திமிலர் : "வன்கைத் திமிலர்" மதுரைக். 319; திமில்-மீன்படகு.

உயர் நிலை (332) வான் தோய் மாடத்து (333) கொடு பூண் மகளிர் - உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகத்தைத்தீண்டும் மாடத்துறையும் வளைந்த பேரணிகலங்களையுடைய மகளிர்,

328-9. கொன்றை மெல் சினை பனி தவழ்பவை போல் பைங் காழ் அல்குல் நுண் துகில் நுடங்க - கொன்றையிடத்து அரும்புகளை யுடைய மெல்லிய கொம்புகளிலே பனிமாசுகிடந்து தவழ்கின்றவை போலப் பசிய மணிகள்கோத்த வடங்களையுடைய அல்குலிற் கிடக்கின்ற மெல்லிய துகிலசைய,

330-31. மால் வரை சிலம்பின் மகிழ் சிறந்து ஆலும் பீலி மஞ்ஞை யின் இயலி - பெருமையையுடைய பக்கமலையிலே மனவெழுச்சிமிக்கு ஆர வாரிக்கும் தோகையையுடைய மயில்போலே உலாவி,

331-3. [கால, தமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை, வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇ :]

தமனியம் கால பொன் சிலம்பு ஒலிப்ப வரி பந்து அசைஇ - பொற் பூண்களையுடைய கால்களிடத்தனவாகிய பொன்னாற்செய்த சிலம்புகள் ஆரவாரிப்ப நூலால்வரிதலையுடைய பந்தையடித்து இளைத்து,

334-5. [கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய, முத்த வார்மணற் பொற்கழங் காடும் :] முத்தம் வார் மணல் பைபய கை புனை குறு தொடி தத்த பொன் கழங்கு ஆடும் - முத்தையொத்த வார்ந்தமணலிலே மெத் தென மெத்தெனக் கையிற்புனைந்த குறுந்தொடியசையப் பொன்னாற் செய்த கழலைக்கொண்டு விளையாடும்,

மாடத்து (333) மகளிர் (327) நுடங்க (329) இயலி (331) ஒலிப்ப (332) அசைஇப் (333) பின்னர்க் கழங்காடும் (335) பட்டினம் (336) என்க ;

இது வணிகரிருப்பைக் கூறிற்று.

படப்பையினையும் (321) வரைப்பினையும் (324) தெருவினையும் (322) இல்லினையு (327) முடைய பட்டின (336) மென்க.

336. பட்டினம்மருங்கின் அசையின் - பட்டினத்திடத்தே இளைப் பாறுவீராயின்,

முட்டு இல் - முட்டில்லையாக,

பெறுகுவி (345) ரெனமேலே கூட்டுக.

337. பைங்கொடி நுடங்கும் பலர் புகு வாயில் - பசியகொடி களசையும் கள்ளுண்பார் பலரும் புகுகின்ற வாயிலிடத்து,

338. [செம்பூத் தூய செதுக்குடை முன்றில் :] தூய செ பூ செதுக்கு உடை முன்றில் - தெய்வத்திற்குத்தூவின செய்ய பூவாடலை யுடைய முற்றத்தில்,

339-40. கள் அடு மகளிர் வள்ளம் நுடக்கிய வார்ந்து உகு சில் நீர் வழிந்த குழம்பின் - கள்ளைச்சமைக்கின்ற மகளிர் வட்டில் கழுவின வடிந்துசிந்தும் சிலநீர் பலகால்வடிதலின் நிறைந்துவழிந்த குழம்பிடத்து,

341-2. [1] ஈர் சேறு ஆடிய இரு பல் குட்டி பல் மயிர் பிணவொடு - ஈரத்தையுடைய சேற்றை யளைந்த கரிய பலவாகிய குட்டிகளையுடைய பலவாகிய மயிர்களையுடைய பெண்பன்றிகளுடனே,

வாயிலிடத்து (337) முற்றத்துக் (338) குழம்பிடத்துச் (340) சேறு (341) என்க.

342. [2] பாயம் போகாது - புணர்ச்சியைக் கருதுங்கருத்தாற் போகாமல்,

என்றது புணரிற் கொழுப்பின்றாமென்றவாறு.

343. நெல் மா வல்சி தீற்றி - நெல்லையிடித்த மாவாகிய உணவைத் தின்னப்பண்ணி,

343-5. பல் நாள் குழி நிறுத்து ஓம்பிய குறு தாள் ஏற்றை கொழு நிணம் தடியொடு - பலநாள் குழியிலே நிறுத்திப் பாதுகாத்த குறியகாலையுடைய ஆண்பன்றியின் கொழுவிய நிணத்தையுடைய தசையோடே,

[3] "ஆற்றலொடு புணர்ந்த வாண்பால்" ஆதலின் ஏற்றையென்றார்.

345. கூர் நறா பெறுகுவிர் - களிப்புமிக்க கள்ளைப் பெறுகுவிர்;

போகாமற் (342) குழிநிறுத்து (344) என்க.

அசையிற் (336) பெறுகுவிரென்க.

346-8. [வான மூன்றிய மதலை போல, வேணி சாத்திய வேற்றருஞ் சென்னி, விண்பொர நிவந்த வேயா மாடத்து :]

வானம் ஊன்றிய மதலை போல (346) விண் பொர நிவந்த மாடம் (348) - ஆகாயத்தே திரிகின்ற தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றி வைத்த ஒருபற்றுக்கோடு போல விண்ணைத்தீண்டும்படி ஓங்கினமாடம்,

சாத்திய ஏணி ஏற்று அரு சென்னி (347) மாடம் (348) - தன்னிடத்துச்சாத்திய ஏணியால் ஏறுதற்கரிய தலையினையுடையமாடம்,

[4] வேயா மாடத்து (348) - கற்றைமுதலியவற்றால் வேயாது சாந்திட்ட மாடத்திடத்தே,

1 "விழியாக் குருளை மென்முலை சுவைப்பக், குழிவயிற் றுஞ்சுங் குறுந்தாட் பன்றி" தொல். மரபு. சூ. 8, பேர். மேற்.

2 பாயம் - மனத்திற்கு விருப்பமானதென்று பொருளெழுதுவர்; குறிஞ்சி. 58.

3 "ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லாம், ஏற்றைக் கிளவி யுரித்தென மொழிப" தொல். மரபு. சூ. 49.

4 "வேயாமாடம் - தட்டோடிட்டுச் சாந்துவாரப்பட்டன" சிலப். ௫: 7, அரும்பத.

349. இரவில் மாட்டிய இலங்கு சுடர் - இராக்காலத்தே கொளுத்தின விளங்குகின்ற விளக்கு,

349 - 51. [ஞெகிழி, யுரவுநீ ரழுவத் தோடு 1 கலங் கரையுந், துறை :] உரவு நீர் அழுவத்து ஞெகிழி ஓடு கலம் கரையும் துறை - உலாவுகின்ற கடற்பரப்பிலேவந்து நாம்சேரும் துறையன்றென்று நெகிழ்ந்து வேறொருதுறைக்கண் ஓடுங்கலங்களை இது நம்துறையென்று அழைக்குந் துறை,

இனி, ஞெகிழியைக் கடைக்கொள்ளியாக்கி அதனை எரித்துக் கொளுத்தின இலங்குசுடரென்றுமுரைப்பர்.

351. பிறக்கு ஒழிய போகி - பின்னேகிடக்கப்போய்,

351 - 3. [கறையடிக், குன்றுறழ் யானை மருங்கு லேய்க்கும், வண் டோட்டுத் தெங்கின் :]

குன்று உறழ் கறை அடி யானை மருங்குல் ஏய்க்கும் தெங்கின் - மலையோடு மாறுபடுகின்ற உரல்போன்ற அடியினையுடைய யானையின் உடம்பையொக்கும் சருச்சரையையுடைத்தாகிய தெங்கினுடைய,

353. [வாடுமடல் வேய்ந்த :]

வள் தோட்டு (353) வாடு மடல் வேய்ந்த - வளவிய 2 இலையினையுடைய உலர்ந்த 3 பழுத்தலை முடைந்து வேய்ந்த தனிமனை (355) யென்க.

354. மஞ்சள் முன்றில் - மஞ்சளையுடைய முற்றத்தினையும்,

மணம் நாறு படப்பை - மணம்நாறுகின்ற பூந்தோட்டங்களையுமுடைய,

355. தண்டலை உழவர் தனி மனை சேப்பின் - தோப்புக்குடிகளுடைய ஒப்பில்லாத மனைகளிலே தங்கின்,

356. [தாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம் :]

தாழ் கோள் பலவின் பழம் - தாழ்ந்த குலைகளையுடைய பலாவினது பழம்,

சூழ் சுளை பெரு பழம் - தின்பார் விரும்பிச்சூழும் சுளையையுடைய பெரிய பழத்தையும்,

357. 4 வீழ் இல் தாழை குழவி தீ நீர் - விழுதில்லாத தாழையாகிய தெங்கின் இளைதாய இனியநீரையும்,

---

1 கலங்கரைவிளக்கமென்னும்பெயர் ஈண்டு அறியற்பாலது.

2 தென்னையின் மட்டையையும் இலையென்றும் ஆன்றோர் வழங்குவர் ; " இலையார் தெங்கிற் குலையார் வாழையின், பாளைக் கமுகின் பழம் வீழ்சோலைப் பழன நகராரே " தே. திருஞா.

3 பழுத்தல் - பழுப்பு ; கீறி இதனால் முடையப்பட்டது கீற்று.

4 வீழில்தாழையென்பது தென்னைக்குவெளிப்படை ; மற்றொன்று " வீழ்த்தாட்டாழை " (நற். எ௮ : 4), " வீழ்தாழ் தாழை பூழுறு கொழு

[1] "பிள்ளை குழவி கன்றே போத்தெனக், கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே" என்றதனாற் [2] குழவித்தீநீரென்றார்.

358. கவை முலை இரு பிடி கவுள் மருப்பு ஏய்க்கும் - கவைத்த முலையையுடைய பெரிய பிடியினுடைய கவுளிடத்துக் கொம்புகளை யொக்கும்,

359. [குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழம் :] குலை கூனி முதிர் வாழை வெள் பழம் - குலைகள் தம்பெருமையாலே நிலத்தே தாழ வளைந்து முற்றின வாழையினது வெள்ளிய பழத்தையும்,

360 - 61. திரள் அரை பெண்ணை நுங்கொடு பிறவும் தீ பல் தாரம் முனையின் - திரண்ட அடியையுடைய பனையினது நுங்கோடே வேறும் இனிய பலபண்டங்களையும் வெறுக்கின்,

361 - 2. [சேம்பின், முளைப்புறம் :] முளை புறம் சேம்பின் - முளையை இடத்தேயுடைய சேம்பினது இலையோடே,

362. முதிர் கிழங்கு ஆர்குவிர் - முற்றின வள்ளிமுதலிய கிழங்கு களைத் தின்பீர் ;

சேப்பிற் (355) பழத்தையும் (356) நீரையும் (357) பழத்தையும் (359) நுங்கோடே (360) பலபண்டங்களையும்முனையிற் (361) கிழங்கார் குவிரென்க.

362 - 4. பகல் பெயல் மழை வீழ்ந்தன்ன மா தாள் கமுகின் புடை சூழ் தெங்கின் - பகற்பொழுதிலே பெய்தலையுடைய மழை கால்விழுந்தா லொத்த பெரிய தண்டினையுடைய கமுகுகளின் பக்கத்தே சூழ்ந்த தெங் கினுடைய,

364. முப்புடை திரள் காய் - மூன்றுபுடைப்பினையுடைய திரண்ட காய்,

பழுத்தால் அடி மூன்றாகப்புடைத்தல் அதற்கியல்பு. இனி மூப் புடைத்திரள் காயும் பாடம்.

365 - 6. ஆறு செல் வம்பலர் காய் பசி தீர சோறு அடு குழிசி இளக விழூஉம் - வழிச்செல்கின்ற புதியோர் தமது மிக்கபசி தீரும்படி சோற்றை ஆக்குகின்ற பானை அடுப்பினின்றும் அசைந்துவிழும்படி நிலத்தேவிழும்,

367. வீயா யாணர் வளம் கெழு பாக்கத்து - விடாத புதுவருவா யினையுடைய செல்வம்பொருந்தின பாக்கத்திடத்து,

368. பல் மரம் நீள் இடை போகி - பலமரங்கள்வளர்ந்த இடத் திலேபோய்,

---

முகை" (குறு. உஉஅ: 1), "தாழை வீழ்கயிற் றூசல்" (அகநா. உ0 : 6) எனக் கூறப்படுதல்காண்க.

1 தொல். மரபு. சூ. 24. 2 குழவித்தீநீர் - இளநீர்.

368 - 9. [நன்னகர், விண்டோய் மாடத்து விளங்குசுவ ருடுத்த :] விளங்கு சுவர் உடுத்த விண் தோய் மாடத்து நல் நகர் - விளங்குகின்ற மதில் சூழ்ந்த விண்ணைத்தீண்டும் மாடங்களையுடைய நன்றாகிய ஊர் களிலே,

370 - 71. 1 வாடா வள்ளியின் வளம் பல தரூஉம் நாடு பல கழிந்த பின்றை - வாடுங்கொடியினையுடைய வள்ளியல்லாத வள்ளிக்கூத்தின் வளப்பம் பலவற்றையுந் தருதற்குக்காரணமாகிய புறநாடுபலவற்றையும் போனபின்பு,

வளம்பலவென்றார், இக்கூத்து ஆண்பாற்கும்பெண்பாற்கும் பொது வாய் வருதலின்.

என்றது, சிறப்புடைநாடுகளைப்பாடித் தாழ்ச்சிபெற்ற இழிகுலத் தோருறையும் புறநாடுகளைப் பாடாமல்தொகுக்கின்றார், அவை புற நாடென்பதுதோன்ற அவர்கள் காண்டற்குரிய வள்ளிக்கூத்தினைக்கூறி அதனை வெளிப்படுத்தினார். இது, புறத்திணையியலில், 2 "வெறியறி சிறப்பு" என்னுஞ்சூத்திரத்து, 'வாடாவள்ளி' என்பதனாலும்; 3 "மண் டம ரட்ட மறவர் குழாத்திடை" என்னுமுதாரணத்தானும் உணர்க.

371 - 2. நீடு குலை காந்தள் அம் சிலம்பில் களிறு படிந்தாங்கு - நீண்ட பூங்கொத்துக்களையுடைய காந்தளையுடைய அழகிய பக்கமலையிலே யானை கிடந்தாற்போல,

373. பாம்பு அணை பள்ளி அமர்ந்தோன் ஆங்கண் - பாம்பணை யாகிய படுக்கையிலே துயில்கொண்டோனுடைய 4 திருவெஃக விடத்து,

---

1 "வாடாவள்ளி - வாடுங்கொடியல்லாத வள்ளிக்கூத்து; அஃது இழிந்தோர் காணுங் கூத்து. உ - ம். 'மண்டம.........பெரிது' இது பெண்பாற்குப் பெருவரவிற்று. இதனைப்பிற்கூறினார், வெறியறி சிறப் பன்மையானும் ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொதுவாவதல்லது அகத் திணைக்கண் வந்து பொதுவாகாமையும்பற்றி" (தொல். புறத். சூ. 5, ந.) என்பது இங்கே கூறிய செய்திகளை விளக்கும்.

2 தொல். புறத்திணையியல், சூ. 5.

3 "மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக், கண்ட முருகனுங் கண் களித்தான் - பண்டே, குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப், பிறமகள் நோற்றாள் பெரிது." ஷை ஷை ஷை மேற்.

4 திருவெஃகாவென்பது திருமாலினுடைய நூற்றெட்டுத் திருப் பதிகளுளொன்று. இது காஞ்சிப்பதியிலுள்ளது. இங்கே திருமால் சேஷ சயனத்திருக்கோலமுடையவராக எழுந்தருளியிருக்கின்றார்; "பாந்தட் பாழியிற் பள்ளி விரும்பிய, வேந்தனைச்சென்று காண்டும்வெஃகாவுளே" திவ். பெரியதிரு. ௧௦. 1 : 7.

காந்தளென்றதற்கேற்பப் பாம்பணையென மெலித்தார்.

374. 1 [வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர் :]

வெயில் நுழைபு அறியா பொதும்பர் - ஞாயிற்றின்கதிர் தோன்றிய காலத்தும் படுகின்றகாலத்துமுட்படச் சிறிதும் செல்லுதலறியாத பொதும்பர்,

குயில் நுழை பொதும்பர் - இலைநெருக்கத்தாலே குயில்கள் நுழைந்துசெல்லும் இளமரக்காவில்,

375 - 6. குறு கால் காஞ்சி சுற்றிய நெடு கொடி பசு இலை குருகின் புன்புறம் வரி பூ - குறிய காலினையுடைய காஞ்சிமரத்தைச்சூழ்ந்த நெடியகொடியினையும் பசிய இலையினையுமுடைய குருக்கத்தியினுடைய 2 புற்கென்றபுறத்தினையும் வரிகளையுமுடைய பூக்கள் உறைப்ப (379) வென்க.

377 - 8. கார் அகல் கூவியர் பாகொடு பிடித்த இழை சூழ் வட்டம் பால் கலந்தவை போல் - கரிதாகியசட்டியிலே அப்பவாணிகர் பாகுடனே வேண்டுவனகூட்டிச் சேர்க்கப்பட்ட நூல்போலச் சூழ்ந்துகிடக்கின்ற 3 அப்பம் பாலிலே கிடந்தவைபோல,

சட்டியிலே கிடந்த அப்பம் பின்பு பாலிலே கிடந்தவைபோல வென்க.

பிடித்த வட்டமென்க.

379. நிழல் தாழ் வார் மணல் நீர்முகத்து 4 உறைப்ப - நிறங்கிளர்கின்ற வார்ந்த மணலிடத்துக் குழிகளினின்றநீரிடத்தே மிகவிழும்படி,

உறைப்பவென்றதனைத் துளிப்பவென்றால் ஈண்டு ஒப்பன்மையான் உப்புறைப்ப என்றாற்போலக்கொள்க.

380. புனல் கால் கழீஇய பொழில் தொறும் - நீர் பெருகிய காலத்தே ஏறிய இடத்தைத் தூய்தாக்கிப்போன பொழில்கடோறும்,

என்பதனால், முன்பு நீர்நின்றுபோகலிற் 5 பூத்தவென்றார்.

380 - 82. திரள் கால் சோலை கமுகின் சூல் வயிறு அன்ன நீலம் பைங்குடம் தொலைச்சி - திரண்ட தண்டினையுடைய சோலையிடத்துநிற்

1 "விரிகதிர்ச் செஞ்ஞா யிற்றின் வெயில்புகாப் பொதும்பர் தோறும்" சீகாளத்திப். கண்ணப்பச். 66.

2 புற்கென்ற - பொலிவிழந்த.

3 அப்பம் - இப்பொழுது இடியப்பமென்று வழங்கும் ஒருவகைச் சிற்றுண்டி.

4 உறைப்பு மிகுதியைக்குறித்தல்; "ஓதுகாத லுறைப்பி னெறிநின்றார்" பெரிய. திருக்கூட்டச். 7.

5 பூத்தவென்றது குருக்கத்தி பூத்தமையைக் குறித்தபடி.

கும் கமுகினுடைய சூற்கொண்ட வயிற்றையொத்த 1 பச்சைக்குப்பிகளை உண்டு 2 போக்கி,

382-3. நாளும் பெரு மகிழ் இருக்கை மரீஇ - நாடோறும் பெரிய மகிழ்ச்சியையுடைய இருப்பை மருவி,

383-4. சிறு கோடு குழவி திங்கள் கோள் நேர்ந்தாங்கு - சிறிய கோட்டையுடைய 3 இளைதாகிய பிறையைச் செம்பாம்பு தீண்டினாற் போல,

இஃது 4 இல்பொருளுவமை.

385. சுறவுவாய் அமைத்த சுரும்பு சூழ் சுடர் நுதல் - மகரவாயாகிய தலைக்கோலத்தைச் சேர்த்தின சுரும்புகள்சூழும் ஒளியையுடைய நுதலினையும்,

386. 5 நறவு பெயர்த்து அமைத்த நல் எழில் மழை கண் - கள்ளினை உண்டுபொருந்திய நன்றாகிய அழகினையுடைய குளிர்ச்சியையுடைத்தாகிய கண்ணையுமுடைய,

வள்ளத்தினறவைத் தம்முள்ளே ஆக்கினமையிற் பெயர்த்தென்றார்.

387. 6 மடவரல் மகளிரொடு பகல் விளையாடி - மடப்பம் தோற்றுதலையுடைய மகளிரோடே பகற்பொழுது விளையாடி,

---

1 பச்சைக் குப்பிகளிலிருந்த கள்ளை உண்டார்களென்பது கருத்து. கள்ளைக் குப்பியிலே இட்டுவைத்தல், "கள்ளி னிரும்பைக் கலஞ்செல வுண்டு" (மதுரை. 228) என்பதனாலும், 'கள்ளினையுடையவாகிய பெருமையினையுடைய குப்பிகள் வற்றும்படியாகக் கள்ளினையுண்டு' என்னும் அதன் உரையாலும் உணரப்படும்.

2 பி-ம். 'நோக்கி'

3 இளைதாகிய - இளையதாகிய; "இளைதாக முண்மரங் கொல்க" திருக்குறள். 879.

4 பிறையைப் பாம்பு தீண்டுதலின்மையின் இங்கே இல்பொருளுவமை யாயிற்று; "இளம்பிறை யாயக்காற் றிங்களைச் சேரா, தணங் கருந் துப்பி னரா" (நாலடி. 241) என்பது இதனை வலியுறுத்தும்.

5 நறவம்பூவினிதழை மகளிர்கண்ணுக்கு உவமை கூறுதலும் பண்டை வழக்கமாதலால், நறவுப்பெயர்த்தமைத்த வென்பதற்கு நறவம் பூவினிதழைப் பெயர்த்தமைத்தாற்போன்ற வென்று பொருள் கொள்ளுதலுமாம்; "பேர்மகிழ் செய்யும் பெருநறாப் பேணியவே, கூர்நறா வார்ந்த வள் கண்", "நயவரு நறவிதழ் மதருண்கண்" (பரி. எ: 63-4, அ: 75), "நறவின், சேயித ழனைய வாகிக் குவளை, மாயிதழ் புரையு மலிர் கொளீரிமை" (அகநா. கக: 9-11) என்பவையும் இதனை வலியுறுத்தும்.

6 "மடவரல் வள்ளியொடு" (முருகு. 102); "மடவரல் - மடப்பம்" புறநா. அக: 2, உரை.

388 - 9. பெறற்கு அரு தொல் சீர் துறக்கம் எய்க்கும் பொய்யா மரபின் பூ மலி பெரு துறை - பெறுதற்கரிய பழமையையுடைத்தாகிய புகழினையுடைய துறக்கத்தையொக்கும் தப்பாமல் நீர்வருமுறைமையினை யுடைய பூ மிகுகின்ற பெரிய துறையிடத்தே,

துறை, நுகர்பொருள்குறைவின்மையின், துறக்கமேய்க்குமென்றார்.

390. செவ்வி கொள்பவரோடு அசைஇ - இளவேனிற்செவ்வியை நுகர்வாரோடு இளைப்பாறி,

390 - 91. அவ்வயின் அரு திறல் கடவுள் வாழ்த்தி - அத் [1] திரு வெஃகாவணையில் அரியதிறலினையுடைய திருமாலை வாழ்த்தி,

391 - 2. [சிறிதுநுங், கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழி மின் :] நும் கரு கோடு இன் இயம் சிறிது இயக்கினிர் கழிமின் - நும் முடைய கரிய தண்டினையுடைய இனிய யாழைச் சிறிது வாசித்து அவ் விடத்து நின்றும் போமின் ;

ஆங்கட் (373) பொதும்பர்க் (374) குருகின்பூ (376) உறைப்பக் (379) கழீஇய பொழிலொறும் (380) மகளிரோடே பகல்விளையாடிப் (387) பெருந்துறைச் (389) செவ்விகொள்பவரோடசைஇ (390) நீலப் பைங்குடந் தொலைச்சி (382) மரீஇக் (383) கடவுள்வாழ்த்தி (391) இயக்கினிர் கழிமினென முடிக்க.

393 - 6. [காழோ ரிகழ்பத நோக்கிக் கீழ, நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளங், கடுஞ்சூன் மந்தி கவருங் காவிற், களிறுகத னடக்கிய வெளிறில் கந்தின் :]

[2] வெளிறு இல் கந்தின் கதன் அடக்கிய களிறு கீழ நெடு கை யானை - * * * களுந்தின்கின்ற,

நெய் மிதி கவளம் - நெய்யை வார்த்து மிதித்த கவளங்களை,

[3] கடு சூல் மந்தி காழோர் இகழ் பதம் நோக்கி கவரும் காவின் -

---

[1] இது, பிரமதேவர் செய்த வேள்வியை அழிக்கவந்த வேகவதி நதியைத் தடுத்தற்பொருட்டுத் திருமால் பள்ளிகொண்டு அணை போன்று கிடந்த தலம் ; இங்கே கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திருமாலுக்கு வேகாஸேது என்பது திருநாமம். அது தமிழில் திரு வெஃகாவணையென வந்ததென்பர் ; இது திருவெஃகணை யெனவும் வழங்கும் ; " வேஃகணைக் கிடந்ததென்ன நீர்மையே " திவ். திருச் சந்த. 63.

[2] இந்தப் பாகத்துக்கு எந்தப்பிரதிகளிலும் உரைகிடைத்திலது ; வயிரமுள்ள கந்திற் கோபத்தையடக்கிய ஆண்யானைகளும், கீழே தாழ்ந்த நெடிய கைகளையுடைய பெண்யானைகளுந்தின்கின்றவென்க,

[3] கஙச - ஆம்பக்கம், 2-ம் அடிக்குறிப்பைப் பார்க்க.

மூற்பட்ட சூலையுடைய மந்தி 1 பரிக்கோலையுடையோர் நெகிழ்ந்தசெவ்வியைப்பார்த்து எடுத்துக்கொண்டுபோய்த்தின்னும் சோலையினையும்,

397. திண் தேர் குழித்த குண்டு நெடு தெருவின் - திண்ணியதேர்கள் பலகால் ஓடிக்குழித்த தாழ்ச்சியையுடைய நெடியதெருவினையும்,

398 - 400. [படைதொலை பறியா மைந்துமலி பெரும்புகழ்க், கடைகால் யாத்த பல்குடி கெழீஇக், கொடையுங் கோளும் :]

தொலைபு அறியா மைந்து மலி பெரு புகழ் படை (398) - கெடுதலறியாத வலிமிகுகின்ற பெரிய புகழினையுடைய படையினையும்,

2 கொடையும் கோளும் (400) கெழீஇ கால் யாத்த பல் குடி கடை (399) - பண்டங்களை விற்றலும் கொள்ளலும்பொருந்தி அவ்விடத்து நெருங்கின பல குடிகளையுடைய கடையினையுமுடைய மூதூர் (411.)

400 - 401. 3 வழங்குநர் தடுத்த அடையா வாயில் - உலகத்துக் கொடுப்பாரைக் கொடாமல் தடுத்த 4 பரிசிலர்க்கு அடையாத வாசலினையும்,

இவன் கொடைப்பெருமையாற் பிறர்தவிர்ந்தாரென்றார்.

401. மிளை சூழ் படப்பை - காவற்காடுசூழ்ந்த பக்கத்தினையும்,

402 - 4. [நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ், நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த், தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி :] நான்முக ஒருவன் பயந்த நீல் நிற உருவின் நெடியோன் கொப்பூழ் பல் இதழ் தாமரை பொகுட்டின் காண் வர தோன்றி - நான்குமுகத்தையுடைய ஒருவனைப்பெற்ற நீலநிறத்தையுடைத்தாகிய வடிவினையுடைய திருமாலுடைய திருவுந்தியாகிய பல இதழையுடைய தாமரையினது கொட்டைபோலே அழகுவிளங்கத்தோன்றி,

இதனாற் 5 பழமையும் சிறப்பும் தூய்மையுங் கூறினார்.

---

1 பரிக்கோற்காரர்-குத்துக்கோற்காரர் ; "கோலோர் - பரிக்கோற்காரர்", "காழோர் - பரிக்காரர்" (மதுரை. 381, 658, ந.) ; இவர்கள் யானை வலிசெய்யுமாயின் அதனைக் குத்துதற்கு அதன் முன் நடந்து செல்பவர்கள்; "எதிர்பரிக் கார ரோட" பெரிய. எறிபத்த. 12.

2 "கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைபடாது" பட். 210.

3 இதன் பொருள்நயம் பாராட்டத்தக்கது.

4 "நசையுநர்த் தடையா நன்பெரு வாயில்" (பொருந. 66 "அடையா நெடுங்கதவு மஞ்சலென்ற சொல்லு, முடையான் சடையப்பனார்" தனிப்.

5 பெருமையுமென்றும் பிரதிபேதமுண்டு.

405. [1] சுடுமண் ஓங்கிய நெடு நகர் வரைப்பின் - செங்கலாற்செய்யப்பட்டு உயர்ந்த புறப்படைவீட்டைச்சூழ்ந்த மதிலினையும்,

406 - 7. [இழுமென் புள்ளி னீண்டுகிளைத் தொழுதிக், கொழுமென் சினைய கோளி யுள்ளும் :] கொழு மெல் சினைய இழுமென் புள்ளின் ஈண்டு கிளை தொழுதி கோளியுள்ளும் - கொழுவிய மெல்லிய கொம்புகளிடத்தனவாகிய இழுமென்னும் ஓசையையுடைய புறவினுடைய திரளுகின்ற சுற்றத்திரட்சியையுடைய பூவாமற்காய்க்கும் மரங்களில் விசேடித்தும்,

408. பழம் மீ கூறும் பலா போல - பழத்தின் இனிமையால் மேலாகச் சொல்லும் பலாமரத்தையொக்க,

409 - 10. புலவு கடல் உடுத்த வானம் சூடிய மலர்தலை உலகத்துள்ளும் - புலால்நாற்றத்தையுடைய கடல்சூழ்ந்த [2] ஆகாயங்கவிந்த அகன்ற இடத்தையுடைய உலகத்து நகரில் விசேடித்தும்,

410 - 11. [3] பலர் தொழ விழவு மேம்பட்ட பழ விறல் மூதூர் - பலசமயத்தாரும் தொழும்படி எடுத்த விழாக்களாலே ஏனைநகர்களின் மேலான வெற்றியினையுடைய பழைய ஊராகிய,

412 - 3. [4] அ வாய் வளர் பிறை சூடி செ வானத்து அந்தி வாய் ஆடும் மழை கடுப்ப - அழகிய இடத்தையுடைய வளரும்பிறையைத் தன் மேலே சூடிச் செக்கர்வானமாகிய அந்திக்காலத்தே உலாவுகின்ற மேகத்தையொப்ப,

கொம்பும் யானையும் குருதியும் உவமிக்கப்படும்பொருள்.

414 - 7. [வெண்கோட் டிரும்பிணங் குருதி யீர்ப்ப, வீரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப், பேரமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர், ராராச் செருவி னைவர் போல :]

வெள் கோடு இரு பிணம் குருதி ஈர்ப்ப (414) பொருது (416) - வெள்ளிய கொம்பினையுடைய கரிய யானைப்பிணத்தைக் குருதியாகிய ஆறு இழுத்துக்கொண்டு போம்படி பொருது,

ஈரைம்பதின்மரும் களத்து அவிய (415) பெரு அமர் கடந்த (416) ஐவர் போல (417) - துரியோதனன் முதலிய நூற்றுவரும் களத்திலே படும்படி பெரிய போரைவென்ற தருமன் முதலியோரைப்போல,

---

[1] "சுடுமண் - ஓடு" சிலப். கச : 146, அடியார்.

[2] "வான்கவிந்த வையகமெல்லாம்" நாலடி. பொறை. 10.

[3] "பலர் புகழ் - எல்லாச்சமயத்தாரும் புகழும்" முருகு. 2, ந. பல சமயதெய்வங்களுக்கும் காஞ்சி இடமாகஇருத்தலின், பலரென்பதற்குப் பல சமயத்தாரென்று பொருள் செய்தனர் ; "பரசிவன் சத்தி குமரன்மால் புறத்தோர் பலரும்வீற் றிருப்பதப் பதியே" கந்த. நகர. 90.

[4] அ - அழகு : "அவ்விதழ் - அழகிய இதழ்" (நெடுநல். 41, ந.) ; "அச்சோலை - அழகிய சோலை" தக்க. 65, உரை.

[1]கொடுஞ்சி நெடு தேர் (416) ஆரா செருவின் ஐவர் (417) - முன்னே தாமரைமுகையினையுடைய நெடியதேரினையும் தொலையாத போரினையுமுடைய ஐவர்,

418. அடங்கா தானையோடு உடன்று மேல் வந்த - ஓரெண்ணின் கண் அடங்காத படையுடனே கோபித்துத் தன்மேல்வந்த,

419. ஒன்னா தெவ்வர் உலைவிடத்து ஆர்த்து - தன் ஏவலைப் பொருந்தாத பகைவர் தோற்றவிடத்தே வெற்றிக்களிப்புத்தோன்ற ஆரவாரித்து,

420 - 21. [கச்சி யோனே கைவண் டோன்றல், னச்சிச் சென்றோர்க் கேம மாகிய :] கை வள் தோன்றல் நச்சி சென்றோர்க்கு ஏமம் ஆகிய கச்சியோனே - கைவளப்பத்தையுடைய தலைவன், தன்பரிசிலைவிரும்பித் தன்பாற் சென்றோர்க்குப் பாதுகாவலாகிய காஞ்சீபுரத்தே யிருக் கின்றோன் ;

படப்பையினையும் (401) காவினையும் (395) வரைப்பினையும் (405) அடையாவாயிலினையும் (401) தெருவினையும் (397) கடையினை யும் (399) படையினையு (398) முடைய மூதூர் (411) என்க ;

காண்வரத்தோன்றிப் (404) பலாஅப்போல (408) விழவுமேம் பட்ட மூதூர் (411) என்க.

கைவண்டோன்றல் (420) ஐவர்போலக் (417) குருதியீர்ப்பப் (414) பொருது (415) ஆர்த்து (419) ஏமமாகிய (421) மூதூராகிய (411) கச்சி யிடத்தேயிருக்கின்றோன் (420) என்க.

422 - 3. [அளியுந் தெறலு மெளிய வாகலின், மலைந்தோர் தேஎ மன்றம் பாழ்பட :]

மலைந்தோர் தேஎம் மன்றம் பாழ்பட தெறலும் - தன்னுடனே

---

[1] "கொடுஞ்சி - தாமரைப்பூவாகப் பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது" (மதுரைக். 751 - 2, ந.) ; "நெடுந்தேர்க் கொடுஞ்சி பற்றி நின்றோன்" (அகநா. கக0 : 24 - 5), "நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்" (புறநா. எஎ : 5), "மணித்தேர்க் கொடுஞ்சி கையாற் பற்றி" (மணி. ச : 48) என்பவற்றாற் கொடுஞ்சி யென்பது தேரூர்பவர்கள் கையாற் பற்றிக் கொள்ளப்படுவதென்று தெரிகிறது.

[2] "செய்யார் தேஎந் தெருமரல் கலிப்ப" (பொருந. 134) ; "சிலைத்தா ரகல மலைக்குந ருளரெனிற், றாமறி குவர்தமக் குறுதி யாமவ, னெழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர், வாழக் கண் டன்று மிலமே" (புறநா. சுக : 14 - 7) ; "செற்றங்கொண் டாடிச் சிலைத்தெழுந்தார் வீந்தவியக், கொற்றங்கொண் டெஃகுயர்த்தான் கோ" பு. வெ. சஉ.

பொருதார் தேயத்திலூர்களின் மன்றுகள் மக்களில்லையாய்ப் பாழாம்படி அழித்தலும்,

424. [நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப :] நயந்தோர் தேஎம் நல் பொன் பூப்ப அளியும் (422) - [1] தன்னை விரும்பியிருந்தோர் தேயம் திருமடந்தை பொலிவுபெற்றிருப்ப அளித்தலும்,

422. எளிய ஆகலின் - தனக்கு எளியவாய் நடக்கையினாலே,

425. நட்பு கொளல் வேண்டி நயந்திசினோரும் - மலையலாகா தென்று உறவுகொள்ளுதலைவேண்டி அவன்றன்னைவிரும்பினவர்களும்,

426. துப்பு கொளல் வேண்டிய துணையிலோரும் - அவன் பகையைத்தெறும் வலியைத் தமக்குப் பெறவேண்டின வேறோர் உதவியில் லாதவர்களுமாய்,

427. கல் வீழ் அருவி கடல் படர்ந்தாங்கு - [2] மலையினின்றும்விழுகின்ற அருவி அம்மலையிலுள்ளபண்டங்களை வாங்கிக்கொண்டு கடலுக்குக் கொடுப்பதாகச் சென்றாற்போல,

428. பல் வேறு வகையின் பணிந்த மன்னர் - பலவாகிய வேறுபட்ட திறைகளின் கூறுபாட்டோடே சென்று வணங்கின அரசர்,

429 - 31. [இமையவ ருறையுஞ் சிமையச் செவ்வரை, வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப், பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கை :]

இமையவர் உறையும் சிமையம் செ வரை (429) விளங்கு சுடர் நெடு கோடு (430) - தேவர்களிருக்கும் உச்சியையுடைய சிவந்த மேருவினது விளங்குகின்ற ஒளியையுடைய நெடிய சிகரத்தினின்றும்,

பொன் கொழித்து இழிதரும் போக்கு அரு கங்கை (431) - பொன்னைக் கொழித்துக் குதிக்கும் மாக்கட்குக் [3] கடத்தலரிதாகிய கங்கையாகிய ஆற்றிலே,

வெள் திரை கிழித்த (430) கங்கை (431) - கடலிடத்து வெள்ளிய திரையைக் கிழித்துச்சென்ற கங்கை,

432. பெரு நீர் போகும் இரியல் மாக்கள் - பெரிய நீரைக்கடந்து போம் கெடுதலையுடையமாக்கள்,

---

1 "திருந்தடி பொருந்த வல்லோர், வருந்தக் காண்ட லதனினு மிலமே" புறநா. ௬௧ : 18 - 9.

2 "இனி மலையிற் பொருள்களை வாரிக்கொண்டு யாறு கடலை நோக்கிப் போனாற்போல அவ்விடத்துள்ள பொருள்களை வாரிக் கொண்டு வருகின்றேமென்றுமாம்" (மலைபடு. 51 - 2, ந.) என்று பின்னும் இவ்வாறே உவமையை விளக்குதல் காண்க.

3 "ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ" (கம்ப. குகப். 15.) என்று கங்கையைப்பற்றிக் கூறியது இங்கே கருதற்குரியது.

கெடுபட்டுப்போவார் ஒருவர்க்குமுன்னே ஒருவர் விரைந்துபோதலைக் கருதுவர்.

433. ஒரு மரம் பாணியில் தூங்கியாங்கு - விடுகின்ற தோணி யாகையினாலே அது வருங்காலம் பார்த்திருந்து தூங்கினாற்போல,

434-5. தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇ செவ்வி பார்க்கும் செழு நகர் முற்றத்து-கெடாத யானைமுதலியசெல்வங்களோடே நெருங்காநின்று திரண்டு காலம்பார்த்திருக்கும் வளவிய நகரின் முற்றத்தினையுடைய வியனகர் (440),

எளியவாகலின் (422) நயந்திசினோரும் (425) துணையிலோருமாய்ப் (426) பணிந்தமன்னர் (428) தூங்கியாங்குச் (433) செவ்வி பார்க்கும் முற்றமென்க,

436-7. பெரு கை யானை கொடு தொடி படுக்கும் கரு கை கொல்லன் - பெரிய கையினையுடைய யானைக்கு வளைந்துகிடக்கும் பூணைச் சேர்க்கும் வலிய கையினையுடைய கொல்லன்,

437-8. இரும்பு விசைத்து எறிந்த கூடம் திண் இசை வெரீஇ - இரும்பைக் கையை உரத்துக்கொட்டின கூடத்தெழுந்த திண்ணிய ஓசையை வெருவி,

438-40. [மாடத், திறையுறை புறவின் செங்காற் சேவ, லின்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர் :]

மாடத்து புறவின் செ கால் சேவல் இன் துயில் இரியும் நகர் - மாடத்திடத்துப் புறவினுடைய சிவந்த காலையுடைய சேவல் இனிய துயிலை நீங்கும் நகர்,

இறை உறை நகர் - இறைவன்இருக்கும் நகர்,

பொன் துஞ்சு வியல் நகர் - திருத்தங்குகின்ற அகலத்தையுடைய கோயிற்கண்ணே இருந்தோன் (447),

441-2. குணகடல் வரைப்பில் முந்நீர் நாப்பண் பகல் செய் மண்டிலம் பாரித்தாங்கு - கீழ்கடலாகிய எல்லையிடத்து [1] நிலத்தைப்

[1] "முந்நீர்.........பௌவம் - மூன்று நீர்மையையுடைய......... கடல்" (மதுரைக். 75-6, ந.), "நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையின், முந்நீர் ஆகுபெயர்" (சீவக. 5, ந.) என்று நச்சினார்க்கினியரும், "முந்நீர் - கடல் ; ஆகுபெயர் ; ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீரென இவை யென்பார்க்கு அற்றன்று ; ஆற்று நீர் மேனீராகலானும் இவ்விரண்டுமில்வழி ஊற்றுநீரும் இன்றாமாதலானும் இவற்றை முந்நீரென்றல் பொருந்தியதன்று ; முதிய நீரெனின், 'நெடுங்கடலுந் தன்னீர்மைகுன்றும்' என்பதனால் அதுவும் மேனீரின்றி அமையாமையின் ஆகாது ; ஆனால் முந்நீர்க்குப் பொருள் யாதோ வெனின், முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பது ; முச்செய்கை

படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்றுதொழிலையுடைய நீர்க்குநடுவே 1 பகற்பொழுதைச் செய்யுஞாயிறு தன்கிரணங்களைப்பரப்பித் தோன்றினாற்போல,

443 - 50. [முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி, யிடைத்தெரிந் துணரு மிருடீர் காட்சிக், கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத், துரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப், பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான், கொடுவரிக் குருளை கொளவேட் டாங்குப், புலவர் பூண்கட னாற்றி :]

இடை தெரிந்து உணரும் இருள் தீர் காட்சி (445) - நடுவுநிலையை ஆராய்ந்தறியும் மயக்கந்தீர்ந்த அறிவாலே,

2 முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் (443) வேண்டுப வேண்டுப அருளி (444) - முறைப்பாட்டை விரும்புவார்க்கும் காரியங்களை விரும்புவார்க்கும் அவரவர் விரும்புவனவற்றை விரும்புவனவற்றை அருளிச்செய்து,

புலவர் பூண் கடன் ஆற்றி (450) - புலவர்க்குப் பேரணிகலங்களையும் கொடுத்தற்குரிய பிறகலங்களையுங் கொடுத்து,

வேண்டினர்க்கு (444) கொடை கடன் இறுத்த கூம்பா உள்ளத்து (446) உரும்பு இல் சுற்றமோடு இருந்தோன் குறுகி (447) - வேண்டிவந்த பரிசிலர்க்குக் கொடையாகிய கடனை முடித்த குவியாத நெஞ்சத்தோடே கொடுமையில்லாத 3 மந்திரச் சுற்றத்தோடே இருந்தோனை அணுகி,

---

யாவன மண்ணைப் படைத்தலும் மண்ணை யழித்தலும் மண்ணைக் காத்தலுமாம்" (சீலப். கஎ உள்வரி, : 3, அடியார்.) எனப்பிறரு மெழுதுதல் காண்க ; "மும்முறை நீர்" (கம்ப. அதிகாயன். 21) என்பதும் இங்கே அறியத்தக்கது. "யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடைமையால், கடற்கு முந்நீரென்று பெயராயிற்று ; அன்றி முன்னீரென்றோதி, நிலத்திற்கு முன்னாகிய நீரென்றுமுரைப்ப" (புறநா. க : விசேட உரை) என்பது ஒரு சாரார் கொள்கை.

1 "பகற்கதிர் - பகற்பொழுதைச் செய்யுங் கிரணங்கள்" (பொருந. 135, ந.) ; "பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறு" (மதுரைக். 7) ; "காலை சூழ் செங்கதிர் : சூழல் - செய்தல்" (தக்க. 279, உரை) ; சூரியனுக்குப் பகலைச் செய்வோனென்னும் பொருள்படும் திவாகரன் என்னும் பெயருண்மையையும் அறிக.

2 முறைவேண்டுநர் - வலியரால் நலிவெய்தினோர் ; குறைவேண்டுநர் - வறுமையுற்றிரந்தார் ; 386 - ஆம் திருக்குறளுரையைப் பார்க்க.

3 "மந்திரச் சுற்றத் தாரும்" கம்ப. கும்ப. 5.

ஞாயிறுபோல இருளைக்கடிந்து முறைவேண்டுநர்க்கும் குறைவேண்டுநர்க்கும் வேண்டுவன வேண்டுவன முடித்துக்கொடுத்தலின், அதனை உவமித்தார்.

கடலைச் சுற்றத்திரட்சிக்கு உவமையாக்கலுமொன்று.

[1] பொறி வரி புகர் முகம் தாக்கிய வய மான் (448) கொடுவரி குருளை கொள வேட்டாங்கு (449) - ஒளியினையும் வரியினையுமுடைய யானையைப்பாய்ந்த வலியையுடைய சிங்கத்தினுடைய வளைந்தவரியினையுடைய குருளை அவ்வியானையின் மத்தகத்தைக் கொள்ள விரும்பினாற்போல,

450 - 52. பகைவர் கடி மதில் எறிந்து குடுமி கொள்ளும் வென்றி அல்லது - பகைவரது காவலையுடைய மதில்களையழித்து ஆண்டிருந்த அரசருடைய முடிக்கலமுதலியவற்றை வாங்கிக்கொண்டு வீரமுடிபுனையும் வெற்றியினை விரும்புதலல்லது,

இதனால், [2] "இகன்மதிற் குடுமிகொண்ட மண்ணுமங்கலம்" என்னுந்துறை கூறினார்; [3] குடுமிகொள்ளும் வென்றியெனவே மண்ணுமங்கலமாயிற்று.

452 - 4. வினை உடம்படினும் ஒன்றல் செல்லா உரவு வாள் தடகை கொண்டி உண்டி தொண்டையோர் மருக - அம்மதிலரசர் [4] சந்துசெய்தற்கு உடம்பட்டாராயினும் அதற்கு மனம் பொருந்துதல் நிகழாமைக்குக் காரணமாகிய உலகெங்கும் பரக்கும் வாளையுடைத்தாகிய பெருமையையுடைய கையினையும் பகைப்புலத்துக் கொள்ளையாகிய உணவினையுமுடைய [5] தொண்டையைச் சூடினோருடைய குடியிலுள்ளவனே,

455. மள்ளர் மள்ள - வீரர்க்கு வீரத்தைக்கொடுக்கின்றவனே,

மறவர் மறவ - கொடியோர்க்குக் கொடியவனே,

456. செல்வர் செல்வ - செல்வமுடையோர்க்கும் கொடுத்தலை விரும்புபவனே,

செரு மேம்படுந - போர்த்தொழிலிலே மிக்கவனே,

பெரும (461) - பெருமானே,

457 - 8. வெள் திரை பரப்பில் கடு சூர் கொன்ற பைம்பூண் சேஎய் பயந்த மா மோடு - வெள்ளிய திரையினையுடைய கடலிலே

---

1 பொறி - ஒளி: "கண்பொறி போகிய - கண்ணொளி மழுங்கிய" புறநா. கசுக : 13, உரை. 2 தொல். புறத். சூ. 13.

3 "குடுமிகொள்ளு மண்ணு மங்கலம்" கூர்ம.

4 சந்து செய்தல் - பொருத்துதல்.

5 தொண்டையைச் சூடிய வரலாற்றை, பெரும்பாண். 30 - 31-ஆம் அடிகளின் உரையிற் காணலாம்.

சென்று கடிய சூரனைக்கொன்ற பசிய பூணினையுடைய முருகனைப்பெற்ற பெருமையையுடைய வயிற்றினையும்,

459. துணங்கை அம் செல்விக்கு அணங்கு [1] நொடித்தாங்கு-பேய்களாடுந் துணங்கைக்கூத்தினையும் அழகினையுமுடைய இறைவிக்குப் பேய்மகள் சில [2] நொடி சொன்னாற்போல,

460 - 61. [தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி, வந்தேன் பெரும வாழிய நெடிதென :]

தண்டா ஈகை நின் பெரு பெயர் ஏத்தி வந்தேன் நெடிது வாழிய என - அமையாக்கொடையினையுடைய நின் பெரிய பெயருட் சிலவற்றைச் சொல்லிப் புகழ்ந்துவந்தேன், நெடுங்காலம் வாழ்வாயாகவெனச் சொல்லி,

462. இடன் உடை பெரு யாழ் முறையுளி கழிப்பி - தனக்குக் கூறுகின்ற இலக்கணங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய யாழை வாசிக்குமுறைமையிலே வாசித்து,

முறையுளி ; [3] உளி : பகுதிப்பொருள்விகுதி.

463. கடன் அறி மரபின் கைதொழூஉ பழிச்சி - முற்படக் கண்டக்காற் செய்யுங்கடனை அறிந்தமுறைமையோடே கையாற்றொழுது வாழ்த்தி,

464. நின் நிலை தெரியா அளவை - நின்னுடைய கலைகளெல்லாம் தெரிவதற்கு முன்னே,

அ நிலை - நீநின்ற அந்த நிலைதன்னிலே,

465. நாவல் அம் தண் பொழில் வீவு இன்று விளங்க - நாவலாற் பெயர்பெற்ற அழகினையுடைய குளிர்ந்த உலகமெல்லாம் கேடின்றாக விளங்கும்படி,

466. [4] நில்லா உலகத்து நிலைமை தூக்கி - யாக்கையும் செல்வமும் முதலிய நிலையில்லாத உலகத்திடத்து நிலைபேறுடைய புகழை நாம்பெறுதல் நன்றென்று ஆராய்ந்து,

467. அ நிலை அணுகல் வேண்டி - முற்படநின்ற சேய்நிலத்து நின்று தன்னை அணுகுதற்கு விரும்பியழைத்து,

---

1 "நொடித்தாங்கு - நோடிசொன்னாற்போல" கலி. அக : 8, ந. [2]"புதல்வரை மருட்டும் பொய்ந்நோடி பகரவும்" பெருங். க. 33 : 72.

3 "பழுதுளி ; உளி : பகுதிப்பொருள் விகுதி" மலைபடு. 153, ந.

4 "மன்னா வுலகத்து மன்னிய சீர்த்தஞ்சை வாணன்" (தஞ்சை. 21) ; "நிற்ப தேதுகொ ளீடிசை யொன்றுமே நிற்கும்" (வி. பா. நச்சுப். 57) ; பொருந. 176-ஆம் அடி உரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

467 - 8. நின் அரை பாசி அன்ன சிதர்வை நீக்கி - நின்னுடைய அரையிற்கிடந்த கொட்டைப்பாசியின் வேரையொத்த சிதரின சீரையைப்போக்கி,

469 - 70. [ஆவி யன்ன வவிர்நூற் கலிங்க, மிரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇ :] ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம் உடன் இரு பெரு ஒக்கலொடு ஒருங்கு உடீஇ - 1 பாலாவியையொத்த விளங்குகின்ற நூலாற்செய்த துகில்களைப் படிசேரக் கரிய பெரிய சுற்றத்தாரோடே சேர உடுக்கப்பண்ணி,

471 - 2. கொடு வாள் கதுவிய வடு ஆழ் நோன் கை வல்லோன் அட்ட பல் ஊன் கொழு குறை - வளைந்த அரிவாளைக்கொண்ட வடுவழுந் தின வலியையுடைத்தாகிய கையினையுடைய மடையனாக்கின பல இறைச்சியிற் கொழுவியதசைகளும்,

பலகாலும் அறுத்தலால், தழும்பிருந்தகையென்றார். கதுவுதல் - கைக்கொள்ளுதல்.

473 - 4. அரி செத்து உணங்கிய பெரு செ நெல்லின் தெரி கொள் அரிசி திரள் நெடு புழுக்கல் - நிறத்தால் ஞாயிற்றையொத்து உலர்ந்த பெரிய செந்நெல்லினுடைய பொறுக்கிக்கொண்ட அரிசியாலாக்கின திரண்ட 2 இடைமுரியாத சோறும்,

அரிசெத்தென்றதற்கு உவமையின்றாகவென்றுமாம்; இனி அரி செய்தென்று பாடமாயின் அரிதலைச்செய்தென்று கூறுக.

475. அரு கடி தீ சுவை அமுதொடு - பெறுதற்கரிய மிகுதியை யுடைய இனிய சுவையினையுடைய கண்டசருக்கரை முதலியவற்றோடே,

பிறவும் - கூறாதொழிந்தனவும்,

476. விருப்பு உடை மரபின் கரப்பு உடை அடிசில் - விருப்ப முடைத்தாகிய முறைமையினையுடைய தலையாப்புப் பரத்தலையுடைய அடிசிலை,

அமுதோடே (475) குறையும் (472) புழுக்கலும் (474) பிறவுமாகிய (475) அடிசிலைப் (476) பரப்பி (477) ஊட்டி (479) யென்க.

477 - 80. [மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி, மகமுறை மக முறை நோக்கி முகனமர்ந், தானு விருப்பிற் றானின் றூட்டி, மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கும் :]

மங்குல் வானத்து மீன் பூத்தன்ன வால் கலம் திங்கள் எய்க்கும் வால் கலம் மகமுறை பரப்பி - திசைகளையுடைய ஆகாயத்திடத்தே உடுக் கள் தோன்றினாற்போன்ற சிறிய 3 வெள்ளிக்கலங்களையும், திங்களை

1 "பாலாராவிப் பைந்துகில்" சீவக. 1094.

2 பொருந. 113 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

3 "மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியு, மமிழ்தன மரபி னூன்றுவை யடிசில், வெள்ளி வெண்கலத் தூட்டல்" புறநா. ௩௯௦ : 16 - 8.

யொக்கும் பெரிய வெள்ளிக்கலங்களையும் நம்முடைய பிள்ளைகளுக்கு இடையேபரப்பி,

எனவே தலைவராயினோர்க்குப் பொற்கலம் பரப்புவரென்றார்.

தான் முகன் அமர்ந்து ஆனு விருப்பின் மகமுறை நோக்கி நின்று ஊட்டி - தான் முகம்பொருந்தி அமையாத ஆசையுடனே நம்முடைய பிள்ளைகளைப் பார்த்து நின்று உண்ணப்பண்ணுவித்து,

481 - 2. ஆடு வண்டு இமிரா அழல் அவிர் தாமரை நீடு இரு பித்தை பொலிய சூட்டி - உலாவும் வண்டுகள் ஒலியாத நெருப்பிடத்தே கிடந்துவிளங்கின பொற்றாமரையை நீண்ட கரிய மயிரிடத்தே அழகு பெறச் சூட்டி,

பொற்றாமரை திங்களையொக்குமென்றல் பொருந்தாமையுணர்க.

483 - 4. உரவு கடல் முகந்த பருவ வானத்து பகல் பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு - பலவுஞ்சேர உலாவுகின்ற கடலிடத்தே முகந்த கூதிர்க்காலத்து மேகத்தினின்றும் பகற்காலத்தே பெய்தலையுடைத்தாகிய துளியின்கண்ணே மின் ஓடினாற்போல,

485 - 6. புனை இரு கதுப்பகம் பொலிய பொன்னின் தொடை அமை மாலை விறலியர் மலைய-கைசெய்த கரியமயிரிடம் அழகுபெறும்படி, பொன்னாற்செய்து சேரக் கட்டுதலமைந்த மாலையை விறல்பட ஆடுமகளிர் சூடாநிற்க,

487 - 9. [நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல், வளைகண்டன்ன வாலுளைப் புரவி, துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி :] நூலோர் புகழ்ந்த மாட்சிய துணை புணர் தொழில மால் கடல் வளை கண்டன்ன வால் உளை புரவி நால்கு உடன் பூட்டி - [1] குதிரைநூல் கற்றோர் புகழ்ந்த அழகினையுடையவாய்த் தனித்துத் தொழில்செய்யாமல் இனங்களோடேகூடிச் தொழிலையுடையவாய்க் கருமையையுடைய கடலிற் சங்கைக்கண்டாற்போன்ற வெள்ளிய கழுத்தின்மயிரையுடைய குதிரைகள் நான்கைச்சேரப்பூட்டி,

நான்கு நால்கெனப் பெயர்த்திரிசொல்.

490. அரி தேர் நல்கியும் அமையான் - பொன்னாற்செய்த தேரைச் தந்தும் கொடைமேல் விருப்பந்தவிரானாய்,

490 - 92. செரு தொலைத்து ஒன்னா தெவ்வர் உலைவிடத்து ஒழித்த விசும்பு செல் இவுளியொடு பசு படை தரீஇ - தம்முடன் வந்து

---

[1] குதிரையின் இலக்கணங்களைக் கூறும் **சாலிகோத்திரம்** என்று ஒரு நூலுண்டென்பது **தக்கயாகப்பரணி**, 665-ஆம் தாழிசை யுரையாலறியப்படுகின்றது; "உன்னய முதலாம் புரவிநூ லறிவோன்" (**வி. பா.** நாடுகரந்துறை. 21) என்பதனால் **உன்னய** மென்பதொருநூலு முண்மை பெறப்படும்.

பொருதோருடைய போர்களை மாளப்பண்ணித் தன் ஏவலைப் பொருந்தாத பகைவர் முதுகிட்டவிடத்து விட்டுப்போன ஆகாயத்தே செல்கின்ற குதிரைகளுடனே பசிய பொன்னாற்செய்த பக்கரைகளையுந்தந்து,

493. [அன்றே விடுக்குமவன் பரிசில் :] அவன் அன்றே பரிசில் விடுக்கும் - அவன் நீ சென்ற அற்றைநாளே இவையொழிந்த பரிசில்களையுந்தருவான் ;

493-4. இன் சீர் கின்னரம் முரலும் அணங்குடை சாரல் - இனிய தாளத்திலே கின்னரமென்னும் பறவைகள்பாடுந் தெய்வங்களையுடைய சாரலிடத்து,

495. மஞ்ஞை ஆலும் மரம் பயில் இறும்பின் - மயில்களாரவாரிக்கும் மரம்நெருங்கின இளமரக்காட்டினையுமுடைய,

496. கலை பாய்ந்து உதிர்த்த மலர் வீழ் புறவின் - முசுக்கலைகள் பாய்ந்து உதிர்த்த மலர்கள்சிந்தின காட்டினையும்,

497. மந்தி சீக்கும் மா துஞ்சும் முன்றில் - மந்திகள் அவ்விடத்துக் கிடந்த தூராலை வாரும் மானும்புலியுந் துயில்கொள்ளும் முற்றத்தே,

புறவினையும் (496) இறும்பினையும் (495) உடைய சாரலிடத்து (494) முன்றிலிலே (497) வேட்கு (499) மென்க.

498. செ தீ பேணிய முனிவர் - சிவந்ததீயைக் கைவிடாமற்காத்துப் போந்த இருடிகள்,

498-9. வெள் கோடு களிறு தரு விறகின் வேட்கும் - வெள்ளிய கொம்பினையுடைய களிறு முறித்துக்கொண்டுவந்த சமிதையாலே வேள்வியைச் செய்யும்,

மந்தி சீத்தலும், மாத் துஞ்சலும், களிறு விறகுதருதலும் இருடிகளாணையால் நிகழ்ந்தனவென்றுணர்க.

500- [ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே :]

ஒளிறு மலை - இவற்றால் விளங்குமலை,

இலங்கு அருவிய மலை - விளங்குகின்ற அருவிகளையுடையமலை,

மலைகிழவோன் - இச்சிறந்த மலையையாளும் உரிமையையுடையோன்.

புலவுவாய்ப்பாண (22), பெருவளனெய்தி (26) முகந்துகொண்டு (27) யாம் அவனூரினின்றும் வருகின்றேம் ; நீயிரும் (28) திரையற்படர்குவிராயின் (37) நின்னுள்ளஞ்சிறக்க (45) ; நின்னவலங்கெடுக (38) ; இரவல (45), அவனிலைகேள் (38) ; அவன்புலம் கொடியோரின்று (41) ; அதுவேயன்றி அப்புலத்தில் உருமுமுரறாது ; அரவும் தப்பா (42); மாவும் உறுகண்செய்யா; ஆகலின், ஆங்கு (43) அசைவுழி அசைஇத்

தங்கிச் (44) சென்மோ (45); அங்ஙனஞ்செல்லுங்கால் வில்லுடைவைப் பிற் (82) குரம்பையில் (88) எயிற்றியர் (94) தாங்களட்ட புழுக்கலையும் வாடூனையும் (100) எல்லிடைக்கழியுநர்க்கு ஏமமாகத் (66) தேக்கிலை யிலே குவிக்கையினாலே (104) அப்பதத்தைப் (105) பெருமகனாகிய (101) வரைநாடன் சென்னியமெனிற் (103) கடும்போடே மிகப்பெறு குவிர் (105); பின்னர் அருஞ்சுரமிறந்த அம்பர்க் (117) குறும்பிற் சேப் பின் (129) சொன்றியை (131) வறைகால்யாத்தது வயின்றொறும் பெறுகுவிர் (133); பின்னர்த் தூங்கா (146) முரண்டலை (147) யிருக்கை (146) கழிந்தபின்றைக் (147) குடிவயிற்சேப்பின் (166) மூரல் பாலொ டும் பெறுகுவிர் (168); பின்னர்ப் பறவையோர்க்கும் (183) புலத்தைப் போய்ச் (184) சீறூர்களிலே (191) வரகின் சொன்றியைப் (193) புழுக்கையட்டி (195) மூரலோடே பெறுகுவிர்; பின்னர் ஞாங்கர் (196) வன்புலமிறந்தபின்றை (206) மல்லற்பேரூர்மடியின் (254) வல்சியை (255) வாட்டொடும் பெறுகுவிர் (256); பின்னர்க்கரும்பின்றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின் (262); பின்னர் வலைஞர் குடிவயிற் சேப்பின் (274) பிழியைச் (281) சூட்டொடு பெறுகுவிர் (282); பின்னர்த் தீப் பட மலர்ந்த (289) பூவையோம்பிக் (290) குறூஉநரிட்டமலரைப் (295) பிணையினிர் கழிமின் (296); பின்னர் மறைகாப்பாளர் உறைபதிச்சேப் பின் (301) வத்தத்தாலுண்டான அரிசியை (305) வளைக்கைமகடூஉ வயி னறிந் தட்டனவற்றைச் (304) சுடர்க்கடையிலே (305) போழோடே (307) காடியோடே பெறுகுவிர் (310); பின்னர் நீர்ப்பெயற்றெல்லை போகிப் (319) பட்டினமருங்கினசையின் முட்டுப்பாடின்றாகக் (336) கொழுநிணத்தடியொடு கூர்நறாப்பெறுகுவிர் (345); பின்னர்த் துறை பிறக்கொழியப்போகித் (351) தனிமனைச்சேப்பின் (355) ஆண்டைத் தீம்பலவின்றாரமுனையிற் சேம்பிலையோடே (361) முதிர்கிழங்கார்குவிர் (362); இவற்றை இவ்வழியின்கண்ணே பெற்றுப் பின்னர்ப் பன்மரநீளிடைப் போய் (368) நாடுபலகழிந்தபின்றைப் (371) பள்ளி யமர்ந்தோன் ஆங் கட் (373) பொழிறொறும் (380) ஆடி (387) அசைஇத் (390) தொலைச்சி (382) மரீஇக் (383) கடவுள்வாழ்த்தி (391) இயக்கினிர் கழிமின் (392); இங்ஙனஞ்சென்று கைவண்டோன்றல் (420), இப்பொழுது ஐவர் போலக் (417) குருதியீர்ப்பப் (414) பொருது (415) ஆர்த்துப் (419) பகைமேற் செல்லுதலின்றி நச்சிச்சென்றோர்க்கு ஏமமாகிய (421) படப்பை முதலியவற்றையுடைய (401) விழவு மேம்பட்ட மூதூராகிய (411) கச்சியிடத்தே யிருந்தோன் (420), அவ்வூரிற் பணிந்த மன்னர் (428) செவ்விபார்க்கும் முற்றத்திணையுடைய (435) பொன்றுஞ்சு வியனகர்க்கண்ணே (440) பகல்செய் மண்டிலம் பாரித்தாங்கு (442) மிக்க காட்சியாலே (445) அருளிப் (444) பூண்கடனாற்றிக் (450) கடனிறுத்த

உள்ளத்தோடே (446) சுற்றத்தோடே இருந்தோனைக் குறுகித் (447) தொண்டையோர் மருகனே (454), மள்ளனே, மறவனே (455), செல்வனே, செருமேம்படுநனே(456), பெருமானே(461), செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு (459) நின் பெயருட் சிலவற்றைச் சொல்லிப் புகழ்ந்து (460) வந்தேன் ; வாழியவெனச்சொல்லிக் (461) கழிப்பிப் (462) பழிச்சி (463) நின்னுடைய கலைகளெல்லாந் தனக்குத்தெரிவதற்கு முன்னே (464) மலைகிழவோன் (500), நில்லாவுலகத்துநிலைமை தூக்கி (466) அந்நிலையணுகல் வேண்டி அழைத்துச் (467) சிதர்வைநீக்கி (468) உடீஇ (470) அமுதோடே (475) குறையும் (472) புழுக்கலும் (474) பிறவுமாகிய (475) அடிசிலைக் (476) கலங்களைப் பரப்பித் (477) தான் (479) முகனமர்ந்து மகமுறைநோக்கி (478) முன்னின்றூட்டி (479) விறலியர் மாலை வேயாநிற்க (486) நுமக்குத் தாமரை (481) பொலியச்சூட்டி (482) அரித்தேர் நல்கியும் அமையானாய் (490) இவுளியொடு பசும்படை தரீஇ (492) அவன் அன்றே (493) அந்நிலையிலே (464) நாவலந்தண் பொழில் வீவின்று விளங்கும்படி (465) இவையொழிந்த பரிசில்களையும் தரும் (493) என வினைமுடிவு செய்க.

இப்பாட்டில் ஒருமைபன்மை மயக்கம், [1] "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி * * * போற்றல் வேண்டும்" என்பதனாற் கொள்க.

தொண்டைமானிளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

---

வெண்பா.

கங்குலு நண்பகலுந் துஞ்சா தியல்பிற்றாய்
மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்—வெஞ்சினவேற்
கான்பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை
யான்பயந்தே னென்னுஞ் செருக்கு.

---

1 தொல். எச்ச. சூ. 66.

ஐந்தாவது

# முல்லைப்பாட்டு.



நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
5 கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
யருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
10 யரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது

---

1. “நனந்தலை யுலகம்” பதிற். ௯௩ : 18.
‘நன’ என்னும் அகர வீற்றுரிச்சொல், அகலமென்னுங் குறிப்புப் பொருளை யுணர்த்துதற்கும் உரிச்சொல் எழுத்துத் திரிந்திசைத்தற்கும் இவ்வடி மேற்கோள்; தொல். உரி, 78, ந; இ-வி. சூ. 282, 289.

2 - 3. “கயந்தரு நறும்புனல் கையிற் றீண்டலும், பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர், வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினான், உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே” (கம்ப. வேள்வி. 35); “நீர்விரி கமலச் செங்கை நீர்செல நிவந்த மாயோன்” பாகவத. அ. வாமனவதார. 64.

4. “வலனேர்பு” முல்லை. 91; முருகு. 1.

4 - 6. “வையகம் பனிப்ப வலனேர்பு வளைஇப், பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென” நெடுநல். 1 - 2.

7. மு. “வாள்போழ்” (நாற். சூ. 147, உரை, மேற்.) என்னுஞ் செய்யுளிலும் ஓரடி இப்படி வந்துள்ளது.

8. யாழிசைவண்டு: “யாழ்வண்டு” (பொருந. 211); “வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடு” (கலி. ௩௨ : 9); “வண்டி யாழாக” (அகநா. ௮௨ : 6); “உண்டிருந்த தேனை யறுபதங்க ளூடிப் போய்ப், பண்டிருந்த யாழ்முரல” ஈங்கோய். எழு. 10; இப்புத்தகம் ௧௨௩-ஆம் பக்கம் 1-ஆம் அடிக்குறிப்பாலும் இது விளங்கும்.

8 - 10. “நெல்லு மலருந் தூஉய்க்கை தொழுது” (நெடுநல். 43); “அரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்” சிலப். ௧ : 1-2.

பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி
னுறுதுய ரலமர னோக்கி யாய்மக
ணடுங்குசுவ லசைத்த கையள் கைய
15 கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
வின்னே வருகுவர் தாய ரென்போ
ணன்னர் நன்மொழி கேட்டன மதனா
னல்ல நல்லோர் வாய்ப்புட் டெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
20 வருத றலைவர் வாய்வது நீநின்
பருவர லெவ்வங் களைமா யோயெனக்

---

11. பெருமுது பெண்டிர்: குறுந். கஅக: 7.

8 - 11. "நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்குஞ், செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா" புறநா. உ௮0 : 6 - 7.

"முல்லை குறிஞ்சியென்பன இடுகுறியோ காரணக்குறியோ வெனின், ஏகதேச காரணம்பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி யென்றே கொள்ளப்படும். என்னை காரணமெனின், 'நெல்லொடு .........தூஉய்' என்றமையால் காடுறையுலகிற்கு முல்லைப்பூச் சிறந்த தாகலானும்...........இவ்வாறு குறியிட்டாரென்று கொள்ளப்படும் என்க" தொல். அகத். சூ. 5, இளம்.

6 - 11. மாலையில் விரிச்சி நிற்றல்: "வேண்டிய பொருளின் விளைவுநன் கறிதற், கீண்டிருண் மாலைச் சொல்லோர்த் தன்று" பு. வெ. 4.

12. பசலைக்கன்று: "பறித்து மென்றுவா யசைப்பன பசலையான் கன்று" திருவிளை. திருநகரப். 33.

12 - 4. இவ்வடிகளுடன், "எம்மனை மாரினி" (சீவக. 425) என்னுஞ் செய்யுளை ஒப்பிடுக.

15. கொடுங்கோற் கோவலர்: "கொடுங்கோற், கல்லாக் கோவலர்" அகநா. எச: 15 - 6.

16. "இன்னே வருகுவர்" நெடுநல். 155.

15 - 6. காதல்பற்றியும் உவப்புப்பற்றியும்அஃறிணை உயர்திணை யாய் மயங்கியதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். கிளவி. சூ. 27 ந. இ - வி. சூ. 299.

20. பி - ம். 'வருவராதல் வாய்வது' 21. பி - ம். 'மாயோளென

20 - 21. "பொய்ம்மை யுடன்புணரார் மேலவர் பொய்ம்மையு, மெய்ம்மைசூழ் மேலவரை மேவாவாம் - இம்முறையாற், பூவலருந் தாராய்

காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து
பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்பக்
கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
25 சேணுறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
விடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி
யுவலைக் கூரை யொழுகிய தெருவிற்
30 கவலை முற்றங் காவ னின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை
யோங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த
வயல்விளை யின்குள குண்ணாது நுதறுடைத்

பிரிந்தாற் பொலங்குழையார், காவலர்சொற் போற்றல் கடன்" (இ - வி. சூ. 658, மேற்.) என்பதன் கருத்து இவ்வடிகளின் கருத்தையொத்தது.

20 - 22. "இன்னே வருகுவ ரின்றுணை யோரென, வுகத்தவை மொழியவு மொல்லாண் மிகக்கலுழ்ந்து" நெடுநல். 155 - 6.

23. பூப்போலுண்கண்: நற். ௨0: 6, ௬௨௫: 7; குறுந். ௧0௧: 4; ஐங். ௧௬: 4, ௧0௧: 4. புலம்புமுத்துறைப்ப: "விலங்கிதிமிர் நெடுங்கண் புலம்புமுத் துறைப்ப" சிலப். ௪: 71.

25. பைம்புதலெருக்கி: பெரும்பாண். 112.

28. பி - ம். 'பரந்த பாசறை'

பாசறைக்குக் கடல்: "கண்கூ டிறுத்த கடன்மருள் பாசறை", "கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்" புறநா. ௨௬௪: 2, ௨௬௫: 1.

24 - 8. வஞ்சி, முல்லையின் புறமென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். புறத். சூ. 6, இளம். ந.

29. 'உவலை' தழையென்னும் பொருளை யுணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தந்தை. 363.

29 - 30. "கவலை மறுகிற் கடுங்கண் மறவர், உவலைசெய் கூரை யொடுங்க" பு. வெ. 169.

30 - 31. "எல்லை நின்ற வென்றி யானை யென்ன நின்ற........ வாயிலே" கம்ப. நகர. 22.

31 - 3. "கரும்பொடு காய்நெற் றுற்றி.........யானை" சீவக. 2522.

31 - 4. "யானைதன், கோட்டிடை வைத்த கவளம் போல" புறநா. ௧0௧: 6-7.

தயினுனை மருப்பிற்றங் கையிடைக் கொண்டெனக்
35 கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா விளைஞர் கவளங் கைப்பக்
கற்றேய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோ லசைநிலை கடுப்ப நற்போ
ரோடா வல்விற் றூணி நாற்றிக்
40 கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கைப்
பூந்தலைக் குந்தங் குத்திக் கிடுகுநிரைத்து
வாங்குவி லரண மரண மாக
வேறுபல் பெரும்படை நாப்பண் வேறோர்
நெடுங்காழ்க் கண்டங் கோலி யகநேர்பு
45 குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்
திரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்
விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்

---

35. "கவைமுட் கருவியு மாகிக் கடிகொள" மணி. கஅ: 164. வடமொழி பயிற்றி: "பெருவெளில் பிணிமார் விரவுமொழி பயிற்றும் பாகர்" மலைபடு. 326 - 7.

36. "காழோர் கடுங்களிறு கவளங் கைப்ப" மதுரை. 658 - 9.

37 - 8. "முக்கோலுங் கமண்டலமுஞ் செங்கற் றூசு முந்நூலுஞ் சிகையுமாய் முதிர்ந்து தோன்று, மக்கோலம்" வி. பா. அருச்சுனன் தீர்த்த. 55.

40. கூடம்: "ஒல்காக் கூடமு மொருங்குதலைப் பிணங்கி" பெருங். உ. 12: 45.

41. பெரும்பாண். 119 - 20-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

41 - 2. "வேலி யிட்ட தவர்க ளிட்ட வில்லும் வாளும் வேலுமே" திருவரங்கக்கலம். 53.

44. "நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த, கொடும்பட நெடுமதில்" (சிலப். உஎ: 151 - 2); "காழொடு சேர்த்த, கண்டப் பூந்திரை மண்டபத் திழைத்த, நன்னகர்", "கண்டப் பூந்திரை காழ்முதற் கொளீஇ", "பல்காழ்த் திரையும்" பெருங். க. 42: 105-7, உ. 4: 134, 12: 44.

46 - 7. "இரும்பறக் கழுவி யெஃகி னிருளற வடிக்கப் பட்ட, வரும்பெறற் சுரிகை யம்பூங் கச்சிடைக் கோத்து வாங்கி" சீவக. 698.

நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கையமை விளக்க நந்துதொறு மாட்ட
50 நெடுநா வொண்மணி நிழத்திய நடுநா
ளதிரல் பூத்த வாடுகொடிப் படாஅர்
சிதர்வர லசைவளிக் கசைவந் தாங்குத்
துகின்முடித் துப் போர்த்த தூங்க லோங்குநடைப்
பெருமூ தாளர் ரேமஞ் சூழப்
55 பொழுதளந் தறியும் பொய்யா மாக்க
டொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி
யெறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்
குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப

---

48. "சொரிசுரை கவரு நெய்வழி புராலில்" பதிற். ௬எ : 5.

49. பி - ம். 'மாட்டி'

50. பி - ம். 'நெடுநாவெண்மணி' 'மிழற்றிய நடுநாள்', 'நிழத்தலி னடுநாள்', 'நிழற்றிய.'

"நெடுநா வொண்மணி கடிமனை யிரட்ட", "யாமங் கொள்பவர் நெடுநா வொண்மணி, யொன்றெறி பாணியி னிரட்டும்" நற். ௬௦ : 1, ௧௩௨ : 9 - 10.

51. அதிரல் : குறிஞ்சி. 75.

54. பெருமூதாளர் : "பெருமூ தாளரே மாகிய வெமக்கே" (புறநா. ௨௬௩ : 14) ; "பெருமூ தாள, னேர்ந்ததை யெல்லா நெடுந் தகைக் குரைப்ப", "பெருமூ தாளரும் பெருங்கிளைச் சுற்றமும்" பெருங் க. 34 : 110-11, 57 : 17.

53 - 4. "பைந்துகின் முடியணிந் தவர்பின், உலவு காஞ்சுகி யவர்" சீவக. 1558.

55 - 8. "சூதர் வாழ்த்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப" (மதுரை. 670 - 71) ; "குறுநீர்க் கன்ன லெண்ணுந ரல்லது, கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்" (அகநா. ௬௩ : 6 - 7); "நாழிகைக் கணக்கர்", "ஐந்து கேள்வியு மமைந்தோ னெழுந்து, வெந் திறல் வேந்தே வாழ்கநின் கொற்ற, மிருநில மருங்கின் மன்னரெல் லாநின், திருமலர்த் தாமரைச் சேவடி பணியு, முழுத்த மீங்கிது முன் னிய திசைமே, லெழுச்சிப் பாலை யாகென் றேத்த" (சிலப். ரு : 49, ௨௬ : 26 - 31) ; "குறுநீர்க் கன்னலின் யாமங் கொள்பவர்" (மணி. எ : 64 - 5) ; "கொலைமுகக் களிற நூர்க்கு நாழிகை சென்று கூற" (சீவக. 2733); "புன லுற்றுருகு செப்பின், காலமறி வுற்றுணர்தல் கன் னலள வல்லான், மாலைபக லுற்றதென வோர்வரிது மாதோ" (கம்ப.

மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
60 மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
புலித்தொடர் விட்ட புனைமா ணல்லிற்
றிருமணி விளக்கங் காட்டித் திண்ஞா
ணெழினி வாங்கிய வீரறைப் பள்ளியு
65 ளுடம்பி னுரைக்கு முரையா நாவிற்
படம்புகு மிலேச்ச ருழைய ராக
மண்டமர் நசையொடு கண்படை பெறாஅ
தெடுத்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து
பிடிக்கண மறந்த வேழம் வேழத்துப்
70 பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்

கார்காலப். 73); "பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு காமன் றிரியுங் கருவூரா - யாமங்க, ளொன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையு, மொன்றுபோ யொன்றுபோ யொன்று" சீலப். ௫ : 49, அடியார். மேற்.

60. மெய்ப்பை புக்கு: "படம்புகு மிலேச்சர்" (முல்லை. 66); "மெய்ப்பை புக்கு" சிலப். கசு : 107.

66. பி - ம். 'மிலேச்சர்'

படம்புகும் : (பெரும்பாண். 69) ; "செங்கட் புன்மயிர்த் தோறிரை செம்முக, வெங்க ணேக்கிற்குப் பாயமி லேச்சனைக், செங்கட்டீவிழி யாத் தெழித் தான்" சீவக. 431.

67. "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணுடவர்" (அகநா. கூஎ : 4); "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்", "பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை, வளிபொரு தெண்கண் கேட்பி, னதுபோ ரென்னு மென்னையு முளனே", "வாள்வடு விளங்கிய சென்னிச், செருவெங் குருசில்" (புறநா. ௩௧ : 9, அக: 7 - 9, ௩௨௧ : 9 - 10); "போரென்ன வீங்கும் பொருப்பன்ன திரள்கொ டிண்டோள்" (கம்ப. பூக்கொய். 18); "செருவென்ற மாற்றங் கேட்டுச் சிந்தையி னுவகை பொங்க, மருவொன்று மலங்கன் மார்பும் வாகுபூ தரமும் பூரித்து........ஒருப்பட்டான்" வி. பா. நிவாதகவசர். 17.

69. பி - ம். 'வேழமும்'

70. யானைத்துதிக்கைக்குப் பாம்பு : "யானைதன், வாய்நிறை கொண்ட வலிதேம்பு தடக்கை, குன்றுபுகு பாம்பிற் றோன்றும்" (அகநா. ௩௩௧ : 11 - 3) ; "நிரைகதிர் நீளெஃக நீட்டி வயவர், வரை புரை யானைக்கைந் நூற - வரைமே, லுருமெறி பாம்பிற் புரளுஞ் செரு

தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்
சோறுவாய்த் தொழிந்தோ ருள்ளியுந் தோறுமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்
துண்ணு துயங்கு மாசிந் தித்து
75 மொருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிதுநினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொ ளோன்விர
னகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி
யரசிருந்து பனிக்கு முரசுமுழங்கு பாசறை
80 யின்றுயில் வதியுநற் காணு டொருழந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு
மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து
மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து



---

மொய்ம்பிற், சேய்பொரு தட்ட களத்து" (களவழி. 13); "பாந்த ளன்ன பரேரெறுழ்த் தடக்கையின்" (பெருங். ௧. 58: 8.); "அனந்த னன்னகை யானை" சீவக. 2521.

73. "வேனிறத் திங்க வயவரா லேறுண்டு, கானிலங் கொள்ளக் கலங்கிச் செவிசாய்த்து, மாநிலங் கூறு மறைகேட்ப" களவழி. 41.

'வை' கூர்மையாகிய குறிப்புப்பொருளை யுணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 91, சே; 89, ந.

74. பி-ம். 'மாவுஞ் சிந்தித்து'

75. "பள்ளி - படுக்கை; 'ஒருகைப் பள்ளி யொற்றி' இது முல்லை." தக்க. 54, உரை.

76. நெடிதுநினைந்து: "நீடு நினைந்து" முல்லை. 82.

75-6. தொல். கற்பியல், சூ. 34, ந. மேற்.

83. ஒரு பிரதியில் இவ்வடியின் பின், "அஞ்சி லோதி யாய்கவினசைஇ, யேவுறு" என்னும் பகுதி காணப்படுகின்றது.

ஒய்யென: பொருந. 152.

84. பி-ம். 'இழை நெகிழா'

"ஏவுறு மஞ்ஞையி னினைந்தடி வருந்த" (மணி. எ: 127); "இடருற் றிகல்வாளி, தன்னங்க மூழ்கத் தளர்ந்துவீழ் மஞ்ஞையென, அன்னம் பொருவு நடையா ளயிராணி, மன்னன் றிருமுன் மயங்குற்று வீழ்ந்தனளே" கந்த. அயிராணி. 5.

85 பாவை விளக்கிற் பரூஉச்சுட ரழல
விடஞ்சிறந் துயரிய வெழுநிலை மாடத்து
முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி
யின்ப லிமிழிசை யோர்ப்பனள் கிடந்தோ
ளஞ்செவி நிறைய வாலின வென்றுபிறர்
90 வேண்டுபுலங் கவர்ந்த வீண்டுபெருந் தானையொடு
விசயம் வெல்கொடி யுயரி வலனேர்பு
வயிரும் வளையு மார்ப்ப வயிர
செறியிலைக் காயா வஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
95 கோடற் குவிமுகை யங்கை யவிழத்

---

85. "யவன ரியற்றிய வினைமாண் பாவை, கையேந் தையக னிறையநெய் சொரிந்து, பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமி ரெரி", "பாண்டில் விளக்கிற் பரூஉச்சுட ரழல" (நெடுநல். 101 - 3, 175); "பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல" பதிற். எஎ : 6.

பரூஉச்சுடர்: "பள்ளி மாடத்துப் பரூஉச்சுடர் கொளீஇ" பெருங். க.54 : 8.

86. எழுநிலைமாடம்: "எழுநிலை மாடஞ் சேர்ந்தும்" சீவக. 2840.

86 - 7. "நீர்பாய் மாடமொடு", "ஏரணி யமைந்த வெழுநிலை நல் வினை, நீரணி மாடத்து" பெருங். க. 38 : 77, 40 : 16 - 7.

87 - 8. "கார்வா னின்னுறை தமியள் கேளா" புறநா. கருஎ : 3.

89. அல்வழிக்கட் ககரமும் அகரமுங்கெடுதற்கு இது மேற்கோள்; தொல். குற். சூ. 78, ந.

90 - 91. "நீரொலித் தன்ன நிலவுவேற் றானையொடு, புலவுப் படக் கொன்று மிடைதோ லோட்டிப், புகழ்செய் தெடுத்த விறல்சா னன்கொடி" மதுரை. 369 - 71.

92. வயிரும் வளையும் ஆர்த்தல்: முருகு. 120-ஆம் அடியின் அடிக் குறிப்பைப் பார்க்க.

93. செறியிலைக்காயா: "செறியிலைக் காயா சிறுபுறந் துறைப்ப" பெருங். க. 49 : 115.

"கண்ணிய லஞ்சனஞ் தோய்ந்தபோற் காயாவும், நுண்ணரும் பூழ்த்த புறவு" (கார். 8); "அஞ்சனங் காயா மலர" திணைமொழி. 21.

94. "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகநா. கடவுள்.); "கொன்றைகள் பொன்சொரிய" தேவாரம், திருப்புகலி.

95. "செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்" (சிறுபாண்.

தோடார் தோன்றி குருதி பூப்பக்
கான நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்
றிரிமருப் பிரலையொடு மடமா னுகள

167); "கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்" (பரி. கக: 76); "கைவிரிந்தன காந்தளும்" சூளா. நாட்டு. 11.

96. "குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" குறுந். க: 4.

99. திரிமருப்பிரலை: "இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பின் .........இரலை", "திரிமருப் பிரலைய காடிறந் தோரே", "புன்கண் கொண்ட திரிமருப் பிரலை" அகநா. ச: 3-4, கநந: 18, நஎக: 5.

இரலையொடு மடமானுகளல்: "பெருங்கவின் பெற்ற சிறுதலை நெளவி, மடக்கட் பிணையொடு மறுகுவன வுகள" (மதுரைக். 275-6); "அறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவும்" (பட். 245); "வன் பரற் றெள்ளறல் பருகிய விரலைதன், இன்புறு துணையொடு மறுவந் துகளத், தான்வந் தன்றே தளிதரு தண்கார்", "துணையோ, டிரலை நன்மா னெறிமுத லுகளு, மாலை", "திரிமருப் பிரலை யண்ண னல்லே, றரி மடப் பிணையோ டல்குநிழ லசைஇ, வீததை வியலரிற் றுஞ்சிப் பொழுது செலச், செழும்பயறு கறிக்கும் புன்கண் மாலை" (குறுந். கூ௬: 1-3, உ௰: 1-3, நநஅ: 1-4); "அங்காட் டாரிடை மடப்பிணை தழீஇத், திரிமருப் பிரலை புல்லருந் துகள", "அண்ண விரலை யமர்பிணை தழீஇத், தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டனவே", "இருதிரி மருப்பி னண்ண விரலை.........மடப்பிணை யருத்தி.........காக்கும்", "திரி மருப் பிரலை,.........காமர் துணையோ டேமுற வதிய", "திரிமருப் பிரலை தெள்ளறல் பருகிக், காமர்துணையோ டேமுற வதிய", "மடப்பிணை, வலந்திரி மருப்பி னண்ண விரலையொ, டலங்குசினைக் குருந்தி னல்கு நிழல் வதிய", "மறியுடை மடப்பிணை தழீஇப் புறவிற், றிரிமருப் பிரலை பைம்பயி ருகள" (அகநா. கச: 5-6, உந: 8-9, நச: 4-8, கநக: 10-12, க௰ச: 8-9, ந௦ச: 8-10, நகச: 5-6); "கருவியல் கார் மழை கால்கலந் தேந்த, வுருகு மடமான் பிணையோ டுகளும்" (திணை மொழி. 25); "கானமரும் பிணைபுல்கிக் கலைபயிலுங் கடம்பூரில்" (தே. திருஞா.); "சிறுபிணை தழீஇய திரிமருப் பிரலை", "மறியுடன் றழீஇய மடமா னம்பிணை, துள்ளுநடை யிரலையொடு வெள்ளிடைக் குழும", "திரிமருப் பிரலை.........மடமா னம்பிணை கண்டு......புகன்றுவிளை யாடும்" பெருங். க. 49: 114, 54: 38-9; ந. 1: 141-7.

98-9. "பழமழைக் கலித்த புதுப்புன வரகி, னிரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை" குறுந். உஉ௦: 1-2.

100 வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்
துனைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.

100. வெண்மழை: நெடுநல். 19.

101. வள்ளியங்காடு: குறுந். உகக: 2.

பிறக்கொழிய: பெரும்பாண். 351; ஐங். ௬அ௫: 2; அகந கo௪: 13; புறநா. க௫: 15; மணி. கக: 65.

102. 'துனை' என்னுஞ்சொல் விரைவென்னும் பொருளை யுணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 17, ந.

---

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு [1] முல்லையென்று பெயர்கூறினர்; [2] முல்லைசான்ற கற்புப்பொருந்தியதனால். [3] இல்லறம்நிகழ்த்துதற்குப் பிரிந்துவருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை முல்லையாமென்று கருதி இருத்தலென்னும்பொருட்கு முல்லையென்று இச்செய்யுட்கு நப்பூதனார் பெயர் கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள் கூறலே அவர் கருத்தாயிற்று. [4] "தானே சேறல்" என்னும்விதியால், அரசன் தானே சென்றது இப்பாட்டு.

இது, தலைவன் வினைவயிற் பிரியக்கருதியதனை அவன் குறிப்பானுணர்ந்து ஆற்றுளாய தலைவியது நிலைமைகண்டு அவன் வற்புறுப்பவும் உடம்படாதவளைப் [5] பெருமுதுபெண்டிர் [6] அவன் வினைமுடித்து வருதல் வாய்வது, [7] நீவருத்தம் நீங்குவதெனக்கூற, அதுகேட்டு அவள் நீடுநினைந்து ஆற்றியிருந்தவழித் தலைவன் அக்காலத்தே வந்ததனைக்கண்டு வாயில்கள் தம்முட்கூறியது. இது, [8] "வாயி லுசாவே தம்முளு முரிய", [9] "எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும், புல்லிய மகிழ்ச்சிப் பொருள வென்ப" என்பனவற்றாற் கூறினர்.

---

1 இப்பாட்டு முல்லையென்று வழங்குதல், "இது முல்லை" (தக்க. 54, உரை.) என்பதனாலு மறியப்படும்.

2 "முல்லை சான்ற கற்பின் மெல்லியல்" சிறுபாண். 30.

3 சிறுபாண். 169-ஆம் அடியின் உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

4 தொல். அகத். சூ. 27.

5 "பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப" முல்லை. 11.

6 முல்லை. 20. 7 முல்லை. 20-21. 8 தொல். செய். சூ. 199.

9 தொல். கற்பியல், சூ. 37.

1. நனை தலை உலகம் வளைஇ - அகலத்தை இடத்தேயுடைய உலகத்தை வளைத்து,

1 - 2. [நேமியொடு, வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை :] நேமியொடு வலம்புரி தாங்கு தட கை மா அல் (3) - சக்கரத்தோடே வலம்புரியைத்தாங்கும் பெரிய கைகளையுடைய மால்,

மா 1 பொறித்த மாஅல் (3) - திருமார்பிடத்தே திருமகளைவைத்த மால்,

3. நீர் செல நிமிர்ந்த மாஅல் போல - மாவலி வார்த்த நீர் தன் கையிலே சென்றதாக உயர்ந்த திருமாலைப்போல,

இனி, 2 நேமியோடே வலம்புரியுமாகிய உத்தம இலக்கணங்களைப் பெற்றிருக்கின்ற திருமகளையணைத்தகையிலே நீர்செல்லவென்றுமாம்.

இதனானே 3 முல்லைக்குரிய தெய்வங்கூறினார்.

4 - 5. [பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு, 4 கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி :]

பாடு இமிழ் பனி கடல் பருகி வலன் ஏர்பு கோடு கொண்டு - ஒலி முழங்குகின்ற குளிர்ச்சியையுடைய கடலைக்குடித்து வலமாகவெழுந்து மலைகளை இருப்பிடமாகக்கொண்டு,

உலகம் வளைஇ (1) எழுந்த கொடு செலவு எழிலி - பெய்யுங் காலத்தே உலகத்தை வளைந்தெழுந்த கடிய செலவினையுடைய மேகம்,

மால் நீர் செல நிமிர்ந்தாற்போல மேகமும் நீர்செலநிமிர்ந்ததென்றார்.

இனி, உலகத்தைத் திருவடிகளிலே அணைத்துக்கொண்டு நிமிர்ந்த மாலென்றுமுரைப்பர்.

6. பெரு பெயல் பொழிந்த சிறு புல் மாலை - பெரிய மழையைப் பெய்த சிறுபொழுதாகிய வருத்தஞ்செய்கின்ற மாலைக்காலத்துப் பாவை விளக்கு (85) எனக்கூட்டுக.

---

1 பொறித்தல் - வைத்தல்; சிறுபாணாற்றுப்படை, 48, உரையைப் பார்க்க.

2 இங்கே, நேமி - சக்ரரேகை, வலம்புரி - சங்கரேகையெனக் கொள்க; இவை கைக்குரிய உத்தம இலக்கணங்கள்; "வலம்புரி பொறித்த வண்கை மதவலி" (சீவக. 204); "சங்க லேகையுஞ் சக்ர லேகையும், அங்கை யுள்ளன வையற்கு" (சூளா. குமார. 45); "சங்கு சக்கரக் குறியுள தடக்கையில்" கம்ப. மராமரப். 117.

3 "மாயோன் மேய காடுறை யுலகமும்" தொல். அகத். சூ. 5.

4 "ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ" (புறநா. ௩௫ : 17) என்பதனுரையில், கோடென்பதற்குப் பக்கமென்று பொருளெழுதுவர் அதனுரையாசிரியர்.

இதனானே முல்லைக்குரிய 1 காரும் மாலையுங் கூறினார்.

மால்போல (3) எழுந்த எழிலி (5) பொழிந்த மாலையென்க.

7. [அருங்கடி மூதூர் மருங்கிற் போகி :] அரு கடி முது ஊர் மருங்கில் நல்லோர் (18) போகி - அரியகாவலையுடைய பழைய ஊர்ப் பக்கத்துப் பாக்கத்தே படைத்தலைவரேவலால் நற்சொற்கோடற்குரி யோர் போய்,

8 - 11. [யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை, யரும்பவி ழலரி தூஉய்க்கை தொழுது, 2 பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப :]

நறு வீ முல்லை (9) அரும்பு (10) யாழ் இசை இனம் வண்டு ஆர்ப்ப (8) அவிழ் அலரி (10) நாழிகொண்ட (9) நெல்லொடு (8) தூஉய் (10) நறியபூக்களையுடைய முல்லையினது அரும்புகள் யாழினது ஓசையினை யுடைய இனமான வண்டுகள் ஆரவாரிக்கும்படி அவிழ்ந்த பூவை நாழி யிடத்தே கொண்டுபோன நெல்லுடனே தூவி,

கைதொழுது (10) விரிச்சி நிற்ப (11) - தெய்வத்தை வணங்கி நற் சொற்கேட்டு நிற்க,

நல்லோர் (18) போகித் (7) தூஉய்த் தொழுது (10) நிற்பவென்க.

என்றது : 3 ஒரு வேந்தன் ஒரு வேந்தனோடு இகல்கருதினாற் போர் செய்ய வேண்டுதலின், அவனாட்டந்தணர் முதலியோரைத் தன்னாட்டின் கண்ணே அழைத்தற்கும், அதனையறியாத ஆவைக் கொண்டுபோந்து தான் காத்தற்குமாகத் தன் படைத்தலைவரை நோக்கி அரசன் நிரை யடித்தற்கேவியவழி, அவர் அவனூரினின்றும் போய் ஒரு பாக்கத்து

1 "காரு மாலையு முல்லை குறிஞ்சி, கூதிர் யாம மென்மனார் புலவர்" தொல். அகத். சூ. 6.

2 பெருமுதுபெண்டிரென்பதற்கு ஒரு பிரதியிலும் உரையிலது ; பெரிய முதிர்ந்த பெண்டிரென்க.

3 "இரு பெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர், ஒருவர் நாட்டுவாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்குசெய்யத்தகாதசாதிகளை ஆண்டுநின்றும் அகற்றல்வேண்டிப் போதருகவெனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமேகொண்டு வந்து பாதுகாத்தலும் தீதெனப்படாது அறமேயாமென்றதற்கு, 'ஆதந்தோம் பல்' என்றான் ; அஃதுது, 'ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்........ எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென, வறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்' (புறநா. க : 1 - 6) எனச் சான்றோர்கூறியவாற்றானுணர்க" (தொல். புறத். சூ. 2, ந.) என்று இவ்வுரையாசிரியர் எழுதியுள்ளவற்றால் இங்கே கூறப்படும் வழக்கு விளங்கும்.

[1] விட்டிருந்து அரசனுக்கு மேல்வரும் ஆக்கத்தை யறிதற்கு விரிச்சி யோர்த்தல் வேண்டுமென்று புறத்திணையியலுட் கூறினமையான், ஈண் டும் அவ்வாறே கூறினர். அது, [2] "வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவி, னாதந் தோம்பன் மேவற் றாகும்", [3] "படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி" என்னுஞ் சூத்திரங்களானும், "திரைகவுள் வெள் வாய்த் திரிந்துவீழ் தாடி, நரைமுதியோ னின்றுரைத்த நற்சொன்-னிரை யன்றி, யெல்லைநீர் வைய மிறையோற் களிக்குமால், வல்லையே சென் மின் வழி" என்னும் உதாரணத்தானுமுணர்க. இவர் இதுகேட்டு நிரைகொண்டால் அரசன் வஞ்சி சூடி மண்ணசையால் மேற்செல்வ னென்பது. ஆண்டு, [4] "எஞ்சாமண்ணசை" என்னுஞ்சூத்திரத்திற் கூறியவாறே ஈண்டுக் கூறினர். அது மேல், "முனை கவர்ந்து" (19) என்பதனானுணர்க.

12 - 8. [சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி, னுறுதுய ரலமர னோக்கி யாய்மக, ணடுங்குசுவ லசைத்த கையள் கைய, கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர, வின்னே வருகுவர் தாய ரென்போ, ணன் னர் நன்மொழி கேட்டன மதனா, னல்ல நல்லோர் வாய்ப்புள் :]

நன்னர் (17) வாய்ப்புள் (18) - அவர்கேட்ட நன்றாகிய நற்சொல்,

ஆய் மகள் (13) நடுங்கு சுவல் அசைத்த கையள் (14) - இடைச் சாதியின் மகள் குளிரால் நடுங்குகின்ற தோளின்மேலே கட்டின கைய ளாய்நின்று,

சிறு தாம்பு தொடுத்த பசலை கன்றின் (12) உறு துயர் அலமரல் நோக்கி (13) - சிறிய தாம்பாலே காலிலே கட்டப்பட்ட வருத்தத்தை யுடைத்தாகிய கன்றினுடைய முலையுண்ணமலுறுகின்ற துயராலே தாய் வருமென்று சுழலுகின்ற தன்மையைப் பார்த்து,

கைய (14) கொடு கோல் கோவலர் பின் நின்று உய்த்தர (15) - கையிடத்தனவாகிய [5] கொடிய கோலையுடைய இடையர் பின்னேநின்று செலுத்துதலைச் செய்கையினாலே,

தாயர் இன்னே வருகுவர் என்போள் (16) நன்மொழி கேட்டனம் (17) - நிரம்ப மேய்ந்து நும்முடைய தாய்மார் இப்பொழுதே வருவ ரென்று கூறுகின்றோளுடைய நன்றாகிய வார்த்தையாக யாங்கள் கேட் டோம் ;

---

[1] விட்டிருந்து - தங்கியிருந்து ; முல்லை. 42, உரை ; மதுரைக். 125 - 7, உரையைப் பார்க்க. [2] தொல். புறத். சூ. 2.

[3] தொல். புறத். சூ. 3. [4] ஷை. ஷை. ஷை. 7.

[5] "விழுத்தண்டூன்றியகை - பசுக்களுக்கு வருத்தஞ்செய்யும் தடியை யூன்றின கை" (பெரும்பாண். 170, ந.) என்பதனால், 'கொடிய கோல்' என்பதன் பொருள் நன்கு விளங்கும்.

அதனால் (17) - அவள்கூறிய நற்சொல்லின் கருத்தால்,

18 - 20. [தெவ்வர், முனைகவர்ந்து கொண்ட திறையர் வினை முடித்து, வருத றலைவர் வாய்வது :] தலைவர் தெவ்வர் முனை கவர்ந்து கொண்ட திறையர் வினை முடித்து வருதல் வாய்வது - நம் தலைவர் வஞ்சிசூடிச் சென்று பகைவர் மண்ணைக்கொண்டு பின் அவரிடத்தே வாங்கிக்கொண்ட திறையினையுமுடையராய் இங்ஙனந் தாமெடுத்துக் கொண்ட வினையை முடித்துவருவாரென்று நாம் கருதிய தன்மையிலே அவர்நிற்றல் உண்மை ;

நல்ல (18) - அவர் அங்ஙனம் வினைமுடித்துவருதல் நமக்கு இல்லறம் நிகழ்தற்குக் காரணமாகலின் நல்லகாரியம் ;

20 - 21. [நீ நின், பருவர லெவ்வங் களைமா யோயென:] மாயோய் நீ நின் பருவரல் எவ்வம் களை என - [1] மாமை நிறத்தையுடையோளே நீ நின் மனத்தடுமாற்றத்தான் உளதான வருத்தத்தைப் போக்கென்று கூற, அதுகேட்டு,

செலவுக்குறிப்பறிந்து வேறுபட்டதுணர்ந்தமையின், மனத்தடுமாற்றமென்றார்.

பெருமுதுபெண்டிர் (11), நல்லோர் (18) போகித் (7) தூஉய்த் தொழுது (10) விரிச்சிநிற்ப (11) அவர்கேட்ட நன்னர் (17) வாய்ப்புள் (18) ஆய் மகள் (13) கையளாகிக் (14) கன்றின் (12) அலமரனோக்கித் (13) தாயர் இன்னே வருகுவரென்போளுடைய (16) நன்மொழியாக யாங்கள் கேட்டனம் ; அதன் கருத்தால் (17) தலைவர் வருதல் வாய்வது (20) ; நல்லகாரியம் (18) ; மாயோய் (21), நீ நின் (20) பருவரலெவ்வம் களையென்று கூற (21) அதுகேட்டு நீடு நினைந்து (82) என்க.

இங்ஙனம் பொருள்கூறாமல் தலைவியது இரக்க மிகுதிகண்டு பெருமுதுபெண்டிர் விரிச்சி கேட்டுவந்து தலைவர் வருவராதல் வாய்வது ; நின்னெவ்வங்களையென்று பல்காலும் ஆற்றுவிக்கவும், ஆற்றாளாய்த் துயருழந்து (80) புலம்பொடு (81) தேற்றியும் திருத்தியும் (82) மையல்கொண்டும் உயிர்த்தும் (83) நடுங்கிநெகிழ்ந்து (84) கிடந்தோள் (88) எனப் பொருள்கூறியக்கால் செய்தற்குரிய இரங்கற்பொருட்டன்றி முல்லைக்குரிய இருத்தற்பொருட்டாகாமை யுணர்க. அன்றியும் தலைவன் காலங் குறித்தல்லது பிரியானென்பதூஉம், அவன் குறித்தகாலங் கடந்தால் தலைவிக்கு வருத்தமிகுமென்பதூஉம், அது பாலையாமென்

---

[1] மாமைநிறம் - நாருரித்த ஆம்பற்றண்டுபோன்ற அழகிய நிறம் "நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கா, னாருரித் தன்ன மதனின் மாமை" (நற். சு : 1 - 2) ; "பொய்கை யாம்ப னாருரி மென்கால், நிறத்தினு நிழற்றுதன் மன்னே, இனிப்பசந் தன்றென் மாமைக் கவினே" (ஐங். ருடு : 2 - 4) ; இது மாமைக்கவினென்றும் வழங்கும்.

பதூஉம், அவ்வாற்ருமைக்கு 1 இரங்கல் நிகழ்ந்தால் செய்தலாமென் பதூஉம் நூற்கருத்தாதலுணர்க.

22. [காட்டவுங் காட்டவுங் காணுள் கலுழ்சிறந்து :] காட்டவும் காட்டவும் 2 கலுழ்சிறந்து காணுள் - தலைவன் 3 புகழும் மானமும் எடுத்துக்காட்டி வற்புறுத்தவும் தோன்றல் சான்ற மாற்ருர் பெருமை கூறிக்காட்டி வற்புறுத்தவும் அன்புமிகுதியாற் கலக்கமிக்கு இவை அர சற்கு வேண்டுமென்று மனத்திற் கருதாதவள்,

23. பூ போல் உண் கண் 4 புலம்பு முத்து உறைப்ப - பூப்போலும் மையுண்கண்கள் தாரையாகச்சொரியாது தனித்து வீழ்கின்ற முத்துப் போலுந் துளியைத் துளிப்ப, அதுகண்டு,

24. கான் யாறு தழீஇய அகல் நெடு புறவின் - காட்டாறுசூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்தே,

25. சேண் நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி - தூரியநிலத்தே நாறுகின்ற பிடவமோடே ஏனைப் பசியதூறுகளையும் வெட்டி,

26. வேடு புழை அருப்பம் மாட்டி - பகைப்புலத்துக்குக் காவலாக விருக்கும் வேட்டுவச்சாதியினுடைய சிறு வாயில்களையுடைய அரண்களை யழித்து,

26 - 7. [காட்ட, விடுமுட் புரிசை யேமுற வளைஇ :] காட்ட முள் இடு புரிசை ஏமம் உற வளைஇ - காட்டின் கண்ணவாகிய முள்ளாலிடும் மதிலைக் காவலுறும்படி வளைத்து,

28. [படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி :] புணரி படும் நீரின் பரந்த பாடி - திரையொலிக்கின்ற 5 கடல்போற்பரந்த பாசறைக்கண்ணே கண் படைபெருது (67) என்க.

புறவிடத்தே (24) எருக்கி (25) மாட்டி (26) வளைஇப் (27) பரந்த பாடி யென்க.

29. உவலை கூரை ஒழுகிய தெருவில் - தழையாலேவேய்ந்த கூரை ஒழுங்குபட்ட தெருவிடத்து,

30 - 31. கவலை முற்றம் காவல் நின்ற தேம் படு கவுள சிறு கண் யானை - நாற்சந்தியான முற்றத்தே காவலாகநின்ற மதம்பாய்கின்ற கதுப் பினையுடையவாகிய சிறியகண்ணையுடைய யானை,

---

1 பி - ம். 'இரங்கல் நிமித்தம்' 2 பி - ம். 'கலிழ் சிறந்து'

3 "புகழு மானமு மெடுத்துவற் புறுத்தலும்.........தோன்றல் சான்ற மாற்ருேர் மேன்மையும்" தொல். அகத்திணை. சூ. 41.

4 "புலம்பே தனிமை" தொல். உரி. சூ. 33.

5 "கடன்மருள் பெரும்படை", "படைநிலா விலங்குங் கடன்மரு டானை" (அகநா. கககூ : 16, உகஉ : 15); "கடலென, வானீர்க் கூக் குந் தானை" புறநா. கஎ : 36 - 7.

32 - 3. [ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த, வயல் விளை யின்குள லுண்ணாது :] ஓங்கு நிலை கரும்பொடு வயல் விளை கதிர் மிடைந்து யாத்த இன் குளகு உண்ணாது - வளர்கின்ற தன்மையை யுடைய கரும்புகளோடே வயலிலேவிளைந்த நெற்கதிர் இடையே நெருங் கப்பட்டுக் கட்டிப்போகட்ட சாவியையும் இனிய 1 அதிமதுரத்தழையை யும் தின்னாமல்,

33 - 4. நுதல் துடைத்து அயில் நுனை மருப்பில் தம் கையிடை கொண்டெனா - அவற்றாலே தம் நெற்றியைத்துடைத்துக் கூர்மையை யுடைய முனைகளையுடைய கொம்பினிடத்தே ஏறட்ட தம் கையிடத்தே கொண்டு நின்றனவாக,

35 - 6. [கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக், கல்லா விளை ஞர் கவளங் கைப்ப :] கல்லா இளைஞர் வடமொழி பயிற்றி கவை முள் கருவியின் 2 கவளம் கைப்ப - வடமொழியை அடியிலே கல்லாத இளைஞர் 3 யானைப்பேச்சான வடமொழிகளைக் கற்றுப் பலகாற்சொல் லிக் கவைத்தமுள்ளையுடைய 4 பரிக்கோலாலே கவளத்தைத் தின்னும் படி குத்த,

5 யானைக்குச்செய்யும் தொழில்களொழிய வேறொரு தொழிலைக் கல்லாத இளைஞரென்றுமாம்.

37 - 40. [கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான், முக்கோ லசை நிலை கடுப்ப நற்போ, ரோடா வல்விற் றூணி நாற்றிக், கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கை :]

கூடம் குத்தி கயிறு வாங்கு இருக்கை (40) - கூடமாகக் கால்களை நட்டுக் கயிற்றை வலித்துக்கட்டின இருப்பின்கண்ணே,

என்றது 6 படங்குகளை.

---

1 பி - ம். 'அட்டி மதுரத்தழை'

அதிமதுரத்தழை யானைக்கு விருப்பமுடையது ; மதத்தை உண்டு பண்ணுவது : "அதிங்கத்தின் கவளங் கொண்டால், வேறுநீர் நினைந்து காணீர் யாவர்க்கும் விடுக்கலாகாது" (சீவக. 750) ; "அதிங்கத்தின், மரங்கொலு மதவேழ மதர்த்தெழு மயக்கத்தால்" தணிகை. வீராட்ட. 63.

2 பி - ம். 'கவழமகைப்ப'

3 யானைப் பேச்சான வடமொழிகளாவன, அப்புது அப்புது, ஆது ஆது, ஐ ஐ என்பன ; சீவக. 1834, ந. பார்க்க.

4 பரிக்கோல் - குத்துக்கோல் ; பெரும்பாண். 393-ஆம் அடி உரை யின் அடிக்குறிப்பைப் பார்க்க.

5 சிறுபாண். 32-3, உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

6 படங்குகள் - கூடாரங்கள் ; "பாடி வீடுகொள் படங்கெனா" தக்க. 54.

கல் தோய்த்து உடுத்த படிவம் பார்ப்பான் (37) முக்கோல் அசை நிலை கடுப்ப (38) - துகிலைக் காவிக்கல்லைத் தோய்த்துடுத்த விரதங்களை யுடைய முக்கோலந்தணன் அம்முக்கோலிலே அந்த உடையினை இட்டு வைத்த தன்மையையொக்க,

நல் போர் (38) ஓடா வல் வில் தூணி நாற்றி (39) - அறத்தாற் பொருகின்ற போரில் ஓடாமைக்குக் காரணமான வலியவில்லைச் சேரவூன்றி அதிலே தூணிகளைத் தூக்கி,

41. பூ தலை குந்தம் குத்தி - பூத்தொழிலைத் தலையிலேயுடைய எறி கோல்களையும் ஊன்றி,

பூந்தலை : விகாரம்.

கிடுகு நிரைத்து - கிடுகுகளையும் நிரையாகக் குத்தி,

42. வாங்கு வில் அரணம் அரணம் ஆக - இங்ஙனஞ்சூழும் விற் படையாகிய அரணே தங்களுக்கு அரணாக, இதற்குள்ளே [1] விட்ட,

கயிறு வாங்கிருக்கைக்கண்ணே (40) நாற்றிக் (39) குத்தி நிரைத்து (41) வாங்குவில்லரண மென்க.

43. [2] வேறு பல் பெரு படை நாப்பண் - பாடைவேறுபட்ட பல வாகிய பெரிய படைக்குநடுவே,

43 - 4. [வேறோர், நெடுங்காழ்க் கண்டங் கோலியக நேர்பு :]

வேறு ஓர் அகம் நேர்பு - வேறோரிடத்தை அரசனுக்குக் கோயிலாக எல்லாருமுடம்பட்டு,

நெடு காழ் கண்டம் கோலி - நெடிய குத்துக்கோலுடனே பண் ணின பல நிறத்தாற் கூறுபட்ட [3] மதிட்டிரையை வளைத்து,

கண்டம் : ஆகுபெயர்.

45. குறு தொடி முன் கை கூந்தல் அம் சிறு புறத்து மங்கையர் (47) - குறியதொடியையுடைய முன்கையினையும் கூந்தலைசைந்துகிடக் கின்ற அழகினையுடைய சிறிய முதுகினையுமுடைய மங்கையர்,

46 - 7. இரவு பகல் செய்யும் திண் பிடி ஒள் வாள் விரவு வரி கச் சின் பூண்ட மங்கையர் - இராப்பொழுதைப் பகற்பொழுதாக்கும் திண்

---

[1] விட்ட - தங்கிய : மதுரைக். 125 - 7, உரையையும் அதன் அடிக் குறிப்பையும் பார்க்க.

[2] "பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞில, மிடங்கெட வீண்டிய வியன்கட் பாசறை" (புறநா. கூஉ : 10 - 11) என்ற பகுதியும், 'பல நூறாக அடுக்கப்பட்ட பதினெண்பாடைமாக்களாகிய படைத்தொகுதி இடமில்லையாம்படி தொக்க அகன்ற இடத்தையுடைய பாடிவீடு' என்ற அதனுரையும் இங்கே அறிதற்குரியன.

[3] மதிட்டிரை கண்டத்திரையெனவும் பல்வண்ணத்திரையெனவும் வழங்கும் ; சீவக; 647, ந ; 873.

ணிய 1 ஆசினையுடைய ஒள்ளியவாளை விரவின நிறத்தையுடைய கச்சி ஞலேபூண்ட மங்கையர்,

48-9. நெய் உமிழ் சுரையர் நெடு திரி கொளீஇ கை அமை விளக்கம் நந்துதொறும் மாட்ட - நெய்யைக்காலுகின்ற திரிக்குழாயை யுடைய சிற்றுட்கள் நெடிய திரியை எங்குங்கொளுத்தி ஒழுங்காயமைந்த விளக்குகள் அவியுந்தோறும் தம் கையிற் பந்தத்தைக் கொளுத்த,

50. நெடு நா ஒள் மணி நிழத்திய நடு நாள் - நெடிய நாக்கினை யுடைய ஒள்ளியமணி எறிந்துவிட்ட நடுயாமத்தும்,

கோயில் 2 பணிமடங்கிறுல் மணியெறிந்துவிடுதல் இயல்பு.

இனி யானை குதிரைமுதலியன துயில்கோடலின், அவற்றின் மணி யோசை அடங்கிய நடுநாளென்றுமாம்.

51-2. 3 அதிரல் பூத்த ஆடு கொடி படாஅர் சிதர் வரல் அசை வளிக்கு அசைவந்தாங்கு - புனலிபூத்த அசைகின்ற கொடியினையுடைய சிறுதூறுகள் துவலையோடே வருதலையுடைய அசைந்த காற்றிற்கு அசைந்தாற்போல,

சிதர் - மெத்தெனவுமாம்.

53-4. துகில் முடித்து போர்த்த தூங்கல் ஓங்கு நடை பெரு மூதாளர் ஏமம் சூழ - 4 மயிர்க்கட்டுக்கட்டிச் சட்டையிட்ட, அனந்தரினை யும் பெரிய ஒழுக்கத்தினையுமுடைய மெய்காப்பாளர் காவலாகச் சூழ்ந்து திரிய,

55-6. [பொழுதளந் தறியும் பொய்யா மாக்க, டொழுது காண் கையர் தோன்ற வாழ்த்தி :]

மாக்கள் பொழுது அளந்து அறியும் பொய்யா காண்கையர் - 5 அறிவில்லாதோருடைய வாழ்நாளை இத்துணையென்று அளந்தறியும் பொய்யாத காட்சியையுடையார்,

தொழுது தோன்ற வாழ்த்தி - அரசனைவணங்கி விளங்க வாழ்த்தி,

57. எறி நீர் வையகம் வெலீஇய செல்வோய் - திரையெறிகின்ற கடல்சூழ்ந்த உலகத்தே பகைவரை வெல்லுதற்குச் செல்கின்றவனே,

57-8. நின் குறுநீர் கன்னல் இனைத்து என்று இசைப்ப - 6 கிடா

1 பி-ம். 'கவிசினையுடைய', 'வாய்ச்சினையுடைய.' 2பணி - வேலை.

3 "அதிரல் - காட்டுமல்லிகை" (சிலப். கங: 156, அரும்பத); "அதிரல் - மோசிமல்லிகை" ஷை அடியார்.

4 மயிர்க்கட்டு - தலைப்பாகை.

5 ககக - ஆம் பக்கம், 2-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

6 கிடாரம் - நீர்பெய்துவைக்கும் ஒருவகைப் பாத்திரம்; இது கடாரமெனவும் வழங்கும்; "காக்குங் கடலேழு மாடுங் கடாரமோ" தலோத். உலா.

ரத்து நீரிலேகாண்கின்ற நினது நாழிகைவட்டிலிற்சென்ற நாழிகை இத்துணையென்று சொல்லுகையினாலே,

59. [மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை :]

மத்திகை வளைஇய உடை - புரவியையடிக்கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற உடை,

மறிந்து வீங்கு செறிவு உடை - அச்சம்மட்டி மறையும்படி வடிம்பு தாழ்ந்து பெருக்குஞ் செறிதலையுடைய [1] புடைவையுடையினையும்,

60. மெய்ப்பை புக்க வெரு வரும் தோற்றத்து - சட்டையிட்ட அச்சம் வரும் தோற்றரவினையும்,

61. வலி புணர் யாக்கை - இயல்பான வலிகூடின மெய்யினையு முடைய,

வன்கண் யவனர் - தறுகண்மையினையுடைய சோனகர்,

62. புலி தொடர் விட்ட புனை மாண் நல் இல் - புலிச்சங்கிலிவிடப் பட்ட கைசெய்த மாட்சிமைப்பட்ட நன்றாகிய இல்லிலே,

63 - 4. திரு மணி விளக்கம் காட்டி திண் ஞாண் எழினி வாங்கிய இருஅறை பள்ளியுள் - அழகினையுடைய மாணிக்கமாகிய விளக்கை எரிய வைத்துத் திண்ணிய கயிற்றிற்றிரையைவளைத்த் புறவறைக்குள்ளறையிற் படுக்கைக்கண்ணே சென்று,

65 - 6. [உடம்பி னுரைக்கு முரையா நாவிற், படம்புகு மிலேச்ச ருழைய ராக :] உரையா நாவின் உடம்பின் உரைக்கும் படம் புகும் மிலேச்சர் உழையர் ஆக - வார்த்தை சொல்லாத நாவினையுடைய கையா லும் முகத்தாலும் வார்த்தைசொல்லும் சட்டையிடும் [2] சரவாசிகள் பள்ளிகொள்ளுமிடத்தைச் சூழ்ந்து திரிய,

உரையாநாவென்றார், ஊமைகளென்றற்கு.

67. மண்டு அமர் நசையொடு கண்படை பெறாஅது - பகைவர் மனமறியாமல் மிக்குச்செல்கின்ற போரை நச்சுதலாலே கண்ணுறக்கம் பெறாமல்,

68 - 9. எடுத்து எறி எஃகம் பாய்தலின் புண் கூர்ந்து பிடி கணம் மறந்த வேழம் உள்ளியும் (72) - ஓச்சி வெட்டுகின்ற வாளழுந்துகை யினாலே புண்மிக்குப் பிடித்திரளைமறந்த வேழத்தை உள்ளியும்,

69 - 70. [வேழத்துப், பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமிய :] வேழத்து பரூஉ கை பாம்பு பதைப்பன்ன துமிய - யானையினுடைய

---

[1] ஆணுடையையும் புடைவையென்பது பண்டைக்கால வழக்கு; ‘வெண்புடைவை மெய்சூழ்ந்து.........சென்றடைந்தார்” (பெரிய. திருநா. 61); இவ்வழக்கு இக்காலத்துச் செட்டிநாட்டில் உள்ளது.

[2] பி - ம். ‘அசாரவாசிகள்’ சரவாசிகள் - சரித்துக்கொண்டே வசிப் போர்.

பரியகைகள் பாம்பினது பதைக்கின்ற தன்மையையொத்த பதைப்பினை யுடையவாக அற்று விழும்படி,

71-2. தேம் பாய் கண்ணி நல் வலம் திருத்தி சோறு வாய்த்து ஒழிந்தோர் உள்ளியும் - தேன்பரக்கும் [1] வஞ்சிமாலைக்கு நன்றாகிய வெற்றியை யுண்டாக்கிச் [2] செஞ்சோற்றுக் கடனிறுத்துப் பட்ட வீரரை நினைத்தும்,

72-4. தோல் துமிபு வை நுனை பகழி மூழ்கலின் செவி சாய்த்து உண்ணாது உயங்கும் மா சிந்தித்தும் - பக்கரைகளை யறுத்துக் கூரிய முனையினையுடைய அம்புகள்வந்து அழுந்துகையினாலே செவிசாய்த்துப் புல்லுண்ணாதே வருந்தும் குதிரைகளை நினைத்தும்,

75-6. [ஒருகை பள்ளி யொற்றி யொருகை, முடியொடு கடகஞ் சேர்த்தி :] ஒரு கை பள்ளி ஒற்றி ஒரு கை கடகம் முடியொடு சேர்த்தி - ஒருகையைப் படுக்கையின் மேலேவைத்து ஒருகையிற் கடகத்தை முடியோடே சேரவைத்து,

என்றது கையிலே தலையைவைத்தென்றாராயிற்று.

நெடிது நினைந்து-இப்படைநொந்தவளவுக்கு நாளை எவ்வாறு பொருமென்று நெடிதாகநினைந்து,

77. பகைவர் சுட்டிய படை கொள் நோன் [3] விரல் - [4] பகைவரைக்கருதி வைத்த வாளைப்பிடித்த வலியினையுடைய கையாலே வெட்டி வென்று (89) என்க.

---

1 முல்லை. 78 - ஆம் அடி உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

2 "புரந்தார்கண் ணீர்மல்கச் சாகற்பிற் சாக்கா, டிரந்து கோட் டக்க துடைத்து" (குறள். 780); "குஞ்சரந் தலையடுத்துக் கூந்தன் மாக் காலணையாச், செஞ்சோற்றுக் கடனீங்கிச் சினவுவாள் பிடித்துடுத்த, பஞ்சிமேற் கிடந்துடைஞாண் பதைத்திலங்கக் கிடந்தாரை" (சீவக. 2240); "ஒருத்தரின் முன்னஞ் சாத லுண்டவர்க் குரிய தம்மா" (கம்ப. கும்ப. 156); "வல்விற், கைம்முனி வனுஞ்செஞ் சோற்றுக் கடன்கழித் திடுதல் வேண்டும்......என்றான்", "செஞ்சோற்றுக் கடனின்றே கழியே னாகிற் றிண்டோள்கள் வளர்த்ததனாற் செயல்வே றுண்டோ" வி. பா. நிரைமீட்சி. 90, கஎ - ஆம் போர். 20.

3 விரல் - கை ; "மெல்விரல் - மெல்லிய விரலையுடையகை......... விரல் : ஆகுபெயர்" (கலி. ௫ச : 9, ந.) ; "கணவனை நோக்கி யிணை விரல் கூப்பி" பெருங். ச. 7 : 36.

4 "தெவ்வர்க்கோக்கிய வேல் - பகைவரைக் கொல்லுதற்கு அறுதியிட்டு வைத்த வேல்" (பட்டினப். 299 - 300, ந.) என்பது இங்கே அறியற்பாலது.

78. நகை தாழ் கண்ணி நல் வலம் திருத்தி — தனக்கு எக்காலமும் விளக்கந்தங்கும் 1 வஞ்சிக்கு நன்றாகிய வெற்றியை நிலைபெறுத்தி,

79. அரசு இருந்து பனிக்கும் பாசறை - பகையரசிருந்து நடுங்குதற்குக் காரணமான பாசறை,

பனிக்கும் பாசறை, 2 " நோய்தீருமருந்து " போனின்றது.

முரசு முழங்கு பாசறை - வெற்றிக்களிப்புத்தோன்ற முரசுமுழங்கும் பாசறை,

80 - 84. [இன்றுயில் வதியுநற் காணா டயருழந்து, நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு, நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு, மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து, மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து :]

வதியுநன் இன் துயில் காணாள் (80) - தன்னிடத்தே தங்குகின்றவனை இனிய துயில் கொள்ளுதலைக் காணாளாய்,

நெஞ்சு ஆற்றுப்படுத்த புலம்பொடு (81) - அவன் தன்னெஞ்சம் தான்போகின்ற வழியிற் செலுத்துதலால் தனக்குண்டான தனிமையாலே,

இது, 3 " நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும் " என்பதாம்.

நிறை தபு புலம்பு (81) - தனது நிறைகெடுத்த தனிமை,

நீடு நினைந்து (82) - இங்ஙனம் பிரிந்தாலன்றி இவ்வரசியல் நிகழாதென்று நினைத்து,

ஓடு வளை திருத்தியும் (82) - கழலுகின்றவளையைக் கழலாமற் செறித்தும்,

மையல்கொண்டும் (83) - மயக்கங்கொண்டும்,

ஒய்யென உயிர்த்தும் (83) - விரைய நெட்டுயிர்ப்புக்கொண்டும்,

---

1 வஞ்சி - பகைமேற் செல்வோர்க்குரிய அடையாள மாலை; மேற்சென்று பொருது பகைவரை அவர்க்கு உரிய இடத்தே வெல்ல நினைந்தானென்பது இதன் கருத்து. பகைவர்களுக்குரிய இடத்தில் அவர்களை வெல்லுதல் அருமையாதலின் அவ்வெற்றி சிறந்தது ; " சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா, னூக்க மழிந்து விடும் ", " சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த, ருறைநிலத்தோ டொட்ட லரிது ' (குறள். 498 - 9), " ஈண்டவ ரடுதலு மொல்லா னாண்டவர், மாணிழை மகளிர் நாணினர் கழியத், தந்தை தம்மூ ராங்கட், டெண்கிணை கறங்கச் சென் றாண்டட் டனனே " (புறநா. எஅ : 9 - 12) என்பவை இக் கருத்தை வலியுறுத்தும்.

2 கலி. ௬௦: 18. 3 தொல். அகத்திணை. சூ. 43.

எவு உறு மஞ்ஞையின் நடுங்கி இழை நெகிழ்ந்து (84)-அம்பு தைத்த 1 மயில்போல நடுங்கி அணிகலங்கள் நெகிழ்ந்து கண் புலம்புமுத்துறைப்ப (23) எனக் கூட்டுக.

துயர் உழந்து (80) தேற்றியும் (82) - அதனைக்கண்டு தானும் வருத்தமுற்று இவள் ஆற்றியிராளென்று துணிந்தும்,

85. பாவை விளக்கில் பரூஉ சுடர் அழல - பொற்பாவை ஏந்தி நின்ற 2 தகளியிலே பரியவிளக்கு நின்றெரிய,

விளக்கு : ஆகுபெயர்.

86. இடம் சிறந்து உயரிய எழுநிலை மாடத்து - தனக்குள்ள இடமெல்லாம் பொன்னாலும் மணியாலும் சிறப்புப்பெற்று உயர்ந்த 3 எழுநிலையினையுடைய மாடத்திடத்து,

87. முடங்கு இறை சொரிதரும் மா திரள் அருவி - 4 மூட்டுவாய்களினின்றும் சொரிதலைச்செய்யும் பெருமையையுடைய திரண்ட அருவிகளினுடைய,

88. இன் பல் இமிழ் இசை ஓர்ப்பனள் கிடந்தோள் - இனிய பலவாகிய முழங்குகின்ற ஓசைக்கண்ணே தலைவன் தான்கூறிய பருவம் பொய்யாமல் வருவனென்னுங் கருத்தினளாகலின் அவன்வரவினையே கருதிக்கிடந்தோளுடைய,

89. அஞ்செவி நிறைய ஆலின - அகஞ்செவி நிரம்பும்படி ஆரவாரித்தன ;

89 - 91. [வென்றுபிறர், வேண்டுபுலங் கவர்ந்த வீண்டுபெருந் தானையொடு, விசயம் :]

வென்று - வெட்டிவென்று,

பிறர் வேண்டு புலம் கவர்ந்த விசயம் - பகையரசர் எக்காலமும் விரும்பும் நிலங்களைக் கைக்கொண்ட வெற்றியாலே,

ஈண்டு பெரு தானையொடு - திரளுகின்ற பெரிய படையோடே,

அரசன் வினைமுடித்தகாலத்தே விரைந்துபோந்தானாகலின், அது கேட்டு வருகின்ற படையென்பதுதோன்ற ஈண்டுபெருந்தானையென்றார்.

---

1 மயில் முல்லைக்குமுரியது ; " முல்லைக்குப்.........புள் கானங் கோழியும் மயிலும் சிவலும் " (இறை. சூ. 1, உரை) ; " இயலு மன்னமுந் தோகையு மெதிரெதிர் பயில, வயலு முல்லையு மியைவன பலவுள மருங்கு " பெரிய. திருக்குறிப்புத். 45.

2 தகளி - அகல் ; "வையந் தகளியா" (திவ். முதற்றிரு. 1) ; இப்பெயர் தாளி யெனவும் வழங்கும்.

3 " எழுயர் மாட மூதூர் " வி. பா. நிரைமீட்சி. 118.

4 பி - ம். ' கூடுவாய் '

91. வெல் கொடி உயரி - எக்காலமும் [1] வென்றெடுக்கின்ற கொடியை எடுத்து,

91 - 2 வலன் ஏர்பு வயிரும் வளையும் ஆர்ப்ப - வெற்றிதோன்றிக் கொம்பும் சங்கும் முழங்க,

92 - 3. அயிர செறி இலை காயா அஞ்சனம் மலர - நுண்மணலிடத்தனவாகியநெருங்கின இலையினையுடைய காயா அஞ்சனம்போல அவிழ,

94. முறி இணர் கொன்றை நல் பொன் கால - தளிரினையும் கொத்தினையுமுடைய கொன்றை நன்றாகிய பொன்னைச் சொரிய,

95. [2] கோடல் குவி முகை அங்கை அவிழ - கோடலினது குவிந்த முகைகள் அகங்கைபோல விரிய,

96. [3] தோடு ஆர் தோன்றி குருதி பூப்ப - திரட்சிநிறைந்த தோன்றி உதிரம்போலப் பூப்ப,

97. கானம் நந்திய செ நிலம் பெரு வழி - காடு தழைத்த சிவந்த நிலத்திற் பெருவழியிலே,

98 - 100. [வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற், றிரிமருப் பிரலை யொடு மடமா னுகள, வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின் :]

வானம் வாய்த்த வரகு - மழை வேண்டப்பெய்த வரகு,

எதிர் செல் வெள் மழை பொழியும் திங்களில் வாங்கு கதிர் வரகின்- எதிர்காலத்துக்குப் பெய்யச்செல்கின்ற வெள்ளியமழை சிறுதுவலையைப் பொழியும் முன்பனிதொடங்குந் திங்களிலே வளைகின்ற கதிரையுடைய வரகிடத்தே,

திரி மருப்பு இரலையொடு மடம் மான் உகள - முறுக்குண்ட கொம்பினையுடைய [4] புல்வாய்க்கலையோடே மடப்பத்தையுடைய மான்துள்ள,

மழையால் தண்ணீரும் புல்லும் நிறையப்பெற்றுப் புணர்ந்துதிரியுமென்ற கருப்பொருளால், அவற்றைக்கண்ட அரசனுக்கு வேட்கை மிகுதி கூறிற்று.

மலரக் (93) கால (94) அவிழப் (95) பூப்ப (96) உகளக் (99) கானம் நந்திய பெருவழி (97) யென்க.

இவையெல்லாம் வேட்கைவிளைதற்குக் காரணமாயின.

101. முதிர் காய் [5] வள்ளி அம் காடு பிறக்கு ஒழிய - தன்பருவம் வந்தால் முதிருங்காயையுடைய வள்ளியங்காடு பின்னாக,

---

1 முருகு. 67-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

2 கோடல் - வெண்காந்தள்.

3 தோடு - தொகுதி ; "தோடு கொள் முரசம் - தொகுதிகொண்ட முரசங்கள்" புறநா. உ௩அ : 8, உரை.

4 "இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய" (தொல். மரபு. சூ. 44) ; "புல்வா யிரலை" புறநா. ௩௭௪ : 2.

5 வள்ளி - ஒருவகைக்கொடி ; பெரும்பாண். 370 - 71, ந.

102. துனை பரி துரக்கும் செலவினர் - விரைந்துசெல்லும் பரியை அதனுன் அமையாமற் கடிதாகச்செலுத்தும் செலவினையுடையராய் வந்தவருடைய,

என்றது : 1 "வினை வயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை, யிடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை, யுள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா வுடைமை யான" என்பது தோன்றக் கூறிற்று.

103. வினை விளங்கு நெடு தேர் பூண்ட மாவே - தான் எடுத்துக் கொண்ட வினை எக்காலமும் விளங்கும் நெடிதாகிய தேரைப்பூண்ட குதிரை.

தலைவி தன்னிடத்தே வதிகின்றவனை இன்றுயிலைக்காணுளாய் (80) நெஞ்சாற்றுப்படுத்த புலம்பாலே (81) ஓவிலை திருத்தியும் (82) மையல் கொண்டும் உயிர்த்தும் (83) நடுங்கி நெகிழ்ந்து (84) பூப்போலுண்கண் புலம்புமுத்துறைப்ப (23) அதுகண்டு துயருழந்து (80) தேற்றியும் (82) வற்புறுத்திப் பிரிதல் வேண்டுமெனக் கருதிக் காட்டவும் காட்டவும் காணுதவள் (22) பெருமுது பெண்டிர் (11) எவ்வம் களையெனக்கூற (21) அதுகேட்டு நீடுநினைந்து (82) பெரும்பெயல்பொழிந்த சிறுபுன் மாலையில் (6) இட்டசுடர் அழலாநிற்க (85) இமிழிசை ஓர்ப்பனள் கிடந் தோளுடைய (88) அஞ்செவிநிறையப் (89) பரந்தபாடியிலே (28) அரசிருந்து (79) ஒருகை பள்ளியொற்றி ஒருகை (75) முடியொடுசேர்த்தி (76) வேழத்தை (69) உள்ளியும் (72) மாவைச்சிந்தித்தும் (74) ஒழிந்தோரை உள்ளியும் (72) நினைந்து (76) நடுங்குதற்குக் காரணமான பாசறையிற் (79) பெரும்படைநாப்பண் வேறோர் (43) அகம் நேர்பு கண்டங்கோலி (44) யவனர் (61) புலித்தொடர்விட்ட நல்லில்லிலே (62) பொழுதளந்தறியும் (55) காண்கையர் (56) கன்னல் இனைத்தென்றிசைக் கையினுலே (58) மங்கையர் (47) திருயணிவிளக்கங்காட்டி (63) எழினி வாங்கிய பள்ளியிலே சென்று (64) இளையர் கவளங் கைப்பச் (36) சுரையர் (48) மாட்டப் (49) பெருமூதாளர் ஏமஞ்சூழ (54) மிலேச்சர் உழையராக (66) வெண்மணிநிழத்திய நடுநாளினும் (50) மண்டமர்நசையாற் கண்படைபெறுதிருந்து (67) மற்றைநாட் படைகொளுேன் விரலாலே (77) வென்று (89) கண்ணிவலந்திருத்திப் (78) பிறர்வேண்டு புலங்கவர்ந்த (90) விசயத்தாலே வெல்கொடியுயரிக் (91) காடு பிறக் கொழியப் (101) பெருவழியிலே (97) வயிரும் வளையுமார்ப்ப (92) ஈண்டு பெருந்தானையோடே (90) துனைபரிதுரக்குஞ் செலவினையுடையராய் வந்தவருடைய (102) தேர்பூண்டமா (103) ஆலின (89) வென வினை முடிக்க.

---

1 தொல். கற்பியல், சூ. 53.

1 "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்" என்பதனால் வற்புறுத்திப்பிரிதல்வேண்டுமென்றுணர்க.

தொல்காப்பியனார் கருத்திற்கேற்ப நப்பூதனார் செய்யுள் செய்தாரென்றுணர்க. இவ்வாறன்றி ஏனையோர் கூறும்பொருள்கள் இலக்கணத்தோடு பொருந்தாமையுணர்க.

காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டிற்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

1. 2 வண்டடைந்த கண்ணி வளராய்ச்சி வாணெடுங்கண்
சென்றடைந்த நோக்க மினிப்பெறுவ - தென்றுகொல்
கன்றெடுத் தோச்சிக் 3 கனிவிளவின் காயுகுத்துக்
குன்றெடுத்து நின்ற நிலை.

2. 4 புனையும் பொலம்படைப் பொங்குளைமான் றிண்டேர்
துனையுந் துனைபடைத் துன்னார் - முனையுள்
அடன்முகந்த தானை யவர்வாரா முன்னம்
கடன்முகந்து வந்தன்று கார்.

---

1 தொல். கற்பியல், சூ. 44.

2 பி-ம் 'வண்டடை கண்ணி'

3 "மலர்க்குறிஞ்சி, முதற்கேற்றவடை; 'கனிவிளவின்காய்' போல" சிலப். கச : 86 - 97, அடியார்.

4 இச்செய்யுள், புறப்பொருள் வெண்பாமாலையில், கார்முல்லை (276) என்னுந்துறைக்குக் காட்டிய வெண்பா.

# ஆறாவது

# *மதுரைக்காஞ்சி.



ஓங்குதிரை வியன்பரப்பி
னொலிமுந்நீர் வரம்பாகத்
தேன்றூங்கு முயர்சிமைய
மலைநாறிய வியன்ஞாலத்து
5 வலமாதிரத்தான் வளிகொட்ப
வியனாண்மீ னெறியொழுகப்
பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறு
மிரவுச்செய்யும் வெண்டிங்களு
மைதீர்ந்து கிளர்ந்துவிளங்க

---

* வீடு பேறு நிமித்தமாகச் சான்றோர் பல்வேறு நிலையாமையை அறைந்த மதுரைக்காஞ்சி காஞ்சித்திணைக்கு உதாரணமென்பர்; தொல். புறத். சூ. 23, ந.

1. நேர்புநிரையாகிய ஆசிரியவுரிச்சீர் வஞ்சியுள் வந்ததற்கும் (தொல். செய். சூ. 14, பேர்.), குறளடிக்கும் (ஷை ஷை சூ. 40, ந.) இவ்வடி மேற்கோள்.

1-2. வழிமோனைக்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். செய். சூ. 94, பேர்.

3. பி-ம். 'தூங்கியவுயர்'

தேன் தூங்குமுயர்சிமையம்: "பிரசந் தூங்கு மலைகிழ வோற்கே" (குறுந். ௩௯௨ : 8); "பிரசந் தூங்கு சேட்சிமை, வரை" அகநா. உசஉ : 21-2.

4. "மாமலை ஞாறிய ஞாலம்" (பரி. "வானுரெழிலி"); "கற் றோன்றி மண்டோன்றாக் காலத்தே" பு. வெ. 35.

3-4. இவ்வடிகள் பதினெட்டெழுத்தான் வந்தனவென்பர்; தொல். செய். சூ. 50, இளம்.

1-4. யா. வி. செய். சூ. 2, மேற்.

5. "வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படும்" மணி. கஉ : 91. சிந்தடியென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். செய். சூ. 38, ந.

7-8. 255-ஆம் பக்கம் முதலாவதடிக்குறிப்பைப் பார்க்க.

முரணிரணிறைக்கு இவ்வடிகள் மேற்கோள்; யா. வி. சூ.95, உரை.

10 மழைதொழி லுதவ மாதிரங் கொழுக்கத்
தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய
நிலனு மரனும் பயனெதிர்பு நந்த
நோயிகந்து நோக்குவிளங்க
மேதக மிகப்பொலிந்த
15 வோங்குநிலை வயக்களிறு
கண்டுதண்டாக் கட்கின்பத்
துண்டுதண்டா மிகுவளத்தா
னுயர்பூரிம விழுத்தெருவிற்
பொய்யறியா வாய்மொழியாற்
20 புகழ்நிறைந்த நன்மாந்தரொடு
நல்லூழி யடிப்படரப்
பல்வெள்ள மீக்கூற
வுலக மாண்ட வுயர்ந்தோர் மருக
பிணக்கோட்ட களிற்றுக்குழும்பி

---

6 - 10. "மீன்வயி னிற்ப வானம் வாய்ப்ப" பதிற். கூ0 : 1.

11. தொடுப்பு : "தொடுப்பே ருழவ ரோதைப் பாணியும்" சிலப். உ௭ : 230.

ஆயிரம் : "வேலி யாயிரம் விளையுட்டாக" பொருந. 246 - 7.

10 - 11. "வான மின்னு வசிவு பொழிய வானு, திட்ட வெல்லாம் பெட்டாங்கு விளைய" மலைபடு. 97 - 8.

12. பி - ம். 'எதிர்புந்த'

14. பி - ம். 'மேதகப் பொலிந்த'

17. பி - ம். 'தண்டாவிகு'

16 - 7. ஆறெழுத்து இருசீரடி வஞ்சிப்பாவிற்கு இவ்வடிகள் மேற்கோள் ; யா. வி. சூ. 95, உரை.

18. பி - ம். 'பூரிய விழுத்தெரு'

21. "நல்லூழி யாவர்க்கும் பிழையாது வருதனின்" (கலி. கக : 5 - 6); "முத லூழியின்பம், வரவிப் படிதன்னை வாழ்வித்த வாணன்" (தஞ்சை. 286) ; "வேதமு மெய்ம்மையு மாதியுகம்போலத் தலைசிறப்ப வந்தருளி" (விக்ரம. மெய்க். "பூமாலை") ; "ஆதியுகங் கொழுந்து விட்டுத் தழைத்தோங்க" இரண்டாம் இராசஇராச. மெய்க். "பூமருவிய பொழில்"

22. "ஆயிர வெள்ளம் வாழிய பலவே" பதிற். உக : 38.

24. பிணக்கோட்ட களிறு : "வேலாண் முகத்த களிறு" குறள். 500.

25 விணம்வாய்ப்பெய்த பேய்மகளி
ரிணையொலியிமிழ் துணங்கைச்சீர்ப்
பிணையூப மெழுந்தாட
வஞ்சுவந்த போர்க்களத்தா
ஞண்டலை யணங்கடுப்பின்
30 வயவேந்த ரொண்குருதி
சினத்தீயிற் பெயர்புபொங்கத்
தெறலருங் கடுந்துப்பின்
விறல்விளங்கிய விழுச்சூர்ப்பிற்
றொடித்தோட்கை துடுப்பாக
35 வாடுற்ற வூன்சோறு
நெறியறிந்த கடிவாலுவ
னடியொதுங்கிப் பிற்பெயராப்
படையோர்க்கு முருகயர
வமர்கடக்கும் வியன்றானைத்
40 தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்

---

25. பி-ம். 'பேஎய்'

26. துணங்கை: பெரும்பாண். 235-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

25-6. "நிணந்தின் வாய துணங்கை தூங்க" (முருகு. 56) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

28. பி-ம். 'வந்த.'

34. "தோளுங் கொண்டு துடுப்பெனத் துழாவிக் கொள்ளீர்" தக்க. 748.

34-5. "பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக், கொடித்தானை மன்னன் கொடுத்தான் - முடித்தலைத், தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக, மூளையஞ் சோற்றை முகந்து" பு. வெ. 160.

34-6. தக்க. 748, உரை, மேற்.

29-35. "முடித்தலை யடுப்பாகப், புனற்குருதி யுலைக்கொளீஇத், தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியி, னடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய" புறநா. உ௬: 8-11.

37. "பிறக்கடி யொதுங்காப் பூட்கை" பதிற். அ௦: 8.

38. பி-ம். 'படையோர் முருகயர'

29-38. "முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித், தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு, மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்ட" சிலப். உ௬: 242-4.

றென்முது கடவுட் பின்னர் மேய
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந
விழுச்சூழிய விளங்கோடைய
கடுஞ்சினத்த கமழ்கடாஅத்
45 தளறுபட்ட நறுஞ்சென்னிய
வரைமருளு முயர்தோன்றல
வினைநவின்ற பேர்யானை
சினஞ்சிறந்து களனுழக்கவு
மாவெடுத்த மலிகுரூஉத்துக
50 ளகல்வானத்து வெயில்கரப்பவும்
வாம்பரிய கடுந்திண்டேர்
காற்றென்னக் கடிதுகொட்பவும்
வாண்மிகு மறமைந்தர்
தோண்முறையான் வீறுமுற்றவு
55 மிருபெரு வேந்தரொடு வேளிர் சாயப்

---

40-42. "மறைமுது முதல்வன் பின்னர் மேய, பொறையுயர் பொதியிற் பொருப்பன்" சிலப். கஉ: இறுதிப்பகுதி.

44. யானைமதம் கமழ்தல்: "குதிபாய் கடாம், மதகோடி யுல கேழு மணநாற" (தக்க. 3) என்பதன் விசேடக்குறிப்பைப் பார்க்க; "மாவ தத்தினை யிழைத்திடும் பூட்கையின் மதநீர், காவ தத்தினுங் கமழ்தரு கலிங்கநாடு" கந்த. மார்க்கண்டேயப். 114.

45. பி-ம். 'அயறுபட்டநறுஞ்'

47. "தொழினவில்யானை" பதிற். அச : 4.

44-7. கடுஞ்சினத்த யானை: "கடுஞ்சினத்த களிறு" (மதுரைக். 179); "கடுஞ்சினத்த களிற்றெருத்தின்" யா. வி. சூ. ௩௬, மேற். "தாழிரும்"

48. பி-ம். 'உழக்க'

44-8. "செல்சமந் தொலைத்த வினைநவில் யானை, கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி, வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல" பதிற். அஉ : 4-6.

50. பி-ம். 'வெயிற்கரப்ப'

51. பி-ம். 'வாப்பரிய'

52. பி-ம். 'காற்றெனக்'

51-2. "காலெனக் கடுக்குங் கவின்பெறு தேரும்" மதுரைக். 388.

பொருதவரைச் செருவென்று
மிலங்கருவிய வரைநீந்திச்
சுரம்போழ்ந்த விகலாற்ற
லுயர்ந்தோங்கிய விழுச்சிறப்பி
60 னிலந்தந்த பேருதவிப்
பொலந்தார் மார்பி னெடியோ னும்பன்
மரந்தின்னூஉ வரையுதிர்க்கு
நரையுருமி னேறனையை
யருங்குழுமிளைக் குண்டுகிடங்கி
65 னுயர்ந்தோங்கிய நிரைப்புதவி
னெடுமதி னிரைஞாயி
லம்புமி ழயிலருப்பந்

55-6. "கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழிய, னாலங் கானத் தகன்றலை சிவப்பச், சேரல் செம்பியன் சினங்கெழு திதியன், போர்வல் லியானைப் பொலம்பூ ணெழினி, நாரரி நறவி னெருமை யூரன், தேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி, னிருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநனென், றெழுவர் நல்வல மடங்க வொருபகல், முரைசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக், கொன்று" (அகநா. ஙசு: 13-22); "எழுவர் நல்வலங் கடந்தோய்", "புனைகழ லெழுவர் நல் வல மடங்க, வொருதா னாகிப் பொருதுகளத் தடலே" புறநா. கக: 17, எசு: 12-3.

57. பி-ம். 'மலைநீந்தி'

இலங்கருவிய வரை: "இலங்கு மருவித்தே யிலங்கு மருவத்தே, வானி னிலங்கு மருவித்தே தானுற்ற, சூள்பேணான் பொய்த்தான் மலை" கலி. சுக: 18-20.

61. தார்மார்பு: "வண்ண மார்பிற்றார்" (புறநா. க: 2); நெடியோன்: "முந்நீர் விழவி னெடியோன்" (புறநா. கூ: 10); "உரைசால் சிறப்பி னெடியோன்" சிலப். உஉ: 60.

60-61. நிலந்தந்த பேருதவி நெடியோன்: "நிலந்தரு திருவி னெடியோன் போல" (மதுரைக். 763); "நிலந்தரு திருவிற் பாண்டியன்" தொல். பாயிரம்.

63. "அருநரை யுருமிற் பொருநரைப் பொறாஅச், செருமாண் பஞ்சவ ரேறே" புறநா. ருஅ: 7-8.

67. "அம்புமிழ்வ வேலுமிழ்வ" சீவக. கOஙடு.

64-7. "கடிமிளைக் குண்டுகிடங்கி, னெடுமதி னிரைஞாயி, லம்புடை யாரெயில்" பதிற். உO: 17-9.

தண்டாது தலைச்சென்று
கொண்டுநீங்கிய விழுச்சிறப்பிற்
70 றென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லைத்
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
வெற்றமொடு வெறுத்தொழுகிய
கொற்றவர்தங் கோனாகுவை
75 வானியைந்த விருமுந்நீர்ப்
பேஎநிலைஇய விரும்பௌவத்துக்
கொடும்புணரி விலங்குபோழக்
கடுங்காலொடு கரைசேர
நெடுங்கொடிமிசை யிதையெடுத்
80 தின்னிசைய முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்ட
நாடார நன்கிழிதரு
மாடியற் பெருநாவாய்
மழைமுற்றிய மலைபுரையத்
85 துறைமுற்றிய துளங்கிருக்கைத்
தெண்கடற் குண்டகழிச்
சீர்சான்ற வுயர்நெல்லி
னூர்கொண்ட வுயர்கொற்றவ
நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்

---

72. மு. ஒ. மதுரை. 124 ; பதிற். ௧௦ : 8.

70 - 72. “வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும், தெனாஅ துருகெழு குமரியின் றெற்கும், குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும், குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்”, “தென்குமரி வடபெருங்கற், குணகுடகட லாவெல்லை, குன்றுமலை காடுநா, டொன்றுபட்டு வழிமொழிய” புறநா. ௬ : 1 - 4, ௧௭ : 1 - 4.

80. கப்பலில் முரசம் முழங்குதல் : “ஆடுகொடி யுச்சியணி கூம் பினுயர் பாய்மூன், றீடுபடச் செய்திளைய ரேத்தவிமிழ் முந்நீர்க், கோடு பறை யார்ப்ப.........ஓடியதை யன்றே” சீவக. 501.

82. பி-ம். ‘நாடாரக்கரைசேர நெடுங்கொடிமிசை நன்கிழிதரும்’

89. பி-ம். ‘நீர்தெவுநிரை’

தெவ்வு கொள்ளுதலாகிய குறிப்புப்பொருளை யுணர்த்து மென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். உரி. சூ. 49, சே ; ஷை ஷை 47, ந. ; இ-வி. சூ. 290.

90 பாடுசிலம்பு மிசையேற்றத்
தோடுவழங்கு மகலாம்பியிற்
கயனகைய வயனிறைக்கு
மென்றொடை வன்கிழாஅ
ரதரி கொள்பவர் பகடுபூண் டெண்மணி
95 யிரும்பு ளோப்பு மிசையே யென்று
மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானற்
பரதவர் மகளிர் குரவையொ டொலிப்ப
ஒருசார், விழவுநின்ற வியலாங்கண்
முழவுத்தோண் முரட்பொருநர்க்
100 குருகெழு பெருஞ்சிறப்பி
னிருபெயர்ப் பேராயமொ
டிலங்கு மருப்பிற் களிறுகொடுத்தும்
பொலந்தாமரைப் பூச்சூட்டியு
நலஞ்சான்ற கலஞ்சிதறும்
105 பல்குட்டுவர் வெல்கோவே

---

90. பி-ம். 'ஏத்தத்'

92. பி-ம். 'கயமகைய'

91-3. ஆம்பி, கிழாஅர்: "ஆம்பியுங் கிழாரும் வீங்கிசை யேற்றமும்" சிலப். ௧0 : 110.

89-93. கிழார் பூட்டைப்பொறி யென்னும் பொருளில் வருமென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; சிலப். ௧0 : 110, அடியார்.

94. பி-ம். 'அதரிகொள்பவரிசை'

96. சிறுபாண். 148-ஆம் அடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

98. "விழவு நின்ற வியன்மறுகில்" மதுரை. 328.

99-102. பொருந. 125-7-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க; "தெருவி னலமருந் தெண்கட் டடாரிப், பொருவில் பொருநகீ செல்விற்-செருவில், அடுந்தடக்கை நோன்ற ளமர்வெய்யோ னீயும், நெடுந்தடக்கை யானை நிரை" பு. வெ. 218.

99-103. பொருநருக்குப் பொற்றாமரைப் பூச்சூட்டல்: பொருந. 159-60-ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.

105. "பலராகிய சான்றீரென்பது, பல்சான்றீரெனத் தொக்கது, 'பல்குட்டுவர்' என்பது போல" புறநா. ௧௧௫, உரை.

கல்காயுங் கடுவேனிலொ
டிருவானம் பெயலொளிப்பினும்
வரும்வைகன் மீன்பிறழினும்
வெள்ளமா றாது விளையுள் பெருக
110 நெல்லி னோதை யரிநர் கம்பலை
புள்ளிமிழ்ந் தொலிக்கு மிசையே யென்றுஞ்
சலம்புகன்று சுறவுக்கலித்த
புலவுநீர் வியன்பௌவத்து
நிலவுக் கானன் முழவுத் தாழைக்
115 குளிர்ப்பொதும்பர் நளித்தூவ
னிரைதிமில் வேட்டுவர் கரைசேர் கம்பலை
யிருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப் பகர்நரொ
டொலியோவாக் கலியாணர்
முதுவெள்ளிலை மீக்கூறும்
120 வியன்மேவல் விழுச்செல்வத்
திருவகையா னிசைசான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்
குடிகெழீஇய நானிலவரொடு
தொன்றுமொழிந்து தொழில்கேட்பக்
125 காலென்னக் கடிதுராஅய்
நாடுகெட வெரிபரப்பி

106. "மலைவெம்ப", "விறன்மலை வெம்ப", "இலங்குமலை வெம்பிய", "கல்காய்ந்த காட்டகம்" கலி. ௧௩: 5, ௨௦: 5, ௨௩: 3, ௧௫௦: 11.

114. நிலவு மணலுக்கு உவமை: பொருந. 213-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

115. பி-ம். 'குளிர்ப் பொதும்பு'

116. திமில் வேட்டுவர்: "வன்கைத் திமிலர்" (மதுரைக். 319); "பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே" குறுந். ௧௨௩: 5.

124. மு. ஒ. மதுரை. 72.

126. "இழிபறியாப் பெருந்தண்பணை, குரூஉக்கொடிய வெரி மேய, நாடெனும்பேர் காடாக" (மதுரைக். 154-6); "முனையெரி பரப்பிய", "ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப், போர்சுடு கமழ் புகை மாதிர மறைப்ப" (பதிற். ௧௫: 2, ௭௧: 9-10); "வாடுக விறை வநின் கண்ணி யொன்னார், நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே",

யாலங்கானத் தஞ்சுவரவிறுத்
தரசுபட வமருழக்கி
முரசுகொண்டு களம்வேட்ட
130 வடுதிறலுயர் புகழ்வேந்தே
நட்டவர் குடியுயர்க்குவை
செற்றவ ரரசுபெயர்க்குவை
பேருலகத்து மேஎந்தோன்றிச்

---

"பகைவ, ரூர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக், கொள்ளை மேவலை", "பெருந்தண்பணை பாழாக, வேமநன்னா டொள்ளெரி யூட்டினை" (புறநா. சு : 21 - 2, எ : 7 - 9, கசு : 16 - 7); "அயிலன்ன கண்புதைத் தஞ்சி யலறி, மயிலன்னார் மன்றம் படரக் - குயிலகவ, வாடிரிய வண்டிமிருஞ் செம்ம லடையார்நாட், டோடெரியுள் வைகின வூர்" பு. வே. 49.

129. முரசுகொள்ளல்: "முரசுகொண், டாண்கட னிறுத்தநின் பூண்கிளர் வியன்மார்பு" (பதிற். ௩௪ : 13 - 4); "முரைசொடு வெண் குடை யகப்படுத் துரைசெலக், கொன்றுகளம் வேட்ட ஞான்றை" (அகநா. ௩௬ : 21 - 2); "பிணியுறு முரசங் கொண்ட காலை", "அருஞ் சமஞ்சிதையத் தாக்கி முரசமொ, டொருங்ககப் படேஎ னாயின்", "விசிபிணி முரசமொடு மண்பல தந்த, திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன்" புறநா. உ௫ : 7, எஉ : 8 - 9, கஎக : 4 - 5.

களம் வேட்டல்: முருகு. 99 - 100-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

127 - 9. மதுரைக். 55 - 6-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

128 - 30. "அரசுபட வமருழக்கி, யுரைசெல முரசுவௌவி, முடித்தலை யடுப்பாகப், புனற்குருதி யுலைக்கொளீஇத், தொடித்தோட் டுடுப்பிற் றுழந்தவல்சியி, னடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய" புறநா. உசு : 6 - 11.

131 - 2. "மலைந்தோர் தேஎ மன்றம் பாழ்பட, நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப" (பெரும்பாண். 423 - 4); "இகழுநர்ப் பிணிக்கு மாற் றலும் புகழுநர்க், கரசுமுழுது கொடுப்பினு மமரா நோக்கமொடு ......... வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கையும்" (மலைபடு. 73 - 6); "செற் றோரை வழிதபுத்தன, னட்டோரை யுயர்புகூறினன்" (புறநா. உ௩௯ : 4 - 5); "நட்டாரை யாக்கிப் பகைதணித்து" (பழமொழி, 398 சிறுபஞ்ச. 18); இப்புத்தகம் உ௫உ-ஆம் பக்கத்திலுள்ள, 2-ஆம் அடிக் குறிப்பையும், உ௫௩-ஆம் பக்கத்திலுள்ள முதலடிக்குறிப்பையும் பார்க்க.

சீருடைய விழுச்சிறப்பின்
135 விளைந்துமுதிர்ந்த விழுமுத்தி
னிலங்குவளை யிருஞ்சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
நற்கொற்கையோர் நசைப்பொருந
செற்ற தெவ்வர் கலங்கத் தலைச்சென்
140 றஞ்சுவரத் தட்கு மணங்குடைத் துப்பிற்
கோழூஉன் குறைக் கொழுவல்சிப்
புலவுவிற் பொலிகூவை
யொன்றுமொழி யொலியிருப்பிற்
றென்பரதவர் போரேறே
145 யரியவெல்லா மெளிதினிற்கொண்
டுரிய வெல்லா மோம்பாது வீசி

---

135. "முதிர்வா ரிப்பி முத்தம்" புறநா. ருஙு : 1.

137 - 8. பாக்கமென்பதற்கு அரசனிருப்பென்று பொருள்கூறி இவ்வடிகளை மேற்கோளாகக் காட்டினர் ; பதிற். கங : 12, உரை.

135 - 8. கொற்கை முத்தம் : "முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறை" (நற். உங : 6) ; "பொறையன் செழியன் பூந்தார் வளவன், கொல்லி கோற்கை நல்லிசைக் குடந்தை, பாவை மூத்த மாயிதழ்க் குவளை" (யா. வி. சூ. கூ௫, மேற்.) ; சிறுபாண். 57 - 62 - ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

140. பி - ம். 'அஞ்சுவரக்கடக்கும்'

141. "புகழ்படப் பண்ணிய கோழூன் சோறும்" (மதுரைக்.533) ; "ஊன்சோற் றமலை", "பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை" (புறநா. ருங : 14, கஎஎ : 14) ; "ஊன்களோ டவைபதஞ் செய்ய" கந்த. மகேந்திர. நகர்புகு. 29.

143. ஒன்றுமொழி : "ஒன்றுமொழிக் கோசர்" குறுந். எங : 4.

146. ஓம்பாதுவீசி : "ஓம்பா வள்ளல்" (மலைபடு. 400); "ஓம்பா வீகையின் வண்மகிழ் சிறந்து" (பதிற். சஉ : 13) ; "ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக், கடந்தடு தானைச் சேர லாதனை", "ஓம்பா தீயு மாற்ற லெங்கோ" (புறநா. அ : 4 - 5, உஉ : 33) ; "ஓம்பா வீகையும்" பு. வெ. 189.

145 - 6. "கலந்தோ ருவப்ப வெயிற்பல கடைஇ, மறங்கலங்கத் தலைச்சென்று, வாளுழந்ததன் றாள்வாழ்த்தி, நாளீண்டிய நல்லகவர்க்குத், தேரோடு மாசிதறி" (மதுரை. 220 - 24) ; "நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து, நெய்தலைப் பெய்து கையிற் கொளீஇ, யருவிலை நன்கலம்

நனிபுகன் றுறைது மென்று தேற்றெழுந்து
பனிவார் சிமையக் கானம் போகி
யகநாடு புக்கவ ரருப்பம் வௌவி
150 யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து
மேம்பட மரீஇய வெல்போர்க் குருசி
லுறுசெறுநர் புலம்புக்கவர்
கடிகாவி னிலைதொலைச்சி

---

வயிரமொடு கொண்டு, பெருவிறன் மூதூர்த் தந்துபிறர்க் குதவி", "பெரிய வாயினு மமர்கடந்து பெற்ற, வரிய வென்னு தோம்பாது வீசி", "வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்து" (பதிற். 2-ஆம் பத்தின் பதிகம், சச : 3 - 4, ஞரு : 1); "அங்கட் கிணையன் றுடியன் விறலிபாண், வெங்கட்கு வீசும் விலையாகும் - செங்கட், செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி, வரிச்சிலையாற் றந்த வளம்" (பு. வெ. 16); சிறுபாண். 247 - 8-ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.

149. "அம்புமி ழயிலருப்பம்........ கொண்டு", "நாடழிய வெயில்வௌவி", "நாடுடை நல்லெயி லணங்குடைத் தோட்டி" மதுரை. 67 - 9, 187, 693.

அகமென்பதற்குப் பொருள் மருதமென்பதற்கும் (சீவக. 1613, ந.), மதில் பெரும்பான்மையும் மருதநிலத்திடத்ததென்பதற்கும் (தொல். புறத். சூ. 9, ந.) இவ்வடி மேற்கோள்.

150. மு. "யாண்டுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து" பதிற். கடு : 1.

152 - 3. பகைவர்களுடைய காவன்மரங்களை அழித்தல் : "பலர் மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின், கடியுடை முழுமுத றுமிய", "வயவர் வீழ வாளரின் மயக்கி, இடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக், கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே", "பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின், முழாரை முழுமுத றுமியப் பண்ணி" (பதிற். கக : 12 - 3, கஉ : 1 - 3, ரு-ஆம் பத்தின்பதிகம்); "வடிநவில் நவியம் பாய்தலி னூர் தொறுங், கடிமரந் துளங்கிய காவும்", "நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து, வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறுங், கடிமரந் தடியு மோசை", "கடிமரந் தடிதல்" (புறநா. உரு : 8 - 9, ருசு : 7 - 9, ருஎ : 10); "பழையன் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு, வேம்பு முதறடிந்த........பொறைய" சிலப். உஎ : 124 - 6.

153. பி - ம். 'கடிகாவு'

இகரவீற்று உரிச்சொல்லின் முன் வல்லினம் இயல்பாக வந்ததற்கு, 'கடிகா' என்பது மேற்கோள்; தொல். தொகை. சூ. 16, ந.

யிழிபறியாப் பெருந்தண்பணை
155 குரூஉக்கொடிய வெரிமேய
நாடெனும்பேர் காடாக
வாசேர்ந்தவழி மாசேப்ப
வூரிருந்தவழி பாழாக
விலங்குவளை மடமங்கையர்
160 துணங்கையஞ்சீர்த் தழூஉமறப்ப
வவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட
வணங்குவழங்கு மகலாங்க
165 ணிலத்தாற்றுங் குழூஉப்புதவி
னரந்தைப் பெண்டி ரினைந்தன ரகவக்
கொழும்பதிய குடிதேம்பிச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
170 குடுமிக் கூகை குராலொடு முரலக்
கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்

---

154 - 5. மதுரை. 126-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

159 - 60. மகளிர் துணங்கையாடல்: "துணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி" (மதுரைக். 329); "விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல" (நற். ௫0 : 3); "மகளிர் தழீஇய துணங்கை யானும்", "வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர், துணங்கை நாளும் வந்தன" (குறுந். ௩௧ : 2, ௩௬௪ : 6); "கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்", "முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை யாக" (பதிற். ௧௩ : 5, ௫௨ : 14); "தளரிய லவரொடு, துணங்கையாய்", "தமர்பாடுந் துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே", "நிரைதொடி நல்லவர் துணங் கையுட் டலைக்கொள்ள" (கலி. ௬௬ : 17 - 8, ௭0 : 14, ௭௩ : 16); "முழவிமிழ் துணங்கை தூங்கிய விழவின்" அகநா. ௩௩௬ : 16.

துணங்கையும் குரவையும்: "துணங்கையர் குரவையர்" சிலப். ௫ : 70.

162 - 3. கவையடிப்பேய்: சிறுபாண். 197-ஆம் அடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

170. "துய்த்தலைக் கூகை, கவலை கவற்றுங் குராலம் பறந்தலை." பதிற். ௪௪ : 8 - 9.

களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றார்தர
நல்லேர் நடந்த நசைசால் விளைவயற்
பன்மயிர்ப் பிணவொடு கேழ லுகள
175 வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎ
மெழாஅத்தோ ளிமிழ்முழக்கின்
மாஅத்தா ளுயர்மருப்பிற்
கடுஞ்சினத்த களிறுபரப்பி
180 விரிகடல் வியன்றானையொடு
முருகுறழப் பகைத்தலைச்சென்
றகல்விசும்பி னார்ப்பிமிழப்
பெயலுறழக் கணைசிதறிப்
பலபுரவி நீறுகைப்ப
185 வளைநரல வயிரார்ப்பப்

---

172. பி - ம். 'சண்பமன்று'
"களிறுமாய்க்குங் கதிர்க்கழனி" மதுரை. 247.
கண்பு : பெரும்பாண். 220 ; மலைபடு. 454 ; பெருங். ௨. 19 : 187.

174. பன்மயிர்ப்பிணவு : "பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது" பெரும்பாண். 342.

175 - 6. "செய்யார் தேஎந் தெருமரல் கலிப்ப" பொருந. 134.

179. கடுஞ்சினத்தகளிறு : "கடுஞ்சினத்த கொல்களிறு" (புறநா. ௯௫ : 7) ; மதுரை. 44 - 7-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

180. தானைக்குக்கடல் : முல்லை. 28-ஆம் அடி உரையின் அடிக் குறிப்பைப் பார்க்க.

180 - 81. "செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக், கடற் படை குளிப்ப மண்டி" புறநா. ௬ : 11 - 2.

183. "விடுங்கணை யொப்பிற் கதழுறை சிதறூஉ" (பரி. ௨௨ : 5) ; "காலமாரியி னம்புதைப்பினும்" (புறநா. ௨௮எ : 3) ; "பாய மாரிபோற் பகழி சிந்தினர்", "மால்வரைத் தொடுத்து வீழ்ந்த மணிநிற மாரி தன்னைக், காலிரைத் தெழுந்து பாறக் கல்லெனப் புடைத்த தேபோன், மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனை யப்பு மாரி, கோனிரைத் துமிழும் வில்லாற் கோமகன் விலக்கினானே" (சீவக. 421, 451) ; "நாற்றிசை மருங்கினுங் கார்த்துளி கடுப்பக், கடுங்கணை சிதறி" பெருங். ௩. ௨எ : 98 - 9.

185. முருகு. 120-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

பீடழியக் கடந்தட்டவர்
நாடழிய வெயில்வெளவிச்
சுற்றமொடு தூவறுத்தலிற்
செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப
190 வியன்கண் முதுபொழின் மண்டில முற்றி
யரசியல் பிழையா தறநெறி காட்டிப்
பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது
குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின்
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றங்
195 குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற்
றேய்வன கெடுகநின் றெவ்வ ராக்க

---

187. பி - ம். 'நாடுகெட வெயில்'

மதுரைக். 149 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க ; "அருங் கடி வரைப்பினூர்கவி னழிய" பட்டினப். 269.

189. "பணிந்தோர் தேஎந் தம்வழி நடப்ப" (மதுரை. 229) ; "எய்யாத் தெவ்வ ரேவல் கேட்ப" பொருந. 133.

192. "முன்றிணை முதல்வர் போல நின்று" (பதிற். அ௫ : 5) ; "தொல்லோர் சென்ற நெறிய போலவும்" புறநா. ௫அ : 25.

193. பிறை தொழப்படுதல் : "தொழுதுகாண் பிறையிற் றோன்றி", "பலர்தொழச், செவ்வாய் வானத் தையெனத் தோன்றி, இன்னம் பிறந்தன்று பிறையே" (குறுந். ௧௭அ : 5, ௩0௭ : 1 - 3) ; "ஒள் ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம், புல்லென் மாலை" (அகநா. ௨௩௧ : 9 - 10) ; "அந்தி யாரண மந்திரத் தன்புட னிவனே, வந்தி யாதவர் மண்ணினும் வானினு மில்லை" வி. பா. குருகுலச். 6.

194. ழு. சிலப். ௨௫ : 92.

193 - 4. "வளர்பிறை போல வழிவழிப் பெருகி" (குறுந். ௨அ௯ : 1) ; "சுடர்ப்பிறை போலப், பெருக்கம் வேண்டி" பெருங். ௨. 6 : 35 - 6.

195 - 6. "நீள்கதி ரவிர்மதி நிறைவுபோ னிலையாது, நாளினு நெகிழ்போடு நலனுட னிலையுமோ" (கலி. ௧௭ : 7 - 8) ; "குறைமதிக் கதிரென மாய்கவென் றவமென்றான்" கந்த. மார்க்கண்டேயப். 59.

இவ்வடிகள் சிலப். ௧0 : 1 - 3, அடியார். மேற்.

193 - 6. "ஆநா ணிறைமதி யலர்தரு பக்கம்போ, ளொளிஞளின் .........நீர்நிலம் பரப்பி.........வெண்மதி நிறையுவா போல, நாள் குறை படுதல் காணுதல் யாரே" (பரி. ௧௧ : 31 - 8) ; "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர்

முயர்நிலை யுலக மமிழ்தொடு பெறினும்
பொய்சே ணீங்கிய வாய்நட் பினையே
முழங்குகட லேணி மலர்தலை யுலகமொ
200 டுயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும்
பகைவர்க் கஞ்சிப் பணிந்தொழு கலையே
தென்புல மருங்கின் விண்டு நிறைய
வாணன் வைத்த விழுநிதி பெறினும்
பழிநமக் கெழுக வென்னாய் விழுநிதி
205 யீத லுள்ளமொ டிசைவேட் குவையே
யன்னாய் நின்னொடு முன்னிலை யெவனோ
கொன்னொன்று கிளக்குவ லடுபோ ரண்ணல்
கேட்டிசின் வாழி கெடுகநின் னவலங்
கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை

---

மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" (நாலடி. 125); "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" குறள். 782.

197. "அரும்பெற லமிழ்த மார்பத மாகப், பெரும்பெய ருலகம் பெறீஇயரோ வன்னை" குறுந். அ௩ : 1 - 2.

199. மலர்தலையுலகம் : மதுரை. 237.

கடலேணி யுலகம் : "நளியிரு முந்நீ ரேணி யாக,........வானஞ் சூடிய, மண்டிணி கிடக்கை" புறநா. ௩௫ : 1 - 3.

201. பி - ம். 'பகைவரஞ்சி'

"வலியரென வழிமொழியலன்" (புறநா. உ௩௯ : 6); "உற்ற விடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர், பற்றலரைக் கண்டாற் பணி வரோ" மூதுரை, ௬.

202. புலமென்பதற்கு நிலமென்று பொருள்கூறி இவ்வடியை மேற்கோள் காட்டினர் ; சீவக. 28, ந.

204. பி - ம். 'பழிநமக்கொழுக'

203 - 4. "வங்கம்போழ் முந்நீர் வளம்பெறினும் வேறாமோ, சங் கம்போல் வான்மையார் சால்பு" பு. வெ. 185.

205. ஈதலால் இசை உறுதல் : குறள். 231 - 2.

203 - 5. "புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி, னுல குடன் பெறினுங் கொள்ளலர்" புறநா. க௮உ : 5 - 6.

208. ஓ. பெரும்பாண். 38.

209. சேண்விளங்கு நல்லிசை : "சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ" பதிற். ௮௮ : 36.

210 தவாப்பெருக்கத் தறுயாண
ரழித்தானாக் கொழுந்திற்றி
யிழித்தானாப் பலசொன்றி
யுண்டானாக் கூர்நறவிற்
றின்றானா வினவைக
215 னிலனெடுக் கல்லா வொண்பல் வெறுக்கைப்
பயனற வறியா வளங்கெழு திருநகர்
நரம்பின் முரலு நயம்வரு முரற்சி
விறலியர் வறுங்கைக் குறுந்தொடி செறிப்பப்
பாண ருவப்பக் களிறுபல தரீஇக்
220 கலந்தோ ருவப்ப வெயிற்பல கடைஇ
மறங்கலங்கத் தலைச்சென்று
வாளுழந்ததன் றாள்வாழ்த்தி
நாளீண்டிய நல்லகவர்க்குத்

---

210. அறுயாணர்: "அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்" பொருந. 1.

215. "நிலந்தினக் கிடந்த நிதியம்" (மலைபடு. 575); "நிலம் பொறுக்க லாத செம்பொ னீணிதி" (சீவக. 402); "நிலம் பொறுக்க லாச் செம்பொனு னிறைகுடி." பிரமோத். உருத்திரா. 50.

216. "பயனற வறியா யவன ரிருக்கையும்" சிலப். ரு: 10.

217 - 8 "யாழ்.........இன்குரல் விறலியர்" (மலைபடு. 534-6); "இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி னாளோ, நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார்" (சீவக. 658); "அங்கையு மிடறுங் கூட்டி நரம்பளைந் தமுத மூறும், மங்கையர் பாடல்" (கம்ப. வரைக். 39); "யார்க்கும், நசைதரு நரம்பு கண்ட மொற்றுமை நயங் கொண் டார்ப்ப" திருவிளை. விறகு. 28.

218. விறலியர்பேறு: பொருந. 159-62-ஆம் அடிகளின் குறிப் பைப் பார்க்க.

219. பாணருக்கு யானையைத்தருதல்: பொருந. 126-7, சிறு பாண். 142-3-ஆம் அடிக்குறிப்புக்களைப் பார்க்க.

222. "அசைவி லூன்ற னசைவள னேத்தி" புறநா. கசஅ: 2.

223. பரிசிலர்க்குத் தேர்தருதல்: சிறுபாண். 142-3-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க; "தேம்பாய் கண்ணித் தேர்வீசு கவிகை, ஓம்பா வள்ளல்" (மலைபடு. 399-400); "நயந்தோர்க்குத், தேரீயும் வண்மை யவன்" (கலி. சஉ: 20-21); "தேர்வீ சிருக்கை யார நோக்கி", "தேர்வீ சிருக்கை நெடியோன்" புறநா. கக: 18, ககச: 6.

தேரோடு மாசிதறிச்
225 சூடுற்ற சுடர்ப்பூவின்
பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின்
விழுமிய பெரியோர் சுற்ற மாகக்
கள்ளி னிரும்பைக் கலஞ்செல வுண்டு
பணிந்தோர் தேஎந் தம்வழி நடப்பப்
230 பணியார் தேஎம் பணித்துத்திறை கொண்மார்
பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறைப்
படுகண் முரசங் காலை யியம்ப
வெடிபடக் கடந்து வேண்டுபுலத் திறுத்த
பணைகெழு பெருந்திறற் பல்வேன் மன்னர்

---

223-4. இரப்போர்க்கு மா சிதறல்: "இரப்போர்க், கீத றண்டா மாசித றிருக்கை" பதிற். எ௬ : 7 - 8.

தேரோடு குதிரைகளைக்கொடுத்தல் : பொருந. 163 - 5; பெரும் பாண். 487 - 90.

220-24. மதுரை. 145-6-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

228. இப்புத்தகம், ௨௪௮-ஆம் பக்கத்துள்ள முதலாவது அடிக் குறிப்பைப் பார்க்க.

229. மதுரை. 189.

231. "பருந்துயிர்த், திடைமதிற் சேக்கும் புரிசை" புறநா. ௩௪௩ : 15 - 6.

பார்வல் : "பார் வற் பாசறை" (பதிற். அ௪ : 5); "பார்வ லிருக்கை" புறநா. ௩ : 19.

232. "தழங்குரன் முரசங் காலை யியம்ப" (ஐங். ௪௪௮ : 1); "நாண்முர சிரங்கு மிடனுடை வரைப்பில்" (புறநா. ௧௬௧ : 29); "காலை முரசக் கனைகுர லோதையும்", "காலை முரசங் கனைகுர லியம்ப", "காலை முரசங் கனைகுர லியம்பும்", "காலை முரசங் கடைமுகத் தெழுதலும்" (சிலப். ௧௩ : 140, ௧௪ : 14, ௧௭ : 6, ௨௬ : 53); "காலை முரச மதிலியம்ப", "கடிமுரசங் காலைச் செய" பு. வெ. 117, 202.

233. வேண்டுபுலத்திறுத்து: "யாண்டுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து" பதிற். ௧௫ : 1.

234. பல்வேன் மன்னர் : "பல்வேற் கட்டி" (குறுந். ௧௧ : 6); 'பல்வேற் பூழியர் கோவே", "பல்வே லிரும்பொறை" பதிற். அ௪ : 5-6, அ௯ : 9.

235 கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த்
திரையிடு மணலினும் பலரே யுரைசெல
மலர்தலை யுலக மாண்டுகழிந் தோரே
அதனால், குணகடல் கொண்டு குடகடன் முற்றி
யிரவு மெல்லையும் விளிவிட னறியா
240 தவலு மிசையு நீர்த்திரள் பீண்டிக்
கவலையங் குழும்பி னருவி யொலிப்பக்
கழைவளர் சாரற் களிற்றின நடுங்க
வரைமுத லிரங்கு மேறொடு வான்ஞெமிர்ந்து
சிதரற் பெரும்பெயல் சிறத்தலிற் றுங்காது
245 குணகடற் கிவர்தருங் குருஉப்புன லுந்தி
நிலந்தெ ளீத்தங் குளங்கொளச் சாற்றிக்
களிறுமாய்க்குங் கதிர்க்கழனி
யொளிறிலஞ்சி யடைநிவந்த

235. "கரைகொன் றிரங்குங் கடல்" (சீவக. 1063); "கரை கொன் றிரங்கு கடல் புகைய" கூர்ம. இராவணன்வதை. 5.

236. மணலைப்பன்மை சுட்டற்கு உவமித்தல்: "வடுவா ழெக்கர் மணலினும் பலரே" (மலைபடு. 556); (புறநா. ௯: 11, ௪௩: 23, ௫௫: 21, ௧௩௬: 26, ௧௯௮: 19, ௩௬௩: 4); "எத்துணை யாற்று ளிடுமணல் .......அத்துணையும்பிற ரஞ்சொல்வி ஞர்மனம், புக்கனம்" (வளையாபதி); "தொல்லைநம் பிறவி யெண்ணிற் றொடுகடன் மணலுமாற்றா", "தரு மண லலகை யாற்றா" (சீவக. 270, 3048); "பரவைவெண்மண லினும்பல புரவியின் பந்தி" வி. பா. கிருட்டினன். 65.

237. மலர்தலையுலகம்: மதுரை. 199.

244. பி-ம். 'சிதரற் பெயல் கான்றழிதலிற்'

247. "களிறுமாய் கழனி", "களிறுமாய் கதிர்ச்செநெற் கழனி" (சீவக. 54, 1617); "களிறு மாய்க்குஞ் செந்நெ லங்குலை" (நைடதம், சுயம்வர. 138); "யானை மறையக் கதிர்த்தலைச் சாலி நீடி" (பிரபு. மாயையுற். 11); "களிறு மாய்ப்ப கதழ்ந்தெழு பூம்பயிர்" தணிகை. நாட்டு. 114.

"களிறுமாய் செருந்தியொடு" மதுரை. 172.

மாய்தல் - மறைதலென்பதற்கு இவ்வடிமேற்கோள்; சிலப். ௧: 2, அடியார்; சீவக. 453, ந.

முட்டாள சுடர்த்தாமரை
250 கட்கமழு நறுநெய்தல்
வள்ளித மூவிழ்நீல
மெல்லிலை யரியாம்பலொடு
வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கைக்
கம்புட் சேவ லின்றுயி லிரிய
255 வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழி லாட்டுக்
கரும்பி னெந்திரங் கட்பி னோதை
யள்ளற் றங்கிய பகடுறு விழுமங்
260 கள்ளார் களமர் பெயர்க்கு மார்ப்பே
யொலிந்த பகன்றை விளைந்த கழனி
வன்கை வினைஞ ரரிபறை யின்குரற்

---

249. சிறுபாண். 183 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

248-9. "அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை" பரி. ௧௩ : 50.

249-53. மூருத. 73-6.

255-6. "இனமீன் முகந்து, துணைபுண ருவகையர் பரத மாக்கள்.........கொள்ளை சாற்றி" அகநா. ௩0 : 2-10.

255-7. நூழில், கொன்று குவித்தலென்னும் பொருளில் வருமென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். புறத். சூ. 17, ந.

259-60. "அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப, நல்லெருது முயலு மளறுபோகு விழுமத்துச், சாகாட் டாளர் கம்பலை" (பதிற். ௨௭ : 12-4), "ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கு, முரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்", "அச்சொடு தாக்கிய பாருற் றியங்கிய, பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய, வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும், பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ" (புறநா. ௬0 : 8-9, ௯0 : 6-9), "மடுத்தவா யெல்லாம் பகடன்னான்" (குறள். 624), "நிரம்பாத நீரி யாற் றிடுமணலு ளாழ்ந்து, பெரும்பார வாடவர்போல்.........புல்லுண்ணு பொன்றும்" (சீவக. 2784), "குண்டுதுறை யிடுமணற் கோடுற வழுந்திய, பண்டிதுறை யேற்றும் பகட்டிணை போல" (பெருங். ௧. 53 : 53-4) என்பவற்றால், எருதுகள் விழுமமுறுதலும், அதனை ஏற்றுக்கொண்டே வருந்தி யுழைத்தலும் அறியலாகும்.

262. அரிபறை: "அரிச்சிறு பறையும்" பெருங். ௧. 37 : 90.

றளிமழை பொழியுந் தண்பரங் குன்றிற்
கலிகொள் சும்மை யொலிகொ ளாயந்
265 ததைந்த கோதை தாரொடு பொலியப்
புணர்ந்துட னாடு மிசையே யனைத்து
மகலிரு வானத் திமிழ்ந்தினி திசைப்பக்
குருகுநரல மனைமரத்தான்
மீன்சீவும் பாண்சேரியொடு
270 மருதஞ் சான்ற தண்பணை சுற்றி யொருசார்ச்
சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்பக்
கருங்கால் வரகி னிருங்குரல் புலர
வாழ்ந்த குழும்பிற் றிருமணி கிளர
வெழுந்த கடற்றி னன்பொன் கொழிப்பப்
275 பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி
மடக்கட் பிணையொடு மறுகுவன வுகளச்
சுடர்ப்பூங் கொன்றை தாஅய நீழற்
பாஅ யன்ன பாறை யணிந்து
நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும்
280 வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து
சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்

---

263-4. கலி, செருக்கினை யுணர்த்துதற்கும் (தொல். உரி. சூ. 51, ந.), சும்மை அரவமாகிய இசைப்பொருண்மையை உணர்த்துதற்கும் (தொல். உரி. சூ. 51, ந; இ-வி. சூ. 285-6) இவ்வடிகள் மேற்கோள்.

267. அகலிருவானத்து : மணி. ௧௧ : 91.

268. மனைமரம் : " மனைமரத் தெல்லுறு மௌவ லூறும் " (குறுந். ௧௯ : 3-4); " மனைமர மொசிய " அகநா. ௫௮ : 13.

271. " தினைகொய்யக் கவ்வைகறுப்ப " புறநா. ௧௨௦ : 10.

275. சிறுதலை நௌவி : புறநா. ௨ : 21.

275-6. முல்லை. 99-ஆம் அடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

278. " படுத்துவைத் தன்ன பாறை " (மலைபடு. 15); " யாத்தி பன்ன குடுமிக் கூர்ங்கல் " அகநா. ௫ : 13.

279. " நீலத் தன்ன விதைப்புனம் " மலைபடு. 102.

281. பி-ம். ' சுரிமுக '
" சுரிமுகிழ் முசுண்டை " அகநா. ௨௩௫ : 9.
முசுண்டை : சிறுபாண். 166 ; நெடுநல். 13 ; மலைபடு. 101.

மணிமரு ணெய்த லுறழக் காமர்
துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர
வல்லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப
285 முல்லை சான்ற புறவணிந் தொருசார்
நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய
குறுங்கதிர்த் தோரை நெடுங்கா லையவி
யைவன வெண்ணெலொ டரில்கொள்பு நீடி
யிஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும்
290 பல்வேறு தாரமொடு கல்லகத் தீண்டித்
தினைவிளை சாரற் கிளிகடி பூசன்
மணிப்பூ வவரைக் குரூஉத்தளிர் மேயு
மாமா கடியுங் கானவர் பூசல்
சேணோ னகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்
295 வீழ்முகக் கேழ லட்ட பூசல்
கருங்கால் வேங்கை யிருஞ்சினைப் பொங்கர்
நறும்பூக் கொய்யும் பூச லிருங்கே

---

282. நெய்தற்பூவிற்கு மணி: "மாக்கழி மணிப்பூ" (குறுந். ௯௫: 1); "மணிநிற நெய்தல்" (ஐங். ௯௬: 2); "மணிக்கலத் தன்ன மாயி தழ் நெய்தல்" பதிற். ௩0: 2.

279-84. பலமலர் வீழ்ந்த இடத்திற்கு வெறிக்களம்: "பல்லிதழ் தாஅய், வெறிக்களங் கடுக்கும் வியலறை" (மலைபடு. 149-50); "எறி சுருக் கலித்த விலங்குநீர்ப் பரப்பி, னறுவீ ஞாழலொடு புன்னை தாஅய், வெறியயர் களத்தினிற் றோன்றுந் துறைவன்" (குறுந். ௩௧அ: 1-3); "வெறிக்களங் கடுப்ப வீதியு முற்றமு நிறைப்போது பரப்பி" பெருங். உ. 2: 104-5.

285. "முல்லை சான்ற முல்லையம் புறவின்" சிறுபாண். 169.

288. வெண்ணெல்: மலைபடு. 471; நற். எ: 7, ௩௯0: 1; அகநா. ௪0: 13, ௨0௧: 13, ௨0௪: 10, ௨௧௧: 6, ௨௩௬: 4, ௩௪0: 14; புறநா. ௩௪அ: 1, ௩௯௯: 1.

289. இஞ்சி மஞ்சள்: "மஞ்சளு மிஞ்சியுஞ் செஞ்சிறு கடுகும்" (பெருங். ௩. 17: 142); "வளரும் வாழையு மிஞ்சியு மஞ்சளு மிடை விடாது நெருங்கிய மங்கல மகிமை மாநகர் செந்திலில்" திருப்புகழ்.

294-5. பெரும்பாண். 108-10-ஆம் அடிகளையும் அவற்றின் கீடிக்குறிப்பையும் பார்க்க.

296-7. வேங்கைப்பூக்கொய்யும் பூசல்: "தலைநாட் பூத்த

ழேறடு வயப்புலிப் பூசலொ டனைத்து
மிலங்குவெள் ளருவியொடு சிலம்பகத் திரட்டக்
300 கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிந்
தருங்கடி மாமலை தழீஇ யொருசா
ரிருவெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப
நிழத்த யானை மேய்புலம் படரக்
கலித்த வியவ ரியந்தொட் டன்ன
305 கண்விடு புடையூஉத் தட்டை கவினழிந்
தருவி யான்ற வணியின் மாமலை
வைகண் டன்ன புன்முளி யங்காட்டுக்
கமஞ்சூழ் கோடை விடரக முகந்து
காலுறு கடலி னொலிக்குஞ் சும்மை
310 யிலைவேய் குரம்பை யுழையதட் பள்ளி
யுவலைக் கண்ணி வன்சொ லிளைஞர்
சிலையுடைக் கையர் கவலை காப்ப

---

பொன்னிணர் வேங்கை, மலைமா ரிடூஉ மேமப் பூசல்” (மலைபடு. 305-6); “மன்ற வேங்கை மலர்பத நோக்கி, ஏறு திட்ட வேமப் பூசல்” (நற்றிணை. ௨௫௧ : 4-5); “ஒலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப், புலிபுலி யென்னும் பூச றோன்ற”, “கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப், பொன்னேர் புதுமலர் வேண்டிய மகளிர், ரின்றுு விசைய பூசல் பயிற்றலின்” அகநா. ௪௮ : 6-7, ௫௨ : 2-4.

299. “அருவிமாமலை” (பொருந. 235); மதுரை. 42, 57-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

300. தொல். அகத். சூ. 5, ந. மேற்.

302. எரிநைப்ப : “கோடெரி நைப்பவும்” (பொருந. 234) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

303. நிழத்தலென்பது நுணுக்கமாகிய குறிப்பை யுணர்த்துமென்றற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். உரி. சூ. 34, சே ; 32, ந ; இ-வி. சூ. 281.

310. இலைவேய் குரம்பை : பெரும்பாண். 88 ; “கொன்னிலைக் குரம்பையின்” நற்றிணை. ௨௪௪ : 7.

உழையதட்பள்ளி : பெரும்பாண். 89-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க ; “அதளுண் டாயினும் பாயுண் டாயினும், யாதுண் டாயினுங் கொடுமின்” புறநா. ௧௬௫ : 3-4.

311. உவலைக்கண்ணி : பெரும்பாண். 60-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

நிழலுரு விழந்த வேனிற்குன் றத்துப்
பாலை சான்ற சுரஞ்சேர்ந் தொருசார்
315 முழங்குகட றந்த விளங்குகதிர் முத்த
மரம்போழ்ந் தறுத்த கண்ணே ரிலங்குவளை
பரதர் தந்த பல்வேறு கூல
மிருங்கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்புப்
பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்
320 கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்
விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கல னுய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்
வைக றோறும் வழிவழிச் சிறப்ப
325 நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்
கைம்பாற் றிணையுங் கவினி யமைவர
முழவிமிழ் மகலாங்கண்

---

313. "நிழலான் றவிந்த நீரி லாரிடை" (குறுந். ௩௫௬ : 1); "நிழறேய்ந் துலறிய மரத்த........காடு", "நிழலறு நனந்தலை", "மரநிழ லற்ற வியவிற் சுரன்", "நிழன்மா யியவு" (அகநா. ௧ : 11-9, ௧0௩ : 1, ௩௫௩ : 15, ௩௯௫ : 7); "நிழலு மடியகத் தொளிக்கு மாரழற் கானத்து" (பதிஞோரந். திருவாநூர். மும். 3); "முருகு நாறு பொன் னிதழியார் முண்டகப் பதத்தி, னுருவு மாருயிர் பருவத்தின் மீளவுற் றிடல்போற், பருதி வானவ னுச்சமாம் பதத்துமென் மலர்ப்பூந், தருவி னீங்கிய நிழலெலாந் தருவடி யடைந்த" காஞ்சிப். பன்னிரு. 340.

314. "பாலை நின்ற பாலை நெடுவழி" சிறுபாண். 11.

பாலைத்திணைக்கும் நிலமுண்டென்பதற்கு இவ்வடி மேற்கோள்; நம்பி. சூ. 6, உரை; இ-வி. சூ. 382.

316. "கோடீ ரிலங்குவளை" (குறுந். ௧௧ : 1, ௩௧ : 5, ௩௬௫ : 1); "அரம்போ ழவ்வளை", "கடற்கோ டறுத்த வரம்போ ழவ்வளை", "சோடீ ரெல்வளை" (ஐங். ௧௮௫ : 3, ௧௯௪ : 1, ௧௯௬ : 1); "அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை", "வாளரந் துமித்த, வளை", "அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ", "அரம்போ ழவ்வளை செறிந்த முன்கை" அகநா. ௬ : 2, ௨௪ : 1-2, ௧௨௫ : 1, ௩௪௧ : 1.

320. "வராஅற், றுடிக்கட் கொழுங்குறை" அகநா. ௧௯௬ : 2-3.

324. வழி வழிச் சிறப்ப: மதுரை. 194.

விழவுநின்ற வியன்மறுகிற்
றுணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி
330 யின்கலி யாணர்க் குழூஉப்பல பயின்றாங்குப்
பாடல் சான்ற நன்னாட்டு நடுவட்
கலைதாய வுயர்சிமையத்து
மயிலகவு மலிபொங்கர்
மந்தி யாட மாவிசும் புகந்து
335 முழங்குகால் பொருத மரம்பயில் காவி
னியங்குபுனல் கொழித்த வெண்டலைக் குவவுமணற்
கான்பொழி றழீஇய வடைகரை தோறுந்
தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க்
கோதையி னொழுகும் விரிநீர் நல்வர
340 லவிரறல் வையைத் துறைதுறை தோறும்
பல்வேறு பூத்திரட் டண்டலை சுற்றி
யழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையு
நிலனும் வளனுங் கண்டமை கல்லா
விளங்குபெருந் திருவின் மான விறல்வே
245 ளழும்பி லன்ன நாடிழந் தனரும்

---

328. விழவு நின்ற மறுகு: மதுரை. 98; "விழவறா வியலா வணத்து" (பட்டினப். 158); "விழாவ றாதவம் பொன்மணி வீதி களில்", "வீதி நாளு மொழியா விழாவணி", "விழவறாதன விளங் கொளிமணி நெடுவீதி" (பெரிய. திருக்குறிப்புத். 98, 104; ஏயர் கோன். 3) 'விழவறா வீதிவள நாடு' என்ற நாட்டின் பெயர் இங்கே அறிதற்பாலது.

329. மதுரை. 159-60-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

339-40. "கோதைபோற் கிடந்த கோதா விரி" கம்ப. ஆறு செல். 27.

342. அழுந்துபட்டிருந்த: "அழுந்துபட் டலமரும்" மலை படு. 219.

பெரும்பாணிருக்கை: "அரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக் கையும்" சிலப். ரு : 37.

344. பி-ம். 'வானவிறல்வேள்'

மானவிறல்வேள்: மலைபடு. 164.

அழும்பில்: "பெரும்பூட் சென்னி, யழும்பி லன்ன வறாஅ யாணர்" (அகநா. ௪௪: 14-5); "ஊழ்மாறு பெயரு மழும்பில்" (புறநா.

கொழும்பல் பதிய குடியிழந் தனருந்
தொன்றுகறுத் துறையுந் துப்புத்தர வந்த
வண்ணல் யானை யடுபோர் வேந்த
ரின்னிசை முரச மிடைப்புலத் தொழியப்
350 பன்மா றோட்டிப் பெயர்புறம் பெற்று
மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்
விண்ணுற வோங்கிய பல்படைப் புரிசைத்
தொல்வலி நிலைஇய வணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
355 மழையாடு மலையி னிவந்த மாடமொடு
வையை யன்ன வழக்குடை வாயில்

---

உ௮௩ : 4-5); "அறைபறை யென்றே யழும்பில்வே ளுரைப்ப", "அழும்பில் வேளோடு" சிலப். உ௫ : 177, உ௮ : 205.

349. மதுரை. 129.

"இரங்கிசை முரச மொழியப் பரந்தவ, ரோடுபுறங் கண்ட ஞான்றை" (அகநா. ௧௧௬ : 17-8); "உரைசால் சிறப்பின் முரை சொழிந் தனவே", "முரசம், பொறுக்குந ரின்மையி னிருந்துவிளிந் தனவே" (புறநா. ௬௨ : 9, ௬௩ : 7-8); "அமர ரிட்ட முரசுள" (தக்க. 745); "இடப்புண்ட பேரிஞ்சி வஞ்சியி லிட்ட, கடப்ப முதுமுரசங் காணீர்" இராச. உலா.

இடைப்புலத் தொழிய : "இடைப்புலத் தொழிந்த வேந்து கோட்டியானை" மதுரை. 688.

351. மணிநீர் : சிறுபாண். 152-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க ; "மணிநீர் நிறைந்தன்று" (பரி. ௧௨ : 93) ; "மணிமரு டீநீர்" (அகநா. ௩௬௮ : 10) ; "மணிநிறத் தெண்ணீர்", "மணிதெளித் தன்ன வணிநிறத் தெண்ணீர்" (பெருங். ௧. 55 : 2, ௩. 4 : 39) ; "மணிநீர்ப் பொய்கை" பொருளியல்.

352. பல்படைப்புரிசை : "படைமதில்" (பெருங். ௩. 4 : 3) ; "படையார் புரிசைப் பட்டினம்" தே. திருஞா. பல்லவனீச்சரம்.

354. போர்க்கதவு : பட்டினப். 40 ; கலி. ௯௦ : 12 ; பெருங். ௩. 3 : 25, 6 : 145.

353-4. "புரைதீர்ந், தையவி யப்பிய நெய்யணி நெடுநிலை" (நெடுநல். 85-6); "நெய்யோ டிமைக்கு மையவித் திரள்காழ், விளங்கு நகர் விளங்க" நற். ௩௭௦ : 3-4.

355. "மலைபுரை மாடத்து" மதுரை. 406.

356. "வளிமறையு மின்றி வழக்கொழியா வாயில்" பு. வெ. 278.

வகைபெற வெழுந்து வான மூழ்கிச்
சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில்
யாறுகிடந் தன்ன வகனெடுந் தெருவிற்
360 பல்வேறு குழாஅத் திசையெழுந் தொலிப்ப
மாகா லெடுத்த முந்நீர் போல
முழங்கிசை நன்பணை யறைவனர் நுவலக்
கயங்குடைந் தன்ன வியந்தொட் டிமிழிசை
மகிழ்ந்தோ ராடுங் கலிகொள் சும்மை
365 யோவுக்கண் டன்ன விருபெரு நியமத்துச்
சாறயர்ந் தெடுத்த வுருவப் பல்கொடி
வேறுபல் பெயர வாரெயில் கொளக்கொள
நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி
நீரொலித் தன்ன நிலவுவேற் றானையொடு
370 புலவுப்படக் கொன்று மிடைதோ லோட்டிப்
புகழ்செய் தெடுத்த விறல்சா னன்கொடி
கள்ளின் களிநவில் கொடியொடு நன்பல
பல்வேறு குழூஉக்கொடி பதாகை நிலைஇப்

358. பி - ம். 'சில்காற்றசைக்கும்'

359. மு. நெடுநல். 30; நற். ௨௦௦: 3; "யாறெனக் கிடந்ததெரு" (மலைபடு. 481); "யாறுகண் டன்ன வகன்கனை வீதியுள்", "நீத்தியாற் றன்ன நெடுங்கண் வீதி" பெருங். ௨. ௭: 7, ௫. 7: 23.

363. "குடைதொறுந், தெரியிமிழ் கொண்டநும் மியம்போ லின்னிசை" (மலைபடு. 295 - 6); "தண்ணுமை முழவ மொந்தை தகு ணிச்சம் பிறவு மோசை, யெண்ணிய விரலோ டங்கை புறங்கையி னிசைய வாங்கித், திண்ணிதிற் றெறித்து மோவார் கொட்டியுங் குடைந்து மாடி" சீவக. 965.

365. "ஓவத் தன்ன விடனுடை வரைப்பின்" (புறநா. ௨௫௧: 1) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

365 - 6. "விழவரு வியலா வணத்து, மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய, மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்" பட்டினப். 158 - 60.

368 - 9. முருகு. 67-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

369 - 71. முல்லை. 90 - 91.

372. பெரும்பாண். 337-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

365 - 73. அங்காடியிற் பலவகைக் கொடிகளுள்ளவாதல்: "கூல மறுகிற் கொடியெடுத்து நுவலு, மாலைச் சேரி" (சிலப். ௫: 132-3);

பெருவரை மருங்கி னருவியி னுடங்கப்
375 பனைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்
வீங்குபிணி நோன்கயி றரீஇ யிதைபுடையூக்
கூம்புமுதன் முருங்க வெற்றிக் காய்ந்துடன்
கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ
நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல
380 இருதலைப் பணில மார்ப்பச் சினஞ்சிறந்து
கோலோர்க் கொன்று மேலோர் வீசி
மென்பிணி வன்றொடர் பேணாது காழ்சாய்த்துக்
கந்துநீத் துழிதருங் கடாஅ யானையு

---

"கொடியணி கூலம்", "பகலங் காடியிற் பல்லவ ரெடுத்த, பல்வேறு கொடியும் படாகையும் நிரைஇ" பெருங். க. 35 : 152, உ. 6 : 20 - 21.

373 - 4. "வேறுபஃ றுகிலி னுடங்கி.........இழிதரு மருவி" முருகு. 296 - 316.

376. பி - ம். 'வீக்குபிணி நோன்கயிறு'

380. "மறவோன் சேனை வேழச் சங்கமும்" பெருங். க. 33: 78.

381. "கீழு மேலுங் காப்போர் நீத்த, வறுந்தலைப் பெருங்களிறு" (நற். கஅஉ : 8 - 9) ; "நெடுவேயும் பாகுஞ் சுளிந்துவரு கடகளிறு", "வேயொடு பாகடர் கம்ப நிகள மதாசலம்" வி. பா. வசந்த. 11, பதினேழாம். 66.

மேலோர் : மணி. கக : 20.

375 - 83. களிற்றிற்கு நாவாய் : "நிறையப் பெய்த வம்பி காழோர், சிறையருங் களிற்றிற் பரதவ ரொய்யும்" (நற். எச : 3 4) ; "கூம்புமுதன் முறிய வீங்குபிணி யவிழ்ந்து, கயிறுகால் பரிய......... மயங்குகா லெடுத்த வங்கம் போலக், காழோர் கையற மேலோ ரின்றி, .........ஒருவழித் தங்காது, பாகும் பறையும் பருந்தின் பந்தரும்...... விளிப்ப.........கால வேகங் களிமயக் குற்றென" (மணி. ச : 30 - 44) ; "ஆடுகொடி யுச்சியணி கூம்பினுயர் பாய்மூன், நீடுபடச் செய்திளைய ரேத்தவிமிழ் முந்நீர்க், கோடுபறை யார்ப்பக்கொழுந் தாட்பவழங் கொல்லா, ஓடுகளி றொப்பவினி தோடியதை யன்றே", "மாக்கடற் பெருங்கலங் காலின் மாறுபட், டாக்கிய கயிறரிந் தோடி யெங்கணும், போக்கறப் பொருவன போன்று தீப்படத், தாக்கின வரசுவாத் தம்மு ளென்பவே", "பண்ணார் களிறேபோற் பாயோங் குயர்நாவாய்" (சீவக. 501, 2231, 2793) ; "களிறுங் கந்தும் போல நளிகடற், கூம் புங் கலனுந் தோன்றும்" (தொல். உவம. சூ. 37, மேற்.) ; "அங்கட் கடலி னெடுங்கூம் பகநிமிர்ந்த, வங்கத் தலையுய்க்கு மீகான் றனைமானத்,

மங்கண்மால் விசும்பு புதைய வளிபோழ்ந்
385 தொண்கதிர் ஞாயிற் றாறளவாத் திரிதருஞ்
செங்கா லன்னத்துச் சேவ லன்ன
குரூஉமயிர்ப் புரவி யுராலிற் பரிநிமிர்ந்து
காலெனக் கடுக்குங் கவின்பெறு தேருங்
கொண்ட கோலன் கொள்கை நவிற்றலி
390 னடிபடு மண்டிலத் தாதி போகிய
கொடிபடு சுவல விடுமயிர்ப் புரவியும்
வேழத் தன்ன வெருவரு செலவிற்
கள்ளார் களம ரிருஞ்செரு மயக்கமு
மரியவும் பெரியவும் வருவன பெயர்தலிற்
395 றீம்புழல் வல்சிக் கழற்கான் மழவர்
பூந்தலை முழவி னோன்றலை கடுப்பப்
பிடகைப் பெய்த கமழ்நறும் பூவினர்

---

திங்கட் குடைநிழற்றத் தீந்தே மதங்கவிழ்க்கும், வெங்கட் களிற்றின் மிசைப்பவனி போந்தணைந்தான்" (திருவிளை. வெள்ளையானை. 7); "மதலை நிரையின் வரிசை யெனத்திண், மதமைக் களிறு மருவ" ஆனந்த. வண்டு. 212.

360-83. பொருந. 171-2-ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

384. "அங்க ணிருவிசும்பு" (அகநா. ௧௩௬ : 4); "அங்கண் விசும்பின்" நாலடி. 151, 373.

385. பி-ம். 'ஞாயிறுளவா'

385-7. குதிரைக்கு அன்னப்புள் உவமை: "விசும்பா டன்னம் பறைநிவந் தாங்குப், பொலம்படைப் பொலிந்த வெண்டேர்" (குறுந். ௨௦௫ : 2-3); "நிரைபறை யன்னத் தன்ன விரைபரிப், புல்லுளைக் கலிமா", "வயங்குசிறை யன்னத்து நிரைபறை கடுப்ப, நால்குடன் பூண்ட கானவில் புரவி" (அகநா. ௨௩௪ : 3-4, ௩௩௪ : 10-11); "பானிறப் புரவி யன்னப் புள்ளெனப் பாரிற் செல்ல" கம்ப. எழுச்சி. 69.

388. தேருக்குக் காற்று: மதுரை. 51-2; "காலுறழ் கடுந் திண்டேர்", "வளியி னியன்மிகுந் தேரும்" (கலி. ௩௩ : 31, ௯௦ : 15); "காலிய னெடுந்தேர்" பொருளியல்.

397. "மடவரன் மகளிர் பிடகைப் பெய்த, செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்து" நெடுநல். 39-40.

பலவகை விரித்த வெதிர்பூங் கோதையர்
பலர்தொகு பிடித்த தாதுகு சுண்ணத்தர்
400 தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்
நீடுகொடி யிலையினர் கோடுசுடு நூற்றின
ரிருதலை வந்த பகைமுனை கடுப்ப
வின்னுயி ரஞ்சி யின்னா வெய்துயிர்த்
தேங்குவன ரிருந்தவை நீங்கிய பின்றைப்
405 பல்வேறு பண்ணியந் தழீஇத்திரி விலைஞர்
மலைபுரை மாடத்துக் கொழுநிழ லிருத்தர
விருங்கடல் வான்கோடு புரைய வாருற்றுப்
பெரும்பின் னிட்ட வானரைக் கூந்தலர்
நன்னர் நலத்தர் தொன்முது பெண்டிர்
410 செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை
செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றி யன்ன
செய்யர் செயிர்த்த நோக்கினர் மடக்க

399. "தாதுபல வமைத்துச், சுண்ணப் பெருங்குடம் பண்ணமைத் திரீஇ" பெருங். உ. 2 : 73 - 4.

398 - 9. "சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்......... இடித்த சுண்ணத்தர்" சிலப். மங்கல. 56-7.

397 - 9. "வண்ணமுஞ் சாந்து மலருஞ் சுண்ணமும்.........பகர்வோர்" சிலப். ரு : 134 - 5.

400. "பூமாண்ட தீந்தேன்றொடை - பொலிவு மாட்சிமைப் பட்ட தேன்போல இனிய நீரையுடைய தாறு; 'தகைசெய்.........காய்' என்றார் பிறரும்" சீவக. 31, ந.

400 - 401. "பழுக்காய்க் குலையும் பழங்காய்த் துணருங், களிக் காய்ப் பறியுந் துவர்க்கா யும்பலும்,.........தளிரிலை வட்டியொடு......... எண்ணெ தீயுந ரின்மொழிக் கம்பலும்" பெருங். உ. 2 : 70 - 75.

405. "பண்ணியப் பகுதியும் பகர்வோர்" சிலப். ரு : 135.

406. மலைபுரைமாடம் : மதுரை. 355.

407 - 8. முருகு. 127.

410. "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த" புறநா. க : 9.

411. "பசந்தென்றார், மாலைக்காலத்துப் பரந்த பச்சை வெயிலை; 'செல்.........யன்ன' என்றார் மதுரைக்காஞ்சியிலும். இக்காலத்து இதனைக் காடுகிழாள் வெயிலென்ப" சிலப். ச : 5 - 8, அடியார்.

410 - 12. "பாவை, விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்"

ஐஇய கலுழ் மாமையர் வைவெயிற்று
வார்ந்த வாயர் வணங்கிறைப் பணைத்தோட்
415 சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத்
தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை
மையுக் கன்ன மொய்யிருங் கூந்தன்
மயிலிய லோரு மடமொழி யோருங்
கைஇ மெல்லிதி னொதுங்கிக் கையெறிந்து
420 கல்லா மாந்தரொடு நகுவனர் திளைப்பப்
புடையமை பொலிந்த வகையமை செப்பிற்
காம ருருவிற் றும்வேண்டு பண்ணியங்

---

(நற். ௧௬௨ : 8 - 10) ; "தாவி னன்பொன் றைஇய பாவை, விண்டவ ழிள வெயில் கொண்டுநின் றன்ன, மிகுகவின்" அகநா. ௨௧௨ : 1 - 3.

413. ஐஇய.........மாமையர்: "அங்கலுழ் மாமை, நுண்பூண் மடந்தை" (குறுந். ௧௪௭ : 2 - 3) ; "அங்கலுழ் மாமை கிளைஇய, .........மாஅ யோளே", "அங்கலுழ் மாமை யஃதை" அகநா. ௪௧ : 15 - 6, ௬௬ : 12.

414. வணங்கிறைப் பணைத்தோள்: "வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்" (குறுந். ௩௬௪ : 5) ; "வணங்கிறையா ரணைமென் றோள்" (பரி. ௧௭ : 33 - 4) ; "வணங்கிறைப் பணைத்தோள்......... விறலியர்" புறநா. ௩௨ : 3 - 4.

413 - 4. வைவெயிற்று வார்ந்த வாயர்: "வார்ந்திலங்கு வைவெ யிற்றுச் சின்மொழி யரிவையை" குறுந். ௧௪ : 2.

416. குறுந். ௨௭௬ : 3-4 ; கலி. ௬௭ : 12, ௧௧௭ : 4, ௧௨௫ : 8; அகநா. ௧௭௭ : 19 - 20.

417. "அஞ்சனம் புரைபைங்கூந்தல்" பாகவதம். ௧௦. 30 : 4) ; "ஓதி யவிழ்த்து வார்மைக் குழம்பின், மறைவுறு மணிப்பொற் பாவை போலுடன் மறைய விட்டாள்" பிரபு. மாதேவி. 51.

418. மயிலியலோர்: ப. ௬௪, 3-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; பொருந. 47 ; சிறுபாண். 16 ; "புனமயில்போன் - மன்னி......... இயங்குகின்ற தாயத் திடை" (கிளவி விளக்கம்) ; "ஊச றெழி லிழக்கு மொப்பு மயிலிழக்கும்.........பூங்குழலி நீங்க" கண்டனலங்.

419. பி - ம். 'தைஇ மெல்லிதின்'

420. நகுவனர் திளைப்ப: "விரிநீர்ச் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே", "துறைவனொ டொருநா, ணக்கதோர் பழியும்" குறுந். ௨௨௬ : 7, ௩௨௦ : 4 - 5.

கமழ்நறும் பூவொடு மனைமனை மறுக
மழைகொளக் குறையாது புனல்புக மிகாது
425 கரைபொரு திரங்கு முந்நீர் போலக்
கொளக்கொளக் குறையாது தரத்தர மிகாது
கழுநீர் கொண்ட வெழுநா ளந்தி
யாடுதுவன்று விழவி னாடார்த் தன்றே
மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்
430 நாளங் காடி நனந்தலைக் கம்பலை
வெயிற்கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்
செக்க ரன்ன சிவந்து நுணங் குருவிற்
கண்பொரு புகூஉ மொண்பூங் கலிங்கம்
பொன்புனை வாளொடு பொலியக் கட்டித்
435 திண்டேர்ப் பிரம்பிற் புரளுந் தானைக்
கச்சந் தின்ற கழறயங்கு திருந்தடி

---

421 - 3. செப்பிற் பூ: "பாதிரிக் குறுமயிர் மாமலர், நறுமோ ரோடமொ டுடனெறிந் தடைச்சிய, செப்பு" (நற். ௩௩௭: 4 - 6); "மடைமாண் செப்பிற் றமிய வைகிய, பெய்யாப்பூ" (குறுந். ௯: 2 - 3); "வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம்" (கலி. ௬௮: 15): "செப்புவா யவிழ்ந்த தேம்பொதி நறுவிரை, நறுமலர்" (சிலப். ௨௨: 121 - 2); "வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போல்" (மணி. ௪: 65); "பித்திகைக் கோதை செப்புவாய் மலரவும்", "பூத்தகைச் செப்பும்" (பெருங். ௧. 33: 76, ௩. 5: 78); "வேயாது செப்பி னடைத்துத் தமிவைகும் வீயினன்ன" திருச்சிற். 374.

424 - 5. "மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது......... முழங்குதிரைப் பனிக்கடல்", "கொளக்குறை படாமையின் முந்நீ ரனையை" பதிற். ௪௫: 19 - 22, ௯௦: 16.

426 - 7. கொளக்.........நீர்: "கொளக்குறை படாஅக் கோடு வளர் குட்டத்து" (அகநா. ௧௯௨: 1), "தைஇத் திங்கட் டண்கயம் போலக், கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்" புறநா. ௭௦: 6 - 7.

429. "நீண்மாடக் கூடலார்" (கலி. ௩௫: 17); முருகு. 71-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

430. நனந்தலை: முல்லை. 1.

433. பொருந. 82 - 3-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க; "இழையறி வாரா, வொண்பூங் கலிங்கம்" புறநா. ௩௮௩: 10 - 11.

மொய்ம்பிறந்து திரிதரு மொருபெருந் தெரியன்
மணிதொடர்ந் தன்ன வொண்பூங் கோதை
யணிகிளர் மார்பி னாரமொ டளைஇக்
440 காலியக் கன்ன கதழ்பரி கடைஇக்
காலோர் காப்பக் காலெனக் கழியும்
வான வண்கை வளங்கெழு செல்வர்
நாண்மகி ழிருக்கை காண்மார் பூணொடு
தெள்ளரிப் பொற்சிலம் பொலிப்ப வொள்ளழற்
445 றுவற விளங்கிய வாய்பொ னவிரிழை
யணங்குவீழ் வன்ன பூந்தொடி மகளிர்
மணங்கமழ் நாற்றந் தெருவுடன் கமழ
வொண்குழை திகழு மொளிகெழு திருமுகந்
திண்கா ழேற்ற வியலிரு விலோதந்
450 தெண்கடற் றிரையி னசைவளி புடைப்ப
நிரைநிலை மாடத் தரமியந் தோறு
மழைமாய் மதியிற் றோன்றுபு மறைய
நீரு நிலனுந் தீயும் வளியு
மாக விசும்போ டைந்துட னியற்றிய
455 மழுவா ணெடியோன் றலைவ னாக

440. குதிரையின் வேகத்திற்குக் காற்றின் வேகம்: "காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி", "வளிபூட் டினையோ" (அகநா. உஉச: 5, ௩௮௪: 9); "காலியற் புரவி", "வளிநடந் தன்ன வாச்செல லிவுளி யொடு", "வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி", "வெவ்விசைப் புரவி வீசுவளி யாக" (புறநா. கஎ௮: 2, ககஎ: 1, ௩௦௪: 3, ௩௬௧: 7); "காலியற் புரவியொடு", "காலியற் செலவிற், புரவி" பெருங். க. 38: 349, உ. 18: 95-6.

442. வானவண்கை: சிறுபாண். 124-6; "மழைசுரந் தன்ன வீகை" (மலைபடு. 580); "மழைதழீஇய கையாய்" (சீவக. 2779); "வருமால் புயல்வண்கை மான்றேர் வரோதயன்", "மழையும் புரை வண்கை வானவன்" (பாண்டிக்கோவை); "புயல்போற் கொடைக்கை" (தண்டி. மேற்.); "கார்நிகர் வண்கை" நன். சிறப்.

444. "தெள்ளரிச் சிலம்பார்ப்ப" கலி. ௬௧: 8.

448. பி-ம். 'குழையிருந்த வொளிகெழு'

454. மாகவிசும்பு: பரி. க: 47; அகநா. கசக: 6, உ௫௩: 24; புறநா. ௩௫: 18.

மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னுருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபி னுயர்பலி கொடுமா
460 ரந்தி விழவிற் றூரியங் கறங்கத்
திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
யோம்பினர்த் தழீஇத் தாய்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமு மவரு மோராங்கு விளங்கக்
465 காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்துபுறங் காக்குங் கடவுட் பள்ளியுஞ்
சிறந்த வேதம் விளங்கப்பாடி
விழுச்சீ ரெய்திய வொழுக்கமொடு புணர்ந்து
470 நிலமமர் வையத் தொருதா மாகி
யுயர்நிலை யுலக மிவணின் றெய்து
மறநெறி பிழையா வன்புடை நெஞ்சிற்
பெரியோர் மேஎ யினிதி னுறையுங்
குன்றுகுயின் றன்ன வந்தணர் பள்ளியும்

---

456. முருகு. 128.

457-8. "வாடாப் பூவி னிமையா நாட்டத்து, நாற்ற வுணவி னோரும்" புறநா. ௬௨: 16-7.

461-3. குழந்தைகளுக்குத் தாமரைப்போது: "போதவிழ் தாமரை யன்னநின், காதலம் புதல்வன்" (ஐங். ௪௨௪); "நீரு, ளடை மறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட, குடைநிழற் றோன்றுநின் செம்மலை" (கலி. ௮௪: 10-11); "பொய்கையுண் மலரென வளர்ந்து" சீவக. 2756.

466. "பூவும் புகையுஞ் சாவகர் பழிச்ச" மதுரை. 476.

470. பி-ம். 'ஒருதிரமாகி'

474. மதுரை. 488, 501-2.

455-74. "நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலு, முவணச் சேவ லுயர்த்தோ னியமமு, மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமுங், கோழிச் சேவற் கொடியோன் கோட்டமு, மறத்துறை விளங்கிய வறவோர் பள்ளியும்" (சிலப். ௧௪: 7-11); "நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப், பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக" மணி. ௧: 54-5.

475 வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்
பூவும் புகையுஞ் சாவகர் பழிச்சச்
சென்ற காலமும் வரூஉ மமயமு
மின்றிவட் டோன்றிய வொழுக்கமொடு நன்குணர்ந்து
வானமு நிலனுந் தாமுழு துணருஞ்
480 சான்ற கொள்கைச் சாயா யாக்கை
யான்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப்
பல்புரிச் சிமிலி நாற்றி நல்குவரக்
கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்
485 செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந் தோங்கி
யிறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையுங்
குன்றுபல குழீஇப் பொலிவன தோன்ற
வச்சமு மவலமு மார்வமு நீக்கிச்
490 செற்றமு முவகையுஞ் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்

---

481. பி-ம். 'செறிநர் நோன்மார்'

477-81. முக்காலமுமறியும் அறிஞர்: "புகழ்நுவல முக்காலமு, நிகழ்பறிபவன்", "இம்மூ வுலகி னிருள்கடியு மாய்கதிர்போ, லம்மூன்று முற்ற வறிதலால்" பு. வெ. 167 - அறிவன் வாகை.

482-3. கரண்டை, சிமிலி: "சிமிலிக் கரண்டையன்" மணி. ௩: 86.

484. "நிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பின்" (அகநா. ௧௦௫: 7); "பனிக்கயத் தன்ன நீணகர்" புறநா. ௩௭௮: 7.

485. "செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்" (நெடுநல். 112); "செம்புறழ் புரிசை" (அகநா. ௩௭௫: 13); "செம்புறழ் புரிசை", "செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை" (புறநா. ௩௭: 11, ௨௦௧: 9); "செம்மைச் சேரிஞ்சி", 'செம்படுத்த செழும்புரிசை", "செம்புகொப் புளித்த மூன்று மதில்"; (தே.) "செம்புகொண் டன்ன விஞ்சித் திருநகர்" (சீவக. 439); "செம்பிட்டுச் செய்த விஞ்சி" கம்ப. கும்ப. 159.

488. மதுரை. 474.

491. "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற், கோடாமை சான்றோர்க் கணி" குறள். 118.

சிறந்த கொள்கை யறங்கூ றவையமு
நறுஞ்சாந்து நீவிய கேழ்கிளர் ரகலத்
தாவுதி மண்ணி யவிர்துகின் முடித்து
495 மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல
நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
யன்பு மறனு மொழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களு
500 மறநெறி பிழையா தாற்றி னொழுகிக்
குறும்பல் குழுவிற் குன்றுகண் டன்ன
பருந்திருந் துகக்கும் பன்மா ணல்லிற்
பல்வேறு பண்டமொ டிண்மலிந்து கவினி
மலையவு நிலத்தவு நீரவும் பிறவும்
505 பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு

492. அறங்கூறவையம்: "மறங்கெழு சோழ ருறந்தை யவையத், தறங்கெட லறியா தாங்கு" (நற். ௪௦௦: 7-8); "அறங்கெழு நல் லவை" (அகநா. ௯௩: 5); "உறந்தை யவையத், தறநின்று நிலையிற்று" (புறநா. ௩௯: 8-9); "அறங்கூரவையம்" (சிலப். ௫: 135); "அற நிலை பெற்ற வருள்கொ ளவையத்து" பெருங். ௧. 34: 25.

491-2. "நவைநீங்க நடுவுகூறு, மவைமாந்தர்" பு. வெ. 173.

489-92. "காய்த லுவத்த லகற்றி யொருபொருட்க, ணாய்த லறிவுடையார் கண்ணதே-காய்வதன்க, ணுற்றகுணந் தோன்றா தாகு முவப்பதன்கட், குற்றமுந் தோன்றா கெடும்" அறநெறி. 22.

493. "நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பில்" முருகு. 193.

கெழுவென்னும் உரிச்சொல் நிறப்பண்பை உணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 5, ந.; இ-வி. சூ. 283.

494. மண்ணுதலென்பதற்குப் பண்ணுதலெனப் பொருள்கூறி இவ்வடியை மேற்கோள் காட்டினர்; சீவக. 202, 735, 1808.

497. "அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை, பண்பும் பயனு மது" குறள். 45.

499. காவிதி மாக்கள்: "கடிநாட் செல்வத்துக் காவிதி மாக்கள்"; "கணக்கருந் திணைகளுங் காவிதிக் கணமும்" பெருங். ௩. 22: 282, ௫. 6: 90.

500. "ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை" குறள். 48.

501-2. குன்று கண்டன்ன இல்: மதுரை. 474, 488.

சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரு
மழையொழுக் கறாஅப் பிழையா விளையுட்
பழையன் மோகூ ரவையகம் விளங்க
நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன
510 தாமேஎந் தோன்றிய நாற்பெருங் குழுவுங்
கோடுபோழ் கடைநருந் திருமணி குயினருஞ்
சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்
பொன்னுரை காண்மருங் கலிங்கம் பகர்நருஞ்
செம்புநிறை கொண்மரும் வம்புநிறை முடிநரும்
515 பூவும் புகையு மாயு மாக்களு
மெவ்வகைச் செய்தியு முவமங் காட்டி
நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற்
கண்ணுள் வினைஞரும் பிறருங் கூடித்
தெண்டிரை யவிரறல் கடுப்ப வொண்பல்
520 குறியவு நெடியவு மடிதரூஉ விரித்துச்
சிறியரும் பெரியருங் கம்மியர் குழீஇ
நால்வேறு தெருவினுங் காலுற நிற்றரக்
கொடும்பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்துந்
தண்கட லுடனெண்பூங் கோதை
525 பெருநா ளிருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை கடுப்பப் பலவுடன்
சேறு நாற்றமும் பலவின் சுளையும்
வேறுபடக் கவினிய தேமாங் கனியும்

---

504 - 6. "மலையவுங் கடலவு மாண்பயந் தரூஉம்.........ஓடாவம் பலர்" பெரும்பாண். 67 - 76.

508 - 9. "பெரும்பெயர் மாறன் றலைவ னாகக், கடந்தடு வாய்வா ளிளம்பல் கோச ரியனெறி மரபினின் வாய்மொழி கேட்ப" மதுரை. 772 - 4.

516. பி - ம். 'எண்வகைச் செய்தியும்'

518. கண்ணுள்வினைஞர் : சிலப். ௫ : 30.

516-8. "எவ்வகை யுயிர்களு முவமங் காட்டி, வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய, கண்கவ ரோவியம்" மணி. ௩ : 129 - 31.

524. பி - ம். 'தெண்கடலுடன்'

525. பெருநாளிருக்கை : "திருநிலை பெற்ற பெருநா ளிருக்கை" சிலப். ௨௩ : 56.

பல்வே றுருவிற் காயும் பழனுங்
530 கோண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி
மென்பிணி யவிழ்ந்த குறுமுறி யடகு
மமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக் கடிகையும்
புகழ்படப் பண்ணிய பேருன் சோறுங்
கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு பிறவு
535 மின்சோறு தருநர் பல்வயி னுகர
வாலிதை யெடுத்த வளிதரு வங்கம
பல்வேறு பண்ட மிழிதரும் பட்டினத்
தொல்லெ னிமிழிசை மானக் கல்லென
நனந்தலே வினைஞர் கலங்கொண்டு மறுகப்
540 பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோத
மிருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந்
துருகெழு பானாள் வருவன பெயர்தலிற்
பல்வேறு புள்ளி னிசையெழுந் தற்றே
யல்லங் காடி யழிதரு கம்பலே
545 யொண்சுட ருருப்பொளி மழுங்கச் சினந்தணிந்து
சென்ற ஞாயிறு நன்பகற் கொண்டு
குடமுதற் குன்றஞ் சேரக் குணமுத

---

531. பி - ம். 'குறிமுறி யடகும்'

533. ஊன்சோறு : மதுரை. 141, அடிக்குறிப்பைப் பார்க்க.

534. வீழ்ந்த கிழங்கு : "விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலே" (மலேபடு. 128); "கிழங்குகீழ் வீழ்ந்து" (நற். ௩௨௮ : 1); "வள்ளிகீழ் வீழா" (கலி. ௩௧ : 12); "கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க் கும்மே" புறநா. ௧0௧ : 6.

540. கடற்குட்டம்: "கடற்குட்டம் போழ்வர் கலவர்" நான் மணிக். 16.

544 - 5. "பழுமரத் தீண்டிய பறவையி னெழூஉ, மிழுமென் சும்மை" (மணி. ௧௪ : 26 - 7) ; 'முட்டிலா மூவறு பாடை மாக்களாற், புட்பயில் பழுமரப் பொலிவிற் றாகிய, மட்டிலா வளநகர் ", " சீர்கெழு வளமனை திளேத்து மாசனம்.........பார்கெழு பழுமரப் பறவை யொத் தவே " (சீவக. 93,828) ; " களனவி லன்னமே முதல கண்ணகன், றளமலர்ப் புள்ளொடு தயங்கி யின்னதோர், கிளவியென் றறிவருங் கிளர்ச் சித் தாதலான், வளநகர்க் கூலமே போலு மாண்பது " கம்ப. பம்பை. 7.

ஞெண்முதிர் மதியந் தோன்றி நிலாவிரிபு
பகலுரு வுற்ற விரவுவர நயந்தோர்
550 காத லின்றுணை புணர்மா ராயிதழ்த்
தண்ணறுங் கழுநீர் துணைப்ப விழைபுனையூஉ
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைய
நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக
மென்னூற் கலிங்கங் கமழ்புகை மடுப்பப்
555 பெண்மகிழ் வுற்ற பிணைநோக்கு மகளிர்
நெடுஞ்சுடர் விளக்கங் கொளீஇ நெடுநக
ரெல்லை யெல்லா நோயொடு புகுந்து
கல்லென் மாலை நீங்க நாணுக்கொள
வேழ்புணர் சிறப்பி னின்றொடைச் சீறியாழ்
560 தாழ்பயற் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து
வீழ்துணை தழீஇ வியல்விசும்பு கமழ
நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்
டாய்கோ லவிர்தொடி விளங்க வீசிப்
போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழ
565 மேதகு தகைய மிகுநல மெய்திப்
பெரும்பல் குவளைச் சுரும்புபடு பன்மலர்
திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்துக்
கொண்டன் மலர்ப்புதன் மானப்பூ வேய்ந்து
நுண்பூ ணாகம் வடுக்கொள முயங்கி

---

548 - 9. நிலாவிரிபு பகலுருவுற்ற இரவு : "பகலுரு வுறழ்நிலாக் கான்று விசும்பி னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே" அகநா. ௧௨௨ : 10 - 11.

554. "பூந்துகில் கழும வூட்டும் பூம்புகை" சீவக. 71.

555 - 6. மகளிர் மாலையில் விளக்கேற்றுதல் : "பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி" (குறிஞ்சி. 224); "பைந்தொடி மகளிர் பலர் விளக் கெடுப்ப" (மணி. ௫ : 134); "மாலை மணி விளக்கங் காட்டி ...... கொடியிடையார் தாங்கொள்ள" சீலப். ௯ : 3 - 4.

558. பி - ம். 'நாணுக் கொளீஇ'

560. பி - ம். 'தாழ்பெயல்'

562. "மார்விற்றூர் கோலி மழை" பு. வெ. 204.

563. "செறிதொடி தெளிர்ப்ப வீசி" நற். ௨௦ : 5.

570 மாயப் பொய்பல கூட்டிக் கவவுக்கரந்து
சேயரு நணியரு நலனயந்து வந்த
இளம்பல் செல்வர் வளந்தப வாங்கி
நுண்டா துண்டு வறும்பூத் துறக்கு
மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர்
575 நெஞ்சே மாப்ப வின்றுயி றுறந்து
பழந்தேர் வாழ்க்கைப் பறவை போலக்
கொழுங்குடிச் செல்வரும் பிறரு மேஎய
மணம்புணர்ந் தோங்கிய வணங்குடை நல்லி
லாய்பொன் னவிர்தொடிப் பாசிழை மகளி
580 ரொண்சுடர் விளக்கத்துப் பலருடன் றுவன்றி
நீனிற விசும்பி லமர்ந்தன ராடும்
வானவ மகளிர் மானக் கண்டோர்
நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்
யாம நல்யாழ் நாப்ப ணின்ற
585 முழவின் மகிழ்ந்தன ராடிக் குண்டுநீர்ப்
பனித்துறைக் குவவுமணன் முனைஇ மென்றளிர்க்
கொழுங்கொம்பு கொழுதி நீர்நனை மேவர
நெடுந்தொடர்க் குவளை வடிம்புற வடைச்சி

570. பி - ம். 'கவவுக் கவர்ந்து'. "கோதை மார்பினை, நல்லகம் வடுக்கொள நீங்கி" அகநா. ௧00 : 2-3.

572-5. பரத்தையர்க்கு வண்டு: "நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்", "பயன்பல வாங்கி, வண்டிற் றுறக்குங், கொண்டி மகளிரை" மணி. ௧௮ : 19-20, 108-9.

576. பொருந. 64-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

581. நீனிற விசும்பு : முருகு. 116-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

582. பி-ம். 'வானர மகளிர்' 583. பி-ம். 'நடுக்குறூஉங்கொண்டி'

583. கொண்டி மகளிர் : மணி. ௧௮ : 109.

584. யாமநல்யாழ் : "விரல்கவர்ந் துழந்த கவர்வி னல்யாழ், யாமமுய் யாமை" (நற். ௩௩௫ : 9-10) ; "விளரிப்பாலையிற் றேன்றும் யாமயாழ்" (பரி. ௧௧ : 128, பரிமேல்.) ; "யாமயாழ் மழலையாள்" கம்ப. நாடவிட்ட. 34.

588. "குறுஞ்சுனைக் குவளையடைச்சி", "நீல மடைச்சி" (நற். ௨0௪ : 3, ௩௫௭ : 8) : "கூந்த லாம்பன் முழுநெறி யடைச்சி' குறுந். ௮0 : 1.

மணங்கமழ் மனைதொறும் பொய்த லயரக்
590 கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய வோண நன்னாட்
கோணந் தின்ற வடுவாழ் முகத்த
சாணந் தின்ற சமந்தாங்கு தடக்கை
மறங்கொள் சேரி மாறுபொரு செருவின்
595 மாறா தற்ற வடுப்படு நெற்றிச்
சுரும்பார் கண்ணிப் பெரும்புகன் மறவர்
கடுங்களி றோட்டலிற் காணுந ரிட்ட
நெடுங்கரைக் காழக நிலம்பர லுறுப்பக்
கடுங்கட் டேறன் மகிழ்சிறந்து திரிதரக்
600 கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து
பணைத்தேந் திளமுலை யமுத மூறப்
புலவுப்புனி றுதீர்ந்து பொலிந்த சுற்றமொடு
வளமனை மகளிர் குளநீ ரயரத்
திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணிக்
605 குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி
நுண்ணீ ராகுளி யிரட்டப் பலவுட
னொண்சுடர் விளக்க முந்துற மடையொடு
நன்மா மயிலின் மென்மெல வியலிக்

591. "ஓணத் தானுல காளுமென் பார்களே", "நீ பிறந்த திருவோணம்" (திவ். பெரியாழ். ௧. 1: 3, ௨. 4: 2); "ஓணன் பொரக் கருணை யூக்கினார்" ஆனந்த. வண்டு. 491.

600. நீதிநெறி. ௯௦௦.

602-3. "புதல்வரைப் பயந்த புனிறுதீர் கயக்கந், தீர்வினை மகளிர் குளனா டரவமும்" (மணி. ௭ : 75-6) என்பதையும் அதன் குறிப்பையும் பார்க்க.

604. "சேக்கை நல்யாழ் செவ்வழி பண்ணி" பெருங். ௧. 33 : 89.

605-6. "நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி" (புறநா. 64: 1); "குழல்வழி நின்றதி யாழே யாழ்வழித், தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப், பின்வழி நின்றது முழவே முழவொடு, கூடிநின் றிசைத்த தாமந் திரிகை" சிலப். ௩ : 139-42.

608. மயிலின் இயலி: மூருத. 205, பெரும்பாண். 330-31-ஆம் அடிகளின் அடிக்குறிப்புக்களைப் பார்க்க.

கடுஞ்சூன் மகளிர் பேணிக் கைதொழுது
610 பெருந்தோட் சாலினி மடுப்ப வொருசா
ரருங்கடி வேலன் முருகொடு வளைஇ
யரிக்கூ டின்னியங் கறங்கநேர் நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப்பிணையூஉ
615 மன்றுதொறு நின்ற குரவை சேரிதொறு
முரையும் பாட்டு மாட்டும் விரைஇ
வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்
பேரிசை நன்னன் பெரும்பெயர் நன்னாட்
சேரி விழவி னார்ப்பெழுந் தாங்கு
620 முந்தை யாமஞ் சென்ற பின்றைப்
பணிலங் கலியவிந் தடங்கக் காழ்சாய்த்து
நொடைநவி னெடுங்கடை யடைத்து மடமத
ரொள்ளிழை மகளிர் பள்ளி யயர
நல்வரி யிறாஅல் புரையு மெல்லடை
625 யயிருருப் புற்ற வாடமை விசயங்
கவவொடு பிடித்த வகையமை மோதகந்
தீஞ்சேற்றுக் கூவியர் தூங்குவன ருறங்க
விழவி னாடும் வயிரியர் மடியப்
பாடான் றவிந்த பனிக்கடல் புரையப்
630 பாயல் வளர்வோர் கண்ணினிது மடுப்பப்

---

மென்மெலவியலி: "மென்மெ லம்மலர் மேன்மிதித் தேகினாள்" (சீவக. 1336); "சொல்லு மாடு மென்மெல வியலும்" (தொல். களவு. சூ. 10, ந. மேற்.) "மென்மெல வியலி வீதி போந்து" பெருங். ௧. 17 : 99.

612. அரிக்கூடின்னியம்: "அரிக்கூடு மாக்கிணை" புறநா. கூ௭அ : 8.

614. நெடுவேள்: முருகு. 211, பெரும்பாண். 75-ஆம் அடிக்குறிப்புக்களைப் பார்க்க.

614 - 5. தழூஉப் பிணையூஉ நின்ற குரவை: மதுரை. 159 - 60 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

618. பி - ம். 'பெரும்பெயர்'

624. அடைக்கு இறால்: "மெழுகு மெல்லடை" (புறநா. ௧௦௩ : 10); "தேனி றாலன தீஞ்சுவை யின்னடை" சீவக. 2674.

பாஅட் கொண்ட கங்கு லிடையது
பேயு மணங்கு முருவுகொண் டாய்கோற்
கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப
விரும்பிடி மேஎந்தோ லன்ன விருள்சேர்பு
635 கல்லு மரனுந் துணிக்குங் கூர்மைத்
தொடலை வாளர் தொடுதோ லடியர்
குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச்
சிறந்த கருமை நுண்வினை நுணங்கற
னிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர்
640 மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர்
நிலனக முளியர் கலனசைஇக் கொட்குங்
கண்மா றாடவ ரொடுக்க மொற்றி
வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ண ரஞ்சாக் கொள்கைய
645 ரறிந்தோர் புகழ்ந்த வாண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்குநுண் டேர்ச்சி
யூர்காப் பாள ரூக்கருங் கணையினர்
தேர்வழங்கு தெருவி னீர்திரண் டொழுக
மழையமைந் துற்ற வரைநா ளமயமு
650 மசைவில ரெழுந்து நயம்வந்து வழங்கலிற்
கடவுள் வழங்குங் கையறு கங்குலு
மச்ச மறியா தேமமாகிய

636. தொடுதோலடியர்: "தொடுதோன் மரீஇய வடுவாழ் நோனடி" பெரும்பாண். 169.

635 - 6. "குன்று துகளாக்குங் கூர்ங்கணையான்" என்பது பாரதம் (தொல். புறத். சூ. 21, ந. மேற்.); "வேறிரண் டனவும் வில்லு மிடைந்தவும் வெற்பென் றூலுங், கூறிரண் டாக்கும் வாட்கைக் குழுவை யுங் குணிக்க லாற்றேம்" கம்ப. பாச. 6.

642. "அகன்றுகண் மாறி" மணி. ௩ : 40.

639 - 42. "நிலனக முளிய னீலத் தானையன், கலனசை வேட் கையிற் கடும்புலி போன்று" சிலப். ௧௬ : 204 - 5.

சிலப். ௧௬ : 204-11, அடியார். மேற்.

643 - 4. கள்வர்க்குப்புலி : கலி. ௪ : 1-2.

645. பி - ம். 'ஆண்மையிற் சிறந்த'

மற்றை யாமம் பகலுறக் கழிப்பிப்
போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்
655 தாதுண் டும்பி போது முரன்றாங்
கோத லந்தணர் வேதம் பாடச்
சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி
யாழோர் மருதம் பண்ணக் காழோர்
கடுங்களிறு கவளங் கைப்ப நெடுந்தேர்ப்
660 பணைநிலைப் புரவி புல்லுளைத் தெவிட்டப்
பல்வேறு பண்ணியக் கடைமெழுக் குறுப்பக்
கள்ளோர் களிநொடை நுவல வில்லோர்
நயந்த காதலர் கவவுப்பிணித் துஞ்சிப்
புலர்ந்துவிரி விடிய லெய்த விரும்பிக்
665 கண்பொரா வெறிக்கு மின்னுக்கொடி புரைய
வொண்பொ னவிரிழை தெழிப்ப வியலித்
திண்சுவர் நல்விற் கதவங் கரைய
வுண்டுமகிழ் தட்ட மழலை நாவிற்
பழஞ்செருக் காளர் தழங்குகுர லுரன்றச்
670 சூதர் வாழ்த்த மாகதர் நுவல

---

653. "பகுக்கப்படுதலிற் பகல்; 'மற்றையாமம் பகலுறக் கழிப்பி' என்பது மது" சிலப். ௪ : 81, அரும்பத. அடியார்.

655. சீவக. 893, ந. மேற்.

656. விடியலில் வேதம் பாடல்: "பூவினுட் பிறந்தோ னாவினுட் பிறந்த, நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப, ஏம மின்றுயி லெழு... லல்லதை, வாழிய வஞ்சியுங் கோழியும் போலக், கோழியி னெழாதெ... பேரூர் துயிலே" பரி. பக்கம், 174 - 5.

658. மருதப்பண் காலைக்குரியது: புறநா. 149; சீவக. 1991.

659. பி - ம். 'கவழ மகைப்ப'

"கல்லாவிளைஞர் கவளங் கைப்ப" முல்லை. 36.

660. பி - ம். 'தெவிட்டி'

பணைநிலைப்புரவி: மணி. ௭ : 117.

662. பி - ம். 'கள்கொடை நுவல நல்லோர்'

665. பி - ம். 'கண்பொரு பெறிக்கும்'

666. பி - ம். 'ஒண்பலவிரிழை தெளிர்ப்பவியலி'

669. பழஞ்செருக்கு: மலைபடு. 173. 670. பி - ம். 'சூதரேத்த'

வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப
விமிழ்முர சிரங்க வேறுமாறு சிலைப்பப்
பொறிமயிர் வாரணம் வைகறை யியம்ப
யானையங் குருகின் சேவலொடு காம
675 ரன்னங் கரைய வணிமயி லகவப்
பிடிபுணர் பெருங்களிறு முழங்க முழுவலிக்
கூட்டுறை வயமாப் புலியொடு குழும
வான நீங்கிய நீனிற விசும்பின்
மின்னுநிமிர்ந் தனைய ராகி நறவுமகிழ்ந்து
680 மாணிழை மகளிர் புலந்தனர் பரிந்த
பரூஉக்கா ழாரஞ் சொரிந்த முத்தமொடு
பொன்சுடு நெருப்பி னிலமுக் கென்ன
வம்மென் குரும்பைக் காய்படுபு பிறவுந்
தருமணன் முற்றத் தரிஞிமி றூர்ப்ப
685 மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப
விரவுத்தலைப் பெயரு மேம வைகறை
மைபடு பெருந்தோண் மழவ ரோட்டி

---

671. பி-ம். 'வேதாளியர்'

நாழிகையிசைத்தல் : முல்லை. 55-8, அடிக்குறிப்பைப் பார்க்க.

670-71. சூதர், மாகதர், வேதாளிகர் : சிலப். ௫ : 48 ; மணி. உ௮ : 50.

சிலப். 5 : 49, அடியார். மேற்.

673. பொறிமயிர் வாரணம் : மணி. எ : 116.

673-4. யானையங்குருகு : "யானையங் குருகின் கானலம் பெருந் தோடு" (குறுந். ௩௪ : 4-5); "களிமயில், குஞ்சரக் குரல குருகொடாலும்" (அகநா. ௧௪௫ : 14-5) ; "கீசுகீ சென்றெங்கு மானைச் சாத்தன் கலந்து" திருப்பாவை. 7.

678. நீனிற விசும்பு : முருகு. 116, அடிக்குறிப்பைப் பார்க்க.

682. பி-ம். 'நிலம்படுபுக்க' 683. பி-ம். 'குரும்பைக்காயும்'

684. தருமணன் முற்றம் : நெடுநல். 90 ; நற். ௧௪௩ : 2 ; அகநா. ௧௮எ : 9 ; பெருங். ௧. 34 : 40.

686. ஏமவைகறை: "ஏமவைகல்" குறுந். கடவுள் ; பரி. ௧எ : 53.

687. மழவரோட்டி : "உருவக் குதிரை மழவ ரோட்டிய" அகநா. ௧ ; 2.

யிடைப்புலத் தொழிந்த வேந்துகோட் டியானை
பகைப்புலங் கவர்ந்த பாய்பரிப் புரவி
690 வேல்கோ லாக வாள்செல நூறிக்
காய்சின முன்பிற் கடுங்கட் கூளிய
ரூர்சுடு விளக்கிற் றந்த வாயமு
நாடுடை நல்லெயி லணங்குடைத் தோட்டி
நாடொறும் விளங்கக் கைதொழூஉப் பழிச்சி
695 நாடுர வந்த விழுக்கல மனைத்துங்
கங்கையம் பேரியாறு கடற்படர்ந் தாஅங்
களந்துகடை யறியா வளங்கெழு தாரமொடு
புத்தே ளுலகங் கவினிக் காண்வர
மிக்குப்புக ழெய்திய பெரும்பெயர் மதுரைச்
700 சினைதலை மணந்த சுரும்புபடு செந்தீ
யொண்பூம் பிண்டி யவிழ்ந்த காவிற்
சுடர்பொழிந் தேறிய விளங்குகதிர் ஞாயிற்
றிலங்குகதி ரிளவெயிற் றோன்றி யன்ன
தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை
705 நிலம்விளக் குறுப்ப மேதகப் பொலிந்து
மயிலோ ரன்ன சாயன் மாவின்

688. இடைப்புலத்தொழிந்த: மதுரை. 349.

692. ஊர்சுவிளக்கு: புறநா. எ: 8.

691-2. "அரவூர் மதியிற் கரிதூர வீம, இரவூ ரெரிகொளீஇக் கொன்று - நிரைநின்ற, பல்லான் றொழுவும் பகற்காண்மார் போர்கண் டோர், கொல்வார்ப் பெருஅர் கொதித்து" தொல். புறத். சூ. 3, ந. மேற்; மதுரை. 126, அடிக்குறிப்பைப் பார்க்க.

694. கைதொழூஉப் பழிச்சி: பெரும்பாண். 463.

695-7. மலைபடு. 526-9.

693-7 மதுரை. 149 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

698. "வானத் தன்ன வளநகர்" (மதுரை. 741); "மாந்தரஞ் சேர லிரும்பொறை யோம்பிய நாடே, புத்தே ளுலகத்தற்று" புறநா. உஉ: 34-5.

699. "மலிபுகழ்க்கூடல்" மதுரை. 429.

706. பி-ம். 'மயிலோடன்ன'

மயிலோரன்னசாயல்: ப. கூ௪, 3-ஆம் அடிக்குறிப்பையும், சிறுபாண். 16 - ஆம் அடியின் அடிக்குறிப்பையும் பார்க்க.

தளிரே ரன்ன மேனித் தளிர்ப்புறத்
தீர்க்கி னரும்பிய திதலையர் கூரெயிற்
றொண்குழை புணரிய வண்டாழ் காதிற்
710 கடவுட்கயத் தமன்ற சுடரிதழ்த் தாமரைத்
தாதுபடு பெரும்போது புரையும் வாண்முகத்
தாய்தொடி மகளிர் நறுந்தோள் புணர்ந்து
கோதையிற் பொலிந்த சேக்கைத் துஞ்சித்
திருந்துதுயி லெடுப்ப வினிதி னெழுந்து
715 திண்கா ழார நீவிக் கதிர்விடு
மொண்கா ழாரங் கவைஇய மார்பின்
வரிக்கடைப் பிரச மூசுவன மொய்ப்ப
வெருத்தந் தாழ்ந்த விரவுப்பூந் தெரியற்
பொலஞ்செயப் பொலிந்த நலம்பெறு விளக்கம்
720 வலிகெழு தடக்கைத் தொடியொடு சுடர்வரச்
சோறமை வுற்ற நீருடைக் கலிங்க
முடையணி பொலியக் குறைவின்று கவைஇ
வல்லோன் றைஇய வரிப்புனை பாவை
முருகியன் றன்ன வுருவினை யாகி
725 வருபுனற் கற்சிறை கடுப்ப விடையறுத்
தொன்னா ரோட்டிய செருப்புகன் மறவர்

---

706 - 7. மகளிர்மேனிக்கு மாந்தளிர்: முருகு. 143 - 4 - ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

707 - 9. "ஈன்றவ டிதலைபோ லீர்பெய்யுந் தளிரோடும்" கலி. ௩௨: 7.

710. சுடரிதழ்த்தாமரை: மதுரை. 249.

715 - 6. பி - ம். 'கதிர்விடுபொண்காழ்'

"தன்கடற் பிறந்த முத்தி னாரமு, முனைதிறை கொடுக்குந் துப்பிற் றனமலைத், தெறலரு மரபிற் கடவுட் பேணிக், குறவர் தந்த சந்தி னாரமு, மிருபே ராரமு மெழில்பெற வணியுந், திருவீழ் மார்பிற் றென்னவன்" (அகநா. ௧௩: 1 - 6); "கோவா மலையாரங் கோத்த கடலாரம்......... தென்னர் கோன் மார்பினவே" சிலப். ௧௭: உள்வரி. 1.

718. விரவுப்பூந்தெரியல்: மதுரை. 745.

720 - 21. பி - ம். 'சுடர, வுறையமைவுற்ற சோறுடைக்கலிங்கம்'

723. "வல்லோன் றைஇய பாவைகொல்" கலி. ௵: 7.

வாள்வலம் புணர்ந்தநின் றாள்வலம் வாழ்த்த
வில்லைக் கவைஇக் கணைதாங்கு மார்பின்
மாதாங் கெறுழ்த்தோண் மறவர்த் தம்மின்
730 கல்லிடித் தியற்றிய விட்டுவாய்க் கிடங்கி
னல்லெயி லுழந்த செல்வர்த்தம்மின்
கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரச மோவில கறங்க

---

727. பி - ம். 'தாள்வலம் பழிச்ச'

726 - 7. சிறுபாண். 212-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

725 - 8. "அவர்படை வரூஉங் காலை நும்படைக், கூழை தாங் கிய வகல்யாற்றுக் குன்று, விலங்கு சிறையி னின்றனை", "வேந்து டைத் தானை முனைகெட நெரிதர, வேந்துவாள் வலத்த னொருவ னாகித், தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற், காழி யனையன்" (புறநா. ௧௬௯ : 3 - 5, ௩௩௦ : 1 - 4); "பொருபடையுட் கற்சிறை போன், றொருவன் றாங்கிய நிலையுரைத்தன்று", "செல்கணை மாற்றிக் குருசில் சிறைநின்றான்" பு. வெ. 54, 263.

730. "கல்லகழ் கிடங்கின்" (மலைபடு. 91); "கல்லறுத் தியற்றிய வல்லுவர்ப் படுவில்" (அகநா. எ௧ : 3); "பாருடைத்த குண்டகழி" (புறநா. ௧௪ : 5); "பாரெலாம் போழ்ந்தமா கிடங்கு" கம்ப. நகரப். 17.

731. கலி. ௬௨ : 62, ந ; சீவக. 906, ந. மேற்.

733. பி - ம். 'மயிர்க்கண் முரச மோவாது சிலைப்ப'

732 - 3. "ஓடா நல்லேற் றுரிவை தைஇய, பாடுகொண் முரசம்" (அகநா. ௩௩௪ : 1 - 2); "விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்", "மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பி, னண்ண னல்லே றிரண்டுடன் மடுத்து, வென்றதன் பச்சை சீவாது போர்த்த, திண்பிணி முரசம்" (புறநா. ௫௩ : 7, ௨௮௮ : 1 - 4); "மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி", "மயிர்க்கண் முரசு" (சிலப். ௫ : 88, 91); "ஏற் றுரி போர்த்த.........முரசு" (மணி. ௧ : 29 - 31); "ஏற்றுரி முரசம்", "ஏற்றுரி போர்த்த வள்வா ரிடிமுரசு", "புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற, கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த, துனைகுரன் முரசம்" (சீவக. 2142, 2152, 2899); "ஏற்றுரியி னிமிழ்முரசம்" (யா. வி. செய். சூ. ௪௦, மேற். "தாழி ரும்"); "சாற்றிடக் கொண்ட வேற்றுரி முரசம்", "ஏற்றுரி முரசி னிறைவன்", "ஏற்றுரி போர்த்த .. .....முரசம்" (பெருங். ௧. 38 : 100, 43 : 195, ௨. 2 : 26 - 9); "மயிர்க்கண் முரச முழங்க" பு. வெ. 171.

வெரிநிமிர்ந் தன்ன தானை நாப்பட்
735 பெருநல் யானை போர்க்களத் தொழிய
விழுமிய வீழ்ந்த குரிசிலர்த் தம்மின்
புரையோர்க்குத் தொடுத்த பொலம்பூந் தும்பை
நீர்யா ரென்னுது முறைகருதுபு சூட்டிக்
காழ்மண் டெஃகமொடு கணையலைக் கலங்கிப்
740 பிரிபிணை யரிந்த நிறஞ்சிதை கவயத்து
வானத் தன்ன வளநகர் பொற்ப
நோன்குறட் டன்ன வூன்சாய் மார்பி
னுயர்ந்த வுதவி யூக்கலர்த் தம்மி
னிவந்த யானைக் கணநிரை கவர்ந்த
745 புலர்ந்த சாந்தின் விரவுப்பூந் தெரியற்
பெருஞ்செ யாடவர்த் தம்மின் பிறரும்
யாவரும் வருக வேனோருந் தம்மென
வரையா வாயிற் செறாஅ திருந்து

---

" மயிர்க்கண் முரசு " என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள் " சிலப். ௫ : 88, அடியார்.

734. பி-ம். 'எரிபரந்தன்ன', 'எரி திகழ்ந்தன்ன'

படைக்கு நெருப்பு : " கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினும் " பு. வெ. 55.

737. பொலம்பூந்தும்பை : பதிற். ௪௫ : 1 ; புறநா. ௨ : 14, ௨௨ : 20, ௬௭ : 15.

739. காழ்மண்டெஃகம் : " காழ்மண் டெஃகங் களிற்றுமுகம் பாய்ந்தென " (மலைபடு. 129) ; " காழ்மண் டெஃகமொடு காற்படை பரப்பி " பெருங். ௩. 19 : 212.

740. பி-ம். 'வளங்கெழு நகர்நோன்'

வானத்தன்ன நகர் : மதுரை. 698 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

742. " எஃகா னேங் கடுப்பமெய் சிதைந்து " (பதிற். ௬௭ : 17) ; " கார்சூழ் குறட்டின் வேனிறத் திங்க ", " தச்ச னடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே " (புறநா. ௨௮௩ : 8, ௨௯௦ : 4 - 5) ; " வீரவே லுடம்பெலாஞ் சூழ வெம்புலால், சோருஞ்செங் குருதியுண் மைந்தர் தோன்றுவார், ஒருமே லொண்மணிச் சூட்டு வைக்கிய, வாரமே யமைந்த தேர்க் குழிசி யாயினார் " சீவக. 790.

747. பொருந. 101, ந. மேற்.

பாணர் வருக பாட்டியர் வருக
750 யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென
விருங்கிளை புரக்கு மிரவலர்க் கெல்லாங்
கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசிக்
களந்தோறுங் கள்ளரிப்ப
மரந்தோறு மைவீழ்ப்ப
755 நிணவூன்சுட் டுருக்கமைய
நெய்கனிந்து வறையார்ப்பக்
குருஉக்குய்ப்புகை மழைமங்குலிற்
பரந்துதோன்றா வியனகராற்
பல்சாலை முதுகுடுமியி
760 னல்வேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பி
னிலந்தரு திருவி னெடியோன் போல
வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர்
765 பலர்வாய்ப் புகரறு சிறப்பிற் றோன்றி
யரியதந்து குடியகற்றிப்
பெரியகற் றிசைவிளக்கி

---

752. கொடுஞ்சி நெடுந்தேர் : பெரும்பாண். 416 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

பரிசிலர்க்குத் தேர் கொடுத்தல் : மதுரை. 223 - 4-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

தேரோடுகளிறுதருதல் : சிறுபாண். 142 - 3-ஆம் அடிகளின அடிக் குறிப்பைப் பார்க்க.

களிறுதருதல் : பொருந. 125 - 6 - ஆம் அடிகளின் அடிக்குறிப் பைப் பார்க்க.

755. பி - ம். 'ஊன்சூட்டு' 758. 'தோன்றிய வியன்சாரல்'

759 - 60. பி - ம். 'முதுகுடுமிநல்'

760 - 61. "பல்கேள்வித் துறைபோகிய, தொல்லாணை நல்லா சிரியர்" பட்டினப். 169 - 70.

763. மதுரை. 60 - 61; "நிலந்தரு திருவி னெடியோய்" (பதிற். அஉ : 16); "நிலந்தரு திருவின்........கௌரியர்", "நிலந்தரு திருவி னெடியோன் றனது" சிலப். கு : 1 - 2, உஅ : 3.

முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்
பன்மீ னடுவட் டிங்கள் போலவும்
770 பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கிப்
பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும்பெயர் மாறன் றலைவ னாகக்
கடந்தடு வாய்வா ளிளம்பல் கோச
ரியனெறி மரபினின் வாய்மொழி கேட்பப்
775 பொலம்பூ ணைவ ருட்படப் புகழ்ந்த
மறமிகு சிறப்பிற் குறுநில மன்ன
ரவரும் பிறருந் துவன்றிப்
பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந் தேத்த
விலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
780 மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு
மகிழ்ந்தினி துறைமதி பெரும
வரைந்துநீ பெற்ற நல்லூ ழியையே.

---

768. பொருந. 135 - 6; பெரும்பாண். 441 - 2.

769. சிறுபாண். 219 - ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

769 - 70. சிறுபாண். 219 - 20-ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

773. கோசர்: புறநா. ௧௬௯: 9-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

775. பி - ம். 'உளப்பட'

779 - 81. பொருந. 85 - 8-ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க; "ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய, தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந், தாங்கினி தொழுகுமதி பெரும" (புறநா. ௨௪: 31 - 3) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

782. நல்லூழி: மதுரை. 21.

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு மாங்குடிமருதனர் மதுரைக்காஞ்சியென்று துறைப் பெயரானன்றித் திணைப்பெயராற் பெயர் கூறினர். இத்திணைப்பெயர் பன்னிருபடல முதலிய நூல்களாற் கூறிய திணைப்பெயரன்று, தொல்காப் பியனர் கூறிய திணைப்பெயர்ப்பொருளே இப்பாட்டிற்குப் பொருளாகக் கோடலின். வஞ்சி மேற்செல்லலானும், காஞ்சி எஞ்சாதெதிர் சென் றூன்றலானும், "வஞ்சியுங் காஞ்சியுந் தம்முண்மாறே" எனப் பன்னிருபட லத்திற்கூறிய திணைப்பெயர் இப்பாட்டிற்குப் பொருளன்மையுணர்க. அவர் முதுமொழிக்காஞ்சி முதலியவற்றைப் பொதுவியலென்று ஒரு படலமாக்கிக்கூறலின், அவை திணைப்பெயராகாமை யுணர்க.

இனி, மதுரைக்காஞ்சியென்றதற்கு மதுரையிடத்து அரசற்குக் கூறிய காஞ்சியென விரிக்க. இஃது உருபும்பொருளும் உடன்றொக் கது. [1] "காஞ்சி தானே பெருந்திணைப் புறனே" என்பதனுற் காஞ்சி பெருந்திணைக்குப் புறனுயிற்று. அது, [2] "பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் ருனு, நில்லா வுலகம் புல்லிய நெறித்தே" என்பதாம். இதன்பொருள்: பாங்கு அரு சிறப்பின் - தனக்குத் துணையில்லாத வீடுபேறு நிமித்தமாக, பல ஆற்றானும் - அறம் பொருள் இன்பமென்னும் பொருட்பகுதியானும், அவற்று உட்பகுதியாகிய உயிரும் யாக்கையும் செல்வமும் இளமையு முதலியவற்ருனும், நில்லா உலகம் புல்லிய நெறித்து - நிலைபேறில்லாத உலகியற்கையைப் பொருந்திய நன்னெறியினை உடைத்து அக்காஞ்சி யென்றவாறு. எனவே, வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமை சான்றோரறையுங் குறிப்பினது காஞ்சித்திணையென்பது பொருளாயிற்று.

இச்செய்யுட்புலவர் இப்பொருளே கோடலின், யாம் இப்பொருளே தர உரைகூறுகின்றும்.

1 - 2. [ஓங்குதிரை வியன்பரப்பி, னொலிமுந்நீர் வரம்பாக :] வியல் பரப்பின் ஓங்கு திரை ஒலி முந்நீர் வரம்பு ஆக - அகலத்தையுடைத்தாகிய நீர்ப்பரப்பின்கண்ணே ஓங்குதிரை ஒலிக்குங்கடல் எல்லையாக,

3 - 4. தேன் தூங்கும் உயர் சிமையம் மலை நாறிய வியல் ஞாலத்து- தேனிறால் தூங்கும் உயர்ந்த உச்சியையுடைய மலைகள்தோன்றிய அக லத்தையுடைய ஞாலத்தின்கண்ணே,

5. வலம் மாதிரத்தான் வளி கொட்ப - வலமாக ஆகாயத்தின் கண்ணே காற்றுச் சுழல,

6. வியல் நாண்மீன் நெறி ஒழுக - அகலத்தையுடைய நாண்மீன் கள் தாம் நடக்கும் நெறியின்கண்ணே நடக்க,

---

1 தொல். புறத். சூ. 22. 2 தொல். புறத். சூ. 23.

7. பகல் செய்யும் செ ஞாயிறும் - பகற்பொழுதை உண்டாக்கும் சிவந்த பகலோனும்,

8. இரவு செய்யும் வெள் திங்களும் - இராப்பொழுதை உண்டாக்கும் வெள்ளிய மதியும்,

9. மை தீர்ந்து கிளர்ந்து விளங்க - குற்றமற்றுத் தோன்றிவிளங்க,

10. மழை தொழில் உதவ - மேகம் தானே பெய்தற்றொழிலை வேண்டுங்காலத்தே தர,

1 உழவுத்தொழிற்கு உதவவென்றுமாம்.

மாதிரம் கொழுக்க - திசைகளெல்லாம் தழைப்ப,

மலைகள் விளைந்துகொழுக்கவென்றுமாம்.

11. [தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய :] தொடுப்பின் வித்தியது ஆயிரம் விளைய - ஒருவிதைப்பின்கண்ணே விதைத்தவிதை ஆயிரமாக விளைய,

12. நிலனும் - விளைநிலங்களும்,

மரனும் - மரங்களும்,

பயன் எதிர்பு நந்த-பல்லுயிர்க்கும் தம்பயன்கொடுத்தலை 2 ஏறட்டுக்கொண்டு தழைப்ப,

13. நோய் இகந்து 3 நோக்கு விளங்க - மக்கட்குப் 4 பசியும் பிணியும் நீங்கி அழகு விளங்க,

14 - 5. [மேதக மிகப்பொலிந்த, வோங்குநிலை வயக்களிறு :] மிக பொலிந்த ஓங்கு நிலை வய களிறு மே தக - அறவும் பொலிவுபெற்ற 5 உலகத்தைத் தாங்குதல்வளருந்தன்மையையுடைய வலியையுடைய வாகிய திக்கயங்கள் இவர் தாங்குதலின் வருத்தமற்று மேம்பாடுதக,

---

1 "காலை மாரி பெய்துதொழி லாற்றி" (பதிற். அ௪ : 21) ; "ஏரினுழாஅ ருழவர் புயலென்னும், வாரி வளங்குன்றிக் கால்" குறள். 14.

2 ஏறட்டுக்கொள்ளல் - மேற்கொள்ளல் ; மதுரை. 147, ந.

3 நோக்கு - அழகு : "பெரிய நோக்கின - பெரிய அழகையுடைய" சீவக. 1461, ந.

4 "நோயொடு பசியிகந் தொரீஇப், பூத்தன்று பெருமநீ காத்த நாடே", "நீபுறந் தருதலி னோயிகந் தொரீஇய, யாணர்நன் னாடும்" (பதிற். ௧௩ : 27 - 8, ௧௫ : 33 - 4) ; "பசியும் பிணியும் பகையு நீங்கி" (சிலப். ௫ : 72, மணி. ௧ : 70) ; "பசிபகை யானதுந் தீங்கு நீங்க" இரண்டாவது குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி.

5 "கூறொன்றத், தாங்கிப் பொறையாற்றாத் தத்தம் பிடர்கின்றும், வாங்கிப் பொதுநீக்கி மண்முழுதும் - ஓங்கிய, கொற்றப் புயமிரண்டாற் கோமா னகளங்கன், முற்றப் பரித்ததற்பின் முன்புதாம் - உற்ற, வருத்த மறமறந்து மாதிரத்து வேழம், பருத்த கடாந்திறந்து பாய" விக்கிரம உலா ; கம்ப. உ. மந்திரப். 16-ஆஞ் செய்யுளைப் பார்க்க.

1 சுருளும் படியுமாகப் பண்ணினவிடத்துப் பண்ணிநிற்கும் யானை யென்றுரைப்பாருமுளர்.

16 - 7. [கண்டுதண்டாக் கட்கின்பத், துண்டுதண்டா மிகுவளத் தான் :]

2 உண்டு தண்டா மிகு வளத்தான் - உண்டு அமையாத உணவுமிகு கின்ற செல்வத்தோடே,

கண்டு தண்டா கட்கு இன்பத்து - நோக்கியமையாத 3 கட்கு இனிமையினையும்,

18. உயர் பூரிமம் விழு தெருவில் - உயர்ந்த 4 சிறகுகளையுமுடைய சீரியதெருவிலிருக்கும் மாந்தர் (20),

பூரிமம் - சாந்திட்ட தொட்டிகளென்பாருமுளர்.

19 - 20. [பொய்யறியா வாய்மொழியாற், புகழ்நிறைந்த நன்மாந்த ரொடு :] வாய் மொழியால் புகழ் நிறைந்த பொய் அறியா நல் மாந்தரொடு - 5 மெய்ம்மொழியே எக்காலமும் கூறுதலாற்பெற்ற புகழ் நிறைந்த 6 பொய்யைக் கேட்டறியாத நல்ல அமைச்சருடனே,

21. 7 நல் ஊழி அடி பட - நன்றாகிய ஊழிக்காலமெல்லாம் தமக்கு அடிப்பட்டு நடக்க,

22. பல் வெள்ளம் மீ கூற - பல 8 வெள்ளமென்னும் எண்ணைப் பெற்ற காலமெல்லாம் அரசாண்டதன்மையை மேலாகச்சொல்லும்படி

23. உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக - உலகத்தையாண்ட உயர்ச்சிபெற்றோர் குடியிலுள்ளவனே,

மாதிரம் கொழுக்க (10) வித்தியதுவிளைய (11) நிலனும் மரனும் நந்த (12) வளிகொட்கையினாலே (5) மழை தொழிலுதவ (10) என முடிக்க.

---

1 இவ்வாறமைந்த படியினைக் களிற்றுப்படி யென்று வழங்குவர்.

2 உண்டு - நுகர்ந்து எனலும் பொருந்தும்.

3 கட்கு - கண்ணுக்கு.

4 சிறகு - தெருவின் இருபுறத்துமுள்ள வீடுகளின் வரிசை ; 'தென் சிறகு வடசிறகு' எனவரும் வழக்கினையுணர்க.

5 "பொய்யாமை யன்ன புகழில்லை" குறள். 296.

6 "பொய்ச்சொற் கேளா வாய்மொழி மன்னன்" கம்ப. கைகேசி. 31.

7 "நல்லூழியென்றார், கலியூழியல்லாத ஊழியை" என்பர் பின் ; மதுரை. 781 - 2, ந.

8 வெள்ளம் - ஒருபேரெண் ; "வெள்ள வரம்பி னூழி" (ஐங். உ௮௧ : 1) ; "வெள்ளமு நுதலிய, செய்குறி யீட்டம்" (பரி. உ : 14-5); தொல். புள்ளி. சூ. 98, உரையைப் பார்க்க.

வியன்ஞாலத்திடத்தே (4) மழைதொழிலுதவ (10) நாண்மீன் நெறியொழுக (6) ஞாயிறும் (7) திங்களும் (8) விளங்க (9) நோக்கு விளங்கக் (13) களிறு (15) மேதக (14) நன்மாந்தரோடே (20) ஊழி அடிப்பட்டு நடக்கும்படி (21) மீக்கூற (22) முந்நீர்வரம்பாக (2) உலக மாண்ட உயர்ந்தோர்மருக (23) என முடிக்க.

[1] இவர்கள் தருமத்தில் தப்பாமல் நடத்தவே இக்கூறியவையும் நெறிதப்பாமல் நடக்குமென்றார்.

24 - 5. பிணம் கோட்ட களிறு [2] குழும்பின் நிணம் வாய் பெய்த பேய் மகளிர் - பிணங்களையுடைய கொம்புகளையுடையனவாய்ப் பட்ட ஆனையினுடைய திரளின் நிணத்தைத்தின்ற பேய்மகளிருடைய துணங்கை (26),

26. இணை ஒலி இமிழ் [3] துணங்கை சீர் - இணைத்த ஆரவாரம் முழங்குகின்ற துணங்கைக்கூத்தின் சீர்க்கு,

27. பிணை யூபம் எழுந்து ஆட - செறிந்த குறைத்தலைப்பிணம் எழுந்து நின்று ஆடுகையினாலே,

28. அஞ்சு வந்த போர்க்களத்தான் - [4] அஞ்சுதலுண்டான போர்க் களத்திடத்தே,

29. ஆண் [5] தலை அணங்கு அடுப்பின் - ஆண்மக்கள் தலையாகிய நோக்கினாரை வருத்தும் அடுப்பின்கண்ணே,

---

1 "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு" (குறள். 545); "கோணிலை திரிந்திடிற் கோணிலை திரியும், கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்" (மணி. எ: 8 - 9); "கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி, நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப், பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி, யாணையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்" சீவக. 255.

2 குழும்பு : இக்காலத்துக் கும்பு என மருவிவழங்கும்.

3 துணங்கையின் இயல்பை, முருகு. 56-ஆம் அடியின் உரையினால் அறியலாகும்.

4 பேய் ஆடியயரும் இடங்கள் அச்சம் தருவனவாதலை மணிமேகலையில், "கண்டொட் டுண்டு கவையடி பெயர்த்துத், தண்டாக் களிப்பி னாடுங் கூத்துக், கண்டனன் வெரீஇக் கடுநவை யெய்தி, விண்டோர் திசையின் விளித்தனன் .......பேய்க்கென் னுயிர்கொடுத் தேனென" (ங : 125-30) எனவரும் பகுதியிற் கூறப்படுஞ் செய்தியாலறியலாகும்.

5 தலையைப் பேய்கள் அடுப்பாகக் கோடல் : "அரக்கர் முடிகளை யடுப்பு வகிர்வன", "முடித்தலை யொப்ப வடுப்பென வைத்து" திருவதப்பு, பொருகளத். செருக்களத்.

30 - 31. வய வேந்தர் ஒள் குருதி சினம் தீயின் பெயர்பு பொங்க - வலியினையுடைய வேந்தருடைய ஒள்ளிய [1] குருதியாகிய உலை சினமாகிய தீயின் மறுகிப் பொங்குகையினாலே,

32 - 8. [தெறலருங் கடுந்துப்பின், விறல்விளங்கிய விழுச்சூர்ப் பிற், றொடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு, நெறியறிந்த கடிவாலுவ, னடியொதுங்கிப் பிற்பெயராப், படையோர்க்கு முருகயர :]

தொடி தோள் [2] கை துடுப்பு ஆக (34) ஆடு உற்ற ஊன் சோறு (35) - [3] வீரவளையை உடையவாகிய தோளையுடைய கைகள் துடுப்பாகக் கொண்டு துழாவி அடுதலுற்ற ஊனினாகிய சோற்றை,

நெறி அறிந்த கடி வாலுவன் - இடுமுறைமையறிந்த பேய் [4] மடையன்,

தெறல் அரு கடு துப்பின் (32) விறல் விளங்கிய விழு சூர்ப்பின் (33) அடி ஒதுங்கி பின் பெயரா (37) படையோர்க்கு முருகு அயர (38)- பகைவராற் கோபித்தற்கு அரிய கடிய வலியினையும் வெற்றிவிளங்கிய சீரிய கொடுந்தொழிலினையுமுடையராய் இட்ட அடிவாங்கிப் பின் போகாத வீரர்க்கு வேள்விசெய்யும்படி,

39. அமர் கடக்கும் வியல் தானை - போரைவெல்லும் அகலத்தை யுடைய படையினையுடைய,

போர்க்களத்தே (28) ஆடுற்றசோற்றை (35) வாலுவன் (36) அடி பெயரா (37) வீரர்க்கு முருகயரக் (38) கடக்குந்தானையென்க.

40 - 42. [தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற், றொன்முது கடவுட் பின்னர் மேய, வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந :]

வரை தாழ் அருவி பொருப்பின் கடவுள் - பக்கமலையிலே விழுகின்ற அருவியினையுடைய பொதியின்மலையிலிருக்கும் கடவுள்,

தென்னவன் பெயரிய துன் அரு துப்பின் தொல் முது கடவுள் பின்னர் மேய பொருந - [5] இராவணனைத் தமிழ்நாட்டையாளாதபடி

---

[1] குருதியை உலையாகப் பெய்தல் : " அவற்றி னுலையென விரத்தம் விடுவன" போருக்களத்தலகைவதப்பு.

[2] கைகளைத் துடுப்பாகக்கொள்ளல் : " அவர்கரவகப்பை யவை கொடு புகட்டி யடுவன " ஷை. [3] தொடி - வீரவளை ; மதுரை. 720, ந.

[4] மடையன் - சோறாக்குவோன்.

[5] தென்னாட்டை ஆண்டு குடிகளைத் துன்புறுத்தி வந்த இராவணனை, அகத்தியர் பொதியின்மலை உருகும்படி இசைபாடி இலங்கைக்குப் போக்கினரென்பது பண்டை வரலாறு ; அவர் இசையிலே வல்லுநரென்பது, " மன்னு மகத்தியன்யாழ் வாசிப்ப " (திருக்கைலாய ஞானவுலா), " தமிழ்க்குன்றில் வாழுஞ் சடாதாரி பேர்யாழ் தழங்குந் திருக்கை " (தக்க. 539) என்பவற்றாலும், பொதியில் உருகியது, " இனிய பைந்

போக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமைமுதிர்ந்த அகத்தியன் பின்னே எண்ணப்பட்டுச் சான்றோனாயிருத்தற்கு மேவின ஒப்பற்றவனே,

1 "திசைநிலைக் கிளவியி னாஅ குநவும்" என்றதனால், இராவணன் தென்றிசை யாண்டமைபற்றித் 2 தென்னவனென்றார்; இப்பெயர் பாண்டியற்கும் 3 கூற்றுவற்கும் ஏற்றுநின்றாற்போல. அகத்தியனைத் தென்றிசையுயர்ந்த நொய்ம்மைபோக இறைவனுக்குச் சீரொப்ப இருந்தானென்பதுபற்றிக் கடவுளென்றார். இராவணனுளுதல் பாயிரச்சூத்திரத்து 4 உரையாசிரியர் கூறிய உரையானுமுணர்க.

இனி, 5 "முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்கா, லிப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய, வக்கடவுண் மற்றக் கடவுள்" என 6 இருடிகளையும் கடவுளென்று கூறியவாற்றானும் காண்க.

இதனால், 7 அகத்தியனுடன் தலைச்சங்கத்துப் பாண்டியனிருந்து தமிழாராய்ந்த சிறப்புக்கூறினார்.

8 கூற்றுவனையுதைத்த கடவுளென்று இறைவனுக்கி, அவன்பின்னரென்றது அகத்தியனையென்று பொருள்கூறின், இறைவனுக்குத்

---

தமிழின் பொதியமால் வரைபோ லிசைக்குருகாது" (சோணசைல. 26) என்பதனாலும், அகத்தியர் அதனையுருக்கியது, "மலை, முன்னொருருக்கு முனிநிகர்வை" (வேங்கையுலா, 319) என்பதனாலும், இராவணனை இசைபாடி அடக்கியது, "பொதியிலின்கண் இருந்து இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து, இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கி" (தோல். பாயிரம். ந.), 'இசைக்குருகப் படுசிலை - இராவணனைப்பிணிக்கக் குறுமுனிபாடும் இசைக்கு உருகப்பட்ட பொதியின்மலை' (தஞ்சை. 345, உரை) என்பவற்றாலும் உணரப்படும்.

1 தோல். எச்ச. சூ. 53.

2 "தென்னவன் மலையெடுக்கச் சேயிழை நடுங்கக் கண்டு" தே. திருநா. திருக்கச்சிமேற்றளி.

3 தென்னவனென்னும் பெயர் கூற்றுவனுக்காதல்: "சட்டத் தென்னவன் றன்கடா வேந்தனை, வெட்டி" (தக்க. 684); "காலத் தென்னவன் மகிடமேறான்" அருணாசல. பாகம்பெற்ற. 4.

4 உரையாசிரியரென்னும் பெயர்க்குரியராக இப்பொழுது கருதப்படும் இளம்பூரணர் உரையில் இச்செய்தி காணப்படாமை ஆராய்ச்சிக்குரியது. 5 கலி. ௯௩: 11-3. 6 இருடிகளைக் கடவுளென்றல்: சிலப். ௧௧: 5; சீவக. 96, 1124; பெருங். ௨. 11: 150, ௪. 10: 153.

7 இச்செய்தியை இறையனாகப் பொருள் முதற்சூத்திர உரையினலறியலாகும்.

8 "மறைமுது முதல்வன் பின்னர்" (சிலப். ௧௨) என்பதற்கு, மறைமுது முதல்வன் - மாதேவன்; இவன் பின்னர் அகத்

தம்பியென்றல் சாலாமையானும், 1 அப்பொருடருங்காலத்து, முன்னவன் பின்னவன், முன்னோன் பின்னோனென்றல்லது அச்சொல் நில்லாமையானும் அது பொருந்தாது. 2 "முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள, பின்னரும் பீடழிக்கு நோயுள" எனப் பிறண்டும் முன்னர் பின்னரென்பன இடமுணர்த்தியே நிற்குமென்றுணர்க.

3 பொருநனென்றது 4 தான் பிறர்க்கு உவமிக்கப்படுவானென்னும் பொருட்டு.

43. விழு சூழிய - சீரிய முகபடாத்தையுடையவாய்,

விளங்கு ஓடைய - விளங்குகின்ற பட்டத்தையுடையவாய்,

44. கடு சினத்த - கடிய சினத்தையுடையவாய்,

44 - 5. கமழ் கடாத்து அளறு பட்ட நறு சென்னிய - கமழுகின்ற மதத்தாலே சேறுண்டான நறிய தலையினையுடையவாய்,

46. வரை மருளும் உயர் தோன்றல - வரையென்றுமருளும் உயர்ந்த தோற்றத்தினையுடையவாய்,

47. வினை நவின்ற பேர் யானை - போர்த்தொழிலிலே பயின்ற பெரிய யானை,

இச்செய்தெனெச்சக்குறிப்பாகிய வினையெச்சமுற்றுக்கள் அடுக்கி வந்தனவற்றை நவின்றவென்னும் பெயரெச்சத்தோடு முடிக்க.

48. சினம் சிறந்து களன் உழக்கவும் - சினமிக்குக் களத்துவீரரைக் கொன்றுதிரியவும்,

49 - 50. மா எடுத்த மலி குரூஉ துகள் அகல் வானத்து வெயில் கரப்பவும் - குதிரைத்திரள் பகைவர்மேற் செல்லுதலாலுண்டான மிக்க நிறத்தையுடையவாகிய தூளி அகலுதற்குக் காரணமான ஆகாயத்திடத்தே வெயிலைமறைக்கவும்,

51 - 2. வாம் பரிய கடு திண் தேர் காற்று என்ன கடிது கொட்பவும் - தாவும் குதிரைகளையுடைய செலவுகடிய திண்ணியதேர் காற்றுச் சுற்றியடித்ததென்னக் கடிதாகச்சுழலவும்,

---

தியனுகிய கடவுள்' என்றெழுதிய அரும்பத உரையாசிரியரது உரை, இங்கே கூறப்படுவனவற்றோடு முரணுதல் காண்க.

1 "பின்னர் - பின்னோன்" (சிலப். ௧௨) என்னும் அடியார்க்கு நல்லாருரையை ஓர்க. 2 நாலடியார், 92.

3 "பொருந - உவமிக்கப்படுவோய்" (முருகு. 276, ந.), "பொருநாகு - ஏனையவற்றிற்கு ஒப்புச் சொல்லப்படும் நாகு" (கலி. ௧0௯ : 4 எனப் பிறண்டும் இதனை யொத்தே இவ்வுரையாசிரியர் பொருளெழுதுதல் அறிதற்குரியது.

4 "பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொரு பெரு வேந்தே" (பதிற். எ௩: 2 - 3); "பிறர்க்குவமந் தானல்லது, தனக்குவமம் பிறரில்லென" புறநா. ௩௭௭ : 10 - 11.

53 - 4. [வாண்மிகு மறமைந்தர், தோண்முறையான் வீறுமுற்ற வும் :] வாள் மிகு மறம் மைந்தர் தோள் வீறு முறையான் முற்றவும் - வாட்போரான் மிகுகின்ற மறத்தையுடைய வீரருடையதோள் வெற்றி முறையாக வெட்டுதலான் முற்றுப்பெறவும்,

1 " விருந்தாயினை யெறிநீயென விரைமார்பகங் கொடுத்தாற், கரும் பூணற வெறிந்தாங்கவ னினதூழினி யெனவே " என்றார் பிறரும்.

55 - 6. இரு பெரு வேந்தரொடு வேளிர் சாய பொருது அவரை செரு வென்றும் - சேரன்சோழனுகிய இருவராகிய பெரிய அரசருடனே 2 குறுநில மன்னரும் இளைக்கும்படி பொருது அவரைப் போரைவென் றும் அமையாமல்,

உம்மை : சிறப்பும்மை.

57 - 9. [இலங்கருவிய வரைநீந்திச், சுரம்போழ்ந்த விகலாற்ற, லுயர்ந்தோங்கிய விழுச்சிறப்பின் :]

உயர்ந்து இலங்கு அருவிய வரை நீந்தி ஓங்கிய விழு சிறப்பின் - உயர்ந்து விளங்குகின்ற அருவிகளையுடைய மலையிற் குறிஞ்சிநிலமன் னரையெல்லாம் வென்று உயர்ந்த சீரிய தலைமையினாலே,

இகல் ஆற்றல் சுரம் போழ்ந்த சிறப்பின் - மாறுபாட்டை நடத்து தலையுடைய பகைவர்காடுகளைப் பலவழியாகப்பிளந்த சிறப்பினாலே,

60. நிலம் தந்த பெரு உதவி - நாட்டிலிருக்கின்ற அரசர்நிலங்களை யெல்லாம்கொண்ட பெரிய உதவியையும்,

3 மலையும் காடும் அரணுகஇருந்தஅரசரை அழித்தவலியாலே நாட்டி லிருக்கின்ற அரசர் தத்தம் நாடுகளைவிட்டாரென்றதாம்.

61. பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல் - பொன்னாற் செய்த தாரையணிந்த மார்பினையுமுடைய 4 வடிம்பலம்பநின்றபாண்டி யன் வழியில் வந்தோனே,

---

1 சீவக. 2265.

2 குறுநிலமன்னர் - திதியன் முதலாயினோர் ; மதுரை. 128 - 9-ஆம் அடிகளின் உரையைப்பார்க்க.

3 " உண்டாகிய வுயர்மண்ணுஞ், சென்றுபட்ட விழுக்கலனும், பெறல்கூடுமிவ னெஞ்சுறப்பெறின் " (புறநா. ௪௭ : 24 - 6) என்பதன் கருத்து இவ்விசேடவுரையுடன் ஒப்புநோக்கற்பாலது.

4 ' முந்நீர்க்கண் வடிம்பலம்பநின்றனென்ற வியப்பால், நெடியோ னென்றாரென்ப ' (புறநா. ௯ : 10, உரை), " அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொறாது........கடல் கொள்ள " (சிலப். ௧௧ : 17 - 20), " ஆழி வடிம்பலம்ப நின்றானும் " (நள. சுயம். 137), " கடல்வடிம் பலம்ப நின்ற கைதவன் " (வி. பா. 15-ஆம் போர். 18) என்பனவும், " மன்னர்பிரான் வழுதியர்கோன் வடிம்ப

யானை (47) களனுழக்கவும் (48) துகள் (49) வெயில்கரப்பவும் (50) தேர் (51) கொட்பவும் (52) மைந்தர் (53) முற்றவும்(54) பொருது செருவென்றும் அமையாமல் (56) விழுச்சிறப்பின் (59) நிலந்தந்த உதவியினையும் (60) மார்பினையுமுடைய நெடியோன் (61) என்க.

62-3. மரம் தின்னூஉ வரை உதிர்க்கும் நரை உருமின் ஏறு அனையை - மரங்களைச்சுட்டு மலைகளைநீறாக்கும் பெருமையினையுடைய உருமேற்றை ஒப்பை,

1 "கருநரைநல்லேறு" என்றார்பிறரும். இன் : அசை.

64. அரு குழு மிளை - பகைவர்சேர்தற்கரிய திரட்சியையுடைய காவற்காட்டினையும்,

குண்டு கிடங்கின் - ஆழத்தினையுடைய கிடங்கினையும்,

65. உயர்ந்து ஓங்கிய நிரை புதவின் - உயர்ந்துவளர்ந்த கோபுரங்களிடத்து வாயில்களையும்,

நிரை : ஆகுபெயர். உயர்ச்சி ஓங்குதலை விசேடித்துநின்றது.

66. நெடு மதில் - நெடிய மதிலினையும்,

நிரை ஞாயில் - நிரைத்த சூட்டினையுமுடைய,

அஃது எய்தால் மறைதற்கு உயரப்படுப்பது.

67. [அம்புமி ழயிலருப்பம் :] அயில் அம்பு உமிழ் அருப்பம் - கூர்மையையுடைய அம்புகளையுமிழும் அரண்களை,

மிளை (64) முதலியவற்றையுடைய அருப்பமென்க.

68-9. தண்டாது தலை சென்று கொண்டு நீங்கிய விழு சிறப்பின் - அமையாமல் அவ்விடங்களிலேசென்று கைக்கொண்டு அவ்விடங்களினின்றும் போன சீரிய தலைமையினையுடைய கொற்றவர் (74),

70-71. [தென்குமரி வடபெருங்கல், குணகுடகட லாவெல்லை :] தென்குமரி எல்லை ஆ வட பெரு கல் எல்லை ஆ குண குட கடல் எல்லை ஆ - தென்றிசைக்குக் குமரி எல்லையாக வடதிசைக்குப் பெரியமேரு எல்லையாகக் கீழ்த்திசைக்கும் மேற்றிசைக்கும் கடல் எல்லையாக இடையில் வாழ்வோரெல்லாம்,

லம்ப நின்றருளி" (பராந்தகதேவர்மெய்க்.) என்பதும், இப்பெயராற் பெறப்படும் செய்தியைக் கூறுவதுகாண்க; "வென்றிபடச் சிவந்தெறியக் கருங்கடல்வெவ் வலிதொலைந்து, முன்றெறுமம் புடைந்துபங்கப் பட்டலறி மோதிவிழா, நின்றபடி வடிம்பலம்ப நின்றதுகண் டேனொரு, மின்றிதுகண் டனம்புதுமை யெனப்பயம்விட் டெழுத்துதித்தார்", "மாலைமுடி யோன்வேலை வடிம்பலம்ப நின்றதனால், வேலைவடிம்பலம்ப நின்றானென்றெங்கும் விளங்கியதால்" என்பனவற்றால் இச்சிறப்புப் பெயரையுடையார் உக்கிர குமார பாண்டியரென்று கூறுவர்; திருவால. ௨௧: 6, 7.

1 குறுந்தொகை, ௱௧௭ : 1.

72. தொன்று மொழிந்து தொழில் கேட்ப - தம்முடன் பழமை யைச்சொல்லி ஏவல்கேட்கும்படி,

73. வெற்றமொடு வெறுத்து ஒழுகிய - வெற்றியோடே செறிந்து நடந்த,

74. கொற்றவர்தம் கோன் ஆகுவை - வெற்றியுடையோர் தம் முடைய தலைவனென தன்மையையுடையை,

75 - 6. வான் இயைந்த இரு முந்நீர் பேஎம் நிலைஇய இரு பௌவத்து - மேகம்படிந்த பெரிதாகிய 1 மூன்று நீர்மையையுடைய அச்சம் நிலைபெற்ற கரியகடலிடத்து,

77 - 9. [கொடும்புணரி விலங்குபோழக், கடுங்காலொடு கரை சேர, நெடுங்கொடிமிசை யிதையெடுத்து :]

கடு காலொடு கொடு புணரி விலங்கு போழ இதை எடுத்து - கடிய காற்றுலே வளைகின்ற திரையைக் குறுக்கே பிளந்தோடும்படி பாய்விரிக் கப்பட்டு,

80. இன்னிசைய முரசம் முழங்க - இனிய ஓசையையுடைய முரசம் முழங்காநிற்க,

81 - 2. பொன் மலிந்த விழு பண்டம் நாடு ஆர - பொன்மிகுதற் குக் காரணமாகிய சீரிய சரக்குகளை நாட்டிலுள்ளார் நுகரும்படியாக,

[நன்கிழிதரும் :] கரை சேர (78) நன்கு இழிதரும் - கரையைச் சேர வாணிகம் வாய்த்துவந்து இழிதலைச்செய்யும்,

83. [ஆடியற் பெருநாவாய் :] நெடு கொடி மிசை (79) ஆடு இயல் பெரு நாவாய் - நெடியகொடி பாய்மரத்தின்மேலே ஆடும் இயல்பினை யுடைய பெரிய மரக்கலம்,

இதையெடுத்து (79) முழங்க (80) ஆர இழிதரும் (82) நாவாயென்க.

84 - 5. மழை முற்றிய மலை புரைய துறை முற்றிய துளங்கு இருக்கை - கருமேகஞ்சூழ்ந்த மலைபோலக் கடல்சூழ்ந்த அசைகின்ற இருப் பினையும்,

துறை : ஆகுபெயர். சரக்குப்பறித்தற்குக் கடலில் நின்றமரக்கலங் கள் அக்கடல் சூழ நின்றதற்கு மழைமுற்றியமலை உவமமாயிற்று.

நாவாய் துளங்கிருக்கையென்க.

86. தெள் கடல் குண்டு அகழி - தெளிந்த கடலாகிய ஆழத்தை யுடைய கிடங்கினையுமுடைய,

87 - 8. சீர் சான்ற உயர் நெல்லின் ஊர் கொண்ட உயர் கொற் றவ - தலைமையமைந்த உயர்ந்த நெல்லின்பெயரைப்பெற்ற சாலியூரைக் கொண்ட உயர்ந்த வெற்றியையுடையவனே,

---

1 மூன்று நீர்மை - நிலத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்பன ; இந்நூல், ௨௫௪ - ஆம் பக்கம் அடிக்குறிப்பைப் பார்க்க.

இதனால், தனக்குநடவாததோர் ஊர்கொண்டானென்றார்.
இன்னே அசையாக்கி நெல்லூரென்பாருமுளர்.
இருக்கையினையும் (85) கிடங்கினையும் (86) உடைய ஊரென்க.
89 - 92. [நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர், பாடுசிலம்பு மிசையேற்றத், தோடுவழங்கு மகலாம்பியிற், கயனகைய வயனிறைக்கும் :]
வயல் அகைய நிறைக்கும் கயன் நீர் (92) [1] தெவ்வும் நிரை [2] தொழுவர் (89) பாடு சிலம்பும் இசை (90) - வயல்தழைக்கும்படி நீரை நிறைத்தற்குக்காரணமான குளங்களில் நீரை [3] இடாவான் முகந்துகொள்ளும் நிரையாகநின்று தொழில்செய்வாரிடத்தே ஒலிக்குமோசை,
ஏற்றத் (90) தோடு வழங்கும் அகல் ஆம்பியின் (91) இசை (90) ஏற்றத்துடனே உலாவும் அகன்ற பன்றிப்பத்தரின்ஓசை,
93. மெல் தொடை வல் கிழாஅர் இசை (95) - மெத்தென்ற கட்டுக்களையுடைய வலிய [4] பூட்டைப்பொறியினோசை,
94. அதரி கொள்பவர் இசை (95) - கடாவிடுகின்றவர்ஓசை,
பகடு பூண் தெள் மணி இசை (95) - எருதுகள் பூண்ட தெள்ளிய மணியின்ஓசை,
95. இரு புள் ஓப்பும் இசையே - பயிர்களிற் பெரிய கிளி முதலியவற்றை ஓட்டும்ஓசை,
ஏகாரம் : ஈற்றசை.
என்றும் - எந்நாளும்,
96 - 7. மணி பூ முண்டகத்து மணல் மலி கானல் பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப - நீலமணிபோலும் பூக்களையுடையவாகிய கழிமுள்ளிகளையுடைய மணற்குன்றுகள் மிக்க கடற்கரையிலிருக்கும் பரத

---

1 'தெவ்வு' என்றபாடமே நேரானது : "எடுத்தல் படுத்தல்" (பிரயோக. 40) என்பதன் உரையைப்பார்க்க ; "சோணாடுதெவ்வுதலும்" என்றார், ஸ்ரீ கச்சியப்பமுனிவரும் ; காஞ்சி. நகரேற்று. 142.
2 தொழில் செய்வாரென்னும் பொருளில் தொழுவரென்பது, (மது. 122.) என்பழியும், "நெல்லரியு மிருந்தொழுவர்", "நெல்லரி தொழுவர்" (புறநா. உச : 1, உ0௯ : 2) என்புழியும் வந்துள்ளது.
இடா-இறைகூடை; "பேரிடாக் கொள்ளமுன் கவித்து" பெரிய. இளையான்குடி. 17.
4 "காலை யங்கதிற் பூட்டையங் கடமதொன் றமிழ, மேலெ ழுந்து செல் கின்றதோர் கடமென மேலை, வேலை வெங்கதி ரமிழ்ந்துற முழுமதி விண்ணின், பாலெ ழுந்தது விரிகதி ருலகெலாம் பரப்பி" (சீகாளத்தி. கன்னியர். 119) என்பதனால், பூட்டைப்பொறியினியல்பை அறிந்து கொள்க. இது காஞ்சிபுரத்தின் பக்கத்துள்ள ஊர்களிற் பெரும்பாலும் காணப்படும்.

வருடைய மகளிராடும் குரவைக்கூத்தின் ஓசையோடேகூடி ஆரவாரியா நிற்ப,

98. ஒருசார் விழவு நின்ற வியல் ஆங்கண் - ஒருபக்கம் விழாக் கொண்டாடுதலாற் பிறந்த ஓசைகள் மாறாமல்நின்ற அகலத்தையுடைய ஊர்களிடத்தே யிருந்து,

பாடுசிலம்புமிசை (90) முதலியன குரவையொடு (97) என்றும் (95) ஒலிப்ப (97) ஒருசார் விழவு நின்றஊரென்க.

99. முழவு தோள் முரண் பொருநர்க்கு - முழவுபோலும் தோளினையுடையராய்க் கல்வியால் மாறுபடுதலையுடைய 1 தடாரிப் பொருநர்க்கு,

100 - 102. உரு கெழு பெரு சிறப்பின் இரு பெயர் பெரு ஆய் மொடு இலங்கு மருப்பின் களிறு கொடுத்தும் - அச்சம்பொருந்திய பெரிய தலைமையையுடைய 2 கன்றும்பிடியுமென்னும் இரண்டுபெயரை யுடைய பெரியதிரளுடனே விளங்குகின்ற கொம்பினையுடைய களிறு களைக்கொடுத்தும்,

இருபெயர்க்கு ஆடும் மாடுமென்பாருமுளர்.

103. பொலந்தாமரை பூ சூட்டியும் - பொன்னாற்செய்த தாமரைப் பூவைச் சூட்டியும்,

104 - 5. [நலஞ்சான்ற கலஞ்சிதறும், பல்குட்டுவர் வெல்கோவே:]
நலம் சான்ற கலம் சிதறும் கோவே - நன்மையமைந்த பேரணிகலங் களை எல்லார்க்குங்கொடுக்குங்கோவே,

ஊர்களிடத்தே யிருந்து (98) பொருநர்க்குக் (99) கொடுத்தும் (102) சூட்டியும் (103) அமையாது கலஞ்சிதறுங்கோவேயென்க.

பல் குட்டுவர் வெல் கோவே - பலவாகிய குட்டநாட்டிலுள்ளாரை வெல்லுங்கோவே,

என்பது, 3 அடை.

இதனால், தன்னாட்டிலூர்களிலிருந்து கொடுக்கின்ற சிறப்புக் கூறினார்.

106. கல் காயும் கடு வேனிலொடு - மலைகள் காய்தற்குக்காரண மாகிய கடிய முதுவேனிலாலே,

107. இரு வானம் பெயல் ஒளிப்பினும் - பெரியமேகம் மழையைத் தன்னிடத்தே மறைத்துக்கொள்ளினும்,

1 தடாரி - கிணைப்பறை; பு. வெ. 218, உரை.

2 "கன்றொடு, கறையடி யானை யிரியல் போக்கும்,........ஆய்" (புறநா. ௩௨௫ : 11 - 3), "கன்று டைப்பிடி நீக்கிக் களிற்றினம், வன் றொடர்ப்படுக் கும்வள வாரி" (கம்ப. நாட்டு. 32) என்பன இங்கே ஆராயத்தக்கவை. 3 'அடை' என்றது 'பல்குட்டுவர் வெல்' என்றதனை.

108. [வரும்வைகன் மீன்பிறழினும் :] வைகல் வரும் மீன் பிற ழினும் - தான் தோன்றுதற்குரிய நாளிலே தோன்றும் 1 வெள்ளி தென் றிசையிலே எழினும்,

109. வெள்ளம் மாறாது விளையுள் பெருக - யாறுகள் வெள்ளம் மாறாமல் வந்து விளைதல் பெருகுகையினாலே,

110. நெல்லின் ஓதை - முற்றினநெல்லுக் காற்றடித்து அசைத லாலே எழுந்த ஓசை,

அரிநர் கம்பலை - அதனை அறுப்பாருடைய ஓசை,

111. புள் இமிழ்ந்து ஒலிக்கும் இசை - பறவைகள் கத்துகை யினாலே ஆரவாரிக்கும் ஆரவாரம்,

என்றும் - எந்நாளும்,

112 - 3. சலம் புகன்று சுறவு கலித்த புலவு நீர் வியல் பௌவத்து - தம்முள் மாறுபாட்டைவிரும்பிச் சுறாக்கள் செருக்கித்திரிகின்ற புலால் நாற்றத்தையுடையதாகிய நீரையுடைய அகற்சியையுடைய கடலிடத்துத் துவலை (115),

114 - 5. நிலவு கானல் முழவு தாழை குளிர் பொதும்பர் நளி தூவல் - நிலாப்போலும் மணலையுடையகரையினிற் குடமுழாப்போலுங் 2 காயையுடைய தாழையை வேலியாகவுடைய குளிர்ச்சியையுடைய இள மரக்காவின்கண்ணே வந்து செறிதலையுடைய துவலையின்ஓசை,

116. நிரை திமில் வேட்டுவர் கரை சேர் கம்பலை - நிரைத்த மீன் படகாலே வேட்டையாடுவார்வந்து கரையைச்சேரும் ஆரவாரம்,

---

1 வெள்ளிக்கோள் தென்றிசையில் எழுதல் தீயநிமித்தம் ; இது, “ வசையில்புகழ் வயங்குவெண்மீன், றிசைதிரிந்து தெற்கேகினுந், தற் பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி, வான்பொய்ப்பினுந் தான் பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி ” (பட்டினப். 1 - 6), “ வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி, பயங்கெழு பொழுதோ டாநிய நிற்ப ”, “ நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப், பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப ” (பதிற். உச : 24 5, சுக : 13-4), “ மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினுந், தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்,......... பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே ”, “ வெள்ளி தென்புலத் துறைய விளைவயற், பள்ளம் வாடிய பயனில் காலை ” (புறநா. கசஎ : 1 - 7, நஅஅ : 1 - 2), “ கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றி னும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்,.........காவிரிப் புது நீர்க் கடுவரல் வாய்த்தலை ” (சிலப். க0 : 102 - 8) என்பனவற்றால் அறியலாகும். 2 பி - ம். ‘ தாளையுடைய ’

117. இரு கழி செறுவின் வெள் உப்பு பகர்நரொடு - பெரியகழி யிடத்து உப்புப்பாத்தியிலே வெள்ளிய உப்பைவிற்கும் [1] அளவர்ஒலி யோடே,

118 - 24. [ஒலியோவாக் கலியாணர், முதுவெள்ளிலை மீக்கூறும், வியன்மேவல் விழுச்செல்வத், திருவகையா னிசைசான்ற, சிறுகுடிப் பெருந்தொழுவர், குடிகெழீஇய நானிலவரொடு, தொன்றுமொழிந்து தொழில்கேட்ப :]

சிறு குடி பெரு தொழுவர் (122) ஒலி ஓவா கலி யாணர் (118) முதுவெள்ளிலை (119) - சிறிய குடிகளாய்ப் பெரியதொழில்களைச் செய் வாருடைய ஆரவாரமும் ஒழியாத பெருக்கினையுடைத்தாகிய புதுவரு வாயினையுடைய முதுவேள்ளிலையென்னுமூர்,

இது குறுநிலமன்னரிருப்பு.

பகர்நரொலியோடே (117 - 8) நெல்லின்ஞைை (110) முதலியஒலி என்றும் (111) ஓவாத முதுவெள்ளிலையென்க.

மீ கூறும் (119) இரு வகையான் (121) வியல் மேவல் விழு செல் வத்து (120) இசை சான்ற (121) குடி கெழீஇய நானிலவரொடு (123)- உலகத்துத் தொழில்களில் மேலாகச்சொல்லும் உழவு வாணிகமென் கின்ற இரண்டுகூற்றாலே அகலம்பொருந்துதலையுடைய சீரியசெல்வத் தாலே புகழ்நிறைந்த குடிமக்கள் பொருந்தின நான்குநிலத்து வாழ் வாருடனே,

தொன்று மொழிந்து தொழில் கேட்ப (124) - பழமைகூறிநின்று ஏவலைக்கேட்கும்படியாக,

125 - 7. கால் என்ன கடிது உராஅய் நாடு கெட எரி பரப்பி ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து - காற்றென்னும்படி கடிதாகப்பரந்து சென்று பகைவர் நாடுகெடும்படி நெருப்பைப்பரப்பித் [2] தலையாலங்கான மென்கின்ற ஊரிலே பகைவர்க்கு அச்சந்தோன்றும்படி [3] விட்டு,

[4] “ எரிபரந்தெடுத்தல் ” என்னுந் துறைகூறிற்று.

---

[1] அளவர்-நெய்தனிலமாக்களுள் ஒருவகையார் ; உப்பளத்திற்குரிய தொழில் செய்வோர்.

[2] இவ்வூர் தலையாலங்காடென்று வழங்கும் ; இது தேவாரம்பெற்ற ஒரு சிவதலம் ; சோழநாட்டிலுள்ளது ; இவ்வூரிற் பகைவரெழுவரையும் வென்றதுபற்றியே தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழிய னென்று இப்பாண்டியன் கூறப்படுவான் ; சிலப்பதிகாரத்திற் கூறப்படு பவன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்.

[3] விட்டு - தங்கி ; விடுதலென்பது பகைமேற்சென்றோர் தங்கு வதற்கே பெரும்பாலும் வழங்கும் ; பு - வே. உரை.

[4] தொல். புறத். சூ. 8.

128 - 9. அரசு பட அமர் உழக்கி முரசு கொண்டு களம் வேட்ட - நெடுநிலமன்னரிருவரும் குறுநிலமன்னரைவரும் படும்படி போரிலே வென்று அவர் முரசைக் கைக்கொண்டு களவேள்விவேட்ட,

எழுவராவர் : 1 சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநனென்பார்.

130. அடு திறல் உயர் புகழ் வேந்தே - 2 கொல்லுகின்ற வலியுயர்ந்த புகழையுடைய வேந்தேயென்க.

நானிலவரோடே (123) முதுவெள்ளிலை (119) தொழில் கேட்பத் (124) திறலுயர்ந்த வேந்தனே.

இது 3 தலையாலங்கானத்து வென்றமைகூறிற்று.

131. நட்டவர் குடி உயர்க்குவை - நின்னுடனே நட்புக்கொண்டவருடைய குடியை உயர்த்தலைச்செய்வை ;

132. செற்றவர் அரசு பெயர்க்குவை - நீசெறப்பட்டவர் அரசுரிமையை வாங்கிக்கோடலைச் செய்வை ;

133 - 4. பெரு உலகத்து மேஎந்தோன்றி சீர் உடைய விழு சிறப்பின் - பெரிய நன்மக்களிடத்தே மேலாய்த்தோன்றுகையினாலே புகழையுடைய விழுமிய தலைமையினையும்,

135. விளைந்து முதிர்ந்த விழு முத்தின் - சூல்முற்றி ஒளிமுதிர்ந்த சீரிய முத்தினையும்,

136. இலங்கு வளை இரு சேரி - விளங்குகின்ற சங்கினையுமுடைய பெரிய சங்குகுளிப்பாரிருப்பினையும்,

முத்தினையும் சங்கினையுமுடைய சேரியென்க.

137. கள் கொண்டி குடி பாக்கத்து - கள்ளாகிய உணவினையுடைய இழிந்த குடிகளையுடைய சிறூர்களையுமுடைய,

கொண்டி - கொள்ளப்படுதலின் உணவாயிற்று ; கொள்ளையுமென்ப.

---

1 இந்நூல் 55, 56 - ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

2 " மறம்வீங்குபல்புகழ் " (பதிற். ௧௨ : 8) என்பதும் அதனுரையும் ஈண்டு அறிதற்பாலன.

3 நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துச் செருவென்றமை பின்னுள்ள செய்யுட்களாலும் விளங்கும். " காலின னெடுந்தேர்க் கைவண் செழிய, னாலங்கானத் தமர்கடந் துயர்த்த, வேலினும் பல்லூழ் மின்னி ", " தென்னர் கோமா, னெழுவுறழ் திணிதோ ளியறேர்ச் செழிய, னேரா வெழுவ ரடிப்படக் கடந்த, வாலங் கானத் தார்ப்பினும் பெரிது " (அகநா. ௧௭௫ : 10 - 12, ௨௦௯ : 3 - 6); " இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கைத், தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து, மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையு, நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய " புறநா. ௧௯ : 1-4.

138. நல் கொற்கையோர் நசை பொருந - நன்றாகிய கொற்கையென்னும் ஊரிலுள்ளோர் நச்சுதலைச்செய்யும் பொருநனே,

இதனாற் கொற்கைக்குரியோனென்றார்.

சிறப்பினையும் (134) சேரியினையும் (136) பாக்கத்தினையு (137) முடைய கொற்கை.

139-40. செற்ற தெவ்வர் கலங்க தலைசென்று அஞ்சு வர தட்கும் அணங்கு உடை துப்பின் - தாங்கள்செறப்பட்ட பகைவர்மனம் கலங்கும்படி அவரிடத்தேசென்று அவர்க்கு அச்சந்தோன்றத்தங்கும் வருத்தத்தையுடைத்தாகிய வலியினையும்,

141. கொழு ஊன் குறை கொழு வல்சி - கொழுத்த இறைச்சியையுடைய கொழுத்திருக்கின்ற சோற்றினையும்,

ஊனைக் கூட இட்டு ஆக்குதலிற் கொழுவல்சியென்றார். கொழு வல்சி - கொழுவினாலாகிய வல்சியென்றுமாம்; இஃது [1] ஆகுபெயர்.

142. புலவு வில் - [2] எய்த அம்புதன்னை மீண்டும் தொடுத்தலிற் புலானாற்றத்தையுடைய வில்லினையும்,

பொலி கூவை - பொலிந்த [3] கூவைக்கிழங்கினையும்,

கூவை - திரளுமாம்.

143. ஒன்றுமொழி - வஞ்சினங்கூறுதலையும்,

ஒலி இருப்பின் - ஆரவாரத்தையுடைய குடியிருப்பினையுமுடைய,

144. தென்பரதவர் போர் ஏறே - தென்றிசைக்கண்வாழும் பரதவர்க்குப் போர்த்தொழிலைச்செய்யும் ஏறுயவனே,

இதனாற் பரதவரைத் தனக்குப் படையாக அடிப்படுத்தினமை கூறினார். துப்பு (140) முதலியவற்றையுடைய பரதவரென்க.

பரதவர் - தென்றிசைக்கட்குறுநிலமன்னர். அது, [4] "தென்பரதவர் மிடல்சாய, வடவடுகர் வாளோட்டிய" என்னும் புறப்பாட்டானுமுணர்க.

145. அரிய எல்லாம் எளிதினின் கொண்டு - பிறர்க்கு அரிய நுகர் பொருள்களெல்லாம் எளிதாக நின்னூரிடத்தேயிருந்து [5] மனத்தாற் கைக்கொண்டு,

---

[1] ஆகுபெயரென்றது கொழுவென்பதனை; அது கொழுவினாலாகிய வேளாண்மைக்காயிற்று.. கொழுவல்சி யென்பதனோடு, "பகடு நடந்த கூழ்" (நாலடி. 2) என்பதனை ஒப்பு நோக்குக.

[2] அம்பு புலால் நாறுதல் இதனாற்பெறப்படும்; "புலவு நுனைப் பகழி" (பெரும்பாண். 269) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

[3] மலைபடு. 137; புறநா. உக: 19. [4] புறநா. ௩எஅ: 1-2.

[5] "ஒன்னார், ஆரெயி லவர்கட் டாகவு நுமதெனப், பாண்கட னிறுக்கும் வள்ளியோய்" (புறநா. ௨0௩: 9-11); இராமன் இலங்கை கொள்வதன்முன் வீடணற்குக் கொடுத்த துறையுமது; தொல். புறத். சூ. 12, ந.

146. உரிய எல்லாம் 1 ஓம்பாது வீசி - அப்பொருளையெல்லாம் 2 நினக்கென்று பாதுகாவாது ஊரிடத்தேயிருந்து பிறர்க்குக்கொடுத்து,

என்றது, 3 "கொள்ளார் தேஎங் குறித்த கொற்றம்" கூறிற்று.

147. நனி புகன்று உறைதும் என்னது ஏற்று எழுந்து - மிக விரும்பி ஊரின்கண்ணேயிருந்து உறையக்கடவேமென்றுகருதாதே பகைவர்மேற் செல்லுதலை ஏறட்டுக்கொண்டு போக்கிலே ஒருப்பட்டு,

இது 4 வஞ்சிகூறிற்று.

148. பனி வார் சிமையம் கானம் போகி - பனியொழுகுகின்ற மலையிடத்தனவாகிய காடுகளைக்கடந்து,

சிமையம்: ஆகுபெயர்.

149. அகம் நாடு புக்கு - அவர்கள் உள்நாடுகளிலே புகுந்து,

இதனால், 5 "தொல்லெயிற்கிவர்தல்" கூறினார்.

அவர் அருப்பம் வெளவி - அப்பகைவர்அரண்களைக் கைக்கொண்டு அதனாலுமமையாமல்,

இது 6 குடுமிகொண்ட மண்ணுமங்கலங் கூறிற்று. இதனால் அரசர் அரண்களை அழித்தமை கூறினார்.

150. [யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து:] வேண்டு புலத்து பல யாண்டு கழிய இறுத்து - நீஅழித்தநாடுகளிற் கொள்ள வேண்டும் நிலங்களிலே பலயாண்டுகளும் போம்படி தங்கி,

151. மேம்பட மரீஇய வெல் போர் 7 குருசில் - அந்நிலங்கள் பண்டையின் மேலாதற்கு அடிப்படவிருந்த வெல்லும் போரினையுடைய தலைவனே,

8 இது பகைவர்நாட்டைத் தன்னுடாக்கினமை கூறிற்று.

152. உறு செறுநர் புலம் புக்கு - தொன்றுதொட்டுவந்த பகைவர் நிலத்தே விட்டு,

152-3. அவர் கடி காவின் நிலை தொலைச்சி - அவர் காவலையுடைய பொழில்களின் நிற்கின்ற நிலைகளைக் கெடுத்து,

என்றது வெட்டியென்றவாறு.

---

1 "ஓம்பாத வீகை - சீர்தூக்காது கொடுக்கும் கொடை" என்பர் புறப்பொருள் வெண்பாமாலை உரையாசிரியர்; 164.

2 புறநா. ௧௨௨-ஆம் செய்யுள் இக்கருத்தை விளக்குதல் காண்க.

3 தொல். புறத். சூ. 12.

4 வஞ்சி - மண்ணசையாற் பகைமேற் சேறல்.

5 தொல். புறத். சூ. 12.

6 பெரும்பாண். 450-52, ந; மதுரை. 349-50, ந.

7 குருசில் - உபகாரியென்பர், பு. வெ. உரையாசிரியர்.

8 மதுரை. 60, ந. பார்க்க.

154-5. இழிபு அறியா பெரு தண் பணை குரூஉ கொடிய எரி மேய - வளப்பங்குன்றுதலை ஒருகாலத்துமறியாத பெரிய மருதநிலங்களை நிறத்தையுடைய ஒழுங்கினையுடைய நெருப்புண்ண,

156. நாடு எனும் பேர் காடு ஆக - நாடென்னும்பெயர்போய்க் காடென்னும் பெயரைப்பெற,

157. ஆ சேந்த வழி மா சேப்ப - பசுத்திரள் தங்கின இடமெல்லாம் புலி முதலியன தங்க,

158. ஊர் இருந்த வழி பாழ் ஆக - ஊராயிருந்த இடங்களெல்லாம் பாழாய்க்கிடக்க,

ஊராரிருந்த இடமென்றுமாம்.

159-60. இலங்கு வளை மடம் மங்கையர் துணங்கை அம் சீர் தழூஉ மறப்ப - விளங்குகின்ற வளையினையும் மடப்பத்தினையுமுடைய மகளிர் துணங்கைக்கூத்தினையும் அழகினையுடைய தாளஅறுதியையுடைய [1] குரவைக்கூத்தினையும் மறப்ப,

[2] தழூஉ : ஆகுபெயர்.

161-3. அவை இருந்த பெரு [3] பொதியில் கவை அடி கடு நோக்கத்து பேய் மகளிர் பெயர்பு ஆட - [4] சான்றோரிருந்த பெரிய அம்பலங்களிலே இரட்டையான அடிகளையும் கடியபார்வைகளையுமுடைய பேயாகிய மகளிர் உலாவியாட,

164. அணங்கு வழங்கும் அகல் ஆங்கண் - இல்லுறைதெய்வங்கள் உலாவும் அகன்ற ஊரிடத்து,

---

1 ப. ௬௬, 2-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

2 தழூஉ வென்பதற்குக் குரவையென்று இங்கே பொருளெழுதியவாறே, "ஆங்க ணயர்வர் தழூஉ" (கலி. ௧0௪ : 62) என்றவிடத்தும் எழுதுவர். 3 திருமுருகாற்றுப்படை, 226, ந.

4 சான்றோர் - குடிப்பிறப்புமுதலிய எண்குணங்களமைந்தோர்; "எட்டுவகை நுதலிய அவையத் தானும்" (தொல். புறத்திணை. சூ. 21) என்பதனுரையாலும், "குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி, விழுப்பேரொழுக்கம் பூண்டு நாளும், வாய்மை வாய்மடுத்து மாந்தித் தூய்மையின், காதலின் பத்துத் தூங்கித் தீதறு, நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலு, மழுக்கா றின்மை யவாஅ வின்மையென, விருபெரு நிதியமு மொருதா மீட்டுந், தோலா நாவின் மேலோர் பேரவை" (ஆசிரியமாலை) என்னும் அதன் மேற்கோளாலும், "குடிப்பிறப்புக்கல்வி" (பு. வெ. 173, மேற்.) என்பதனாலும், "அழுக்கா றிலாமை யவாவின்மை தூய்மை, யொழுக்கங் குடிப்பிறப்பு வாய்மை - இழுக்காத, நற்புலமை யோடு நடுவு நிலைமையே, கற்புடைய வெட்டுறுப்புக் காண்" (வீர. மேற்.) என்பதனாலும் அக்குணங்களை யறியலாகும்.

165. நிலத்து ஆற்றும் குழூஉ புதவின் - நிலத்திலுள்ளாரையெல்லாம் போக்கும் வாசல்காப்பாரையுடைய வாசலின்கண்ணேயிருந்து,

குழூஉ: ஆகுபெயர்.

இனிக் [1] குடுமிதேய்ந்துபோதலின் மண்ணைக் கொழித்துவருமென்பாருமுளர்.

166. அரந்தை பெண்டிர் இனைந்தனர் அகவ - மனக்கவற்சியையுடைய பெண்டிர் வருந்திக் கூப்பிட,

167-8. கொழு பதிய குடி தேம்பி செழு கேளிர் நிழல் சேர - வளவிய ஊர்களிடத்தனவாகிய குடிகளெல்லாம் பசியால் உலர்ந்து புறநாட்டிலிருக்கும் வளவிய சுற்றத்தார் தமக்குப் பாதுகாவலாகச் சென்று சேர,

169-70. நெடு நகர் வீழ்ந்த கரி குதிர் பள்ளி குடுமி கூகை குராலொடு முரல - பெரியமாளிகைகளிலே வெந்துவீழ்ந்த கரிந்த குதிரிடங்களிலே குட்டியையுடைய கூகைச்சேவல் பேட்டுடனேயிருந்து கதற,

171-2. கழுநீர் பொலிந்த கண் அகல் பொய்கை களிறு மாய் செருந்தியொடு கண்பு அமன்று ஊர்தர - செங்கழுநீர்மிக்க இடமகன்ற பொய்கைகளிடத்தே யானைநின்றால்மறையும் வாட்கோரையுடனே சண்பங்கோரையும் நெருங்கிவளர,

செருந்தி - நெட்டிக்கோரையுமாம்.

173-4. நல் ஏர் நடந்த நசை சால் விளை வயல் பல் மயிர் பிணவொடு கேழல் உகள - நன்றாகிய எருதுகளுழுத நச்சுதலமைந்த விளைகின்ற வயலிடத்தே பலமயிரினையுடைய பெண்பன்றியுடனே ஆண்பன்றி ஓடித்திரிய,

பிணவென்னும் அகரவீற்றுச்சொல் வகரவுடம்படுமெய்பெற்றது; [2] "பன்றி புல்வாய் நாயென மூன்று, மொன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை" என்றார்.

175. [வாழா மையின் வழிதவக் கெட்டு :] தவ வழி வாழாமையின் கெட்டு - மிக [3] நின் ஏவல்செய்து வாழாமையினாலே கெட்டு,

இனித் தவக்கெட்டெனக்கூட்டி மிகக்கெட்டென்றலுமாம்.

176. பாழ் ஆயின - பாழாய்விட்டன,

நின் பகைவர் தேஎம் - நின்னொடு பகைத்தலைச் செய்தவருடைய நாடுகள்;

---

1 குடுமி - கதவைத்தாங்கி நிற்பதாயுள்ள ஒருறுப்பு; "தாய ரடைப்ப மகளிர் திறந்திடத், தேயத்திரிந்த குடுமியவே ........கதவு" (முத்.); "திருகுங் குடுமி விடிவளவுந் தேயுங் கபாடம்" கலிங்க. கடை. 49.

2 தொல். மரபு. சூ. 58. 3 "தொன்றுமொழிந்து தொழில் கேட்ப" (மதுரை, 72) என்பது இங்கே கருதற்பாலது.

177 - 9. [எழூஉத்தோ ளிமிழ்முழக்கின், மாஅத்தா ளுயர்மருப் பிற், கடுஞ்சினத்த களிறுபரப்பி :]

இமிழ் முழக்கின் மா தாள் உயர் மருப்பின் கடு சினத்த களிறு பரப்பி - முழங்குகின்ற ஓசையையும் பெருமையையுடைய கால்களையும் தலைகளேந்தின கொம்புகளையுமுடைய கடியசினத்தவாகிய யானைகளை எங்கும்பரப்பி,

180. [விரிகடல் வியன்றானையொடு :] [1] எழூஉ தோள் (177) விரி கடல் வியல் தானையொடு - [2] முதுகிட்டார்மேற் செல்லாத தோளினை யுடைய விரிகின்ற கடல்போலும் அகற்சியையுடைய படையோடே,

181. முருகு உறழ பகை தலை சென்று - முருகன் பகைவர்மேற் செல்லுமாறுபோலத் தடையறப் பகைவரிடத்தே சென்று,

முருகு - தெய்வத்தன்மை; ஆகுபெயராய் நின்றது.

182. அகல் விசும்பின் ஆர்ப்பு இமிழ - அகன்ற ஆகாயத்தின் கண்ணே படையெழுந்த ஆரவாரமொலிப்ப,

விசும்பெனவே ஆகுபெயராய்த் தேவருலகை யுணர்த்திற்று.

183. பெயல் உறழ கணை சிதறி - மழையோடே மாறுபடும்படி அம்புகளைத்தூவி,

184. பல புரவி நீறு உகைப்ப - [3] பல குதிரைத்திரள் ஓடுகின்ற விசையால் துகள்களை எழுப்ப,

185. வளை நரல - சங்கம் முழங்க,

வயிர் ஆர்ப்ப - கொம்பு ஒலிப்ப,

186. பீடு அழிய [4] கடந்து அட்டு - பெருமைகெடும்படி வென்று கொன்று,

---

1 "எழூஉத்துணைத்தோள் - போரில் முதுகிட்டார்மேற் செல்லாத இணை மொய்ம்பு" (பதிற். ௩௦ : 27, உரை) எனப் பிறரும் இவ்வாறே பொருள் கூறுதல் காண்க.

2 "இகலே கருதிச், சேர்ந்தார் புறங்கண்டு செந்நிலத் தன்றுதிண் டேர்மறித்துப், பேர்ந்தான்", "செந்நிலந் தைச்செருவில், மறிந்தார் புறங்கண்டு நாணியகோன்" (பாண்டிக்கோவை); "அழிகுநர் புறக் கொடை யயில்வா ளோச்சாக், கழிதறு கண்மை" பு. வெ. 55.

3 "மாவெடுத்த மலிகுரூஉத்துகள்" மதுரை. 49.

4 "கடந்தடு முன்பு" (கலி. ௨ : 4) என்பதற்கு, 'வஞ்சியாது எதிர்நின்று அடுகின்றவலி' என நச்சினார்க்கினியரும், "கடந்தடு தானை" (புறநா. ௬ : 5) என்பதற்கு, 'வஞ்சியாது எதிர்நின்று கொல்லும்படை' என்று அந்நூலுரையாசிரியரும் எழுதிய உரைகள் இங்கே கோடற் குரியன.

186 - 7. அவர் நாடு அழிய எயில் வௌவி - அவருடைய நாடு களழியும்படியாக அவரிருக்கின்ற மதிலைக்கொண்டு,

188. சுற்றமொடு தூ அறுத்தலின் - அவர்களுக்கு உதவிசெய்யும் சுற்றத்தாரோடேகூட அவர்கள் வலியைப் போக்குதலாலே,

189. செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப - நின்னாற் சிறிதுசெறப் பட்ட பகைவர் நின் ஏவல்கேட்டு நடக்கையினாலே,

190. வியல் கண் முது பொழில் மண்டிலம் முற்றி - அகலத்தை இடத்தேயுடைய பழைய நாவலந்தீவின்கணுளவாகிய சோழமண்டலம் தொண்டைமண்டல மென்கின்ற மண்டலங்களை நின்னவாக வளைத்துக் கொண்டு,

மண்டலம் மண்டிலமென மருவிற்று.

191. அரசு இயல் பிழையாது - நூல்களிற்கூறிய அரசிலக்கணத் தில் தப்பாமல்,

191 - 2. [அறநெறி காட்டிப், பெரியோர் சென்ற வடிவழிப் பிழை யாது:] பெரியோர் சென்ற அடி வழி பிழையாது அறம் நெறி காட்டி- நின்குலத்திற் பெரியோர்நடந்த அடிப்பாட்டின்வழியைத் தப்பாமல் அற நெறியிருக்கும்படி இதுவென்று அவர்களுக்கு விளக்கி,

நனிபுகன்றுறைதுமென்னாது எற்றெழுந்து (147) களிறுபரப்பித் (179) தானையோடே (180) தலைச்சென்று (181) அரசமண்டிலமுற்றிச் (190) செற்றதெவ்வர் நின்வழிநடக்கையினாலே (189) நீ நட்டவர் குடியையுயர்க்குவை (131) யாகையினாலே அவர்களுக்கு அறநெறிகாட் டிப் (191) பின்னர் அம்மண்டலங்களைச் சூழவிருந்த குறுநிலமன்னர் அரண்களிலுள்ளனவற்றை எளிதிற்கொண்டு (145) வீசிப் (146) போகிப் (148) புக்கு அவரருப்பங்களை வௌவிப் (149) பின்னர் உறுசெறுநர் (152) நின்வழி வாழாமையினாலே (175) அவர்புலம் புக்கு (152) நீநரை புருமேறனையை (63) யாகையினாலே அரசியல் பிழையாமல் (191) ஆர்ப்பிமிழ (182) நீறுகைப்ப (184) நரல ஆர்ப்பக் (185) கணைசிதறித் (183) தொலைச்சி (153) அவரைக்கடந்து அட்டு (186) அவரெயிலை வௌவி (187) அவரைத் தூவறுத்தலின் (188) அப்பகைவர்தேளம் (176) எரிமேயக் (155) காடாக (156) மா சேப்பப் (157) பாழாக (158) மறப்ப (160) ஆட (163) அகவச் (166) சேர (168) முரல (170) ஊர்தர (172) உகளக் (174) கெட்டுப் (175) பாழாயின (176); அங் ஙனம் பாழாயின பின்பு நீ செற்றவரரசு பெயர்க்குவை (132) யாகை யினாலே வேண்டுபுலத்திறுத்து (150) அந்நாடுகள் மேம்படுதற்குமருவினை குருசில் (151) என வினைமுடிக்க.

193 - 4. [குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின், வழி வழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்:] குடமுதல் தோன்றிய தொன்று

தொழு பிறையின் நின் வலம் படு கொற்றம் வழிவழி சிறக்க - மேற்றிசைக்கட்டோன்றிய 1 நின்குலத்திற்குப் பழைதாகிய எல்லாருந் தொழும் பிறை நாடோறுஞ்சிறக்குமா போல நின்னுடைய வெற்றியாலே நின் பின்னுள்ளோர்க்கு உண்டாங்கொற்றம் அவர்கள் வழிவழியாக மிகுவதாக ;

195-6. [குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுகநின் றெவ்வ ராக்கம் :] குணமுதல் தோன்றிய ஆர் இருள் மதியின் நின் தெவ்வர் ஆக்கம் தேய்வன கெடுக - கீழ்த்திசைக்கட்டோன்றிய நிறைந்த இருளைத்தருமதி நாடோறும் தேயுமாறுபோல நின்பகைவருடைய ஆக்கம் நாடோறும் தேய்வனவாய்க் கெடுவனவாக ;

197-8. உயர் நிலை உலகம் அமிழ்தொடு பெறினும் பொய் சேண் நீங்கிய வாய் நட்பினையே - ஒரு பொய்யாலே உயர்ந்த நிலையையுடைய தேவருலகை அவர்நுகரும் அமுதத்தோடே பெறுவையாயினும் அவற்றைத்தருகின்றபொய் நின்னைக் கைவிட்டு நீங்க மெய்யுடனே நட்புச்செய்தலையுடையை ;

இனி, 'பொய்சே ணீங்கிய வாய்நடப் பினையே' என்று பாடமாயின் மெய்யை நடத்தலைச் செய்தனையென்க.

199-201. முழங்கு கடல் ஏணி மலர் தலை உலகமொடு உயர்ந்த தேளத்து விழுமியோர் வரினும் பகைவர்க்கு அஞ்சி பணிந்து ஒழுகலையே - முழங்குகடலாகிய எல்லையையுடைய அகன்ற இடத்தையுடைய உலகத்துள்ளாருடனே உயர்ந்த தேவருலகத்துத்தேவரும் பகைவராய் வரினும் பகைவர்க்கு அஞ்சித் தாழ்ந்து ஒழுகலைச்செய்யாய் ;

202-4. தென்புலம் மருங்கின் விண்டு நிறைய வாணன் வைத்த விழுநிதி பெறினும் பழிநமக்கு எழுக என்னாய்-தென்றிசைநிலத்தின் மலைகளெல்லாம் நிறையும்படி வாணனென்னும் சூரன்வைத்த சீரிய பொருட்டிரள்களினைப் பெறுவையாயினும் பிறர் கூறும்பழி நமக்கு வருவதாக வென்று கருதாய் ;

204-5. விழு நிதி ஈதல் உள்ளமொடு இசை வேட்குவையே - சீரிதாகிய பொருளைக் கொடுத்தலையுடைத்தாகிய நெஞ்சுடனே புகழை விரும்புவை ;

206. அன்னாய் - அத்தன்மையையுடையாய்,

[நின்னொடு முன்னிலை யெவனோ :] முன்னிலை நின்னொடு எவனோ - ஐம்பொறிகளுக்கும் நுகரப்படுவனவாய் முன்னிற்கப்படுவனவாகிய இந் நுகர் பொருள்கட்கு நின்னோடு என்ன உறவுண்டு ;

1 "செருமாண் டென்னர் குலமுத லாகலின், அந்தி வானத்து வெண்பிறை தோன்றி" (சிலப். ௪ : 22-3); "செந்நிலத் தன்றுதிண் டேர்மறித்துப், பேர்ந்தான் றனது குலமுத லாய பிறைக்கொழுந்தே" பாண்டிக்.

நின்னென்றது சேவான்மாவை. முன்னிலை: ஆகுபெயர்.

207-8. [கொன்ஒன்று இளக்குவ லடுபோ ரண்ணல், கேட்டி சின் வாழி கெடுகநின் னவலம் :]

நின் அவலம் கெடுக - நின்னிடத்துண்டாகிய மாயை இனிக்கெடுவதாக ;

அடு போர் அண்ணல்-அம்மாயையைக்கொல்கின்ற போர்த்தொழில் வல்ல தலைவனே,

கொன் ஒன்று இளக்குவல் - பெரிதாயிருப்பதொரு பொருளை யான் கூறுவன் ; அஃது என்னாற் [1] காட்டுதற்கரிது ;

என்றது [2] கந்தழியினை.

கேட்டிசின் - அதனைத் [3] தொல்லாணை நல்லாசிரியரிடத்தே கேட்பாயாக ;

வாழியென்பதனைச் சுற்றமொடு விளங்கி (770) என்பதன்பின்னே கூட்டுக.

209. [கெடாது நிலைஇயர்நின் [4] சேண்விளங்கு நல்லிசை :] சேண் விளங்கு நின் நல் இசை கெடாது நிலைஇயர் - சேட்புலமெல்லாம் சென்று விளங்கும் நின்னுடைய நல்லபுகழ் ஒருகாலமும் கெடாதே நிலைபெறுவதாக ;

210-16. [தவாப்பெருக்கத் தறாயாண, ரழித்தானாக் கொழுந் திற்றி, யிழித்தானாப் பலசொன்றி, யுண்டானாக் கூர்நறவிற், றின்றாநு வினவைக, னிலனெடுக் கல்லா வொண்பல் வெறுக்கைப், பயனற வறியா வளங்கெழு திருநகர் :]

தவா பெருக்கத்து அறா யாணர் (210) வளம் கெழு திருநகர் (216)-கெடாத பெருக்கத்தினையுடைய நீங்காத புதுவருவாயாலே செல்வம் பொருந்தின திருமகளையுடைய நகர்,

அழித்து ஆனா கொழு திற்றி (211) தின்று (214) - அழிக்கப்பட்டு விருப்பு அமையாத கொழுவிய தசையைத்தின்று,

"ஆடழிக்க" என்ப.

ஆனா பல சொன்றி இழித்து (212) ஆனா கூர் நறவின் உண்டு (213) - விருப்பமையாத பலவகைப்பட்ட சோற்றைத் தீதென்றுகூறிக் களிப்பமையாத மிக்க கள்ளை உண்டு,

---

[1] இளக்குவலென்றமையாற் காட்டுதற்கரிது என்றார்.

[2] கந்தழியைப்பற்றிய செய்தியைத் திருமுருகாற்றுப்படையுரையின் இறுதிப் பகுதியாலறிந்து கொள்ளலாம்.

[3] மதுரை. 761 ; பட்டின. 170.

[4] "சேணார் நல்லிசைச் சேயிழை கணவ" (பதிற். அஅ : 36); "விண்பொருபுகழ்" (புறநா. கக : 6); "வானேற நீண்ட புகழான்)" சீவக. 6.

ஆறு இனம் (214) பாணர் (219) - அவ்விரண்டிலும் விருப்பமையாத திரட்சியையுடைய பாணரென்க.

தின்று (214) உண்டு (213) ஆறு இனப் (214) பாணர் (219) என்க.

வைகல் (214) - நாடோறும்,

நிலன் எடுக்கல்லா ஒள் பல் வெறுக்கை (215) - நிலஞ்சுமக்கமாட்டாத ஒள்ளிய பலவாகிய பொருட்டிரள்களையும்,

என்றது பூண்களையும் பொன்னையும்.

பயன் அறவு அறியா நகர் (216) - எக்காலமும் பயன்கெடுதலறியாத நகர்,

217 - 8. நரம்பின் முரலும் நயம் வரும் முரற்சி விறலியர் வறு கை குறு தொடி செறிப்ப - யாழ்வாசித்தாற்போலப் பாடும் நயப்பாடுதோன்றும் [1] பாட்டினையுடைய விறல்பட ஆடுதலையுடையார் தம்முடைய பூணணியாத கைகளிலே குறிய தொடிகளையிட,

[2] "நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார்" என்றார் பிறரும்.

219. பாணர் உவப்ப களிறு பல தரீஇ - பாணர்மகிழும்படி யானைகள் பலவற்றையுங்கொடுத்து,

நகரிலே யிருந்து (216) நாடோறும் (214) விறலியர் தொடிசெறியாநிற்பப் (218) பாணருவப்ப (219) வெறுக்கையையும் (215) யானையையுங் கொடுத்தென்க.

'தரீஇ' என்றதனை, [3] "செலவினும் வரவினும்" என்னும் பொதுச்சூத்திரத்தாற் கொள்க.

220. கலந்தோர் உவப்ப எயில் பல கடைஇ - தம்முடன் நட்புக்கொண்டோர் மனமகிழும்படி, அழித்த அரண்களிற்கொண்ட பல பொருள்களையும் அவர்க்குச் செலுத்திக்கொடுத்து,

என்றது, அவர் [4] வேண்டாவென்று மறுக்கவும் தாம் வலியப் போகவிட்டென்றவாறு.

221. மறம் கலங்க தலை சென்று - பகைவர்மறம் நிலைகுலையும்படி அவர்களிடத்தே சென்று,

222. வாள் உழந்து அதன் தாள் வாழ்த்தி - அவர்க்கு வாட்போரிலே வருந்தினபடியாலே அவ்வருத்தத்தினுற் பின்பும் அதன்கட் பிறக்கின்ற முயற்சியை வாழ்த்தி,

என்றது, [5] வாட்போரின்கட்பெற்ற இனிமையைப் பின்னும்விரும்பி அதிலே முயல்கின்றுரென வீரச்சிறப்புக் கூறிற்றும்.

---

1 "பாடனல் விறலியர்" பரி. ௭ : 15. 2 சீவக. 658.

3 தொல். களவி. சூ. 28.

4 "கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று" புறநா. ௨0௪ : 4.

5 முல்லை. 67-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

1 " விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" என்றார் பிறரும்.

உழந்தென்னுஞ் செய்தெனெச்சம் காரணப்பொருட்டு. உழந்த தன்னெனப் பெயரெச்சமாயின், தன்னென்னுமொருமை மேல்வருகின்ற மன்னர் (234) என்னும் பன்மைக்காகாமையுணர்க.

223-4. நாள் ஈண்டிய நல் அகவர்க்கு தேரோடு மா சிதறி - விடியற்காலத்தே வந்து திரண்ட அரசர்விரும்பப்பட்ட சூதர்க்குத் தேருடனே குதிரைகளையும் பலவாகக் கொடுத்து,

என்றது, 2 " தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச், சூத ரேத்திய துயிலெடை நிலையும்" என்னும்விதியாற் சூதர் இருசுடர்தொடங்கி இன்றுகாறும் வருகின்ற தம் குலத்துள்ளோர் புகழை அரசர் கேட்டற்கு விரும்புவரென்று கருதி விடியற்காலத்தே பாசறைக்கண்வந்து துயிலெடைபாடுவரென்பது ஈண்டுக் கூறிற்றும்.

அகவரென்றார், குலத்தோரெல்லாரையும் அழைத்துப் புகழ்வரென்பதுபற்றி; ஆகுபெயர், 3 " அகவல்" போல.

இனி வைகறைபாடும் பாணரென்பாருமுளர்.

வாழ்த்தித் திரண்ட அகவரென்க.

225-8. [சூடுற்ற சுடர்ப்பூவின், பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின், விழுமிய பெரியோர் சுற்ற மாகக், கள்ளி னிரும்பைக் கலஞ்செல வுண்டு:] கள்ளின் இரு பைக்கலம் செல உண்டு சூடு உற்ற சுடர் பூவின் பாடு புலர்ந்த நறு சாந்தின் விழுமிய பெரியோர் சுற்றம் ஆக - கள்ளினையுடையவாகிய பெருமையினையுடைய பச்சைக்குப்பிகள் வற்றும்படியாகக் 4 கள்ளினையுண்டு சூடுதலுற்ற விளக்கத்தையுடைத்தாகிய வஞ்சியினையும் பூசினபடியே புலர்ந்த நறிய சந்தனத்தினையுமுடைய சீரிய படைத்தலைவரைத் தமக்குச் சுற்றத்தாராகக்கொண்டு,

உண்டென்னுஞ் செய்தெனெச்சம் உடையவென்னும் வினைக்குறிப்போடு முடிந்தது.

229. பணிந்தோர் தேஎம் தம் வழி நடப்ப - தம்மை வழிபட்டோருடைய தேசங்கள் தம் ஏவலைக்கேட்டு நடக்கையினாலே,

230. பணியார் தேஎம் பணித்து திறை கொண்மார் - தம்மை வழிபடாதோருடைய தேசங்களைத் தம்ஏவல் கேட்கும்படி பண்ணி அவர்களைத் திறை வாங்குதற்கு,

---

1 திருக்குறள், 776. 2 தொல். புறத். சூ. 36.

3 " அகவிக்கூறலின் அகவலாயிற்று.........அதனை வழக்கினுள் அழைத்தலென்ப" தொல். செய். சூ. 81, ந.

4 கள்ளுணல் இங்கே வீரபானம்; சீவக. 1874, ந. பார்க்க.

231. *பருந்து பறக்கல்லா பார்வல் பாசறை* - உயரப்பறக்கும் பருந்துகளும் பறத்தலாற்ருத உயர்ச்சியையுடைய அரண்களையுடைய பாசறைக்கண்ணே,

1 பார்வல் : ஆகுபெயர்.

232. *படு கண் முரசம் காலை இயம்ப* - ஒலிக்கின்ற கண்ணையுடைய பள்ளியெழுச்சி முரசம் நாட்காலத்தே ஒலிப்ப இருந்து,

233. *வெடி பட கடந்து* - பகைவர் படைக்குக் கேடுண்டாக வென்று,

வெடி - ஓசையுமாம்.

*வேண்டு புலத்து இறுத்த* - பின்னும் அழிக்கவேண்டுமென்ற நிலங்களிலே சென்று விட்ட,

234. *பணை கெழு பெரு திறல் பல் வேல் மன்னர்* - வெற்றிமுரசு பொருந்தின பெரிய வலியினையும் பலவேற்படையினையுமுடைய அரசர்கள்,

235 - 6. [*கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த், திரையிடு மணலினும் பலரே :*] *கனை இரு முந்நீர் கரை பொருது இரங்கும் திரை இடு மணலினும் பலரே* - செறிதலையுடைய கரிய கடலிற் கரையைப் பொருது ஒலிக்கும் திரைகுவிக்கின்ற மணலினும் பலரே,

ஏகாரம் : பிரிநிலை.

236 - 7. *உரை செல மலர் தலை உலகம் ஆண்டு கழிந்தோரே* - புகழ் எங்கும் பரக்கும்படி அகன்ற இடத்தையுடைய உலகங்களைத் தமது ஏவல்களை நடத்தி மக்கட்குரிய மனனுணர்வின்மையிற் பிறப்பறமுயலாது பயனின்றி மாண்டோர் ;

ஏகாரம் : ஈற்றசை. 2 " மக்க டாமே யாறறி வுயிரே " என்றதனால், மனனுணர்வின்மையினென்ரும்.

தரீஇக் (219) கடைஇச் (220) சிதறிப் (224) பணிந்தோர் தேஎம் தம்வழி நடக்கையினுலே (229) பணியார்தேஎம் பணித்துத் திறை கொள்ளுதற்குப் (230) பெரியோர் சுற்றமாகக்கொண்டு (227) பாசறையிலே (231) முரசியம்ப இருந்து (232) கடந்து இறுத்த (233) மன்னர் (234) உலகமாண்டு கழிந்தோர் (237) திரையிடுமணலினும்பலர் (236) என முடிக்க.

இது, 3 " மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை " அன்றிப் பிறவியறமுயலாமையிற் கழிந்தமைகூறிற்று.

238. *அதனுல்* - பயனின்மையாலே,

---

1 பார்வல் - அரசர், தம் பகைவர் செய்மைக்கண் வருதலைப் பார்த்திருத்தற்குரிய உயர்ச்சியையுடைய அரண்.

2 தொல். மரபு. சூ. 33. 3 தொல். புறத். சூ. 24.

238 - 44. [குணகடல் கொண்டு குடகடன் முற்றி, யிரவு மெல்லை யும் விளிவிட னறியா, தவலு மிசையு நீர்த்திரள் பீண்டிக், கவலையங் குழும்பி னருவி யொலிப்பக், கழைவளர் சாரற் களிற்றின நடுங்க, வரைமுத லிரங்கு மேறொடு வான்ஞெமிர்ந்து, சிதாற் பெரும்பெயல் சிறத்தலின் :]

வான் (243) குணகடல் கொண்டு 1 குடகடல் (238) வரைமுதல் (243) முற்றி (238) - மேகம் கீழ்த்திசைக் கடலிடத்தே நீரைமுகந்து மேற்றிசைக் கடலருகின் மலையிடத்தே தங்கி,

இரவும் எல்லையும் விளிவு இடன் அறியாது (239) - இரவும் பகலும் ஒழிந்த இடத்தை அறியாது,

அவலும் மிசையும் நீர் திரள்பு ஈண்டி (240) கவலை அம் 2 குழும்பின் அருவி ஒலிப்ப (241) - பள்ளமும் மேடுமாகிய பலநிலத்துண்டாகிய நீரினாலே திரண்டு சேரக்குவிந்து கவலைக்கிழங்கு கல்லின அழகிய குழியிலே வீழ்ந்து அருவியொலிக்கும்படி,

கழை வளர் சாரல் களிறு இனம் நடுங்க (242) இரங்கும் ஏறொடு ஞெமிர்ந்து (243) - மூங்கில் வளர்ந்த மலைப்பக்கத்திலே யானைத்திரள் நடுங்கும்படி ஒலிக்கும் உருமேற்றோடே பரந்து,

சிதரல் பெரு பெயல் (244) - சிதறுதலையுடைய பெருமழை,

சிறத்தலின் (244) - மிகுகையினாலே,

வான் (243) முற்றி (238) ஞெமிர்ந்து (243) அருவியொலிக்கும்படி (241) பெரும்பெயல் (244) விளிவிடனறியாது (239) சிறத்தலின் (244) என முடிக்க.

244 - 6. [தாங்காது குணகடற் கிவர்தருங் குருஉப்புன லுந்தி, நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றி :] தாங்காது உந்தி நிவந்து செல் நீத்தம் குளம் கொள சாற்றி குணகடற்கு இவர்தரும் குருஉ புனல் - யாறுகள் தாங்காமல் யாற்றிடைக்குறையிலே ஓங்கிச்செல்கின்ற பெருக்கைக் குளங்கள்கொள்ளும்படி நிறைத்துக் கீழ்த்திசைக் கடலுக்குப் பரந்துசெல்லும் நிறத்தையுடைய நீராலே,

247. களிறு மாய்க்கும் கதிர் கழனி - யானைகள் நின்றால் அவற்றை மறைக்கும்படி விளைந்த கதிரையுடைய கழனியிலும்,

248. ஒளிறு இலஞ்சி - விளங்கும் மடுக்களினும்,

248 - 9. அடை நிவந்த முள் தாள சுடர் தாமரை - இலைக்கு மேலான, முள்ளையுடையதாள்களையுடையவாகிய ஒளியினையுடைய தாமரைப்பூவினையும்,

---

1 "மேன்மலைமுற்றி" (பரி. கஉ : 2); "பெருமலை மீமிசை முற்றின" அகநா. உஎஅ : 6.

2 குழும்பு - குழி ; மதுரை. 273, ந.

250. கள் கமழும் நறு நெய்தல் - தேன் நாறும் நறிய நெய்தற் பூவினையும்,

251. வள் இதழ் அவிழ் நீலம் - 1 பெருமையையுடைய இதழ் விரிந்த நீலப்பூவினையும்,

252. மெல் இலை அரி ஆம்பலொடு - மெல்லிய இலையினையும் வண்டுகளையுமுடைய ஆம்பற்பூவோடே,

அரி - மென்மையுமாம்.

253. வண்டு இறை கொண்ட கமழ் பூ பொய்கை - வண்டுகள் தங்குதல் கொண்ட மணநாறும் பிறபூக்களையுமுடைய பொய்கைகளிலும்,

254 - 5. கம்புள் சேவல் இன் துயில் இரிய வள்ளை நீக்கி 2 வய மீன் முகந்து - 3 கம்புட்கோழி இனிய உறக்கங்கெடும்படி வள்ளைக் கொடிகளைத் தள்ளி வலியையுடைய மீன்களை முகந்துகொண்டு,

256. கொள்ளை சாற்றிய கொடு முடி வலைஞர் - விலைகூறிவிற்ற கொடிய முடிகளையுடைய வலையால் மீன்பிடிப்பார்,

கழனியிலும் (247) இலஞ்சியிலும் (248) பொய்கைகளிலும் (253) மீன்முகந்து (255) சாற்றிய வலைஞரென்க.

257. வேழம் பழனத்து நூழிலாட்டு ஓதை (258) - 4 கொறுக்கைச்சியையுடைய மருதநிலத்து மீனைக் கொன்றுகுவித்தலாற் பிறந்த ஓசை,

258. கரும்பின் எந்திரம் ஓதை - கரும்பிற்கு இட்ட ஆலையிடத்து ஓசை,

கட்பின் ஓதை - களைபறிப்பிடத்துஓசை,

259 - 60. அள்ளல் தங்கிய பகடு உறு விழுமம் கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே - மூத்தலான் அள்ளலிலே வலியற்றுத்தங்கிய எருதுற்ற வருத்தத்தைக் கள்ளையுண்ணுங்களமர் பெயர்க்கும் ஆரவாரம்,

261 - 2. ஒலிந்த பகன்றை விளைந்த கழனி வல் கை வினைஞர் அரிபறை - தழைத்த பகன்றையினையுடைய நெல்லுமுற்றிய கழனியில் அந்நெல்லை வலிய கையினாலே அறுப்பாருடைய அரித்தெழுகின்ற பறையோசை,

---

1 பெருமையையுடைய நீலம்: நெய்தல் நீலம் என்னும் இருவகை மலர்களுள் நீலம் சிறப்புடையதாகலின் இவ்வாறு உரையெழுதினர்; "பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்கும்" (ஐங். ௨ : 4) என்பதன் விசேட வுரையிலே அதன் உரையாசிரியர், 'சிறப்புடைய கருங்குவளை யுடனே சிறப்பில்லாத நெய்தல் நிகர்க்கு மூரனென்றது.........' என்றெழுதியிருத்தல் இதனை வலியுறுத்தும்.

2 "வய வலியாகும்" தொல். உரி. சூ. 68.

3 கம்புட்கோழி - சம்பங்கோழி.

4 கொறுக்கைச்சி - கொறுக்காந்தட்டை.

262 - 4. இன் குரல் தளி மழை பொழியும் தண் பரங்குன்றில் கலி கொள் சும்மை - இனிய ஓசையினையுடைய துளிகளையுடைய மேகந் தங்கும் குளிர்ந்த திருப்பரங்குன்றில் விழாக்கொண்டாடும் ஆரவாரம்,

1 "வயிரியர், முழவதிர்ந் தன்ன முழக்கத் தேரோடு" என்றார் பிறரும்.

264 - 6. ஒலி கொள் ஆயம் ததைந்த கோதை தாரொடு பொலிய புணர்ந்து உடன் ஆடும் இசையே - புதுநீர்விழவின் ஆரவாரத்தைத் தம்மிடத்தே கொண்ட 2 மகளிர்திரள் தம்மிடத்து நெருங்கினகோதை தம் கணவர் மார்பின் மாலையுடனே அழகுபெறக் கூடி அவர்களுடனே நீராடும்ஓசை,

266 - 7. அனைத்தும் அகல் இரு வானத்து இமிழ்ந்து இனிது இசைப்ப - அவ்வோசை முழுவதூஉம் 3 தன்னையொழிந்த பூதங்கள் விரிதற்குக்காரணமாகிய பெருமையையுடைய ஆகாயத்தேசென்று முழங்கி ஆண்டுவாழ்வார்க்கு இனிதாக ஒலிப்ப,

268 - 9. குருகு நரல மனை மரத்தான் மீன் சீவும் பாண் சேரியொடு - குருகென்னும் பறவைகள் கூப்பிடும்படி மனையிடத்து மரங்கடோறும் மீனைத்திருத்தும் பாணர்குடியிருப்பிற் பாடலாடலால் எழுந்த ஓசையோடே,

270. மருதம் சான்ற - ஊடலாகிய உரிப்பொருளமைந்த,

தண்பணை சுற்றி - மருதநிலஞ் சூழப்பட்டு,

ஒருசார் - ஒருபக்கம்,

ஒருசார் (270) சேரியிலோசையோடே (269) ஓதை (258) ஆர்ப்புப் (260) பறையோசை (262) சும்மை (264) இசையாகிய அவ்வோசை முழுவதும் (266) இசைக்கும்படி (267) தண்பணை சுற்றப்பட்டு (270) என்க.

271. சிறு தினை கொய்ய - சிறியதினையையறுக்க,

4 கவ்வை கறுப்ப - எள்ளிளங்காய் முற்ற,

272. கரு கால் வரகின் இரு குரல் புலர - கரியதாளினையுடைய வரகினது கரிதாகிய கதிர் முற்ற,

273. ஆழ்ந்த குழும்பில் திரு மணி கிளர - ஆழ்ந்தகுழியிலே திருவினையுடைய மணிகிடந்து விளங்க,

---

1 அகநா. ருஉ அ : 1 - 2.

2 "மைந்தர் கண்ணி மகளிர் சூடவும், மகளிர் கோதை மைந்தர் மலையவும்" (பட்டினப். 109 - 10); "மகளிர் கோதை மைந்தர் புனையவும், மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்" பரி. உ0 : 20 - 21.

3 பெரும்பாண். 1, உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

4 கவ்வை - எள்ளிளங்காய்; மலைபடு. 105, ந.

274 - 6. [எழுந்த கடற்றி னன்பொன் கொழிப்பப், பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி, மடக்கட் பிணையொடு மறுகுவன வுகள:] பெரு கவின் பெற்ற சிறு தலை நௌவி எழுந்த கடற்றில் நல் பொன் கொழிப்ப மடம் கண் பிணையொடு மறுகுவன உகள - பெரிய அழகைப் பெற்ற சிறியதலையினையுடைய நௌவிமான் வளர்ந்தகாட்டில் மாற்றற்ற பொன் மேலேயாம்படி மடப்பத்தையுடைத்தாகிய கண்ணினையுடைய பிணையோடே சுழல்வனவாய்த் துள்ள,

277. சுடர் பூ கொன்றை தாஅய நீழல் - ஒளியினையுடையவாகிய பூக்களையுடைய கொன்றைபரந்த நிழலிடத்தே,

278. பாஅயன்ன பாறை அணிந்து - பரப்பினையொத்த பாறை அழகுபெற்று,

279 - 81. [நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும், வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து, சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்:] நீலத்து அன்ன பைம்பயிர் மிசைதொறும் சுரி முகிழ் முசுண்டையொடு முல்லை வெள்ளி அன்ன ஒள் வீ உதிர்ந்து தாஅய் - நீலமணியையொத்த பசிய பயிர்களினிடங்கடோறும் முறுக்குண்ட அரும்புகளையுடைய முசுண்டையுடனே முல்லையினுடைய வெள்ளியினிறத்தையொத்த ஒள் ளியபூக்கள் உதிர்ந்து பரந்து,

282 - 4. [மணிமரு ணெய்த லுறழக் காமர், துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர, வல்லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப:] வல்லோன் தைஇய வெறி களம் கடுப்ப காமர் துணி நீர் மெல் அவல் மணி மருள் நெய்தல் தொய்யிலொடு உறழ மலர - இழைத்தல்வல்லவன் இழைத்த வெறிக்கூத்தையுடைய களத்தையொப்ப விருப்பத்தையுடைய தெளிந்த நீரையுடைத்தாகிய நெகிழ்ந்த பள்ளத்திலே நீலமணியென்று மருளும் நெய்தல் தொய்யிற்கொடியோடே மாறுபட மலர,

285. முல்லை சான்ற புறவு அணிந்து ஒருசார் - 1 இருத்தலாகிய உரிப்பொருளமைந்த காடுசூழ்ந்து ஒருபக்கம்,

ஒருசார் (285) அணிந்து (278) தாஅய்க் (281) கொய்யக் கறுப்பப் (271) புலரக் (272) கிளர (273) உகள (276) மலரப் (283) புறவுசூழப் பட்டு (285) எனமுடிக்க.

2 "பன்முறையானும்" என்பதனாற் பலவினையெச்சம் விராஅய் அடுக்கி அணிந்தென்னும் வினைகொண்டன.

---

1 ௧௬௬-ஆம் பக்கம் முதலாவது அடிக்குறிப்பைப் பார்க்க.

2 "பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி, சொன்முறை முடியா தடுக்குந வரினும், முன்னது முடிய முடியுமன் பொருளே" தொல். வினை. சூ. 36.

286 - 7. நறு காழ் கொன்று கோட்டின் வித்திய குறு கதிர் தோரை - [1] நறியஅகிலையும் சந்தனத்தையும்வெட்டி மேட்டுநிலத்தே விதைத்த குறியகதிர்களையுடைய தோரைநெல்லும்,

287. நெடு கால் ஐயவி-நெடியதாளினையுடைய வெண்சிறு கடுகும்,

288. [2] ஐவனம் வெள் நெல்லொடு அரில் கொள்பு நீடி - ஐவன நெல்லென்னும் வெள்ளியநெல்லோடே பிணக்கங்கொண்டு வளரப்பட்டு,

289 - 90. இஞ்சி மஞ்சள் பைங்கறி பிறவும் பல் வேறு தாரமொடு கல் அகத்து ஈண்டி - இஞ்சியும் மஞ்சளும் பசுத்த மிளகுகொடியும் ஒழிந்த பலவாய் வேறுபட்ட பண்டங்களும் கற்றரையிடத்தே குவியப் பட்டு,

291. [3] தினை விளை சாரல் கிளி கடி பூசல் - தினையும் விளையப்படு கின்ற மலைப்பக்கத்திற் படியும் கிளியை ஓட்டும் ஆரவாரம்,

நீடி ஈண்டியென்னுஞ் செய்தெனெச்சங்கள் விளையுமென்னும் பிற வினை கொண்டன, [4] "அம்முக் கிளவி" என்னுஞ் சூத்திரவிதியால்.

292 - 3. மணி பூ அவரை [5] குரூஉ தளிர் மேயும் ஆமா கடியும் கானவர் பூசல் - பன்மணிபோலும் பூவினையுடைய அவரையினது நிறவிய தளிரைத் தின்னும் ஆமாவையோட்டுங் கானவருடைய ஆரவாரம்,

294 - 5. சேணோன் அகழ்ந்த மடி வாய் பயம்பின் [6] வீழ் முகம் கேழல் அட்ட பூசல் - மலைமிசையுறையுங்குறவன் கல்லப்பட்ட மூடின வாயையுடைய பொய்க்குழியிலே விழும் பக்குவத்தினையுடைய ஆண் பன்றியைக் கொன்றதனாலுண்டான ஆரவாரம்,

சேணோன் அகழ்ந்த பயம்பு - இழிகுலத்தோனாகியவன் அகழ்ந்த பயம்பென்பாருமுளர்.

---

1 "நறைபடர் சாந்த மறவெறிந்து நாளால், உறையெதிர்ந்து வித் தியவூ ழேனல்" திணைமாலை. 1.

2 ஐவனமும் வெண்ணெல்லும் ஒன்றென்பது தோன்ற, "ஐவன வெண்ணெல்" (கலி. ௪௩ : 4) என்பதற்கு, 'ஐவனமாகிய வெண் ணெல்லை' என்று இங்கே கூறியவாறே நச்சினார்க்கினியர் உரையெழுதி யுள்ளார்; ஆயினும், "ஐவனம் வெண்ணெல்" (மலைபடு. 115) என்ற அடியும் அதற்கு இவர், 'ஐவனநெல்லும் வெண்ணெல்லும்' என உரை கூறியிருப்பதும் அவ்விரண்டும் வேறென்று பொருள் கொள்ளச் செய்கின்றன; இவை ஆராய்ச்சிக்குரியன.

3 பி - ம். 'தினைவளர்'

4 "அம்முக் கிளவியுஞ் சினைவினை தோன்றிற், சினையொடு முடியா முதலொடு முடியினும், வினையோ ரனைய வென்மனார் புலவர்" தொல். வினை. சூ. 34.

5 பி - ம். 'குரூஉத்திரள்' 6 பி - ம். 'விழுமுகக்'

296 - 7. கரு கால் வேங்கை 1 இரு சினை பொங்கர் நறு பூ கொய்யும் கானவர் (293) பூசல் - கரியதாளினையுடைய வேங்கையிடத்துப் பெரிய கவடுகளிற் றோன்றிய சிறிய கொம்புகளிற்பூத்த நறியபூவைப் பறிக்குமகளிர் புலிபுலி யென்று கூறும் ஆரவாரம்,

297 - 8. இரு கேழ் ஏறு அடு வய புலி பூசலொடு - கரியநிறத்தையுடைய பன்றியைக்கொல்லுகின்ற வலியினையுடைய புலியினது ஆரவாரத்தோடே,

ஏறு - 2 ஆனேறுமாம்.

298. அனைத்தும் - முழுவதும்,

299 - 301. [இலங்குவெள் ளருவியொடு சிலம்பகத் திரட்டக், 3 கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிந், தருங்கடி மாமலை தழீஇ :]

இலங்கு வெள் அருவியொடு கரு கால் வெற்பு அணிந்து - விளங்குகின்ற வெள்ளிய அருவி வீழ்கின்றவாற்றாலே கரிய நீரோடுங்கால்களையுடைய பக்கமலைகள் சூழ்ந்து,

சிலம்பு அகத்து இரட்ட - மலையிடத்தே மாறிமாறி யொலிப்ப,

4 குறிஞ்சி சான்ற - புணர்ச்சியாகிய உரிப்பொருளமைந்த,

அரு கடி மா மலை தழீஇ - பெறுதற்கரிய சிறப்பினையுடைய பெரிய மலை தழுவப்பட்டு,

301. ஒருசார் - ஒருபக்கம்,

ஒருசார் (301), அருவியாற் (299) கருங்காலையுடையவெற்பணிதலாலே (300) நீடி (288) ஈண்டி (290) விளையுஞ் சாரலிற் கிளிகடி பூசல் (291), கானவர் பூசல் (293), அட்டபூசல் (295), கொய்யும்பூசலாகிய (297) அனைத்துப்பூசலும் புலிப்பூசலோடே (298) சிலம்பகத்து இரட்டக் (299) குறிஞ்சிசான்ற (300) அருங்கடியினையுடைய மலைதழுவப்பட்டு (301) எனமுடிக்க.

302. [இருவெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப :] இரு வெதிர் கூர் எரி பைந்தூறு நைப்ப - 5 பெரிய மூங்கிலிற்பிறந்த மிக்கநெருப்பு, பசியதூறுகளைச் சுடுகையினாலே,

---

1 பி - ம். 'பெருஞ்சினைப்' 2 பி - ம். 'ஆனையுமாம்'

3 பி - ம். 'கருங்கோற்குறிஞ்சி'

4 "புணர்தலின்றி இல்லறம் நிகழாமையின் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியை அதன்பின் வைத்தார். இதற்குதாரணம் இறந்தது; 'கருங்காற் குறிஞ்சி சான்றவெற் பணிந்து' என்பது கரு" (தொல். அகத். சூ. 5, ந.) என்றவிடத்து இவ்வுரையாசிரியர் இவ்வடிக்குக் கொண்ட பொருளும், இங்கே அந்வயஞ்செய்து கொண்டபொருளும் மாறுபடுதல் ஆராய்தற்குரியது.

5 "வான்றோடர் மூங்கி றந்த வயங்குவெந் தீயி தென்னத், தான்றொடர் குலத்தை யெல்லாந் தொலைக்குமா சமைந்து நின்றாள்",

303. *நிழத்த யானை மேய் புலம் படர* - ஓய்ந்தயானைகள் தமக்கு மேயலாமிடங்களிலே போக,

304. *கலித்த இயவர் இயம்*[1] *தொட்டன்ன* - மகிழ்ந்த வாச்சியக்காரர் தம் வாச்சியத்தை வாசித்தாலொத்த,

305. *கண் விடுபு உடையூ தட்டை கவின் அழிந்து* - மூங்கிலின் [2] கண் திறக்கப்பட்டு உடைந்து [3] இயந்தொட்டன்ன (304) ஓசையையுடைய தட்டை அழகு அழிகையினாலே,

*தட்டப்படுதலிற் றட்டையென்றார்.*

*நெருப்பு நைக்கையினாலே (302) பயிரின்றித் தட்டை கவினழிகையினாலே (305) ஓய்ந்தயானை மேய்புலம் படரும்படி (303) அருவியான்ற மலை (306) யென்க.*

*கவினழியவெனத் திரித்துமுடித்தலுமாம்.*

306. *அருவி ஆன்ற அணி இல் மா மலை* - அருவிகளில்லையான அழகில்லாத பெரியமலையிடத்து விடரகம் (308),

307. *வை கண்டன்ன புல் முளி அம் காட்டு* - வைக்கோலைக்கண்டாற் போன்ற [4] ஊகம்புல்லுலர்ந்த அழகிய காட்டிடத்தில்,

308. *கம சூழ்* [5] *கோடை விடர் அகம் முகந்து* - நிறைவினையுடைய [6] சூறாவளியை முழைஞ்சிடங்கள் முகந்துகொள்கையினாலே,

309. *கால் உறு கடலின் ஒலிக்கும் சும்மை* - காற்றுமிகுந்த கடல்போல் ஒலிக்கும் ஆரவாரத்தையுடைய வேனிற்குன்றம் (313),

310 - 11. *இலை வேய் குரம்பை உழை அதள் பள்ளி உவலை கண்ணி வல் சொல்* [7] *இளைஞர்* - குழையாலேவேய்ந்த குடியிலிருக்கும் மான்றோலாகிய படுக்கையினையும் தழைவிரவின கண்ணியினையும் கடியசொல்லினையுமுடைய இளையோர்,

312. *சிலை உடை கையர் கவலை காப்ப* - வில்லையுடைய கையையுடையராய்ப் பழவழிகளில் ஆறலைகள்வரைக் காக்கும்படி சுரஞ்சேர்ந்து (314) என்க.

---

"அமைத்தரு கனலென" (கம்ப. கரன்வதை. 66, திருவடி. 40) "மூங்கிலிற் பிறந்து முழங்குதீ மூங்கின் முதலற முருக்குமா போல" (உத்தர. இலவணன். 29); "தீக்குப் பிறந்தவில் லென்னும், வேய்க்குச் சிறப்பென்கொல் வேறே" (தக்க. 304); "கிளை தம்மிலுற்ற செம்மைக் கனலான் முடிவுற்றிடுஞ் செய்கையேபோல்" கந்த. மகாசாத்தாப். 17. [1] பி - ம். 'தொட்டென்ன'

[2] கண் - கணுக்கள். [3] இயம் - வாத்தியம்.

[4] ஊகம்புல்: பெரும்பாண். 122. [5] பி - ம். 'கொட்டை'

[6] சூறாவளி - சுழல்காற்று; "சூறாவளி வைகிய சூழலின்வாய்" கந்த. காமதகனப். 24. [7] பி - ம். 'இளையர்'

313. நிழல் உரு இழந்த வேனில் குன்றத்து - நிழல் தன்வடிவை யிழத்தற்குக் காரணமான முதுவேனிற்காலத்தையுடைய மலையிடத்துச் சுரம் (314),

314. பாலை சான்ற - பிரிவாகிய உரிப்பொருளமைந்த,

சுரம் சேர்ந்து - அருநிலஞ் சேரப்பட்டு,

ஒருசார் - ஒருபக்கம்,

ஒருசார் (314), மலை (306) விடரகம் கோடையைமுகக்கையினலே (308) கடலினெலிக்குஞ் சும்மையையுடைய (309) வேனிற்குன்றத்துப் (313) பாலைசான்ற சுரஞ்சேரப்பட்டு (314) என்க.

பாலைக்கு [1] நடுவணதென்னும் பெயர்கூறியவதனல், அது தத்தம் பொருளானும், [2] "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என [3] முதற் பொருள்பற்றிப் பாலை நிகழ்தலானும் பாலையையும் வேறோர் நிலமாக்கினர்.

315. முழங்கு கடல் தந்த [4] விளங்கு கதிர் முத்தம் - ஒலிக்குங் கடல் தந்த விளங்குகின்ற ஒளியினையுடைய முத்து,

316. அரம் போழ்ந்து அறுத்த கண் நேர் இலங்கு வளை - [5] வாளரம் கீறியறுத்த இடம் நேரிதாகிய விளங்கும்வளை,

நேர்ந்தவளையுமாம்.

317. பரதர் தந்த பல்வேறு கூலம் - செட்டிகள் கொண்டுவருதலால் மிக்க பலவாய் வேறுபட்ட பண்டங்கள்,

---

1 நடுவணதென்னும் பெயர் பாலைக்குண்மையையும் அப்பெயர்க் காரணத்தையும், "அவற்றுள், நடுவ ணைந்திணை நடுவண தொழிய" (தொல். அகத். சூ. 2) என்பதன் உரையாலுணரலாகும்.

2 சிலப். கக : 64 - 6.

3 முதற்பொருளென்றது ஈண்டு நிலமாகிய முதற்பொருளை.

4 கடல்முத்து, சிறந்ததாகலின், 'விளங்கு கதிர் முத்தம்' என இங்கே அதனைச் சிறப்பித்தார்; "தலைமை பொருந்திய வெள்ளிய முத்துக்கள்.........கடலினிடத்தே பிறந்தனவாயினும்" (கலி. க : 15 - 6, ந.), "உவரிமுத்தென்றது எட்டிடத்திலும் சிறப்புடையவிடம் கடலாகையாலெனவுணர்க" (தக்க. 181, உரை) என்பன இக்கருத்தை வலியுறுத்தும்.

5 "விலங்கரம் பொருத சங்கின் வெள்வளை" (சீவக. 2441) என்பதனையும், 'வளைந்த வாளரமறுத்த சங்கவளை' (ந.) என்ற அதன் உரையையுங் காண்க; "வாளரந் துடைத்த வைவேல்" (சீவக. 461) என்ற விடத்து, 'வாளரம் - அரவிசேடம்' என்றெழுதியுள்ள உரை இங்கே கோடற்குரியது.

தந்தென்றும் பாடம்.

318. [இருங்கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்பு :]

இரு கழி செறுவின் வெள் உப்பு - கரிய கழியிடத்துப் பாத்தியில் விளைந்த வெள்ளிய உப்பு,

தீ புளி - 1 கருப்புக்கட்டி கூட்டிப் பொரித்தபுளி,

319. பரந்து ஓங்கு வரைப்பின் - மணற்குன்று பரந்துயருங் கானலிடத்தே,

319 - 20. வல் கை திமிலர் 2 கொழு மீன் குறைஇய துடி கண் துணியல் - வலிய கையினையுடைய திமிலர் கொழுவிய மீன்களையறுத்த துடியின் கண்போலுருண்ட துணிகள்,

என்றது கருவாடுகளை.

தீம்புளியினையும், உப்பினையும், கருவாட்டினையுமேற்றின நாவா (321) யென்க.

321. விழுமிய நாவாய் - சீரியமரக்கலம்,

பெருநீர் ஓச்சுநர் - மரக்கல மீகாமர்,

322. நனை தலை தேஎத்து - அகன்ற இடத்தையுடைய யவனம் முதலிய தேயத்தினின்றும்,

நல் கலன் உய்ம்மார் - இவ்விடத்துண்டாகிய பேரணிகலங்களை ஆண்டுச் செலுத்துதற்கு,

323. புணர்ந்து - பலருங்கூடி,

உடன் கொணர்ந்த புரவியொடு - சேரக்கொண்டுவந்த குதிரைகளோடே,

அனைத்தும் - முழுவதும்,

324. வைகல் தோறும் வழி வழி சிறப்ப - நாடோறும் முறைமையே முறைமையே மிகுகையினாலே வளம்பல பயின்று (325) என்க.

325. நெய்தல் சான்ற - இரங்கலாகிய உரிப்பொருளமைந்த,

வளம் பல பயின்று - பலசெல்வமும் நெருங்கப்பட்டு,

ஒருசார் (314), பெருநீரோச்சுநர் (321) கலனுய்ம்மார் தேஎத்துக் (322) கொணர்ந்த புரவியோடே (323) முத்தம் (315) வளை (316) கூல

1 கருப்புக்கட்டி - கரும்பின் வெல்லக்கட்டி.

2 "கொழுமீனுண்ட வன்னங்களே" (திருச்சிற். 188) என்பதன் உரையில், 'கொழுமீனென்பது ஒருசாதி' (பேர்.) என எழுதியிருத்தலால் இப்பெயரமைந்த ஒருவகை மீன் உண்மை பெறப்படுகின்றது; "கொழுமீன் குறைய வொதுங்கி" (சிறுபாண். 41); "நெய்த்தலைக் கொழுமீன்", "கொழுமீன் சுடுபுகை" (நற். உ௧௧ : 2. ௩௧௧ : 6); "நுளையர்கள் கொடுப்பன கொழுமீன்" பெரிய. திருக்குறிப்புத். 35.

மானவை (317) அனைத்தும் (323) வழிவழிச்சிறப்ப (324) வளம்பல பயிலப்பட்டு (325) என்க.

நெய்தல்சான்ற (325) பரந்தோங்குவரைப்பின்கண்ணே (319) வளம்பல பயிலப்பட்டு (325) எனமுடிக்க.

325 - 6. ஆங்கு [1] ஐம்பால் திணையும் கவினி - அம்மண்டலத்தின் கண்ணே ஐந்து கூற்றினையுடைய நிலங்களும் அழகுபெற்று,

அமை வர - பொருந்துதல்தோன்ற,

327 - 8. [முழவிமிழு மகலாங்கண், விழவுநின்ற வியன்மறுகின் :] முழவு இமிழும் விழவு நின்ற வியல் மறுகின் - முழவுமுழங்குந் திருநாள் நிலைபெற்ற அகற்சியையுடைய தெருவினையும்,

329. துணங்கை - துணங்கைக்கூத்தினையும்,

அம் தழூஉவின் - அழகினையுடைய குரவைக்கூத்தினையும்,

மணம் கமழ் சேரி - மணநாறுகின்ற பரத்தையர்சேரியினையும்,

330. [2] இன் கலி யாணர் - இனிய செருக்கினையுடைத்தாகிய புதுவருவாயினையுமுடைய,

அகல் [3] ஆங்கண் (327) - அகன்ற ஊரிடத்தே,

330. [குழூஉப்பல பயின்று :] பல குழூஉ பயின்று - பலகுடித் திரள் நெருங்கி,

ஆங்கு - அந்நாட்டில்,

331. பாடல் சான்ற நல் நாட்டு நடுவண் - புலவராற் பாடுதல் முற்றுப்பெற்ற நல்லநாட்டிற்கு நடுவணதாய்,

ஒருசார் தண்பணை சுற்றப்பட்டு (270) ஒருசார் மலைதழுவப்பட்டு (301) ஒருசார் காடுதழுவப்பட்டு (285) ஒருசார் சுரஞ்சேரப்பட்டு (314) ஒருசார் நெய்தல்சான்ற (325) வரைப்பின்கண்ணே (319) வளம்பல பயிலப்பட்டு ஆங்கு (325) ஐம்பாற்றிணையுங்கவினி (326) அந்நாட்டிடத்து (330) அகலாங்கட் (327) குழூஉப்பலபயின்று (330) அமைவரப் (326) பாடல்சான்ற நன்னாட்டு நடுவணதாய் (331) என்க.

332 - 7. [கலைதாய வுயர்சிமையத்து, மயிலகவு மலிபொங்கர், மந்தி யாட மாவிசும் புகந்து, முழங்குகால் பொருத மரம்பயில் காவி, னியங்குபுனல் கொழித்த வெண்டலைக் குவவுமணற், கான்பொழில் :]

---

[1] பாண்டிநாடு ஐவகை நிலங்களும் அமையப்பெற்றதாதலின் பாண்டியனுக்குப் பஞ்சவனென்னும் பெயர் உண்டாயிற்று என்பர்.

[2] பி - ம். 'இன்கண்'

[3] ஆங்கணென்பதற்கு ஊரிடமென்று இங்கு எழுதியவாறே, "அகலாங்க ணளைமாறி" (கலி. ௧௦௮ : 5) என்னுமிடத்தும் இவ்வுரையாசிரியர் எழுதுதல் அறியத்தக்கது.

கலை தாய (332) மலி பொங்கர் (333) மந்தி ஆட (334) மரம் பயில் கா - (335) முசுக்கலைகள் தாவின மிக்கசொம்புகளிலே அவற்றின் மந்திகள் விளையாடும்படி மரம் நெருங்கினசோலை,

மா விசும்பு உகந்து (334) - பெரிய ஆகாயத்தேசெல்ல உயர்கையினாலே,

முழங்குகால் பொருத மரம் (335) - முழங்குகின்ற பெருங்காற்றடித்த மரம்,

மயில் அகவும் (333) காவின் (335) - மயில் ஆரவாரிக்குங் காவோடே,

உயர் சிமையத்து (332) இயங்கு புனல் கொழித்த வெள் தலை குவவு மணல் (336) கான் பொழில் (337) - உயர்ந்த மலையுச்சியிடத்து நின்றும் வீழ்ந்தோடுகின்ற நீர் கொழித்து ஏறட்ட வெள்ளிய தலையினையுடைத்தாகிய திரட்சியையுடைய மணற்குன்றிடத்து மணத்தையுடைய பொழில்,

337. தழீஇய அடை கரை தோறும் - காவோடே (335) பொழில் (336) சூழ்ந்த நீரடையும் கரைகள்தோறும்,

338 - 42. [தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க், கோதையி னொழுகும் 1 விரிநீர் நல்வர, லவிரறல் வையைத் துறைதுறை தோறும், பல்வேறு 2 பூத்திரட் டண்டலை சுற்றி, யழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையும் :]

தாது சூழ் கோங்கின் பூ மலர் தாஅய் (338) கோதையின் ஒழுகும் விரிநீர் நல்வரல் (339) வையை (340)-தாதுக்கள்சூழ்ந்த கோங்கினுடைய பூவும் ஏனைமலர்களும் பரந்து மாலையொழுகினாற்போல ஓடும் பெருநீர் நன்றாகிவருதலையுடைய வையையிடத்து,

அவிர் அறல் துறை துறை தோறும் (340) பல் வேறு பூ திரள் தண்டலை சுற்றி (341) அழுந்து பட்டு இருந்த 3 பெரும்பாண் இருக்கையும் (342) - விளங்குகின்ற அறலையுடைய துறைகடோறும் துறைகடோறும் பலவாய் வேறுபட்ட பூத்திரளையுடைய பூந்தோட்டங்கள் சூழப்பட்டு நெடுங்காலம் அடிப்பட்டிருந்த பெரிய பாண்சாதியின் குடியிருப்பினையும்,

343 - 5. நிலனும் வளனும் கண்டு அமைகல்லா விளங்கு பெருதிருவின் மானவிறல்வேள் அழும்பில் அன்ன நாடு இழந்தனரும் - நிலத்தையும் அதிற் பயிர்களையும் 4 பார்த்தபார்வை மாறுதலமையாத விளங்

---

1 பி - ம். 'விரிநீ ரவிரற னல்வரல் வையை'

2 பி - ம். 'பூவின் றண்டலை'

3 பெரும்பாணச்சாதியினிலக்கணத்தை இப்புத்தகம் 179-ஆம் பக்கத்திற் காண்க.

4 "கண்வாங் கிருஞ்சிலம்பின் - பார்த்தவர்கள் கண்ணைத் தன்

கும் பெரிய செல்வத்தினையுடைய மானவிறல்வேளென்னும் குறுநில மன்னனுடைய அழும்பிலென்னும் ஊரையொத்த நாடுகளை யிழந்தவர் களும்,

346. கொழு பல் பதிய குடி இழந்தனரும் - செல்வத்தினையுடைய பல ஊர்களிடத்தனவாகிய குடிகளையிழந்தவர்களும்,

347. தொன்று கறுத்து உறையும் துப்பு தர வந்த - பழையதாய [1] செற்றங்கொண்டு தங்கும்வலி தம்மைக் கொண்டுவருகையினாலே எதி ராய்வந்த,

348. அண்ணல் யானை அடு போர் வேந்தர் - தலைமையினையுடைய யானையினையும் பகைவரைக் கொல்லும் போர்த்தொழிலையுமுடைய வேந்தரை,

பல் மாறு ஓட்டி (350) - பலவாய் நெஞ்சிற்கிடந்த மாறுபாடுகளை முதற்போக்கிப் பின்னர்,

349-50. [இன்னிசை முரச மிடைப்புலத் தொழியப், பன்மா றோட்டிப் பெயர்புறம் பெற்று :]

இன் இசை முரசம் இடைபுலத்து ஒழிய பெயர் புறம் பெற்று - இனிய ஓசையினையுடைய முரசம் [2] உழிஞைப்போர்க்கு இடையே கிடக் கும்படி மீளுகையினாலுண்டான முதுகைப்பெற்று,

என்றது, உழிஞைப்போர் செய்யவந்த அரசர் [3] குடுமிகொண்ட மண்ணு மங்கலமெய்தாது இடையே மீளும்படி காத்தகிடங்கு (351) என்றவாறு.

351. [4] மண் உற ஆழ்ந்த மணி நீர் கிடங்கின் - [5] மண்ணுள்ள வளவுமாழ்ந்த நீலமணிபோலும் நீரையுடைய கிடங்கினையும்,

352. விண் உற ஓங்கிய பல் படை புரிசை - தேவருலகிலே செல் லும்படி உயர்ந்த பல கற்படைகளையுடைய மதிலினையும்,

353. தொல் வலி நிலைஇய வாயில் (356) - பழையதாகிய வலி நிலை பெற்ற வாயில்,

அணங்கு உடை நெடு நிலை - தெய்வத்தையுடைத்தாகிய நெடிய நிலை யினையும்,

---

னிடத்தே வாங்கிக்கொள்ளுங் கரிய மலையிடத்து” (கலி ௩௧ : 15, ந.) என்னும் பகுதி இதனுடன் ஒப்புநோக்கற்பாலது.

1 செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது ; முருகு. 132, உரை.

2 உழிஞைப் போரென்றது இங்கே புறத்துழிஞைப்போரை ; தொல். புறத்திணை. சூ. 10.

3 தொல். புறத்திணை. சூ. 13, பார்க்க ; மதுரை. 149-ஆம் அடியின் உரையைப்பார்க்க. 4 பி - ம். ‘மண்ணுறவீழ்ந்த’

5 “நிலவரை யிறந்த குண்டுகண் ணகழி” புறநா. ௨௧ : 2.

354. நெய் பட கரிந்த திண் போர் கதவின் - நெய் பலகாலுமிடு தலாற் கருகின திண்ணிய செருவினையுடைய கதவினையும்,

1 வாயிலில் தெய்வமுறையுமாகலின், அதற்கு அணியும்நெய்யுமாம்; 2 "ஐயவியப்பிய நெய்யணி நெடுநிலை" என்பதனானுணர்க.

355. மழை ஆடும் மலையின் நிவந்த மாடமொடு - மேகமுலாவும் மலைபோலே ஓங்கினமாடத்தோடே,

கோபுரமன்றி வாசலை யாடமாகவும் சமைத்தலின், மாடமென்றார்.

356. வையை அன்ன வழக்கு உடை வாயில் - 3 வையையாறு இடைவிடாது ஓடுமாறுபோன்ற மாந்தரும் மாவும் இடையறாமல் வழங்கு தலையுடைய வாயில்,

மாடத்தோடே (355) நிலையினையும் (353) கதவினையும் (354) வழக்கினையுமுடைய வாயில் (356.)

பெரும்பாணிருக்கையினையும் (342) கிடங்கினையும் (351) புரிசையினையும் (352) வாயிலினையு (356) முடைய மதுரை (699) என்க.

357-8. வகை பெற எழுந்து வானம் மூழ்கி சில் காற்று இசைக்கும் பல் புழை நல் இல் - கூறுபாடாகியபெயர்களைத் தாம்பெறும்படி யுயர்ந்து தேவருலகிலே சென்று தென்றற்காற்று ஒலிக்கும் பலசாளரங்களையுடைய நன்றாகிய அகங்களையும்,

மண்டபம் கூடம் 4 தாய்க்கட்டு அடுக்களையென்றாற்போலும் பெயர்களைப் பெறுதலின், வகைபெறவெழுந்தென்றார்.

359. யாறு கிடந்தன்ன அகல் நெடு தெருவில் - யாறுகிடந்தாற் போன்ற அகன்ற நெடிய தெருக்களிலே,

இருகரையும் யாறும்போன்றன, இரண்டு பக்கத்தின்மனைகளும் தெருவுகளும்.

360. பல் வேறு குழாஅத்து இசை எழுந்து ஒலிப்ப - 5 நாளங் காடியிற் பண்டங்களைக்கொள்ளும் பலசாதியாகிய பாடைவேறுபாட்டை

---

1 "ஐயவியப்பிய நெய்யணி நெடுநிலை" (நெடுநல். 86) என்பதன் விசேடவுரையில், 'அதிற்றெய்வத்திற்கு வெண்சிறு கடுகும் நெய்யு மணிந்தது' என்று எழுதியிருப்பது இதனோடு ஒப்பிடற்பாலது.

2 நெடுநல். 86.

3 "வையை யென்ற பொய்யாக் குலக்கொடி" (சிலப். கரு: 170); "வருபுனல்வையை - இடையறாது பெருகும் புனலையுடையவையை யாற்றுத்துறை", "நீடுநீர் வையை - ஒழுக்கறாத நீரையுடைய வையை யாறு" சிலப். கச: 72, கஅ: 4, அடியார்.

4 தாய்க்கட்டு - தாய்மனை.

5 நாளங்காடி - காலைக்கடை: மதுரை. 430; "நடுக்கின்றி நிலைஇய நாளங்காடியில்", "நாண்மகி ழிருக்கை நாளங்காடி" சிலப். ரு: 63, 196.

யுடைய மாக்கள் திரளிடத்து ஓசைமிக்கொலிக்கும்படி இருத்தர (406) என்க.

361 - 2. மா கால் எடுத்த முந்நீர் போல முழங்கு இசை நல் பணை அறைவனர் நுவல - பெருமையையுடைய காற்றெடுத்த கடலொலிபோல முழங்கும் ஓசையையுடைய நன்றாகிய முரசைச் சாற்றினராய் விழவினை நாட்டிலுள்ளார்க்குச் சொல்லுகையினாலே நாடார்த்தன்றே (428) என்க.

'அறைவன நுவல' என்றுபாடமாயின், அறையப்படுவனவாய் விழாவைச் சொல்லவென்க.

363 - 4. கயம் குடைந்தன்ன இயம் தொட்டு இமிழ் இசை மகிழ்ந்தோர் ஆடும் கலி கொள் சும்மை - கயத்தைக் கையாற்குடைந்து விளையாடுந் தன்மையவாக வாச்சியங்களைச் சாற்றலான் முழங்கின ஓசையைக் கேட்டு மகிழ்ந்தவர்களாடுஞ் செருக்கினைக்கொண்ட ஆரவாரத்தினையுமுடைய தெரு (359) என்க.

365. [1] ஓவு கண்டன்ன இரு பெரு நியமத்து - சித்திரத்தைக் கண்டாற்போன்ற கட்கு இனிமையையுடைய இரண்டாகிய பெரிய அங்காடித்தெருவில்,

நாளங்காடி, [2] அல்லங்காடியாகிய இரண்டு கூற்றையுடைத்தென்றார்.

366. சாறு அயர்ந்து எடுத்த உருவம் பல் கொடி - கோயில்களுக்கு விழாக்களை நடத்திக் கட்டின அழகினையுடைய பலகொடிகளும்,

இதனால் அறங்கூறினார்.

367 - 8. வேறு பல் பெயர ஆர் எயில் கொள கொள நாள் தோறு எடுத்த நலம் பெறு புனை கொடி - வேறுபட்ட பலபெயர்களையுடையவாகிய அழித்தற்கரிய அரண்களைத் [3] தண்டத்தலைவர் அரசனேவலாற் சென்று கைக்கொள்ளக் கைக்கொள்ள அவர்கள் அவ்வெற்றிக்கு நாடோறுமெடுத்த நன்மையைப்பெற்ற சயக்கொடியும்,

இதனாற் [4] புறத்துழிஞைப்போர் கூறினார்.

369 - 71. நீர் ஒலித்தன்ன நிலவு வேல் தானையொடு புலவு பட கொன்று மிடை தோல் ஓட்டி புகழ் செய்து எடுத்த விறல் சால் நல் கொடி - கடலொலித்தாற்போன்ற நிலைபெறுதலையுடைய வேற்படையோடே சென்று பகைவரைப் புலானாற்றமுண்டாகக்கொன்று பின்னர்

---

1 ஓவு - ஓவியம்; " ஓவுக்கண் டன்னவில் " (நற். ௨௬௮ : 4), " ஓவுறழ் நெடுஞ்சுவர் " பதிற். ௬௮ : 17.

2 அல்லங்காடி - மாலைக்கடை; மதுரை. 544.

3 தண்டத்தலைவர் - சேனைத்தலைவர்.

4 புறத்துழிஞைப்போர் - வேற்றுவேந்தருடைய மதிலின்புறத்தைச் சூழ்ந்து செய்யும்போர்.

அணியாய்நின்ற யானைத்திரளையுங் கெடுத்துத் தமக்குப் புகழையுண்டாக்கி எடுத்த வெற்றியமைந்த நன்றாகிய கொடியும்,

இது தும்பைப்போர்கூறிற்று.

372. கள்ளின் களி 1 நவில் கொடியொடு - கள்ளினது களிப்புமிகுதியைச் சாற்றுகின்ற கொடியும்,

372 - 3. நல் பல பல் வேறு குழூஉ கொடி - நன்றாகிய பலவற்றினாலே பலவாய் வேறுபட்ட திரட்சியையுடைய கொடிகளும்,

நன்பலவென்றார், 2 கல்வி 3 கொடை தவம் முதலியவற்றை.

373 - 4. பதாகை 4 நிலைஇ பெரு வரை மருங்கின் அருவியின் நுடங்க - பெருங்கொடிகளும் நிலைபெற்றுப் பெரிய மலையிடத்து அருவியசையுமாறு போல அசைய,

இக்கொடிகள் அருவியினுடங்கும்படி வகைபெற எழுந்து (357) என முன்னே கூட்டுக.

375. பனை மீன் வழங்கும் வளை மேய் 5 பரப்பின் - 6 பனைமீனென்னுஞ்சாதி உலாவுஞ் சங்கு மேய்கின்ற கடலிடத்தே,

376 - 7. வீங்கு பிணி நோன் கயிறு அரீஇ இதை புடையூ கூம்பு முதல் முருங்க எற்றி - இறுகும் பிணிப்பினையுடைய வலியினையுடைய பாய் கட்டின கயிற்றையறுத்துப் பாயையும்பீறிப் பாய்மரம் அடியிலே முறியும்படி அடித்து,

---

1 பி - ம். 'நுவல், துவல்'

2 கல்விக்குக்கொடி கட்டல்: பட்டினப். 169 - 71-ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.

3 கொடைக்குக் கொடி கட்டல்: இக்கொடி தியாகக்கொடியெனப்படும்; "தியாகக் கோடியொடு மேற்பவர், வருகென்று நிற்ப" (வீரராஜேந்திர தேவர் மெய்க்கீர்த்தி); "தியாகக் கொடியே தனிவளரச் செய்து" திருவாரூருலா, 421.

4 பி - ம். 'நிலைஇய' 5 பி - ம். 'பரம்பின்'

6 "ஒள்ளிய பனைமீன் றுஞ்சுந் திவலைய", "பனைமீன் றிமிலோடு தொடர்ந்து துள்ள" (கம்ப. கடறாவு. 23, 50); "யானையைவிழுங்கும் மீன்கள் இக்கடலிலுமுள; அவை பனைமீனென்றும் யானைமீனென்றும் மோங்கிலென்றும் அனுவிஷமென்றும் பெயருடையன" (தக்க. 384, உரை); "உள்வளைந் துலாய சின்னை யொண்சுறாப் பனைமீ னாறை, தெள்விளித் திருக்கை தந்தி திமிங்கில மிரிந்து பாய்ந்த" (கந்த. கடல்பாய். 11); இம்மீன், பனையனென்றும் வழங்கும்; "பனையன்றேளி" அருணாசலபுராணம், 45.

377-8. [காய்ந்துடன், கடுங்காற் றெடுப்ப :] கடு காற்று உடன் காய்ந்து எடுப்ப - கடியகாற்று நாற்றிசையினும் சேரக் கோபித்தெடுக்கை யினாலே,

378. கல் பொருது உரைஇ - நங்கூரக்கல் கயிற்றுடனே நின்று பொருது உலாவி,

379. நெடு சுழி பட்ட நாவாய் போல - நெடியசுழியிலே அகப் பட்டுச் சுழலாநின்ற மரக்கலத்தையொக்க,

380. இருதலை பணிலம் ஆர்ப்ப-முன்னும்பின்னுஞ் சங்கொலிப்ப, யானைமீண்டாற் பின்னின்றவன் ஊதுதற்குப் பின்னுஞ் சங்கு செல்லும்.

380-81. சினம் சிறந்து [1] கோலோர் கொன்று மேலோர் வீசி - சினம்மிக்குப் [2] பரிக்கோற்காரரைக்கொன்று பாகரைவீசிப் போகட்டு,

382. மெல் பிணி வல் தொடர் பேணாது காழ் சாய்த்து - மெல் லிய பிணிப்பினையுடைய வலிய நீர்வாரியென்று காலிற்கட்டுஞ் சங் கிலியை நமக்குக் காவலென்று பேணாதே அதுகட்டின தறியைமுறித்து,

383. கந்து நீத்து உழிதரும் கடாம் யானையும் - கம்பத்தைக் கை விட்டுச்சுழலும் கடாத்தையுடைய யானையும்,

சிறந்து (380) கொன்று வீசிச் (381) சாய்த்து (382) நீத்து (383) ஆர்ப்ப (380) உழிதருங்கடாமெனக் கடாத்தின்றொழிலாகவுரைக்க.

காற்றிற்குக் கடாம் உவமிக்கப்படும்பொருள்.

384. அம் கண் மால் விசும்பு புதைய வளி போழ்ந்து - அழகிய இடங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய ஆகாயம் மறையக் காற்றைப் பிளந்து,

தேவருலகம் முதலியவற்றைத் தன்னிடத்தேயுடைமையின் அங்கண் மால் விசும்பென்றார்.

385-6. ஒள் கதிர் ஞாயிறு ஊறு அளவா திரிதரும் செ கால் அன்னத்து சேவல் அன்ன - ஒள்ளிய கிரணங்களையுடைய ஞாயிற்றைத் தாம் சேர்தலை நெஞ்சாலே கருதிக்கொண்டு பறக்குஞ் சிவந்தகாலை யுடைய அன்னத்தினது சேவலையொத்த,

387-8. குரூஉ மயிர் புரவி உராலின் பரி நிமிர்ந்து கால் என கடுக்கும் கவின் பெறு தேரும் - நிறவிய பலமயிர்களையுடைய குதிரை களோடுதலிற் செலவுமிக்குக் காற்றெனக் கடுகி ஓடும் அழகினைப்பெறு கின்ற தேரும்,

---

[1] பி-ம். 'காலோர்'

[2] பரிக்கோல் - குத்துக்கோல்.

389. கொண்ட கோலன் கொள்கை நவிற்றலின் - கையிலே யெடுத்த மத்திகையையுடைய [1] வாசிவாரியன் [2] ஐந்துகதியையும் பதினெட்டுச் சாரியையும் பயிற்றுகையினாலே,

390. அடி படு மண்டிலத்து ஆதி போகிய-குரங்களழுந்தின வட்டமான இடத்திலும் [3] ஆதியென்னுங் கதியிலும் ஓடின,

391. கொடி படு சுவல [4] இடு மயிர் புரவியும் - ஒழுங்குபடும் [5] கேசாரியையுடையனவாக இட்டவாசங்கலையுடைய குதிரைகளும்,

392-3. [வேழத் தன்ன வெருவரு செலவிற், கள்ளார் களமரிருஞ்செரு மயக்கமும் :] வெரு வரு வேழத்து அன்ன செலவின் கள்

---

1 வாசிவாரியன் - குதிரையைத் தன்வயப்படுத்தி நடத்துவோன்; "வாய்ந்தமா வுகைத்த வாசி வாரியப் பெருமா னெங்கே" (திருவால. உக: 17); "தாமென்றது, இவற்றின் மேலேறின வாசிவாரியர்களை" தக்க. 263, உரை.

2 "ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையும்" (பு. வெ. 355-6); "இசைத்தவைங் கதியுஞ் சாரி யொன்பதிற் றிரட்டி யாதி, விசித்திர விகற்பும்" (திருவிளை. ருக: 77); "அரிதரி தெனவி யப்ப வைந்துதாரையினுந் தாண்டி" (திருவால. ௩க: 35); "கதியைந்துமுடைத்திக் குதிரை" (தொல். களவி. சூ. 33, சே. ந. மேற்.); "சுற்று நீளமு முயரமு நிகர்ப்பன சுழியின்மிக்கன தீமை, யற்று மேதகு நிறத்தன கவினுடை யவயவத்தன வாகி, யெற்று மாமணி முரசமுஞ் சங்கமு மெனுங் குரல் மிகுத்திப்பார், முற்று மாதிரத் தளவுமைங் கதியினுன் முடிப்பன விமைப்போதில்", "யாளி குஞ்சரம் வானர முதலிய வியக்கினால் விசும் பெங்கும், தாளி கொண்டிட மிடைந்துவந்தன நெடுந்துர கதம்பல கோடி" (வி. பா. சூதுபோர். 81-2); விக்கிதம், வற்கிதம், உபகண்டம், ஜவம், மாஜவமென்னுமிப் பஞ்சதாரையையுமென்பர் பு. வெ. உரையாசிரியர்.

3 ஆதி - நெடுஞ்செலவு; ஆதிமாதி யென்பவற்றுள் ஆதி நெடுஞ்செலவென்பர் (கலி. கூ: 20) இவ்வுரையாசிரியர். "ஆதிவரு கதிப் பரியும்" வி. பா. இராசசூயச். 131.

4 "ஓங்கன் மதிலு ளொருதனிமா - ஞாங்கர், மயிரணியப் பொங்கி மழைபோன்று மாற்றா, ருயிருணிய வோடி வரும்" (பு. வெ. 90) என்பதும், 'மலைபோன்ற புரிசையிடத்து ஒப்பில்லாததொரு குதிரை பக்கத்தே கவரியிட எழுந்து மேகத்தை யொத்துப் பகைவருயிரை யுண்பான் வேண்டிக் கடுகி வரும்' என்னுமதனுரையும், "முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு, மூட்டுறு கவரி தூக்கி யன்ன" (அகநா. ௧௫௬ : 1-2) என்பதும் இங்கே அறியற்பாலன.

5 "பலவாகிய கேசாரியையுடைய குதிரைகள்" நெடுநல். 93, ந. இப்பெயர் கேதாரியெனவும் வழங்கும்; கலி. கூ. 8, ந.

ஆர் களமர் இரு செரு மயக்கமும் - அச்சந்தோன்றுகின்ற யானையை யொத்த போக்கினையுடைய கள்ளினையுண்ணும் வீரர் தம்மிற் பெரிய போரைச்செய்யும் கலக்கமும்,

களத்தேசேறலிற் களமரென்றார்.

394. அரியவும் பெரியவும் - ஈண்டுப் பெறுதற்கரியனவுமாய் அவைதாம் சிறிதின்றி மிகவுள்ளனவுமாய்ப் பலவாய் வேறுபட்ட பண்ணியம் (405) என மேலே கூட்டுக.

வருவன பெயர்தலின் - யானையும் (383) தேரும் (388) புரவியும் (391) களமர் செருமயக்கமும் (393) பல்காலும் வருவனவாய் மீளுகையினாலே,

395-6. [தீம்புழல் வல்சிக் கழற்கான் மழவர், பூந்தலை முழவி னோன்றலை கடுப்ப :] [1] தீ புழல் வல்சி பூ தலை கழல் கால் மழவர் முழவின் நோன் தலை கடுப்ப - இனிய பண்ணியாரங்களாகிய உணவினையும் பொற்பூக்களையுடைய தலையினையும் வீரக்கழலணிந்த காலினையுமுடைய மழவர் முன்கொட்டும் வீரமத்தளத்தினது வலிய கண்ணையொக்க உருண்ட,

[2] தீம்புழல் - இருப்பைப்பூவுமாம். பூத்தலை : விகாரம். [3] மழவர் - சிலவீரர். [4] "உருவக் குதிரை மழவ ரோட்டிய" என்றார் பிறரும். கடுப்பவென்னுஞ் செயவெனெச்ச உவமவுருபிற்கு உருண்டவென ஒரு சொல்வருவிக்க.

397. பிடகை பெய்த கமழ் நறு பூவினர் - பூந்தட்டிலே இட்டு வைத்த மிகவும்நாறுகின்ற நறிய பூவினையுடையாரும்,

398. பல வகை [5] விரித்த எதிர் பூ கோதையர் - பலவகையாக விரித்து வைத்த ஒன்றற்கொன்று மாறுபட்ட பூமாலைகளையுடையாரும்,

399. பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர் - இடிக்கவல்லார் பலரும் திரண்டு இடித்த பூந்தாதுக்கள்போலப் [6] பரக்குஞ் சுண்ணத்தை யுடையாரும்,

தாது - நீறுமாம். நவமணிகளும், [7] பொன்னும், சந்தனமும், கருப்

---

1 பி-ம். 'தீம்புலவல்சி'

2 "இருப்பை.........இழுதி னன்ன தீம்புழல்", "தீம்புழ லுணீஇய, கருங்கோட் டிருப்பை யூரும், பெருங்கை யெண்கு" அகநா. ௯: 3-5, ௧௪௯: 13-5. 3 மதுரை. 687, உரை. 4 அகநா. ௧: 2.

5 பி-ம். 'விரிந்த வெதிர்ப்பூங் கோதையர்'

6 "சுண்ணம்போலச் சிதராய்ப் பரந்து கிடத்தலிற் சுண்ணமென் றார்" (தொல். எச்ச. சூ. 10. சே.) என்பதனாற் சுண்ணம் பரந்திருத்த லுணரப்படும்.

7 "செம்பொற் சுண்ணஞ் சிதர்ந்த திருநுதல்", "அனிச்சக் கோதையு மாய்பொற் சுண்ணமும்.........சுந்தரப்பொடியுஞ் சுட்டிச்

பூர முதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனையவைத்திடித்தலின், இடிக்கவல்லவர் 1 பலரும் வேண்டிற்று.

400 - 401. தகை செய் 2 தீ சேறு இன் நீர் பசு காய் நீடு கொடி இலையினர் - உடம்பிற்கு அழகைக்கொடுக்கும் இனிய 3 கருங்காலி சீவிக் காய்ச்சின களிக்கலந்த இனிய நீரினையுடைய பசியபாக்குடனே வளர்ந்த கொடியீன்ற வெற்றிலையினையுடையாரும்,

4 "அங்கருங் காலி சீவி யூறவைத் தமைக்கப் பட்ட, செங்களி விராய காயும்" என்றார். இளங்களி 5 யன்னம் நீராயிருத்தலின் இன்னீ ரென்றார்.

401. கோடு சுடு நூற்றினர் - சங்கு சுடுதலாலுண்டான சுண்ணும்பையுடையாரும்,

402-4. [இருதலை 6 வந்த பகைமுனை கடுப்ப, வின்னுயி ரஞ்சி யின்னு வெய்துயிர்த், தேங்குவன ரிருந்தவை நீங்கிய பின்றை :]

இரு தலை வந்த பகை முனை கடுப்ப இன் உயிர் அஞ்சி ஏங்குவனர் இருந்து - இரண்டுபக்கத்தானும் படைவந்த பகைப்புலத்தை யொக்கத் தம்முடைய இனியவுயிருக்கு அஞ்சி ஏங்குவாராயிருந்து,

அவை நீங்கிய பின்றை இன்னு வெய்து உயிர்த்து - அந்நாற்படையும் போனபின்னர் அவற்றானெய்திய பொல்லாவெப்பத்தைப் போக்கி,

எனவே அச்சத்தால் நெஞ்சிற்பிறந்த வருத்தத்தைப்போக்கி யென்றார்.

405. பல் வேறு பண்ணியம் 7 தழீஇ திரி விலைஞர் - பலவாய் வேறுபட்ட பண்டங்களைத் தம்மிடத்தே சேர்த்துக்கொண்டு திரிகின்ற விற்பாரும்,

கொள்ளக்கொள்ளக் குறையாமல் தரத்தர மிகாமல் (426) அரியவும் பெரியவுமாய்ப் (394) பலவாய் வேறுபட்ட பண்ணியமெனக் கூட்டுக.

406. மலை புரை மாடத்து கொழு நிழல் இருத்தர - மலையை யொக்கும் மாடங்களிடத்துக் குளிர்ந்த நிழலிலே இருத்தலைச்செய்ய,

---

சுண்ணமும்", "போந்தறு சுண்ணமும்" (பெருங். க. 33 : 120, 42 : 71 - 3, 92) ; "சுந்தரப்பொடி தெளித்த செம்பொற் சுண்ணம் வாணு தற், றந்து சுட்டியிட்ட சாந்தம்" சீவக. 1956.

1 திருவா. திருப்பொற்சுண்ணமென்னும் பகுதியைப் பார்க்க.

2 பி - ம். 'தீஞ்சோற்று'

3 "பைங்கருங் காலிச் செங்களி யளைஇ, நன்பகற் கமைந்த வந்து வர்க் காயும்" பெருங். ந : 14 : 81 - 2. 4 சீவக. 2473.

5 அன்னம் - தேங்காய் முதலியவற்றிலுள்ள வழுக்கை.

6 பி - ம். 'வேந்தர்' 7 பி - ம். 'தரீஇயதிரிவினைஞர்'

பூவினரும் (397) கோதையரும் (398) சுண்ணத்தினரும் (399) இலையினரும் நூற்றினரும் (401) பண்ணியந்தழீஇத்திரிவிலைஞரும் (405) யானையும் (383) தேரும் (388) புரவியும் (391) களமர் மயக்கமும் (393) வருவனபெயர்தலிற் (394) பகைமுனைகடுப்ப (402) அஞ்சி (403) எங்குவனரிருந்து அவை நீங்கியபின்றை (404) இன்றுவெய்துயிர்த்து (403) மாடநிழலிலே (406) இசை யெழுந்தொலிப்ப (360) இருத்தர (406) எனக்கூட்டுக.

407. இரு கடல் வான் கோடு புரைய - கரியகடலில் வெள்ளிய சங்கை யொக்க,

407 - 9. [வாருற்றுப், பெரும்பின் னிட்ட வானரைக் கூந்தலர், நன்னர் நலத்தர் தொன்முது பெண்டிர் :]

வாருற்று பின்னிட்ட வால் பெரு நரை கூந்தலர் தொல் முது பெண்டிர் - கோதிப் பின்னேமுடித்துப்போகட்ட வெள்ளிய பெரிய நரைமயிரினையுடையராகிய பழமைமூத்த பெண்டிர்,

நன்னர் நலத்தர் - நன்றாகிய வனப்பினையுடையராய்,

410 - 12. செ நீர் பசு பொன் புனைந்த பாவை செல் சுடர் பசு வெயில் தோன்றியன்ன செய்யர் - சிவந்த நீர்மையினையுடைய [1] கிளிச்சிறையென்னும் பொன்னாற்செய்த பாவை வீழ்கின்றகிரணங்களிடத்துப் பசியவெயிலிடத்தே தோன்றினாற்போன்ற சிவந்தநிறத்தினையுடையராய்,

412. [செயிர்த்த நோக்கினர் மடக்கண் :] மட கண் செயிர்த்த நோக்கினர் - மடப்பத்தினையுடைய கண்கள் ஆடவர்க்கு வருத்தத்தைச் செய்த பார்வையினையுடையராய்,

413. ஐஇய கலுழும் மாமையர் - வியப்பினையுடையவாய் நோக்கினோர் கலங்குதற்குக் காரணமான [2] மாமை நிறத்தினையுடையராய்,

[3] கலுழ்தல் - ஒழுகுதலுமாம்.

413 - 4. [வைவெயிற்று, [4] வார்ந்த வாயர் :] வார்ந்த வை எயிறு வாயர் - நேரிதாகிய கூரிய எயிற்றினையுடைய வாயினையுடையராய்,

414 - 6. [வணங்கிறைப் பணைத்தோட், சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத், தொய்யில் பொறித்த [5] சுணங்கெதி ரிளமுலை :]

---

1 கிளிச்சிறை - நால்வகைப் பொன்களுள் ஒன்று; "சாத ரூபங் கிளிச்சிறை யாடகஞ், சாம்பூ நதமென வோங்கிய கொள்கையிற், பொலந் தெரி மாக்கள்" (சிலப். ௧௪ : 201 - 3); "வீறுயர் பசும்பொன் - மாற்றுயர்ச்சிபெற்ற பசியபொன்; ஆவது கிளிச்சிறை" சிலப். ௩ : 165, அடியார்.

2 இப்புத்தகம், 276 - ஆம் பக்கத்தின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

3 "மயிரோர் பொழுகிய வங்கலுழ் மாமை" நற்றி. ௧௭௭ : 2.

4 பி - ம். 'வாய்ந்த' 5 பி - ம். 'தொழிலெழுதிளமுலை'

வணங்கு இறை பணை தோள் வயக்குறு வந்திகை - வளைந்த சந்தினையுடைய மூங்கில்போலும் தோளினையும் விளக்கமுற்றிய 1 கைவந்தியினையும்,

தொய்யில் பொறித்த சோர்ந்து உகுவன்ன சுணங்கு எதிர் இளமுலை - தொய்யிலால் வல்லியாக எழுதின நெகிழ்ந்து சிந்துமாறுபோன்ற சுணங்குதோற்றிய இளையமுலையினையும்,

2 தொய்யில் - எழுதுங்குழம்பு.

417. மை உக்கன்ன 3 மொய் இரு கூந்தல் - மையொழுகினாற் போன்ற செறிந்த கரியமயிரினையுமுடைய,

418. மயில் இயலோரும் மடமொழியோரும் - மயிலின்றன்மையையுடையோரும் மடப்பத்தையுடைய வார்த்தையினையுடையோரும்,

419. 4 கைஇ மெல்லிதின் ஒதுங்கி கையெறிந்து - தம்மைக் கோலஞ்செய்து மெத்தெனநடந்து கையைத்தட்டி,

420. கல்லா மாந்தரொடு நகுவனர் திளைப்ப - 5 காமநுகர்ச்சியினையன்றி வேறொன்றையுங்கல்லாத இளையோருடனே மகிழ்ந்தனராய்ப் புணரும்படி,

421. [புடையமை பொலிந்த 6 வகையமை செப்பில் :]
புடை அமை செப்பில் - புடைபடுதலமைந்த செப்பிடத்தில்,
பொலிந்த வகை அமை செப்பில் - பொலிவுபெற்ற கூறுபாடமைந்த செப்பிடத்திற் பண்ணியம் (422) என்க.

422. 7 காமரு உருவின் தாம் வேண்டும் பண்ணியம் - விருப்பமருவிய வடிவினையுடைய நுகர்வார்தாம்விரும்பும் நுகர்பொருள்களை,

423. கமழ் நறு பூவொடு மனை மனை மறுக - மிகவுநாறும் நறிய பூவுடனேயேந்தி 8 மனைகடோறும் உலாவிநிற்க,

நலத்தராய்ச் (409) செய்யராய் நோக்கினராய் (412) மாமையராய் (413) வாயராய்த் தோளினையும் (414) வந்திகையினையும் (415) முலையினையும் (416) கூந்தலினையுமுடைய (417) மயிலியலோரும் மடமொழி

---

1 கைவந்தி - கையில் தோளின்கீழ் அணியப்படும் ஆபரணம்; இப்பெயர் வழக்கிலுமுள்ளது.

2 "தொய்யில் - பத்திக்கீற்றென்பர்" சிலப். உ : 69 - 70, அடியார்.

3 பி - ம். 'ஐம்பாற் கூந்தல்' 4 பி - ம். 'தைஇ'

5 பொருந. 100, சிறுபாண். 33, முல்லை. 36 என்பவற்றிலுள்ள, 'கல்லா' என்பதற்கு இங்கே கூறியதுபோலவே உரை கூறுதல் அறியற்பாலது. 6 பி - ம். 'மடையமை செப்பிற் காமவுருவிற்'

7 ௩௯௯ - ஆம் பக்கம் 3 - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

8 பி - ம். 'மனைகடோறு மனைகடோறும்'

யோரும் (418) கைஇ ஒதுங்கி எறிந்து (419) மாந்தரொடு திளைக்கும் படி (420) தொன்முதுபெண்டிர் (409) பண்ணியத்தைப் (422) பூவோடே ஏந்தி மனைமனைமறுக (423) எனக்கூட்டுக.

424-5. மழை கொள குறையாது புனல்புக [1] மிகாது கரை பொருது இரங்கும் முந்நீர் போல-மேகம் முகக்கக் குறைவுபடாமல் யாறுகள் பாய்தலின் மிகுதலைச்செய்யாமற் கரையைப் பொருது ஒலிக்குங் கடல்போல,

426. கொளகொள குறையாது தர தர மிகாது-பலரும்வந்து கொள்ளக்கொள்ளக் குறையாமற் பலரும் மேன்மேலுங் கொண்டுவரக் கொண்டுவர மிகாமல்,

427-8. [கழுநீர் கொண்ட வெழுநா ளந்தி, யாடுதுவன்று விழவி னூடார்த் தன்றே :]

கழுநீர் கொண்ட அந்தி-தீவினையைக் கழுவுதற்குக்காரணமான தீர்த்தநீரைத் தன்னிடத்தேகொண்ட அந்திக்காலம்,

ஆடு துவன்று விழவின் எழுநாள் அந்தி-வேறொரிடத்தில்லாத வெற்றி நெருங்குந் திருநாளினைத் தன்னிடத்தேயுடைய ஏழாநாளந்தியில்,

[2] கால்கொள்ளத்தொடங்கிய [3] ஏழாநாளந்தியிலே தீர்த்தமாடுதல் மரபு.

நாடு-அவ்விழவிற்குத்திரண்ட நாட்டிலுள்ளார்,

ஆர்த்தன்றே-ஆர்த்தஆரவாரம்,

அற்றேயென்பது அன்றேயென மெலிந்ததாக்கி உவமவுருபாக்கலுமொன்று.

429. [மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல் :] பிறங்கிய மாடம் மலிபுகழ் கூடல்-பெரிய [4] நான்மாடத்தாலே மலிந்தபுகழைக் கூடுதலையுடைய மதுரை (699) என மேலேகூட்டுக.

---

1 பி-ம். 'நிறையாது'

2 "கால்கோள் விழவு" சிலப். ௫ : 144.

3 ஏழுநாளிற் செய்யப்பெறுந் திருவிழா, 'கணம்' எனப்படும்; திருப்பெருந்துறைப்புராணம், புரூரவன் திருவிழாச்செய்த படலம், 50-ஆம் பாடலைப் பார்க்க; "ஆத்தமா மயனு மாலு மன்றிமற் றொழிந்த தேவர், சோத்தமெம் பெருமா னென்று தொழுதுதோத் திரங்கள் சொல்லத், தீர்த்தமா மட்ட மீமுன் சிருடை யேழு நாளுங், கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே" (திருக்குறுக்கை. திருநா. தே.) என்பதும் ஈண்டு ஆராயத்தக்கது.

4 "நான்மாடக் கூடன் மகளிரு மைந்தரும்" (கலி. ௯௨ : 65) என்பதும், 'நான்குமாடம் கூடலின் நான்மாடக்கூடலென்றாயிற்று;

430. [நாளங் காடி நனந்தலை :] நன தலை நாள் அங்காடி - அகற்சியையுடைத்தாகிய இடத்தினையுடைய நாட்காலத்துக் கடையில்,

கம்பலை - ஆரவாரம்,

உருவப்பல்கொடியும் (366) புனைகொடியும் (368) நன்கொடியும் (371) களிநவில்கொடியும் (372) குழூஉக்கொடியும் பதாகையும் நிலைஇ (373) அருவியினுடங்கும்படி (374) வகைபெறவெழுந்து மூழ்கி (357) இசைக்கும் பல் புழையுடைய நல்ல இல்லினையும் (358) சும்மையினையுமுடைய (364) தெருவுகளில் (359) பெருநியமத்து (365) நாளங்காடியிலே (430) பூவினர் (397) முதலியோர் இருத்தருகையினால் (406) மறுகுதலினால் (423) எழுந்த கம்பலை (430) நன்பணையறைவனர் நுவலுகையினாலே (362) அதற்குத் திரண்டநாடு (428) அந்தியில் (427) ஆர்த்ததே (428) யென வினைமுடிக்க.

'ஆர்த்தன்று' என்னும் முற்றுச்சொல் படுத்தலோசையாற் பெயர்த்தன்மையாய்த் தேற்றேகாரம் பெற்றுநின்றது.

431-2. வெயில் கதிர்[1] மழுங்கிய படர் கூர் ஞாயிறு செக்கர் அன்ன - வெயிலையுடைய கிரணங்கள் ஒளிமழுங்கிய செலவுமிக்க ஞாயிற்றையுடைய செக்கர்வானத்தையொத்த,

432-3. சிவந்து நுணங்கு உருவின் கண் பொருபு[2] உகூஉம் ஒள் பூ கலிங்கம் - சிவந்து நுண்ணிதாகும் வடிவாலே கண்களை[3] வெறியோடப்பண்ணிச் சிந்திவிழுமாறுபோன்ற ஒள்ளிய[4] பூத்தொழிலையுடைய சேலைகளை,

434. பொன் புனை வாளொடு பொலிய கட்டி - பொன்னிட்ட உடைவாளோடே அழகுபெறக் கட்டி,

435-40. [[5] திண்டேர்ப் பிரம்பிற் புரளுந் தானைக், கச்சந் தின்ற கழறயங்கு திருந்தடி, மொய்ம்பிறந்து திரிதரு மொருபெருந் தெரியன்,

---

அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் ; இனி, கன்னி, கரியமால், காளி, ஆலவாயென்றுமாம்' என்னும் அதன் விசேடவுரையும், "அம்புத நால்களா னீடுகூடல்" (திருநள்ளாறும் திருவாலவாயும், திருஞான. தே.) என்னும் திருவாக்கும், "ஈசனூர் மகிழ்ந்த தானம்" (திருவால. நகர. 12) என்பது முதலிய திருவிருத்தங்கள் நான்கும், "கன்னிதிரு மால்காளி யீசன் காக்குங் கடிமதில்சூழ் மாமதுரை" (ஷை பயன்முதலியன, 5) என்பதும் நான்மாடங்கள் இன்னவென்பதைப் புலப்படுத்தும்.

1 பி-ம். 'மழுகிய' 2 பி-ம். 'கூடும்'

3 வெறியோடப்பண்ணி - மயக்கி.

4 ப. ௩௰, 6-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

5 பி-ம். 'திண்டோப்பிற்'

மணிதொடர்ந் தன்ன வொண்பூங் கோதை, யணிகிளர் மார்பி னாரமொ டளைஇக், காலியக் கன்ன கதழ்பரி கடைஇ :]

புரளும் தானை (435) - தோளிலேகிடந்தசையும் [1] ஒலியலினையும்,

கச்சம் தின்ற கழல் தயங்கு [2] திருந்து அடி (436) - கோத்துக் கட்டிய கச்சுக்கிடந்து தழும்பிருந்த வீரக்கழலசையும் [3] பிறக்கிடாத அடியினையும்,

மொய்ம்பு இறந்து திரிதரும் ஒரு பெரு தெரியல் (437) - உலகத்துள்ளார் வலிகளைக்கடந்து புகழ்ச்சியால் எங்குந்திரியும் ஒன்றாகிய பெரிய வேப்பமாலையினையும்,

அணி கிளர் மார்பின் ஆரமொடு அளைஇ (439) மணி தொடர்ந் தன்ன ஒள் பூ கோதை (438) - அழகு விளங்கும் மார்பிற்கிடக்கின்ற ஆரத்தோடேகலந்து மாணிக்கம் ஒழுகினாலொத்த ஒள்ளிய செங்கழுநீர் மாலையினையுமுடையராய்,

பிரம்பின் திண் தேர் (435) கால் இயக்கன்ன கதழ் பரி கடைஇ (440) - விளிம்பிலே வைத்த பிரம்பினையுடைய திண்ணிய தேரிற்பூண்ட காற்றினுடைய செலவினையொத்த விரைந்த குதிரைகளைச் செலுத்தி,

441. காலோர் காப்ப கால்என கழியும் - காலாட்கள் சூழ்ந்து காப்பக் காற்றென்னும்படி கடிதிற்செல்லும்,

442 - 3. [வான வண்கை வளங்கெழு செல்வர், நாண்மகி ழிருக்கை :] நாள் மகிழ் இருக்கை வானம் வள் கை வளம் கெழு செல்வர் - [4] நாட்காலத்து மகிழ்ந்திருக்கின்ற இருப்பிலே மேகம்போலே வரையாமற்கொடுக்கும் வளவிய கையினையுடையராகிய வளப்பம்பொருந்தின செல்வர்,

தானை (435) முதலியவற்றையுடையராய்க் கட்டிக் (434) கடைஇக் (440) கழியும் (441) செல்வரென்க.

443 - 4. காண்மார் பூணொடு தெள் அரி பொன் சிலம்பு ஒலிப்ப- விழாவைக்காண்டற்குப் பூண்களோடே தெள்ளிய உள்ளின்மணிகளை

---

1 ஒலியல் - இங்கே மேலாடை ; “ உடையு மொலியலுஞ் செய்யை ” பரி. ௧௧ : 97.

2 “ கழலுரீஇய திருந்தடி ” (புறநா. ௭ : 2) என்பதன் உரையில், ‘ வீரக்கழலுரிஞ்சிய இலக்கணத்தாற் றிருந்திய அடியினையும் ’ என்றும், ‘ திருந்தடி யென்பதற்குப் பிறக்கிடாத அடியெனினும் அமையும் ’ என்றும் அதன் உரையாசிரியர் எழுதியிருத்தல் இங்கே அறியற்பாலது.

3 பிறக்கு - பின் ; பிருதக்கென்னும் வடமொழிச்சிதைவென்பர் ; சிலப். ௫ : 95 - 8, அடியார்.

4 “ நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின், யார்க்கு மெளிதே தேரீ தல்லே ” புறநா. ௧௨௩ : 1 - 2.

யுடைய பொன்னாற்செய்த சிலம்புகளொலிக்கும்படி மேனிலத்துநின்றும் இழிதலால்,

சிலம்பொலிப்பவென்பதனால் இழிதல்பெற்றாம்.

444 - 6. [ஒள்ளழற், றாவற விளங்கிய வாய்பொ னவிரிழை, யணங்கு [1] வீழ் வன்ன பூந்தொடி மகளிர் :] அணங்கு வீழ்வு அன்ன ஒள் அழல் தா அற விளங்கிய ஆய் பொன் அவிர் இழை பூ தொடி மகளிர் - வானுறைதெய்வங்களின் வீழ்ச்சியையொத்த ஒள்ளியநெருப்பிலே வலி யறவிளங்கிய அழகிய பொன்னாற்செய்த விளங்கும்பூண்களையும் பூத் தொழிலையுடைய தொடியினையுமுடைய மகளிர்,

இவர் [2] நாயன்மார் கோயில்களிற் சேவிக்கும் மகளிர்.

447. மணம் கமழ் நாற்றம் தெரு உடன் கமழ - புழுகுமுதலியன நாறுகின்ற நாற்றம் தெருவுகளெல்லாம் மணக்க,

மணம் : ஆகுபெயர்.

448. ஒள் [3] குழை திகழும் ஒளி கெழு திருமுகம் - ஒள்ளிய மகரக் குழையை உள்ளடக்கிக்கொண்ட ஒளிபொருந்திய அழகினையுடையமுகம்,

449 - 50. [திண்கா ழேற்ற வியலிரு விலோதந், தெண்கடற் றிரையி னசைவளி புடைப்ப :] திண் காழ் ஏற்ற வியல் இரு விலோதம் அசை வளி தெள் கடல் திரையின் புடைப்ப - திண்ணிய கொடித்தண்டு களிலேற்ற அகலத்தினையுடைய பெருங்கொடிகளை அசைகின்ற காற்றுத் தெளிந்த கடற்றிரை போல எழுந்துவிழும்படி அடிக்கையினாலே,

451. நிரை நிலை மாடத்து அரமியம் தோறும் - ஒழுங்குபட்ட நிலைமையினையுடைய மாடங்களின் நிலாமுற்றங்கடோறும்,

452. மழை மாய் மதியின் தோன்றுபு மறைய - மஞ்சிலேமறை யுந் திங்களைப்போல ஒருகால் தோன்றி ஒருகால் மறைய,

அரமியந்தோறுமிருந்து (451) விழாக்காணும் மகளிர் முகம் (448) விலோதத்தை (449) வளிபுடைக்கையினாலே (450) தோன்றுபுமறைய வென்க.

நாயன்மார் எழுந்தருளுங்காற் கொடியெடுத்தல் இயல்பு.

---

1 பி - ம். 'வீழ்பன்ன'

2 நாயன்மார் - தெய்வங்கள்; பண்டைக்காலத்தில், சிவாலயத் திலெழுந்தருளியுள்ள மூர்த்திகளை நாயன்மாரென்றும் நாயனாரென் றும் வழங்குதல் மரபு. இது சிலாசாஸனங்களால் அறியப்படும்; "இராஜராஜேச்வரமுடைய நாயனார்" என்பது போல் வருவன காண்க; "திருக்கோயில் திருவாயில் என்றவற்றிற்கு நாயகராகிய நாயனாரைத் திருநாயனாரென்றாதது போல" (திருச்சிற். 1, பேர்.) என் பதும் ஈண்டறியற்பாலது.

3 பி - ம். 'குழையிருந்த'

453 - 5. [நீரு நிலனுந் தீயும் வளியு, மாக விசும்போ டைந்துட னியற்றிய, மழுவா ணெடியோன் றலைவ னாக :] மாகம் 1 விசும்பொடு வளியும் தீயும் நீரும் நிலனும் ஐந்து உடன் இயற்றிய 2 மழு வாள் நெடியோன் தலைவன்ஆக - திக்குக்களையுடைய ஆகாயத்துடனே காற்றும் நெருப்பும் நீரும் நிலனுமாகிய ஐந்தினையும் சேரப்படைத்த மழுவாகிய வாளையுடைய பெரியோன் ஏனையோரின் முதல்வனாகக்கொண்டு,

456. மாசு அற விளங்கிய யாக்கையர் - 3 தீர்த்தமாடிய வடிவினையுடையராய்,

456 - 8. 4 சூழ் சுடர் வாடா பூவின் 5 இமையா நாட்டத்து 6 நாற்றம் உணவின் உரு கெழு பெரியோர்க்கு - தெய்வத்தன்மையாற் சூழ்ந்த ஒளியினையுடைய வாடாத பூக்களையும் இதழ்குவியாத கண்ணினையும் அவியாகிய உணவினையுமுடைய அச்சம்பொருந்திய மாயோன் முருகன் முதலாகிய தெய்வங்கட்கு,

459. மாற்றரு மரபின் உயர் பலி கொடுமார் - விலக்குதற்கரிய முறைமையினையுடைய உயர்ந்த பலிகளைக் கொடுத்தற்கு,

460. அந்தி விழவில் - 7 அந்திக்காலத்துக்கு முன்னாக எடுத்த விழாவிலே,

தூரியம் கறங்க - வாச்சியங்கள் ஒலிப்ப,

செல்வர் (442) மாசறவிளங்கிய யாக்கையராய்க் (456) கமழ (447) மறைய (452) நெடியோன் தலைவனாகப் (455) பெரியோர்க்குப் (458) பலி கொடுக்கைக்கு (459) அந்தியிற்கொண்ட விழவிலே தூரியங்கறங்க வென்க.

461 - 5. [திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை, யோம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித், தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத், தாமு மவரு மோராங்கு விளங்கக், காமர் கவினிய பேரிளம் பெண்டிர் :]

---

1 " நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும் " தொல். மரபு. சூ. 89.

2 மழுவாணெடியோனென்றது சிவபிரானை ; இக்கருத்தை, " ஏற்று வல னுயரிய " (புறநா. ௧) என்னும் செய்யுள் வலியுறுத்தும்.

3 " மாசற விமைக்கு முருவினர் " (முருகு. 128) என்பதற்கு, ' எக்காலத்தும் நீராடுதலின் அழுக்கற விளங்கும் வடிவினையுடையர் ' என்றுரையெழுதினார் முன். 4 பி - ம். ' தூசுடை '

5 " இமைத்தல் - கண்களின் இதழ்களிரண்டினையும் குவித்தல் " என்றார் முன் ; முருகு. 3, ந.

6 பி - ம். ' கொற்றவுணவின் '

7 இதனை அந்திக்காப்பென்பர்.

திண் கதிர் மதாணி (461) காமர் கவினிய பெரு இள பெண்டிர் (465) - திண்ணிய ஒளியினையுடைய பேரணிகலங்களையுடையராய் விருப்பம் அழகுபெற்ற 1 பெரிய இளமையினையுடைய பெண்டிர்,

தாம் முயங்கி புணர்ந்து ஓம்பினர் தழீஇ (462) - தாம் முயங்குதலைச்செய்து கூடிப் பாதுகாக்குங் கணவரையுங் கூட்டிக்கொண்டு,

2 தாது அணி தாமரை போது பிடித்தாங்கு (463) ஒள் குறு மாக்களை (461) தழீஇ (462) - தாதுசேர்ந்த செவ்வித்தாமரைப்பூவைப் பிடித்தாற்போல் ஒள்ளிய சிறுபிள்ளைகளையும் எடுத்துக்கொண்டு,

தாமும் அவரும் ஓராங்கு விளங்க (464) - தாமும் கணவரும் பிள்ளைகளும் சேரச் சீலத்தாலே விளங்கும்படியாக,

466 - 7. [பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச், சிறந்து :] பூவினர் புகையினர் தொழுவனர் சிறந்து பழிச்சி - பூசைக்குவேண்டும் பூவினையுடையராய்த் தூபங்களையுடையராய் வணங்கினராய் மிகுத்துத் துதித்து,

467. புறங்காக்கும் கடவுள் பள்ளியும் - பாதுகாத்து நடத்தும் பௌத்தப் பள்ளியும்,

468. சிறந்த வேதம் விளங்க பாடி - அதர்வவேதம் ஒழிந்த முதன்மைப்பட்ட வேதங்களைத் தமக்குப் பொருள் தெரியும்படியோதி,

3 அதர்வம் தலையாயவோத்தன்மை 4 பொருளிற்கூறினும்.

---

1 பேரிளம்பெண்பருவமென்பது மகளிருடைய பேதைப்பருவம் முதலிய எழுபருவங்களுளொன்று.

2 பி - ம். 'தாதவிழ்'

3 வேதங்கள் மூன்றே யென்பதும் அதர்வவேதம் மந்திரசாகை யென்பதும் இங்கே அறியற்பாலன ; "மும்மறை யாலும் வணங்கப் படுகின்ற முக்கணக்கன்" (பொன்வண்ணத். 87) என்பதும், "த்ரிவேத போத காரணன்" (தக்க. 380) என்பதும், அதன் உரையாசிரியர் அதற்கு, 'திரிவேதமென்றது : மூன்றேவேதம் ; நாலாவது மந்திரசாகையான அதர்வவேதம் ; 'திரைவேதா' என்பது ஹலாயுதம்' என்றெழுதிய விசேட உரையும் இங்கே உணரத்தக்கவை.

4 "இருக்கும் யசுரும் சாமமும் : இவைதலையாய ஓத்து. இவை வேள்வி முதலியவற்றை விதித்தலின் இலக்கணமுமாய், வியாகரணத்தாற் காரியப்படுதலின் இலக்கியமுமாயின. அதர்வமும் ஆறங்கமும் தருமநூலும் இடையாய ஓத்து. அதர்வம் ஒழுக்கங்கூறுது பெரும்பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடுசூழும் மந்திரங்களும் பயிறலின் அவற்றோடு கூறப்படாதாயிற்று" தொல். புறத். சூ. 20, ந.

பி - ம். 'பொருளியலில்'

469. விழு சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து - விழுமிய தலைமை யோடு பொருந்தின யாகங்கள் முதலிய தொழில்களோடே 1 சிலகாலம் பொருந்தி,

470. நிலம் அமர் வையத்து - நால்வகைநிலங்களமர்ந்த உலகத்தே, ஒரு தாம் ஆகி - ஒன்றாகியபிரமம் தாங்களேயாய்,

471. உயர் நிலை உலகம் இவண் நின்று எய்தும் - உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகத்தை இவ்வுலகிலே நின்றுசேரும்,

472. அறம் நெறி பிழையா அன்பு உடை நெஞ்சின் - தருமத்தின் வழி ஒருகாலமுந்தப்பாத பல்லுயிர்கட்கும் அன்புடைத்தாகிய நெஞ்சாலே,

473. பெரியோர் மேஎய் - சீவன்முத்தராயிருப்பாரிடத்தே சில காலம் பொருந்திநின்று,

2 இனிதின் உறையும் - ஆண்டுப்பெற்ற வீட்டின்பத்தாலே இனிதாகத் தங்கும் பள்ளி (474),

474. [குன்றுகுயின் றன்ன வந்தணர் பள்ளியும் :]

குன்று குயின்றன்ன பள்ளியும் - மலையை உள்வெளியாகவாங்கி இருப்பிடமாக்கினாற்போன்ற பிரமவித்துக்களிருப்பிடமும்,

3 அந்தணர் - வேதாந்தத்தை எக்காலமும் பார்ப்பார்,

அந்தணர் (474) பாடி (468) அன்புடைநெஞ்சாலே (472) தேவருலகத்தையெய்தும் (471) ஒழுக்கத்தோடே சிலகாலம் நின்று (469) பின்னர் வேதாந்தத்தை யுணர்ந்து பெரியோரை மேஎய் (473)

---

1 "ஒழுக்கத்து நீத்தார்" (குறள், 21) என்பதன் உரையிற் **பரிமேலழகர்**, 'தமக்குரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று துறந்தார்' என்றும், விசேட உரையில், 'தமக்கு உரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று துறத்தலாவது : தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களை வழுவாதொழுக அறம் வளரும் ; அறம் வளரப் பாவந்தேயும் ; பாவந்தேய அறியாமை நீங்கும் ; அறியாமை நீங்க நித்தஅநித்தங்களது வேறுபாட்டுணர்வும், அழிதன் மாலையவாய இம்மை மறுமையின்பங்களினுவர்ப்பும், பிறவித் துன்பங்களும் தோன்றும் ; அவை தோன்ற வீட்டின்கண் ஆசையுண்டாம் ; அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய பயனின் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாகிய யோக முயற்சியுண்டாம் ; அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய யானென்பதும் விடும். ஆகலான் இவ்விரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்து விடுதலெனக்கொள்க' என்றும் எழுதியவை இங்கே அறிதற்குரியன.

2 பி - ம். 'இனிதினிது'

3 எள - ஆம் பக்கம் முதலாவது அடிக்குறிப்பைப் பார்க்க.

வையத்தே ஒருதாமாகி (470) உறையும் (473) பள்ளியும் (474) என முடிக்க.

475-6. வண்டு பட பழுநிய தேன் ஆர் தோற்றத்து பூவும் புகையும் 1 சாவகர் பழிச்ச - வண்டுகள்படியும்படி பருவமுதிர்ந்த தேனிருந்த தோற்றத்தையுடைய பூக்களையும் புகையினையுமேந்தி விரதங்கொண்டோர் துதிக்க,

477-83. [சென்ற காலமும் 2 வரூஉ மமயமு, மின்றிவட் டோன்றிய வொழுக்கமொடு நன்குணர்ந்து, வானமு நிலனுந் தாமுழு துணருஞ், சான்ற கொள்கைச் சாயா யாக்கை, யான்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார், கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப், பல்புரிச் சிமிலி நாற்றி நல்குவர :]

சென்ற காலமும் வரூஉம் அமயமும் (477) இன்று இவண் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்து (478) நல்குவர (483) - சென்ற காலத்தையும் வருகின்ற காலத்தையும் இன்று இவ்வுலகில் தோன்றி நடக்கின்ற ஒழுக்கத்தோடே மிகவுணர்ந்து உலகத்தார்க்குச் சொல்லுதல் வரும்படி,

வானமும் நிலனும் தாம் முழுது உணரும் (479) அறிஞர் (481) - தேவருலகையும் அதன் செய்கைகளையும் எல்லாநிலங்களின் செய்திகளையும் தாம் நெஞ்சால் அறிதற்குக் காரணமான அறிஞர்,

இஃது எதிர்காலங்கூறிற்று.

சான்ற கொள்கை (480) - தமக்கமைந்த விரதங்களையும்,

சாயா யாக்கை (480) - அவ்விரதங்களுக்கு இளையாத மெய்யினையும் உடைய அறிஞர் (481),

ஆன்று அடங்கு அறிஞர் (481) - கல்விகளெல்லாம் நிறைந்து களிப்பின்றி அடங்கின அறிவினையுடையார்,

3 செறிந்தனர் (481) - நெருங்கினவருடைய சேக்கை (487) என்க.

நோன்மார் (481) - நோற்கைக்கு,

கல் பொளிந்தன்ன இட்டு வாய் கரண்டை (482) பல் புரி சிமிலி நாற்றி (483) - கல்லைப் பொளிந்தாற்போன்ற 4 இட்டியவாயையுடைய 5 குண்டிகையைப் பல வடங்களையுடைய நூலுறியிலே தூக்கிச் செறிந்தன (481) ரென்க.

---

1 சாவகர் - சைனரில் விரதங்காக்கும் இல்லறத்தார்; இவர் உலக நோன்பிகளெனவும் கூறப்படுவர்; சிலப். ௧௬ : 153.

2 பி - ம். 'வரூஉஞ்சமயமும்'

3 பி - ம். 'செறிநர்'       4 இட்டிய - சிறிய.

5 "உறித்தாழ்ந்த கரகமும்" (கலி. ௯ : 2); "உறித்தாழ் கரகம்" சிலப். ௰ : 64, 90.

484. கயம் கண்டன்ன - 1 குளிர்ச்சியாற் கயத்தைக் கண்டாற் போன்ற,

வயங்கு உடை நகரத்து - விளங்குதலையுடைய கோயிலிடத்துச் சேக்கை (487) என்க.

485. செம்பு இயன்றன்ன செ சுவர் புனைந்து - செம்பாற் செய்தா லொத்த செவ்விய சுவர்களைச் சித்திரமெழுதி,

486. நோக்கு விசை தவிர்ப்ப மேக்கு உயர்ந்து - கண் பார்க்கும் விசையைத் தவிர்க்கும்படி மேல்நிலமுயர்ந்து,

486 - 8. [ஓங்கி, யிறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையுங், குன்று பல குழீஇப் பொலிவன தோன்ற :]

குன்று பல குழீஇ பொலிவன தோன்ற ஓங்கி - மலைகள் பலவும் திரண்டு பொலிவனபோலத் தோன்ற உயர்ந்து வயங்குடை நகரம் (484) என்க.

இறும்பூது சான்ற நறு பூ சேக்கையும் - அதிசயம் அமைந்த நறிய பூக்களைச் சூழவுடைய அமணப்பள்ளியும்,

சேக்கப்படும் இடத்தைச் சேக்கை யென்றார். இவர்கள் வருத்த மறப் பறித்து வழிபடுதற்குப் பல பூக்களைச் சூழ ஆக்குதலின் நறும்பூஞ் சேக்கை யென்றார்.

புனைந்து (485) உயர்ந்து (486) தோன்ற (488) ஓங்கிச் (486) சாவகர் பழிச்ச (476) வயங்குதலையுடைய நகரத்திடத்துக் (484) கொள்கையினையும் யாக்கையினையுமுடைய (480) அறிஞர் (481) உணர்ந்து (478) நல்குவர (483) நோன்மார் (481) சிமிலியிலேநாற்றிச் (483) செறிந்தனருடைய (481) சேக்கையுமெனக் கூட்டுக.

489. அச்சமும் - நடுவாகக்கூறுவரோ கூறாரோவென்று அஞ்சி வந்த அச்சத்தையும்,

அவலமும் - அவர்க்குத் தோல்வியால் நெஞ்சிற்றோன்றும் வருத்தத் தையும்,

ஆர்வமும் நீக்கி - அவர்தம் நெஞ்சுகருதின பொருள்கண்மேற்றோன் றின பற்றுள்ளத்தினையும் போக்கி,

என்றது, அவர்கள் நெஞ்சுகொள்ள விளக்கியென்றவாறு.

490. செற்றமும் உவகையும் செய்யாது காத்து - ஒருகூற்றிற் செற்றஞ் செய்யாமல் ஒருகூற்றில் உவகைசெய்யாமல் நெஞ்சினைப் பாது காத்து,

1 " கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழல் " (மலைபடு. 47) என் பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

491. ஞெமன் கோல் அன்ன செம்மைத்தாகி - துலாக்கோலை யொத்த [1] நடுவுநிலைமையையுடைத்தாய்,

492. சிறந்த கொள்கை [2] அறம் கூறு அவையமும் - இக்குணங்களாற் சிறந்த விரதங்களையுடைய தருமநூலைச் சொல்லுந்திரளும்,

493. நறு சாந்து நீவிய கேழ் கிளர் அகலத்து பெரியோர் (495) - நறிய சந்தனத்தைப்பூசிய நிறம் விளங்கும் மார்பினையுடைய பெரியோர்,

யாகத்திற்குச் சந்தனம்பூசுதல் மரபு.

494 - 8. [ஆவுதி மண்ணி யவிர்துகின் முடித்து, மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல, நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி, யன்பு மறனு மொழியாது காத்துப், பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த :]

ஆவுதி மண்ணி (494) மா விசும்பு வழங்கும் பெரியோர் போல (495) - [3] யாகங்களைப் பண்ணிப் பெரிய சுவர்க்கத்து ஏறப்போம் அந்தணர் அரசனை அடக்குமாறு போல,

நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி (496) - அரசனிடத்துள்ள நன்மையும் தீமையும் நெஞ்சத்தாலேகண்டு அத்தீங்குகளையாராய்ந்து அவற்றிலே ஒழுகாமலடக்கி,

அன்பும் அறனும் ஒழியாது காத்து (497) - சுற்றத்திடத்துச் செல்லும் அன்பும் எவ்வுயிர்க்கண்ணும் நிகழும் தருமமும் ஒருகாலமும் போகாமல் தம்மிடத்தே பரிகரித்து,

பழி ஒரீஇ உயர்ந்து (498) - பழி தம்மிடத்துவாராமல் நீக்கி அதனானே ஏனையோரினும் உயர்ச்சியெய்தி,

பாய் புகழ் நிறைந்த (498) - பரந்த புகழ்நிறைந்த,

---

1 "நடுவுநிலையென்பது ஒன்பது சுவையுள் ஒன்றென் நாடகநிலையுள் வேண்டப்படுஞ் சமநிலை ; அஃதாவது, 'செஞ்சாந் தெறியினுஞ் செத்தினும் போழினும், நெஞ்சோர்ந் தோடா நிலைமை' அது காம வெகுளி மயக்கம் நீங்கினோர் கண்ணே நிகழ்வது" தொல். மெய்ப். 12, பேர்.

2 "அறங்கூறவையம் - தருமநூன் முறைமையின் அறங்கூறும் தருமாசனத்தார்" சிலப். ரு : 135, அடியார்.

3 யாகஞ்செய்து சுவர்க்கம்புகுதல், "பாடிப் பெற்றபரிசில் : 'நீர் வேண்டியது கொண்மின்' என, 'யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம் புகல்வேண்டும்' என, பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப் பத்தாம் பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினர்" (பதிற். மூன்றும்பத்தின் இறுதிவாக்கியம்) என்பதிற் குறிப்பிடப்பட்ட பாலைக்கௌதமனார் சரிதையாலும் உணரப்படும்.

அவிர் துகில் முடித்து (494) - விளங்குகின்ற [1] மயிர்க்கட்டுக்கட்டி,

499. செம்மை சான்ற காவிதி மாக்களும் - தலைமையமைந்த [2] காவிதிப்பட்டங்கட்டின அமைச்சரும்,

500. அறன் நெறி பிழையாது ஆற்றின் ஒழுகி - இல்லறத்திற்குக் கூறிய வழியைத்தப்பாமல் இல்லறத்திலே நடந்து,

501. குறு பல் குழூவின் குன்று கண்டன்ன - அண்ணிய பல திரட்சியையுடைய மலைகளைக் கண்டாற்போன்ற,

502. பருந்து இருந்து உகக்கும் பல் மாண் நல் இல் - பருந்து இளைப்பாறியிருந்து பின்பு உயரப்பறக்கும் பலதொழிலின் மாட்சிமைப்பட்ட நல்ல இல்லில்,

503. பல் வேறு பண்டமொடு ஊண் மலிந்து கவினி - பலவாய் வேறுபட்ட பண்டங்களோடே பலவுணவுகளும் மிக்கு அழகுபெற்று,

504. மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும் - மலையிடத்தனவும் நிலத்திடத்தனவும் நீரிடத்தனவும் பிற இடத்தனவுமாகிய பண்ணியம் (506),

505. பல் வேறு திரு மணி முத்தமொடு பொன் கொண்டு - பலவாய் வேறுபட்ட அழகினையுடைய மணிகளையும் முத்தினையும் பொன்னையும் வாங்கிக்கொண்டு,

506. சிறந்த தேஎத்து - மணிகளும் முத்தும் பொன்னும் பிறத்தற்குச் சிறந்த தேசத்தினின்றும்வந்த,

பண்ணியம் பகர்நரும் - பண்டங்களை விற்கும் வணிகரும்,

ஊண்மலிந்து கவினிக் (503) குன்றுகண்டன்ன (501) நல்லஇல்லிலே யிருந்து (502) ஆற்றினொழுகிச் (500) சிறந்ததேஎத்துவந்த (506) திருமணி முத்தமொடு பொன்கொண்டு (505) பிறவுமாகிய (506) பண்டங்களை விற்பாருமென்க.

507. [மழையொழுக் கறூஅப் பிழையா விளையுள் :] அறூஅ ஒழுக்கு மழை பிழையா விளையுள் - இடைவிடாமற் பெய்கின்ற மழையால் தவறாத விளைதலையுடையதாகிய மோகூர் (508),

---

1 மயிர்க்கட்டு - தலைப்பாகை ; முல்லை. 53, ந ; சீவக. 1558, ந.

2 காவிதிப்பட்டம் : “ பாண்டிநாட்டுக் காவிதிப்பட்டம் எய்தினோரும்...........முதலியோருமாய் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்கு உரிய வேளாளராம் ” (தொல். அகத். சூ. 30, ந.) என்பதனால் இப்பட்டம் உயர்ந்த வேளாளர் பெறுவதென்பதும், “ காவிதிப்பூ ” (தொல். தொகை. சூ. 12, ந. மேற்.) என்பதனால் இப்பட்டத்தினரணியும் பூவொன்றுண்டென்பதும், “ எட்டி காவிதிப் பட்டந் தாங்கிய, மயிலியன் மாதர் ” (பெருங். உ. 3 : 144-5) என்பதனால் இப்பட்டம் மகளிரும் பெறுதற்குரியதென்பதும் அறியப்படுகின்றன.

508. பழையன் மோகூர் - பழையனென்னுங் குறுநிலமன்ன னுடைய மோகூரிடத்து,

508 - 9. [அவையகம் விளங்க, நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன :] அவை அகம் விளங்க நாற்கோசர் மொழி தோன்றி அன்ன - நன்மக்கள் திரளிடத்தே விளங்கும்படி அறியக்கூறிய நான்குவகை யாகியகோசர் வஞ்சினமொழியாலே விளங்கினாற்போன்ற,

510. தாம் மேஎந்தோன்றிய நால் பெரு குழுவும் - தமது மொழி யால் தாம் மேலாய்விளங்கிய நால்வகைப்பட்ட பெரியதிரளும்,

ஐம்பெருங்குழுவில் அமைச்சரைப்பிரித்து முற்கூறினமையின், ஈண்டு ஏனை நாற்பெருங்குழுவையுங்கூறினார். ஐம்பெருங்குழுவா வன : "அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தூத ரொற்ற ரிவரென மொழிப"; இளங்கோவடிகளும், [1] "ஐம்பெருங் குழுவு மெண்பே ராய மும்" என்றார்.

511. [கோடுபோழ் கடைநரும் :] போழ் கோடு கடைநரும் - [2] அறுத்த சங்கை வளை முதலியனவாகக் கடைவாரும்,

திரு மணி குயினரும் - அழகிய மணிகளைத் துளையிடுவாரும்,

512. சூடு உறு நல் பொன் சுடர் இழை புனைநரும் - சுடுதலுற்ற நன்றாகிய பொன்னை விளங்கும்பணிகளாகப்பண்ணுந் தட்டாரும்,

513. பொன் உரை காண்மரும் - [3] பொன்னையுரைத்தவுரையை அறுதியிடும் பொன்வாணிகரும்,

கலிங்கம் பகர்நரும் - புடைவைகளை விற்பாரும்,

514. செம்பு நிறை கொண்மரும் - செம்பு நிறுக்கப்பட்டதனை வாங்கிக் கொள்வோரும்,

வம்பு நிறை முடிநரும் - கச்சுக்களைத் தம் தொழின்முற்றுப்பட முடி வாரும்,

515. பூவும் புகையும் ஆயும் மாக்களும் - பூக்களையும் [4] சாந்தையும் நன்றாக ஆராய்ந்து விற்பாரும்,

---

[1] சிலப்பதிகாரம், ரு : 157. [2] மதுரை. 316, பார்க்க.

[3] "பொலந்தெரி மாக்கள்" (சிலப். கச : 203) என்பதன் உரை யில், 'பொற்பேதத்தைப் பகுத்தறியும் பொன்வாணிகர்' (அடியார்.) என்று எழுதியிருத்தல் பொன்வாணிகர் இயல்பை விளக்கும்.

[4] சாந்து - சந்தனக்கட்டை ; புகை என்ற மூலத்திற்குப் புகைக்கப் படும் உறுப்பாகிய சாந்தென்று இவ்வுரையாசிரியர் பொருள் கொண்ட வாறே, "பூவும் புகையும்" (சிலப். ரு : 14) என்றவிடத்துப் புகையென் பதற்கு, 'மயிருக்குப் புகைக்கும் அகில் முதலாயின' (அரும்பத.), 'புகையுறுப்பு' (அடியார்.) என்று பிறரும் பொருள்கூறுதல் இங்கே அறியத்தக்கது.

516 - 7. [எவ்வகைச் செய்தியு முவமங் காட்டி, நுண்ணிதி னுணர்ந்த :] எ வகை நுண்ணிதின் உணர்ந்த செய்தியும் உவமம் காட்டி - பலவகைப்பட்ட கூரிதாகவுணர்ந்த தொழில்களையும் ஒப்புக் காட்டி,

சித்திரமெழுதுவார்க்கு வடிவின்றொழில்கள் தோன்ற எழுதுதற் கரிதென்பதுபற்றிச் செய்தியுமென்றார்.

517 - 8. [1] நுழைந்த நோக்கின் கண்ணுள் வினைஞரும் - கூரிய அறிவினையுடைய சித்திரகாரிகளும்,

நோக்கினார்கண்ணிடத்தே தம் தொழிலைநிறுத்தலிற் கண்ணுள் வினைஞரென்றார்.

பிறரும் கூடி - யான் கூறப்படாதோரும் திரண்டு,

519 - 20. தெள் திரை அவிர் அறல் கடுப்ப ஒள் பல் குறியவும் நெடியவும் மடி தரூஉ விரித்து - தெளிந்த திரையில் விளங்குகின்ற அறலையொப்ப ஒள்ளிய பலவாகிய சிறியனவும் நெடியனவுமாகிய மடிப் புடைவைகளைக் கொண்டு வந்து விரித்து,

மடித்தது அறலுக்குவமை.

521. சிறியரும் பெரியரும் [2] கம்மியர் குழீஇ - சிறியோரும் பெரி யோருமாகிய நெய்தற்றொழிலைச் செய்வார் திரண்டு,

522. நால் வேறு தெருவினும் கால் உற நிற்றர - நான்காய் வேறு பட்ட தெருவுகடோறும் [3] ஒருவர்காலோடு ஒருவர்கால் நெருங்க நிற்ற லைச்செய்ய,

கம்மியர் (521) விரித்துக் (520) குழீஇ (521) நிற்றலைச்செய்ய,

இஃது அந்திக்கடையில் தெருவிற் புடைவைவிற்பாரைக் கூறிற்று.

கோயிலைச்சூழ்ந்த ஆடவர்தெரு நான்காதலின், [4] நால்வேறு தெரு வென்றார். இனிப் பொன்னும் மணியும் புடைவைகளும் [5] கருஞ்சரக் கும் விற்கும் நால்வகைப்பட்ட வாணிகர்தெருவென்றுமாம்.

---

1 " நுழைபுலம் - பல நூல்களினுஞ்சென்ற அறிவு " (குறள், 407, பரிமேல்.) என்பதை ஆராய்க.

2 கம்மியர் : கர்மியர் என்பதன் சிதைவென்பர் ; தொழில் செய்வோ ரென்பது அதன் பொருள்.

3 " தாளொடு தாண்முட்ட.........நீளொளி மணிவீதி நிரந்தரித் தனசனமே " விநாயக. நகரப். 96.

4 " நால் வேறு தெருவும் - அந்தணர் அரசர் வணிகர் வேளாள ரெனச் சொல்லப்பட்டாரிருக்கும் நான்காய் வேறுபட்ட தெருக்களும் " (சிலப். கச : 212, அடியார்.) என்பர்.

5 கருஞ்சரக்கு - கூலங்கள் ; சிலப். ரு: 23, அரும்பத.

523 - 5. *கொடு பறை கோடியர் கடும்பு உடன் வாழ்த்தும் தண் கடல் நாடன் ஒள் பூ கோதை பெரு நாள் இருக்கை* - கண்கள்வலைந்த பறையினையுடைய கூத்தருடைய சுற்றம் சேரவாழ்த்தும் குளிர்ந்த கடல் சேர்ந்த நாட்டையுடையவனாகிய ஒள்ளிய பனந்தாரையுடைய சேரனுடைய பெரியநாளோலக்க இருப்பிலே,

525 - 6. *விழுமியோர் குழீஇ விழைவு கொள் கம்பலை கடுப்ப கல்லென* (538) - எல்லாக்கலைகளையுமுணர்ந்த சீரியோர் திரண்டு அவன் கேட்பத் [1] தருக்கங்களைக்கூறி விரும்புதல்கொண்ட ஆரவாரத்தை யொப்பக் கல்லென்ற ஓசை நடக்க,

பலசமயத்தோரும் தம்மிற்றம் மாறுபட்டுக்கூறுந் தருக்கத்தைச் சேரக் கூறக் கேட்டிருக்கின்ற [2] கம்பலைபோலவென்றார்.

526. *பலவுடன்* - கூறுதன பலவற்றுடனே,

527. *சேறும் நாற்றமும் பலவின் சுளையும்* - தேனும் நாற்றமும் உடையவாகிய பலாப்பழத்தின் சுளையும்,

சேறென்றார், சுளையிலிருக்கின்ற தேனை.

528. *வேறு பட கவினிய* [3] *தேம் மா கனியும்* - வடிவுவேறுபட அழகுபெற்ற இனிய மாவிற்பழங்களையும்,

'சேறு நாற்றமும் வேறுபடக் கவினிய, பலவின் சுளையுந் தேமாங் கனியும்' என்றும் பாடம்.

529. *பல் வேறு உருவிற் காயும்* - பலவாய் வேறுபட்ட வடிவினையுடைய பாகற்காய்வாழைக்காய் [4] வழுதுணங்காய் முதலியகாய்களையும்,

*பழனும்* - வாழைப்பழம் முந்திரிகைப்பழமுதலிய பழங்களையும்,

530 - 31. *கொண்டல் வளர்ப்ப கொடி விடுபு கவினி மெல் பிணி அவிழ்ந்த குறு முறி அடகும்* - மழை பருவத்தே பெய்து வளர்க்கையினாலே கொடிகள்விட்டு அழகுபெற்று மெல்லிய சுருள்விரிந்த சிறிய இலைகளையுடைய இலைக்கறிகளையும்,

கொடியென்றார், ஒழுங்குபட விடுகின்ற கிளைகளை.

532. [*அமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக் கடிகையும் :*] *தீ சேறு அமிர்து இயன்றன்ன கடிகையும்* - இனிய பாகினாற்கட்டின அமிர்தம் தேருகநீண்டாற்போன்ற [5] கண்ட சருக்கரைத்தேற்றையும்,

533. *புகழ் பட பண்ணிய பெரு ஊன் சோறும்* - புகழ்ச்சிகள் உண்டாகச்சமைத்த பெரிய இறைச்சிகளையுடைய சோற்றையும்,

---

1 சேரனவையுந் தருக்கமும் : மணி. உகூ : 63 - 4.

2 " கல்வியிற் றிகழ்கணக் காயர் கம்பலை " என்றார் கம்பரும்.

3 தேமாவென்பது மாவில் ஒரு சாதியென்பர்.

4 வழுதுணங்காய் - கத்தரிக்காய் ; " வழுதுணங்காய் வாட்டும் " தனிப்.

5 கண்ட சருக்கரை - கற்கண்டு.

534. கீழ் செல 1 வீழ்ந்த கிழங்கொடு - 2 பாரளவாகவீழ்ந்த கிழங்குடனே,

534-5. [பிறவு, மின்சோறு தருநர் பல்வயி னுகர :] பல் வயின் நுகர இன் சோறு பிறவும் தருநர் - பலவிடங்களினும் அநுபவிக்க இனிய பாற்சோறு பால் முதலியவற்றையுங் கொண்டுவந்து இடுவாரிடத்து எழுந்த ஓசையும்,

என்றது, சோறிடுஞ்சாலைகளை.

536-44. [வாலிதை யெடுத்த வளிதரு வங்கம், பல்வேறு பண்டமிழிதரும் பட்டினத், தொல்லெ னிமிழிசை மானக் கல்லென, நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப், பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோத, மிருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந், துருகெழு பானாள் வருவன பெயர்தலிற், பல்வேறு புள்ளி னிசையெழுந் தற்றே, யல்லங் காடி யழிதரு கம்பலை :]

நன தலை வினைஞர் கலம் கொண்டு மறுக (539) - அகன்ற இடத்தையுடைய தேசங்களில் வாணிகர் ஈண்டுச்செய்த பேரணிகலங்களைக் கொண்டுபோதல் காரணமாக,

வால் இதை எடுத்த வளி தரு வங்கம் (536) - நன்றாகிய பாய்விரித்த காற்றுக்கொண்டு வருகின்ற மரக்கலம்,

பெரு கடல் குட்டத்து புலவு திரை ஓதம்(540)இரு கழி மருவி பாய பெரிது எழுந்து (541) உரு கெழு பால்நாள் வருவன (542) - பெரிய கடல்சூழ்ந்த இடத்தினின்றும் புலானாறுந் திரையையுடைய ஓதம் கரிய கழியிற் புகார்முகத்தேயேறிப் பரக்கின்ற அளவிலே மிக்கெழுந்து அச்சம் பொருந்திய நடுவியாமத்தே வருகின்றவற்றின் பண்டம் (537) என்க.

3 பெரிதெழுந்தென்றார், பாயும்வாங்கிச் சரக்கும்பறியாமல் வருகின்றமை தோன்ற. ஓதமருவிப்பாயவென்றார், அவ்வோதவேற்றத்திலே கழியிலே வருமென்பதுணர்த்தற்கு.

பல் வேறு பண்டம் இழிதரும் பட்டினத்து (537) ஒல்லென் இமிழ் இசை மான (538) - வங்கம் வருகின்றவற்றிற் பலவாய் வேறுபட்ட

1 வீழ்ந்த - கீழே வளர்ந்த ; "வீழ்ந்தன - கீழே வளர்ந்தன" (மலைபடு. 128, ந.) ; "வீழ்க்கும்மே - தாழவிருக்கும்" (கoக : 6) என்பர் புறநானூற்றுரையாசிரியர்.

2 பார் - பாறை.

3 "மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது, புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்" (புறநா. ங௨o : 11 - 2) என்பதும், 'பாய் களையாது பரந்தோண்டாதென்பதனால் துறை நன்மை கூறியவாறும்' என்ற அதன் விசேட உரையும் இங்கே அறிதற்குரியன.

சரக்கு இறங்குதலைச் செய்யும் பட்டினத்து ஒல்லென முழங்குகின்ற ஓசையையொக்க,

மறுகுதற்குவந்த வங்கம் குட்டத்தினின்றும் வருவனவற்றிற் பண்ட மிழியும் பட்டினத்து ஓசைமானவென்க.

பெயர்தலின் (542) பல் வேறு புள்ளின் இசை எழுந்தற்று (543) - [1] இரையை நிறைய மேய்ந்து பார்ப்பிற்கு இரைகொண்டு அந்திக்காலத்து மீளுதலிற் பலசாதியாய் வேறுபட்ட பறவைகளினோசை எழுந்த தன்மைத்து,

அல் அங்காடி [2] அழி தரு கம்பலை (544) - அந்திக்காலத்துக் கடையில் மிகுதியைத்தருகின்ற ஓசை,

கடவுட்பள்ளியிடத்தும் (467) அந்தணர் பள்ளியிடத்தும் (474) சேக்கையிடத்தும் (487) அவையத்திடத்தும் (492) காவிதிமாக்களிடத்தும் எழுகின்ற வோசை (499) கோதை (524) யிருக்கையில் (525) விழைவுகொள் கம்பலை கடுப்பக் (526) கல்லென (538) எனமுடிக்க.

பண்ணியம் பகர்நரிடத்தோசையும் (506) நாற்பெருங்குழுவிடத்தோசையும் (510) பல்வயினுகர இன்சோறு (535) பிறவும் (534) தருநரிடத்தெழுந்த வோசையும் (535) கோடுபோழ்கடைநர் (511) முதலாகக் கண்ணுள்வினைஞரீறாகவுள்ளாரும் பிறருங்கூடிக் (518) கம்மியருங்குழீஇ (521) நிற்றர (522) எழுந்தவோசையும் பட்டினத்து (537) ஒல்லெனிமிழிசைமானக்கல்லென (538) என முடிக்க.

இங்ஙனமுடித்தபின், நியமத்து (365) அல்லங்காடியில் அழிதரு கம்பலை (544) ஆரியங்கறங்குகையினாலும் (460) கம்பலைகடுப்பக் (526) கல்லென்கையினாலும் (538) ஒல்லெனிமிழிசைமானக்கல்லென்கையினாலும் (538) பல் வேறுபுள்ளின் இசையெழுந்தற்றே (543) எனச்சேர வினைமுடிக்க.

கல்லெனவென்பதனை இரண்டிடத்திற்குங்கூட்டுக.

[3] இவ்வோசைகளின் வேறுபாடுகளை நோக்கிப் பல்வேறுபுள்ளோசைகளை உவமங்கூறினார்.

---

[1] "ஞாயிறு பட்ட வகல்வாய் வானத், தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை, யிறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த, பிள்ளை யுள்வாய்ச் செரீஇய, விரைகொண் டமையின் விரையுமாற் செலவே" குறுந். கூ௨.

[2] அழியென்பது மிகுதியைக் குறித்தல், "அழியும் - பெருகும்" (சீவக. 1193, ந.), "அழிபசி - மிக்கபசி" (குறள். 226, பரிமேல்.) என்பவற்றாலும் உணரப்படும்.

[3] "பாய தொன்மரப் பறவைபோற் பயன்கொள்வான் பதினெண், டேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சி" திருவிளை. திருநகரப். 67.

545-6. [ஒண்சுட ருருப்பொளி மழுங்கச் சினந்தணிந்து சென்ற ஞாயிறு :] ஒள் சுடர் உருப்பு ஒளி சினம் தணிந்து மழுங்க சென்ற ஞாயிறு - ஒள்ளிய கிரணங்களையுடைய வெப்பத்தையுடைய ஒளி சினம் மாறிக் குறையும்படி ஒழுகப்போன ஞாயிறு,

546-7. நல் பகல் கொண்டு குடமுதல் குன்றம் சேர - பின்னர் நன்றாகிய பகற்பொழுதைச் சேரக்கொண்டு மேற்றிசையிடத்து அத்த கிரியைச் சேருகையினாலே,

547-9. குணமுதல் நாள் முதிர் மதியம் தோன்றி நிலா விரிபு பகல் உரு உற்ற இரவு வர - கீழ்த்திசையிடத்தே பதினாறுநாட்சென்று முதிர்ந்த நிறைமதி எழுந்து நிலாப்பரக்கையினாலே பகலின்வடிவை யொத்த இராக்காலம் வரும்படி,

549. நயந்தோர் - கணவர்பிரிதலிற் கூட்டத்தை விரும்பியிருந் தார்க்கு,

550. காதல் இன் துணை புணர்மார் - தம்மேற் காதலையுடைய தமக்கு இனிய கணவரைக்கூடுதற்கு,

550-51. ஆய் இதழ் தண் நறு கழுநீர் துணைப்ப - ஆராய்ந்த இதழ்களையுடைய குளிர்ந்த நறிய செங்கழுநீர்களை மாலைகட்டும்படியாக,

551. இழை புனையூஉ - அணிகளை யணிந்து,

552. நல் நெடு கூந்தல் நறு விரை குடைய - நன்றாகிய நெடிய மயிரிற் பூசின நறிய மயிர்ச்சந்தனத்தை அலைத்து நீக்கும்படியாக,

553. நரந்தம் அரைப்ப - கத்தூரியை அரைக்கும்படியாக,

நறு சாந்து 1 மறுக - நறியசந்தனம் அரைக்கும்படியாக,

554. மெல் நூல் கலிங்கம் கமழ் புகை மடுப்ப - மெல்லிய நூலாற் செய்த கலிங்கங்களுக்கு மணக்கின்ற அகிற்புகையை ஊட்டும்படியாக,

555-6. பெண் மகிழ்வு உற்ற பிணை நோக்கு மகளிர் நெடு சுடர் விளக்கம் கொளீஇ - குணச்சிறப்பால் 2 உலகத்துப்பெண்சாதி விருப்ப முற்ற மான்பிணைபோலும் நோக்கினையுடைய மகளிர் நெடிய ஒளியினை யுடைய விளக்கினையேற்றி,

556-8. [நெடுநக, ரெல்லை யெல்லா நோயொடு புகுந்து, கல் லென் மாலை நீங்க :]

நெடு நகர் எல்லை எல்லாம் - பெரிய ஊரினெல்லையாகிய இடமெல் லாம்,

1 மறுக - அரைக்க ; நெடுநல். 50, ந.

2 "பெண்டிரு மாண்மை வெஃகிப் பேதுறு முலையி னானை", "ஆண் விருப் புற்று நின்ற ரவ்வளைத் தோளி னாரே" (சீவக. 587, 2447) என் பவற்றின் குறிப்புக்களைப் பார்க்க.

கல்லென் [1] மாலை நோயொடு புகுந்து நீங்க - கல்லென்னும் ஓசையையுடைய மாலை நயந்தோர்க்கு (549) நோயைச்செய்தலோடே புகுந்துபோகையினாலே முந்தையாமஞ்சென்றபின்றை (620) என்க.

நெடுநக (556) ரெல்லையெல்லாம் (557) மகளிர் (555) விளக்கங் கொளீஇக் (556) காதலின் றுணைபுணர்தற்குப் (550) புனையூஉத் துணைப் பக் (551) குடைய (552) அரைப்ப மறுக (553) மடுப்ப (554) இரவு வரும்படி (549) ஞாயிறு (546) குன்றஞ்சேருகையினாலே (547) மாலை (558) நயந்தோர்க்கு (549) நோயொடு புகுந்து (557) பின்னர் நீங்க (558) முந்தையாமஞ்சென்றபின்றை (620) எனக்கூட்டுக.

558. நாணு கொள - புணர்ச்சிநீங்கிற்றாகத் தமக்கு [2] உயிரினுஞ் சிறந்த நாணைத் தம்மிடத்தே தடுத்துக்கொள்ள,

559 - 61. [ஏழ்புணர் சிறப்பி னின்றொடைச் சீறியாழ், [3] தாழ் பயற் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து, வீழ்துணை தழீஇ :]

ஏழ் புணர் சிறப்பின் இன் தொடை சிறு யாழ் பண்ணு பெயர்த்து - இசையேழும் தன்னிடத்தேகூடின தலைமையினையுடைய இனிய நரம் பினையுடைய சிறிய யாழைப் பண்களை மாறிவாசித்து,

வீழ் துணை தழீஇ - தம்மைவிரும்பின கணவரைப் புணர்ந்து நாணுக் கொள (558),

[4] பாட்டுக் காமத்தைவிளைவித்தலின், யாழைவாசித்து வீழ்துணை தழீஇ யென்றார்.

561 - 2. [வியல்விசும்பு கமழ, நீர்திரண் டன்ன கோதை பிறக் கிட்டு :] நீர் திரண்டன்ன கோதை வியல் விசும்பு கமழ பிறக்குஇட்டு -

---

[1] மாலை நோயொடு புகுதல்: "மாலை.........நோயே மாகுதல்", (குறுந். கூச : 2 - 4) ; "மாலைநோய் செய்தல்", "மாலை மலருமிந் நோய்" குறள். 1226-7.

[2] "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" தொல். களவு. சூ. 22.

[3] தொல். புள்ளி மயங். சூ. 11, ந. மேற்.

[4] "இசையுங் கூத்துங் காமத்திற்குத் தீபனமாகலின்" (சீவக.2597, ந.), "கிளைநரம் பிசையுங் கூத்துங் கேழ்ந்தெழுந் தின்ற காம, விளை பயன்" (சீவக. 2598) ; "நஞ்சுகொப் புளிக்கும் பேழ்வாய் நாகணை துறந்த நம்பி, கஞ்சநாண் மலர்வாய் வைத்த கழையிசை யமிழ்த மாரி, அஞ்செவி தவழ்த லோடு மாய்ச்சியர் நிறத்து மாரன், செஞ்சிலை பழுத் துக் கான்ற செஞ்சரந் தவழ்ந்த மாதோ" (பாகவதம், கo. 12 : 6) ; "அவ்விய மதர்வேற் கண்ணா ரந்தளிர் விரன டாத்துந், திவ்விய நரம்புஞ் செவ்வாய்த் தித்திக்கு மெழாலுந் தம்மிற், கவ்விய நீர வாகிக் காளையர் செவிக்கா லோடி, வெவ்விய காமப் பைங்கூழ் விளைதர வளர்க்கு மன்றே" திருவிளை. திருநகரப். 52.

நீர்திரண்டாற்போன்ற வெள்ளியபூக்களாற்செய்த மாலைகளை அகற்சியை யுடைய விசும்பிலேசென்று நாறும்படி கொண்டையிலே முடித்து,

563. ஆய் கோல் அவிர் தொடி விளங்க வீசி - அழகிய திரட்சியை யுடைய விளங்குகின்ற தொடி மிகவிளங்கும்படி கையைவீசி மனைதொறுஞ் சென்று பொய்தலயர (589) என்க.

564. போது அவிழ் புது மலர் தெரு உடன் கமழ - அலரும்பருவமாக மலர்ந்த புதிய 1 விடுபூக்கள் தெருவுகளெங்கும் நாற,

565. மே தகு தகைய மிகு நலம் எய்தி - முற்படப் பலருடன் புணர்ந்த புணர்ச்சியாற்குலைந்த ஒப்பனைகளைப் பின்னும் பெருமைதருகின்ற அழகினையுடைய மிகுகின்ற நன்மையுண்டாக 2 ஒப்பித்து,

566 - 7. [பெரும்பல் குவளைச் சுரும்புபடு பன்மலர், திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்து :]

திறந்து மோந்தன்ன சிறந்து கமழ் நாற்றத்து - அலர்கின்ற பருவத்தே 3 கையாலலர்த்தி மோந்துபார்த்தாலொத்த மிக்குநாறுகின்ற நாற்றத்தினையுடைய,

பெரு பல் குவளை சுரும்பு படு பல் மலர் - பெரிய பலவாகிய செங்கழுநீரிற் சுரும்புகளுக்கு அலர்கின்ற பலபூக்களையும்,

568. [கொண்டன் மலர்ப்புதன் மானப் பூவேய்ந்து :]

கொண்டல் மலர் புதல் மான வேய்ந்து - மழைக்குமலர்ந்த மலரை யுடைய சிறுதூற்றைஒக்கச் சூடி,

பூ - ஏனைப்பூக்களையும்,

பலநிறத்துப்பூக்களை நெருங்கப்புனைதல்பற்றிச் சிறுதூற்றை உவமை கூறினார்.

569 - 72. [நுண்பூ ணாகம் வடுக்கொள முயங்கி, மாயப் பொய்பல கூட்டிக் கவவுக் கரந்து, சேயரு நணியரு நலனயந்து வந்த, விளம்பல் செல்வர் வளந்தப வாங்கி :]

சேயரும் நணியரும் நலன் நயந்து வந்த (571) இள பல் செல்வர் (572) - புறமண்டலத்தாரும் உள்ளூரிலுள்ளாருமாய்த் தம்முடைய வடிவழகை விரும்பிவந்த இளையராகிய பல செல்வத்தையுடையாரை,

பல மாயம் பொய் கூட்டி (570) நுண் பூண் ஆகம் வடு கொள முயங்கி (569)-பல வஞ்சனைகளையுடைய பொய்வார்த்தைகளாலே முதற் கூட்டிக்கொண்டு அவருடைய நுண்ணிய பூண்களையுடைய மார்பைத் தம்மார்பிலே வடுப்படும்படியாக முயங்கிப் பின்னர்,

---

1 விடுபூ : ௩௭ - ஆம் பக்கம் முதலாவது அடிக்குறிப்பைப் பார்க்க.

2 ஒப்பித்து - அலங்கரித்துக்கொண்டு.

3 ௬௩ - ஆம் பக்கம் 5 - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

கவவு கரந்து (570) வளம் தப வாங்கி (572)-அங்ஙனம் [1] அன்புடையார்போலே முயங்கினமுயக்கத்தை அவர் பொருள்தருமளவும் மறைத்து அவருடைய செல்வமெல்லாம் கெடும்படியாக வாங்கிக்கொண்டு,

573 - 4. நுண் தாது உண்டு வறு பூ துறக்கும் மெல் சிறை வண்டு இனம் மான - பூ அலருங்காலமறிந்து அதன் நுண்ணிய தாதையுண்டு தாதற்ற வறுவியபூவைப் பின்னர் நினையாமல் துறந்துபோம் மெல்லிய சிறகையுடைய வண்டின்றிரளையொப்ப,

இது தொழிலுவமம்.

574 - 5. புணர்ந்தோர் நெஞ்சு ஏமாப்ப இன் துயில் துறந்து - தம்மை நுகர்ந்தோருடைய நெஞ்சு கலக்கமுறும்படி அவரிடத்து இனிய கூட்டத்தை நேராகக்கைவிட்டு,

576. பழம் தேர் வாழ்க்கை பறவை போல - பழுமரமுள்ள இடந்தேடிச் சென்று, அவற்றின் பழத்தையே ஆராய்ந்து வாங்கி நுகர்தலைத் தமக்குத் தொழிலாகவுடைய புள்ளினம்போல,

தம்முயிரைப் பாதுகாக்கின்ற வாழ்க்கைத்தொழிலை வாழ்க்கையென்றார்.

577 - 8. [கொழுங்குடிச் செல்வரும் பிறரு மேஎய, மணம்புணர்ந் தோங்கிய வணங்குடை நல்லில் :]

கொழு குடி செல்வரும் பிறரும் மேஎய அணங்கு உடை நல் இல் - வளவிய குடியிற்பிறந்த செல்வரும் அவர்களாற்றோன்றிய பிறசெல்வரும் மேவப்பட்ட இல்லுறை தெய்வங்களையுடைய நன்றாகிய அகங்களில்,

[2] குடிச்செல்வரென்றார், நான்குவருணத்தை; பிறரென்றார், அவர்களாற் றோன்றிய ஏனைச்சாதிகளை.

578 - 9. மணம் புணர்ந்து ஓங்கிய ஆய் பொன் அவிர் தொடி பசு இழை மகளிர் - வரைந்துகொள்ளப்பட்டு உயர்ச்சிபெற்ற ஓடவைத்த பொன்னாற்செய்த விளங்குகின்ற தொடியினையும் பசியபூணினையுமுடைய மகளிர்,

580. ஒள் சுடர் விளக்கத்து - ஒள்ளிய விளக்கினுடைய ஒளியிலே, பலர் உடன் துவன்றி - பலருஞ் சேரநெருங்கி,

581 - 2. நீல் நிற விசும்பில் அமர்ந்தனர் ஆடும் வானவமகளிர் மான - நீலநிறத்தையுடைய ஆகாயத்தே நெஞ்சமர்ந்துவிளையாடும் தெய்வமகளிர் வருத்துமாறுபோல,

---

1 "மெய்படு மன்பி னார்போல் விரும்பினார்க் கருத்துந் தங்கள் ,பொய்படு மின்பம் " திருவிளை. திருநகரப். 47.

2 பெரிய. திருக்குறிப்பு. 99 - 103, திருவிளை. திருநகரங்கண்ட. 45, பார்க்க.

582 - 3. கண்டோர் நெஞ்சு நடுக்கு உறூஉ கொண்டி மகளிர் - தம்மைக் கண்டோருடைய நெஞ்சை வருத்தமுறுவித்துப் பொருள் வாங்குதலையுடைய பரத்தையர்,

584 - 5. [யாம நல்யாழ் நாப்ப ணின்ற, முழவின் மகிழ்ந்தன ராடி :] யாமம் நல் யாழ் நாப்பண் தாழ்பு அயல் கனை குரல் கடுப்ப (560) நின்ற முழவின் மகிழ்ந்தனர் ஆடி - முதற்சாமத்தில் வாசித்தற் குரிய நன்றாகிய யாழ்களுக்கு நடுவே அவற்றிற்கேற்பத் தாழ்ந்து தம் வயிற்செறிந்த ஓசையையொக்க நின்ற முழவாலே மனமகிழ்ந்தாடி,

தாழ்பயற் கனைகுரல் கடுப்ப (560) என்று முன்னர்வந்ததனை இவ் விடத்துக்கூட்டுக.

585 - 6. குண்டு நீர் பனி துறை குவவு மணல் - ஆழ்ந்த நீரினை யுடைய குளிர்ந்த துறையிடத்துக் குவிந்த மணலிலே,

முனைஇ - வெறுத்து,

586 - 7. [மென்றளிர்க், கொழுங்கொம்பு கொழுதி :] கொழு கொம்பு மெல் தளிர் கொழுதி - கொழுவிய கொம்புகளினின்ற மெல்லிய தளிர்களைப் பறித்து,

587 - 8. [நீர்நனை மேவர, நெடுந்தொடர்க் குவளை வடிம்புற வடைச்சி :] குவளை நீர் நனை மேவர நெடு தொடர் வடிம்பு உற 1 அடைச்சி - குவளையை 2 நீர்க்கீழரும்புகளோடே பொருந்துதல்வரக் கட்டின நெடியதொடர்ச்சியை வடிம்பிலே விழும்படி உடுத்து,

589. மணம் கமழ் மனை தொறும் பொய்தல் அயர - மணநாறு கின்ற மனைதோறும் சென்று பொருள் தருதற்குரிய இளையரோடு விளை யாடுதலைச்செய்ய,

அங்ஙனம் விளையாடி வசிகரித்து உறவுகொண்டு பொருள்வாங்கு தல் அவர்க்கு இயல்பு.

வானவமகளிர்மான (582) நெஞ்சுநடுக்குறூஉக் கொண்டிமகளிர் (583) பலருடன்றுவன்றிக் (580) குவவுமணலிலே (586) முழவின் மகிழ்ந்தனராடி (585) அதனைமுனைஇக் (586) குவளையையடைச்சிக் (588) கோதையை (562) விசும்புகமழப் (561) பிறக்கிட்டு (562) இளம் பல்செல்வரைக் (572) கூட்டி (570) முயங்கிப் (569) பின்னர்க் கவவுக் கரந்து (570) வளர்ந்தபவாங்கித் (572) தாதுண்டுதுறக்கும் (573) வண் டினமான (574) இன்றுயில்துறந்து (575) பின்னரும் மிகுநலமெய்திச் (565) சுரும்புபடுபன்மலரையும் (566) எனைப்பூக்களையும் புதன்மான வேய்ந்து (568) புதுமலர் தெருவுடன் கமழத் (564) தொடியை வீசி (563)

1 அடைச்சியென்பதற்குச் செருகியென்று பொருளெழுதுவர் அடி யார்க்கு நல்லார் ; சிலப். ௧௪ : 77.

2 "கீழ்நீர்ச் செவ்வரும்பு" முருகு. 29.

மணங்கமழ் மனைதொறும் (589) பறவைபோலச் (576) சென்று போய் தலயர (589) எனக்கூட்டுக.

செல்வரும் பிறரும் மேவப்பட்ட (577) அணங்குடைநல்ல இல்லிலே மணம்புணர்ந்தோங்கிய (578) பாசிழைமகளிர் (579) ஒண்சுடர் விளக்கத்தே (580) சீறியாழைப் (559) பண்ணுப்பெயர்த்து (560) வீழ்துணைதழீஇ (561) நாணுக்கொள (558) எனக்கூட்டுக.

590 - 91. கணம் கொள் அவுணர் கடந்த பொலம் தார் மாயோன் மேய ஓணம் நல் நாள் - திரட்சியைக்கொண்ட அவுணரைவென்ற பொன்னாற்செய்த மாலையினையுடைய [1] மாமையையுடையோன் பிறந்த ஓணமாகிய நன்னாளில் ஊரிலுள்ளாரெடுத்த விழவிடத்தே,

592 - 5. [கோணந் தின்ற வடுவாழ் முகத்த, சாணந் தின்ற சமந் தாங்கு தடக்கை, மறங்கொள் சேரி மாறுபொரு செருவின், மாறா துற்ற வடுப்படு நெற்றி :]

மறம் கொள் சேரி மாறு பொரு செருவில் (594) மாறாது உற்ற வடு படு நெற்றி (595) - இற்றைநாட் போர்செய்துமென்றுகருதி மறத்தைக் கொண்டிருக்கின்ற தெருவுகளில் தம்மிற்றாம் மாறாய்ப்பொருகின்ற போரின்கண்ணே நின்ற அடிமாறாமையாற்பட்ட [2] வடுவழுந்தின நெற்றியினையும்,

596. சுரும்பு ஆர் கண்ணி பெரு புகல் மறவர் - சுரும்புகள்நிறைந்த [3] போர்ப்பூவினையும் பெரியவிருப்பத்தினையுமுடைய மறவர்,

அத்திருநாளிற்பொரும் [4] சேரிப்போர்கூறினர், அவ்வூர்க்கு இயல்பென்று.

597. [கடுங்களி றோட்டலின் :] [5] கோணம் தின்ற வடு ஆழ் முகத்த (592) சாணம் தின்ற சமம் தாங்கு தட கை (593) கடு களிறு ஓட்டலின் - தோட்டி வெட்டின வடு அழுந்தின முகத்தையுடையவாய்க் கொலைபழக்கும் போர்யானை பலகாலுமெடுத்தலால் தழும்பிருந்த

1 மாமை - கருமை.

2 "துள்ளிவரு செங்கையொடு முன்கைபிடர் நெற்றியொடு சூடமென வெண்ணுபடையால்............மல்லமர் தொடங்கி யுறவே" (வி. பா. அருச்சுனன் தவநிலை. 110) என்பதனால் நெற்றி வடுப்படுதலின் காரணம் உணரப்படும்.

3 போர்ப்பூ - தும்பை ; "தும்பை - போர்ப்பூ" பு. வெ. 241, உரை.

4 சேரிப்போர் : "கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனிற், கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தா, னாதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்" தே. திருஞா.

5 கோணம் - தோட்டி ; மணி. கஅ : 163.

போரைத்தாங்கும் பெரியகையினையுடைய கடியகளிற்றை ஓட்டுகையினாலே,

597-8. [காணுந ரிட்ட, நெடுங்கரைக் [1] காழக நிலம்பரலுறுப்ப :] காணுநர் நெடு கரை காழகம் இட்ட பரல் நிலம் உறுப்ப - அவ்வியானைக்கு முன்னேயோடி அதன் விசையைக்காணும் பரிக்காரர் அவ்வியானை பிடித்துக்கொள்ளுங்காலத்து மேல்வாராமல் அஞ்சி மீளுதற்குச் சமைப்பித்து நெடிய கரையையுடைய நீலநிறத்தையுடையபுடைவைகளிலே வைத்துச் சிந்தின கப்பணம் நிலத்தேகிடந்து கால்களைப் [2] பொதுக்கும்படி,

நெருஞ்சிமுள்ளுப்போல முனைபட இரும்பால் திரளச்சமைத்துத் தூவற்கு யானையஞ்சுமென்று அவர்மடியிலேவைத்த கப்பணத்தைப் பரல் போறலிற் பரலென்றார்; [3] "வேழங், காய்ந்தனன் கடுக வுந்திக் கப்பணஞ் சிதறி னானே" என்றார்பிறரும்.

599. கடு கள் தேறல் மகிழ் சிறந்து திரிதர - கடியகட்டெளிவையுண்டு மகிழ்ச்சிமிக்குத் திரிதலைச்செய்ய,

ஓணநாளிற் (591) பொருது வடுப்படும் நெற்றி (595) முதலியவற்றையுடைய மறவர் (596) மகிழ்சிறந்து (599) பரலுறுப்பத் (598) திரிதர (599) எனக்கூட்டுக.

600. கணவர் உவப்ப புதல்வர் பயந்து - தம்கணவர் [4] இம்மை மறுமையிற் பெரும்பயன் பெற்றேமென்று மகிழும்படி பிள்ளைகளைப் பெற்று,

---

1 காழகம் - நீலநிற உடை; இது காளகமெனவும் வழங்கும்; "காளக வுடையினள் காளி கூறுவாள்" பாகவதம், ௧௦. 1 : 81.

2 பொதுத்தல் - துளைத்தல்; "அண்டத் தைப்பொதுத் தப்புறத் தப்பினு லாடும்" (கம்ப. இரணியன். 4); இச்சொல் பொதிர்த்தலெனவும் வழங்கும்; "கழைபொதிர்ப்பத் தேன்சொரிந்து" சீவக. 2778.

3 சீவக. 285.

4 "இம்மை யுலகத் திசையொடும் விளங்கி, மறுமை யுலகமு மறுவின் றெய்துப, செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச், சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப், பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம், வாயே யாகுதல்" (அகநா. ௬௬ : 1-6) என்பதும், "உரிமை மைந்தரைப் பெறுகின்ற துறுதுயர் நீங்கி, இருமை யும்பெறற் கென்பது பெரியவரியற்கை" (கம்ப. உ. மந்திரப். 63) என்பதும், "இவையிரண்டுபாட்டானும் நன்மக்களைப்பெற்றார் பெறும் மறுமைப்பயன் கூறப்பட்டது", "இவை மூன்றுபாட்டானும் இம்மைப்பயன் கூறப்பட்டது" (குறள். 63, 66, பரிமேல்.) என்பனவும் இங்கே அறியத்தக்கன.

601. பணைத்து ஏந்து இள முலை அமுதம் ஊற - பாலால் இடங் கொண்டேந்திய இளையமுலை [1] பால்சுரக்கும்படி,

602 - 3. [புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு, வளமனை மகளிர் குளநீ ரயர :]

புலவு புனிறு தீர்ந்து குளம் நீர் அயர - புலாலூற்றத்தையுடைய ஈன் றணிமைநீங்கித் தெய்வத்தினருளால் ஒரிடுக்கணுமற்றுக் குளத்துநீரிலே குளிக்கையினாலே,

[2] கடு சூல் மகளிர் பேணி (609) - முதற்சூல்கொண்டமகளிர் இவ் வாறே இடுக்கணின்றிப் புதல்வரைப் பயத்தல்வேண்டுமென்று தெய்வத் தைப் பரவிக் குறை தீர்ந்தபின்,

பொலிந்த சுற்றமொடு - மிக்க சுற்றத்தாருடனே,

வளம் மனை மகளிர் - செல்வத்தையுடைய மனைமகளிர்,

இல்லிருக்குங் குடிப்பிறந்த மகளிர்.

604. திவவு மெய் நிறுத்து செவ்வழி பண்ணி - வலிக்கட்டினை யாழிற்றண்டிலேகட்டிச் செவ்வழியென்னும் பண்ணைவாசித்து,

திவவுக் கூறவே அதினரம்பும் கூறினார்.

605. குரல் புணர் நல் யாழ் முழவோடு ஒன்றி - குரலென்னுநரம்பு கூடின வன்னம் நன்றாகிய யாழுடனே முழவும்பொருந்தி,

606. நுண் நீர் ஆகுளி இரட்ட - மெல்லியநீர்மையினையுடைய சிறு பறை யொலிப்ப,

பலவுடன் - பூசைக்குவேண்டும் பொருள்கள் பலவற்றுடனே,

607. ஒள் சுடர் விளக்கம் முந்துற - ஒள்ளிய சுடர்விளக்கம் முற்பட,

மடையொடு - பாற்போனகமுதலிய சோறுகளை,

608. நல் மா மயிலின் மென்மெல இயலி - நன்றாகிய பெருமையை யுடைய மயில்போலே மெத்தென மெத்தென நடந்து,

609. [கடுஞ்சூன் மகளிர் பேணிக் கைதொழுது :]

கை தொழுது - கையாற்றொழுது,

610. [பெருந்தோட் சாலினி மடுப்ப வொருசார் :]

---

1 பால்சுரக்கும்படி நீரயர்ந்தாரென்றார், ஈன்றவுடன் மகளிர்க்குப் பால் சுரவாதாதலின்; இது, "பால்சொரியும் பருவத்தளவும் பொரு ளாய்ப் பாலை வலிய வாங்கியென்க; என்றது மகப்பயந்தோர்க்குப் பயந்த பொழுதே பால் சுரவாதாதலால்" (சீவக. 305, ந.) என்பதனால் உண ரப்படும்.

2 கசுச - ஆம்பக்கம், 2-ம் அடிக்குறிப்பைப் பார்க்க.

பெருந்தோள் சாலினி மடுப்ப - பெரிய தோளினையுடைய [1] தேவராட்டியோடே மடுப்ப,

வளமனைமகளிர் சிலர் (603) புதல்வர்ப்பயந்து (600) புனிறுதீர்ந்து (602) குளநீராடுதலாலே (603) அதுகண்டு கடுஞ்சூன்மகளிர் பேணிக் (609) குறைதீர்ந்தபின் பொலிந்தசுற்றத்தோடே (602) பலவுடன் (606) சாலினியோடே (610) பண்ணி (604) ஒன்றி (605) இரட்ட (606) இயலிச்சென்று (608) கைதொழுது (609) மடையை (607) மடுப்ப (610) எனக்கூட்டுக.

610. ஒருசார் - ஒருபக்கம்,

611. அருகடி வேலன் முருகொடு வளைஇ - அரிய [2] அச்சத்தைச் செய்யும் வேலன் இவ்விடுக்கண் முருகனால்வந்ததெனத் தான்கூறிய சொல்லின்கண்ணே கேட்டோரை வளைத்துக்கொண்டு,

[3] பிள்ளையார்வேலை யெடுத்தலின், வேலனென்றார். என்றது, [4] கழங்கு வைத்துப் பிள்ளையாரால்வந்ததென முற்கூறிப் பின் வெறியாடுவனென்று ஆடும்முறைமை கூறிற்று.

612. அரி கூடு இன் இயம் கறங்க-அரித்தெழும் ஓசையையுடைய [5] சல்லி கரடி முதலியவற்றோடேகூடின இனிய எனவாச்சியங்கள் ஒலியா நிற்க,

---

1 தேவராட்டி - தெய்வமேறப் பெற்றவள்; "காடுபலி மகிழ வூட் டத், தலைமரபின் வழிவந்த தேவ ராட்டி தனையழைமின்" பெரிய. கண்ணப்ப. 47.

2 அச்சத்தைச் செய்யுமென்றது தலைவிக்கு அச்சத்தைச் செய்தலைக் குறிப்பித்தபடி; "தலைவி அஞ்சவேண்டியது இருவரும் ஒட்டிக்கூறாமல் தெய்வந்தான் அருளுமென்று கோடலின்" (தொல். களவு. சூ. 24, ந.) என்பதை உணர்க.

3 வேலனென்னும் பெயர்க்காரணம், முருகு. 222-ஆம் அடியின் உரையிலும் இவ்வாறே கூறப்பட்டது.

4 கழங்கு - கழற்கொடிக்காய்; வேலன்கழங்குவைத்துப் பார்த்த லும் பிறவும், "கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரும், ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்" (தொல். களவு. சூ. 24) என்பதனாலும், அதன் உரையாலும், "பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி, மலைவான் கொண்ட சினைஇய வேலன், கழங்கினா னறிகுவ தென்றால்" (ஐங். உ௪அ) என்பதனாலும் உணரப்படும்.

5 சல்லி - இது சல்லிகையெனவும் வழங்கும்; சல்லென்ற ஓசையுடைத்தாதலால் இப்பெயர் பெற்றதென்பர். கரடி - இது கரடிகையெனவும் வழங்கும்; கரடி கத்தினாற்போலும் ஓசையுடைமையின் இப்பெயர் பெற்ற தென்பர். இவ்விரண்டும் உத்தமக்கருவிகளைச் சார்ந்தவை; சிலப். ௩: 27, அடியார். பார்க்க.

612-4. [நேர்நிறுத்துக், கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின், சீர்மிகு நெடுவேட் பேணி :]

கார் மலர் குறிஞ்சி சூடி - கார்காலத்தான் மலரையுடையவாகிய 1 குறிஞ்சியைச்சூடி,

கடம்பின் சீர் மிகு நெடுவேள் நேர் நிறுத்து பேணி - கடம்பு சூடுதலால் அழகுமிகுகின்ற முருகனைச் செவ்விதாகத் தன்மெய்க்கண்ணே நிறுத்தி வழிபடுகையினாலே,

தழூஉ பிணையூஉ - மகளிர் தம்முட்டழுவிக் கைகோத்து,

615. மன்றுதொறும் நின்ற குரவை - மன்றுகடோறும்நின்ற குரவைக் கூத்தும்,

சேரிதொறும் - சேரிகடோறும் நின்ற,

616. உரையும் - புனைந்துரைகளும்,

பாட்டும் - பாட்டுக்களும்,

ஆட்டும் - பலவகைப்பட்ட கூத்துக்களும்,

விரைஇ - தம்மிற் கலக்கையினாலே,

617. வேறு வேறு கம்பலை - வேறுவேறாகிய ஆரவாரம்,

வெறி கொள்பு மயங்கி - ஒழுங்குகொண்டு மயங்கப்பட்டு,

618. பேர் இசை 2 நன்னன் 3 பெறும் பெயர் நன்னாள் - பெரிய புகழையுடைய நன்னன்கொண்டாடுகின்ற பிறந்தநாளிடத்து,

அவன்பெயரை அந்நாள் பெறுதலின், பெயரைப்பெற்ற நன்னாளென்றார்.

619. சேரி விழவின் ஆர்ப்பு எழுந்தாங்கு - சேரிகளிலுள்ளார் கொண்டாடுகின்ற விழாவாலே ஆரவாரமெழுந்தாற்போல,

620. முந்தை யாமம் சென்ற பின்றை - முற்பட்டசாமம் நடந்த பின்பு,

கொண்டிமகளிர் (583) பொய்தலயரப் (589) பாசிழைமகளிர் (579) வீழ்துணைதழீஇ (561) நாணுக்கொள (558) மறவர் (596) மகிழ்சிறந்துதிரிதரக் (599) கடுஞ்சூன்மகளிர் கைதொழுது (609) மடுப்ப ஒருசார் (610) நெடுவேட் பேணுகையினாலே (614) மன்றுதொறுநின்ற குரவையும் சேரிதொறுநின்ற (615) உரையும் பாட்டும் ஆட்டும் விரவுகையினாலே (616) வேறுவேறுபட்ட கம்பலை (617) சேரிவிழவின் ஆர்ப்பெழுந்தாங்கு (619) வெறிகொள்பு மயங்கப்பட்டு (617) முந்தையாமஞ் சென்றபின்றை (620) எனக்கூட்டுக.

ஒருசார் (610) விரைஇ (616) என்க.

---

1 குறிஞ்சி - குறிஞ்சிப்பூ,

2 நன்னன் - ஒரு குறுநிலமன்னன்.

3 சில பிரதிகளில், 'பெரும்பெயர் நன்னாள்' என்று இருந்தது.

621. பணிலம் கலி அவிந்து அடங்க - சங்குகள் ஆரவாரமொழிந்து அடங்கிக்கிடக்க,

621-2. காழ் சாய்த்து நொடை நவில் நெடு கடை அடைத்து - சட்டக்காலை வாங்கிப் பண்டங்களுக்கு விலைகூறும் நெடியகடையை யடைத்து,

622-3. மட மதர் ஒள் இழை மகளிர் பள்ளி அயர - மடப்பத்தினையும் செருக்கினையும் ஒள்ளிய அணிகலங்களையுமுடைய மகளிர் துயிலுதலைச்செய்ய,

624-6. [நல்வரி யிறாஅல் புரையு மெல்லடை, யயிருருப் புற்ற வாடமை விசயங், கவவொடு பிடித்த வகையமை மோதகம் :]

விசயம் ஆடு அமை நல் வரி இறாஅல் புரையும் மெல் அடை - பாகிலே சமைத்தலமைந்த நல்லவரிகளையுடைய தேனிறாலையொக்கும் மெல்லிய அடையினையும்,

கவவொடு அயிர் பிடித்த வகை அமை உருப்பு உற்ற மோதகம் - பருப்பும் தேங்காயுமாகிய [1] உள்ளீடுகளோடே [2] கண்டசருக்கரைகூட்டிப்பிடித்த வகுப்பமைந்த வெம்மைபொருந்தின அப்பங்களையும்,

627. தீ சேறு [3] கூவியர் தூங்குவனர் உறங்க - இனிய பாகோடு சேர்த்துக்கரைத்த மாவினையுமுடைய அப்பவாணிகரும் அவற்றோடே யிருந்து தூங்குவனராயுறங்க,

628. விழவின் ஆடும் வயிரியர் மடிய - திருநாளின்கண்ணே கூத்தாடுங் கூத்தர் அதனையொழிந்து துயில்கொள்ள,

629. பாடு ஆன்று அவிந்த பனி கடல் புரைய - ஒலிநிறைந்தடங்கின குளிர்ந்த கடலையொக்க,

630. பாயல் வளர்வோர் கண் இனிது மடிப்ப - படுக்கையிலே துயில்கொள்ளுவோர் கண் இனிதாகத் துயில்கொள்ள,

631. [பானாட் கொண்ட கங்கு லிடையது :]

பால் நாள் கொண்ட கங்குல் - பதினைந்தாநாழிகையை முடிவாகக்கொண்ட கங்குல்,

632-3. [பேயு மணங்கு முருவுகொண் டாய்கோற், கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப :]

பேயும் அணங்கும் உருவு கொண்டு கழுதொடு கொட்ப-பேய்களும் வருத்துந்தெய்வங்களும் வடிவுகொண்டு கழுதுடனே சுழன்றுதிரிய,

கழுது - பேயில் ஒருசாதி.

---

1 உள்ளீடு - உள்ளே இடப்பெற்ற பொருள்கள்.

2 கண்டசருக்கரை - கற்கண்டு; ஒருவகைச்சருக்கரையுமாம்.

3 கூவியர் - அப்பவாணிகர்; பெரும் ௩௭௭. 377, ந.

ஆய் கோல் கூற்றம் கொல் தேர் அச்சம் அறியாது ஏமமாகிய (652) மதுரை (699) யெனக்கூட்டி, யாக்கை நிலையாதென்றறிந்து மறுமைக்கு வேண்டுவன செய்துகொண்டமையின், அழகிய கோலையுடைய கூற்றத்தின் கொலைக்கு அஞ்சாமற் காவலுண்டாயிருக்கின்ற மதுரை யென்க.

1 "கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார், துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார், வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம், வருங்காற் பரிவ திலர்" என்றார் பிறரும். கொல்தேர் - காலசக்கரம்.

634. இரு பிடி மேஎந்தோல் அன்ன இருள் சேர்பு - கரியபிடியின் கண்ணே மேவின தோலையொத்த கருமை தமக்கு இயல்பாகச்சேரப்பட்டு,

இருள் - கருஞ்சட்டையுமாம்.

635. கல்லும் மரனும் துணிக்கும் கூர்மை நிலன் அகழ் உளியர் (641) - கல்லையும் மரத்தையுமறுக்கும் கூர்மையையுடைய நிலத்தையகழும் உளியையுடையராய்,

நிலத்தை அகழுங்காலத்து இடைப்பட்ட கற்களுக்கும் மரங்களுக்கும் வாய் மடியாதென்றார்.

636. தொடலை வாளர் - தூக்கிட்ட வாளினையுடையராய்,

தொடுதோல் அடியர் - செருப்புக்கோத்த அடியினையுடையராய்,

637 - 41. [குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச், சிறந்த கருமை நுண்வினை நுணங்கற, னிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர், மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர், நிலனக ழுளியர் :]

சிறந்த கருமை நுண் வினை நுணங்கு அறல் (638) - மிக்க கருமையினையுடைய நுண்ணிய தொழில்களையுடைய நுண்மை தன்னிடத்தே பற்றுதலையுடையது,

என்றது இறைமுடிந்த சேலையென்றவாறு ; ஆகுபெயர்.

குறங்கிடை பதித்த கூர் நுனை குறு பிடி (637) - அச்சேலைகட்டின மருங்கிற் குறங்கிடைத் தெரியாமற் கிடக்கும்படியழுத்தின கூரிய முனையினையுடைய 2 சிலசொட்டை,

நிறம் கவர்பு புனைந்த நீலம் கச்சினர் (639) - பலநிறங்களைத் தன்னிடத்தே கைக்கொண்டு கைசெய்யப்பட்ட நீலநிறத்தையுடைய கச்சினையுடையராய்,

1 நாலடியார், 35.

2 சிலசொட்டை - ஒருவகை வளைவுக்கத்தி ; உடைவாளுமாம் : "சோட்டைவாள் பரிசை", "உகிரெ னும்பெரும் பெயர்பெற்ற சோட்டைகளும்" வி. பா. கிருட்டின. 101, பதினேழாம்போர். 156.

என்றது, கட்டின சேலையிடத்தே செருகித் துடையுடனே சேர்ந்து கிடக்குஞ் சொட்டையின்மேலே கட்டின நீலக்கச்சினரென்றவாறு. அது தெரியாமல் துடையுடனே சேர்ந்துகிடத்தலிற் குறங்கிடைப் பதித்த வென்றார்.

மெல் நூல் ஏணி பல் மாண் சுற்றினர் (640) - மெல்லிய நூலாற் செய்த ஏணியை அரையிலே பலவாய் மாட்சிமைப்படச்சுற்றிய சுற்றினை யுடையராய்,

மதிற்றலையிலே உள்ளேவிழவெறிந்தாற் கைபோல மதிலைப்பிடித் துக்கொள்ளும்படி இரும்பாற்சமைத்ததனைத் தலையிலேயுடைய நூற் கயிற்றை உள்ளே விழவெறிந்து அதனைப் புறம்பேநின்று பிடித்துக் கொண்டு அம்மதிலை ஏறுவாராகலின், ஏணியென்றார்.

641. கலன் நசைஇ கொட்கும் - பேரணிகலங்களை நச்சுதலாலே அவற்றை எடுத்தற்கு இடம்பார்த்துச் சுழன்றுதிரியும்,

642. கண் மாறு ஆடவர் ஒடுக்கம் ஒற்றி - விழித்தகண் இமைக்கு மளவிலே மறைகின்ற கள்வர் ஒதுங்கியிருக்கின்ற இடத்தை [1] வேய்த்து,

செருப்பைத்தொட்டுக் (636) கச்சைக்கட்டி (639) நூலேணியைச் சுற்றி (640) உளியையெடுத்து (635) வாளைப்பிடித்துக் (636) கொட்குங் (641) கள்வரென வினையெச்ச வினைக்குறிப்புமுற்று வினையெச்சமாய் நிற்குமாறு, [2] "முன்னத்தி னுணருங் கிளவியு முளவே" என்னுஞ்சூத் திரத்தானுணர்க.

643. வய களிறு பார்க்கும் வய புலி போல ஒற்றி (642) - வலிய களிற்றை இரையாகப்பார்க்கும் வலிய புலியைப்போலே வேய்க்கை யினாலே,

644. துஞ்சா கண்ணர் - துயில்கொள்ளாத கண்ணையுடையராய்,

அஞ்சா கொள்கையர் - பேய்முதலியவற்றிற்கு அஞ்சாத கோட் பாட்டையுடையராய்,

645. அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் - களவிற்றொழிலையறிந்த வர்களாலே புகழப்பட்ட [3] களவிற்றொழிலை ஆளுந்தன்மையுடையராய்,

645 - 7. [செறிந்த, நூல்வழிப் பிழையா நுணங்குநுண் டேர்ச்சி யூர்காப் பாளர்]: நுணங்கு செறிந்த நூல் வழி பிழையா நுண் தேர்ச்சி ஊர் காப்பாளர் - நுண்மைசெறிந்த நூலின்வழியைத்தப்பாத நுண்ணிய ஆராய்ச்சியையுடைய ஊரைக் காத்தற்றொழிலை ஆளுதலையுடையராய்,

---

1 வேய்த்து - பிறர்தெரிந்து கொள்ளாதபடி அறிந்து.

2 தொல். எச்சவியல், சூ. 63.

3 காவலர் களவினை யறிந்திருந்தாரென்பது இதனாற் புலப்படும்; "களவுங் கற்று மற" என்னும் பழமொழி இங்கே அறியத்தக்கது.

1 களவுகாண்டற்கும் காத்தற்குங்கூறிய நூல்கள் போவாரென்றார்.
2 நூல்வழிப்பிழையா ஊரெனக்கூட்டி நூலிற்சொன்னபடி சமைந்தவூரென்றுமாம்.

ஊக்க அரு கணையினர் - தப்பக்கருதிமுயல்வார்க்குத் தப்புதற்கரிய அம்பினையுடையராய்,

648-9. தேர் வழங்கு தெருவில் நீர் திரண்டு ஒழுக மழை அமைந்து உற்ற அரை நாள் அமயமும் - தேரோடுந்தெருவின்கண்ணே நீர்திரண்டொழுகும்படி மழைமிகப்பெய்த நடுநாளாகிய பொழுதிலும்,

650. அசைவிலர் எழுந்து நயம் வந்து வழங்கலின் - காவலில் தப்பிலராய்ப்போந்து விருப்பந்தோன்றி உலாவுகையினாலே,

651. [கடவுள் வழங்குங் கையறு கங்குலும் :] இடையது (631) கடவுள் வழங்கும் கை அறு கங்குல் - இரண்டாஞ் சாமத்திற்கும் நான்காஞ் சாமத்திற்கும் நடுவிடத்ததாகிய தெய்வங்களுலாவுஞ் செயலற்ற கங்குல்,

உம்மையை யாமமுமெனப் பின்னேகூட்டுக.

652-3. [அச்ச மறியா தேம மாகிய, மற்றை யாமம் பகலுறக் கழிப்பி :]

மற்றையென்பதனை முந்தையாமஞ் சென்றபின்றை (620) யென்பதன்பின்னும் மூன்றாஞ்சாமத்திறுேடுங் கூட்டுக.

அச்சமறியாதேமமாகிய என்றும், மற்றையென்றும் யாமமென்றும் பிரித்து முன்னே கூட்டுக.

பகல் உற கழிப்பி - இங்ஙனம் பகுத்தலுறும்படி போக்கி,

முந்தை யாமஞ் சென்ற பின்றை (620) மற்றைப் (653) பானாட்கொண்ட கங்குல் (631) யாமத்தையும் மற்றை (653) இடையதாகிய (631) கடவுள்வழங்குங் கங்குல் (651) யாமத்தையும் (653) கலியவிந்தடங்கப் (621) பள்ளியயர (623) உறங்க (627) வயிரியர்மடியப் (628) பேயும் அணங்கும் உருவுகொண்டு (632) கழுதொடுகொட்ப (633) ஊர்

---

1 களவு காண்டற் குரியநூலைக் கரவடசாத்திரமென்பர் தக்கயாகப்பரணி உரையாசிரியர். இந்நூல் தந்திர கரணமென்றும் ஸ்தேய சாஸ்திரமென்றும் வழங்கப்படும். இதனைச் செய்தவர் கர்ணீஸுத ரென்பவர்.

2 நூல் - சிற்பநூல்; "நூலறிபுலவோர் - சிற்பநூலை யறிந்த தச்சர்" (நெடுநல். 76, ந.); "நுண்ணிதி னுணர்ந்தோ ருணர்தருஞ் சிற்ப நூலறி புலவனை" (வி. பா. இந்திரப். 10); "நூலோர் சிறப்பின் ........மாடம்" (சிலப். கச : 97) என்பதன் உரையில் அரும்பதவுரையாசிரியர், 'மயமதம் அறிவாராற் புகழ்ச்சியையுடைய மாடமென்றுமாம்' என்றெழுதியதனால் மயமதமென்னும் நூலொன்றுண்மை பெறப்படும்.

காப்பாளர் (647) புலிபோலக் (643) கண்மாறுடவர் ஒடுக்கம் ஒற்றுகை யினாலே (642) கண்ணராய்க் கொள்கையராய் (644) ஆண்மையராய்க் (645) கணையராய் (647) அரைநாளமயமும் (649) எழுந்து நயம்வந்து வழங்கலிற் (650) பனிக்கடல்புரையப் (629) பாயலில்வளர்வோர் கண்இனிதுமடிப்பப் (630) பகலுறக்கழிப்பி (653) எனமுடிக்க.

இங்ஙனம் கழிக்கின்றது, இராப்பொழுதென்றுணர்க.

654. [போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கை :] பிணி விட்ட போது கமழ் நறு பொய்கை - தளையவிழ்ந்த பூக்கள் நாறும் நறிய 1 பொய்கைகளிலே,

655. [தாதுண் டும்பி போதுமுரன் றாங்கு :] போது தாது உண் தும்பி முரன்றாங்கு - அப்பூக்களில் தாதையுண்ணுந்தும்பிகள் பாடினாற் போல,

656. [ஓத லந்தணர் வேதம் பாட :] வேதம் ஓதல் அந்தணர் பாட - வேதத்தை முற்ற ஓதுதலையுடைய அந்தணர் வேதத்தில் தெய்வங்களைத் துதித்தவற்றைச் சொல்ல,

657 - 8. [சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி, யாழோர் மருதம் பண்ண :] யாழோர் சீர் இனிது கொண்டு நரம்பு இனிது இயக்கி மருதம் பண்ண - யாழோர் தாளவறுதியை இனிதாக உட்கொண்டு நரம்பை இனிதாகத்தெறித்து 2 மருதத்தை வாசிக்க,

658 - 9. காழோர் கடு களிறு கவளம் கைப்ப - பரிக்காரர் கடிய களிற்றைக் கவளத்தைத் 3 தீற்ற,

659 - 60. நெடு தேர் பணை நிலை புரவி புல் உணா தெவிட்ட - நெடிய தேரிலே பூணும் பந்தியில் நிற்றலையுடைய குதிரைகள் புல்லாகிய உணவைக் குதட்ட,

661. பல் வேறு பண்ணியம் கடை மெழுக்கு உறுப்ப - பண்டம் விற்பார் பலவாய் வேறுபட்ட பண்டங்களையுடைய கடைகளை மெழுகுதலைச்செய்ய,

662. கள்ளோர் களி நொடை நுவல - கள்ளைவிற்போர் களிப்பினையுடைய கள்ளிற்கு விலைசொல்ல,

களி : ஆகுபெயர்.

---

1 பொய்கை - மானிடராக்காத நீர்நிலை; சீவக. 337, ந.

2 மருதம் காலைப்பண் என்பது, புறநானூறு, 149-ஆம் செய்யுளாலும், சீவக. 1991-ஆம் செய்யுளாலும் அறியப்படும்.

3 தீற்ற - உண்பிக்க; "தீற்றாதோ நாய்நட்டா னல்ல முயல்" (பழ. 14); தீற்றென்பது காரிததாது வென்பர்; வீரசோ. தாதுப். சூ. 6.

662 - 3. இல்லோர் நயந்த காதலர் கவவு பிணி துஞ்சி - கற்புடை மகளிர் தாங்கள் விரும்பின கணவருடைய முயக்கத்திற் பிணிப்பாலே துயில்கொண்டு,

664. புலர்ந்து விரி விடியல் எய்த விரும்பி - இருள்மாய்ந்து கதிர் விரிகின்ற விடியற் காலத்தைப் பெறுகையினுலே அக்காலத்து இல்லத்திற்செய்யத் தகுவனவற்றைச் செய்தற்குவிரும்பி,

665. கண் பொரா எறிக்கும் மின்னு கொடி புரைய-கண்ணை வெறியோடப்பண்ணிவிளங்கும் மின்னொழுங்கை யொப்ப,

666. ஒள் பொன் அவிர் இழை தெழிப்ப இயலி - ஒள்ளிய பொன்ஞற் செய்துவிளங்குஞ் சிலம்புமுதலியன ஒலிப்பப் புறம் போதுகையினுலே,

667. திண் சுவர் நல் இல் கதவம் கரைய - திண்ணியசுவர்களையுடைய நல்ல அகங்களிற் கதவுகள் ஒலிப்ப,

668 - 9. உண்டு மகிழ் தட்ட மழலை நாவில் பழ செருக்காளர் தழங்கு குரல் தோன்ற - கள்ளையுண்டு களிப்பினைத் தம்மிடத்தே தடுத்துக்கொண்ட மழலைவார்த்தையையுடைய நாவினையுடைய பழையகளிப்பினையுடையாருடைய முழங்குகின்ற குரல்கள் தோன்ற,

670. சூதர் வாழ்த்த மாகதர் நுவல - நின்றேத்துவார்வாழ்த்த இருந்தேத்துவார் புகழைச்சொல்ல,

671. வேதாளிகரொடு நாழிகை இசைப்ப - வைதாளிகர் தத்தம் துறைக்குரியனவற்றையிசைப்ப நாழிகைசொல்லுவார் நாழிகைசொல்ல,

நாழிகை : ஆகுபெயர்.

672. இமிழ் முரசு இரங்க - ஒலிக்கின்ற [1] பள்ளியெழுச்சிமுரசு ஒலிப்ப.

ஏறு மாறு சிலைப்ப - ஏறுகள் தம்முள்மாறுபட்டு முழங்க,

673. பொறி மயிர் வாரணம் வைகறை இயம்ப - பொறியினையுடைய மயிரினையுடைய கோழிச்சேவல் விடியற்காலத்தை அறிந்துகூவ,

674 - 5. யானையங்குருகின் சேவலொடு காமர் அன்னம் கரைய - வண்டாழ்ங்குருகினுடைய சேவல்களோடே விருப்பத்தையுடைய அன்னச்சேவல்களும் தமக்குரிய பேடைகளை யழைக்க,

அணி மயில் அகவ - அழகியமயில்கள் பேடைகளை யழைக்க,

676. பிடி புணர் பெரு களிறு முழங்க - பிடியோடேகூடின பெரிய யானைகள் முழங்க,

676 - 7. [முழுவலிக், கூட்டுறை வயமாப் புலியொடு குழும :] வய மா கூடு உறை முழு வலி புலியொடு குழும - கரடி முதலிய வலிய

---

1 மதுரைக். 232-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

விலங்குகள் கூட்டிலேயுறைகின்ற மிக்கவலியையுடைய புலியுடனே முழங்க,

678. வானம் நீங்கிய நீல் நிறம் விசும்பின் - 1 ஆகாயம் தனக்குவடிவின்றென்னும் தன்மைநீங்குதற்கு மேகபடலத்தால் நீலநிறத்தையுடைய ஆகாயத்தின்கண்ணே,

இனிச் செக்கர்வானம்போன விசும்பென்பாருமுளர்.

679. மின்னு நிமிர்ந்தனையர் ஆகி - மின்னு நுடங்கின தன்மையினையுடையராய்,

நறவு மகிழ்ந்து - மதுவையுண்டு,

680-81. மாண் இழை மகளிர் புலந்தனர் பரிந்த பரூஉ காழ் ஆரம் சொரிந்த முத்தமொடு - மாட்சிமைப்பட்ட பேரணிகலங்களையுடைய மகளிர் கணவரோடே புலந்தனராய் அறுத்த பருத்தலையுடைய வடமாகிய ஆரஞ்சொரிந்த முத்தத்தோடே,

மகளிர் மகிழ்ந்து புலந்தனராய்ப் பரிந்த முத்தமென்க.

682. [பொன்சுடு நெருப்பி னிலமுக் கென்ன :] பொன் சுடு நெருப்பு உக்க நிலம் என்ன - பொன்னையுருக்குகின்ற நெருப்புச் சிந்தின நிலம்போல,

என்றது, கரியும் தழலும் பொன்னுஞ் சிந்திக்கிடந்தாற்போல வென்றதாம்.

683. [அம்மென் குரும்பைக் காய்படு பிறவும் :]

பிறவும் - முத்தொழிந்த மாணிக்கமும் மரகதமும் பொன்னும் மணிகளும்,

அம் மென் குரும்பை காய் - அழகிய மெத்தென்ற இளைதாகிய பச்சைப் பாக்கும்,

படு - விழுந்து,

684. தரு மணல் முற்றத்து - கொண்டுவந்திட்ட மணலையுடைய முற்றத்தே,

அரி ஞிமிறு ஆர்ப்ப - வண்டுகளும் ஞிமிறுகளும் ஆரவாரிப்ப,

685. மெல் பூ செம்மலொடு நல் கலம் சீப்ப - மெல்லிய பூவாடல்களுடனே நல்ல பூண்களையும் பெருக்கிப்போகடும்படி,

முத்தத்தோடே (681) பிறவும் காயும் (683) முற்றத்தே விழுகையினாலே (684) அவற்றையும் செம்மலோடே கலங்களையும் (685) அரிஞிமிறார்ப்பச் (684) சீப்ப (685) வென்க.

---

1 " அருக்ககனப் பரப்பு " (தக்க. 474) என்பதும், ' மகாதேவர்க்குப் பின்பு லோகத்தில் உயர்ந்த பொருளாயுள்ளது ஆகாசமொன்றுமே ; அஃது அருபியாகும் ; இஃது எல்லாச் சமயிகளுக்கும் ஒக்கும் ' என்ற அதன் உரையும் இங்கே அறிதற்குரியன.

686. இரவு தலை பெயரும் ஏமம் வைகறை - இராக்காலம் தன்னிடத்தினின்றும் போகின்ற எல்லாவுயிர்க்கும் பாதுகாவலாகிய விடியற்காலத்தே,

பாடப் (656) பண்ணைக் (658) கைப்பத் (659) தெவிட்ட (660) உறுப்ப (661) நுவலக் (662) கரையத் (667) தோன்ற (669) வாழ்த்த நுவல (670) இசைப்ப (671) இரங்கச் சிலைப்ப (672) இயம்பக் (673) கரைய அகவ (675) முழங்கக் (676) குழுமச் (677) சீப்பத் (685) தலைப் பெயருமெனமுடிக்க.

687-8. மை படு பெரு தோள் மழவர் ஓட்டி இடை புலத்து ஒழிந்த ஏந்து கோடு யானை - பிறர்தோள் குற்றப்படுதற்குக்காரணமான பெரிய தோளையுடைய மழவரைக்கெடுத்து அவர்விட்டுப்போகையினாலே போர்க்களத்தேநின்ற ஏந்தினகொம்பினையுடைய யானைகளும்,

1 மழவர் - சிலவீரர்.

689. பகை புலம் கவர்ந்த பாய் 2 பரி புரவி - பகைவர்நாட்டிலே கைக்கொண்டுவந்த பாய்ந்துசெல்லும் செலவினையுடைய குதிரைகளும்,

690-92. [வேல்கோ லாக வாள்செல நூறிக், காய்சின முன்பிற் கடுங்கட் கூளிய, ரூர்சுடு விளக்கிற் றந்த வாயமும் :] காய் சினம் முன்பின் கடுங்கண் கூளியர் ஊர் சுடு விளக்கின் ஆள் செல நூறி வேல் கோல் ஆக தந்த ஆயமும் - எரிகின்ற சினத்தையுடைத்தாகிய வலியினையும் தறுகண்மையினையுமுடைய ஆயக்கரையிலிருந்த வேட்டுவர் பகைவரூரைச்சுடுகின்ற விளக்கிலே நிரைகாத்திருந்தவீரரை மாளவெட்டி வேல் கோலாக அடித்துக்கொண்டுவந்த பசுத்திரளும்,

693. நாடு உடை நல் எயில் அணங்கு உடை தோட்டி - அகநாட்டைச் சூழவுடைத்தாகிய 3 முழுவரண்களிலிட்ட வருத்தத்தையுடைய கதவுகளும்,

694-5. நாள் தொறும் விளங்க கை தொழூஉ பழிச்சி நாள் தர வந்த விழு கலம் - நாடோறும் தமக்குச் செல்வமிகும்படியாகக் கையாற்றொழுதுவாழ்த்தி நாட்காலத்தே திறையாகக்கொண்டுவர வந்த சீரிய கலங்களும்,

அனைத்தும் - அத்தன்மையனபிறவும்,

696-7. கங்கை அம் பெரு யாறு கடல் படர்ந்தாங்கு அளந்து கடை அறியா மதுரை (699) - 4 கங்கையாகிய அழகிய பெரியயாறு

1 மதுரை. 395, ந.

2 பரி - செலவு ; "காலே பரிதப் பினவே" குறுந். சச : 1.

3 முழுவரண் - முழுமுதலரணம்.

4 "இறுவரை யிமயத் துயர்மிசை யிழிந்து, பன்முகம் பரப்பிப் பௌவம் புகூஉம், நன்முகக் கங்கையி னகரம்" பெருங். உ. 17 : 33-4,

[1] ஆயிரமுகமாகக் கடலிலேசென்றாற்போல அளந்து முடிவறியாத மதுரை,

வளம் கெழு தாரமொடு - வளப்பம்பொருந்தின அரும்பண்டங் களோடே,

698. [புத்தே ளுலகங் கவினிக் காண்வர :] புத்தேள் உலகம் காண்வர கவினி - தேவருலகம்வந்து காணுதலுண்டாகத் தான் அழகைப்பெற்று,

699. மிக்கு புகழ் எய்திய பெரு பெயர் மதுரை - மிகுத்துப் புகழைப் பெற்ற பெரும்பொருளையுடைய மதுரை,

பெரும்பொருளென்றது, வீட்டினை ; [2] "பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" என்றார் பிறரும்.

கூற்றக் கொல்ஃறேர் (633) அச்சமறியாதேமமாகிய (652) மிக்குப் புகழெய்திய மதுரை (699)யென்க.

பாடல்சான்ற நன்னாட்டு நடுவணதாய் (331) இருபெருநியமத்து (365) நாளங்காடிக்கம்பலை(430)நாடார்த்தன்றேயாய் (428) அல்லங்காடி அழிதருகம்பலை (544) புள்ளின் இசையெழுந்தற்றேயாய் (543) ஞாயிறு (546) குன்றஞ் சேருகையினாலே (547) மாலை (558) புகுந்து (557) பின்னர்நீங்க (558) முந்தையாமஞ்சென்றபின்றை (620) மற்றைப் (653) பானாட்கொண்டகங்குல் (631) யாமத்தையும் மற்றை (653) யிடையதாகிய (631) கடவுள் வழங்குங்கங்குல் (651) யாமத்தையும் பகலுறக் கழிப்பிச் (653) சீப்ப (685) இராக்காலந் தன்னிடத்தினின்றும் போகின்றவைகறையிலே (686) வளங்கெழுதாரத்தோடே (697) யானையும் (688) புரவியும் (689) ஆயமும் (692) தோட்டியும் (693) கலமும் அனைத்தும் (695) கங்கையாறுகடற்படர்ந்தாற்போல (696) அளந்து முடிவறியாத (697) மதுரை (699) என்க.

கவினிப் (698) புகழெய்திய (699) பெரும்பாணிருக்கை (342) முதலியவற்றையுடைய மதுரை (699) என்க.

700 - 701. [சினைதலை மணந்த சுரும்புபடு செந்தீ, யொண்பூம் பிண்டி யவிழ்ந்த காவில் :] சினை தலை மணந்த பிண்டி சுரும்பு படு செ தீ ஒள் பூ அவிழ்ந்த காவில் - கொம்புகள் தம்மிற்றலைகூடின அசோகினுடைய சுரும்புகளுண்டாஞ் செந்தீப்போலும் ஒள்ளியபூவிருந்த பொழிலிடத்தே,

---

1 "கங்கை, துறைகொ ளாயிர முகமுஞ் சுழல" (கல்.) ; "ஐயமிலமர ரேத்த வாயிர முகம தாகி, வையக நெளியப் பாய்வான் வந்திழி கங்கை" (தே. திருநா.); "அந்தரத் தமர ரடியிணை வணங்க வாயிர முகத்தினு லருளி, மந்தரத் திழிந்த கங்கை" பெரிய திருமொழி. க. 4 : 7.

2 பதிற். ௯௦ : 23.

702 - 3. சுடர் பொழிந்து எறிய விளங்கு கதிர் ஞாயிறு இலங்கு கதிர் இளவெயில் தோன்றி அன்ன - ஒளியைச்சொரிந்து அத்தகிரியிலே போக விளங்குகின்ற கிரணங்களையுடைய ஞாயிற்றினுடைய விளங்கும் கிரணங்களின் இளவெயில் தோன்றினாலொத்த மகளிர் (712),

என்றது, பூத்த அசோகம்பொழிலிடத்தே இளவெயில் எறித்தாற்போலப் 1 புணர்ச்சியாற்பெற்ற நிறத்தையுடைய மகளிரென்க.

704. [தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை :] தாவு இல் தமனியம் வளைஇய விளங்கு இழை - ஓட்டற்ற பொன் நடுஅழுத்தின மணிகளைச்சூழ்ந்த விளங்குகின்ற பேரணிகலங்களையும்,

705. நிலம் விளக்கு உறுப்ப மேதக பொலிந்து - நிலத்தையெல்லாம் விளக்கமுறுத்தும்படி கற்புமேம்படப் பொலிவுபெற்று,

706. மயில் ஓர் அன்ன சாயல் - மயிலோடு ஒருதன்மைத்தாகிய மென்மையினையும்,

706 - 7. மாவின் தளிர் ஏர் அன்ன மேனி - மாவின்தளிரினது அழகையொத்த நிறத்தினையும்,

707 - 8. தளிர் புறத்து ஈர்க்கின் அரும்பிய திதலையர் - தளிரினது புறத்தில் ஈர்க்குப்போலத் தோன்றிய திதலையையுடையராய்,

கூர் எயிறு - கூரிய எயிற்றினையும்,

709. ஒள் குழை புணரிய வள் தாழ் காதின் - ஒள்ளிய மகரக்குழை பொருந்திய வளவிய தாழ்ந்த காதினையும்,

710 - 11. [கடவுட்கயத் தமன்ற சுடரிதழ்த் தாமரைத், தாதுபடு பெரும்போது புரையும்வாண் முகத்து :] கயத்து அமன்ற கடவுள் சுடர் இதழ் தாமரை தாது படும் பெரு போது புரையும் வாள் முகத்து - குளத்திலே நெருங்கின 2 தெய்வங்கட்குரிய நெருப்புப்போலுமிதழ்களையுடைய தாமரையினது தாதுண்டாம்பெரியபூவை ஒக்கும் ஒளியினையுடைய முகத்தினையும்,

712. ஆய் தொடி மகளிர் - நன்றாக ஆராய்ந்த தொடியினையுமுடைய மகளிருடைய,

பொலிந்து (705) திதலையராய் (708) இழையினையும் (704) சாயலினையும் (706) மேனியினையும் (707) எயிற்றினையும் (708) காதினையும் (709) முகத்தினையும் (711) தொடியினையுமுடைய மகளிர் (712) என்க.

---

1 "தேசு மொளியுந் திகழ நோக்கி" (பரி. கஉ : 21) என்பதன் உரையைப்பார்க்க; "மதம்-காமக்களிப்பாலுண்டாகிய கதிர்ப்பு" (திருச்சிற். 69, பேர்); "அந்தி யாரழ லெனப்பரி தியினொளி யடைந்தபின்", "குந்தித் தெரிவை........அந்தித் தெரிவை நிகரென்ன வழகின் மிக்காள்" வி. பா. சம்பவச்சருக்கம், 38, 66.

2 பெரும்பாண். 289 - 90-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

712. நறு தோள் புணர்ந்து - நறிய தோளைமுயங்கி,

713. கோதையின் பொலிந்த சேக்கை துஞ்சி - [1] தூக்குமாலைகளாற் பொலிவுபெற்றபடுக்கையிலே துயில்கொண்டு,

புணர்ந்து பின்னைத் துயிலுங்காலத்துத் தனியேதுயிலுதல் இயல்பென்பதுதோன்றப் புணர்ந்து துஞ்சியென்றார்.

[2] "ஐந்துழுன் றடுத்த செல்வத் தமளியி னியற்றி" என்றார் பிறரும்.

714. திருந்து துயில் எடுப்ப இனிதின் எழுந்து - செல்வத்தை நினைந்து இன்புறுகின்ற பற்றுள்ளம், உறக்கத்தைபுணர்த்துகையினாலே அதுநினைத்து இனிதாகப் பின் எழுந்து,

என்றது, தன்செல்வம் இடையறாதொழுகுதற்கு வேண்டுங் காரியங்களை விடியற்காலத்தே மனத்தாலாராயவேண்டுதலின், துயிலெடுப்புக்கு இது காரணமாயிற்று; [3] "வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு, நல்லறனு மொண்பொருளுஞ் சிந்தித்து" என்றார் ஆசாரக்கோவையில்.

இனி நன்றாகிய துயிலென்றுமாம்.

715 - 24. [திண்கா ழார நீவிக் கதிர்விடு, மொண்கா ழாரங் கவைஇய மார்பின், வரிக்கடைப் பிரச மூசுவன மொய்ப்ப, வெருத்தந் தாழ்ந்த விரவுப்பூந் தெரியற், பொலஞ்செயப் பொலிந்த நலம்பெறு விளக்கம், வலிகெழு தடக்கைத் தொடியொடு சுடர்வரச், சோறமை வுற்ற நீருடைக் கலிங்க, முடையணி பொலியக் குறைவின்று கவைஇ, வல்லோன் றைஇய வரிப்புனை பாவை, முருகியன் றன்ன வுருவினை யாகி :]

[4] வல்லோன் தைஇய வரி புனை பாவை (723) முருகு இயன்றன்ன உருவினை ஆகி (724) - சித்திரகாரி பண்ணப்பட்ட எழுதிக்கைசெய்த பாவையிடத்தே தெய்வத்தன்மை நிகழ்ந்தாற்போன்ற வடிவினையுடையையாய்,

---

[1] "தொங்கல் சுற்றுந் தாழுமின் பஞ்சணை" அழகரந்தாதி, 44.

[2] சீவக. 838. [3] ஆசாரக்கோவை, 4.

[4] எழுதப்பட்ட பாவையிடத்தே தெய்வத்தன்மை நிகழ்தல், "கேழ்கொள், காழ்புனைந் தியற்றிய வனப்பமை நோன்சுவர்ப், பாவையும் பலியெனப் பெறாஅ" (அகநா. ௩௬௧ : 6 - 8), "வழுவறு மரனு மண்ணுங் கல்லு, மெழுதிய பாவை பேசா வென்ப, தறிதலு மறிதியோ", "கொடித்தேர் வீதியுந் தேவர் கோட்டமு, முதுமர விடங்களு முதுநீர்த் துறைகளும், பொதியிலு மன்றமும் பொருந்துபு நாடிக், காப்புடை மாநகர்க் காவலுங் கண்ணி, யாப்புடைத் தாக வறிந்தோர் வலித்து, மண்ணினுங் கல்லினு மரத்தினுஞ் சுவரினுங், கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க, வாங்கத் தெய்வத மவ்விட நீங்கா", "தொன்று முதிர் கந்தின், மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன்யான்" (மணி. ௨௧ : 115 - 7, 120 - 27, 131 - 3) என்பவற்றாலும் விளங்கும்.

என்றதனால், நாட்காலையில் அரசர்க்குரிய கடன்கள்கழித்துத் தெய்வவழிபாட்டோடிருந்தமை கூறினார்.

திண் காழ் ஆரம் நீவி கதிர் விடும் (715) ஒள் காழ் ஆரம் கவைஇய மார்பின் (716) - திண்ணிய வயிரத்தையுடைய சந்தனத்தைப்பூசி ஒளி விடும் ஒள்ளிய வடமாகிய முத்துச்சூழ்ந்த மார்பிலே,

நீவியென்னுஞ் செய்தெனெச்சம் பிறவினைகொண்டது.

வரி கடை பிரசம் மூசுவன மொய்ப்ப (717) - வரியையுடைத்தாகிய பின்னையுடைய தேனினமும் மற்றும் மொய்க்கப்படுவனவாகிய வண்டு முதலியனவும் மொய்ப்ப,

எருத்தம் தாழ்ந்த விரவு பூ தெரியல் (718) - கழுத்திடத்தினின் றுந் தாழ்ந்த விரவுதலையுடைய பூமாலையையுடைத்தாகிய மார்பென (716) முன்னேகூட்டுக.

பொலம் செய பொலிந்த நலம் பெறு விளக்கம் (719) வலி கெழு தட கை தொடியொடு சுடர் வர (720) - பொன்னாற்செய்கையினாலே பொலிவுபெற்ற மணிகளழுத்தின மோதிரம் வலிபொருந்தின பெரிய கையில் 1 வீரவளையோடு விளக்கம்வர,

சோறு அமைவு உற்ற நீர் உடை கலிங்கம் (721) - சோறு தன்னி டத்தே பொருந்துதலுற்ற நீரையுடைய துகில்,

என்றது 2 கஞ்சியிட்டதுகிலை.

உடை அணி பொலிய குறைவு இன்று கவைஇ (722) - உடைக்கு மேலணியும் அணிகலங்களாலே அது பொலிவுபெறும்படி தாழ்வின்றாக வுடுத்து,

புணர்ந்து (712) துஞ்சி (713) எழுந்து (714) உருவினையாகி (724) மார்பிலே (716) பிரசமும் மூசுவனவும் மொய்ப்ப (717) விளக்கம் (719) தொடியொடு சுடர்வரக் (720) கலிங்கத்தைக் (721) கவைஇ (722) யெனமுடிக்க.

725 - 6. 3 வரு புனல் கல் சிறை கடுப்ப இடை அறுத்து ஒன்னார் ஓட்டிய செரு புகல் மறவர் - மிக்குவருகின்ற யாற்றுநீரிடத்துக் கல்லணை

---

1 மதுரை. 34-ஆம் அடியின் உரையைப் பார்க்க.

2 "காடி கொண்ட கழுவுறு கலிங்கம்" (நெடுநல். 134); "நலத்த கைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத், தலைப்புடை போக்கித் தண்கயத் திட்ட, நீரிற் பிரியாப் பரூஉத்திரி" (குறுந். நஙO : 1 - 3); "பசைவிரற் புலைத்தி நெடிதுபிசைந் தூட்டிய, பூந்துகில்" (அகநா. நஅஎ : 6 - 7); "காடி யுண்ட பூந்துகில்" (சீவக. 71); "காடி கலந்த கோடிக் கலிங் கம்" பெருங். க. 54 : 9.

3 "தனிச்சேவகமாவது வருவிசைப் புனலைக் கற்சிறைபோல ஒரு வன் றாங்கிய பெருமை" வீர. பொருள். 16, உரை.

நின்று தாங்கினாற்போலத் தம்படையைக்கெடுத்து 1 மிக்குவருகின்ற பகைவர்படையை நடுவேதவிர்த்து அவரைக்கெடுத்த போரைவிரும்பும் படைத்தலைவர்,

2 "வருவிசைப் புனலைக் கற்சிறை போல, வொருவன் றாங்கிய பெருமை யானும்" என்னும் வஞ்சித்துறை கூறினார். இதுகூறவே முன்னர் 3 மாராயம் பெற்றவர்களே இப்போரைச்செய்வரென்பது ஆண்டுப் பெற்றாமாகலின், இவர்கள் 4 ஏனாதிப்பட்டம் முதலிய சிறப்புப் பெற்ற படைத்தலைவரென்பது பெற்றாம்.

---

1 "தன்மேற், கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்" பு. வெ. 11.

2 தொல். புறத்திணை. சூ. 8.

3 மாராயம் - வேந்தனாற் செய்யப்பெறுஞ்சிறப்பு; அவையாவன, ஏனாதி காவிதி முதலிய பட்டங்களும் நாடும் ஊரும் முதலியனவும் பெறுதல்; "கால மாரியி னம்பு தைப்பினும்....... ஓடல் செல்லாப் பீடுடை யாளர்,........தண்ணடை பெறுதல் யாவது" புறநா. ௨௮௭: 3 - 10.

4 ஏனாதிப்பட்டம்: இஃது அரசரால் வீரர்க்கு அளிக்கப்படும் ஒரு பட்டம்; இதனை, "மாராயம் பெற்ற நெடுமொழி யானும்" (தொல். புறத்திணை. சூ. 8) என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய வுரையாலும், "போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக், கார்க்கடல்பெற்ற கரையன்றோ - போர்க்கெல்லாந், தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சே, ரேனாதிப் பட்டத் திவன்" என அவர் எடுத்துக் காட்டிய பழம் பாட்டாலும் உணர்க. இப்பட்டத்திற்குரிய மோதிரமொன்றும் அரசரால் அளிக்கப்படுமென்பது மேலேயுள்ள பாடலாலும், "என்னை? ஏனாதிமோதிரஞ் செறித்த திருவுடையா னொருவன் ஏனாதி மோதிரஞ் செறிக்கும் அத்திரு அவன் செறிக்கின்ற பொழுதே உண்டாயிற்றன்று" (இறை. சூ. 2, உரை) என்பதனாலும், "ஆழி தொட்டான்" (சீவக. 2167) என்பதற்கு 'ஏனாதி மோதிரஞ் செறித்த சேனாபதி' என்று எழுதியிருப்பதனாலும் விளங்கும். இப்பாட்டின் 719 - ஆம் அடியில் வரும் விளக்க மென்பதற்குப் பொருளாகக் கூறிய மோதிர மென்பது இவ்வேனாதி மோதிரமே. இச்சிறப்புப் பெற்றோர் மந்திரிகளாகவும் இருத்தல், மணி. ௨௨ - ஆங்காதைத் தலைப்பிலுள்ள, 'மந்திரியாகிய சோழிகவேனாதி' யென்பதனால் விளங்கும். "சேனாதிபதி ஏனாதியாயின சாத்தன் சாத்தற்கு" (வேள்விக்குடிச் சாஸனம்) "ஏனாதிநல்லுதடன்" (தொல். களவி. சூ. 41, சே. ந.), "ஏனாதி திருக்கிள்ளி" (புறநா. ௧௬௭), "ஏனாதி ஏறன்" (நன். சூ. 392, மயிலை. மேற்.), ஏனாதி நாதநாயனாரென்பன இக்காரணம்பற்றி வந்த பெயர்கள் போலும்.

727. [1] வாள் வலம் புணர்ந்த நின் தாள் வலம் வாழ்த்த - வாள் வெற்றியைப் பொருந்தின நினது முயற்சியின்வெற்றியைவாழ்த்த,

728-9. வில்லை கவைஇ கணை தாங்கும் மார்பின் மா தாங்கு எறுழ் தோள் மறவர் தம்மின் - வில்லை நிரம்பவலிக்கையினாலே தன்னுள்ளேயடக்கிக் கொண்ட அம்பின் விசையைத்தாங்கு மார்பினையும் [2] குதிரையைச்செலுத்தி வேண்டுமளவிலே பிடிக்கும் வலியையுடைய தோளினையுமுடைய வீரரைக்கொணர்மின்;

தம்மின்: முன்னிலை முற்றுவினைத்திரிசொல். இது தும்பையிற் [3] குதிரைநிலைகூறிற்று. கணைதாங்குமார்பு கூறவே [4] கணை துணையுற மொய்த்தலுங் கூறிற்று.

730-31. கல் இடித்து இயற்றிய இட்டு வாய் கிடங்கின் நல் எயில் உழந்த செல்வர் தம்மின் - கற்றரையைப் பொளிந்துபண்ணின இட்டிதாகிய நீர்வரும்வாயையுடைய கிடங்கினையுடைய முழுமுதலரணத்தேநின்று வருந்தின வீரச்செல்வத்தையுடையாரைக் கொணர்மின்;

இஃது, [5] "ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்" என்னும் புறத்துழிஞைத்துறை கூறிற்று.

732-3. கொல் ஏறு பைந்தோல் சீவாது போர்த்த மா கண் முரசம் ஓவு இல கறங்க - மாறுபாட்டையேற்றுக் கோறற்றொழிலையுடைய [6] ஏற்றினது செவ்வித்தோலை மயிர் சீவாமற்போர்த்த பெரிய கண்ணையுடையமுரசம் மாறாமல் நின்று ஒலியாநிற்க.

734-6. எரி நிமிர்ந்தன்ன தானை நாப்பண் பெரு நல் யானை போர்க்களத்து ஒழிய விழுமிய வீழ்ந்த குருசிலர் தம்மின் - நெருப்பு நடந்தாற்போன்ற பகைவர்படைக்கு நடுவேசென்று பெரிய நல்ல யானையைப் போர்க்களத்தே பட வெட்டிச் சீரிய புண்ணினால்வீழ்ந்த தலைவரைக் கொணர்மின்;

---

1 வாள்வெற்றியை வாழ்த்துதற்கு வீரரே உரியரென்பது சிறுபாணாற்றுப்படை, 210-12-ஆம் அடிகளாலும் அறியப்படும்.

2 "நிமிர் பரிய மாதாங்கவும் - மிகைத்த செலவினையுடைய குதிரையைக் குசைதாங்கி வேண்டுமளவிலே பிடிக்கவும்" புறநா. கச: 7, உரை.

3 தொல். புறத்திணை. சூ. 17.

4 ஷை ஷை சூ. 16.

5 ஷை ஷை சூ. 13.

6 "மயிர்க்கண்முரசு - புலியைப் பொருது கொன்று நின்று சிலைத்துக் கோட்டுமண்கொண்ட ஏறு இறந்துழி அதன் உரிவையை மயிர் சீவாமற் போர்த்த முரசு" சிலப். ௫: 88, அடியார்.

இது, 1 " களிறெறிந் தெறிந்தோர் பாடு" என்னும் தும்பைத் துறை கூறிற்று. பாடு, பெருமையாகலின் அதுதோன்ற ஈண்டுக் குருசி லென்றார்.

முறைகருதுபு (738) - 2 முன்னுளோர் காத்தமுறைமையை நாளும் உட்கொண்டு,

737. புரையோர்க்கு - நட்பிற் குற்றந்தீர்ந்தோர்பொருட்டு, நான்காமுருபு ஈண்டு 3 அதற்பொருட்டு.

737 - 8. [தொடுத்த பொலம்பூந் தும்பை, நீர்யா ரென்னாது முறை கருதுபு சூட்டி :]

தொடுத்த பொலம் பூ தும்பை சூட்டி - கட்டப்பட்ட பொன்னாற் செய்த பூவினையுடைய தும்பையைச்சூட்டி ஏவுகையினாலே,

739. காழ் மண்டு எஃகமொடு கணை அலை கலங்கி - காம்பு குழைச் சினுள்ளே செருகின வேல்களுடனே அம்புகளுஞ்சென்று நிலைகுலைத் தலின் நிலைகலங்கி,

740 - 43. [பிரிபிணை யரிந்த நிறஞ்சிதை கவயத்து, வானத் தன்ன வளநகர் பொற்ப, நோன்குறட் டன்ன வூன்சாய் மார்பி, னுயர்ந்த வுதவி யூக்கலர்த் தம்மின் :]

பிரிபு இணை அரிந்த நிறம் சிதை 4 கவயத்து (740) ஊன் சாய் (742) - பலவாய்ப் பிரிந்து இணைந்த சந்துவாய்களற்ற பழையநிறங்கெட்ட கவயத்தோடே ஊன்கெட்ட,

நோன் குறடு அன்ன மார்பின் (742) - வலிய சகடையிற்குறட்டை யொத்த மார்பினையுடையராகிய ஊக்கல (743) ரென்க.

வேலும் அம்பும் பட்டு எங்கும் உருவிநிற்றலிற் குறடும் அதிற்றைத்த 5 ஆர்களும் போன்றன மார்புகள் ; குறடு பட்டடைமரமுமாம்.

வானத்து அன்ன வளம் நகர் பொற்ப (741) உயர்ந்த உதவி ஊக் கலர் தம்மின் (743) - 6 தேவருலகையொத்த செல்வத்தையுடைய ஊர் கள் முன்புபோலே நட்புக்கொண்ட அகத்துழிஞையோராளும்படி உயர்ந்த உதவியைச்செய்த முயற்சியையுடையாரைக் கொணர்மின் ;

1 தொல். புறத். சூ. 17.

2 " அறநெறி காட்டிப், பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது " மதுரை. 191 - 2.

3 தொல். வேற்றுமை. சூ. 15, பார்க்க.

4 கவயம் - கவசம் ; " வயக் கவயந் தண்டவனோர், மாமகனுக் காக மகிழ்சிறந்தார் " ஆனந்த. வண்டு. 5 பி - ம். 'உருளிகளும்'

6 " மீக்கூறுதல், இவன் காக்கின்ற நாடு பசிபிணி பகை முதலிய வின்றி யாவர்க்கும் பேரின்பந் தருதலிற் றேவருலகினும் நன்றென்றல் " (குறள். 386, பரிமேல்.) என்றதனோடு இக்கருத்து ஒத்துள்ளது.

என்றது, தமக்குநட்பாய் முற்றகப்பட்டோரை முற்றுவிடுவித்தற்குத் தாமே உதவலின், 1 மைந்துபொருளாகச்சென்று அம்முற்றுவிடுவித்து அவ்வூரை அவர்க்கு மீட்டுக்கொடுத்தமை கூறிற்று. இதனுனே 2 உழிஞைப்புறத்துத் தும்பைகூறினுர் ; என்னே ? 3 "கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற், சென்ற வுயிரி னின்ற யாக்கை" கூறுதலானும் வளநகர் பெறும்படி உயர்ந்த உதவிசெய்தமை கூறுதலானும்.

744-6. நிவந்த யானை கணம் நிரை கவர்ந்த புலர்ந்த சாந்தின் விரவு பூ தெரியல் பெரு செய் ஆடவர் தம்மின் - உயர்ந்த யானைத்திரளினுழுங்குகளைக் கைக்கொண்ட பூசிப்புலர்ந்த சாந்தினையும், விரவுதலையுடைய வியன்பூமாலையினையும், பெரியசெய்கைகளையுமுடைய மண்டலங்களை ஆள்கின்றவரைக் கொணர்மின் :

746-8. [பிறரும், யாவரும் வருக வேனோருந் தம்மென, வரையா வாயிற் செறூஅது :]

ஏனோரும் தம்மென வரையா - 4 மண்டபத்தாரையும், 5 அறங்கூறவையத்தாரையுங் கொணர்மினென வரைந்துகூறி,

வாயில் செறுது பிறரும் யாவரும் வருக என - வாயிலிடத்துத் தகையாமல் இவர்களைப்போல்வாரும் படையாளர்முதலியோரும் வருவாராகவெனக்கூறி,

748. இருந்து - இங்ஙனம் எளியையாயிருந்து,

749-50. [பாணர் வருக பாட்டியர் வருக, யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென :] யாணர் புலவரொடு பாணர் வருக பாட்டியர் வருக வயிரியர் வருக என - கவியாகிய புதுவருவாயினையுடைய புலவ

1 "மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச், சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப" தொல். புறத். சூ. 15.

2 "முற்றகப்பட்டோனை முற்று விடுத்தற்கு வேறோர் வேந்தன் வந்துழி, அவன் புறம்போந்து களங்குறித்துப் போர் செய்யக் கருதுதலும் அவன் களங்குறித்துழிப் புறத்தோனும் களங்குறித்துப் போர் செய்யக் கருதுதலும் உழிஞைப்புறத்துத்தும்பையாம்" தொல். புறத். சூ. 16, ந.

3 தொல். புறத். சூ. 16.

4 இங்கே மண்டபத்தாரென்றது, பட்டி மண்டபத்தாரைப்போலும்; பட்டி மண்டபம் - கல்விக்கழகம் ; "பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்" (மணி. க : 61) ; "பட்டி மண்டப மேற்றினை யேற்றினை" (திருவா. சதகம். 49) ; "பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்" என்றார் கம்பரும். மதுரையில், இப்பொழுது புதுமண்டபமென வழங்கும் இடத்தில் முன்பு பழைய மண்டபமொன்று இருந்திருத்தல் கூடுமென்றும், அஃது இப்பட்டிமண்டபம்போலுமென்றும் சிலர் கருதுவர். 5 மதுரை. 492.

ரோடே பாணர் வருவாராக, பாணிச்சியர் வருவாராக, கூத்தர் வருவாராகவென அழைத்து,

751 - 2. [இருங்கிளை புரக்கு மிரவலர்க் கெல்லாங், கொடிஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி :]

இரு கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம் நீர் யார் என்னாது (738) கொடிஞ்சி நெடு தேர் களிற்றொடும் வீசி - அவர்கள் சுற்றத்தாராய் அவர்கள்பாதுகாக்கும் பெரிய இரவலர்க்கெல்லாம் நீர்யாவரென்று அவர்களைக் கேளாதே அவர்கள் காட்டின அளவைக்கொண்டு கொடிஞ்சியையுடைய நெடியதேர்களை யானைகளோடுங் கொடுத்து,

கொடிஞ்சி - தாமரைப்பூவாகப்பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது.

753. களம் தோறும் கள் அரிப்ப - இடந்தோறுங் கள்ளையரிப்ப,

754. மரம் தோறும் மை வீழ்ப்ப - மரத்தடிகள்தோறும் செம்மறிக் கிடாயைப்படுப்ப,

755. நிணம் ஊன் சுட்டு உருக்கு அமைய - நிணத்தையுடைய தசைகள் சுடுதலாலே அந்நிணம் உருகுதல்பொருந்த,

756. நெய் கனிந்து வறை ஆர்ப்ப - நெய் நிறையப்பெற்றுப் பொரிக்கறிகள் ஆரவாரிப்ப,

757 - 8. குரூஉ குய் புகை மழை மங்குலின் பரந்து தோன்றா - நிறத்தையுடைய தாளிப்பிலெழுந்த புகை மழையையுடைய திசைகள் போலப் பரந்து தோன்றப்பட்டு,

758. வியல் நகரால் - அகற்சியையுடைய வீடுகளாலே மிக்குப்புகழெய்திய மதுரை (699) என முன்னேகூட்டுக.

நகர் - வீடுகள்.

அரிப்ப (753) வீழ்ப்ப (754) அமைய (755) ஆர்ப்பத் (756) தோன்றப்பட்டு (758) அகற்சியையுடைய என உடைமையொடு முடிக்க.

759 - 62. [பல்சாலை முதுகுடுமியி, னல்வேள்வித் துறைபோகிய, தொல்லாணை நல்லாசிரியர், புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின் :]

நல் வேள்வி துறை போகிய - நல்ல யாகங்கட்குக்கூறிய துறைகளெல்லாம் முன்னர் முற்றமுடித்துவிட்ட,

தொல் ஆணை நல் ஆசிரியர் (761) புணர் கூட்டு உண்ட (762) - பழைய ஆணைகளையுடைய நல்ல ஆசிரியர் தாங்கள் பின்புகூடின [1] கந்தழியாகிய கொள்ளையை அவரிடத்தே பெற்று அனுபவித்த,

புகழ் சால் சிறப்பின் (762) பல்சாலைமுதுகுடுமியின் (759)-புகழ்ச்சியமைந்த தலைமையினையுடைய [2] பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி

1 திருமுருகாற்றுப்படை உரையின் இறுதிப் பகுதியைப் பார்க்க.

2 பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி : இவ்வரசன் பலயாகங்

யைப்போலே நீயும் நல்லாசிரியரிடத்தே கேட்டிசின் (208) என முன்னே கூட்டுக.

என்றது, 1 அந்தணர்க்குக்கூறிய முறையே முன்னுள்ள கருமங்களை முடித்துப் பின்னர்த் தத்துவங்களை யாராய்ந்து மெய்ப்பொருளுணர்ந்து வீட்டின்ப மெய்திய ஆசிரியரிடத்தே தானும் அம்முறையேசென்று வீட்டின்பத்தைப் பெற்ற குடுமியென்றவாறு.

763. நிலம் தரு திருவின் நெடியோன் போல - எல்லா நிலங்களையும் தன்னிடத்தே காட்டின பெருஞ்செல்வத்தையுடைய மாயோனைப் போலத் தொல்லாணையையுடைய நல்லாசிரியர் (761) என முன்னே கூட்டுக.

என்றது, கண்ணன் எப்பொருளும் தானுயிருக்கின்றபடியைக் காட்டி 2 ஸ்ரீ கீதையருளிச்செய்து எல்லாரையும் போதித்தாற்போல எல்லாரையும் போதிக்கவல்லராகிய ஆசிரியரென்றவாறு.

ஆணை - ஆக்கினை.

764 - 5. [வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர், பலர்வாய்ப் புகரறு சிறப்பிற் றோன்றி:]

வியப்பும் - நீ அவ்வாசிரியரிடத்துப் பெற்ற கந்தழியின் அதிசயமும்,

சால்பும் - பின்பு பெற்றமைந்த அமைதியும்,

---

களைச் செய்து சிறப்புற்றமையின் இப்பெயர் பெற்றான்; "நற்பனுவ லால்வேதத், தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை, நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண், வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூப நட்ட வியன் களம் பலகொல்" (புறநா. கடு: 17 - 21) என்பதனால் இவன் வேள்வி பல செய்த தறியப்படும். "கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குலந்தவிர்த்த, பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி யென்னும் பாண்டியாதிராஜ(ன)ன், நாகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும் பாகனூர்க் கூற்றமென்னும் பழனக் கிடக்கை நீர்நாட்டுச், சொற்கண்ணாளர் சொலப்பட்ட ஸ்ரீ - திமார்க்கம் பிழையாத, கொற்கைக் கிழான் நற்கொற்றன் கொண்ட வேள்வி முற்றுவிக்கக், கேள்வியந்தணாளர் முன்பு கேட்கவென்றெடுத்துரைத்து, வேள்விச்சாலை முன்பு நின்று வேள்விகுடி யென்றப் பதியைச், சீரோடு திருவளரச் செய்தார். வேந்தனப்பொழுதே நீரோட்டிக் கொடுத்தமையான்" (வேள்விக்குடிச் சாஸனம், Epigraphia Indica, Vol. 17, No 16) என்ற சாஸனப் பகுதியினால் இவன் வேள்விசெய்தார்க்குத் தானம் பல செய்தானென்பது அறியப் படுகின்றது. இவனைப் பற்றிய பிற செய்திகள், புறநானூற்றுப் பதிப்பிலுள்ள பாடப் பட்டோர் வரலாற்றால் அறியலாகும்.

1 ௩௬௬ - ஆம் பக்கம் முதலடிக்குறிப்பைப் பார்க்க.

2 ஸ்ரீ கீதை - பகவத்கீதை.

புகர் அறு சிறப்பின் செம்மை சான்றோர் பலர் வாய் தோன்றி - குற்றமற்ற சிறப்புக்களையுடைய தலைமைகளெல்லாம் அமைந்தோர் பலரும் தம்மிலிருந்து சொல்லப்பட்டு,

பலர்வாயென்பதனோடும் பின்வரும் புகரறுசிறப்பைக் கூட்டுக. புகரறு சிறப்பிற் செம்மையாவன:—1 "நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்" என்புழிக் கூறப்பட்டவை.

766. அரிய தந்து - இவ்விடத்திற்கு அரியவாய் வேற்றுப்புலத்தி லுள்ள பொருள்களைக் கொணர்ந்து எல்லார்க்குங் கொடுத்து,

குடி அகற்றி - நின்னாட்டில் வாழும் குடிமக்களைப் பெருக்கி,

என்றது, செல்வமுண்டாக்கி யென்றதாம்.

767. பெரிய கற்று - நற்பொருள்களை விளங்கக்கூறிய நூல்களைக் கற்று,

இசை விளக்கி - நின்புகழை எவ்வுலகத்தும் நிறுத்தி,

768. முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும் - கடனடுவேதோன்று கின்ற ஞாயிற்றை யொக்கவும்,

769. பல் மீன் நடுவண் திங்கள் போலவும் - பலமீன்களுக்கு நடுவே தோன்றுகின்ற நிறைமதியைப்போலவும்,

770. பூத்த சுற்றமொடு பொலிந்து இனிது விளங்கி - நீ பொலிவு பெற்ற சுற்றத்தாருடனே பொலிவு பெற்று இனிதாக விளங்கி,

2 மண்டிலமாக்கள் தண்டத்தலைவர் முதலிய சுற்றத்தோர்க்கு நடுவே ஞாயிறு போலவிளங்கி, பலகலைகளைக் கற்றோரிடத்தே 3 மதி போல விளங்கி யென்க.

---

1 தொல். புறத். சூ. 20; இங்கே கூறப்பட்ட நாலிரு வழக்கினை, "நீஇ ராட னிலக்கிடை கோட, றூஉ லுடுத்த லெரியோம்ப, லூரடை யாமை யுறுசடை புனைதல், காட்டி லுணவு கடவுட் பூசை, யேற்ற தவத்தி னியல்பென மொழிப" (தொல். புறத். சூ. 16, இளம். சூ. 20, ந. மேற்.) என்பதனாலும், "ஊணசையின்மை, நீர் நசையின்மை, வெப்பம் பொறுத்தல், தட்பம் பொறுத்தல், இடம் வரையறுத்தல், ஆசனம் வரையறுத்தல், இடையிட்டு மொழிதல், வாய்வாளாமை; இனி யோகஞ் செய்வார்க்குரியன இயமம்......சமாதியென வெட்டும்" (தொல். புறத். சூ. 20, ந.) என்பதனாலும் அறியலாகும்.

2 சுற்றத்திடையே இருக்கும் பொழுது சூரியனை உவமை கூறுதலை, பெரும்பாண். 441-7 - ஆம் அடிகளும், 'கடலைச் சுற்றத் திரட்சிக்கு உவமையாக்கலும் ஒன்று' (பெரும்பாண். 443 - 50, விசேடவுரை) என்ற நச்சினார்க்கினியர் உரையும் அறிவித்தல் காண்க.

3 கலைநிறைந்தமைபற்றி மதியை உவமை கூறுதல் மரபென்பது இவ்வுரையாசிரியர் பிற இடங்களி லெழுதிய உரையினாலறியப் படுகின்றது; ௬௭ - ஆம் பக்கம், 3 - ஆம் அடிக் குறிப்பைப் பார்க்க.

771 - 2. பொய்யா நல் இசை நிறுத்த புனை தார் பெரு பெயர் மாறன் தலைவனாக - உண்மையான நல்ல புகழை உலகிலே நிறுத்தின கைசெய்த மாலையினையும் பெரிய பெயரினையுமுடைய மாறன் முதலாக,

மாறன் - இவன் குடியிலுள்ள பாண்டியன்; அன்றி ஒரு குறுநில மன்னனென்றலு மொன்று.

773. கடந்து அடு வாய் வாள் இள பல் கோசர் - பகைவரை வென்று கொல்லும் தப்பாதவாளினையுடைய இளைய பலராகிய கோசரும்,

774 - 7. [இயனெறி மரபினின் வாய்மொழி கேட்பப், பொலம்பூ ணைவ ருட்படப் புகழ்ந்த, மறமிகு சிறப்பிற் குறுநில மன்ன, ரவரும் பிறரும்:]

புகழ்ந்த பொலம் பூண் ஐவர் உட்பட (775) - எல்லாராலும் புகழப் பட்ட பொன்னாற் செய்த பேரணிகலங்களையுடைய ஐம்பெருங்கேளிரு முட்பட,

மறம் மிகு சிறப்பின் குறுநிலமன்னர் (776) அவரும் (777) - மற மிக்க நிலைமையினையுடைய குறுநிலமன்னராகிய அவரும்,

பிறரும் (777) - கூறுதொழிற்றோரும்,

இயல் நெறி மரபின் நின் வாய் மொழி கேட்ப (774) - நடக்கின்ற நெறிமுறைமையினாலே நின்னுடைய உண்மையானமொழியைக் கேட்டு அதன்வழியே நடக்க,

777 - 8. [துவன்றிப், பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந் தேத்த:] பொற்பு விளங்கு புகழ் அவை துவன்றி நின் புகழ்ந்து ஏத்த - பொலிவு விளங்குகின்ற புகழினையுடைய அறங்கூறவையத்தார் நெருங்கி நின்னுடைய அறத்தின்தன்மையைப் புகழ்ந்து வாழ்த்த,

779 - 81. [இலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, மணங் கமழ் தேறன் மடுப்ப நாளு, மகிழ்ந்து:]

இலங்கு இழை மகளிர் பொலம் கலத்து ஏந்திய மணம் கமழ் தேறல் மடுப்ப மகிழ்ந்து - விளங்குகின்ற பூணினையுடையமகளிர் பொன்னாற் செய்த வட்டில்களிலேயெடுத்த மணநாறுகின்ற[1] காமபானத்தைத்தர அதனையுண்டு மகிழ்ச்சியெய்தி மகளிர்தோள்புணர்ந்து (712) என முன்னேகூட்டுக.

---

[1] பானம், காமபானம் வீரபானமென இருவகைத்து; "மட்டு - காமபானம்" (சீவக. 98, ந.), "நறவு கொண்மகளிர் - காமபானம் செய்யும் வாமமார்க்கப் பெண்காள்" (தக்க. 24, உரை) என உரையாசிரியர்கள் இதனைக் கூறலும், "காம வருத்திய பயிர்க்கு நீர்போ லருநற வருந்து வாரை" (கம்ப. ஊர்தேடு. 107) என்று கம்பர் குறிப் பித்தலும் இங்கே அறியற்பாலன.

நாளுமென்பதனைப் பின்னேகூட்டுக.

மணங்கமழ்தேறலென்றதனாற் காமபானமாயிற்று.

781-2. [இனிதுறைமதி பெரும, வரைந்துநீ பெற்ற நல்லூழி யையே :] பெரும நல் ஊழியை வரைந்து நீ பெற்ற நாளும் இனிது உறைமதி - பெருமானே! நன்றாகிய ஊழிக்காலத்தை இத்துணைக்கால மிருத்தியெனப் [1] பால்வரைதெய்வத்தாலே வரையப்பட்டு நீ அறுதி யாகப்பெற்ற நாள்முழுதும் இனிதாக இருப்பாயென்க.

நல்லூழியென்றார், கலியூழியல்லாத ஊழியை

உம்மை : முற்றும்மை.

உயர்ந்தோர் மருகனே (23) நெடியோனும்பலே (61) பொருநனே (42) கொற்றவனே (88) வெல்கோவே (105) புகழ்வேந்தே (130) நசைப்பொருநனே (138) போரேறே (144) குருசிலே (151) நீகொற்ற வர்தங்கோனாகுவை (74) வாய்நட்பினை (198) பணிந்தொழுகலை (201) பழிநமக்கெழுகவென்னாய் (204) இசைவேட்குவை (205) அன்னாய் (206) நின்கொற்றம் (194) பிறையிற் (193) சிறக்க (194) நின்தெவ்வ ராக்கம் (196) மதியிற் (195) கெடுக (196) நின்நல்லிசை கெடாதுநிலை இயர் (209) இனி நீ பாடல்சான்ற நன்னாட்டு நடுவணதாய் (331) இரு பெருநியமத்து (365) நாளங்காடிக்கம்பலை (430) நாடார்த்தன்றேயாய் (428) அல்லங்காடி அழிதருகம்பலை (544) புள்ளிசை யெழுந்தற்றே யாய் (543) ஞாயிறு (546) குன்றஞ்சேருகையினாலே (547) மாலை (558) புகுந்து (557) பின்னர்நீங்க (558) முந்தையாமஞ் சென்றபின்றை (620) மற்றைப் (653) பானாட்கொண்டகங்குல் (631) யாமத்தையும் மற்றை (653) இடையதாகிய (631) கடவுள்வழங்குங்கங்குல் (651) யாமத்தையும் பகலுறக்கழிப்பிப் (653) பாடப் (656) பண்ணக் (658) கைப்பத் (659) தெவிட்ட (660) உறுப்ப (661) நுவலக் (662) கரையத் (667) தோன்ற (669) வாழ்த்த நுவல (670) இசைப்ப (671) இரங்கச் சிலைப்ப (672) இயம்பக் (673) கரைய அகவ (675) முழங்கக் (676) குழுமச் (677) சீப்ப (685) இராக்காலம் தன்னிடத்தினின்றும்போகின்ற வைகறையிலே (686) வளங்கெழு தாரத்தோடே (697) யானையும் (688) புரவியும் (689) ஆயமும் (692) தோட்டியும் (693) கலமுமனைத்தும் (695) கங்கையாறுகடற்படர்ந்தாங்கு (696) அளந்து கடையறியாத (697) கவினிப் (698) புகழெய்திய (699) பெரும்பாணிருக்கையினையும் (342) கிடங்கினையும் (351) புரிசையினையும் (352) வாயிலினையு (356) முடைய நான்மாடத்தான் மலிந்தபுகழைக்கூடுதலையுடைய (429) மதுரை

[1] "பால்வரை தெய்வமென்றார், இன்ப துன்பத்திற்குக் காரண மாகிய இருவினையும் வகுத்தலின்" தொல். களவி. சூ. 58, ந.

யிலே (699) மகளிர் தேறன்மடுப்ப (780) மகிழ்ந்து (781) மகளிர்நறுந் தோளைப்புணர்ந்து (712) சேக்கைத்துஞ்சி (713) எழுந்து (714) உருவினையாகி (724) மார்பிலே (716) பிரசமும் மூசுவனமொய்ப்ப (717) விளக்கம் (719) தொடியொடுசுடர்வரக் (720) கலிங்கத்தைக் (721) கவைஇ (722) மறவர் (726) தாள்வலம் வாழ்த்த (727) மாறன்முதலாகக் (772) கோசரும் (773) ஐவருமுட்படக் (775) குறுநிலமன்னராகிய (776) அவரும்பிறரும் (777) நின்வாய்மொழிகேட்ப (774) நிற்புகழ்ந்தேத்த (778) மறவர்த்தம்மின் (729), செல்வர்த்தம்மின் (731), குரிசிலர்த்தம்மின் (736), ஊக்கலர்த்தம்மின் (743), பெருஞ்செயாடவர்த்தம்மின் (746), ஏனோருந் தம்மெனச் (747) சிலரை வரைந்துகூறி வாயிலிடத்துத் தகையாமற் (748) பிறரும் (746) யாவரும் வருகவெனப் பொதுப்படக்கூறி (747)நாளோலக்கமிருக்குமண்டபத்தேயிருந்து (748) புலவரொடு (750) பாணர்வருக, பாட்டியர்வருக (749), வயிரியர் வருகவெனவழைத்து (750) அவர்காட்டின இரவலர்க்கெல்லாம் (751) நீர்யாரென்றுதே (738) தேரைக் களிற்றொடும்வீசி (752) அரியதந்து குடியகற்றிப் (766) பெரியகற்று இசைவிளக்கி (767) ஞாயிறுபோலவுந் (768) திங்கள்போலவுஞ் (769) சுற்றமொடு பொலிந்து விளங்கி (770) வாழி (208); அங்ஙனம் வாழ்ந்து பிறப்பற முயலாது பயனின்றிக்கழிந்தோர் (237) திரையிடுமணலினும் பலரேகாண் (236), அப்பயனின்மையாலே (238) அண்ணலே (207) நீயும் அவ்வாறுகழியலாகாதென்று இவ்வாழ்விற் பெரிதாயிருப்பதொரு பொருளையான்கூறுவேன் (207); அஃது என்றுற்காட்டுதலரிது; அதனை நெடியோன்போலத் (763) தொல்லாணையினையுடைய நல்லாசிரியர் (761) புணர்கூட்டுண்ட சிறப்பினையுடைய (762) பல்யாகசாலைமுதுகுடுமியைப்போல (759) நல்லாசிரியரிடத்தே கேட்டிசின் (208); கேட்டு அதனை நீகண்டவியப்பும் சால்பும் (764) புகாறுசிறப்பிற் (765) செம்மைசான்றோர் (764) பலர் தம்மிவிருந்து சொல்லப்பட்டுப் (765) பெருமானே, (781) நன்றாகிய ஊழிக்காலத்தை இத்துணைக்காலமிருத்தியெனப் பால்வரைதெய்வத்தாலே வரையப்பட்டு நீஅறுதியாகப்பெற்ற (782) நாண்முழுதும் (780) இனிதாகப் பேரின்பத்தை நுகர்ந்திருப்பாய் (781); அதனை நுகராது ஐம்பொறிகட்கும் முன்னிற்கப்படுவனவாகிய இந்நுகர் பொருள்கட்கு நின்னொடு என்ன உறவுண்டு (206); இனி நின்னிடத்துண்டாகிய மாயைகெடுவதாக (208) என மாட்டுறுப்பானும் எச்சவுறுப்பானும் வினைமுடிக்க.

1 "அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு, மியன்றுபொருள் முடியத் தந்தன ருணர்த்தன், மாட்டென மொழிப பாட்டியல்

1 தொல். செய்யுளியல், சூ. 210.

வழக்கின்”, 1 “சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை, புல்லிய கிளவி யெச்ச மாகும்” என்னுஞ் சூத்திரங்களாற் கூறிய இலக்கணம், 2 “நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பு” எனத் தொல்காப்பியனார் கூறினமையின், இவரும் நல்லிசைப்புலவராதலின், இங்ஙனம் செய்யுள் செய்தாரென்றுணர்க.

3 தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார் பாடிய மதுரைக்காஞ்சிக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

---

வெண்பா.

1. பைங்க ணிளம் 4 பகட்டின் மேலானைப் பான்மதிபோல்
திங்க ணெடுங்குடையின் கீழானை - 5 அங்கிரந்து
6 நாம்வேண்ட நன்னெஞ்சே நாடுதிபோய் நானிலத்தோர்
தாம்வேண்டுங் கூடற் றமிழ்.

2. 7 சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால் - மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே 8 மலையாத
தண்டாரான் கூடற் றமிழ்.



---

1 தொல். செய்யுளியல், சூ. 207.

2 ,, ,, ,, 1.

3 பி - ம். ‘பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்’

4 பி - ம். ‘பகட்டுமேலானை’ 5 பி - ம். ‘தங்காது’

6 பி - ம். ‘நாம்வேண்டு’

7 “பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்து” திருவிளை. பாயிரம், 12.

8 மலையாத தண்தாரான்-ஏனையோர்களாலணியப்படாத ஆரத்தைப் பூண்டவன்; என்றது இந்திரனால் தரப்பட்ட ஆரமணிந்ததைக் குறிப்பித்தபடி; “செங்கணா யிரத்தோன் றிறல்விளங் காரம், பொலங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி”, “தேவ ராார மார்பன்” சிலப். கக: 24 - 5, உக: “கந்துகவரி”

ஏழாவது

# நெடுநல்வாடை.



வையகம் பனிப்ப வலனேர்பு வளைஇப்
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென
வார்கலி முனைஇய கொடுங்கோற் கோவல
ரேறுடை யினநிரை வேறுபுலம் பரப்பிப்
5 புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோட
னீடிதழ்க் கண்ணி நீரலைக் கலாவ
மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்
கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க
மாமேயன் மறப்ப மந்தி கூரப்
10 பறவை படிவன வீழக் கறவை
கன்றுகோ ளொழியக் கடிய வீசிக்
குன்றுகுளிர்ப் பன்ன கூதிர்ப் பானாட்
புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூப்
பொன்போற் பீரமொடு புதற்புதன் மலரப்

---

1. வலனேர்பு : முல்லை. 4-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

3. கொடுங்கோற் கோவலர் : முல்லை. 15-ஆம் அடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

4. ஏறுடை யினநிரை : "வேறுபுலம் படர்ந்த வேறுடை யினத்த, வளையான்" (மலைபடு. 408 -9) ; "ஏறுடை யினத்துப், புல்லூர் நல்லான்" (குறுந். உஎ௰ . 3 - 4) ; "ஏறுடை யினநிரை" (அகநா. உசுக : 3) ; "ஏறு பொருந்திய பசுநிரை" (பு. வெ. 5, உரை) ; "பாலெ டுத்த பொற் குடநிகர் மடியின பருவச், சூலெ டுத்தநல் வயிற்றின மழவிடை தொடர்வ" வி. பா. நிரைமீட்சி. 57.

5. பி - ம். 'புலம்பிற்கலங்கி'

9. "விலங்குகள் மேயாமையின், வாயிழந்தன ; 'மாமேயன் மறப்ப' என்றார் பிறரும்" சீவக. 1158, ந.

13. புன்கொடி முசுண்டை : மலைபடு. 101.

14. பீரத்திற்குப் பொன் உவமை : "பொன்புரை பீரத் தலர்", "பொன்னென, இவர்கொடிப் பீர மிரும்புதன் மலரும்" ஐங். சஙஉ: 5, சசுச : 1 - 2.

15 பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி
யிருங்களி பரந்த வீர வெண்மணற்
செவ்வரி நாரையோ டெவ்வாயுங் கவரக்
கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்ப்
பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை
20 யகலிரு விசும்பிற் றுவலை கற்ப
வங்க ணகல்வய லார்பெயற் கலித்த
வண்டோட்டு நெல்லின் வருகதிர் வணங்க
முழுமுதற் கமுகின் மணியுறழ் பெருத்திற்
கொழுமட லவிழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை
25 நுண்ணீர் தெவிள வீங்கிப் புடைதிரண்டு
தெண்ணீர்ப் பசுங்காய் சேறுகொள முற்ற
நனிகொள் சிமைய விரவுமலர் வியன்காக்
குளிர்கொள் சினைய குரூஉத்துளி தூங்க
மாட மோங்கிய மல்லன் மூதூ
30 ராறுகிடந் தன்ன வகனெடுந் தெருவிற்
படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோண்

---

பீரென்னுஞ் சொல் அம்முச்சாரியை பெற்றுவருதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். புள்ளிமயங். சூ. 70, ந.

18. சாயென்பது நுணுக்கமாகிய குறிப்பை உணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள் (தொல். உரி. சூ. 34, சே. ந; இ-வி. சூ. 281); இவ்வடி பெயரின்பின் உரிச்சொல் நின்றதற்குமுதாரணம்; இ-வி. சூ. 280.

19. பி-ம். 'பெயலுழந்து'

பொங்கல் வெண்மழை: "பொங்க லிளமழை" (ஐங். உஎசு : 3); "பெய்து புறந்தந்து பொங்க லாடி, விண்டுச் சேர்ந்த வெண்மழை" (பதிற். ருரு : 14-5); "பெய்து புலந்துறந்த பொங்கல் வெண்மழை" அகநா. உகஎ : 1.

வெண்மழை: முல்லை. 100.

20. அகலிரு விசும்பு: பெரும்பாண். 1.

"மாரி கற்பான் றுவலைநாட் செய்வ தேபோல்" சீவக. 2070.

26. "தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்" மதுரை. 400.

30. மதுரை. 359-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

31. படலைக்கண்ணி: பெரும்பாண். 60-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

பரேரெறுழ்: பட்டினப். 294.

முடலை யாக்கை முழுவலி மாக்கள்
வண்டுமூசு தேறன் மாந்தி மகிழ்சிறந்து
துவலைத் தண்டுளி பேணார் பகலிறந்
35 திருகோட் டறுவையர் வேண்டுவயிற் றிரிதர
வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத்தோண்
மெத்தென் சாயன் முத்துறழ் முறுவற்
பூங்குழைக் கமர்ந்த வேந்தெழின் மழைக்கண்
மடவரன் மகளிர் பிடகைப் பெய்த
40 செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்
தவ்வித ழவிழ்பதங் கமழப் பொழுதறிந்
திரும்புசெய் விளக்கி னீர்ந்திரிக் கொளீஇ
நெல்லு மலருந் தூஉய்க் கைதொழுது
மல்ல லாவண மாலை யயர
45 மனையுறை புறவின் செங்காற் சேவ
லின்புறு பெடையொடு மன்றுதேர்ந் துண்ணா
திரவும் பகலு மயங்கிக் கையற்று
மதலைப் பள்ளி மாறுவன விருப்பக்
கடியுடை வியனகர்ச் சிறுகுறுந் தொழுவர்

---

31 - 2. ஒ. பெரும்பாண். 60 - 61.

36. பி - ம். 'வள்ளியின்'
"வெள்ளி வள்ளியின் விளங்குதோள்" சீவக. 420.

36 - 7. வழிமோனைக்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். செய். சூ. 94, பேர்.

39. பிடகைப்பெய்த: மதுரை. 397.

39 - 40. செந்தொடையாவதன்றி மோனைத் தொடைப்பாடு இன்றென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். செய். சூ. 94, பேர்.

43. மலர் தூவுதல்: முல்லை. 8 - 10-ஆம் அடிகளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

43 - 4. "அகநக ரெல்லா மரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகன்மாய்ந்த, மாலை" சிலப். ௯ : 1 - 3.
சிலப். ௯ : 1 - 4, அடியார். மேற்.

45 - 6. மனையுறை புறவு மன்று தேர்ந்துண்ணல்: "மனையுறை குரீஇ, முன்றி லுணங்கன் மாந்தி மன்றத், தெருவினுண் டாது குடைவன வாடி" குறுந். ௪௬ : 2 - 4.

49. "கடியுடை வியனக ரவ்வே" புறநா. ௧௫ : 3.

50 கொள்ளுறழ் நறுங்கற் பலகூட்டு மறுக
வடவர் தந்த வான்கேழ் வட்டந்
தென்புல மருங்கிற் சாந்தொடு துறப்பக்
கூந்தன் மகளிர் கோதை புனையார்
பல்லிருங் கூந்தற் சின்மலர் பெய்ம்மார்
55 தண்ணறுந் தகர முளரி நெருப்பமைத்
திருங்கா ழகிலொடு வெள்ளயிர் புகைப்பக்
கைவல் கம்மியன் கவின்பெறப் புனைந்த
செங்கேழ் வட்டஞ் சுருக்கிக் கொடுந்தறிச்
சிலம்பி வானூல் வலந்தன தூங்க
60 வானுற நிவந்த மேனிலை மருங்கின்
வேனிற் பள்ளித் தென்வளி தரூஉம்
நேர்வாய்க் கட்டளை திரியாது திண்ணிலைப்
போர்வாய் கதவந் தாழொடு துறப்பக்
கல்லென் றுவலை தூவலின் யாவருந்
65 தொகுவாய்க் கன்னற் றண்ணீ ருண்ணார்
பகுவாய்த் தடவிற் செந்நெருப் பார
வாடன் மகளிர் பாடல்கொளப் புணர்மார்
தண்மையிற் றிரிந்த வின்குரற் றீந்தொடை
கொம்மை வருமுலை வெம்மையிற் றடைஇக்

---

51. மு. அகநா. ௩௪௦ : 16.
சிலப். ௪ : 37 - 8, அடியார். மேற்.

51-2. "வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத், தென்மலைப் பிறந்த சந்தன மறுக" சிலப். ௪ : 37 - 8.

54. பல்லிருங் கூந்தல் : ஐங். ௩௦௮ : 1, ௪௨௧ : 1 ; அகநா. ௪௩ : 11.

56. "குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு, குணதிசை மருங்கிற் காரகி லுறந்து" சிலப். ௪ : 35 - 6.

"அகிலென்றது ஆகுபெயராற் புகையை ; 'இருங்.........புகைப்ப' என்றார் நெடுநல் வாடையினும்"

57. கைவல் கம்மியன் : நெடுநல். 85.

66. தடவு : "வடபான் முனிவன் றடவினுட் டோன்றி" (புறநா. ௨௦௧ : 8) ; "தடவளர் முழங்குஞ் செந்தீ" சீவக. 2373.

68. பி - ம். 'தன்மையிற்றிரிந்த'

69. "முலைவேதி னொற்றி முயங்கிப் பொதிவேம்" (கலி. ௧௦௬ : 35);

70 கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்பக்
காதலர்ப் பிரிந்தோர் புலம்பப் பெயல்கனைந்து
கூதிர்நின் றன்றாற் போதே மாதிரம்
விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டில
மிருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்
75 பொருதிறஞ் சாரா வரைநா ளமயத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்
தொருங்குடன் வளைஇ யோங்குநிலை வரைப்பிற்
80 பருவிரும்பு பிணித்துச் செவ்வரக் குரீஇத்
துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு
நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்
போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்
தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற்
85 கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்
தையவி யப்பிய நெய்யணி நெடுநிலை
வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுகக்

---

"கொம்மை வரிமுலை வெம்மை வேதுறீஇ" (சிலப். உஅ: 16); "தடமுலை வேதுகொண் டொற்றியும்" கலிங்க. கடை. 13.

70. கருங்கோட்டுச்சீறியாழ்: மலைபடு. 534; புறநா. கஉஎ: 1; கசடு: 5.

72. கூதிர்நின் றன்றாற் போதே: அகநா. உகூச: 10.

82. "நாளொடு பெயரிய நவையி லாமரம்" வாயு. பார்ப்பதி திருமணம். 9.

85. கைவல் கம்மியன்: நெடுநல். 57.

86. முருகு. 228-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

"வாயிலில் தெய்வமுறையுமாகலின், அதற்கு அணியும் நெய்யு மாம்; 'ஐயவி.........நிலை' என்பதனானுணர்க" மதுரை. 354, ந.

87. யானையின் மீது கொடி: "கொடிநுடங்கு நிலைய கொல் களிறு மிடைந்து", "மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி, வரை மிசை யருவியின் வயின்வயி னுடங்க", "உரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும் பாசறை" (பதிற். ருஉ: 1, கூக: 1-2, அஅ: 17); "கொல் களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்" (புறநா. க: 7); "இழந் தன நெடுங்கொடி.........யானை" கம்ப. சம்புமாலி. 26.

குன்றுகுயின் றன்ன வோங்குநிலை வாயிற்
றிருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பிற்
90 றருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து
நெடுமயி ரெகினத் தூநிற வேற்றை
குறுங்கா லன்னமோ டுகளு முன்கடைப்
பணைநிலை முனைஇய பல்லுளைப் புரவி
புல்லுணாத் தெவிட்டும் புலம்புவிடு குரலொடு
95 நிலவுப்பயன் கொள்ளு நெடுவெண் முற்றத்துக்
கிம்புரிப் பகுவா யம்பண நிறையக்
கலிழ்ந்துவீ ழருவிப் பாடுவிறந் தயல
வொலிநெடும் பீலி யொல்க மெல்லியற்
கலிமயி லகவும் வயிர்மரு ளின்னிசை
100 நளிமலைச் சிலம்பிற் சிலம்புங் கோயில்
யவன ரியற்றிய வினைமாண் பாவை
கையேந் தையக னிறையநெய் சொரிந்து
பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிரெரி

---

89. முருகு. 70-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

90. பி-ம். 'ஞெமரிய'

மு. பெருங். ௧. 47 : 197.

"தருமணன் ஞெமிரிய திருநா றொருசிறை" மணி. ௧௮ : 44.

ஞெமிர்தலென்பதற்குப் பொருள் பரத்தலெனக்கூறி இவ்வடியை மேற்கோளாகக் காட்டினர்; தொல். உரி. சூ. 65, சே. ந; இ-வி. சூ. 281, உரை.

93. "பணைநிலை முனைஇய வினைநவில் புரவி" அகநா. ௨௱௪ : 12.

95. "வெண்ணிலவின் பயன்றுய்த்தும்" (பட்டின. 114); "நிலவுப்பயன் கொள்ளு நெடுநிலா முற்றத்து" (சிலப். ௨ : 31); "சுடர்வெண் ணிலவின் றெழிற்பயன் கொண்ட, மிசைநீண் முற்றத்து" (பெருங். ௧. 33 : 61-2); "பொங்கிணர்க் காவு தோறும் புதுமணற் குன்று தோறும், பங்கயச் செங்க ணெம்மான் பானிலாப் பயன் கொண்டு" பாகவத. ௧௰. கோவியரை. 22.

97. "அவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல" பெரும்பாண். 226.

98. "மஞ்ஞை, ஒலிநெடும் பீலி" புறநா. ௫௰ : 2-3.

99. பி-ம். 'களிமயில்'

100. நளிமலைச்சிலம்பு : முருகு. 238.

101-3. முல்லை. 85-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க;

யறுவறு காலேதோ றமைவரப் பண்ணிப்
105 பல்வேறு பள்ளிதொறும் பாயிரு ணீங்கப்
பீடுகெழு சிறப்பிற் பெருந்தகை யல்ல
தாடவர் குறுகா வருங்கடி வரைப்பின்
வரைகண் டன்ன தோன்றல வரைசேர்பு
வில்கிடந் தன்ன கொடிய பல்வயின்
110 வெள்ளி யன்ன விளங்குஞ் சுதையுரீஇ
மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்
செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவ
ருருவப் பல்பூ வொருகொடி வளைஇக்
கருவொடு பெயரிய காண்பி னல்லிற்
115 றசநான் கெய்திய பணைமரு ணோன்ற
ளிகன்மீக் கூறு மேந்தெழில் வரிநுதற்
பொருதொழி நாக மொழியெயி றருகெறிந்து
சீருஞ் செம்மையு மொப்ப வல்லோன்
கூருளிக் குயின்ற வீரிலை யிடையிடுபு
120 தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப்
புடைதிரண் டிருந்த குடத்த விடைதிரண்
டுள்ளி நோன்முதல் பொருத்தி யடியமைத்துப்
பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டில்

---

"வேண்டிடந் தோறுந் தூண்டுதிரிக் கொளீஇக், கைவயிற் கொண்ட நெய்யகற் சொரியும், யவனப் பாவை யணிவிளக் கழல" பெருங். க. 47: 173-5.

107. "அரச ரூரிமையி லாடவ ரணுகார்" (மணி. உஉ: 55); "அரசன் கோயிலில் ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பி னுள்ளே" என இவ்வடியை உரைநடையிலமைத்துக்கூறுவர்; சீவக. 1713, ந.

"குழைமுகமகளிர் காக்கும் புரிசையெனவே அந்தப்புரமாயிற்று; 'ஆடவர்.........வரைப்பின்' என்றார் பிறரும்" சீவக. 275, ந.

109. பி-ம் 'விற்கிடந்தன்ன.........பலவயின்'

112. மதுரை. 485-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

115. சான்றோர் செய்யுட்கண் வடசொல் திரிந்துவந்ததற்கு இவ்வடி மேற்கோள் (தொல். எச்ச. சூ. 6, சே. ந; தண்டி. சூ. 25, உரை; இ-வி. சூ. 175, 635); "தசநூறு: இது கிரந்தமுந் தமிழுங் கூடிய வாறு; 'தசநான் கெய்திய.........தாள்' இது நேரேநல்வாடை" தக்க. 635, உரை.

மடைமா ணுண்ணிழை பொலியத் தொடைமாண்டு
125 முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்துப்
புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்
தகடுகண் புதையக் கொளீஇத் துகடீர்ந்
தூட்டுறு பன்மயிர் விரைஇ வயமான்
வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து
130 முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து
மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத்
துணைபுண ரன்னத் தூநிறத் தூவி
யிணையணை மேம்படப் பாயணை யிட்டுக்
காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
135 தோடமை தூமடி விரித்த சேக்கை
யாரந் தாங்கிய வலர்முலை யாகத்துப்
பின்னமை நெடுவீழ் தாழத் துணைதுறந்து
நன்னுத லுலறிய சின்மெல் லோதி
நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண்
140 வாயுறை யழுத்திய வறிதுவீழ் காதிற்
பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்
செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்துப்
145 பூந்துகின் மரீஇய வேந்துகோட் டல்கு
லம்மா சூர்ந்த வயிர்நூற் கலிங்கமொடு

---

132-3. "இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட், டுணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணையசைஇ" (கலி. எ௨ : 1-2); "துணைபுண ரன்னத் தூவியிற் செறித்த, இணையணை", "இணைபுண ரெகினத் திளமயிர் செறித்த, துணையணைப் பள்ளி" சிலப். ௪ : 66-7, ௨௭ : 208-9.

134. ப. ௪௨௨, 2-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

140. பி-ம். 'வாயறை'

141. வார்மயிர்முன்கை : பொருந. 32-ஆம் அடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

142. கடிகைநூல் யாத்து : "கைந்நூல் யாவாம்" (குறுந். ௨௧௮ : 2); "காப்புநூல் யாத்து" தொல். புறத். சூ. 5, ந. மேற்.

143-4. "வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்" சிலப். ௬: 95.

புனையா வோவியங் கடுப்பப் புனைவி
றளிரேர் மேனித் தாய சுணங்கி
னம்பணைத் தடைஇய மென்றோண் முகிழ்முலை
150 வம்புவிசித் தியாத்த வாங்குசாய் நுசுப்பின்
மெல்லியன் மகளிர் நல்லடி வருட
நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவு நெடியவு முரைபல பயிற்றி
155 யின்னே வருகுவ ரின்றுணை யோரென
வுகத்தவை மொழியவு மொல்லாண் மிசக்கலுழ்ந்து
நுண்சேறு வழித்த நோனிலைத் திரள்கா
லூறு வறுமுலை கொளீஇய காறிருத்திப்
புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசைத்
160 திண்ணிலை மருப்பி னுடுதலை யாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலன் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய

147. "புனையா வோவியம் போல நிற்றலும்", "புனையா வோவியம் புறம்போந் தென்ன" மணி. கரு : 131; உஉ : 88.

149. அம்பணைத் தடைஇய மென்றோள் : "வீங்கிறைத் தடைஇய வமைமருள் பணைத்தோள்" பதிற். கூச : 3.

தடைஇய மென்றோள் : கலி. கூ௩ : 5.

152. பி-ம். 'நரைவிரவுற்ற'

"நாறைங் கூந்தலு நரைவிரா வுற்றன" (மணி. உஉ : 130); "நரையிடைப் படர்ந்த நறுமென் கூந்தலர்" பெருங். க. 41 : 99.

152-3. "நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற், செம்முது செவிலியர் பலபா ராட்ட" அகநா. உகூச : 1-2.

155. "இன்னே வருகுவர்" முல்லை. 16.

156. பி-ம். 'முகைத்தவை'

155-6. முல்லை. 20-22.

153-6. "தலைவியை வற்புறுக்கும் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் பொழுது போக்குதற்குரியர்; இக்கருத்தானே சான்றோர், 'செம்முகச்.........ஒல்லாள்' என்றார் பாட்டினுள்" தொல். செய். சூ. 175, ந.

161. வீங்குசெலன் மண்டிலம் : "யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்" புறநா. அ : 6.

வுரோகிணி நினைவன ணேக்கி நெடிதுயிரா
மாயித ழேந்திய மலிந்துவீ ழரிப்பனி
165 செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியாப்
புலம்பொடு வதியு நலங்கிள ரரிவைக்
கின்னா வரும்படர் தீர விறறந்
தின்னே முடிகதில் லம்ம மின்னவி
ரோடையொடு பொலிந்த வினைநவில் யானை
170 நீடிர டடக்கை நிலமிசைப் புரளக்
களிறுகளம் படுத்த பெருஞ்செய் யாடவ
ரொளிறுவாள் விழுப்புண் காணிய புறம்போந்து
வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கித்
தெற்கேர் பிறைஞ்சிய தலைய நற்பல்
175 பாண்டில் விளக்கிற் பருஉச்சுட ரழல
வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்
மணிபுறத் திட்ட மாத்தாட் பிடியொடு
பருமங் களையாப் பாய்பரிக் கலிமா
180 விருஞ்சேற்றுத் தெருவி னெறிதுளி விதிர்ப்பப்
புடைவீ ழந்துகி லிடவயிற் றழீஇ
வாடோட் கோத்த வன்கட் காளை

164-5. கண்ணீரை விரலால் வழித்துத்தெறித்தல்: "இரும்பல் கூந்தற் சேயிழை மடந்தை, கனையிரு ணடுநா ளணையொடு பொருந்தி, வெய்துற்றுப் புலக்கு நெஞ்சமொ டைதுயிரா, வாயிதழ் மழைக்கண் மல்கநோய் கூர்ந்து, பெருந்தோ ணனைக்குங் கலுழ்ந்துவா ரரிப்பனி, மெல்விர லுகிரிற் றெறியினள்" அகநா. ருஎரு: 10-15.

169. வினைநவில் யானை: "தாரொடு பொலிந்த வினைநவில் யானை" (மலைபடு. 227); "செல்சமந் தொலைத்த வினைநவில் யானை" (பதிற். அஉ: 4); "வினைநவில் யானை" புறநா. ருசஎ: 11.

169-71. "வேழத்துப்........பருஉக்கை துமிய........ஒழிந் தோர்" (முல்லை. 69-72); "அம்புசென் றிறுத்த வரும்புண் யானைத், தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து, நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள, எறிந்துகளம் படுத்த வேந்துவாள் வலத்தர்" புறநா. கக: 9-12.

175. "பாண்டில் விளக்குப் பருஉச்சுட ரழல", "சுடரும் பாண் டிற் றிருநாறு விளக்கத்து" (பதிற். சஎ: 6, ருஉ: 13); "உள்ளிழு துறீஇய வொள்ளடர்ப் பாண்டில்" பெருங். க. 33: 93.

சுவன்மிசை யமைத்த கையன் முகனமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை
185 தவ்வென் றசைஇத் தாதுளி மறைப்ப
நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே.

183. முகனமர்ந்து : குறள். 84, 92-3.

185. பி-ம். 'பரம்புதுளி'

"ஊதையுந், தாதுளர் கானற் றவ்வென் றன்றே" (நற். ௩௧௧: 1-2); "தவ்வெனக் குடித்தி" குறுந். ௩௫௬ : 4.

தவ்வென்பது குறிப்புமொழியென்றுகூறி, இவ்வடிகளை மேற்கோளாகக்காட்டினர் ; குறள். 1144, பரிமேல்.

186. பி-ம். 'யாமத்துப்பள்ளி'

186-8. தொல். கற்பு. சூ. 34, ந. மேற்.

176-88. "அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇ" என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள் ; தொல். புறத். சூ. 8, ந.

## இதன் பொருள்.

இப்பாட்டிற்கு நெடுநல்வாடை யென்று பெயர் கூறினர். இப்பெயர் நெடிதாகிய நல்ல வாடையென விரிதலிற் பண்புத்தொகையாயிற்று. [1] வாடையென, வாடைக்காற்றிற் றோன்றின கூதிர்ப்பாசறையை யுணர்த்தலிற் [2] பிறந்தவழிக் கூறலென்னும் ஆகுபெயராய் நின்றது. இப்பாட்டினுள், "கூதிர்நின் றன்றாற் போதே" (72) எனவும், "கூதிர்ப் பாஅள்" (12) எனவுங் கூறுகின்றாராதலின், இது, [3] "வாகை தானே பாலையது புறனே" எனப் பாலைக்குப்புறனாகக் கூறிய வாகைத்திணையாய் அதனுள், [4] "கூதிர் வேனி லென்றிரு பாசறைக், காதலி னொன்றிக் கண்ணிய மரபினும்" எனக் கூறிய கூதிர்ப்பாசறையேயாயிற்று. தலைவனைப் பிரிந்திருந்து வருந்துந்தலைவிக்கு [5] ஒருபொழுது ஓரூழிபோல நெடிதாகிய வாடையாய்ப் பாலையாகிய உரிப்பொருளுணர்த்திற்று. அகத்தொடுங்

[1] "வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கி" (நெடுநல். 173) என்று வாடை இந்நூலிற் குறிப்பிடப்பட்டது காண்க.

[2] தொல். வேற்றுமைமயங்கு. சூ. 31.

[3] தொல். புறத். சூ. 18.

[4] தொல். புறத். சூ. 21.

[5] "ஊழியிற் பெரிதா லொழிகை யென்னும்" பெரியதிருமொழி.

கிப் போகம்நுகர்வார்க்குச் சிறந்த காலமாயினும் அரசன் [1] போகம் வேண்டிப் பொதுச்சொற் பொருனய் அப்போகத்தில் மனமற்று வேற் றுப் புலத்துப் போந்திருக்கின்ற இருப்பாகலின், அவற்கு நல்லதாகிய வாடையாயிற்று. எனவே காமத்திடத்து வெற்றியெய்தலின், வாகைத் திணையாயிற்று; இப்பாட்டு, [2] சுட்டி ஒருவர்ப் பெயர் கொள்ளாமையின் அகப் பொருளாமேனும், "வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகம்" (176) என [3] அடையாளப்பூக்கூறினமையின், அகமாகாதாயிற்று.

1 - 2. [வையகம் பனிப்ப வலனேர்பு வளைஇப், பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென :] பொய்யா வானம் வையகம் பனிப்ப வலன் வளைஇ ஏர்பு புது பெயல் பொழிந்தென - பருவம்பொய்யாத மேகம் உலகெல்லாங்குளிரும்படியாகத் தான் கிடந்தமலையை வலமாக வளைந்து எழுந்திருந்து கார்காலத்து மழையைப் பெய்ததாக,

3. ஆர்கலி முனைஇய கொடு கோல் கோவலர் - வெள்ளத்தை வெறுத்த [4] கொடிய கோலினையுடைய இடையர்,

4. ஏறு உடை இனம் நிரை வேறு புலம் பரப்பி - ஏற்றையுடைய இனங்களையும் பசுக்களையும் மேட்டுநிலமாகிய முல்லைநிலத்தே மேயவிட்டு,

எருமையையும் ஆட்டையும் [5] இனமென்றார்.

5. புலம் பெயர் புலம்பொடு கலங்கி - தாம் பயின்ற நிலத்தைக் கைவிட்டுப்போம் தனிமையினாலே வருத்தமெய்தி,

ஊர்க்கு அண்ணியவிடத்தேமேய்த்து ஊரிற்றங்காமையிற் புலம் பெயர் புலம்பென்றார்.

5 - 6. கோடல் நீடு இதழ் கண்ணி நீர் அலை கலாவ - காந்தளினது நீண்ட இதழ்களாற்கட்டின கண்ணி நீரலைத்தலாலே கலக்கமெய்த,

7 - 8. மெய் கொள் பெரு பனி நலிய பலருடன் கை கொள் கொள்ளியர் கவுள் புடையூஉ நடுங்க - தம் உடம்பிடத்தேகொண்ட

---

[1] "போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறுஅது" (புறநா. அ : 2); "பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு" கலி. சஅ : 1. [2] தொல். அகத். சூ. 54.

[3] அடையாளப்பூ : ப. நகக, 3-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

[4] ப. உஎரு, 5-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

[5] பசு எருமை ஆடு என்பனமூன்றும் மூவினமென்றும் மூந்நிரை யென்றும் வழங்கப்பெறும்; "மூவின மேய்த்தல்" (நம்பி. சூ.உஉ : 13); "இனமூன்றுந் துன்றப், போற்றிக் குடிமல்கிய பொற்பின பாடியெல் லாம்" (தணிகை. நாடு. 69); "சால நன்று மூந்நிரையு முடையேன்" (பெரிய. சிறுத்தொண்ட. 49); "நிரைவாழி - மூந்நிரை வாழ்க" தக்க. 9, உரை.

பெரியகுளிர்ச்சி வருத்துகையினாலே பலருங்கூடிக் கையிடத்திலே கொண்ட நெருப்பினையுடையராய்ப் [1] பற்பறைகொட்டி நடுங்க,

கையை நெருப்பிலேகாய்த்தி அதிற்கொண்ட வெம்மையைக் கவுளிலே அடுத்தலிற் கைக்கொள் கொள்ளியரென்றார்.

கோவலர் (3) பலருடன் (7) பரப்பிக் (4) கலங்கிக் (5) கலாவக் (6) கொள்ளியராய்க் கவுள்புடையூஉ நடுங்க (8) என்க.

9. மா மேயல் மறப்ப - விலங்குகள் மேய்தற்றொழிலை மறந்தொடுங்க,

மந்தி [2] கூர - குரங்கு குளிர்ச்சிமிக,

குன்றுக்கவென்பாருமுளர்.

10. [பறவை படிவன வீழ :] படிவன பறவை வீழ - மரங்களிலே தங்குவனவாகிய புள்ளுக்கள் காற்றுமிகுதியால் நிலத்தேவீழ,

10-11. [கறவை, கன்றுகோ ளொழியக் கடியவீசி :] கறவை கடிய வீசி கன்று கோள் ஒழிய - பசுக்கள் குளிரின் மிகுதியாற் கடியவாய் உதைத்துக் கன்றை ஏற்றுக்கோடலைத் தவிர,

12. குன்று குளிர்ப்பன்ன கூதிர் பால் நாள் - மலையைக் குளிர்ச்சி செய்யுமாறுபோன்ற கூதிர்க்காலத்து நடுயாமத்தே புலம்பொடு வதியுமரிவைக்கு (166) என மேலே கூட்டுக.

13-4. புல் கொடி முசுண்டை பொறி புறம் வால் பூ பொன் போல் பீரமொடு புதல் புதல் மலர - புல்லிய கொடியினையுடைய முசுட்டையில் திரண்ட புறத்தையுடைய வெள்ளிய பூப் பொன்போன்ற நிறத்தையுடைய பீர்க்குடனே சிறுதூறுகடோறும் விரிய,

15-9. [பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி, யிருங்களி பரந்த வீர வெண்மணற், செவ்வரி நாரையோ டெவ்வாயுங் கவரக், கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்ப், பெயலுலந் தெழுந்த :]

கடு புனல் சாஅய் கயல் அறல் எதிர (18) - கடிதாயோடின நீரினின்றும் ஒருகால் பற்றிக் கயல்கள் அற்றநீர்க்கு எதிரேவருகையினாலே,

பெயல் உலந்து எழுந்த (19) பைங்கால் கொக்கின் மெல் பறை தொழுதி (15) - மழையாலேவருந்தி அது சிறிது விட்டவளவிலே எழுந்த பசியகாலையுடைய கொக்கினது மெல்லிய சிறகரையுடைய திரள்,

---

[1] "முகைவெண்ப னுதிபொர முற்றிய கடும்பனி" (கலி. ௩௧: 20); "பன் னுனிபொரு காலம்வர" (வேங்கைக்கோவை, 413) ; "வாடைவந் துடற்ற ..... தருமிரு நிரைப்பலுந் தாளந் தகர்க்க" வாட்போக்கிக். 85 : 30 - 33.

[2] "துவலையி னனைந்த புறத்த தயலது, கூர விருக்கை யருளி" நற். கஅக : 6 - 7.

செ வரி நாரையொடு (17) இரு களி பரந்த ஈரம் வெள் மணல் (16) எ வாயும் கவர (17) - சிவந்த வரியினையுடைய நாரைகளோடே கரிய வண்டலிட்ட சேறுபரந்த ஈரத்தினையுடைய வெள்ளிய மணலாகிய எவ் விடங்களிலுமிருந்து அக்கயலைத்தின்ன,

19 - 20. பொங்கல் வெள் மழை 1 அகல் இரு விசும்பில் துவலை கற்ப - பொங்குதலையுடைய வெள்ளியமேகம் அகன்ற பெரிய ஆகாயத்தே சிறுதுவலையாகத்தூவ மேற் கற்கும்படியாகக் கூதிர் ஈண்டுகின்றது (72) எனமேலே கூட்டுக.

கற்பவென்னுஞ் செயவெனெச்சம் ஈண்டு எதிர்காலமுணர்த்திற்று.

துவலைகற்பவென்றார், மிகப்பெய்தலே தனக்கு இயல்பென்பது தோன்ற.

21 - 2. அம் கண் அகல் வயல் ஆர் பெயல் கலித்த வள் தோடு நெல்லின் வரு கதிர் வணங்க - அழகிய இடத்தையுடைய அகன்ற வய னிறைந்த நீராலே மிக்கெழுந்த வளவிய இலையினையுடைய நெல்லினின் றும் புறப்பட்ட கதிர் முற்றி வளைய,

2 புல்லாதலின் தோடென்றார்.

23 - 4. முழு முதல் கமுகின் மணி உறழ் எருத்தின் கொழு மடல் அவிழ்ந்த குழூஉ கொள் பெரு குலை - பெரிய அடியினையுடைய கமுகி னது நீலமணியையொத்த கழுத்திற் கொழுவிய மடலிடத்துப் பாளை விரிந்த திரட்சியைக்கொண்ட தாறுகளில்,

25 - 6. [நுண்ணீர் தெவிள வீங்கிப் புடைதிரண்டு, தெண்ணீர்ப் பசுங்காய் சேறுகொள முற்ற :] தெள் நீர் பசு காய் நுண் நீர் தெவிள வீங்கி புடை திரண்டு சேறு கொள முற்ற - தெளிந்தநீரை உள்ளே யுடைய பசியகாய் நுண்ணிய நீர்தான் திரளும்படியாகவீங்கிப் பக்கந் திரண்டு இனிமைகொள்ளும்படி முற்ற,

27. [நளிகொள் சிமைய விரவுமலர் வியன்கா :] விரவு மலர் நளி கொள் சிமையம் வியல் கா - முன்பு விரவின பூக்கள்செறிதலைத் தன் னிடத்தேகொண்ட உச்சியினையுடையவாகிய அகன்றபொழில்கள்,

28. குளிர் கொள் சினைய குரூஉ துளி தூங்க - குளிர்ச்சியைத் தம் மிடத்தேகொண்ட கொம்புகளையுடையவாகி அவற்றில் ஏற்றுநின்ற நிறத்தையுடைய மழைத்துளி மாறுமல்வீழ,

---

1 "அகலிரு விசும்பில் - தன்னை யொழிந்த நான்கு பூதமும் தன் னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயத்திடத்தே" பெரும்பாண். 1, ந.

2 "தோடே மடலே......புல்லோடு வருமெனச் சொல்லினர் புல வர்" தொல். மரபு. சூ. 86.

29-30. மாடம் ஓங்கிய மல்லல் மூதூர் ஆறு கிடந்தன்ன அகல் நெடு தெருவில் - மாடங்களுயர்ந்த வளப்பத்தையுடைய பழையவூரில் யாறு கிடந்தாற்போன்ற அகன்ற நெடியதெருவிலே திரிதர (35) என்க.

31-2. படலை கண்ணி பரு ஏர் எறுழ் திணி தோள் முடலை யாக்கை முழு வலி மாக்கள் - தழைவிரவின மாலையினையும் பருத்த அழகினையுடையவாகிய வலியினையுடைய இறுகினதோளினையும் முறுக்குண்ட உடம்பினையும் நிரம்பின மெய்வலியினையுமுடைய மிலேச்சர்,

33. வண்டு மூசு தேறல் மாந்தி மகிழ் சிறந்து - வண்டுகள்மொய்க்கும் கள்ளையுண்டு மகிழ்ச்சிமிக்கு,

34-5. [துவலைத் தண்டுளி பேணார் பகலிறந், திருகோட் டறுவையர் வேண்டுவயிற் றிரிதர :]

துவலை தண் துளி பேணார் இரு கோடு அறுவையர் வேண்டு வயின் திரிதர - சிறுதுவலையாகிய தண்ணியதுளியை அஞ்சாராய் முன்னும்பின்னுந் தொங்கலாக நாலவிட்ட துகிலினையுடையராய்த் தமக்கு வேண்டின இடத்தே திரிதலைச்செய்ய,

'பகலிறந்து' என்பதனை மேலேகூட்டுக.

36-7. [வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத்தோண், மெத்தென்:] வெள்ளி வள்ளி வீங்கு இறை மெத்தென் பணை தோள் - வெளுக்கப்பட்டதாகிய சங்குவளை இறுகின இறையினையுடைய மெத்தென்ற பணை போலுந் தோளினையும்,

37. மெத்தென் சாயல் - மெய்ம்முழுதும் [1] கட்புலனாய்த்தோன்றுகின்ற மெத்தென்ற சாயலினையும்,

முத்து உறழ் முறுவல் - முத்தையொத்த பல்லினையும்,

38. பூ குழைக்கு அமர்ந்த ஏந்து எழில் மழை கண் - பொலிவினையுடைய மகரக்குழையிட்ட அழகிற்குப் பொருந்தின உயர்ந்து தோன்றுகின்ற அழகினையுடைய குளிர்ச்சியையுடைய கண்ணினையும்,

இனி உருபுமயக்கமாக்கிக் குழையிடத்தேசென்றமர்ந்த கண்ணென்று முரைப்ப.

39. ஏந்து (38) மட வரல் மகளிர் - உயர்ந்துதோன்றுகின்ற மடப்பத்தினையுடைய மகளிர்,

தோள் (36) முதலியவற்றையுடைய மகளிரென்க.

39-41. [பிடகைப் பெய்த, செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத், தவ்வித ழவிழ்பதங் கமழ :] பிடகை பெய்த பைங்கால் பித்திகத்து செவ்வி அரும்பின் [2] அ இதழ் பகல் இறந்து (34) அவிழ் பதம் கமழ - பூந்தட்டிலேயிட்டு வைத்த பசிய காலினையுடைய பிச்சியினுடைய அல

1 ப. கஙிக, முதலடிக்குறிப்பைப் பார்க்க.

2 ப. உகிக, 4-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

ருஞ்செவ்வியையுடைய அரும்பினது அழகிய இதழ்கள் பகற்பொழுதைக் கடந்து விரியுஞ் செவ்வி மணக்கையினாலே,

செவ்வரியரும்பு பாடமாயிற் சிவந்த வரியினையுடைய அரும்பென்க.

41. [1] பொழுது அறிந்து - அந்திக்காலமென்றறிந்து,

என்றதனாற் கூதிரால் [2] இரவும்பகலுந் தெரியாவென்றார்.

42. இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ - இரும்பாற் செய்த [3] தகளியிலே நெய்தோய்ந்த திரியைக்கொளுத்தி,

விளக்கு : ஆகுபெயர்.

43. நெல்லும் மலரும் தூஉய் கைதொழுது - [4]நெல்லையும் மலரையுஞ்சிதறி [5] இல்லுறை தெய்வத்தை வணங்கி,

44. மல்லல் ஆவணம் மாலை அயர - வளப்பத்தையுடைய [6] அங்காடித்தெருவெல்லாம் மாலைக்காலத்தைக் கொண்டாட,

மகளிர் (39) கமழுகையினாலே பொழுதறிந்து (41) திரிக்கொளீஇத் (42) தூவித்தொழுது (43) அயரவென்க.

45-8. [மனையுறை புறவின் செங்காற் சேவ, லின்புறு பெடையொடு மன்றுதேர்ந் துண்ணு, திரவும் பகலு மயங்கிக் கையற்று, மதலைப் பள்ளி மாறுவன விருப்ப :]

இரவும் பகலும் மயங்கி (47) - இராக்காலமும் பகற்காலமும் தெரியாமல் மயங்குகையினாலே,

மனை உறை புறவின் செ கால் சேவல் (45) இன்பு உறு பெடையொடு மன்று தேர்ந்து உண்ணாது (46) - மனையின்கண்ணேயிருக்கும் புறவினுடைய சிவந்தகாலினையுடைய சேவல் தான் இன்பமுறுகரும் பெடையோடு மன்றிலேசென்று இரைதேடியுண்ணாமல்,

---

1 மலர்கள் மலர்தலாற் பொழுதை அறிதல் பண்டை வழக்கமென்று தெரிகின்றது. பொழுதினை அறிவித்தல்பற்றியே மலரும் பருவத்துப் பூவரும்பு போதெனப்பட்டதென்று தோற்றுகிறது. **தக்கயாகப் பரணி உரையாசிரியர்** நாளென்பதற்கு மலரென்று பொருள்கூறியிருத்தல் இக்கருத்தைத் தழுவிப்போலும்.

2 "இரவும் பகலு மயங்கி" நெடுநல். 47.

3 ப. உஅச, 2-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

4 "கொடியிடையார், அகன்ற மனையிடமெங்கும் கதிரோன் மறைந்த மாலைக்காலத்தே அரும்பு புரிநெகிழ்ந்த முல்லையினது ஒளி மலரை நெல்லோடே தூவி இல்லுறை தெய்வத்தை வணங்கி" சிலப். க : 1-2, அடியார்.

5 இல்லுறை தெய்வம் : "அணங்குடை நல்லில்" மதுரை. 578.

6 அங்காடித்தெரு - கடைத்தெரு.

கை அற்று (47) மதலை பள்ளி மாறுவன இருப்ப (48) - செயலற்றுக் கொடுங்கையைத் தாங்குதலையுடைய பலகைகளிலே பறவாதிருந்து கடுத்தகால் ஆறும்படி மாறிமாறி இருக்க,

இனித் தலைமாறியிருப்ப வென்பாருமுளர். மதலைப்பள்ளி-1 கபோதகத்தலை.

இறையுறை புறவும் பாடம்.

49 - 50. கடி உடை வியல் நகர் சிறு குறு தொழுவர் கொள் உறழ் நறு கல் பல கூட்டு மறுக - காவலையுடைய அகன்ற மனைகளில் சிறியராகிய குற்றேவல் வினைஞர் 2 கருங்கொள்ளின் நிறத்தையொத்த நறிய 3 சாத்தம்மியிலே கத்தூரி முதலிய 4 பசுங்கூட்டரைக்க,

51 - 2. வடவர் தந்த 5 வான் கேழ் வட்டம் தென்புலம் மருங்கில் சாந்தொடு துறப்ப - வடநாட்டிலுள்ளார் கொண்டுவந்த வெள்ளிய நிறத்தையுடைய 6 சிலாவட்டம் தென்றிசையிடத்திற் சந்தனத்தோடே பயன்படாமற் கிடப்ப,

53. [கூந்தன் மகளிர் கோதை புனையார் :] மகளிர் கூந்தல் கோதை புனையார் - மகளிர் குளிர்ச்சி மிகுதியால் தம்மயிரிடத்து மாலையிட்டு முடியாராய்,

54. பல் இரு கூந்தல் சில் மலர் பெய்மார் - தம் பலவாகிய கரிய மயிரிடத்தே 7 மங்கலமாகச் சிலமலரிட்டு முடித்தலை வேண்டி,

55 - 6. தண் நறு தகரம் முளரி நெருப்பு அமைத்து இரு காழ் அகிலொடு வெள் அயிர் புகைப்ப - தண்ணிய நறிய மயிர்ச்சந்தனமாகிய விறகிலே நெருப்பை யுண்டாக்கி அதிலே கரிதாகிய வயிரத்தையுடைய அகிலோடே வெள்ளிய 8 கண்ட சருக்கரையையுங் கூட்டிப் புகைப்ப,

57 - 8. கை வல் கம்மியன் கவின் பெற புனைந்த செ கேழ் வட்டம் சுருக்கி - கையாற் புனைதல்வல்ல உருக்குத்துகின்றவனாலே அழகு பெறப் பண்ணின சிவந்த நிறத்தையுடைய 9 ஆலவட்டம் உறையிடப் பட்டு,

1 கபோதகத்தலை - வீட்டின் ஓருறுப்பு.

2 கருங்கொள் : நாலடி. 387. 3 சாத்தம்மி = சாந்து அம்மி.

4 "தண்ணறுஞ் சாந்தமும் - குளிர்ந்த நறிய பசுங்கூட்டும்" சிலப். ௬ : 13, அடியார்.

5 "வான்கேழ் வட்டம் - அழகு கெழுமிய சிலா வட்டம்" (சிலப். ௪ : 37, அரும்பத.); "வான்கேழ் வட்டம் - மிக்க ஒளியையுடைய சிலா வட்டம்" ஷை. அடியார். 6 சிலாவட்டம் - இங்கே சந்தனக்கல்.

7 "மங்கலமாகி............பூவே" நன். பொது. சூ. 30.

8 பி - ம். 'கண்டு சருக்கரை' 9 ஆலவட்டம் - விசிறி.

58 - 9. [கொடுந்தறிச், சிலம்பி வானூல் வலந்தன தூங்க :] சிலம்பி வால் நூல் வலந்தன கொடு தறி தூங்க - சிலந்தியினது வெள்ளிய நூலாற் சூழப்பட்டனவாய் வளைந்த முளைக்கோலிலே தூங்க,

60. வான் உற நிவந்த மேல் நிலை மருங்கின் - தேவரூரைத் தீண்டும்படி உயர்ந்த மேலாம் நிலத்திடத்து,

61 - 2. வேனில் பள்ளி தென் வளி தரூஉம் நேர் வாய் கட்டளை திரியாது - இளவேனிற் காலத்துத் துயிலும் படுக்கைக்குத் தென்றற் காற்றைத்தரும் சாலேகத்திலே நின்று உலாவாதே,

நேர்வாய்க் கட்டளையென்றது மாடத்தின்கட் சாலேகத்தை; கட்டளை தெரியாதென்று பாடமாயின், திறவாதென்க.

62 - 3. திண் நிலை போர் வாய் கதவம் தாழொடு துறப்ப - சிக்கென்ற நிலையினையுடைய இரண்டுகதவும் தம்முட் பொருதல் வாய்த்த கதவு தாழிட்டுக் கிடக்க,

64 - 6. கல்லென் துவலை தூவலின் யாவரும் தொகு வாய் கன்னல் தண்ணீர் உண்ணார் பகு வாய் தடவில் செ நெருப்பு ஆர - கல்லென்கின்ற ஓசையினையுடைய சிறுதுவலையை வாடைக்காற்று எங்கும் பரப்புகையினாலே இளையோரும் முதியோரும் குவிந்தவாயையுடைய [1] கரகத்திற் றண்ணீரைக் குடியாராய்ப் பகுத்தாற்போன்ற வாயையுடைய [2] இந்தளத்திலிட்ட சிவந்த நெருப்பின் வெம்மையை நுகர,

67. ஆடல் மகளிர் பாடல் கொள புணர்மார் - ஆடற்றொழிலையுடைய மகளிர் தாம் பாடுகின்ற பாட்டினை யாழ் தன்னிடத்தே கொள்ளும்படி நரம்பைக் கூட்டுதற்கு,

68 - 9. தண்மையின் திரிந்த இன் குரல் தீ தொடை கொம்மை வரு முலை வெம்மையில் தடைஇ - குளிர்ச்சியாலே தன் நிலைகுலைந்த இனிய குரலாகிய நரம்பைப் பெரிய எழுகின்ற முலையின் வெப்பத்தே தடவி,

தீந்தொடை: ஆகுபெயர்.

70. கரு கோடு சிறு யாழ் பண்ணு முறை நிறுப்ப - கரியதண்டினையுடைய சிறிய யாழைப் பண் நிற்கும் முறையிலே நிறுத்த,

71. காதலர் பிரிந்தோர் புலம்ப - கணவரைப் பிரிந்த மகளிர் வருந்த,

71 - 2. பெயல் கனைந்து கூதிர் நின்றன்றால்-காலமழை செறிந்து கூதிர்க்காலமாய் நிலைபெற்றது; அவ்விடத்து,

---

1 "எரிசுடர் நெருப்பைநீ ரென்ன வேட்டனர், தருகுளிர் நீரினைத் தழலி னஞ்சினார்" சீகாளத்திப். பொன்முகரி. 45.

2 இந்தளம் - தூபமுட்டி; "வீதியிந்த ளத்தகிலின் வீசுபுகை வாசமெழும், ஆதியிந்த ளூரான்" நாற்நேட்டுத். 22.

72. போது - பின்னர் நிகழ்ந்தபொழுது,

வானம் கார்காலத்து மழையைப் பெய்ததாகப் (2) பின்னர் நிகழ்ந்த பொழுது (72) கோவலர் (3) நடுங்க (8) மறப்பக் கூர (9) வீழ (10) ஒழிய (11) மலரக் (14) கவரக் (17) கற்ப (20) வணங்க (22) மூற்றத் (26) தூங்கத் (28) திரிதர (35) அயர (44) இருப்ப (48) மறுகத் (50) துறப்பப் (52) புகைப்பத் (56) தூங்கத் (59) துறப்ப (63) ஆர (66) நிறுப் பப் (70) புலம்பப் பெயல் செறிந்து (71) கூதிர்க்காலமாய் நிலை பெற் றது; அவ்விடத்து (72) என முடிக்க.

72 - 5. [மாதிரம், விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டில, மிரு கோற் குறிநிலை வழுக்காது குடக்கேர், பொருதிறஞ் சாரா வரைநா ளமயத்து :]

மாதிரம் விரி கதிர் பரப்பிய வியல் வாய் மண்டிலம் குடக்கு ஏர்பு - திசைகளிலே விரிந்த கிரணங்களைப் பரப்பின அகன்ற இடத்தையுடைய ஞாயிறு மேற்றிசைக்கட் சேறற்கெழுந்து,

இரு கோல் குறிநிலை வழுக்காது ஒரு திறம் சாரா அமயத்து அரை நாள் - இரண்டிடத்து நாட்டின இரண்டு கோலிடத்துஞ் சாயா நிழலால் தாரைபோக ஓடுகின்ற நிலையைக் குறித்துக் கொள்ளுந் தன்மை தப்பாத படி தான் ஒரு பக்கத்தைச் சாரப்போகாத சித்திரைத் திங்களின் நடு விற் பத்தினின்ற யாதோர்நாளிற் பதினைந்தாநாழிகையிலே [1] அங்கு ரார்ப்பணம் பண்ணி,

76. நூல் அறி புலவர் நுண்ணிதின் கயிறு இட்டு - [2] சிற்பநூலை யறிந்த தச்சர் கூரிதாக நூலை நேரே பிடித்து,

77. தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி - திசைகளைக் குறித்துக் கொண்டு அத்திசைகளில் நிற்குந் தெய்வங்களையும் குறைவறப் பார்த்து,

78 - 9. [பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து, ஒருங்கு:]

பெரு பெயர் மன்னர்க்கு ஒப்ப ஒருங்கு மனை வகுத்து - பெரிய பெயரினை யுடைய அரசர்க்கொப்ப மனைகளையும் வாயில்களையும் மண்டபங்கள் முதலியவற்றையுங் கூறுபடுத்தி,

79. உடன் வளைஇ ஓங்கு நிலை வரைப்பின் - இவ்விடங்களை யெல் லாம் சேரவளைத்து உயர்ந்த மதிலின் வாயி (88) லென்க.

80. பரு இரும்பு பிணித்து - ஆணிகளும் பட்டங்களுமாகிய பரிய இரும்பாலே கட்டி,

செவ்வரக்கு உரீஇ - சாதிலிங்கம் வழித்து,

81 - 5. [துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு, நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப், போதவிழ் குவளைப் புதுப்பிடி கால

---

1 அங்குரார்ப்பணம் - திருமுளைச்சார்த்து.

[2] ப. சகச, 2 - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

மைத்துத், தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற், கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து :]

தாழொடு குயின்ற (84) துணை மாண் கதவம் பொருத்தி (81) - தாழோடே சேரப் பண்ணின இரண்டாய் மாட்சிமைப்பட்ட கதவைச் சேர்த்தி,

இணை மாண்டு (81) புது போது அவிழ் குவளை பிடி கால் அமைத்து (83) - இணைதல் மாட்சிமைப் பட்டுப் புதிய போதாய் அவிழ்ந்த குவளைப் பூவோடே பிடிகளையும் தன்னிடத்தேபண்ணி,

என்றது, [1] நடுவே திருவும் இரண்டு புறத்தும் இரண்டு செங்கழு நீர்ப்பூவும் இரண்டு பிடியுமாக வகுத்த உத்தரக் [2] கற்கவி.

நாளொடு பெயரிய விழுமரத்து கோள் அமை (82) நெடுநிலை (86) - உத்தரமென்னும் நாளின் பெயர் பெற்ற உத்தரக்கற்கவியிலே செருகு தல் பொருந்தின நெடுநிலையென்க.

அமைத்தென்னுமெச்சம் பெயரிய வென்பதனோடு முடிந்தது.

கை வல் கம்மியன் முடுக்கலின் புரை தீர்ந்து (85) போர் அமை புணர்ப்பின் (84) நெடுநிலை (86) - கைத்தொழில் வல்ல தச்சன் கடாவு கையினாலே வெளியற்றுப் பலமரங்களும் தம்மிற்கிட்டுதலமைந்த கூட் டத்தினை யுடைய நெடுநிலை யென்க.

86. ஐயவி அப்பிய நெய் அணி நெடு நிலை-வெண்சிறுகடுகு அப்பி வைத்த நெய்யணிந்த நெடிய நிலையினையுடைய,

[3] அதிற் றெய்வத்திற்கு, [4] வெண்சிறுகடுகும் நெய்யு மணிந்தது.

87. வென்று எழு கொடியொடு வேழம் சென்று புக - வென்றி கொண்டெழும் கொடிகளோடே யானைகள் சென்று புகுதும்படி யுயர்ந்த,

---

1 இரண்டு யானைகளின் இடையே திருமகள் வீற்றிருத்தல், கோயில் முதலிய இடங்களிற் காணப்படும் சிற்பங்களாலும், "வரிநுத லெழில் வேழம் பூநீர்மேற் சொரிதரப், புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய் தித், திருநயந் திருந்தன்ன" (கலி. சச : 5 - 7) என்பதனாலும், "இரண் டானை பக்கத்தேநின்று நீரைச் சொரிய நடுவே தாமரைப் பூவிலே யிருந்த திருமகள்" (சீவக. 2595, ந.) என்பதனாலும் அறியலாகும்.

2 கற்கவி : சிலப். கசு : 213, அடியார்.

3 நிலையில் தெய்வம் உறைதல் : "அணங்குடை நெடுநிலை" மதுரை. 353.

4 இவை யிரண்டும் தெய்வங்களால் விரும்பப்படுவன; முருகு. 228 - ஆம் அடியும், மதுரை. 354 - ஆம் அடியின் விசேடவுரையும், "தெய்வங் கள் இனிதாகக் கொண்ட ஐயவி" (சீவக. 113, ந.) என்பதும் இதனை உணர்த்தும்.

88. [1] குன்று குயின்றன்ன ஓங்கு நிலை வாயில் - மலையை நடுவே வெளியாகத் திறந்தாற் போன்ற கோபுரவாயில்களையும்,

ஓங்கின நிலையையுடைய கோபுரத்தை ஓங்குநிலையென்றார் ; ஆகு பெயர்.

வரைப்பின் (79) வாயிலென்க.

கதவுபொருத்திக் கோளமைத்த புணர்ப்பினையுடைய நெடுநிலை யினையுடைய வாயிலென்க.

89 - 92. [திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பிற், றருமணன் ஞெமி ரிய திருநகர் முற்றத்து, நெடுமயி ரெகினத் தூநிற வேற்றை, குறுங்கா லன்னமோ டுகளு முன்கடை :]

[2] நெடு மயிர் எகினம் தூ நிறம் ஏற்றை குறு கால் அன்னமொடு உக ளும் முன்கடை - நெடிய மயிரினையுடைய கவரிமாவில் தூயநிறத்தை யுடைய ஏற்றை குறியகாலினையுடைய அன்னத்தோடே தாவித்திரியும் வாசல்முன்பினையும்,

கடைமுன் முன்கடையென மரூஉமுடிபு. அன்னமும் தாவிப்பறத் தலின், உகளுமென்று கவரிமாவோடே ஒருவினைகூறினார்.

[3] தரு மணல் ஞெமிரிய திரு நகர் முற்றத்து.

திரு நிலைபெற்ற தீது தீர் சிறப்பின் - திருமகள் நிலைபெற்ற குற்ற மற்ற தலைமையினையும்,

வாயிலினையும் (88) முன்கடையினையும் (92) முற்றத்தினையும் (90) சிறப்பினையுமுடைய (89) கோயில் (100) என முடிக்க.

93 - 4. பணை நிலை முனைஇய பல் உளை புரவி புல் உணா தெவிட் டும் புலம்பு விடு குரலொடு - பந்தியிலே நிற்றலை வெறுத்த பலவாகிய [4] கேசாரியையுடைய குதிரைகள் புல்லாகிய உணவைக் குதட்டுந் தனி மை தோற்றுவிக்கின்ற குரலோடே,

95 - 7. [5] நிலவு பயன்கொள்ளும் நெடு வெள் முற்றத்து கிம்புரி பகு வாய் அம்பணம் நிறைய கலிழ்ந்து வீழ் அருவி பாடு விறந்து - நிலாவின் பயனை அரசன் நுகரும் நெடிய வெள்ளிய நிலாமுற்றத்திலுள்ள நீர்வந்து

---

1 " குன்று குயின்றன்ன - மலையை உள்வெளியாக வாங்கி இருப் பிட மாக்கினாற்போன்ற " மதுரை. 474, ந.

2 "ஏழகத் தகரு மெகினக் கவரியுந், தூமயி ரன்னமுந் துணையெனத் திரியும்.........நீணெடு வாயி னெடுங்கடை " சிலப். கo : 5 - 8.

3 இந்தப் பாகத்திற்கு உரை கிடைத்திலது ; கொண்டு வந்திட்ட மணல் பரந்த அழகிய வீட்டின்முன்னிடத்தையுமென்க.

4 ப. ருஅo, 5-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

5 " நிலவுப் பயன் கொள்ளுமென இடக்கரடக்கிக் கூறினார் " என் பர் அடியார்க்கு நல்லார் ; சிலப். ச : 32, உரை.

வீழும் மகரவாயாகப் பகுத்த வாயினையுடைய 1 பந்தநிறைகையினுலே கலங்கிவிழுகின்ற அருவியினேசைசெறிந்து,

97 - 9. அயல ஒலி நெடு பீலி ஒல்க மெல் இயல் கலி மயில் அகவும் 2 வயிர் மருள் இன் இசை - அதற்கு அயலிடத்தனவாகிய தழைத்த நெடிய பீலி ஒதுங்க மெல்லிய இயல்பினையுடைய செருக்கின மயில் ஆரவாரிக்கும் கொம்பென்று மருளும் இனியவோசை,

100. நளி மலை சிலம்பின் சிலம்பும் கோயில் - செறிந்தமலையின் ஆரவாரம் போல ஆரவாரிக்கும் கோயில்,

புலம்புவிடுகுரலோடே (94) அருவிப்பாடும் (97) வயிர்மருளின்னிசையும் (99) விறந்து (97) மலைச்சிலம்பிற் சிலம்புங்கோயில் (100) என முடிக்க.

அருவியும் மயிலும் மலைக்கும் உள்ளனவாகலின், உவமைகொண்டார். புலம்புவிடுகுரல் மழை மெத்தெனமுழங்கிஞற் போன்றிருத்தலின், உவமை கொண்டார்.

இனி அவற்றின் எதிரொலியெழுகின்ற கோயிலென்றுமாம்.

101 - 2. யவனர் இயற்றிய வினை மாண் பாவை கை ஏந்து ஐ அகல் நிறைய நெய் சொரிந்து - சோனகர் பண்ணின தொழில்மாட்சிமைப்பட்ட பாவை தன்கையிலே ஏந்தியிருக்கின்ற வியப்பையுடைய தகளிநிறையும்படி நெய் வார்க்கப்பட்டு,

103. பரூஉ திரி கொளீஇய குரூஉ தலை நிமிர் எரி-பருந்திரிகளைப் பந்தங்களிலே கொளுத்திவைத்த நிறத்தையுடைத்தாகிய தலையினையுடைய மேனேக்கியெரிகின்ற விளக்கை,

104. அறு அறு காலை தோறு அமைவர பண்ணி - நெய் வற்றின காலந்தோறும் ஒளிமழுங்கின காலந்தோறும் நெய்வார்த்துத் தூண்டி,

105. பல் வேறு பள்ளி தொறும் பாய் இருள் நீங்க - பலவாய் வேறுபட்ட இடங்கடோறும் பரந்த இருள்நீங்கும்படி,

106 - 7. பீடு கெழு சிறப்பின் பெருந்தகை அல்லது ஆடவர் குறுகா அரு கடி வரைப்பின் - பெருமைபொருந்தின தலைமையினையுடைய பாண்டியனல்லது சிறுகுறுந்தொழில்செய்யும் ஆண்மக்களும் அணுகவாராத அரியகாவலையுடைய கட்டுக்களின்,

108. வரை கண்டன்ன தோன்றல - மலைகளைக் கண்டாற்போன்ற உயர்ச்சியையுடையவாய்,

108 - 9. வரை சேர்பு வில் கிடந்தன்ன கொடிய - மலைகளைச் சேர்ந்து இந்திரவில் கிடந்தாற்போன்ற பலநிறமாய் வீழ்ந்துகிடந்த கொடிகளையுடையவாய்,

---

1 பி - ம். 'பந்தல் நிறைய'

2 வயிரிசை அன்றிலின் ஓசைக்கும் உவமை கூறப்படும்; குறிஞ்சி. 219.

இது மேலேகட்டின கொடி.

109. பல் வயின் - பலவிடங்கடோறும்,

110. வெள்ளி அன்ன விளங்கும் சுதை உரீஇ - வெள்ளியை யொத்த விளங்குகின்ற சாந்தை வாரி,

111. மணி கண்டன்ன மா திரள் திண் காழ் - நீலமணியைக்கண் டாற்போன்ற கருமையினையும் திரட்சியினையுமுடைய திண்ணிய தூண் களையுடையவாய்,

112. செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடு சுவர் - செம்பினாலே பண்ணினாலொத்த தொழில்கள்செய்தலுற்ற நெடியசுவரிலே,

113. உருவம் பல் பூ ஒரு கொடி வளைஇ - வடிவழகினையுடைய வாகிய பலபூக்களையுடைய [1] வல்லிசாதியாகிய ஒப்பில்லாத கொடியை யெழுதி,

114. கருவொடு பெயரிய காண்பு இன் நல் இல் - புதைத்தகரு வோடே பெயர்பெற்ற காட்சிக்கினிய நன்றாகிய இல்,

என்றது, கருப்பக்கிருகமென்றவாறு.

திண்காழுடையவாய்ச் (111) செய்வுறுநெடுஞ்சுவரிலே (112) விளங்குஞ் சுதையுரீஇப் (110) பல்வயின் (109) ஒருகொடிவளைஇ (113) வரைகண்டன்ன தோன்றலவாய்க் (108) கொடியவாய்ப் (109) பாயிரு ணீங்க (105) எரி (103) அமைவரப்பண்ணிக் (104) காட்சிக்கினிய வாகிய நல்லில் (114) என முடிக்க.

கோயில் (100) வரைப்பின் (107) காண்பினல்லில் (114) என முடிக்க.

115. [தசநான் கெய்திய :] நான்கு தசம் எய்திய - நாற்பதிற்றி யாண்டு சென்ற,

பணை மருள் நோன் தாள் - முரசென்றுமருளும் வலியகால்களையும்,

116. [இகன்மீக் கூறு மேந்தெழில் வரிநுதல்:]

ஏந்து எழில் வரி நுதல் - உயர்ந்த அழகினையும் புகர்நிறைந்த மத் தகத்தினையுமுடைய நாகம் (117),

இகல் மீ கூறும் நாகம் (117) - போரில் மேலாகச்சொல்லும் நாகம்,

117. பொருது ஒழி நாகம் - பொருது பட்ட யானையினுடைய,

117-8. [ஒழியெயி றருகெறிந்து, சீருஞ் செம்மையு மொப்ப :] ஒழி எயிறு சீரும் செம்மையும் ஒப்ப அருகு எறிந்து - தானேவீழ்ந்தகொம் பைக் கனமுஞ் செம்மையுமொப்ப இரண்டுபுறத்தையுஞ்செத்தி,

---

[1] இக் கொடிகளை வல்லிசாதியென்றே குறிப்பிடுவர் தஞ்சயாகப் பரணி யுரையாசிரியர். தூகிற்கொடியை விலக்குவதற்காக இவ்வாறு இவர்கள் கூறுகின்றார்கள்போலும்.

118 - 9. வல்லோன் கூர் உளி குயின்ற - தச்சன் கூரிய சிற்றுளி யாலே பண்ணின,

119. ஈரிலை இடை இடுபு - பெரிய இலைத்தொழிலை இடையே இட்டு,

120 - 30. [தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப், புடைதிரண் டிருந்த குடத்த விடைதிரண், டுள்ளி நோன்முதல் பொருத்தி யடியமைத் துப், பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டின், மடைமா ணுண் ணிழை பொலியத் தொடைமாண்டு, முத்துடைச் சாலேக நாற்றிக் குத் துறுத்துப், புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத், தகடுகண் புதையக் கொளீஇத் துகளர்ந், ஊட்டுறு பன்மயிர் விரைஇ வயமான், வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து, முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து :]

ஊட்டுறு பல் மயிர் விரைஇ (128) - பலநிறம்பிடித்த மயிர்களை உள்ளேவைத்து அதன்மேலே,

வயமான் (128) வேட்டம் பொறித்து (129) - சிங்கமுதலியவற்றை வேட்டையாடுகின்ற தொழில்களைப் பொறித்த தகடுகளை வைத்து,

புலிமுதலியவற்றின் வரிகள்தோன்ற உள்ளே மயிர் விரவின.

வியல் கண் கானத்து (129) முல்லை போது உறழ பல்பூநிரைத்து (130) - அகற்சியை இடத்தேயுடைய காட்டிடத்து முல்லைப்போதுடனே மாறுபடும்படி எனைப் பல பூக்களையும் நிரைத்து,

சாலேகம் தகடு குத்துறுத்து (125) - சாளரங்களாகத்திறந்த தகடு களை ஆணிகளாலே தைத்து,

மடை மாண் (124) பாண்டில் (123) - மூட்டுவாய் மாட்சிமைப் பட்ட வட்டக்கட்டில்,

கொம்பைச்செத்தி (117) உளியாற்குயின்ற இலையை இடையிட்டுப் (119) பொறித்து (129) நிரைத்துச் (130) சாலேகத்தகடுகளைக் குத் துறுத்து (125) மடைமாண் (124) பாண்டில் (123) என முடிக்க.

முத்து உடை (125) நுண் இழை பொலிய (124) நாற்றி (125) தொடை மாண்டு (124) பெரு அளவு எய்திய பாண்டில் (123) - முத் தைத் தன்னிடத்தேயுடைய மெல்லியநூல் அழகு பெறும்படி கட்டிலின் கீழே வீழ நாலுபுறமும்நாற்றி அதனைத் தன்னிடத்தே கட்டுதல் மாட்சி மைப்பட்டுப் பெரிய எல்லையைப்பெற்ற பாண்டிலெனக்கூட்டுக.

என்றதனால், நூல்த்தாற்சமைத்த கட்டிலைச்சூழ முத்துவடநாற்றி யென்றார்.

புலி பொறி கொண்ட பூ கேழ் தட்டத்து (126) கண் புதைய கொளீஇ துகள் தீர்ந்து (127) பெரு பெயர் பாண்டில் (123) - புலி யினது வரியைத் தன்னிடத்தேகொண்ட பொலிவுபெற்ற நிறத்தை

யுடைய கச்சாலே நடுவுவெளியான இடமறையும்படி நோக்கப்பட்டுக் குற்றமற்றுக் கச்சுக்கட்டிலென்னும் பெரிய பெயரையுடைய பாண்டி லெனக்கூட்டுக.

தூங்கு இயல் மகளிர் வீங்கு முலை கடுப்ப (120) புடை திரண்டு இருந்த குடத்த (121) அடி (122) - சூல்முற்றி அசைந்த இயல்பினை யுடையராகிய மகளிரது பால்கட்டி வீங்கின முலையையொப்பப் பக்க முருண்டிருந்த குடத்தையுடையவாய அடி,

இஃது உருட்சிக்கு உவமைகூறிற்று.

இடை திரண்டு (121) உள்ளிமுதல் நோன் அடி பொருத்தி அமைத்து (122) - குடத்திற்கும் கட்டிற்குமநடுவாகியஇடம் ஒழுகமெல்லி தாய்த்திரண்டு உள்ளிமுதல்போலும் வலியினையுடையகால்களைத் தன் னிடத்தே தைத்துச்சமைத்துப் பேரளவெய்திய பாண்டிலென்க.

உள்ளிப்புட்டில்போல்வதனை உள்ளிமுதலென்றார்.

131 - 3. [மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத், துணைபுண ரன்னத் தூநிறத் தூவி, யிணையணை மேம்படப் பாயணை யிட்டு :]

மெல்லிதின் விரிந்த இணை அணை சேக்கை - மெல்லியதாகவிரிந்த இணைதலணைந்த படுக்கையென்க.

மேம்பட துணை புணர் அன்னம் தூ நிறம் தூவி பாய் - அச்சேக் கைக்கு மேலாகத் தம்பேட்டைப்புணர்ந்த அன்னச்சேவலின் தூய நிறத்தை யுடைய சூட்டாகியமயிர் பரக்கப்பட்டு,

[1] "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், முறுதூவி [2] சேக்கை யோ ரைந்து" என்ற ஐந்தினையும்படுத்ததென்பதுதோன்ற [3] இணையணை யென்றார். [4] என்புருகி மிக்க அன்போடுபுணர்தலிற் சூட்டிற்கு மென்மை பிறக்குமென்பது தோன்றத் துணைபுணரன்னத் தூநிறத் தூவியென்

---

[1] கலி. எஉ : 1 - 8, ந. மேற் ; சீவக. 838, ந. மேற்.

[2] பி - ம். 'தாமிவையோ ரைந்து', 'சேக்கையோடைந்து.'

[3] "இணைபட நிவந்த நீலமென் சேக்கையுள்" (கலி. எஉ : 1) என்ற விடத்து, 'ஐந்துவகைப்படப்படுத்தலால் உயர்ந்த நீலப்பட்டாற்செய்த மெல்லிய படுக்கையிடத்து' என்றுரையெழுதுவர் நச்சினார்க்கினியர்.

[4] "துணையைப் புணர்ந்தகாலத்து மெய்யுருகி உதிர்ந்த தூவிதானும் மிக மெல்லிதாயிருக்குமென்பது உணர்த்தற்குத் துணைபுணரன்னமென் றார்" (கலி. எஉ : 1 - 8, ந.) எனவும், "புணர்ச்சியால் தூவிக்கு மென்மை பிறக்குமென்றார்" (சீவக. 189, ந.) எனவும் இவ்வுரையாசிரி யரும், "தன் சேவலொடு புணர்ந்த அன்னப்பேடை அப்புணர்ச் சியான் உருகி உதிர்த்த வயிற்றின் மயிர் எஃகிப் பெய்த பல்வகை யணைமீதே" (சிலப். ச : 58 - 71, அடியார்.) எனப் பிறரும் எழுதியவை இங்கே உணர்தற்குரியன.

ருர். பிறரும், இக்கருத்தேபற்றி, 1 "ஆதாம் பெருகு கின்ற வன்பிணு லன்ன மொத்தும்" என்ருர்.

134-5. [காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத், தோடமை தூமடி விரித்த சேக்கை :] மேம்பட அணையிட்டு (133) காடி கொண்ட கழுவுறு கலிங்கத்து தூ மடி விரித்த தோடு அமை சேக்கை - அத் தூவிக்கு மேலாக அணைகளுமிட்டுவைத்துக் கஞ்சியைத் தன்னிடத்தே கொண்ட கழுவுதலுற்ற துகிலின் தூய மடித்ததுவிரித்த செங்கழுநீர்முத லியவற்றின் இதழ்கள்பொருந்தின படுக்கை,

இணையணை சேக்கை மேம்படத் தூவி பாய் அத்தூவிக்கு மேம்பட 2 அணையிட்டுத் தூமடிவிரித்த சேக்கையென்க.

136-7. ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்து பின் அமை நெடு வீழ் தாழ - முன்பு முத்தாற்செய்த கச்சுச்சுமந்த பருத்தமுலையினை யுடைய மார்பிடத்தே இப்பொழுது குத்துதலமைந்த நெடிய தாலி நாணென்றுமே தூங்க,

வீழ்ந்துகிடத்தலின் வீழென்ருர். இனிப் பின்னுதலமைந்த நெடிய வீழ், மயிரென்பாருமுளர்.

137. துணை துறந்து - அரசன் பிரிகையினுலே,

138. நல் நுதல் 3 உலறிய சில் மெல் ஓதி - நன்ருகிய நுதலிடத்தே கைசெய்யாமல் உலறிக்கிடந்த சிலவாகிய மெத்தென்ற மயிரினையும்,

இனித் துணைதுறந்து உலறிய ஓதியெனக்கூட்டிக் கூடிக்கிடந்த தன்மைநீங்கி உலறிய ஓதியென்றுரைப்பாருமுளர்.

139-40. [நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண், வாயுறை யழுத்திய வறிதுவீழ் காதின் :]

நெடு நீர் வார் குழை களைந்தென வறிது வீழ் காதின் - பெரிய ஒளி யொழுகின மகரக்குழையைவாங்கிற்ருகச் சிறிதேதாழ்ந்த காதினையும்,

நீர்மை - ஒளி.

குறு கண் வாயுறை அழுத்திய காது - சிறிய இடத்தையுடைய தாளு ருவி அழுத்திய காது,

வாயுறவென்றுபாடமாயின், கடுக்கனை வாயுறும்படியழுத்தினகா தென்க.

141-2. பொலம் தொடி தின்ற மயிர் வார் முன்கை வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து - முன்பு பொன்ஞற்செய்த தொடி

1 சீவக. 189.

2 "ஐவகை யமளி யணைமேற் பொங்கச், தண்மலர் கமழும் வெண் மடி விரித்து" திருவிடை. மும். கக.

3 உலறிய : சிறுபாண். 18.

கிடந்து தழும்பிருந்த மயிர் ஒழுங்குபட்டுக்கிடந்த முன்கையிலே 1 வலம் புரியையறுத்துப்பண்ணின வளையை இட்டுக் காப்புநாணைக்கட்டி,

ஒடு : வேறுவினையொடு.

143 - 4. வாளை பகு வாய் கடுப்ப வணக்குறுத்து செ விரல் கொளீஇய செ கேழ் 2 விளக்கத்து - வாளையினது பகுத்தவாயையொக்க முடக்கத்தையுண்டாக்கிச் சிவந்த விரலிடத்தேயிட்ட சிவந்த நிறத்தையுடைய 3 முடக்கென்னு மோதிரத்தையும்,

145 - 6. பூ துகில் மரீஇய ஏந்து கோடு அல்குல் அ மாசு ஊர்ந்த அவிர் நூல் கலிங்கமொடு - முன்பு பூத்தொழிலையுடைய 4 துகில் கிடந்த உயர்ந்த வளைவினையுடையவல்குலில் இக்காலத்து உடுத்த அழகிய மாசேறிய விளங்குகின்ற நூலாற் செய்த புடைவையுடனே,

147. [புனையா வோவியங் கடுப்பப் புனைவில் :]

5 புனையா ஓவியம் கடுப்ப - வண்ணங்களைக் கொண்டெழுதாத வடிவைக் கோட்டின சித்திரத்தை யொப்ப,

புனைவில் நல்லடி (151) என மேல் வருவதனைக் கூட்டி, கழுவிச் செம்பஞ்சிட்டுப் பூண்களணியாத நன்ருகிய அடியென்க.

148. தளிர் ஏர் மேனி - 6 மாந்தளிரை யொத்த நிறத்தினையும்,

தாய சுணங்கின் - பரந்த சுணங்கினையும்,

149. அம் பணை தடைஇய மெல் தோள் - அழகினையுடைய மூங்கில்போலத் திரண்ட மெல்லிய தோளினையும்,

149 - 50. [முகிழ்முலை, வம்புவிசித் தியாத்த :] வம்பு விசித்து யாத்த முகிழ் முலை - கச்சை வலித்துக் கட்டின தாமரைமுகைபோலும் முலையினையும்,

150. வாங்கு சாய் நுசுப்பின் - வளையும் நுடங்கு மிடையினையும்,

---

1 "அரம்போழ்ந் தறுத்த கண்ணே ரிலங்குவளை" (மதுரை. 316) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

2 விளக்கம் - மோதிரம் ; மதுரை. 719, ந.

3 "வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்" (சிலப். சு : 95) என்பதற்கு, 'முடக்கு மோதிரம்' என்று அரும்பதவுரையாசிரியரும், நெளியென்று அடியார்க்கு நல்லாரும் எழுதுவர்.

4 துகில் - ஆடை வகையுள் ஒன்று ; "புடைவீழ்ந்துகில்" (181) என்பர் பின்னும் ; "வாழ்வரே, பட்டுந் துகிலு முடுத்து" நாலடி. 264.

5 "தேவு தெண்கட லமிழ்துகொண் டநங்கவேள் செய்த, ஓவியம்புகை யுண்டதே யொக்கின்ற வுருவாள்" (கம்ப. காட்சி. 11) என்பது இதிலிருந்து எழுந்து வளர்ந்த கருத்தென்று தோற்றுகின்றது.

6 "மாவின், அவிர்தளிர் புரைய மேனியர்" (முருகு. 143 - 4) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

151. மெல் இயல் மகளிர் - மெத்தென்ற தன்மையினையுமுடைய சேடியர்,

நல் அடி வருட - 1 துயிலுண்டாகுமோவென்று அடியைத் தடவ,

மேனி (148) முதலியவற்றையுடைய மகளிர் (151) புனைவில் (147) நல்லடி வருடவென்க.

152-3. நரை விராவுற்ற நறு மெல் கூந்தல் செ முக செவிலியர் கை மிக குழீஇ - நரை கலத்தலுற்ற நறிய மெல்லிய மயிரினையுடைய சிவந்த முகத்தையுடைய செவிலித்தாயர் இவளாற்றுவொழுக்க மிகுகையினாலே திரண்டு,

154. குறியவும் நெடியவும் உரை பல பயிற்றி - 2 பொருளொடு புணராப் பொய்ம்மொழியும் மெய்ம்மொழியுமாகிய உரைகள் பலவற்றையும் பலகாற் சொல்லி,

3 "ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே" என்பது இலக்கணம்,

155-6. இன்னே வருகுவர் இன் துணையோர் என உகத்தவை மொழியவும் ஒல்லாள் மிக கலுழ்ந்து - இப்பொழுதே வருகுவர் நினக்கினிய துணையாந் தன்மையை யுடையோரென்று அவள் மனத்துக்கு இனிய வார்த்தைகளைக் கூறவும் அதற்குப் பொருந்தாளாய் மிகக்கலங்கி,

157-8. [நுண்சேறு வழித்த நோனிலைத் திரள்கால், ஊறு வறு மூலை கொளீஇய :] ஊறு வறுமூலை கொளீஇய நுண் சேறு வழித்த நோன் நிலைதிரள் கால்-குடங்களைக் கடைந்து தைத்த சாதிலிங்கம்பூசின வலிய நிலையினையுடைய மேற்கட்டியிற் றிரண்ட கால்களை,

1 துயிலுதற்குக் காலைவருடல் மரபு ; இது, "மழையார் சாரற் செம்புனல் வந்தங் கடிவருடக், கழையார் கரும்பு கண்வளர் சோலைக் கலிக்காழி", "தென்றலா ரடிவருடச் செழுங்கரும்பு கண்வளருந் திருவை யாறே" (திருஞா. தே.) என்ற திருவாக்குக்களிற் குறிப்பிக்கப் பெற்றிருத்தல் காண்க.

2 "பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும், பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்" (தொல். செய். சூ. 173) என்பதும், 'பொருளொடு............பொய்ம்மொழியானும் - பொருண்முறை யின்றிப் பொய்யாகத் தொடர்ந்து கூறுவன ; அவை ஓர் யானையுங் குதிரையும் தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக் கியையாப் பொருள் பட்டதோர் தொடர் நிலையாய் ஒருவனுழை யொருவன் கற்று வரலாற்றுமுறைமையான் வருகின்றன; பொருளொடு............நகைமொழியானும் - பொய்யெனப்படாது மெய்யெனப்பட்டும் நகுதற் கேதுவாகும் தொடர்நிலையானும்' (ந.) என்ற அதனுரையும் இத்தொடர்களின் பொருளை விளக்கும்.

3 தொல். செய். சூ. 175.

ஊருவறுமுலை : குடத்திற்கு வெளிப்படை; [1] முலைபோறலின முலையென்றார்.

158. கால் திருத்தி - கட்டிற்கால்களுக்கு அருகாக நிற்கும்படி பண்ணி அதனிடத்தேகட்டி,

159. [புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசை :] மெழுகு செய் படம் மிசை புதுவது இயன்ற - மெழுகு வழித்த மேற்கட்டியின் மேலே புதிதாக எழுதின,

160 - 61. [திண்ணிலை மருப்பி னாடுதலை யாக, விண்ணூர்பு திரிதரும் :]

விண் - ஆகாயத்திடத்தே,

திண் நிலை மருப்பின் ஆடு தலையாக ஊர்பு திரிதரும் - திண்ணிய நிலையினையுடைய கொம்பினையுடைய மேடராசிமுதலாக ஏனை இராசிகளிற் சென்று திரியும்,

161 - 2. வீங்கு செலல் மண்டிலத்து முரண் மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய - மிக்க செலவினையுடைய ஞாயிற்றோடே மாறுபாடு மிகுந்த தலைமையினையுடைய திங்களோடு [2] திரியாமனின்ற,

163. உரோகிணி நினைவனள் நோக்கி - [3] உரோகிணியைப் போல யாமும் பிரிவின்றி யிருத்தலைப் பெற்றிலேமேயென்று நினைத்து அவற்றைப் பார்த்து,

ஞாயிறு, எண்டெழுதியதன்று; திங்களிற்கு அடைகூறிற்று.

நெடிது உயிரா - நெட்டுயிர்ப்புக்கொண்டு,

164 - 5. [மாயித ழேந்திய மலிந்துவீ ழரிப்பனி, செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியா :] மா இதழ் வீழ் கண் கடை மலிந்து ஏந்திய அரி பனி சில செ விரல் சேர்த்தி தெறியா - நீலப்பூ விரும்பினகண் தன்கடைக்கண்ணிடத்தேவர மிக்குச் சுமந்த ஐதாகிய நீரிற் சிலவற்றைச் சிவந்த விரலைச் சேர்த்தித் தெறித்து,

என்றது, மிகவுமழாமல் மல்கினநீரைத் தெறித்தென்றார்.

166. புலம்பொடு வதியும் நலம் கிளர் அரிவைக்கு - தனிமையோடு கிடக்கும் அன்பு மிகுகின்ற அரிவைக்கு,

அரசன் பிரிகையினாலே, நெடுவீழ்தாழ (137) நூல்யாத்து (142) மாசூர்ந்த கலிங்கத்தோடே (146) ஒதியினையும் (138) காதினையும் (140) விளக்கத்தினையும் உடையளாய் (141) மிகக்கலங்கி (156) உரோகிணி நினைவனணோக்கி நெடிதுயிர்த்துத் (163) தெறித்து (165) மகளிர் நல்

---

[1] நெடுநல். 120 - 21.

[2] பி - ம். 'தெரியாமனின்ற'

[3] "உறுவுகொ ளுரோணியோ டொளிநிலை புரிந்த, மறுவுடை மண்டிலக் கடவுளை" பெருங். உ. 9 ; 167 - 8.

லடிவரும் (151) ஓவியங் கடுப்ப (147) வதியுமரிவைக்கு (166) என வினைமுடிக்க.

166 - 7. அரிவைக்கு இன்னா அரு படர் தீர - அரிவைக்குத் தீதாயிருக்கின்ற ஆற்றுதற்கரிய நினைவு தீரும்படி,

பாசறைத் தொழில் (188) விறல் தந்து (167) இன்னே முடிக தில் (168) - வேந்தன் பாசறையிடத்திருந்து பொருகின்ற போர்த்தொழில் அவனுக்கு வெற்றியைக் கொடுத்து இப்பொழுதே முடிவதாக; இஃது எனக்கு விருப்பம் எனமுடிக்க.

168. அம்ம - கேட்பாயாக;

இஃது, இவள் வருத்தமிகுதி தீரவேண்டிக் கொற்றவையை நோக்கிப் பரவுகின்றவள் கூற்றாயிற்று. கேட்பாயாக வென்றது கொற்றவையை நோக்கி. முடிகவென்ற வியங்கோள், வேண்டுகோட்பொருண்மைக்கண் வந்தது. தில், விழைவின்கண் வந்தது.

168 - 71. மின் அவிர் ஓடையொடு பொலிந்த வினை நவில் யானை நீள் திரள் தட கை நிலமிசை புரள களிறு களம் படுத்த பெரு செய் ஆடவர் - ஒளி விளங்குகின்ற பட்டத்தோடே பொலிவுபெற்ற போர்த்தொழிலைப் பயின்ற யானையினுடைய நீண்டதிரண்ட பெருமையினையுடைய கை அற்று நிலத்தே புரளும்படி யானையை முன்னர்க்கொன்ற பெரிய செயலையுடைய வீரருடைய,

செயலென்னும் வினைப்பெயர் செய்யென முதனிலையாய் நின்றது.

172. ஒளிறு வாள் [1] விழு புண் காணிய புறம் போந்து-விளங்கும் வாளினாற் போழ்ந்த சீரியபுண்ணைக் கண்டு பரிகரித்தற்குத் தானிருக்கின்ற இடத்திற்குப் புறம்பேபோந்து திரிதரும்வேந்தன் (187) என்க.

173. [2] வடந்தை தண் வளி - வடதிசைக் கண்ணதாகிய குளிர்ந்த காற்று,

என்றது வாடையை.

173 - 5. [எறிதொறு நுடங்கித், தெற்கேர் பிறைஞ்சிய தலைய நற்பல், பாண்டில் விளக்கிற் பரூஉச்சுட ரழல:] நல் பல் பாண்டில் விளக்கில் பரூஉ சுடர் எறிதொறும் நுடங்கி தெற்கு ஏர்பு இறைஞ்சிய தலைய அழல - நன்றாகிய பலகால் விளக்கிலெரிகின்ற பருத்தகொழுந்து வாடைக்காற்று அடிக்குந்தோறும் அசைந்து தெற்கு நோக்கியெழுந்து சாய்ந்த தலையினையுடையவாய் எரிய,

விளக்கு : ஆகுபெயர்.

---

1 "விழுப்புண் - முகத்தினும் மார்பினும் பட்டபுண்" குறள். 776, பரிமேல்.

2 இப்பாட்டிற்கு, "வடந்தைத் தண்வளி" என்னும் இப்பகுதி உயிர்போன்றது.

176 - 7. வேம்பு தலை யாத்த நோன் காழ் எஃகமொடு முன் னோன் முறைமுறை காட்ட - வேப்பந் தாரைத் தலையிலேகட்டின வலிய காம்பினையுடைய வேலோடே முன்செல்கின்ற சேனாபதி புண்பட்ட வீரரை அடைவே அடைவேகாட்ட,

177 - 80. பின்னர் மணிபுறத்து இட்ட மா தாள் பிடியொடு பருமம் களையா பாய் பரி கலி மா இரு சேறு தெருவின் எறி துளி விதிர்ப்ப - பின்னாக மணிகளைத் தன்னிடத்தேயிட்ட பெருமையையுடைய தாளினையுடைய குசையோடே பக்கரைவாங்காத பாய்ந்துசெல்லுஞ் செலவினையுடைய செருக்கின குதிரைகள் கரிய சேற்றையுடைய தெருவிலே தம்மேலேவீசும் துளிகளையுதற,

தாளென்றது வாய்க்கருவியிற் கோத்துமுடியும் குசையிற்றலையை.

181. புடை வீழ் அம் துகில் இடவயின் தழீஇ - இடத்தோளினின்றும் நழுவிவீழ்ந்த அழகினையுடைய [1] ஒலியலை இடப்பக்கத்தே யணைத்துக்கொண்டு,

182 - 3. வாள் தோள் கோத்த வன்கண் காளை சுவல் மிசை அமைத்த கையன் - வாளைத்தோளிலே கோத்த தறுகண்மையையுடைய வாளெடுப்பான்றோளிலே வைத்த வலக்கையையுடையனாய்,

183. முகன் அமர்ந்து - [2] புண்பட்டவீரர்க்கு அகமலர்ச்சிதோன்ற முகம் பொருந்தி,

184. நூல் கால்யாத்த மாலை வெண்குடை - நூலாலே சட்டத்தே கட்டின முத்துமாலையினையுடைய கொற்றக்குடை,

185. தவ்வென்று அசைஇ தா துளி மறைப்ப - தவ்வென்னு மோசைபட்டு அசைந்து பரக்கின்ற துளியைக் கரக்க,

தாழ்துளியும் பாடம்.

186 - 7. [3] நள்ளென் யாமத்தும் பள்ளிகொள்ளான் சிலரொடு

---

[1] ஒலியல் - உத்தரீயம்.

[2] அரசன் முகம் பொருந்துவதால் வீரர் அகமலர்வாரென்ற இச் செய்தியோடு, "தழிச்சிய வாட்புண்ணோர் தம்மில்லந் தோறும், பழிச்சியசீர்ப் பாசறை வேந்தன் - விழுச்சிறப்பிற், சொல்லிய சொல்லே மருந் தாகத் தீர்ந்தன, புல்லணலார் வெய்துயிர்க்கும் புண்" (தொல். புறத். சூ. 8, ந. மேற்.) என்ற வெண்பாவின் கருத்து ஒப்புநோக்கற்குரியது.

[3] "நள்ளென் மாலை" (புறநா. ௧௪௪ : 1 - 2) என்பதற்கு, 'நள்ளென்னும் ஓசையையுடைய மாலைப்பொழுது' என்று அதன் உரையாசிரியரும், "நள்ளிருள் யாமத்து" (சிலப். ௧௰ : 105) என்பதன் பதவுரையில், 'செறிந்த இருளையுடைய வைகறை யாமத்தே' எனவும் அதன் விசேடவுரையில், 'நள் : நளியென்னும் உரிச்சொல் ஈறு திரிபு ; செறிவின் கண் வந்தது' எனவும் அடியார்க்கு நல்லாரும் எழுதுவர்.

திரிதரும் வேந்தன் - நள்ளென்னும் ஓசையையுடைய நடுவியாமத்தும் பள்ளிகொள்ளானாய்ச் சிலவீரரோடே புண்பட்டோரைப் பரிகரித்துத் திரிதலைச் செய்யுமரசன்,

188. பலரொடு முரணிய பாசறை தொழில் - சேரன் செம்பியன் முதலிய [1] எழுவரோடே மாறுபட்டுப் பொருகின்ற பாசறையிடத்துப் போர்த்தொழில்,

புண்காணிய புறம்போந்து (172) சுடரழலக் (175) காட்ட (177) விதிர்ப்பத் (180) தழீஇக் (181) கையனாய் அமர்ந்து (183) மறைப்பப் (185) பள்ளி கொள்ளானாய்த் (186) திரியும்வேந்தன் (187) என்க.

அம்ம (168) வானம் கார்காலத்து மழையைப் பெய்ததாகப் (2) பின்னர் நிகழ்ந்தபொழுது கூதிர்க்காலமாய் நிலைபெற்றது (72); அக் கூதிர்க்காலத்து நடுவியாமத்தே (75) வாயிலினையும் (88) முன்கடையினையும் (92) முற்றத்தினையும் (90) சிறப்பினையுமுடைய (89) கோயில் (100) வரைப்புக்களிற் (107) காண்பினல்லில்லிற் (114) பாண்டிலிற் (123) சேக்கையிலே (135) வதியுமரிவைக்குப் (166) பட்டிரும்படி (167) வேந்தன் (187) பலரொடுமுரணிய பாசறைத்தொழில் (188) விறறந்து (167) இன்னேமுடிவதாக; இஃது எனக்கு விருப்பம் (168) எனக் கொற்றவையைப்பரவிற்றாக வினைமுடிக்க.

இப்பாட்டுத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மண்ணசையாற்சென்று பொருதலின், இப்போர் வஞ்சியாகலின், [2] வஞ்சிக்குக்கொற்றவை நிலையுண்மையின், கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவுதல் கூறினார், அது பாலைத்திணைக்கு ஏற்றலின்.

பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்பாடிய நெடுநல்வாடைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த உரை முற்றிற்று.

---

வெண்பா.

[3] வாடை நலிய வடிக்கண்ணா [4] டோணசைஇ
ஓடை மழகளிற்றா னுள்ளான்கொல்—கோடல்
முகையோ டலமர முற்றெறிபோற் பொங்கிப்
பகையோடு பாசறையு ளான்.

---

1 எழுவர் பெயரையும் மதுரைக்காஞ்சி, 55 - 6 - ஆம் அடிகளுக்குக் காட்டிய அடிக்குறிப்புக்களாலுணரலாகும். 2 பு. வெ. 40.

3 இவ்வெண்பா, புறப்பொருள் வெண்பாமாலையில் வாடைப் பாசறை யென்னும் துறைக்கு (170) உதாரணமாகக் காட்டிய செய்யுள்.

4 பி - ம். 'தோணசை'

எட்டாவது

# *குறிஞ்சிப் பாட்டு.



அன்னாய் வாழிவேண் டன்னை யொண்ணுத
லொலிமென் கூந்தலென் றோழி மேனி
விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோ
யகலு ளாங்க ணறியுநர் வினாயும்
5 பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்
வேறுபல் லுருவிற் கடவுட் பேணி
நறையும் விரையு மோச்சியு மலவுற்

---

* இது பெருங்குறிஞ்சியெனவும் வழங்கும்; "எருவை யென்பது, 'எருவை.........கருவிளை' எனக் கபிலர் பாடிய பெருங்குறிஞ்சியினும் வந்தது" (பரி. கக: 77, பரிமேல்.); "கபிலர் பாடிய பெருங்குறிஞ்சி யில் வரையின்றிப் பூமயங்கியவாறு காண்க" தொல். அகத். சூ. 19, ந.

1. அன்னாய் வாழிவேண்டன்னை: (ஐங்குறு. உ0க - க0; அகநா. சஅ: 1, சுஅ: 1); "அன்னை வாழிவேண்டன்னை" ஐங். க0க - க0. வாழிவேண்டன்னை: குறுந். ௩உக: 8.

3. இழைநெகிழ்த்தநோய்: "புனையிழை ஞெகிழ்த்த புலம்புகொ ளவலமொடு" (நற். ௩சஅ: 7); "வீங்கிழை நெகிழ" (குறுந். ௩௫அ: 1); "இழைநெகிழ் செல்லல்", "இழைநிலை நெகிழ", "இழைநெகிழ் செல்ல லுறீஇ", "வில்லிழை நெகிழ" (ஐங். உ௫: 4, ௩க0: 2, ௩க௫: 3, ௩கஅ: 2); "பாசிழை ஞெகிழ" (பதிற். சுஅ: 15); "திருந்திழை நெகிழ்ந்தன தடமென் றோளே", "வீங்கிழை நெகிழச் சாஅய்ச் செல்லலொடு", "திருந்திழை நெகிழ்ந்து பெருங் கவின் சாய", "திருந்திழை நெகிழ்ந்து பெருந்தோள் சாஅய்" அகநா. உ0சு: 16, உ௫க: 3, உ௫௫: 17, ௩அஎ: 1.

5. "பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமின்" சிலப். உச: 20.

6. வேறு பல்லுருவிற் கடவுள்: "வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்" (முருகு. 282); "மனக்கோ ணினக்கென வடிவுவே றிலையே" பரி. ச: 56.

றெய்யா மையலை நீயும் வருந்துதி
நற்கவின் றொலையவு நறுந்தோ ணெகிழவும்
10 புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவு
முட்கரந் துறையு முய்யா வரும்படர்
செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின்
முத்தினு மணியினும் பொன்னினு மத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடிற் புணருஞ்
15 சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்த
லாசறு காட்சி யையர்க்கு மந்நிலை
யெளிய வென்னார் தொன்மருங் கறிஞர்
மாதரு மடனு மோராங்குத் தணப்ப
20 நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி
யிருவே மாய்ந்த மன்ற லிதுவென
நாமறி வுறுலிற் பழியு முண்டோ
வாற்றின் வாரா ராயினு மாற்ற
வேனையுல கத்து மியைவதா னமக்கென
25 மானமர் நோக்கங் கலங்கிக் கையற்
றானச் சிறுமைய ளிவளுந் தேம்பு
மிகன்மீக் கடவு மிருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல
விருபே ரச்சமோ டியானு மாற்றலேன்
30 கொடுப்பினன் குடைமையுங் குடிநிர லுடைமையும்

---

8. எய்யாமை யென்னுமுரிச்சொல் அறியாமை யென்னுங் குறிப் புணர்த்துமென்பதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். உரி. சூ. 44, இளம். சே. தெய்வச். ந; இ - வி. சூ. 290.

9. "தொல்கவின் றொலையத் தோணலஞ் சாஅய்" (நற். கச :.); "தொல்கவின் றொலைந்து தோணலஞ் சாஅய்" (குறுந். ௩அக: 1); 'மென்றோ ணெகிழவும்........பொன்போல் விறற்கவின் றொலைத்த" ஐங். உ௩0 : 3 - 4); "நெகிழ்ந்த தோளே...........மேனி தொன்ன லந் தொலைய" அகநா. உஎ0 : 4 - 10.

13 - 4. "பொன்னின் குடமுடைந்தாற் பொன்னாகும்" ரதுரை, 18.

23. பி - ம். 'வாராதாயினும்'

வண்ணமுந் துணையும் பொரீஇ யெண்ணா
தெமியேந் துணிந்த வேமஞ்சா லருவினை
நிகழ்ந்த வண்ண நீநனி யுணரச்
செப்ப லான்றிசிற் சினவா தீமோ
35 நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த யானை
முத்தார் மருப்பி னிறங்குகை கடுப்பத்
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குர
னற்கோட் சிறுதினைப் படுபு ளோப்பி
யெற்பட வருதிய ரெனநீ விடுத்தலிற்
40 கலிகெழு மரமிசைச் சேணோ னிழைத்த
புலியஞ் சிதண மேறி யவண
சாரற் சூரற் றகைபெற வலந்த
தழலுந் தட்டையுங் குளிரும் பிறவுங்
கிளிகடி மரபின வூழூழ் வாங்கி

---

31. பி - ம். 'வண்ணமுந் தொடையும்'

வண்ணமென்பது இயற்சொலென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். புறத். சூ. 27, ந.

35. "வாங்குகோ னெல்லொடு வாங்கி வருவைகல், மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி" கலி. ருo : 1 - 2.

35 - 6. முத்தார் யானை மருப்பு: முருகு. 304 - 5; மலைபடு. 517-8.

37. "துய்த்தலைப் புனிற்றுக்குரல் பால்வார் பிறைஞ்சித், தோடலைக் கொண்டன வேனல்" நற். உoசு : 1 - 2.

35 - 8. தினைக்கதிர்க்கு யானைக்கை உவமை: "பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக், கொய்பத முற்றன குவவுக்குர லேனல்" (மலைபடு. 107 - 8); "பூம்பொறி யொருத்த லேந்துகை கடுப்பத், தோடுத்தலை வாங்கிய நீடுகுரற் பைந்தினை", "ஏனல், இரும்பிடித் தடக்கையிற் றடைஇய பெரும்புனம்", "முறஞ்செவி யானைத் தடக்கையிற் றடைஇ, இறைஞ்சிய குரல பைந்தாட் செந்தினை" (நற். நகஎ : 2 - 3, நசச : 2 - 3, நஎசு : 1-2); "பைந்தாட் செந்தினை மடப்பிடித் தடக்கை யன்ன ........குரல்", "பிடிக்கை யன்ன பெருங்குர லேனல்" (குறுந். ககூஅ : 2 - 4, நகூo : 5); "உறங்குபிடித் தடக்கை யொருங்குநிரைத் தவை போல், இறங்குகுர லிறடி" பெருங். க. 49 : 103 - 4.

40. பி - ம். 'மீமிசை'

"கலிகெழு மீமிசைச் சேணோன்" சிலப். உரு : 30.

43 - 4. தழல் முதலிய மூன்றும் கிளிகடிதல்: "கட்டுவரி விற் கருங்குறவர் கைத்தொழிலா, லிட்ட விதணத் திருந்தெம் பெரு

45 யுரவுக்கதிர் தெறூஉ முருப்பவி ரமயத்து
விசும்பாடு பறவை வீழ்பதிப் படர
நிறையிரும் பௌவங் குறைபட முகந்துகொண்
டகலிரு வானத்து வீசுவளி கலாவலின்
முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு
50 நிரைசெல னிவப்பிற் கொண்மூ மயங்கி
யின்னிசை முரசிற் சுடர்ப்பூட் சேஎ
யொன்னார்க் கேந்திய விலங்கிலை யெஃகின்

---

மாட்டி, தட்டை குளிர்தழலைத் தாங்கித் தினைப்புனத்தைக், கிட்டலுரு வண்ணங் கிளிமுதற்புள் ளோட்டினளே" கந்த. வள்ளி. 52.

தழலுந் தட்டையும்: "தழலுந் தட்டையு முறியுந் தந்து" (குறுந். உஉங: 4); "தழலை வாங்கியும் தட்டை யோப்பியும்,.........குறமகள் காக்கு மேனல்" அகநா. கஅஅ: 11 - 3.

தட்டை: "கண்விடு புடையூத் தட்டை கவினழிந்து" (மதுரை. 305); "ஒலிகழைத் தட்டை புடையுநர்" (மலைபடு. 328); "சிறுதினைப் பெருங்குரல், செவ்வாய்ப் பைங்கிளி கவர.........வெதிர் புனை தட்டையேன்", "தட்டையும் புடைத்தனை கவணையுந் தொடுக் கென" (நற். கசஎ: 2 - 8, உ0சு: 5); "குறமகள்.........தட்டை யின், ஐவனச் சிறுகிளி கடியு நாட" (ஐங். உஅடு: 1 - 3); "சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண், குளிர்கொ டட்டை மதனில புடையா", "அமையறுத் தியற்றிய வெவ்வாய்த் தட்டையின்,.........சிறுதினை கவர்தலிற் கிளையமல், பெருவரை யடுக்கத்துங் குரீஇ யோப்பி" (அகநா. ஙஉ: 5 - 6, ஙஅஅ: 2 - 5); "தோகையுங் கிளியுந் தொக்க வை யகலத்...... . தடந்தோ ளசையத் தட்டை புடைத்து" பெருங். உ. 12: 118 - 20.

குளிர்: "சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ, குளிர்படு கையள்" (நற். ஙஂசு: 2 - 3); "கலித்த வேனற், படுகிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே", "ஏனல், உண்கிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே" குறுந். உகக: 1 - 2, ஙசு0: 5 - 6.

குளிரும் குளிரியும் ஒக்குமெனக் கூறி இவற்றை மேற்கோள் காட்டுவர்; தஞ்சை. 73, உரை,

45. "உரிநிமிர்ந் தன்ன வுருப்பவி ரமயத்து" குறுந். கடுச: 2.

46. விசும்பாடு பறவை: "விசும்பா டன்னம்" குறுந். உடுடு: 2.

47. "கடல்குறை படுத்தநீர்" (பரி. உ0: 1); "நெடுங்கடலும்.........தடிந்தெழிலி, தானல்கா தாகி விடின்" குறள். 17.

49 - 50. மேகமுழக்கத்திற்கு முரசின்ஒலி: முருகு. 121, அடிக்.

மின்மயங்கு கருவிய கன்மிசைப் பொழிந்தென
வண்ண னெடுங்கோட் டிழிதரு தெண்ணீ
55 ரவிர்துகில் புரையு மவ்வெள் ளருவித்
தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடிப்
பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி
நளிபடு சிலம்பிற் பாயம் பாடிப்
பொன்னெறி மணியிற் சிறுபுறந் தாழ்ந்தவெம்
60 பின்னிருங் கூந்தல் பிழிவனந் துவரி
யுள்ளகஞ் சிவந்த கண்ணேம் வள்ளித
ழொண்செங் காந்த ளாம்ப லனிச்சந்
தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி
செங்கொடு வேரி தேமா மணிச்சிகை
65 யுரிதுநா றவிழ்தொத் துந்தூழ் கூவிள
மெரிபுரை யெறுழஞ் சுள்ளி கூவிரம்
வடவனம் வாகை வான்பூங் குடச
மெருவை செருவிளை மணிப்பூங் கருவிளை
பயினி வானி பல்லிணர்க் குரவம்
70 பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா
விரிமல ராவிரை வேரல் சூரல்
குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி
குருகிலை மருதம் விரிபூங் கோங்கம்
போங்கந் திலகந் தேங்கமழ் பாதிரி

---

51 - 3. "செல்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி" (ஐந். ஐம். 1); "கண்ணொளி ரெஃகிற் கடிய மின்னி" பரி. உஉ : 7.

55. அருவிக்குத்துகில் உவமை: முருகு. 296, அடிக்.

57. சுனைக்குப்பளிங்கு உவமை: "மணிகண் டன்ன துணிகயம்" (அகநா. ௬௬ : 2); "பளிங்குவகுத் தன்ன தீநீர்" (புறநா. ௧௫௦ : 27); "சூழ்ந்த பேரொளி துளும்பிய நிலனைநீ ரென்னுத், தாழ்ந்த வந்துகி லிடவயிற் றழீஇயினன் பளிங்கு, போழ்ந்தி யற்றிய நிலனெனப் பூம்புன லிடைப்போய், வீழ்ந்த னன்பெரு வேத்தவை முகிழ்நகை விளைப்ப" பாகவத. ௧௦: சிசுபாலனைக்கொன்ற. 118.

58. நளிபடு சிலம்பு: "நளிமலைச் சிலம்பு" (நெடுநல். 100) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

68. இவ்வடி, எருவை, மலர்விசேட மென்பதற்கு மேற்கோள்; பரி. ௧௧: 77, பரிமேல்.

75 செருந்தி யதிரல் பெருந்தண் சண்பகங்
கரந்தை குளவி கடிகமழ் கலிமாத்
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோடம்
வாழை வள்ளி நீணறு நெய்த
80 ருழை தளவ முட்டாட் டாமரை
ஞாழன் மௌவ னறுந்தண் கொகுடி
சேடல் செம்மல் சிறுசெங் குரலி
கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை
காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்
85 பாங்கர் மராஅம் பல்பூந் தணக்க
மீங்கை யிலவந் தூங்கிணர்க் கொன்றை
யடும்பம ராத்தி நெடுங்கொடி யவரை
பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி
வஞ்சி பித்திகஞ் சிந்து வாரந்
90 தும்பை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி
நந்தி நறவ நறும்புன் னாகம்
பாரம் பீரம் பைங்குருக் கத்தி
யாரங் காழ்வை கடியிரும் புன்னை
நரந்த நாக நள்ளிரு ணாறி
95 மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவு
மரக்குவிரித் தன்ன பரேரம் புழகுடன்

---

75. பெருந்தண்சண்பகம் : முருகு. 27.

77. கல்லிவர் முல்லை : " முல்லை தாய கல்லதர்ச் சிறுநெறி " (நற். ௩௪௩ : 1) ; " முல்லை யூர்ந்த கல்லுயர் பேறி " (குறுந். உ௭௫ : 1) ; " கல்லிவர் முல்லைக் களிவண்டு " யா - வி. சூ. 43, மேற்.

80. முட்டாட்டாமரை : முருகு. 73 ; சிறுபாண். 183, அடிக்.

82. சிறுசெங்குரலி : பெருங். உ. 12 : 29.

84. கட்கமழ் நெய்தல் : " கட்கமழ் நெய்த லூதி " (முருகு. 74) ; " கட்கமழு நறுநெய்தல் " மதுரை. 250.

87. பி - ம். ' அடம்பமர் '

அடும்பு : " அடும்பிவ ரணியெக்க ராடிநீ தணந்தக்காற், கொடுங் குழை " (கலி. கஉஉ : 16 - 7) ; " படும்புலால் பார்த்தும் பகர்தும் - அடும்பெலாம் " திணைமாலை. 51.

96. பி - ம். ' பாரம்புழகுடன் '

மாலங் குடைய மலிவன மறுகி
வான்கண் கழீஇய வகலறைக் குவைஇப்
புள்ளா ரியத்த விலங்குமலைச் சிலம்பின்
100 வள்ளுயிர்த் தெள்விளி யிடையிடைப் பயிற்றிக்
கிள்ளை யோப்பியுங் கிளையிதழ் பறியாப்
பைவிரி யல்குற் கொய்தழை தைஇப்
பல்வே றுருவின் வனப்பமை கோதையெம
மெல்லிரு முச்சிக் கவின்பெறக் கட்டி
105 யெரியவி ருருவி னங்குழைச் செயலைத்
தாதுபடு தண்ணிழ லிருந்தன மாக
வெண்ணெய் நீவிய சுரிவளர் நறுங்காழ்த்
தண்ணறுந் தகரங் கமழ மண்ணி
யீரம் புலர விரலுளர்ப் பவிழாக்
110 காழகி லம்புகை கொளீஇ யாழிசை
யணிமிகு வரிமிஞி றார்ப்பத் தேங்கலந்து
மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின்
மலையவு நிலத்தவுஞ் சினையவுஞ் சுனையவும்
வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇய

---

புழகு: "அகன்றலைப் புழகும்" (பெருங். ௨. 12 : 27); "அழகா வென்றிப் புழகா" திருவால. ௩௬ : 12.

62 - 97. இவ்வடிகளிற் குறிஞ்சி நிலத்திற்குங் கூதிர்க்காலத்திற்கும் யாமத்திற்குமுரிய பூக்கள் மயங்கிவந்தமை, "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொல். அகத். சூ. 19) என்பதனாலமையும்.

100. வள்ளுயிர்த் தெள்விளி: "வள்ளுயிர்ப் பேர்யாழ்" மலைபடு. 37.

101. பி - ம். 'பரியா'

109. "முன்கை சூழ்ந்த, துகில்கொடு குஞ்சி யீரம் புலர்த்தி" பெரிய. தடுத்தாட். 16.

110 - 11. வண்டின் ஓசைக்கு யாழோசை: "நரம்பி னிம்மென விமிரு மாதர் வண்டு" (குறிஞ்சி: 147 - 8); ப. ௧௨௩, 1 - ஆம் அடிக் குறிப்பையும், முல்லைப்பாட்டு, 8 - ஆம் அடியின் அடிக்குறிப்பையும் பார்க்க; "அரவ வண்டின மார்த்துட னியாழ்செயும்", "இனவண் டியாழ்செய", "பல்வண்டி யாழ்செய" சிலப். ௧௨ : "நாகநாறு", ௨௬ : 112, ௨௭ : 194.

113 - 4. சினையவுஞ் சுனையவும்.........மலர்: "சினையவுஞ் சுனையவு நாடினர் கொயல்வேண்டா" கலி. ௨௮ : 1 - 2.

115 தண்ணறுந் தொடையல் வெண்போழ்க் கண்ணி
நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சிப்
பைங்காற் பித்திகத் தாயிதழலரி
யந்தொடை யொருகாழ் வளைஇச் செந்தீ
யொண்பூம் பிண்டி யொருகா துசெரீஇ
120 யந்தளிர்க் குவவுமொய்ம் பலைப்பச் சாந்தருந்தி
மைந்திறை கொண்ட மலர்ந்தேந் தகலத்துத்
தொன்றுபடு நறுந்தார் பூணொடு பொலியச்
செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்
வண்ண வரிவில் லேந்தி யம்புதெரிந்து
125 நுண்வினைக் கச்சைத் தயக்கறக் கட்டி
யியலணிப் பொலிந்த வீகை வான்கழ
றுயல்வருந் தோறுந் திருந்தடிக் கலாவ
முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பிற்
பகைபுறங் கண்ட பல்வேலிளைஞரி
130 னுரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளு
முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர
நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்தியா
மிடும்பைகூர் மனத்தே மருண்டுபுலம் படர
135 மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத்
தாகாண் விடையி னணிபெற வந்தெ
மலமர லாயிடை வெரூஉத லஞ்சி

118. ஒருகாழ் : "முல்லை யொருகாழும்......கூந்தலுட் பெய்து" (கலி. சுசரு : 5-6) ; "ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே" புறநா : உகக : 8.

118 - 9. அசோகம்பூவிற்கு நெருப்பு: "செந்தீ, யொண்பூம் பிண்டி" மதுரை. 700 - 701.

அசோகந்தளிரைக் காதிற்செருகல்: முருகு. 31, அடிக்.

128. மு. மலைபடு. 59.

முனைபாழ்படுக்கும்: "முனையகன் பெரும்பா ழாக" (பதிற். உரு : 9) ; "முனைபாழ் பட்ட வாங்கண்", "முனைபா ழாக" அகநா. உசஎ : 8, ருசுக : 6.

129 - 31. நாய்க்கு வீரர் : ப. உஉச, 2 - ஆம் அடிக்.

132. பி - ம். 'இளையாக்'

மெல்லிய வினிய மேவரக் கிளந்தெ
மைம்பா லாய்கவி னேத்தி யொண்டொடி
140 யசைமென் சாய லவ்வாங் குந்தி
மடமதர் மழைக்க ணிளையீ ரிறந்த
கெடுதியு முடையே னென்றனெ னதனெதிர்
சொல்லெ மாதலி னல்லாந்து கலங்கிக்
கெடுதியும் விடீஇ ராயி னெம்மொடு
145 சொல்லலும் பழியோ மெல்லிய லீரென
நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கைகவர் நரம்பி னிம்மென விமிரு
மாதர் வண்டொடு சுரும்புநயந் திறுத்த
தாதவி ழலரித் தாசினை பிளந்து
150 தாறடு களிற்றின் வீறுபெற வோச்சிக்
கல்லென் சுற்றக் கடுங்குர லவித்தெஞ்
சொல்லற் பாணி நின்றன னாக
விருவி வேய்ந்த குறுங்காற் குரம்பைப்
பிணையேர் நோக்கின் மனையோண் மடுப்பத்
155 தேம்பிழி தேறன் மாந்தி மகிழ்சிறந்து
சேமமடிந்த பொழுதின் வாய்மடுத்
திரும்புனந் திழத்தலிற் சிறுமை நோனு

138. "மெல்லிய வினிய மேவரு தகுந, விவைமொழி யாமெனச் சொல்லினும்" குறுந். ௩0௬ : 1 - 2.

139. "நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன, ஐவகை பாராட்டி னுய்மற் றெங்கூந்தல்" கலி. ௨௨ : 12 - 3.

130 - 42. இவ்வடிகள், தலைவன் நாய்காத்தவாற்றிற்கு மேற்கோள் ; தொல், பொருளியல், சூ. 13, ந.

146. சிறுபாண். 36 ; "நைவளம் பூத்த நரம்பியைசேர்ப் பொய் வளம், பூத்தன பாணரின் பாட்டு" பரி. ௧௮ : 20 - 21.

147 - 8. வண்டி னோசைக்கு யாழ்நரம்பினொலி : குறிஞ்சி. 110, அடிக்.

149. பி - ம். 'ததர்சினை'

152. இவ்வடி, ஆகவென்பது பிரிவிலசைநிலையாய் நிற்றற்கு மேற்கோள் ; தொல். இடை. சூ. 32, ந.

155. தேம்பிழி தேறல் : பெருங். ௨. 2 : 177.

த்ரவுற ழுஞ்சிலை கொளீஇ நோய்மிக்
குரவுச்சின முன்பா லுடற்சினஞ் செருக்கிக்
160 கணைவிடு புடையூக் கானங் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்
கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக
விரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்திச்
சினந்திகழ் கடாஅஞ் செருக்கி மரங்கொல்பு
165 மையல் வேழ மடங்கலி னெதிர்தர
வுய்விட மறியே மாகி யொய்யெனத்
திருந்துகோ லெல்வளை தெழிப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையி னடுங்க வார்கோ
170 லுடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை
யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலிற்

---

158. வில்லிற்கு அரவு உவமை: "விடுபொறி யரவென் விளங்கு வெஞ்சிலை", "அரவின் றேற்றமே போலுஞ் சிலைகளும்": சீவக. 1850, 2158.

160. கானங் கல்லென: "கானங், கல்லென் றிரட்ட" குறிஞ்சி. 227 - 8.

161. பெரும்பாண். 166, அடிக்.

165. யானைக்குக் கூற்றுவன் உவமை: "கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பின்.........வேழம்" (முருகு. 81 - 2) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

164 - 5. "நெடுநல் யானை, மையலங் கடாஅஞ் செருக்கி மதஞ் சிறந்து" அகநா. ௩0எ : 7 - 8.

162 - 5. யானை முழக்கிற்கு இடி உவமை: பரி. அ : 17 - 8; அகநா. கசச : 12 - 3; புறநா. அக : 1 - 2; பு. வெ. 37, 289.

167. பி - ம். 'வளைதெளிர்ப்ப'

169. "சூருறு மஞ்ஞையிற் சோர்ந்த கூந்தலர்,.........அதிர்வனர் நடுங்கி" பெருங். க. 44 : 22 - 4.

170. உடுவுறும் பகழி: "உடுவுறு கணையிற் போகி" அகநா. உகஉ : 12.

170 - 71. "செந்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து, கருங்கைக் கானவன் களிற்றுநிறத் தழுத்தலின்" தொல். செய். சூ. 95, பேர். மேற்.

புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லா
தயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவே
175 ளணங்குறு மகளி ராடுகளங் கடுப்பத்
திணிநிலைக் கடம்பின் றிரளரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி விடேஎ
நுரையுடைக் கலுழி பாய்தலி னுரவுத்திரை
யடுங்கரை வாழையி னடுங்கப் பெருந்தகை
180 யஞ்சி லோதி யசையல் யாவது
மஞ்ச லோம்புநின் னணிநல நுகர்கென
மாசறு சுடர்நுத னீவி நீடுநினைந்
தென்முக நோக்கி நக்கன னந்நிலை

---

172. புண்ணுமிழ்குருதி : பதிற். கக : 8.
பாய்தல், பரத்தலென்னும் குறிப்புப்பொருண்மையையுணர்த்து மென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். உரி. சூ. 63, ந ; இ - வி. சூ. 281, உரை ; 'புண்ணுமிழ் குருதிப் புனல் பாய்ந்து' என்ற பாடத்துடன், மேற்கோள் காட்டுவர் ; தொல். உரி. சூ. 64, இளம்.

175. முருகு. 245, அடிக்.

176. பி - ம். 'திண்ணிலை'

177. பி - ம். 'துணையமை மாலையிற்'

176 - 7. சிறுபாண். 69, அடிக். "கடம்பு சூடிய கன்னி மாலை போற், றொடர்ந்து கைவிடாத் தோழி மாரொடும்" சீவக. 990.

178 - 9. "வாழை முழுமுத றுமிய.........இழிதரு மருவி" முருகு. 307 - 16.

178 - 81. "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள், தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலால், நீணாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினற், பூணாக முறத்தழீஇப் போதந்தான்" கலி. ருகூ : 1 - 4.

182. நுதல்நீவுதல் : நற். உஅ : 2, ருகரு : 6 ; கலி. உக : 6 ; அகநா. உசo : 10 ; "பெறுக நின்னை யாமெனன, நறுநுத னீவிப் படர்தந் தோனே" தமிழ்நெறி. மேற்.

160 - 83. இவ்வடிகள், தலைவன் களிறுகாத்தவாற்றிற்கும் புனலின் எடுத்தவாற்றிற்கும்மேற்கோள் ; தொல். பொருளியல், சூ. 13, ந.

நாணு முட்கு நண்ணுவழி யடைதர
185 வொய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ
யாக மடைய முயங்கலி னவ்வழிப்
பழுமிளகுக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் றீங்கனி யுதிர்ந்தெனப்
புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவி
190 னெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேற
னீர்செத் தயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொ ளாங்கண் விழவுக்கள நந்தி
யரிக்கூட் டின்னியங் கறங்க வாடுமகள்
கயிறூர் பாணியிற் றளருஞ் சாரல்
195 வரையர மகளிரிற் சாஅய் விழைதக
விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தட்
டண்கம ழலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்திற் கவின்பெறப் பொலிந்த
குன்றுகெழு நாடனெம் விழைதரு பெருவிற
200 லுள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு
சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருணப்
பைந்நிணை மொழுகிய நெய்ம்மலி யடிசில்
205 வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை

---

184. "அச்சமு நாணும்.........மிச்சமும் பெண்பாற் குரிய வென்ப" (தொல். களவு. சூ. 8); "உட்கு நாணு மொருங்குவந் தடைதர", "உட்கு நாணு மொருங்குவந் தடைய" (பெருங். ௩. 6 : 87, ௪. 13 : 100); "உட்கும் நாணும் ஒருங்கு வருதலின்" சீவக. 731, ந.

193 - 4. ஆடுமகள் கயிறூர்தல்: "தனிக்கயிற்றிற் - போநீள், கழைக்கோதையர்" நள. சுயம். 148.

201 - 2. "நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும், வரைகோ ளறியாச் சொன்றி" குறுந். உ௩௩ : 5 - 6.

202 - 3. பொருந. 66; சிறுபாண். 206, அடிக்.

205. பி - ம். 'வான்றுணை'

நின்றோ டுண்டலும் புரைவ தென்றாங்
கறம்புணை யாகத் தேற்றிப் பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழூஉ
210 தேமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி
யந்தீந் தெண்ணீர் குடித்தலி னெஞ்சமர்ந்
தருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி
வானுரி யுறையுள் வயங்கியோ ரவாவும்
பூமலி சோலை யப்பகல் கழிப்பி
215 யெல்லை செல்ல வேழூர் பிறைஞ்சிப்
பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய
மான்கண மரமுதற் றெவிட்ட வான்கணங்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர
வேங்குவயி ரிசைய கொடுவா யன்றி
220 லோங்கிரும் பெண்ணை யகமட லகவப்
பாம்புமணி யுமிழப் பல்வயிற் கோவல
ராம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற
வாம்ப லாயிதழ் கூம்புவிட வளமணைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி

---

206-7. "வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி, மிச்சின் மிசைவான் புலம்" குறள், 85.

212. களிறுதரு புணர்ச்சி : நம்பி. சூ. 177, உரை.

217-8. ஆன்கணம் மாலையில் கன்றையுள்ளிப்புகுதல் : குறுந். கoஅ : 2; கலி. ககக : 9-10; அகநா. கசு : 9-12; மணி. ரு : 132.

221. "நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த, மேய்மணி விளக்கின்" அகநா. எஉ : 14-5.

222. ஆம்பலந் தீங்குழல் : ஐங். உகரு : 4; சிலப். ஆய்ச்சியர்.

217-22. "அன்னாய் வாழிவேண் டன்னை யென்னுங் குறிஞ்சிப் பாட்டினுள், 'மான்கண மரமுதற் றெவிட்ட.........தெள்விளி பயிற்ற' என்புழி முல்லைக்குரிய கருப்பொருளாகிய ஆன்கணமும் பாம்பும் கோவலரும் ஆம்பற்குழலும் அதற்குரிய முதற்பொருளாகிய மாலையும் நெய்தற்குரிய கருப்பொருளாகிய அன்றிலும் பனையும் வந்தவாறு கண்டு கொள்க" நம்பி. ஒழிபு சூ. 42, உரை.

223. ஆம்பலாயிதழ் கூம்புவிட : புறநா. உoக : 3, ௩அ௩ : 7.

224. மதுரை. 555-6, அடிக்.

225 யந்தி யந்தண ரயரக் கானவர்
விண்டோய் பணவை மிசைஞெகிழி பொத்த
வான மாமலை வாய்சூழ்பு கறுப்பக் கானங்
கல்லென் றிரட்டப் புள்ளின மொலிப்பச்
சினைஇய வேந்தன் செல்சமங் கடுப்பத்
230 துனைஇய மாலை துன்னுதல் காணூஉ
நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மண மயர்கஞ் சின்னாட்
கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென
வீர நன்மொழி தீரக் கூறித்
235 துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து
துஞ்சா முழவின் மூதூர் வாயி
லுண்டுறை நிறுத்துப் பெயர்ந்தன னதற்கொண்
டன்றை யன்ன விருப்போ டென்று
மிரவரன் மாலைய னேவரு தோறுங்
240 காவலர் கடுகினுங் கதநாய் குரைப்பினு

225. அந்தியந்தணரயர: "அந்தி யந்தண ரருங்கட னிறுக்கும்" (புறநா. ௨: 22); "அந்தி யந்தணர் செந்தீப் பேண" மணி. ௫: 133.

215-30. மாலைவருணனை.

231. நேரிறை முன்கை: ஐங். ௪௧௫: 4.

232. நாடறி நன்மணம்: "பலரறி மணமவர் படுகுவர்" சிலப். ௨௪: "வேலனார்"

234. ஈரநன்மொழி: சிறுபாண். 93.

231-4. "எம்மூர் வியன்றுறை, நேரிறை முன்கை பற்றிச், சூரர மகளிரோ டுற்ற சூளே" குறுந். ௫௩: 5-7.

235. "மடநா குடனாகச், செல்லு மழவிடைபோற் செம்மாந்து" நள. சுயம். 156.

238. "தலைநா ளன்ன பேணலன்" (நற். ௩௩௨: 8); "இன்றை யன்ன நட்பின்", "பெருவரை யடுக்கத்துக் கிழவ னென்று, மன்றை யன்ன நட்பினன்" (குறுந். ௧௧௧: 6, ௩௮௫: 6-7); "தண்டாக் காத லுந் தலைநாட் போன்மே" (அகநா. ௩௩௨: 15); "இன்றே போல் கநும் புணர்ச்சி" புறநா. ௫௮: 28.

239. மாலை, இயல்பென்னுங் குறிப்பை யுணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 16, இளம். சே. ந; இ-வி. சூ. 290, உரை.

நீதுயி லெழினு நிலவுவெளிப் படினும்
வேய்புரை மென்றோ ளின்றுயி லென்றும்
பெறாஅன் பெயரினு முனிய லுறாஅ
னிளமையி னிகந்தன்று மிலனே வளமையிற்
245 றன்னிலை தீர்ந்தன்று மிலனே கொன்னூர்
மாய வரவி னியல்புநினைஇத் தேற்றி
நீரெறி மலரிற் சாஅ யிதழ்சோரா
ஈரிய கலுழுமிவள் பெருமதர் மழைக்க
ணாகத் தரிப்பனி யுறைப்ப நாளும்
250 வலைப்படு மஞ்ஞையி னலஞ்செலச் சாஅய்
நினைத்தொறுங் கலுழுமா லிவளே கங்கு
லளைச்செறி யுழுவையு மாளியு முளியமும்
புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும்
வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத்
255 துருமுஞ் சூரு மிரைதே ரரவமு
மொடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்குங்
கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமு
நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும்
பழுவும் பாந்தளு முளப்படப் பிறவும்

---

240-41. நம்பி. சூ. 161.

242. தோளிற்றுயிலல்: "அரிவை தோளிணைத் துஞ்சி" (குறுந். ௩௨௩: 6); "வேயுறழ் மென்றோட் டுயில்பெறும்" (கலி. ௧௦௪: 24); "முருந்தேர் முறுவ லிளையோள், பெருந்தோ ளின்றுயில் கைவிடு கலனே" (அகநா. ௧௩௩: 13-4); "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின்" குறள். 1103.

245. பி-ம். 'திரிந்தன்றுமிலன்'

231-45. உண்மை செப்பற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். பொருளியல், சூ. 13, ந.

247. "வண்டுபடு மலரிற் சாஅய்த், தமியேன் மன்ற வளியேன் யானே" குறுந். ௩௦: 5-6.

250. "ஓரி முருங்கப் பீலி சாய, நன்மயில் வலைப்பட் டாங்கு" குறுந். ௨௪௪: 5-6.

258. ஊழடி முட்டம்: பெருங். ௧. 52: 32.

வழூஉவின் வழாஅ விழுமமவர்
குழூமலை விடரக முடையவா லெனவே.

251 - 61. இவ்வடிகளுடன், "தலைமகன் இரவுக்குறி வந்து ஒழுகா நின்ற நிலைமைக்கண், எம்பெருமான் வரும்வழி, எண்கும் வெண்கோட்டி யானையும் அரவும் உருமும் புலியும் வரையர மகளிருமுடைத்து ; மற்றும் தெய்வங்கள் வெளவும் வண்ணத்தன ; ஏதம்நிகழ்வது கொல்லோவென வேறுபடும்" (இறை. சூ. 29, உரை) என்பது ஒப்புநோக்கற்பாலது.

---

## இதன் பொருள்.

இதற்குக் குறிஞ்சியென்று பெயர்கூறினர், இயற்கைப்புணர்ச்சியும் பின்னர் நிகழும் புணர்ச்சிகளுக்குநிமித்தங்களும் கூறுதலின் ; அன்றியும் முதலானும் கருவானும் குறிஞ்சிக்குரியனவே கூறுதலானும் அப்பெயர் கூறினர். [1] "அறத்தொடு நிற்குங் காலத் தன்றி, யறத்தியன் மரபில டோழி யென்ப" என்பதனல், தோழி அறத்தொடு நிற்குங் காலம்வந்து செவிலிக்கு அறத்தொடு நின்றவழி அதற்கிலக்கணங்கூறிய, [2] "எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல், கூறுத லுசாத லேதீடு தலைப்பா, டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ, யவ்வெழு வகைய தென்மனர் புலவர்" என்னுஞ் சூத்திரத்து ஏழனுள், கூறுதலுசாத லொழிந்த ஆறுங்கூறி அறத்தொடுநிற்கின்றாளென்றுணர்க.

1. அன்னாய் வாழி - தாயே வாழ்வாயாக ;

[வேண் டன்னை :] அன்னை வேண்டு - தாயே யான் கூறுகின்ற வார்த்தையை விரும்புவாயாக ;

1 - 12. [ஒண்ணுத, லொலிமென் கூந்தலென் றோழி மேனி, விற லிழை நெகிழ்த்த வீவருங் கடுநோ, யகலு ளாங்க ணறியுநர் வினாயும், பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும், வேறுபல் லுருவிற் கடவுட் பேணி, நறையும் விரையு மோச்சியு மலவுற், றெய்யா மையலை நீயும் வருந் துதி, நற்கவின் றொலையவு நறுந்தோ ணெகிழவும், புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவு, முட்கரந் துறையு முய்யா வரும்படர், செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின் :]

ஒள் நுதல் (1) ஒலி மெல் கூந்தல் (2) விறல் (3) மேனி என் தோழி (2) உள் கரந்து உறையும் உய்யா அருபடர் (11) - ஒள்ளிய நுதலினையும் தழைக்கும் மெல்லிய மயிரினையும் பிறர் நிறத்தினை வென்ற வெற்றியினை யுடைய நிறத்தினையுமுடைய என்னுடைய தோழி தன்மனத்துள்ளே

---

[1] தொல். பொருள். சூ. 12. [2] தொல். பொருள். சூ. 13.

மறைத்திருக்கும் தன்னுயிரைத் தான் தாங்கியிராமைக்குக் காரணமாகிய ஆற்றுதற்கரிய நினைவு,

இழை நெகிழ்த்த வீவு அரு கடு நோய் (3) செப்பல் வன்மையின் யான் செறித்து (12) - தானணிந்த கலன்களை நெகிழப்பண்ணின, 1 மருந்துகளாற் கெடுத்தற்கரிய கடிய நோய் நினக்குச்சொல்லுதற்கு எளிதன்றி வலியதன்மையையுடைமையினாலே யான் அதனை என்னுள்ளே அடக்கி,

நல் கவின் தொலையவும் நறு தோள் நெகிழவும் (9) புள் பிறர் அறியவும் புலம்பு வந்து அலைப்பவும் (10) கடவலின் (12) - அவளுடைய நன்றாகிய அழகுகெடவும் நறியதோள் மெலியவும் வளைகழலுதலைப் பிறர் அறியவும் தனிமை மேன்மேலே வந்து வருத்தவும் நினக்கு அறிவுறாமற் செலுத்துகையினாலே,

நீயும் (8) அலவுற்று (7) அகல் உள் ஆங்கண் அறியுநர் வினாய் (4) - நீயும் அலம்வந்து அகன்றஇடத்தையுடைய ஊரிடத்துக் 2 கட்டினாலும் 3 கழங்கினாலும் எண்ணியறிவாரை வினாவி அவர் தெய்வத்தான்வந்த வருத்தமென்றலின்,

வினாயுமென்றவிடத்து உம்மையைப் பேணி (6) என்பதன் பின்னே கூட்டுக.

வேறு உருவின் பல் கடவுள் (6) நறையும் விரையும் ஓச்சியும் (7) பரவியும் தொழுதும் விரவு மலர் தூயும் (5) பேணியும் (6) - வேறுபட்ட வடிவினையுடைய பலதெய்வங்களைத் தூபங்களும் சந்தனமுதலியனவுங் கொடுத்தும் பரவியும் வணங்கியும் கலந்தபூக்களைச்சிதறியும் வழிபட்டும் அதனால் தீராமையின்,

---

1 "மருந்துபிறி தின்மைநற் கறிந்தனை சென்மே" (நற். உசஎ : 9); "மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே" (குறுந். கூஅ : 4); "பிறிந்தோர் பெயர்வுக் கிரங்கி, மருந்துபிறி தின்மையி னிருந்துவினை யிலனே" (அகநா. கசஎ : 13 - 4); "மருந்திற் றீராது.........நீதர வந்த நிறையழி துயரம்" நம்பி. சூ. 127, மேற்.

2 கட்டு - சிறுமுறத்திற் பரப்பிய நெல்லிற்பார்க்கும் ஒருவகைக் குறி; இங்ஙனம் குறிப்பார்ப்பவள், கட்டுவிச்சியெனப்படுவாள்; இதனைத் திருக்கோவையார், 285 - ஆம் செய்யுளாலும் அதனுரையாலும், "கட்டுவிச்சி கட்டேறிச், சீரார் சுளகிற் சிலநெல் பிடித்தெறியா, வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவாப், பேரா யிரமுடையா னென்றாள்" ((20 - 22) என்னுஞ் சிறியதிருமடலாலும், பெருங். க. 37 : 232 - ஆம் அடிமுதலியவற்றாலும் உணர்க.

3 கழங்கு - கழற்கொடிக்காய். கட்டினாலும் கழங்கினாலும் எண்ணியறிவார், கட்டுவிச்சியும் வேலனும்; தொல். களவு. சூ. 24, ந.

பேணியுமென்னுமும்மை சிறப்பு ; ஏனைய எண்ணும்மை.

எய்யா மையலை வருந்துதி (8) - இந்நோயையறியாத மயக்கத்தை யுடையையாய் வருந்தாநின்றாய் ;

என் தோழி (2) படர் (11) இழைநெகிழ்த்தநோய் (3) நினக்குச் செப்பல் வன்மையின் யான் செறித்துத் (12) தொலையவும் நெகிழவும் (9) அறியவும் அலைப்பவும் (10) கடவலின் (12) நீயும் (8) அலவுற்று (7) வினைய்க் (4) கடவுளைப்பேணியும் (6) எய்யாமையலை உடையாயாய் வருந்துதி (8) யெனமுடிக்க.

13 - 4. [முத்தினு மணியினும் பொன்னினு மத்துணை, நேர்வருங் குரைய கலங்கெடிற் புணரும் :] அத்துணை முத்தினும் மணியினும் பொன்னினும் நேர் வரும் கலம் கெடின் புணரும் - அவ்வளவாகிய முத்தாலும் மாணிக்கத்தாலும் பொன்னாலும் பொருந்துதல்வரும் பூண் கெட்டவாயிற் பின்னும் வந்துகூடும் ; அதுபோலன்றி,

முத்து முதலியவற்றிற்கூறிய இலக்கணங்களை அத்துணையென்றார்.

குரைய : அசை.

15 - 8. [சால்பும் வியப்பு மியல்புங் குன்றின், மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்த, லாசறு காட்சி யையர்க்கு மந்நிலை, யெளிய வென்ஞர் தொன்மருங் கறிஞர் :]

சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின் மாசு அற கழீஇ வயங்கு புகழ் அந்நிலை நிறுத்தல் - தத்தங்குலத்திற்கேற்ற குணங்களினமைதியும் மேம்பாடும் [1] ஒழுக்கமும் பழையதன்மைகெட்டாற் பிறந்தஅழுக்கைப் போம்படிகழுவி விளங்கும்புகழை முன்புபோலே நிற்கும்படி நிறுத்தல்,

தொல் மருங்கு அறிஞர் ஆசு அறு காட்சி ஐயர்க்கும் எளிய என்ஞர் - பழைதாகிய நூலையறிவார், குற்றமற்ற அறிவினையுடைய தெய்வ இருடிகளுக்கும் எளியகாரிய மென்னர் ;

[2] "ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியும்" என்றாராகலின் ஐயர் தேவ ராகார்.

19 - 20. [மாதரு மடனு மோராங்குத் தணப்ப, நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி :]

நெடு தேர் எந்தை அரு கடி நீவி - நெடியதேரையுடைய என் தந்தையது அரிய காவலைக் கடந்து,

மாதரும் மடனும் ஓராங்கு தணப்ப - [3] இருமுதுகுரவரும் தமக்கு இயைந்தோர்க்குக் கொடுப்பேமென்றிருக்கின்ற காதலும் எனதுமடனும் சேரப்போக,

---

1 "பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" குறள், 134.

2 தொல். கற்பு. சூ. 5.

3 இருமுதுகுரவர் - தாய்தந்தையர்.

21. [இருவே மாய்ந்த மன்ற லிதுவென :] இது இருவேம் ஆய்ந்த மன்றல் என - இந்தமணம் தலைவனும் யானும் [1] பெருமையும் உரனும் அச்சமும் நாணும் நுணுகியநிலையாற்பிறந்த கந்தருவமணமென்று,

22. நாம் அறிவுறலின் பழியும் உண்டோ - நாம் யாய்க்கு அறிவுறுத்தலான் நமக்குப் புகழேயன்றி வருவதோர்பழியுமுண்டோ? அஃதில்லை;

உம்மை: எச்சவும்மை. ஓகாரம்: எதிர்மறை, [2] இது மறைநூல் விதித்ததாகலின்.

23. ஆற்றின் வாரார் ஆயினும் - இங்ஙனம் அறத்தொடுநின்றபின் தலைவர்க்கே நம்மை அடைநேர்ந்திலராயினும்,

ஆற்ற - நாம் உயிர்போந்துணையும் இவ்வருத்தத்தைப் பொறுத்திருக்க,

24. [ஏனை யுலகத்து மியைவதா னமக்கென :] நமக்கு ஏனை உலகத்தும் இயைவதால் என - நமக்கு [3] மறுபிறப்பினும் இக்கூட்டம் கூடுவதொன்றாயிருந்ததெனக்கூறி,

25 - 6. [மானமர் நோக்கங் கலங்கிக் கையற், றானச் சிறுமைய ளிவளுந் தேம்பும் :] ஆனா சிறுமையள் மான் அமர் நோக்கம் கலங்கி கையற்று இவளும் தேம்பும் - ஆற்றுந்தன்மைத்தல்லாத நோயினையுடையளாய் மான் நோக்கமமர்ந்த நோக்கமின்றி மையனோக்கங்கொண்டு வினையொழிந்து அயர்ந்து இவளும் மெலியும்;

இவளும் (26), கலங்கி (25), கெடிற் புணரும் (14); அதுபோலன்றிச் சால்பு முதலியனகுன்றி‍ (15) நிறுத்தல் (16) எளியவென்னார் (18) ஆகலின், இஃது இருவேமாய்ந்தமன்றலென (21) அறிவுறுவிற்

---

1 பெருமையும் உரனும் தலைவன் குணங்கள்; அச்சமும் நாணும் தலைவியின் குணங்கள்; தொல். களவு. சூ. 7, 8; "நாணு முட்கு நண்ணுவழி யடைதர" குறிஞ்சி. 184.

2 இது வென்றது கந்தருவ மணத்தை; அது மறைநூல்விதியென்பதை, "மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுட், டுறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே" (தொல். களவு. சூ. 1), "அருமறை மன்றலெட்டினுட், கந்தருவ வழக்கம்" (இறை. சூ. 1), "காந்தர்ப்ப மென்ப துண்டாற் காதலிற் கலந்த சிந்தை, மாந்தர்க்கு மடந்தைமார்க்கு மறைகளே வகுத்த கூட்டம்" (கம்ப. சூர்ப்பநகை. 54) என்பவற்றாலுணர்க.

3 "இம்மை மாறி மறுமை யாயினும், நீயா கியரென் கணவனை, யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே" (குறுந். சக: 3 - 5); "அவனை எதிர்ப்படாதிருத்தல் அன்பன்றென்னுங் கருத்தால், பிறப்பானடுப்பினும் பின்னுந் துன்னத்தகும் பெற்றியரென்றாள்" திருச்சிற். 205, பேர்.

பழியுமில்லை (22); ஆற்றின்வாராராயினும் ஆற்ற (23) ஏனையுலகத்தும் இயைவதாலெனக்கூறி (24) மெலியும் (26) எனமுடிக்க.

1 "வரைவிடை வைத்த காலத்து வருந்தினும், வரையா நாளிடை வந்தோன் முட்டினு, முரையெனத் தோழிக் குரைத்தற் கண்ணுந், தானே கூறுங் காலமு முளவே" என்பதனுள், 'தானே கூறுங் காலமு முளவே' என்றதனால் 2 தலைவிகூற்றினைக் கொண்டுகூறினாளென் றுணர்க. 3 "செறிவு நிறையுஞ் செம்மையுஞ் செப்பு, மருமையு மறிவும் பெண்பா லான" என்பதனால் மறைபுலப்படுத்தலாகா தென்றாராயினும், 4 "உற்றுழி யல்லது சொல்ல லின்மையி, னப்பொருள் வேட்கை கிழவியி னுணர்ப" என்பதனால் மறைபுலப்படுத்தலுமாமென வழுவமைத்தலின் இங்ஙனம் தலைவிகூறினாள்.

இதனால் தோழி 5 தலைப்பாடுகூறினாள்.

27 - 8. இகல் மீ கடவும் இரு பெரு வேந்தர் வினை இடை நின்ற சான்றோர் போல - 6 மாறுபாட்டின் மிகுதியைச் செலுத்தும் இருவராகிய பெரிய அரசரைச் 7 சந்துசெய்விக்குந் தொழிலிடத்தேநின்ற அறிவுடையோரைப்போல,

29. இரு பெரு அச்சமோடு யானும் ஆற்றலேன் - நினக்கும் இவள் வருத்தத்திற்குமஞ்சும் இரண்டு பெரிய அச்சத்தாலே யானும் வருந்தாநின்றேன்;

30. கொடுப்பின் நன்கு உடைமையும் - கொடுத்தபின்பு எல்லாவற்றானும் நன்றாகிமுடிதலையும்,

குடி நிரல் உடைமையும் - ஒருகுடியாகாமல் இரண்டுகுடியும் ஒத்தலுடைமையையும்,

31. வண்ணமும் - குணத்தையும்,

துணையும் - சுற்றத்து உதவிகளையும்,

பொரீஇ எண்ணாது - ஒப்பித்துப்பார்த்துப் பின்னரும் பலருடன் உசாவாதே,

8 "செந்துறை, வண்ணப் பகுதி வரைவின் றாங்கே" என்பதனால் வண்ணம் குணமென் றுணர்க.

---

1 தொல். களவு. சூ. 21.

2 தலைவிகூற்றை 24 - ஆம் அடியிற் காண்க.

3 தொல். பொருளியல், சூ. 15. 4 தொல். பொருளியல், சூ. 14.

5 தலைப்பாடு கூறல் - தலைவனும் தலைவியும் தாமே எதிர்பட்டார், யான் அறிந்திலேனெனக்கூறல்.

6 "வலிமிகு வெகுளியான் வாளுற்ற மன்னரை, நயனுடி நட்பாக்கும் வினைவர்போல்" கலி. சஃ : 7 - 8.

7 சந்துசெய்வித்தல் - சந்திசெய்வித்தல். 8 தொல். புறத். சூ. 27.

32. எமியேம் துணிந்த ஏமம் சால் அரு வினை - நும்மையின்றித் தமியேமாய் யாங்களே துணிந்த உயிர்க்குப் பாதுகாவலமைந்த செய்தற்கரிய இக்கந்தருவமணம்,

தானும் புணர்ச்சிக்குப்பின் உடம்படுதலின், எமியேந் துணிந்த வென்றாள்.

33. நிகழ்ந்த வண்ணம் முன்புநடந்தபடியை,

33-4. நீ நனி உணர செப்பல் ஆன்றிசின் - நீ மிகவுமறியும்படி சொல்லுதலையமைந்தேன்;

34. சினவாதீமோ - அதுகேட்டுச் சினவாதிருப்பாயாக;

35. நெல் கொள் நெடு வெதிர்க்கு அணந்த யானை - நெல்லைத் தன்னிடத்தேகொண்ட நெடிய மூங்கிலைத் தின்றற்கு மேனோக்கிநின்று வருந்தின யானை அவ்வருத்தந்தீரும்படி,

36. முத்து ஆர் மருப்பின் இறங்கு கை கடுப்ப - முத்துநிறைந்த கொம்பிலே ஏறட்டுநான்ற கையையொப்ப,

37-8. துய் தலை வாங்கிய புனிறு தீர் பெரு குரல் நல் கோல் சிறு தினை படு புள் ஓப்பி - துய்யையுடைய தலைவளைந்த ஈன்றணிமை தீர்ந்த பெரிய கதிர்களை நன்றாகத் தன்னிடத்தேகொள்ளுந்தலையுடைய சிறிய தினையிலேவீழ்கின்ற கிளிகளையோட்டி,

துய் - இளைதானபருவத்துப் பஞ்சுநுனைபோன்றிருப்பது.

கடுப்ப வளைந்த வென்க.

39. எல் பட வருதியர் என நீ விடுத்தலின் - பகற்பொழுதுகழியாநிற்க நீர் வருவீராகவென்றுகூறி நீ போகவிடுகையினாலே யாங்களும் போய்,

வருதியர்: வியங்கோண்முற்று.

40-41. கலி கெழு மரம் மிசை [1] சேணோன் இழைத்த புலி அஞ்சு இதணம் - ஆரவாரம் பொருந்தின மரத்தின் உச்சியிலே இராக்காலம் ஆகாயத்திருப்போன் பண்ணின புலி அஞ்சுகைக்குக்காரணமான பரண்,

[2] "சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி" என்றார்பிறரும்.

41-2. [ஏறி யவண, சாரற் சூரற் றகைபெற வலந்த:] அவண சாரல் சூரல் தகை பெற வலந்த இதணம் (41) ஏறி - அவ்விடத்தன வாகிய மலைப்பக்கத்துப் பிரம்பாலே அழகுபெறத் [3] தெற்றின இதணத்தேயேறி,

இனிச் சூரலாலேபிணித்த தழலென்றுமாம். சூரல் - சூரற்கொடியுமாம்.

43. தழலும் - தழலும்,

---

1 "சேணோன் - பரணின்மேலோன்" சிலப். ௨௫ : 30, அரும்பத.

2 நற்றி. ௩௭௦ : 1. 3 தெற்றின - பின்னின.

தழலாவது கையாற் சுற்றினகாலத்துத் தன்னிடத்துப் பிறக்கும் ஓசையாற் கிளிமுதலியவற்றை ஓட்டுங்கருவி; கவணென்பாருமுளர்.

தட்டையும் - தட்டையும்,

தட்டையாவது மூங்கிலைக் கண்ணுக்குக்கண் உள்ளாகநறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி.

குளிரும் - குளிரும்,

குளிராவது இவைபோல்வதோர் கிளிகடி 1 கருவி.

பிறவும் - ஏனையவும்,

பிறவென்றது கவண்முதலியவற்றை.

44. கிளி கடி மரபின ஊழ் ஊழ் வாங்கி - தழலும் தட்டையும் குளிரும் பிறவுமாகிய கிளியோட்டும் முறைமையினை யுடையவற்றை முறையே முறையே கையிலே வாங்கி ஓட்டி,

45. உரவு கதிர் தெறூஉம் உருப்பு அவிர் அமயத்து - மிகுதலை யுடைய ஞாயிற்றின் கிரணங்கள்சுடும் வெம்மைவிளங்குகின்ற பொழுதிலே ஊழூழ்வாங்கி (44) என்க.

46. விசும்பு ஆடு பறவை வீழ் பதி படர - ஆகாயத்தேபறக்கும் பறவைகளெல்லாம் தாம்விரும்புஞ் 2 சேக்கைகளிலே செல்லும்படியாக,

47 - 53. [நிறையிரும் பௌவங் குறைபட முகந்துகொண், டகலிரு வானத்து வீசுவளி கலாவலின், முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு, நிரை செல னிவப்பிற் கொண்மூ மயங்கி, யின்னிசை முரசிற் சுடர்ப்பூட் சேஎ, யொன்னார்க் கேந்திய விலங்கிலை யெஃகின், மின் மயங்கு கருவிய :]

நிறை இரு பௌவம் குறைபட முகந்துகொண்டு (47) முரசு அதிர்ந்தன்ன இன் குரல் ஏற்றொடு (49) நிரை செலல் நிவப்பின் கொண்மூ (50) - நிறைந்த கரியகடலைக் குறையுண்டாம்படி முகந்துகொண்டு முரசு சிறிதுமுழங்கினாற்போன்ற இனிய குரலையுடைய உருமேற்றோடே நிரைத்துச்செல்லுதலையுடைய ஓக்கத்தினையுடையமேகம்,

இன் இசை முரசின் 3 சுடர் பூண் சேஎய் (51) ஒன்னார்க்கு ஏந்திய இலங்கு இலை எஃகின் (52) மின் மயங்கு கருவிய (53) - இனிய ஓசையை யுடைத்தாகிய முரசினையும், ஒளியினையுடையவாகிய அணிகலங்களையுமுடையமுருகன் அசுரரைக் கொல்லுதற்கெடுத்த விளங்குகின்ற இலைத்தொழிலையுடைய வேல்போல மின்னுமயங்குகின்ற தொகுதிகளையுடையவாய்,

---

1 தினைப்புனத்திற் கிளியோப்புவோர் மூங்கிலை வீணைபோற் கட்டித் தெறிக்குங் கருவியென்பர். தஞ்சைவாணன் கோவையுரையாசிரியர்.

2 சேக்கை - கூடு ; "சேக்கை மரனொழியச் சேணீங்கு புள்" நாலடி. 30. 3 "பொலம்பூட் சேஎய்" முருகு. 271.

அகல் இரு வானத்து வீசு வளி கலாவலின் (48) மயங்கி (50) - 1 ஏனைப்பூதங்கள் விரிதற்குக்காரணமான கரியஆகாயத்திடத்தே வீசுகின்ற காற்றுத் தன்னிடத்தே கூடுகையினாலே நிரைத்த நிரைபோய்க் கலங்கி,

53. கல் மிசை பொழிந்தென - மலைமேலே பெய்தவாக,

கொண்மூக் (50) கருவியவாய் (53) மயங்கிப் (50) பறவை பதிப் படரப் (46) பொழிந்தென (53) என்க.

54 - 6. அண்ணல் நெடு கோடு இழிதரு தெள் நீர் அவிர் துகில் புரையும் அ வெள் அருவி தவிர்வு இல் வேட்கையேம் தண்டாது ஆடி - தலைவனுடைய நெடிய மலைச்சிகரத்தினின்றும் 2 குதிக்கின்ற தெளிந்த நீரையுடைய விளங்குகின்ற வெள்ளிய துகிலையொக்கும் அழகிய வெள்ளிதாகிய அருவியிலே நீங்குதலில்லாத விருப்பையுடையேமாய் அமையாமல் விளையாடி,

அண்ணன்மலையில் அருவியெனவே நிலமொன்றென்றாள்.

57 - 8. [பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி, நளிபடு சிலம்பில்:] நளி படு சிலம்பில் பளிங்கு சொரிவு அன்ன பாய் சுனை குடைவுழி - செறிவுண்டான மலையிடத்துப் பளிங்கைக் கரைத்துச் சொரிந்து வைத்தாற்போன்ற பரந்த சுனையைக் குடைந்துவிளையாடுகின்றவிடத்தே,

58. 3 பாயம் பாடி - எங்கள்மனத்துக்கு விருப்பமானவற்றைப் பாடி,

59 - 60. பொன் எறி மணியின் சிறு புறம் தாழ்ந்த எம் பின் இரு கூந்தல் பிழிவனம் 4 துவரி - பொன்னிலேயழுத்தின நீலமணிபோல சிறிய முதுகிடத்தே தாழ்ந்துகிடந்த எம்முடைய பின்னுதலையுடைய கரியகூந்தலை நீரைப்பிழிந்து ஈரத்தைப்புலர்த்தி,

61. உள் அகம் சிவந்த கண்ணேம் - உள்ளாகிய இடமெல்லாஞ் சிவந்த கண்ணேமாய்,

61 - 2. வள் இதழ் ஒள் செ காந்தள் - பெரிய இதழையுடைய ஒள்ளிய சிவந்த கோடற்பூ,

62. ஆம்பல் அனிச்சம் - ஆம்பற்பூ அனிச்சப்பூ,

63. தண் கயம் குவளை - குளிர்ந்த குளத்திற்பூத்த செங்கழுநீர்ப்பூ, குறிஞ்சி - குறிஞ்சிப்பூ,

---

1 ப. உகO, 1-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

2 "குதிபாய் கடாம்" தக்க. 3.

3 பாயம் - மனவிருப்பம்; பெரும்பாண். 342.

4 துவர்தல்-உலர்த்தல், "துவராக்கூந்தல் - ஈரம்புலராத கூந்தல்" (பதிற். அகூ: 16, உரை); "கண்ணும்வாயுந் துவர்ந்து" திருவாய். அ. 5 : 2.

வெட்சி - வெட்சிப்பூ,
64. செங்கொடுவேரி - செங்கொடுவேரிப்பூ,
1 தேமா - தேமாம்பூ,
மணிச்சிகை - செம்மணிப்பூ,
65. 2 உரிது நாறு அவிழ் தொத்து உந்தூழ் - தனக்கு உரித்தாக நாறும் விரிந்தகொத்தினையுடைய பெருமூங்கிற்பூ,
கூவிளம் - 3 வில்லப்பூ,
66. எரி புரை எறுழம் - நெருப்பையொத்த எறுழம்பூ,
சுள்ளி - மராமரப்பூ,
கூவிரம் - கூவிரப்பூ,
67. வடவனம் - வடவனப்பூ,
வாகை - வாகைப்பூ,
வால் பூ குடசம் - வெள்ளிய பூவினையுடைய வெட்பாலைப்பூ,
68. எருவை - பஞ்சாய்க்கோரை,
கொறுக்கைச்சியுமாம்.
செருவிளை - வெண்காக்கணம்பூ,
மணி பூ கருவிளை - நீலமணிபோலும் பூக்களையுடைய கருவிளம்பூ,
69. பயினி - பயினிப்பூ,
வானி - வானிப்பூ,
பல் இணர் குரவம் - பல இதழ்களையுடைய குரவம்பூ,
70. 4 பசும்பிடி - பச்சிலைப்பூ,
வகுளம் - மகிழம்பூ,
பல் இணர் காயா - பல கொத்துக்களையுடைய காயாம்பூ,
71. விரி மலர் ஆவிரை - விரிந்த பூக்களையுடைய ஆவிரம்பூ,
வேரல் - சிறுமூங்கிற்பூ,
சூரல் - சூரைப்பூ,
72. குரீஇப்பூளை - சிறுபூளை,
குறுநறுங்கண்ணி - குன்றிப்பூ,
73. குருகிலை - முருக்கிலை,
மருதம் - மருதப்பூ,

---

1 'தேமா' என்பதுமுதல், 'பெருமூங்கிற்பூ' என்பதிறுதியாகவுள்ளவைகள் தருமபுரவாதீனமடத்திலிருந்துகிடைத்த ஒரு பழைய ஏட்டுப் புத்தகத்தில் மட்டும் இருந்தன.

2 உரிதென்பது உரித்தென்பதன் விகாரமென்பர்; கலி. எசு: 17, ந. 3 வில்லம் - வில்வம்.

4 "பசும்பிடி யிளமுகிழ் - பச்சிலையது இளையகொழுந்து" பரி. கக: 75, பரிமேல்.

விரி பூ கோங்கம் - விரிந்த பூக்களையுடைய கோங்கம்பூ,
74. போங்கம் - மஞ்சாடிப்பூ,
திலகம் - மஞ்சாடிமரத்தின்பூ,
தேன் கமழ் பாதிரி - தேனுறும் பாதிரிப்பூ,
75. செருந்தி - செருந்திப்பூ,
1 அதிரல் - புனலிப்பூ,
பெரு தண் சண்பகம் - பெரிய குளிர்ந்த சண்பகப்பூ
76. கரந்தை - நாறுகரந்தை,
குளவி - காட்டுமல்லிகைப்பூ,
கடி கமழ் கலி மா - விரைகமழும் தழைத்த மாம்பூ,
77. தில்லை - தில்லைப்பூ,
பாலை - பாலைப்பூ,
கல் இவர் முல்லை - கல்லிலேபடர்ந்த முல்லைப்பூ;
78. குல்லை - 2 கஞ்சங்குல்லைப்பூ,
பிடவம் - பிடவம்பூ,
சிறுமாரோடம் - செங்கருங்காலிப்பூ,
79. வாழை - வாழைப்பூ,
வள்ளி - வள்ளிப்பூ,
நீள் நறு நெய்தல் - நீண்ட நறிய நெய்தற்பூ,
80. தாழை - தெங்கிற்பாளை,
3 தளவம் - செம்முல்லைப்பூ,
முள் தாள் தாமரை-முள்ளையுடைத்தாகிய தாளையுடைய தாமரைப்பூ,
81. 4 ஞாழல் - ஞாழற்பூ,
5 மௌவல் - மௌவற்பூ,
நறு தண் 6 கொகுடி - நறிய குளிர்ந்த கொகுடிப்பூ,
82. சேடல் - 7 பவழக்கான் மல்லிகைப்பூ,
செம்மல் - சாதிப்பூ,
சிறுசெங்குரலி - கருந்தாமக்கொடிப்பூ,

---

1 ப. உ௪௦, 3 - ஆம் அடிக். 2 கஞ்சங்குல்லை - கஞ்சா.

3 தளவம்: பொருந. 99, ந; "பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை" (ஐங். ௪௪௭ : 2); "தளவி னிதன்முட் செந்நனை" (அகநா. உ௩ : 3); "தளவமும் - செம்முல்லையும்" சிலப். க௩ : 155, அடியார்.

4 ஞாழல் - புலிநகக் கொன்றை.

5 மௌவல் - மல்லிகை விசேடம்; சீவக. 485, ந.

6 கொகுடி - ஒருவகை முல்லை; "கொகுடி முல்லை" தீருஞா. தே. வடகுரங்காடுதுறை, 1.

7 இது பவழமல்லிகை யெனவும் பாரிசாதமெனவும் வழங்கும்,

83. கோடல் - வெண்கோடற்பூ,

கைதை - தாழம்பூ,

கொங்கு முதிர் நறு வழை - தாதுமுதிர்ந்த நறிய சுரபுன்னைப்பூ,

84. காஞ்சி - காஞ்சிப்பூ,

மணி குலை கள் கமழ் நெய்தல் - நீலமணிபோலுங் கொத்துக்களையுடைய தேனாறும் கருங்குவளை,

85. பாங்கர் - 1 ஓமை,

மராஅம் - 2 மரவம்பூ,

பல் பூ தணக்கம் - பல பூக்களையுடைய தணக்கம்பூ,

86. ஈங்கை - இண்டம்பூ,

இலவம் - இலவம்பூ,

தூங்கு இணர் கொன்றை - தூங்குகின்ற பூங்கொத்தினையுடைய கொன்றைப்பூ,

87. 3 அடும்பு - அடும்பம்பூ,

அமர் ஆத்தி - பொருந்தின ஆத்திப்பூ,

நெடு கொடி அவரை - நெடிய கொடியினையுடைய அவரைப்பூ,

88. பகன்றை - பகன்றைப்பூ,

இது சிவதை; 4 "பகன்றைப்பூ வுறநீண்ட பாசிலைத் தாமரை" என்புழி வெள்ளிவட்டில் உவமைகோடலின், இது இலுகிலுப்பையன்று.

பலாசம் - பலாசம்பூ,

பல் பூ பிண்டி - பல பூக்களையுடைய அசோகம்பூ,

89. வஞ்சி - வஞ்சிப்பூ,

பித்திகம் - பிச்சிப்பூ,

சிந்துவாரம் - கருநொச்சிப்பூ,

90. தும்பை - தும்பைப்பூ,

துழாஅய் - திருத்துழாய்ப்பூ,

சுடர்பூ தோன்றி - 5 விளக்குப்போலும் பூவினையுடைய தோன்றிப்பூ,

---

1 ஓமை - பாலைநிலத்திற்குரிய ஒருவகை மரம். பாங்கரென்று ஒருவகையான கொடியும் உண்டு; "பாங்கருமுல்லையுந் தாய பாட்டங்கால்-பாங்கர்க்கொடியும் முல்லைக்கொடியும் பரந்த தோட்டத்திடத்தே" கலி. கக்க: 3-4, ந. 2 வெண்கடம்பு.

3 அடும்பு - நெய்தல் நிலத்திற்குரிய ஒருவகைக் கொடி.

4 கலி. எஅ: 2. இதன் உரையில் நச்சினார்க்கினியர் பகன்றைப்பூவை, 'மணமில்லாத பகன்றைப்பூ' எனக் குறிப்பிடுவர்; பகன்றையென்பது பெருங்கையாலென்னுங் கொடியென்பர் அடியார்க்குநல்லார் (சிலப். கஅ: 155 - 60, உரை); இது மருதநிலத்துக்குரியதென்று தெரிகிறது. 5 தோன்றி - செங்காந்தள்; "ஒண்சுடர்த் தோன்றி" (ஐங்.

91. நந்தி - நந்தியாவட்டப்பூ,
1 நறவம் - நறைக்கொடி,
நறு புன்னாகம் - இது புன்னையின்விசேடம்,
92. பாரம் - பருத்திப்பூ,
பீரம் - பீர்க்கம்பூ,
பைங்குருக்கத்தி - பசிய குருக்கத்திப்பூ,
93. ஆரம் - சந்தனப்பூ,
காழ்வை - அகிற்பூ,
கடி இரு புன்னை - மணத்தையுடைய பெரிய புன்னைப்பூ,
94. நரந்தம் - நாரத்தம்பூ,
நாகம் - நாகப்பூ,
நள்ளிருணாறி - 2 இருவாட்சிப்பூ,
95. மா இரு குருந்தும் - கரிய பெரிய குருந்தம்பூவும்,
வேங்கையும் - வேங்கைப்பூவும்,

95 - 7. [பிறவு, மரக்குவிரித் தன்ன பரேரம் புழகுடன், மாலங் குடைய :] அங்கு மால் உடைய அரக்கு விரித்தன்ன பிறவும் பரு ஏர் அம் புழகுடன் - அச்சாரலிடத்துத் தம்மில் மயக்கமுடையவாய்ச் சாதிலிங்கத்தைப் பரப்பினாற்போன்ற பிறபூக்களையும் பருத்த அழகினையுடைய மலையெருக்கம்பூவுடனே,

பரேரம்புழகு - 3 செம்பூவுமாம் ; புனமுருங்கையுமென்பர்.

97. மலிவனம் மறுகி - பூக்களிடத்தே மனவேட்கைமிக்குப் பல காலுந் திரிந்துபறித்து,

98. 4 வான் கண் கழீஇய அகல் அறை குவைஇ - 5 மழை பெய்து தன்னிடத்தைக்கழுவித் தூய்தாக்கின அகன்ற பாறையிலே குவித்து,

---

சச0 : 3) ; "தாய தோன்றி தீயென மலரா" (பரி. கக : 2?) ; "வாடையொடு நிவந்த வாயிதழ்த் தோன்றி, சுடர்கொ ளகலிற் சுருங்கு பிணி யவிழ", "சுடர்புரை தோன்றி" (அகநா. உகரு : 7 - 8, ௩௬௪ : 6) ; "தோன்றி யஞ்சுட ரேந்த" (சீவக. 1563) ; "தீவாய்த் தோன்றியும்" பெருங். உ. 12 : 26.

1 நறவம் - நறவம்பூவெனக்கொள்ளுதலும் பொருந்தும்.

2 இருள்வாசியென்பது இருவாட்சி யென்று வழங்குகின்றது.

3 "செறிவினைப் பொலிந்த செம்பூங் கண்ணியர்" பரி. உ௨ : 21.

4 "மாசறக் கழீஇய யானை போலப், பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்" குறுந். கரு : 1 - 2.

5 "புனல் கால் கழீஇய பொழில் - நீர் பெருகிய காலத்தே ஏறிய இடத்தைத் தூய்தாக்கிப் போன பொழில்கள்" பெரும்பாண். 380, ந,

கண்ணேமாய் (61) மலிவனமறுகிப் (97) பரோரம்புழகுடனே (96) ஒண் செங்காந்தள் (62) முதலியவற்றையும் பிறவற்றையும் (95) பாறையிலே குவித்து (98) எனமுடிக்க.

செங்காந்தள் (62) முதலியவற்றிற்கெல்லாம் இரண்டாமுருபும் உம்மையும் விரிக்க. குருந்தும் வேங்கையும் பிறவும் (95) என்ற மூன்றற்கும் உருபுவிரிக்க.

99. புள் ஆர் இயத்த - பறவைகளின் ஓசையாகிய நிறைந்த வாச்சியங்களை யுடையவாகிய,

விலங்கு மலை சிலம்பின் - ஒன்றற்கொன்று குறுக்கிட்டுக்கிடக்கின்ற மலைப்பக்கத்திற்புனத்தே,

100 - 101. வள் உயிர் தெள் விளி இடைஇடை பயிற்றி கிள்ளை ஓப்பியும் - பெரிய ஓசையினையுடைய தெளிந்தசொற்களை நடுவேநடுவே சொல்லிக் கிளியை ஓட்டுதலைச்செய்தும் தழை தைஇ (102) யென்க.

சொல் - 1 கிளியையோட்டுஞ்சொல்.

கிளியையுமோப்பியெனச் சிறப்பும்மை.

101. கிளை இதழ் பறியா - புறவிதழ்களை வாங்கிப்போகட்டு,

102. பை விரி அல்குல் கொய் தழை தைஇ - பாம்பின்படத்தைப் போலே பரந்த அல்குலுக்குத் தழையைக்கட்டியுடுத்து,

2 கொய்தழை - மிக்கவிடங்களை நறுக்கினதழை.

103 - 4. பல் வேறு உருவின் வனப்பு அமை கோதை எம் மெல் இரு முச்சி கவின் பெற கட்டி - 3 பலவாய் வேறுபட்ட நிறத்தையுடைய அழகமைந்த மாலைகளை எம்முடைய மெல்லிய கரியமுடியிலே அழகு பெறச்சுற்றி,

---

1 இஃது ஆயோ வென்பது; "ஆயோவென்னு மண்ணுமலையாரை" (திருஞா. தே.); "ஆயோவெனப்போகா" (சுந்தர. தே.); "கிளியுமெள்கு மாயோவடுந்தொண்டையோ" (திருவிருத்தம், 10); "புனங்காவல் கொண் டாயோ வெனமொழியு மம்மழலை யின்னிசையால்" (சூளா. சுயம். 104); "ஆயோ வெனுங்குர லாவயிற் கடிந்தே" (தமிழ்நெறி. மேற்.); "ஆயோ வெனுங்குர லந்தோ புனத்தை யழிக்கின்றதே" திருவரங்கக் கோவை.

2 கொய்யென வருமிடங்களில், கத்தரிகையாலே மட்டஞ்செய்த வென்று பொருளெழுதுவர் புறப்பொருள் வெண்பாமாலையுரையாசிரியர்.

3 பலவகைப்பட்ட மாலைகளினியல்பைப் பின்புகுறித்த இடங்களிலுள்ள செய்யுட்களாலுணர்க: பரிபாடல், கக: 80-82, உ0: 29 - 30; சீவக. 1338, 2054, 2656, 2919; பெரிய. முருக. 9.

105 - 6. எரி அவிர் உருவின் அம் குழை செயலை த்ாது படு தண் நிழல் இருந்தனம் ஆக-நெருப்புப்போல விளங்கும் நிறத்தையுடைய அழகிய தளிரையுடைய அசோகினது தாதுவிழுகின்ற குளிர்ந்த நிழலிலே இருந்த அளவிலே,

107. [எண்ணெய் நீவிய சுரிவளர் நறுங்காழ் :]

சுரிவளர்நறுங்காழ்: பின்னேகூட்டுதும்.

எண்ணெய் நீவிய நலம் பெறு சென்னி (116) - பலகாலும் எண்ணெய் வார்த்த நன்மையைப்பெற்ற தலையிற் குஞ்சி (112) என்க.

108. தண் நறு தகரம் கமழ மண்ணி - குளிர்ந்த நறிய மயிர்ச்சந்தனத்தை நாறும்படியாகப்பூசி,

109. ஈரம் புலர விரல் உளர்ப்பு அவிழா - அந்த ஈரம் புலரும்படி விரலாலலைத்துப் புலர்த்துதற்றொழிலாலே பிணிப்பைவிடுத்து,

110. நறு காழ் (107) காழ் அகில் அம் புகை கொளீஇ - அதனை நறிய கரிய வயிரத்தினையுடைய அகிலினது அழகிய புகையூட்டுகையினாலே,

இதில் நறுங்காழ் கூட்டிற்று.

110 - 11. யாழ் இசை அணி மிகு வரி மிஞிறு ஆர்ப்ப தேம் கலந்து - யாழோசையினது அழகுமிகுகின்ற பாட்டினையுடைய மிஞிறுகள் ஆரவாரிக்கும்படி அகிலினது நெய்கலந்து,

112. [மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின் :]

மணி நிறம் கொண்ட சுரி வளர் (107) மா இரு குஞ்சியின் - 1 நீலமணியினது நிறத்தைத் தன்னிடத்தேகொண்ட கடைகுழன்றுவளர்ந்த கரிய பெரிய மயிரின்கண்ணே,

இதிற் சுரிவளர் கூட்டிற்று.

மண்ணி (108) அவிழாப் (109) புகைகொளுவுகையினாலே (110) தேங்கலந்து (111) ஒருகாழ்வளைஇ (118) மணிநிறங்கொண்ட குஞ்சி (112) என்க.

113. மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும் - மலையிடத்தனவும் நிலத்திடத்தனவும் கொம்புகளிற் பூத்தனவும் சுனைகளிற் பூத்தனவுமாகிய,

114. வண்ணம் வண்ணத்த மலர் - பலநிறங்களையுமுடையமலர், பல சாதிகளையுமுடையமலர்,

என ஒன்று நிறமும், ஒன்று சாதிவேறுபாடுங் கூறினார்.

114 - 5. ஆய்பு விரைஇய தண் நறு தொடையல் வெள் போழ் கண்ணி - அம்மலரை ஆராய்ந்துதொடுத்த தண்ணிய நறிய தொடையலினையும் வெள்ளியதாழைமடலிலேயுடைத்தாகிய கண்ணியினையும்,

1 "நீலமாய்ச் சுரிந்த குஞ்சி" (சீவக. 1722); "இந்திர நீலமொத்திருண்ட குஞ்சியும்" கம்ப. மிதிலை. 56.

116. [நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சி:] நாம் உற மிலைச்சி - 1 முருகனென்றச்சமுறும்படி சூடி, குஞ்சியின்கண்ணே (112) மிலைச்சியென்க.
நலம்பெறுசென்னி : முன்னேகூட்டிற்று.

117 - 8. பைங்கால் 2 பித்திகத்து அ இதழ் அலரி அம் தொடை ஒருகாழ் வளைஇ - பசியகாம்பினையுடைய பிச்சியினுடைய அழகிய இதழ்களையுடைய பூவைத்தொடுத்த அழகினையுடைய தொடையாகிய ஒரு வடத்தைச் சுற்றி,

இஃது அந்திக்காலத்துமலரும் பூவாதலின், அதனைத் தேங்கலந்து (111) ஒருகாழ்வளைஇ (118) மணிநிறங்கொண்டகுஞ்சி (112) எனக் குஞ்சிக்கு இயல்பாக்கி முன்னேகூட்டுக.

118 - 20. [செந்தீ, யொண்பூம் பிண்டி யொருகாது செரீஇ, யந் தளிர்க் குவவுமொய்ம் பலைப்ப:] குவவு மொய்ம்பு அலைப்ப செ தீ ஒள் பூ பிண்டி அம் தளிர் ஒருகாது செரீஇ - திரளுதலையுடைய தோளிலே வீழ்ந்து அலைக்கும்படி சிவந்த நெருப்புப்போலும் ஒள்ளிய பூக்களையுடைய அசோகினது அழகிய தளிரை ஒருகாதிலே செருகி,

120 - 22. சாந்து அருந்தி மைந்து இறை கொண்ட மலர்ந்து ஏந்து அகலத்து தொன்றுபடு பூணொடு நறு தார் பொலிய - சந்தனத்தை உள்ளடக்கி வலிதங்குதல்கொண்ட அகன்றுயர்ந்த மார்பிடத்தே தொன்றுபட்டுவருகின்ற பேரணிகலங்களோடே நறியமாலை பொலிவுபெற,

123. செம்பொறிக்கு ஏற்ற - 3 மூன்றுவரியாகிய உத்தமவிலக்கணத்திற்குப் பொருந்தின மார்பு (121) என்க.

123 - 4. வீங்கு இறை தட கையின் வண்ணம் வரி வில் ஏந்தி அம்பு தெரிந்து - பூண் இறுகின முன்கையையுடைய பெரியகையிலே வண்ணத்தையுடைய வரிந்த வில்லையெடுத்து அம்புகளைத் தெரிந்து பிடித்து,

125. நுண் வினை கச்சை தயக்கு அற கட்டி-நுண்ணிய தொழில்களையுடைய கச்சைச் கட்டினசேலை துளக்கமறக்கட்டி,

126 - 7. [இயலணிப் பொலிந்த வீகை வான் கழ, றுயல்வருந் தோறுந் திருந்தடிக் கலாவ:] ஈகை இயல் அணி பொலிந்த வான் கழல் துயல்வருந்தோறும் திருந்து அடி கலாவ - பொன்னாற்செய்யப்பட்ட பூண்களிற்பொலிவு பெற்ற நன்றாகிய வீரக்கழல் பெயரும்பொழுதெல்லாம் பிறக்கிடாத அடியிலே எற்றிழிவுசெய்ய,

---

1 "முருகுமுரண் கொள்ளுந் தேம்பாய் கண்ணி" அகநா. உஅ : 6.

2 "பித்திகக் கோதை" பெருங். க. 33 : 76.

3 முருகு. 104 - 5 - ஆம் அடிகளின் அடிக்குறிப்பையும், அவ்வடிகளின் உரையையும் பார்க்க.

128 - 9. முனை பாழ் படுக்கும் துன் அரு துப்பின் பகை புறம் கண்ட பல் வேல் இளைஞரின் - பகைப்புலத்தைப் பாழாக்கும் கிட்டுதற் கரிய வலியையுடைய பகைகளை முதுகுகண்ட பலவேலினையுடைய வீரரைப்போலே,

130 - 31. உரவு சினம் செருக்கி துன்னுதொறும் வெகுளும் முளை வாள் எயிற்ற வள் உகிர் ஞமலி - பரக்கின்ற சினத்தாலே செருக்கித் தம் மேலொன்று நெருங்குந்தோறும் கோபிக்கும் மூங்கில் முளைபோலும் ஒளியையுடைத்தாகிய பல்லினையுடையவாகிய பெரிய உகிரையுடைய நாய்,

132. திளையா கண்ண வளைகுபு நெரிதர - இமையாக்கண்களை யுடையவாய் எம்மை வளைத்துக்கொண்டு மேலேமேலே வருகையினாலே,

133 - 4. [நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்தியா, மிடும்பை கூர் மனத்தே மருண்டுபுலம் படர:] யாம் நடுங்குவனம் எழுந்து நல் அடி தளர்ந்து இடும்பை கூர் மனத்தேம் மருண்டு புலம் படர - யாங் களஞ்சி அவ்விருப்புக்குலைந்து கடிதிற்செல்லுதலாற்ருது வருத்தமிக்க மனத்தையுடையேமாய் மயங்கி வேற்றுப்புலத்து ஏறச்செல்லாநிற்க,

135 - 6. மாறு பொருது ஓட்டிய புகல்வின் வேறு புலத்து ஆ காண் விடையின் அணி பெற வந்து - தனக்குமாருகிய விடைகளையெல் லாம் பொருது கெடுத்த மனச்செருக்கினையுடைய தானறியாதநிலத்திற் புதிய ஆவைக்காணும் 1 ஏறுபோல அழகுபெற வந்து,

வேட்கைமிகுதிகூறுதற்கு வேறுபுலத்து ஆவென்ருர்.

இத்துணையும் ஏத்தல் கூறினர்.

136 - 8. [எம், மலமர லாயிடை வெரூஉத லஞ்சி, மெல்லிய வினிய மேவரக் கிளந்து :] அ இடை எம் அலமரல் வெரூஉதல் அஞ்சி மெல்லிய இனிய மேவர கிளந்து - யாங்கள்போகின்றபொழுது எம்மனத் திற் சுழற்சியாலே வெருவுதற்குத் தான் அஞ்சி மெல்லியவாய் இனிய வாயிருக்கின்ற சொற்களை எமக்குப் பொருந்துதல்வரச் சொல்லி,

இதனல் 2 ஏதீடுகூறினன்.

138 - 9. எம் ஐம்பால் ஆய் கவின் ஏத்தி - எம் 3 ஐவகைப்பட்ட மயிரினையுடைய பலரும் ஆராய்ந்த அழகைப்புகழ்ந்து அசைகின்ற (140) இளையீ (141) ரென்க.

139. ஒள் தொடி - ஒள்ளிய தொடியினையும்,

---

1 " துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து " (குறிஞ்சி. 235) என்று பின் வரும் அடியோடு இது கருத்துத் தொடர்புடையதாதல் காண்க.

2 ஏதீடு - காரணமிட்டுரைத்தல்.

3 ஐவகையாவன : குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை யென்பன ; சீவக. 2437, ந.

140. அசை: வேறு கூட்டிற்று.
மெல் சாயல் - மெல்லிய மென்மையினையும்,
அ வாங்கு உந்தி - அழகிய வளைந்த கொப்பூழினையும்,
141. மடம் மதர் மழை கண் இளையீர் - மடப்பத்தையுடைய மதர்த்த குளிர்ந்த கண்ணினையுமுடைய இளையீரே,
141 - 2. இறந்த கெடுதியும் உடையேன் என்றனன் - இவ்விடத்தே போந்த கெடுதிகள் பலவுமுடையேனென்று கூறினான்;
என்றது, [1] அவை [2] யானை [3] கலை [4] பன்றி [5] முதலியன கெடுத்தனாக வினாயினான்;
குஞ்சியின்கண்ணே (112) மிலைச்சிச் (116) செரீஇப் (119) பொலியக் (122) கலாவக் (127) கட்டி (125) எந்தித் தெரிந்து (124) விடையின் அணிபெறவந்து (136) தான்கொண்டுவந்த ஞமலி (131) செரிதருகையினாலே (132) எழுந்து தளர்ந்து (133) மருண்டு வேறுபுலம்படராநிற்க (134) ஆயிடை (137) எம் (136) அலமரல் வெரூஉதலஞ்சிக்

---

[1] இங்ஙனம் வினாதலை, தோழியைக் குறையுறும் பகுதியிற் கெடுதி வினாதலென்னும் துறையுள் தொல்காப்பியனாரும் (களவு. சூ. ௧0௨: 11 - 3), மதியுடம்படுத்தலென்னும் பகுதியிற் பிறவினாதலென்பதனுள் இறையனாரகப்பொருளுரையாசிரியரும் (சூ. 6), பகற்குறியுள் கலந்து நின்ற தோழியை மதியுடம்படுப்பானாற்றுத் தோழியும் தலைமகளுமுடனாயவழித் தலைமகன் வினாயதென்பதனுள் தமிழ்நெறிவிளக்க நூலாசிரியரும், மதியுடம்பாட்டிற்குரிய, "கயந்தங்கு வேழம் வினாத் வினமான் கலைவினாதல்" என்பவற்றுள் ஒரு பழைய இலக்கண நூலாசிரியரும், பாங்கி மதியுடம்பாட்டிற் குறையுற வுணரும் பகுதியில் கெடுதியோடொழிந்தவும் வினாதலுள் நாற்கவிராசநம்பியும் (சூ. 140) அடக்குவர்.

[2] யானை வினாதல்: "செம்முக மானதர் செங்குங்கு மப்புயர் சீர்சிறந்த, மைம்மலி வாசப் பொழில்வகு தையன்ன வாணுதலீர், மும்மதமாரி பொழியப் பொழிமுகில் போன்முழங்கிக், கைம்மலை தான்வரக் கண்டதுண் டோநுங் கடிபுனத்தே" (பல்சந்தமாலை) என வருவது.

[3] கலைவினாதல்: "அம்புமுகங் கிழித்த வெம்புண் வாய்க்கலை, மான் போந் தனவுள வோநும், மடமா னோக்க மரீஇயின படர்ந்தே" (பொருளியல்) எனவரும்.

[4] பன்றி வினாதல்: "தங்குறிப்பி னோருந் தலைச்சென்று கண்டக்கா, லெங்குறிப்பி னேமென் றிகழ்ந்திரார் - நுங்குறிப்பின், வென்றி படர் நெடுங்கண் வேய்த்தோளீர் கூறீரோ, வன்றி படர்ந்த வழி" (தொல். களவு. சூ. 11 ந. மேற்.) எனவரும்.

[5] முதலியனவென்றது, புலி, உள்ளம், உணர்வு முதலியவற்றை; தொல். களவு. சூ. 11, ந.

(137) கிளந்து (138) எத்தி (139) இளையீர், இறந்த (141) கெடுதியு முடையே னென்றனன் (142) எனக் கூட்டுக.

142-3. [அதனெதிர், சொல்லே மாதலி னல்லாந்து கலங்கி :] அல்லாந்து அதன் எதிர் சொல்லேமாதலின் கலங்கி அவன்கூற்றிற்கு யாங்கள் மகிழ்ந்து அதற்கு மறுமொழி கொடேமாகையினாலே நெஞ் சழிந்து,

144-5. [கெடுதியும் விடீஇ ராயி னெம்மொடு, சொல்லலும் பழியோ மெல்லிய லீரென :] மெல் இயலீர் கெடுதியும் விடீராயின் எம் மொடு சொல்லலும் பழியோ என - மெல்லிய இயல்பினையுடையீர், கெட்டனவும் காட்டித் தாரீராயின் எம்முடன் 1 ஒருவார்த்தை சொல்லு தலும் நுமக்குப் பழியாமோ வெனச்சொல்லி,

146-8. [நைவளம் பழுநிய பாலை வல்லோன், கைகவர் நரம்பி னிம்மென விமிரு, மாதர் வண்டொடு சுரும்புநயந் திறுத்த :] நைவளம் பழுநிய பாலை வல்லோன் கை கவர் நரம்பின் இம்மென இமிரும் மாதர் வண்டொடு நயந்து இறுத்த சுரும்பு - 2 நட்டராகம் முற்றுப்பெற்ற பாலை யாழை வாசிக்க வல்லவன் தன்கையாலே வாசித்த நரம்புபோலே இம் மென்னும் ஓசைபட ஒலிக்கும் காதலையுடைய வண்டினத்தோடே தன் னிடத்து 3 மணத்தைவிரும்பித் தங்கினசுரும்பினங்களை,

149. தாது அவிழ் அலரி தா சினை பிளந்து - தாதுவிரிந்த பூக் களையுடைய தழைபரந்ததோர்கொம்பை முறித்து,

150. தாறு அடு களிற்றின் வீறு பெற ஓச்சி - தன்னைச் செலுத்து கின்ற பரிக்கோலைக் கைகடந்த மதக்களிறுபோலே வெற்றியுண்டாக ஓட்டி,

தனக்குக்காவலாகிய 4 பெருமையினையும் உரனையும் 5 கைகடந்து

---

1 இதனை மொழியாமை விளைதலென்னுந் துறையுளடக்குவர் ; "விரத முடையர் விருந்தொடு பேச்சின்மை மீட்டதன்றேற், சரதமுடை யர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே" திருச்சிற். 57.

2 நட்டராகம் - பகற்பண்களுள் ஒன்று.

3 "பல நறுநாற்றங்களும் தானுடைமையின் வண்டுசூழ் நிலையென் றான்" (பொருந. 96-7, ந.) என்பதனுடன் இது ஒப்புநோக்கற் குரியது.

4 21-ஆம் அடி உரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

5 "குத்துக்கோல் வரைத்தன்றி யானை களிவரைத்தாயினாற்போலக் கழறுவார் சொல்வயத்தனன்றி வேட்கை வயத்தனாயினானென்பது போதரக் கழைகாண்டலுஞ் சுளியுங் களியானை யன்னா னென்றாள்" திருச்சிற். 101, பேர்.

வேட்கை மீதூர்ந்து நிற்றலால் தாறுகெளிற்றை உவமங்கூறினர். 1 மதக் களிற்றிற்கு அங்ஙனம் ஓச்சிநிற்றல் இயல்பு.

151. கல்லென் சுற்றம் கடு குரல் அவித்து - கல்லென்னும் ஓசை படக் கத்தும் வேட்டைநாய்களுடைய கடிய குரல்களை அடித்துமாற்றி,

151 - 2. எம் சொல்லல் 2 பாணி நின்றனனாக - யாங்கள் வார்த்தை சொல்லுதலையுடையதோர் காலத்தைப் பார்த்துநின்றானாக,

கெடுதியுமுடையேனென்றனன் ; அதனெதிர் (142) யாங்கள் சொல்லேமாதலிற் கலங்கி (143) மெல்லியலீர், சொல்லலும்பழியோ வெனச்சொல்லி (145) ஓச்சி (150) அவித்துச் (151) சொல்லற்பாணி நின்றனனாக (152) எனக் கூட்டுக.

இத்துணையும் 3 எளித்தல் கூறினன்.

153 - 4. இருவி வேய்ந்த குறு கால் குரம்பை பிணை ஏர் நோக்கின் மனையோள் மடுப்ப - தினையரிந்த தாளாலே வேய்ந்த குறியகால் களையுடைய குடிலிலிருக்கும் மான்பிணையையொத்த பார்வையினை யுடைய மனைவி எடுத்துக் கொடுப்ப,

155 - 6. தேன் பிழி தேறல் மாந்தி மகிழ் சிறந்து சேமம் மடிந்த பொழுதின் - தேனாற்சமைத்த கட்டெளிவையுண்டு மகிழ்ச்சிமிக்குக் காவற்றொழிலை மறந்தகாலத்தே,

156 - 8. [வாய்மடுத், திரும்புன நிழத்தலிற் சிறுமை நோனா, தரவுற ழஞ்சிலை கொளீஇ நோய்மிக்கு :]

இரு புனம் வாய் மடுத்து நிழத்தலின் சிறுமை நோனாது நோய் மிக்கு - பெரியபுனத்தை வேழந்தின்று நொக்கிவிடுகையினாலே தப்பி நின்றது வினையும் சிறுமையைப்பொறாதே வருத்தமிக்கு,

159. [உரவுச் சினம் :]

உரவு சினம் அரவு உறழ் அம் சிலை கொளீஇ - பரக்கின்ற சினத்தை யுடைய பாம்பையொத்த அழகினையுடைய வில்லை நாணேற்றி,

உரவுச்சினம்(159)அரவுற ழஞ்சிலை கொளீஇ (158) எனப் பின்னே கூட்டுக.

4 பாம்பு, வடிவிற்கும் கொலைத்தொழிலுக்குமுவமை.

---

1 இங்கே கூறப்படும் மதக்களிற்றின் இயல்பு, "அயறசும் பிருந்த வந்த ணுற்றத்து, மதக்களி சுவைக்கு மணிநிறப் பறவைத், தொகைத் தொழி லோப்புந் தகைச்செவி" (பெருங். க. 58 : 12 - 4) என்பதனாலும் அறியப்படும்.

2 பாணி - காலம் ; பெரும்பாண். 433 ; "தெரியிழை மகளிர் பாணி பார்க்கும்" புறநா. உ0க : 17. 3 பி - ம். 'வேட்கை'

4 "அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த, உரவுவில்" (கலி. ௫0 : 6 - 7) என்பதில் இங்கே கூறிய உவமை வகைகளின் பொதுத்தன்மை கூறப்படுதல் காண்க.

159-60. முன்பால் உடல் சினம் செருக்கி கணை விடுபு - மெய்வலி யோடே கோபித்தலாற்பிறந்த சினத்தாலே மயங்கி அம்பையெய்து,

விடுபு: விகாரம்.

புடையூ - தட்டையைப் புடைத்து,

160-61. கானம் கல்லென் மடி விடு வீளையர் வெடி படுத்து எடுப்ப - காடெல்லாம் கல்லென்னும் ஓசை பிறக்கும்படி வாயைமடித்து விடுகின்ற 1 சீழ்க்கையராய் மிக்க ஓசையையுண்டாக்கி அக்களிற்றைப் புனத்தினின்றும் ஓட்டுகையினாலே,

வெடிபடுத்தார்த்தெனவும் பாடம்.

162-5. [கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக, விரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்திச், சினந்திகழ் கடாஅஞ் செருக்கி மரங் கொல்பு, மையல் வேழ மடங்கலி னெதிர்தர :]

சினம் திகழ் கடாம் செருக்கி மையல் வேழம் - சினம் விளங்குதற்குக் காரணமாகிய மதத்தாலே மனஞ்செருக்கி மயக்கத்தையுடைத்தாகிய யானை,

மரம் கொல்பு - மரங்களை முறித்து,

கார் பெயல் உருமின் பிளிறி - கார்காலத்துமழையின் உருமேறு போல முழக்கத்தையுண்டாக்கி,

சீர் தக இரு பிணர் தட கை இரு நிலம் சேர்த்தி ஒய்யென (166) மடங்கலின் எதிர்தர - தன்தலைமைக்குத் தக்கதாகக் கரிய சருச்சரையையுடைத்தாகிய பெரிய கையைச்சுருட்டி நிலத்தே எறிந்து கடுகக் கூற்றுவனைப்போலே எங்கள்மேலே வருகையினாலே,

166-8. [உய்விட மறியே மாகி யொய்யெனத், திருந்துகோ லெல்வளை தெழிப்ப நாணுமறந்து, விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்தி :]

ஒய்யென : முன்னேகூட்டிற்று.

உய்வு இடம் அறியேமாகி 2 விதுப்பு உறு மனத்தேம் - உயிர்கொண்டு பிழைப்பதோரிடத்தை ஆண்டு வேறுணரேமாகி நடுக்கமுற்ற மனத்தையுடைய யாங்கள்,

நாணு மறந்து திருந்து கோல் எல் வளை தெழிப்ப விரைந்து அவன் பொருந்தி - 3 உயிரினுஞ் சிறந்த நாணைக்காத்தலை மறந்து திருந்திய திரட்சியையுடைத்தாகிய ஒளியினையுடைய வளையொலிப்ப விரைந்துசென்று அவனைச்சேர்ந்து,

---

1 சீழ்க்கை - நாவினது நுனியைமடித்துச்செய்யும் ஒலி.

2 விதுப்பு - விரைதலென்பர் பரிமேலழகர்.

3 "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" தொல். களவு. சூ. 22

169. சூர் உறு மஞ்ஞையின் நடுங்க - தெய்வமேறின மயில் போலே நடுங்காநிற்க,

169 - 71. [வார்கோ, லுடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை, யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலின் :] வார் கோல் உடு உறும் கடு விசை பகழி வாங்கி அண்ணல் யானை அணி முகத்து அழுத்தலின் - நெடிய கோலையுடைய உடுச்சேர்ந்த கடிய விசையினையுடைய அம்பை நிரம்ப வலித்துத் தலைமையினையுடைய யானையினது அழகியமுகத்தே எய்கையினாலே,

உடு - நாணைக்கொள்ளுமிடம்.

172 - 5. [புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப், புள்ளி வரி நுதல் சிதைய நில்லா, தயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவேள், ளணங்குறு மகளி ராடுகளங் கடுப்ப :]

புள்ளி வரி நுதல் சிதைய புண் உமிழ் குருதி முகம் பாய்ந்து நெடுவேள் அணங்கு உறு மகளிர் ஆடு களம் கடுப்ப இழிதர - புள்ளியினையும் புகரினையுமுடைய மத்தகம் அழகழியும்படி அம்புபட்டு உருவின புண்களால் உமிழப்படுங் குருதி முகத்தேபரந்து [1] முருகனால் வருத்தலுற்ற மகளிர்க்கு [2] மறியறுத்தாடுங் களத்திற் குருதி குதிக்குமாறு போலக் குதிக்கையினாலே,

அயர்ந்து நில்லாது புறம் கொடுத்த பின்னர் - தன்னை மறந்து ஆண்டு நிற்றலாற்றாது முதுகிட்டுப்போன பின்பு,

இதனாலும் எதிரடு கூறினான்.

176 - 7. திணி நிலை கடம்பின் திரள் அரை வளைஇய துணை அமை மாலையின் கை பிணி விடேஎம் - திண்ணிய நிலையினையுடைய கடம்பினது திரண்டமுதலை நெருங்கச்சூழ்ந்த மகளிரொழுங்கிற்கு ஒப்புச் சாற்றுதலையுடைய மாலைபோலே கைகோத்தலை விடேமாய்,

மகளிராடுங்களத்தை கடப்பமாலைவளைத்தாற்போல மிகவும கடபப மாலைவளைத்தவென்பாருமுளர்.

178. நுரை உடை கலுழி பாய்தலின் - யாற்றின் நுரையையுடைய பெருக்கிலே குதிக்கையினாலே,

178 - 9. உரவு திரை அடும் கரை வாழையின் நடுங்க - அதனிடத்துப் பரக்கின்ற திரைமோதி இடிகரையினின்ற வாழைபோலே கால்தளர்ந்து பின்னர் ஒழுகினேமாக, அதுகண்டு,

179 - 81. [பெருந்தகை, யஞ்சி லோதி யசையல் யாவது, மஞ்சலோம்புநின் னணிநல நுகர்கென :] பெரு தகை அம் சில் ஓதி அசையல் நின் அணி நலம் நுகர்கு யாவதும் அஞ்சல் ஓம்பு என - பெரிய தகுதிப்பாடுடையவன், அழகிய சில்வான மயிரினையுடையாய், இங்ஙனம்

1 தந்தை, 132. 2 மறி - ஆடு.

தால்தளர்ந்தொழுகாதே யென்றெடுத்து, யான் நின் அழகியநலத்தை நுகர்வேன்; நின்னை நீங்குவேனென்று சிறிதும் அஞ்சுதலைப் பரிகரி யெனச் சொல்லி,

182. மாசு அறு சுடர் நுதல் நீவி - குற்றமற்ற ஒளியினையுடைய நுதலைத் துடைத்து,

182 - 3. நீடு நினைந்து என் முகம் நோக்கி நக்கனன் - நெடுநாள் இக்களவொழுக்கம் நிகழுவேண்டுமென்று நினைந்து என்முகத்தைப்பார்த்துச் சிரித்தான்;

183 - 5. [அந்நிலை, நாணு முட்கு நண்ணுவழி யடைதர, வொய் யெனப் பிரியவும் விடாஅன் :]

அந்நிலை : பின்னே கூட்டிற்று.

நண்ணுவழி [1] நாணும் உட்கும் அடைதர ஒய்யென பிரியவும் விடான் - அங்ஙனம் அவன் அணுகாநின்ற விடத்துத் தனக்கு இயல்பாகிய [2] நாணமும் அச்சமும் அவ்விடத்தேவந்து தோன்றுகையினாலே விரையத் தன்னிடத்துநின்றும் இவள் நீங்கவும் விடானாய்,

185 - 6. [கவைஇ, யாக மடைய முயங்கலின் :] அந்நிலை (183) கவைஇ ஆகம் அடைய முயங்கலின்-அங்ஙனம் நின்றநிலையிலே கையாலே யணைத்து இவள் மார்பு தன்மார்பிலே ஒடுங்கும்படி தழுவுகையினாலே,

இதனால் எதிரும் வேட்கை யுரைத்தலும் கூறினாள்.

186 - 7. [அவ்வழிப், பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை :]

பழு மிளகு உக்க பாறை நெடு சுனை - பழுத்தமிளகு சிந்திக்கிடக்கின்ற கற்பாறையிடத்து நீண்ட சுனையிலே,

188. முழு முதல் கொக்கின் தீ கனி உதிர்ந்தென - பெரிய அடியினையுடைய மாவினுடைய இனியபழங்கள் உதிர்ந்தனவாக அப்பழத்தாலும்,

189 - 90. [புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவி, னெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல் :]

பலவின் நெகிழ்ந்து உகு நறு பழம் - பலவினுடைய விரிந்து தேன் பரக்கின்ற நறியபழத்தாலும்,

விளைந்த தேறல் - உண்டான கட்டெளிவு,

புள் எறி பிரசமொடு ஈண்டி - நிரம்புதலால் தன்னை நுகர்கின்ற ஈயினைத் தள்ளியுகுத்த தேனோலேவந்துதிரளுகையினாலே,

191. நீர் செத்து அயின்ற தோகை - தனக்கு எளிய நீராகக்கருதி அத்தேறலையுண்ட மயில்,

---

1 21 - ஆம் அடிஉரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

2 நாணம் - காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப் படுவதோர் உள்ளவொடுக்கம்; அச்சம் - அன்புகாரணத்திற் றோன்றிய உட்கு; தொல். களவு. சூ. 8, ந.

191 - 2. [வியலூர்ச், சாறுகொ ளாங்கண் விழவுக்கள நந்தி :] சாறுகொள் ஆங்கண் வியல் ஊர் விழவு களம் நந்தி - விழாக்கொள்ளுதற்குரிய அவ்விடங்களையுடைய அகற்சியையுடைய ஊர்களில் விழாக் கொள்ளுதலையுடைய களத்தே மிக்கு,

ஆங்கணென்றது கோயில்களை.

193. 1 அரி கூட்டு இன் இயம் கறங்க ஆடும் மகள் - அரித்தெழுகின்ற ஓசையைக் கூட்டுதலையுடைய இனிய வாச்சியங்களொலிப்ப ஆடுகின்றமகள்,

194. கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல் - கழாய்க்கயிற்றிலே ஏறி ஆடுகின்ற தாளத்தினால் தான் ஆற்றாது தளருமாறுபோலத் தளருஞ் சாரல்,

தேறலயின்ற தோகை கூத்தாட ஆற்றாது தளருஞ் சாரலையுடைய குன்றென்க.

இதற்கு 2 உள்ளுறையுவமங் கொள்ளுமாறு :—மிளகு உக்கபாறை அந்நிலத்து மாக்களுறைகின்ற ஊராகவும், நெடுஞ்சுனை தலைவன் குடியாகவும், மாம்பழத்தாலும் பலாப்பழத்தாலும் விளைந்ததேறல் தந்தையாலும் தாயாலுமுளனாகிய தலைவனாகவும், பிரசம் இவரைக்கூட்டின பால்வரைதெய்வமாகவும், அதனையுண்டமயில் உயர்ந்த தலைவனைத் தன் குலத்திற்கு ஒத்தானாகக்கருதி நுகர்ந்த தலைவியாகவும் அத்தேறலிற் பிறந்த களிப்புக் களவொழுக்கத்தாற்பிறந்த பேரின்பமாகவும் மயில் ஆடவாற்றாததன்மை வருந்திக்குறைந்த தன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க.

195 - 7. [வரையர மகளிரிற் சாஅய் விழைதக, விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தட், டண்கம ழலரி தாஅய் :] விண்பொரும் சென்னி கிளைஇய காந்தள் தண் கமழ் அலரி வரை அரமகளிரில் சாஅய் விழைதக தாஅய் - விண்ணைத்தீண்டுகின்ற சிகரங்களிலே கிளைத்த செங்காந்தளினுடைய குளிர்ந்த மணக்கின்ற பூக்கள் கீழே வரையரமகளிர் பரந்து விளையாடுதலிற் றந்நலம் சிறிதுகெட்டு விரும்புதல்தகும்படி கீழே வந்து பரந்து,

---

1 "அரிக்கூ டின்னியங் கறங்க" (மதுரை. 612) என்ற அடிக்கும் இதற்கும் சிறிதே வேறுபாடுண்மையும், அதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய, 'அரித்தெழும் ஓசையையுடைய சல்லி கரடி முதலியவற்றோடே கூடின இனிய ஏனை வாச்சியங்கள் ஒலியா நிற்ப' என்ற உரையும் இங்கே கருதற் குரியன.

2 உள்ளுறையுவமத்தினியல்பை, "உள்ளுறையுவமம்" (தொல். அகத். சூ. 46) என்னுஞ் சூத்திரமுதலியவற்றாலுணர்க.

197 - 9. நல் பல வம்பு விரி களத்தின் கவின் பெற பொலிந்த குன்று கெழு நாடன் - நன்றாகிய பலவாகிய கச்சுப்பரந்த களம்போலே அழகுபெறப் பொலிவுபெற்ற மலைபொருந்தின நாடன்,

உயர்ந்தநிலத்தேநின்று மணக்கின்ற காந்தள் வரையரமகளிராற் கீழ் நிலத்தே பரந்து அவ்விடத்தைக் கச்சுவிரித்தாற்போல அழகுபெறுத்து மென்றதனால், நம்மிலுயர்ச்சியையுடைய தலைவன் நமது நல்வினையால் தன்து பெருமைதானுமொழிந்து இவ்விடத்தே வந்துகூடி நமக்கும் உயர்ச்சியுளதாக்கி நம்மை அழகு பெறுத்துகின்றானென்று உள்ளுறை யுவமமெய்திற்று.

199. எம் விழைதரு பெரு விறல் - எம்மை எப்பொழுதும் விரும்பு தலைத் தருகின்ற பெரியவெற்றியையுடையவன்,

200. [உள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு :]

அவ்வழி (186) உள்ளம் தன்மை உள்ளினன் கொண்டு - தான் முயங்குகையினாலே அப்பொழுது இவளுள்ளத்து நிகழுந்தன்மை மேல் வரைந்துகொண்டு இல்லறநிகழ்த்துதலாயிருக்குமென்று நினைந்தனாய் அதனை உட்கொண்டு,

அவ்வழி : இங்கேகூட்டிற்று.

201 - 3. [சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி, வருநர்க்கு வரை யா வளநகர் பொற்ப, மலரத் திறந்த வாயில் பலருண :]

பலர் உண மலர திறந்த வாயில் வளம் நகர் - பலரும்வந்து உண் ணும்படி அகலக் கதவு திறந்துகிடக்கின்ற வாசலையுடைய வளநகர்,

மிடாஅ சொன்றி வருநர்க்கு வரையா 1 சாறு அயர்ந்தன்ன வளம் நகர் பொற்ப - மிடாச்சோற்றை வருவார்க்கெல்லாம் வரையாமலிடு கின்ற விழாக் கொண்டாடினாற்போன்ற செல்வத்தையுடைய அகம் பொலிவு பெறும்படி,

முன்புள்ள இயல்புகூறிற்று.

204. பைந்நிணம் ஒழுகிய நெய் மலி அடிசில் - பசுத்த நிணமொழு கின நெய்மிக்க அடிசிலை நீ இடுகையினாலே,

205 - 6. வசை இல் வான் திணை புரையோர் கடும்பொடு விருந்து உண்டு எஞ்சிய மிச்சில் - குற்றமில்லாத உயர்ந்தகுலத்திற்பிறந்த உயர்ந் தோர் தமதுசுற்றத்தோடே விருந்துண்டு மிக்க அடிசிலை,

206. பெரு தகை - பெரிய தகைமைப்பாடுடையவன்,

207 - 8. நின்னொடு உண்டலும் புரைவது என்று ஆங்கு அறம் புணையாக தேற்றி - நீ இடுகையினாலே யான்உண்டலும் உயர்ந்ததென்று சொல்லி அப்பொழுது இல்லறம் தங்களைக்கரையேற்றுவதாகத் தெளி வித்து,

1 "அறஅ யானா ரகன்றலைப் பேரூர்ச், சாறு" பொருந. 1-2.

ஓடு ஆலாக்குக.

208 - 10. பிறங்கு மலை மீமிசை கடவுள் வாழ்த்தி கைதொழுது எழுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி - பெரியமலையில் மிக உயர்ந்த இடத்தேயுறைகின்ற முருகனையும் வாழ்த்தி வணங்கி அவன்முன்னே இவள் மயக்கமுறுதற்குக் காரணமான வஞ்சினத்தை உண்மையால் தெளிவித்து,

வஞ்சினம் - பிரியின் அறனல்லது செய்தேனாவேனென்னுமொழி. முன்தேற்றாதலின், எழுறுவஞ்சினமென்றார்.

211. அம் தீ தெள் நீர் குடித்தலின் நெஞ்சு அமர்ந்து - அம்மலையில் அழகிய இனிய தெள்ளிய அருவிநீரை அவன்குடிக்கையினாலே இவள் நெஞ்சு சூளுறவிலேபொருந்தி,

நீர் குடித்தலும் ஒருசூளுறவென்று கொள்க.

நெஞ்சமைந்தென்றும் பாடம்.

212 - 4. [அருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி, வானுரியுறையுள் வயங்கியோ ரவாவும், பூமலி சோலை யப்பகல் கழிப்பி :] வான் உரிய உறையுள் வயங்கியோர் அவாவும் அரு விடர் அமைந்த பூ மலி சோலை களிறு தரு புணர்ச்சி அ பகல் கழிப்பி - ஆகாயத்திடத்தே தமக்குரிய இருப்பினையுடைய விளங்கிய தேவர்விரும்பும் அரிய 1 முழைஞ்சுகளினிடத்தே பொருந்தின பூமிக்க சோலையிலே களிறுகூட்டின கூட்டத்தை அன்றைப் பகற்பொழுதெல்லாம் போக்கி,

உரிய உறையுள் : விகாரம்.

உண்மைசெப்புங்கிளவி கூறினாள்.

215 - 6. [எல்லை செல்ல வேழூர் பிறைஞ்சிப், பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய :] பல் கதிர் மண்டிலம் எழ் ஊர்பு எல்லை செல்ல இறைஞ்சி கல் சேர்பு மறைய - பலகிரணங்களையுடைய ஞாயிறு எழு குதிரைபூண்ட தேரையேறிப் பகற்பொழுது போம்படி தாழ்ந்து அத்த கிரியைச்சேர்ந்து மறைகையினாலே,

217. மான் கணம் மரம் முதல் தெவிட்ட - மான்திரள் மரத்தடிகளிலே திரள,

தெவிட்டல் - அசையிடுதலுமாம்.

217 - 8. ஆன் கணம் கன்று பயிர் குரல மன்று நிறை புகுதர - பசுவினுடையதிரள் கன்றுகளையழைக்குங் குரலையுடையவாய் மன்றுகள் நிறையப் புகுதலைச்செய்ய,

219 - 20. எங்கு வயிர் இசைய கொடு வாய் அன்றில் ஓங்கு இரு பெண்ணை அகம் மடல் அகவ - ஊதுகின்ற கொம்புபோன்ற ஓசையை

---

1 முழைஞ்சு - குகை.

யுடைய வளைந்த வாயையுடைய அன்றில் உயரும் பெரிய பனையில் உள் மடலிலேயிருந்து பேட்டையழைக்க,

221. பாம்பு மணி உமிழ - [1] பாம்பு தான்மேய்தல் காரணமாகத் தன்னிடத்து மாணிக்கத்தை ஈன,

221 - 2. [பல்வயிற் கோவல, [2] ராம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற :] கோவலர் பல் வயின் ஆம்பல் அம் தீ குழல் தெள் விளி பயிற்ற - இடையர் பல இடங்களினும்நின்று [3] ஆம்பலென்னும் பண்ணினையுடைய அழகிய இனிய குழலிடத்துத் தெளிந்த ஓசையைப் பலகாலுமெழுப்ப,

223. ஆம்பல் ஆய் இதழ் கூம்பு விட - ஆம்பலினது அழகிய இதழ்கள் தளையவிழ,

223 - 5. [வளமனைப், பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி, யந்தி யந்தண ரயர :]

அந்தணர் அந்தி அயர - பார்ப்பார் அந்திக்காலத்துச் செய்யுந்தொழில்களை நிகழ்த்த,

வளம் மனை பூ தொடி மகளிர் சுடர் தலை கொளுவி அந்தி அயர - செல்வத்தையுடைய மனைகளிற் பொலிவுபெற்ற தொடியினையுடைய மகளிர் விளக்கை அவ்விடத்தேகொளுத்தி அந்திக்காலத்திற் றொழிலை நிகழ்த்த,

225 - 6. கானவர் விண் தோய் பணவை மிசை ஞெகிழி பொத்த - அக்காட்டில்வாழ்வார் விண்ணைத்தீண்டுகின்ற பரணின்மேலே தீக்கடைகோலாலே நெருப்பைப்பிறப்பித்து எரிப்ப,

---

1 "அரா......உமிழ்ந்த, மேய்மணிவிளக்கின்" (அகநா. எஉ : 14-5) என்பதன் உரையில், 'மேய் மணி - மேய்தல் காரணமாக உமிழ்ந்தமணி ; விளக்கின் - அதுவேவிளக்காக' என்று அதன் உரையாசிரியர் எழுதியிருத்தலும் இச்செய்தியை யுணர்த்தும்.

2 ஆம்பலந் தீங்குழலென்பதற்கு இங்கே உரை கூறியவாறே, "ஆம்பற்குழல்" (கலி. கoஅ : 62) என்பதற்கு, 'ஆம்பலென்னும் பண்ணையுடைய குழலாலே' என்றும், "பையுள்செ யாம்பலும்" (சீவக. 1314) என்றவிடத்து, 'ஆம்பல் - ஆம்பற்பண்ணையுடைய குழல்' என்றும் இவ்வுரையாசிரியர் எழுதுவர் ; "ஆம்பலந் தீங்குழல் கேளாமோ" (சிலப். கள : "பாம்பு") என்றவிடத்து, அரும்பதவுரை யாசிரியர், 'ஆம்பன் முதலானவை சிலகருவி ; ஆம்பல்-பண்ணுமாம் ; 'மொழியாம்பல் வாயாம்பல் முத்தாம்பல்' என்று சொல்லுவர் பண்ணுக்கு' என்றும், அடியார்க்கு நல்லார், ஆம்பற்பண்ணென்பாரை மறுத்து வெண்கலத்தால் குமுதவடிவாக அணைசுபண்ணிச் செறித்த குழலென்றும் எழுதுவர். [3] ஆம்பலென்னும் பண் : "ஆம்பல் - ஆம்பலென்னும் பண்" சீவக. 1662, ந.

227. வானம் மா மலை வாய் சூழ்பு கறுப்ப - மேகம் பெரிய மலை யிடத்தைச்சூழ்ந்து கறுப்ப,

227 - 8. கானம் கல் என்று இரட்ட - காட்டிலுள்ள விலங்குக ளெல்லாம் கல்லென்னுமோசையையுடையவாய் ஒன்றற்கொன்று மாறிக் கூப்பிட,

கானம் : ஆகுபெயர்.

228. புள் இனம் ஒலிப்ப - பறவைகள் குடம்பைக்கண்ணேநின்று ஆரவாரிக்கையினாலே,

229 - 30. [1 சினைஇய வேந்தன் செல்சமங் கடுப்பத், துனைஇய மாலை துன்னுதல் காணூஉ :]

தெவிட்டப் (217) புகுதர (218) அகவ (220) உமிழப் (221) பயிற் றக் (222) கூம்புவிட (223) அயரப் (225) பொத்தக் (226) கறுப்ப (227) இரட்ட ஒலிப்பச் (228) செல்சமங்கடுப்ப (229) மாலை துன்னுதல் கண்டு (230) என முடிக்க.

இவ்வெச்சங்கள் எதிர்காலமுணர்த்தின. 2 "நிலனொருங்கு மயங்குத லின்றெனமொழிப" எனவே காலமிரண்டு மயங்குமென்றலிற் குறிஞ்சி யின் மாலைக்காலங் கூறினார்.

231 - 4. [நேரிறை முன்கை பற்றி நுமர்தர, நாடறி நன்மணை மயர்கஞ் சின்னாட், கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென, வீர நன் மொழி தீரக் கூறி :]

இலங்கிழையீர் - விளங்குகின்ற பூணினையுடையீர்,

நுமர் நேர் இறை முன்கை பற்றி தர நாடு அறி நல் மணம் அயர் கம் - நும்முடையசுற்றத்தார் நுமது நேரிய இறையினையுடைய முன்கை யைப்பிடித்து எமக்குத்தர நாட்டிலுள்ளாரெல்லாமறியும் நன்றாகிய கலி யாணத்தினைப் பின்பு நிகழ்த்துவேம் ;

சில நாள் கலங்கல் ஓம்புமின் என ஈரம் நல் மொழி தீர கூறி - யாம் இக்களவொழுக்கத்தாற்பெறும் பேரின்பம்பெறுதற்குச் சிறிது நாள் இங்ஙனம் ஒழுகாநின்றேமென்று நெஞ்சு கலங்குதலைப் பாதுகாப்பீ ராகவென்று அருளுடைத்தாகிய நல்லவார்த்தையை இவள்நெஞ்சில் வருத்தம் தீரும்படி சொல்லி,

235. 3 துணை புணர் ஏற்றின் எம்மொடு வந்து - ஆவைப்புணர்ந்த ஏறுபோலே விடாமல் எம்முடனே கூடவந்து,

---

1 இதற்கு உரை கிடைத்திலது : சினைஇய - கோபித்த. சமம் - போர். துனைஇய - விரைந்த.

2 தொல். அகத்திணை. சூ. 12.

3 135 - 6 - ஆம் அடிகளின் உரையைப்பார்க்க.

236 - 7. துஞ்சா முழவின் முது ஊர் வாயில் உண் துறை நிறுத்து பெயர்ந்தனன் - ஓசையை ஒருகாலும் அறாத முழவினையுடைய பழைய நம்மூர் வாசலில் பலரும் நீருண்ணுந் துறையிலே எம்மைநிறுத்தி மீண்டுபோனான் ;

இதனால் வேட்கையுரைத்தல் கூறினாள்.

237 - 9. அதன் கொண்டு அன்றை அன்ன விருப்போடு என்றும் இரவரல் மாலையன் - அப்புணர்ச்சிதொடங்கி அம்முதனாள்போன்ற விருப்பத்தோடே எந்நாளும் இரவுக்குறியிலே வருதலைத் தனக்கு இயல்பாகவுடையவன் ;

ஏகாரம் : ஈற்றசை.

239 - 41. வருதோறும் [1] காவலர் கடுகினும் கதம் நாய் குரைப்பினும் நீ துயில் எழினும் நிலவு வெளிப்படினும் - அங்ஙனம் வரும்போதெல்லாம் ஊர்காவலர் கடுகிக் காத்தாராயினும் கோபத்தையுடைய நாய் குரைத்ததாயினும் நீ துயிலுணர்ந்தாயாயினும் நிலவு வெளியாக எறித்ததாயினும்,

242. வேய்புரை மெல் தோள் இன் துயில் பெறாஅன் (243) - மூங்கிலையொத்த மெல்லிய தோளிற்பெறும் இனிய துயிலைப் பெறாது போவன் ;

243. பெயரினும் முனியல் உறாஅன் - யாங்கள் [2] குறியல்லதை

---

1 காவலர் கடுகுதல், கதநாய்குரைத்தல், தாய்துயிலாமை, நிலவு வெளிப்படல் முதலியவற்றை, "காணுவகையிற் பொழுதுநனி யிகப்பின்" நிகழும் தலைவிக்குரிய கிளவியுள் (களவு. சூ. 16) தொல்காப்பியனாரும், வரைதல் வேட்கைப் பொருளதாகிய, காப்புச்சிறை மிக்க கையறுகிளவியுள் (சூ. 30) களவியலாசிரியரும், வரைவுகடாதற்பகுதியிற் காப்பிடையீட்டிற் கையறு கிளவியுள் தமிழ்நெறிவிளக்கவாசிரியரும், காப்புமிகுதிசொல்லி வரவுவிலக்குவித்தலாகிய கையறுகிளவியுள் ஒருபகழுப இலக்கணநூலுடையாசிரியரும், இரவுக்குறியிடையீட்டில் தலைவன் வருந்தொழிற் கருமைக்குப் பொருந்துவனவென (சூ. 161) நாற்கவிராச நம்பியும் அடக்குவர். இத்துறைகள் ஒருங்கேவந்ததற்கு அவருட் சிலர்காட்டும் உதாரணங்களுட் கீழ்வருவன இங்கே பயன்படுவன; "யாயே துயின்மறந் தனளே யாயினும், நாயு மூரு நனிதுஞ் சலவே, காவல ரதனினுந் துயிலார் துயிலினும், ஆய்கதிர் மதியநின் றலரும், யாவ தாங்கொ லேந்திழை நிலையே" (பொருளியல்); "ஊர்துயிலினுய் துயிலா வொண்டொடி யூர்காக்கும், பேர்துயிலா மாறொருகாற் பெற்றாலும் - நேர்துயிலாள், அன்னை நெடுநிலா வல்லும் பகலாகும், என்னை வருவதுநீ யீங்கு" கிளவித்தெளிவு.

2 இதனைக் குறிபிழைத்தலென்றும், அல்லகுறிப்படுதலென்றும் கூறுவர்.

னைக் குறியாகக்கருதிச் செல்லாநின்று மீண்டு மனையிடத்தேபுகினும் அதற்கு வெறுத்தலைச் செய்யான் ;

244. இளமையின் இகந்தன்றும் இலனே - அவன்றான் இளமைப் பருவத்தைக் கடந்ததுமிலன் ;

244 - 5. [வளமையிற், றன்னிலை தீர்ந்தன்று மிலனே :] வளமையின் என்றும் (242) தன் நிலை தீர்ந்தன்றும் இலனே - நற்குணங்களைத் திரித்தற்குரிய 1 செல்வச்செருக்கான் எந்நாளும் தன்குலத்திற்குரிய நற்குணங்களின் நீங்கியதுமிலன் ;

ஏகாரங்கள் : ஈற்றசை.

245 - 6. கொன் ஊர் மாயம் வரவின் இயல்பு நினைஇ தேற்றி - 2 அலர் முதலியவற்றான் அச்சத்தையுடைய இவ்வூரின்கண்ணே தனக்குப் பொய்யாயிருக்கின்ற இரவுக்குறியிலே கூடுதற்கு வருகின்ற வரவினதுதன்மையை இஃது ஒழுக்கமன்றென்று நினைத்து அவன் வரைந்து கொள்ள இல்லறநிகழ்த்துதலே நல்லொழுக்கமென்று துணிகையினாலே,

247 - 8. [நீரெறி மலரிற் சாஅயிதழ் சோரா, வீரிய கலுழுமிவள் பெருமதர் மழைக்கண் :] இவள் பெரு மதர் மழை கண் நீர் எறி மலரின் சாஅய் இதழ் சோரா ஈரிய கலுழும் - இவளுடைய பெரிய மதர்த்த குளிர்ந்த கண்கள் பெருந்துளி எறிந்துபெய்தமலர்போலே அழகு கெட்டு இமைசோர்ந்து ஈரத்தினையுடையவாய்க் கலங்காநிற்கும் ;

249 - 61. [ஆகத் தரிப்பனி யுறைப்ப நாளும், வலைப்படு மஞ்ஞையி னலஞ்செலச் சாஅய், நினைத்தொறுங் கலுழுமா லிவளே கங்கு, லளைச்செறி யுழுவையு மாளியு முளியமும், புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும், வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத், துருமுஞ் சுருமிரைதே ரரவமு, மொடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழக்குங், கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமு, நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும், பழுவம் பாந்தளு முளப்படப் பிறவும், வழுவின் வழாஅ விழுமமவர், குழுமலை விடரக முடையவா லெனவே :]

---

1 "அறநிரம்பிய வருளுடை யருந்தவர்க் கேனும்,பெறலருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்" (கம்ப. மந்தரை. 70) ; "செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிது பேணார், சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையு நோக்கார், வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார், வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்" வி - பா. கிருட்டினன். 143.

2 அலர் - பலரறிந்துகூறும்பழிமொழி ; "அலரென்பது இன்னானொடு இன்னாளிடையதுபோலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது" இறை. சூ. 22, உரை.

இவள் நினைத்தொறும் (251) வலை படு மஞ்ஞையின் நலம் செல சாஅய் (250) அரி பனி நாளும் ஆகத்து உறைப்ப (249) கலுழும் (251)- இவள் அங்ஙனம் கண் அழுகின்றதற்கு மேலே அவர்வருகின்ற மலை இடும்பையுடையவாயிருக்குமென்று நினைக்குந்தோறும் வலையில் அகப் பட்டமயில்போலே தன்னலம்போம்படி நுணுகிக் கண்ணில் அரித்து வீழ்கின்றநீர் நாள்தோறும் மார்பிலே துளிப்பக் கலங்காநிற்கும் ;

கங்குல் (251) - இராக்காலத்து,

அளை செறி உழுவையும் (252) - முழைஞ்சிடத்திலே செறியும் புலி களும்,

யாளியும் (252) - யாளிகளும்,

உளியமும் (252) - கரடியும்,

புழல் கோடு ஆமான் புகல்வியும் (253) - உள்ளூப்பொய்யான கொம்பையுடைய ஆமானிலேறும்,

களிறும் (253) - யானையும்,

வலியின் [1] தப்பும் வன்கண் வெ சினத்து (254) உருமும் (255) - வலியினூற்கெடுக்கும் தறுகண்மையையுடைத்தாகிய வெவ்விய சினத்தை யுடைய உருமேறும்,

சூரும் (255) - கொடுந்தெய்வமும்,

இரை தேர் அரவமும் (255) - இரை தேடித்திரியும் பாம்பும்,

ஒடுங்கு இரு குட்டத்து அரு சுழி வழங்கும் (256) கொடு தாள் முதலையும் இடங்கரும் கராமும் (257) - புடைபட்ட கரிய ஆழத்திடத் துப் போதற்கரிய சுழியிடத்தேதிரியும் வளைந்ததாளையுடைய முதலையும் இடங்கரும் கராமும்,

இவைமூன்றும் சாதிவிசேடம்.

நூழிலும் (258) - வழிபறிப்பார் கொன்றுகுவிக்குமிடங்களும்,

[2] நூழில் - கொடிப்பிணக்கென்பாருமுளர்.

இழுக்கும் (258) - வழுக்குநிலமும்,

ஊழ் அடி முட்டமும் (258) - முறையடிப்பாடாய்ப் பின்பு வழி முட்டாயிருக்கும் இடங்களும்,

பழுவும் (259) - பிசாசும்,

பாந்தளும் (259) - பெரும்பாம்பும்,

உளப்பட பிறவும் (259) வழுவின் வழாஅ விழுமம் (260) - உழு வைமுதலாக எண்ணப்பட்ட இவையெல்லாமுட்பட வேறும் தப்புஞ் செயலிற் றப்பாத இடும்பைதருவனவற்றை,

விழுமஞ்செய்வனவற்றை விழுமமென்றார் ; இஃது ஆகுபெயர்.

---

1 தப்பல் - கொல்லுதல் ; ப. உகச, 3 - ஆம் அடிக்.

2 நூழிற்கொடி : சீவக. 196, ந ; பு - வே. 321.

அவர் (260) குழு மலை விடர் அகம் உடைய ஆல் என (261) - தலைவருடைய கிளையை யுடைத்தாகிய மலையின்முழைஞ்சிடம் உடையவாயிருக்குமென்று.

அன்னாய் வாழி; அன்னாய் யான்கூறுகின்றதனை விரும்புவாயாக (1); நீயும் எய்யா மையலையாகி வருந்துதி (8); இவளும் (26) ஏனையுலகத்தும் இயைவதாலெனக்கூறி (24) மெலியும் (26); யானும் (29) சான்ரோர்போல (28) வருந்தாநின்றேன் (29); எண்ணாது (31) எமியேம் துணிந்த அருவினை (32) நிகழ்ந்தவண்ணம் நீயுணரச் (33) செப்புதலையமைந்தேன்; அதுகேட்கச் சினவாதீமோ (34); தினையிற் படுபுள்ளோப்பி (38) வருதியரென நீ போகவிடுகையினாலே (39) யாங்களும் போய் இதணமேறிக் (41) கிளிகடிமரபினவற்றைவாங்கி (44) ஓட்டிக் (101) கொண்மூப் (50) பொழிந்தென (53) நெடுங்கோட்டிழிதருந் தெண்ணீ (54) ரருவி (55) யாடிப் (56) பாய்சுனைகுடைவுழிப் (57) பாயம்பாடிக் (58) கூந்தலைப்பிழிவனந்துவரிச் (60) சிவந்தகண்ணேமாய் (61) மலிவனமறுகிப் (97) பரேரம்புழகுடனே (96) காந்தள் முதலியவற்றையும் பிறவற்றையும் (62 - 95) பாறையிலேகுவித்துத் (98) தெள்விளி பயிற்றி (100) ஓப்பியும் (101) தழைதைஇ உடுத்துக் (102) கோதையை (103) முச்சியிலே கட்டிச் (104) செயலைத் (105) தண்ணிழலிலே யிருந்தனமாக (106), குன்றுகெழுநாடனாகிய எம்பெருவிறல் (199) அணிபெறவந்து (136) இளையீர், இறந்த (141) கெடுதியுமுடையேனென்றனன்; அதனெதிர் (142) சொல்லேமாதலிற் கலங்கி (143) மெல்லியலீர், சொல்லலும்பழியோவெனச்சொல்லி (145) ஓச்சி (150) அவித்துச்(151) சொல்லற்பாணிநின்றனனாக (152), வேழம் எதிர் தருகையினாலே (165) விரைந்தவற்பொருந்தி (168) நடுங்காநிற்கப் (169) பகழியைவாங்கி (170) அணிமுகத்தழுத்தலின் (171), அது புறங்கொடுத்தபின் (174) கலுழிபாய்தலின் (178) வாழையினடுங்கினமாக, அதுகண்டு பெருந்தகை (179) எடுத்து அஞ்சலோம்பெனச்சொல்லி (181) நீவி நினைந்து (182) என்முகநோக்கி நக்கனன் (183); அவ்வழி நாணும் உட்கும் அடைதருகையினாலே (184) இவள் நீங்கவும் விடானாய் (185) அந்நிலை (183) முயங்கலின், அவ்வழி (186) இவளுள்ளத்தன்மை உள்ளினனாய் அதனையுட்கொண்டு (200) விருந்துண்டெஞ்சிய மிச்சிலை (206) நீ இடுகையினாலே யானுண்டலும் புரைவதென்று சொல்லித் (207) தேற்றிப் (208) பெருந்தகை (206) கடவுளும் வாழ்த்திக் கைதொழுது (209) வஞ்சினம் வாய்மையிற் றேற்றித் (210) தெண்ணீர்குடித்தலின் நெஞ்சமர்ந்து (211) சோலையிலே (214) களிறுதருபுணர்ச்சியைக் (212) கழிப்பி (214) மண்டிலம் மறைகையினாலே (216) மாலைதுன்னுதல் கண்டு (230) இலங்கிழையீர், கலங்கலோம்புமினென (233) ஈரநன்மொழி

கூறி (234) எம்மொடுவந்து (235) உண்துறைநிறுத்துப் பெயர்ந்தனன் அதற்கொண்டு (237) என்றும் (238) இரவில்வருமாலையன்; வருதோறுட (239) காக்கினும் குரைப்பினும் (240) துயிலெழினும் வெளிப்படினும் (241) இன்றுயில் (242) பெறுமற் போவன் (243); அதுவேயன்றிப் பெய ரினும் முனியலுறுன் (243); இகந்தன்றுமிலன் (244); என்றும் (242) தீர்ந்தன்றுமிலாதவன் (245) மாயவரவினியல்புநினைந்து தேற்றுகையி னுலே (246) இவள்கலுழும் (248); அங்ஙனம் அழுகின்றதற்குமேலே அவர்வருகின்ற (260) குழுமலைவிடரகம் (261) விழுமம் (260) உடைய வென (261) நினையுந்தோறும் (251) சாஅய் (250) உறைப்பக் (249) கலங்காநிற்கும் (251); இதுகாண் நல்வினை நிகழ்ந்தவண்ணமென்று ளென வினைமுடிக்க.

ஆரியவாசன்பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் கபிலர்பாடிய குறிஞ் சிப்பாட்டிற்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த வுரை முற்றிற்று.

---

வெண்பா.

1. நின்குற்ற மில்லை நிரைதொடியும் பண்புடையள்
என்குற்றம் யானு முணர்கலேன் - பொன்குற்
றருவி கொழிக்கு மணிமலை நாடன்
தெரியுங்காற் றீய திலன்.

2. ஆற்றல்சால் கேள்வி யறம்பொரு ளின்பத்தைப்
போற்றிப் புனைந்த பொருளிற்றே - தேற்ற
மறையோர் மணமெட்டி னைந்தா மணத்திற்
குறையாக் [1] குறிஞ்சிக் குணம்.

---

1 குறிஞ்சியென்றது இந்நூலை.

ஒன்பதாவது

# *பட்டினப்பாலை.



வசையில்புகழ் வயங்குவெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினுந்
தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்பப் புயன்மாறி

*இது வஞ்சி நெடும்பாட்டெனவும் வழங்கும்; "பட்டினப் பாலை யென்னும் வஞ்சி நெடும்பாட்டு ஆசிரியவடி விரவிவந்த ஏந்திசைத் தூங்கல் விரவியற் குறளடி வஞ்சிப்பா" (யா. வி. செய். சூ. 37); "பட்டினப் பாலையென்னும் வஞ்சி நெடும்பாட்டினுள் ஆசிரியவடி பயின்று வந்தன; கலியடியும் வெள்ளடியும் அருகினவெனக் கொள்க" (யா. கா. ஒழிபு. 4; இ-வி. சூ. 745, உரை); "பாடியதோர் வஞ்சிநெடும் பாட்டாற் பதினாறு, கோடிபொன் கொண்டதுநின் கொற்றமே" தமிழ்விடு.

1. மூவகைச் சீருக்கும் (தொல். செய். சூ. 12, ந.), வஞ்சியுறுப் பாகிய செய்யுளுக்கும் (தொல். செய். சூ. 105, ந.) இவ்வடி மேற்கோள்.

1-2. ப. ௩௰, 1-ஆம் அடிக் ; புறநா. ௩௮ : 22.

இவ்வடிகள் தூங்கல்வண்ணத்திற்கும் (தொல். செய். சூ. 220, இளம்.), மூவகைச் சீருக்கும் (தொல். செய். சூ. 12, பேர்.), வஞ்சி யுறுப்பாகி வந்த செய்யுட்கும் (தொல். செய். சூ. 105, பேர்.) மேற் கோள்.

4. தொல். புள்ளி. சூ. 105, ந. மேற்.

3-4. "துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்" (கலி. ௪௬ : 20); "துளி நசைப்புள்" (புறநா. ௧௬௮ : 25); "வானம்பாடி மேகத் துப் பிறந்த துளியையே நச்சிப்பாடுமாறு போல" (சீவக. 2897, ந.); தக்க. 606.

1-4. "அவையாமாறு : 'வசையில்.........உணவின்' எனத் தன்சீர் வரத் தூங்கலோசை பிறந்தது;.........'புட்......மாறி' என் பதும் வெண்பாவுரிச்சீராற் றூங்கலோசை பிறந்தது; 'புட்......மாறி' என்புழி, 'வசையில்......மீன்' எனத்தனது சீரானே தூங்கலோசை பிறந்தாங்குப் பிறந்தது; 'திசை......ஏகினும்' என இயற்சீர் நிற்பத் தன்சீரானே தூங்கலோசை பிறந்தது" (தொல். செய். சூ. 22, பேர்.); "'வசையில்......மீன்' எனத் தன் மூன்னர்த்தான் வந்தும், 'திசை......

5 வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனிக்
கார்க்கரும்பின் கமழாலைத்
10 தீத்தெறுவிற் கவின்வாடி
நீர்ச்செறுவி னீணெய்தற்
பூச்சாம்பும் புலத்தாங்கட்
காய்ச்செந்நெற் கதிரருந்து
மோட்டெருமை முழுக்குழவி
15 கூட்டுநிழற் றுயில்வதியுந்

---

ஏகினும்' என இயற்சீர் நிற்பத் தன்சீர் வந்தும், 'தற்......உணவின்' எனத் தன்முன்னர் வெண்சீர் வந்தும், 'புட்......மாறி' என இரண்டு வெண்சீர் வந்தும்......தூங்கலோசை பிறக்குமென்றுணர்க" டை. டை. டை. ந.

3-5. "தற்பாடு பறவை பசிப்பப் பசையற, நீர்சூல் கொள்ளாது மாறிக் கால்பொரச், சீரை வெண்டலைச் சிறுபுன் கொண்மூ" ஆசிரிய மாலை.

6. "மலைத்தலைத் தொடுத்த மல்லற் பேரியாற்று" (பெருங். ந. 24 : 15); "கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்" கம்ப. ஆற்றுப். 19.

5-6. பொய்யாக் காவிரி: "இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும், அந்தண் காவிரி வந்துகவர் பூட்ட" (புறநா. நரு : 7-8); "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்.........காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை" (சிலப். கo : 102-8); "கோணிலை திரிந்து கோடை நீடினுந், தானிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை", "தவாநீர்க் காவிரிப் பாவை" (மணி. பதிகம், 24-5, ந : 55); "பூந்தண் பொன்னி யெந்நாளும் பொய்யா தளிக்கும் புனனாட்டு" (பெரிய. சண்டேச. 1); "பொய்யாத பொன்னி" (விக்கிரம. உலா, 40-41); "வற்றாத பொன்னி நதி" (குலோத். பிள்ளைத்.); "வாழிவற் றாத காவிரி" (தக்க. 812); "காவிரி யென்னத் தப்பாக் கருணையான்" வி-பா. அருச்சுனன்றவநிலை. 24.

13. பி-ம். 'கதிரருந்தி'

14-5. குழவியென்னு மிளமைப்பெயர் எருமைக்கு முரித்தென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். மரபு. சூ. 20, பேர்.

கோட்டெங்கிற் குலைவாழைக்
காய்க்கமுகிற் கமழ்மஞ்ச
ளினமாவி னிணர்ப்பெண்ணை
முதற்சேம்பின் முளையிஞ்சி
20 யகனகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதன் மடநோக்கி
னேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு
25 முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்

16. கோட்டெங்கு: பெருங். ௨. 9 : 9.

கோள், கொத்தினை யுணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தஞ்சை. 85, உரை.

22. "வஞ்சியுள், நேரிழை........கவருமென்ற ஆசிரியவடியினை நாலசைச்சீர் காட்ட வேண்டுவார் இருசீரடியாக உரைப்பினும் அவற்றிற்குத் தூங்கலோசை யின்றாகலானும் சீர்தம்முட் புணர்ந்திறுதலின்மையானும் வஞ்சிச்சீர் அறுபது காட்டுகின்ற வழி யாண்டும் நேர்பசை நிரைபசைகள் அலகு பெறாமையானும் தொல்காப்பியனார் கொள்ளார்" (தொல். செய். சூ. 12, ந.) ; "பட்டினப் பாலையென்னும் வஞ்சி நெடும் பாட்டினுள், 'நேரிழை........கவரும்' என்றித் தொடக்கத்தன ஆசிரியவடி" (யா-வி. அடியோத்து, சூ. 9) ; நேரிழை மகளிர் : ஷை. செய். சூ. 5, மேற்.

23. "கோழி விட்டெறி குழையினை" ஆனைக்காப். திருநாட்டுப். 122.

"குழைகொண்டு கோழி யெறியும் வாழ்க்கையவரென்றவழி, கோழி யெறிவாரென்றுணரற்பாலதன்று; ஒன்றானும் முட்டில் செல்வத்தாரென்றவாறு" நன். சூ. 407, மயிலை.

22-3. வஞ்சிப்பாவில் ஆசிரியவடியும் வெண்பாவடியும் விரவி வந்ததற்கு முறையே இவ்வடிகள் மேற்கோள்; தொல். செய். சூ. 111, இளம்; ஷை. ஷை. சூ. 71, பேர். ந.; யா. கா. ஒழிபு. 4, உரை; இ-வி. சூ. 745, உரை.

24-5. பெரும்பாண். 248-9, அடிக்; "பூங்கட் புதல்வர் நடைத்தேர்" பு. வெ. 43.

22-6. "பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதக, நற்சிறாரூர்தலி னங்கை மார்விரீஇ, உற்றவர் கோழிமே லெறிந்த வொண்குழை, மற்றத்தே ருருள்கொடா வளமை சான்றவே" சீவக. 89.

கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
30 நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியி னணைமுதற் பிணிக்குங்
கழிசூழ்படப்பைக் கலியாணர்ப்
பொழிற்புறவிற் பூந்தண்டலை
மழைநீங்கிய மாவிசும்பின்
35 மதிசேர்ந்த மகவெண்மீ
னுருகெழுதிற லுயர்கோட்டத்து
முருகமர்பூ முரண்கிடக்கை
வரியணிசுடர் வான்பொய்கை
யிருகாமத் திணையேரிப்
40 புலிப்பொறிப் போர்க்கதவிற்
றிருத்துஞ்சுந் திண்காப்பிற்
புகழ்நிலைஇய மொழிவளர
வறநிலைஇய வகனட்டிற்
சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
45 யாறுபோலப் பரந்தொழுகி

---

28. "குறும்ப லூரயாஞ் செல்லு மாறே" நற். ௬ : 12.

29. "வெண்க லுப்பின் கொள்ளை சாற்றி" (நற். ௪ : 8; அகநா. ௧௪0 : 3); "தெண்கழி விளைந்த வெண்க லுப்பின், கொள்ளை சாற்றிய" அகநா. ௧௫௯ : 1 - 2.

29 - 30. உப்பிற்கு விலையாக நெல்லைக் கொள்ளுதல் : "உப்பை மாறி வெண்ணெற் றரீஇய" (குறுந். ௨௬௯ : 5) ; "நெல்லி னேரே வெண்க லுப்பென" அகநா. ௧௪௦ : 7.

39. "இருகாமத்திணையேரி போலும் குளங்களிலும்.........விளையாடி" தொல். கற்பு. சூ. 50, ந.

"இக்குண்டமிரண்டிற்கும் இவ்வுலகத் தின்புறலும், போக பூமியிற் பிறத்தலும் நிரனிறை யாக்கலுமொன்று ; அவற்றை, 'இருகாமத்திணையேரி' என்றார் பட்டினப்பாலையிலும்" சிலப். ௯ : 54 - 64, அடியார்.

40. புலிப்பொறி : பட். 135.

போர்க்கதவு : மதுரை. 354, அடிக்குறிப்பு ; சிலப். ௧0 : 7, அரும்பத. அடியார்.

41. "திருநிலைஇய பெருமன்னெயில்" பட்டின. 291.

யேறுபொரச் சேருகித்
தேரோடத் துகள்கெழுமி
நீருடிய களிறுபோல
வேறுபட்ட வினையோவத்து
50 வெண்கோயின் மாசூட்டுந்
தண்கேணித் தகைமுற்றத்துப்
பகட்டெருத்தின் பலசாலைத்
தவப்பள்ளித் தாழ்காவி
னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு
55 மாவுதி நறும்புகை முனைஇக் குயிறம்
மாயிரும் பெடையோ டிரியல் போகிப்
பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த்
தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கு
முதுமரத்த முரண்களரி
60 வரிமண லகன்றிட்டை
யிருங்கிளை யினவொக்கற்
கருந்தொழிற் கலிமாக்கள்
கடலிறவின் சூடுதின்றும்
வயலாமைப் புழுக்குண்டும்
65 வறளடும்பின் மலர்மலைந்தும்
புனலாம்பற் பூச்சூடியு
நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோண்மீன் போல
மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்

---

44 - 7. "'சோறு.........ஒழுகி' என்பதோவெனின், யாறென்ற துணையானே பேரியாறெனக்கொண்டு உலகிறந்தன வாகாமைக்கன்றே, 'ஏறுபொர.........கெழுமி' என்பதாயிற்றென்பது" தொல். உவம. சூ. 10, பேர்.

48. நீருடியகளிறு: கலி. ௧௭: 9 - 10.

64 - 5. இவ்வடிகள், வஞ்சிப்பாவிற் கலியடி வந்ததற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 111, இளம்; யா - வி. அடியோத்து, சூ. 8; யா - கா. ஒழிபு. 4, உரை; இ - வி. சூ. 745, உரை.

தொல். செய். சூ. 108, பேர். மேற்.

67. நீனிற விசும்பு: முருகு. 116, அடிக்.

வலனேர்பு திரிதரு: முருகு. 1.

70 கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப்
பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅ
திருஞ்செருவி னிகன்மொய்ம்பினோர்
கல்லெறியுங் கவண்வெரீஇப்
புள்ளிரியும் புகர்ப்போந்தைப்
75 பறழ்ப்பன்றிப் பல்கோழி
யுறைக்கிணற்றுப் புறச்சேரி
மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்
கிடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லி னரண்போல
80 நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய
குறுங்கூரைக் குடிநாப்ப
ணிலவடைந்த விருள்போல
வலையுணங்கு மணன்முன்றில்
வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த
85 வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்
சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான்

---

78. பெரும்பாண். 119 - 20, அடிக்.

78 - 9. "பெயரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல், வேலூன்று பலகை" அகநா. ரு௭ : 9 - 11, கஙக : 10 - 12.

82 - 3. நிலவு மணலுக்கு: பொருந. 213, அடிக்.

85. வெண்கூதாளம்: முருகு. 192.

கூதாளியென்பது அம்முப்பெற்று இகரங்கெட்டும், பின் அத்துப் பெற்று மகரங்கெட்டும் வருதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். உயிர். சூ. 41, ந.

86 - 7. "சுறவ முண்மருப் பணங்கயர் வனகழிச் சூழல்" (பெரிய. திருக்குறிப்பு. 7); "விருப்பின் மீன்கவர் வினைஞர் கோட்சுறு, மருப்பி னூடலும் வருதன் மாண்புணர்ந், தொருப்பட் டீர்ம்புன லும்பற் போற்றித்தங், கருத்து வாய்ப்பது கருங்க டற்புறம்" (தணிகைப். திருநாட்டுப். 136); "புறவுக் கோட்டஞ் செயும்வனப்பிற் பூவை மொழியார் விழிதான்வாழ், இறவுக் கோட்டுக் கடல்பணிக்கு மெழிலா லவர்நாட் டினரிறைஞ்சும், சுறவுக் கோட்டுக் கடலரசன் றோன்றி வரங்க ளினி

மடற்றாழை மலர்மலைந்தும்
பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்
90 புன்றலை யிரும்பரதவர்
பைந்தழைமா மகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா
துவவுமடிந் துண்டாடியும்
புலவுமணற் பூங்கானன்
95 மாமலை யணைந்த கொண்மூப் போலவுந்
தாய்முலை தழுவிய குழவி போலவுந்
தேறுநீர்ப் புணரியோ டியாறுதலை மணக்கு
மலியோதத் தொலிகூடற்
றீதுநீங்கக் கடலாடியு
100 மாசுபோகப் புனல்படிந்து
மலவ னாட்டியு முரவுத்திரை யுழக்கியும்
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டு
மகலாக் காதலொடு பகல்விளை யாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
105 பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைத்
துணைப்புணர்ந்த மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்து
மட்டுநீக்கி மதுமகிழ்ந்து
மைந்தர் கண்ணி மகளிர் சூடவு

---

தருளும், நறவுக் கோட்டு மலர்ப்புன்னை ஞாழற் பொதும்ப ரெவ்விட னும்" ஆனைக்காப். நாட்டு. 96.

"இனி, நெய்தனிலத்தில் நுளையர்க்கு வலைவளந்தப்பின் அம்மக ளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டுப் பரவுக்கடன் கொடுத் தலின் ஆண்டு வருணன் வெளிப்படுமென்றார்; அவை, 'சினைச்......... வல்லணங்கினால்'........எனவும் வரும்" தொல். அகத்திணை. சூ. 5, ந.

92. பாயிரும் பனிக்கடல்: பரி. ௫: 1.

கடல் வேட்டம்: "எல்லிமிழ் பனிக்கடன் மல்குசுடர்க் கொளீஇ, எமரும் வேட்டம் புக்கனர்" (நற். ருள: 8 - 9); "பெருங்கடல் வேட் டத்துச் சிறுகுடிப் பரதவர்" அகநா. கசo: 1.

95 - 6. "தாய்முலை தழுவிய குழவி போலவு, மாமலை தழுவிய மஞ்சு போலவும்" சீவக. 100.

110 மகளிர் கோதை மைந்தர் மலையவு
நெடுங்கான் மாடத் தொள்ளெரி நோக்கிக்
கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுட ரெண்ணவும்
பாட லோர்த்து நாடக நயந்தும்
வெண்ணிலவின் பயன்றுய்த்துங்
115 கண்ணடைஇய கடைக்கங்குலான்
மாஅகாவிரி மணங்கூட்டுந்
தூஉவெக்கர்த் துயின்மடிந்து
வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன்றெருவி
120 னல்லிறைவன் பொருள்காக்குந்
தொல்லிசைத் தொழின்மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
றேர்பூண்ட மாஅபோல
வைகறொறு மசைவின்றி
125 யுல்குசெயக் குறைபடாது
வான்முகந்தநீர் மலைப்பொழியவு
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவு
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேற்றவு
130 நிலத்தினின்று நீர்ப்பரப்பவு

---

109-10. ப. ௩௬௬, 2-ஆம் அடிக்; பரி. ௬ : 16, உரை; கலி. ௬௬ : 15-6; சீவக. 2119.

112. "பரதவர், திண்டிமில் விளக்க மெண்ணும்" நற். ௩௭௨ : 11-2.

113. "நாடகங் கண்டு பாடற் பான்மையிற், கேள்வி யின்னிசை கேட்டு" (மணி. ௨௫ : 82-3); "ஆடல் கண்டும் பாடல் கேட்டும்" (பெருங். ௩. 23 : 6); "பொன்னனார் கூத்து மன்னார், நாவல ரமுத மன்ன பாடலு நாக நாட்டிக், காவலன் கண்டு கேட்டுக் களிமதுக் கடலி லாழ்ந்தான்" (திருவிளை. ௧ : 3); "அன்புறு கீதங் கேட்டு நாடகங் கண்டமர்ந்தும்" வாயு. காலவியல்பு. 4.

114. நெடுநல். 95, அடிக்.

119. வேலாழி : "வேலாழி சூழுலகில்" திணைமாலை. 62.

125. "உல்குடைப் பெருவழி" பெரும்பாண். 81.

129. பி-ம். 'ஏறவும்'

மளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
யருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
135 புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
140 கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
யேழகத் தகரோ டுகளு முன்றிற்
குறுந்தொடை நெடும்படிக்காற்
கொடுந்திண்ணைப் பஃறகைப்பிற்
புழைவாயிற் போகிடைகழி
145 மழைதோயு முயர்மாடத்துச்
சேவடிச் செறிகுறங்கிற்
பாசிழைப் பகட்டல்குற்
றூசுடைத் துகிர்மேனி
மயிலியன் மானோக்கிற்
150 கிளிமழலை மென்சாயலோர்
வளிநுழையும் வாய்பொருந்தி
யோங்குவரை மருங்கி னுண்டா துறைக்குங்
காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன
செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்

139. பி-ம். 'வரைபாய் வருடை'

144. புழைவாயில்: "வாயிலொடு புழையமைத்து" பட்டின. 287.

இடைகழி: சீவக. 399.

146. செறிகுறங்கு: "சேர்ந்துடன் செறிந்த குறங்கின்" சிறுபாண். 20.

150. கிளிமழலை: "வாய்திறந்து, கிளிபுரை கிளவியாம் பெறுக" (பொருளியல்.) "மாதர்ப் பைங்கிளி மழலை" பெருங். உ. 12 : 138.

153-4. முல்லை. 95; "சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன, நலம்பெறு கையின்" (ஐங். உகூ : 1-2); "கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோ, லெடுத்த நறவின் குலையலங் காந்தள்", "அடுக்கநா

155 வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறா வியலாவணத்து
மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய
160 மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்
வருபுன றந்த வெண்மணற் கான்யாற்
றுருகெழு கரும்பி னொண்பூப் போலக்
கூழுடைக் கொழுமஞ்சிகைத்
தாழுடைத் தண்பணியத்து
165 வாலரிசிப் பலிசிதறிப்
பாகுகுத்த பசுமெழுக்கிற்
காழூன்றிய கவிகிடுகின்
மேலூன்றிய துகிற்கொடியும்
பல்கேள்வித் துறைபோகிய
170 தொல்லாணை நல்லாசிரிய
ருறழ்குறித் தெடுத்த வுருகெழு கொடியும்

---

றலர்காந்த ளுண்ணோர்தண் ணேருருவிற், றுடுப்பெனப் புரையுநின் றிரண்டநே ரரிமுன்கை" கலி. ௫௦ : 11 - 2, ௫௬ : 3 - 4.

156 - 7. குழல், யாழ், முழவு : "குழல்வழி நின்றதி யாழே யாழ்வழித், தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப், பின்வழி நின்றது முழவே" சிலப். ௩ : 139 - 41.

158. மதுரை. 328, அடிக்.

158 - 60. மதுரை. 365 - 6.

167. "பவழத் திண்காழ் கம்பலக் கிடுகி னூன்றி", "பவழக்கா றிகழும் பைம்பொற் பெருங் கிடுகு" (சீவக. 113, 2975); "காழுங் கிடுகும்போ னிற்கும்" அறநெறி. 84.

167 - 8. அங்காடியில் இருக்கும் கொடிகள் : மதுரை. 365 - 73, அடிக். "கொடிநிழற் பட்ட பொன்னுடை நியமத்து" பதிற். ௧௫ : 19.

169. "பரந்த கேள்வித் துறைபோய பைந்தார் மார்பன்" சீவக. 717.

170. மதுரை. 761.

169 - 70. மதுரை. 760 - 61.

169 - 71. கல்வியில் வல்லோர் கொடியெடுத்தல், மதுரைக்காஞ்சி, 372 - ஆம் அடியின் விசேடவுரையாலும், "கூழைத்தண் டமிழுக்கேன்

வெளிவிளக்குங் களிறுபோலத்
தீம்புகார்த் திரைமுன்றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை
175 மிசைக்கூம்பி னசைக்கொடியு
மீன்றடிந்து விடக்கறுத்
தூன்பொரிக்கு மொலிமுன்றின்
மணற்குவைஇ மலர்சிதறிப்
பலர்புகுமனைப் பலிப்புதவி
180 னறவுநொடைக் கொடியோடு
பிறபிறவு நனிவிரைஇப்
பல்வே றுருவிற் பதாகை நீழற்
செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பிற்
செல்லா நல்லிசை யமரர் காப்பி
185 னீரின் வந்த நிமிர்பரிப் புரவியுங்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங்
குடமலைப் பிறந்த வாரமு மகிலுந்
தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங்
190 கங்கை வாரியுங் காவிரிப் பயனு
மீழத் துணவுங் காழகத் தாக்கமு

---

கொடியுங்கா ளமுமே" (தமிழ்நா. 119) என்ற ஒட்டக்கூத்தர் வாக்காலும் உணரப்படும்.

172-4. நாவாய்க்குக்களிறு: மதுரை. 375-83, அடிக். புறநா. கூ: 5; "நாவாய்போற் றோன்றுமே.........களிறு" மூத்.

175. கூம்பின் கொடி: "ஆடுகொடி யுச்சியணி கூம்பின்" சீவக. 501.

180. பெரும்பாண். 337, அடிக்.

178-80. பெரும்பாண். 337-8, அடிக்.

187. "வடதிசை மாமலைச் சுடர்விடு பொன்னும்" பெருங். க. 58: 33.

188. "அந்தண் பொதியிற் சந்தன மரமும்" பெருங். க. 58: 30.

189. "தென்பவ் வத்து முத்துப்பூண்டு" (புறநா. ருஅ0: 1); "தென்கடன் முத்தும்" (சிலப். அ: 19); "வெண்டிரைத் தென்கடன் முத்தும்" தஞ்சை. 93.

மரியவும் பெரியவு நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகி
னீர்நாப் பண்ணு நிலத்தின் மேலு
195 மேமாப்ப வினிது துஞ்சிக்
கிளைகலித்துப் பகைபேணாது
வலைஞர்முன்றின் மீன்பிறழவும்
விலைஞர்குரம்பை மாவீண்டவுங்
கொலைகடிந்துங் களவுநீக்கியு
200 மமரர்ப் பேணியு மாவுதி யருத்தியு
நல்லானொடு பகடோம்பியு
நான்மறையோர் புகழ்பரப்பியும்
பண்ணிய மட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
205 கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவு மொப்ப நாடிக்
210 கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்துவீசு

192. பி - ம். 'நெளிய வீண்டி'

185 - 92. இவ்வடிகள், அரும்பொருளிவை யென்பதற்கு மேற்கோள்; சிலப். உ: 5, அடியார்.

200. ஓ. புறநா. கக: 1; ஞானா. 17.

202. "துளங்கெரியவர் புகழ்துளக்கினை" யா. வி. சூ. 86, மேற்.

206 - 7. "பால்கொள லின்றிப் பகல்போன் முறைகோடாக் கோல்செம்மை" (கலி. அசு: 17 - 8); "ஒத்துச், சகத்தனுய் நின்றொழுகுஞ் சால்பு தவமே, நுகத்துப் பகலாணி போன்று" (பழ. 95); "பகலன்ன வாய்மொழி - நுகத்திற் பகலாணி போன்ற நடுநிலைச் சொல்" (பு. வெ. 157); "நுகத்திற் பகலனையாய்" தஞ்சை. 48.

210. பி - ம். 'குறைபடாது'

206 - 10. இவை வணிகர் குலத்திற் குன்றாமைக்கு மேற்கோள்; சிலப். உ: 8, அடியார்.

210- 11. "வணிகர்க்கு உரிய விரதமாவன, கொள்வதூஉம் மிகை கொள்ளாது கொடுப்பதூஉங்குறை கொடாது பல்பண்டம் பகர்ந்

தொல்கொண்டித் துவன்றிருக்கைப்
பல்லாயமொடு பதிபழகி
வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற்
215 சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையு
முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
220 வாரேன் வாழிய நெஞ்சே கூருகிர்க்
கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர், பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி
யருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு
225 நுண்ணிதி னுணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்
துருகெழு தாய மூழி னெய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான் செற்றோர்

---

நிதல் முதலியன" (தொல். அகத்திணை. சூ. 28, ந.); "கொடுப்பது குறையின்றிக் கொள்வது மிகையின்றி..........வணிகர்கண் மற்றறியார்" விநாயக. நகர. 88.

209 - 12. "பிறவுந் தமபோற் செய்தலாவது, கொள்வது மிகையும் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்பநாடிச் செய்தல்" குறள். 120, பரிமேல்.

214. முதுவாய்: பட். 253; முருகு. 284; சிறுபாண். 40; பதிற். கூகூ: 3.

218. இவ்வடி வல்லிசை வண்ணத்திற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 217, பேர்.

220. "வாரே னெஞ்சம் வாய்க்கநின் வினையே" அகநா. கஙஉ: 15.

218 - 20. "இருங்கண் ஞாலத் தீண்டுபயப் பெருவளம், ஒருங்குட னியைவ தாயினும்.........கோலமை குறுந்தொடிக் குறுமகளொழிய, வாள்வினை மருங்கிற் பிரியார்" குறுந். உகள: 1 - 6.

223 - 4. "மாப்பயம்பின் பொறைபோற்றாது, நீடுகுழி யகப்பட்ட, பீடுடைய வெறுழ்முன்பிற், கோடுமுற்றிய கொல்களிறு, நிலை கலங்கக் குழிகொன்று, கிளைபுகலத் தலைக்கூடி யாங்கு" புறநா. கள: 14 - 9.

கடியரண் டொலைத்த கதவுகொன் மருப்பின்
230 முடியுடைக் கருந்தலை புரட்டு முன்று
ளுகிருடை யடிய வோங்கெழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்
பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத்
தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு
235 வேறுபல் பூளையொ டுழிஞை சூடிப்
பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச
மாக்க ணகலறை யதிர்வன முழங்க
முனைகெடச் சென்று முன்சம முருக்கித்
தலைதவச் சென்று தண்பணை யெடுப்பி
240 வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி
மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக்

---

229 - 30. "கொடிமதில் பாய்ந்திற்ற கோடு மரசர், முடியிடறித் தேய்ந்த நகமும்.........பொல்லாமை நாணிப் புறங்கடை நின்றதே, கல்லார்தோட் கிள்ளி களிறு" முத்.

229 - 31. கதவுகொன் மருப்பின்.........யானை: "கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து, நுதிமுக மழுகிய மண்ணைவெண் கோட்டுச், சிறுகண் யானை", "பெருங்கதவு பொருத யானை மருப்பின்" (அகநா. ௨௪ : 11 - 3, ௨௬ : 6); "எயிறுபடை யாக வெயிற்கத விடாஅ ......, பெருங்கை யானை" "களிறு, கதவெறியாச் சிவந்துராஅய், நுதிமழுங்கிய வெண்கோட்டான், உயிருண்ணுங் கூற்றுப் போன்றன", "களிறே, எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர், குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற், பரூஉப்பிணிய தொடிகழிந்தனவே" (புறநா. ௩ : 9-11, ௪ : 10 - 12, ௯௭ : 8 - 10); "அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாற்றல்சான் மன்னர், எயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டால்,.........தோன்றுமே, காய்சினவேற் கிள்ளி களிறு" (முத்.) "களிறுங் கதவிறப் பாய்ந்த" பு. வெ. 107.

230 - 31. சிறுபாண். 199 - 200.

236. முரசிற்குப் பேய்க்கண் உவமை : "பறைக்கட் பேய்மகள்" (சிலப். ௨௬ : 208); "பறையன்ன விழித்தகண்ணாள்" (தகடூர்.); "பறைபோல் விழிகட் பேய்", "பறைக்கட் செறுபல் கணப்பேய்" (திருஞா. தே.); "பறைக்காட்டும் குழிவிழிகட் பல்பேய்" (திருநா. தே.); "பறைக்கணெடும் பேய்க்கணம்" (சுந்தர. தே.); "பறைபோல் விழிகட்பேய்" காரைக். கோயின்மூத்த. 1.

கராஅங் கலித்த கண்ணகன் பொய்கைக்
கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச்
செறுவும் வாவியு மயங்கி நீரற்
245 றறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவுங்
கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி
யந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியிற்
250 பருநிலை நெடுந்தூ ணொல்கத் தீண்டிப்
பெருநல் யானையொடு பிடிபுணர்ந் துறையவு
மருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின்
முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த
திரிபுரி நரம்பின் றீந்தொடை யோர்க்கும்
255 பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்துச்
சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி
யழல்வா யோரி யஞ்சுவரக் கதிர்ப்பவு
மழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவுங்
கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
260 பிணந்தின் யாக்கைப் பேய்மக ளுவன்றவுங்
கொடுங்கான் மாடத்து நெடுங்கடைத் துவன்றி
விருந்துண் டானாப் பெருஞ்சோற் றட்டி

---

242. "கராஅங் கலித்த குண்டுகண் ணகழி" புறநா. ௱எ : 7.

245. முல்லை. 99, அடிக்.

246-7. மாலையில் மகளிர் விளக்கேற்றுதல் : மதுரை. 555-6-ஆம் அடியின் அடிக்குறிப்பைப் பார்க்க.

252. மலர் தூவுதல் : முல்லை. 8-10, அடிக்.

253. முதுவாய்க்கோடியர் முழவு : குறுந். எஅ : 2.

256. பி-ம். 'நெரிஞ்சியோடு' மணி. ௪௨ : 60.

258. "கூகையோ டாண்டலை பாட" காரைக். திருவாலங்காட்டு மூத்த. 3.

260. பிணந்தின் யாக்கைப் பேய்மகள் : "பேய்மகள்......... நிணந்தின் வாயள்" (முருகு. 51-6); "பேய்மகள், நிணனுண்டு சிரித்த தோற்றம்" சிறுபாண். 197-8.

259-60. "பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற், கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட" சிலப். ௨௬ : 209-10.

லொண்சுவர் நல்லி லுயர்திணை யிருந்து
(பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்த்)
265 தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக்
கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட
வுணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நன்பகற் குழறவு
மருங்கடி வரைப்பி னூர்கவி னழியப்
270 பெரும்பாழ் செய்து மமையான் மருங்கற
மலையகழ்க் குவனே கடறூர்க் குவனே
வான்வீழ்க் குவனே வளிமாற் றுவனெனத்
தான்முன்னிய துறைபோகலிற்
பல்லொளியர் பணிபொடுங்கத்
275 தொல்லருவாளர் தொழில்கேட்ப
வடவர் வாடக் குடவர் கூம்பத்
தென்னவன் றிறல்கெடச் சீறி மன்னர்
மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாண்
மாத்தானை மறமொய்ம்பிற்
280 செங்கண்ணாற் செயிர்த்துநோக்கிப்
புன்பொதுவர் வழிபொன்ற
விருங்கோவேண் மருங்குசாயக்
காடுகொன்று நாடாக்கிக்

---

265. தொடுதோலடியர்: பெரும்பாண். 169; மதுரை. 636.

268. "பகலுங் கூவுங் கூகையொடு", "கூகையொடு கூடிப், பகலுங் கூவு மகலு ளாங்கண்" (புறநா. ௩௬௩: 2, ௩௬௨: 17-8); "பேணு ரகநாட்டு, நன்பகலுங் கூகை நகும்" பு. வெ. 39.

270. மதுரை. 176.

269-70. மதுரை. 186-7, அடிக்.

271. "ஆறுங் கடறூர்த்தன் மலையகழ்த லிவைவல்லார்" சீவக. 2165.

271-3. உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்புரைத்தற்கு இவை மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 12, ந.

278. மதனுடை நோன்றாள்: முருகு. 4.

283. "சேய காடெறிந் தணிநகர் செய்தொழின் மாக்கள்" (திருவிளை. ௩: 26); "காடுகொன் றிருநகர்ப்படுப்ப" காஞ்சிப். நகரேற்று. 185.

குளந்தொட்டு வளம்பெருக்கிப்
285 பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ
வாயிலொடு புழையமைத்து
ஞாயிற்றொறும் புதைநிறீஇப்
பொருவேமெனப் பெயர்கொடுத்
290 தொருவேமெனப் புறக்கொடாது
திருநிலைஇய பெருமன்னெயில்
மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி
விசிபிணி முழவின் வேந்தர் சூடிய
பசுமணி பொருத பரேரெறுழ்க் கழற்காற்
295 பொற்றொடிப் புதல்வ ரோடி யாடவு
முற்றிழை மகளிர் முகிழ்முலை திளைப்பவுஞ்
செஞ்சாந்து சிதைந்த மார்பி னொண்பூ
ணரிமா வன்ன வணங்குடைத் துப்பிற்

---

284. "நிலனெளி மருங்கி னீர்நிலை பெருகத், தட்டோ ரம்ம விவட்டட் டோரே" (புறநா. கஅ : 28 - 9); "குளந்தொட்டு .........வளந்தொட்டு" சிறுபஞ்ச. 66.

283 - 4. "'காடு கொன்று நாடாக்கிக் குளந்தொட்டு' என்றாற் போல உழுவாரென்றது உழுவிப்பார் மேலும் செல்லும்" குறள். 1032, பரிமேல்.

285. பி - ம். 'பிறங்குநிலைவாயில்'

"பிறங்குநிலை மாடத் துறந்தை யோனே" புறநா. சுக : 12.

"உறையூரென்பதனைப் பிறங்கு நிலைமாடத் துறந்தை போக்கி யெனவும் மேலையார் திரித்த வகையானே இக்காலத்தும் திரித்துக் கொள்ளப் படுவனவுள" தொல். செய். சூ. 80, பேர். ந.

287. பட்டின. 144.

291. பட்டின. 41.

294. பரேரெறுழ் : பெரும்பாண். 60 ; நெடுநல். 31.

296 - 7. மகளிர் திளைக்கும் மார்பு : சிறுபாண். 232, அடிக்.

298. வீரருக்குச் சிங்கம் உவமை : பெரும்பாண். 449 ; "ஆளிய மொய்ம்பன்" (சீவக. 517) ; "அரிமா னன்ன, வெஞ்சின விடலை" (பெருங். ௩. 6 : 30 - 31) ; "சீயமும்.........போல்வார்" பு. வெ. 25.

உவமை உயர்ந்த பொருளாகல் வேண்டுமென்பதற்கும் வலி காரணமாக உவமம் பிறக்குமென்பதற்கும் இவ்வடி மேற்கோள் ; தொல். உவம. சூ. 3, 4, இளம். பேர் ; இ - வி. சூ. 639.

திருமா வளவன் றெவ்வர்க் கோக்கிய
300 வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே.

---

299. திருமாவளவன்: ப. ௧௨௭, 5-ஆம் அடிக்.

298 - 9. கரிகால்வளவனுக்குச் சிங்கம் உவமை: பொருந. 139-40.

300. "காடரில் வேந்தர் செலச்செற்ற மன்னன்கை வேலின் வெய்ய, வேடரில் வெஞ்சுரம்", "அங்கண் மலர்த்தா ரரிகே சரிதென்னர் கோனயில்போல், வெங்க ணெடுஞ்சுரம்" பாண்டிக்கோவை.

300 - 301. "தென்னன் பறந்தலைக் கோடிவென்ற, வேல்புரை வெம்மைய கான மெனினுமவ் வேந்தன்செய்ய, கோல்புரை தண்மைய வாநும்மொ டேகினங் கொம்பினுக்கே" (பாண்டிக்.); "மன்னெடு வேலிணய் மாழை மடநோக்கி, நின்னொடு செல்ல நெடுங்கானம் - கொன்னுனைய, வேலன்ன வெம்மைய வாயினும் வேந்தர்செங், கோலென்ன லாகுங் குளிர்ந்து" கிளவிமாலை.

சினைமுதற் பொருள்கள் உறழ்பொருளில் மயங்கி வந்ததற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். கிளவி. சூ. 16, சே.; இ - வி. சூ. 309, உரை.

218 - 301. "முட்டாச் சிறப்பிற்.........நெஞ்சேயென நின்றது, பின்னர் வேலினும் வெய்ய.........தோளே யெனச் சேய்த்தாகச்சென்று பொருள் கோடலின் அஃது அகன்று பொருள் கிடப்பினும் இயன்று பொருள் முடிய உரைப்பதாம்" (தொல். செய். சூ. 211, பேர்.); "முட்டாச் சிறப்பின்.........தோளே: அகன்றுகிடந்து மாட்டின்றி வந்தது" ஷை. ஷை. ஷை. 211, ந.

---

## இதன்பொருள்.

இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணையாகலின், இதற்குப் பட்டினப்பாலையென்று பெயர்கூறினர்.

பாலையாவது பிரிதலும் பிரிதனிமித்தமும் கூறுவது.

இப்பாட்டு, [1] வேற்றுநாட்டகல்வயின் விழுமத்துத் தலைவன் செலவழுங்கிக்கூறியது; இது, [2] முதலும் கருவுங்கூறாது உரிப்பொருளே சிறப்பக் கூறியது.

---

[1] தொல். கற்பு. சூ. 5.

[2] "முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே, நுவலுங் காலை முறைசிறந் தனவே, பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (தொல். அகத். சூ. 3) என்பதும், 'முதலிற் கருவும் கருவிலுரிப் பொருளும் சிறந்துவரும்' என்னும் அதனுரையும் இங்கே அறியற்பாலன.

1. வசை இல் புகழ் - குற்றங் கூறுதலில்லாத் புகழையுடைய காவிரி (6) என்க.

1-2. வயங்கு வெண்மீன் திசை திரிந்து தெற்கு ஏகினும் - விளங்குகின்ற 1 வெள்ளியாகியமீன் தான் நிற்றற்குரிய வடதிசையினில் லாமல் தென்றிசைக்கண்ணே போகினும்,

இதனாற் பெய்யும்பருவத்துப் பெய்யாமைக்குக் காரணங்கூறினர்.

3-5. [தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி, வான் பொய்ப்பினும் :] தளி உணவின் தன் பாடிய புள் தேம்ப புயல் மாறி வான் பொய்ப்பினும் - துளி உணவாகையினாலே தன்னைப்பாடிய வானம் பாடி புலரும்படி மழையைப் பெய்தலைத்தவிர்ந்து மேகம் பொய்த்து 2 வற்கடகாலமாயினும்,

5-6. தான் பொய்யா மலை தலைய கடல் காவிரி - தான் பொய்யா மற் காலந்தோறும் வருகின்ற குடகமலையிடத்தே தலையினையுடைய கடலிடத்தே செல்கின்ற காவிரி.

கடல் - 4 கணவன்,

7. புனல் பரந்து 5 பொன் கொழிக்கும் - நீர்பரந்து கரையிலே பொன்னைப்போகடும் சோழநாடு (28),

8. விளைவு அறா வியல் கழனி - விளைதற்றொழில் மாறாத அகற் சியையுடைய கழனியிடத்தில்,

9-12. கார் கரும்பின் கமழ் ஆலை தீ தெறுவின் கவின் வாடி 6 நீர் செறுவின் நீள் நெய்தல் பூ சாம்பும் புலத்து ஆங்கண் - பசிய கரும்பின் கமழும் பாகை அடுகின்ற கொட்டிலில் நெருப்பிற்புகை சுடுகையினாலே அழகுகெட்டு நீரையுடைத்தாகிய செய்யின்கணின்ற நீண்ட நெய்தற்பூ வாடும் நிலத்தையுடைய வயலிடத்துக் குறும்பல்லூர் (28),

13-5. 7 காய் செந்நெல் கதிர் அருந்து 8 மோடு எருமை முழு

---

1 "வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி" பதிற். உச : 24.

2 வற்கடம் - பஞ்சம்.

3 "கொண்டல்குமு றுங்குட கிழிந்துமத குந்தியகில் கொண்டு நுரை மண்டிவருநீர்" திருவரங்கக். 6.

4 கடலை நதிகளின் கணவனென்று கூறுதல் கவிமரபு; "பொரு நையாங் கன்னி முந்நீர்த், தன்மகிழ் கிழவ னாகந் தழீஇக்கொடு கலந்த தன்றே" திருவிளை. நாட்டுச்சிறப்பு, 10.

5 "பொன்னி பொன்கொழிக்கும், அலையார் திருவரங் கத்தெம் பிரான்" திருவரங்கக். 16. 6 "நீரார் செறுவி னெய்தல்" கலி. எ௬ : 1.

7 எருமை முதலியன நெல்லையருந்துதல்: "செழுஞ்செந் நெல் லின் சேயரிப் புனிற்றுக்கதிர், மூதா தின்ற லஞ்சி" அகநா. க௫௬ : 3-4.

8 மோடு என்பதற்கு இங்கு எழுதியவாறே "பிணர் மோட்டுரு

குழவி கூடு நிழல் துயில் வதியும் - காய்த்த செந்நெற்கதிரைத்தின்ற வயிற்றையுடைய 1 எருமையீன்ற முற்பட்ட கன்றுகள் 2 நெடுங்கூட்டினுடைய நிழலிலே உறக்கத்தைக் கொள்ளுங் குறும்பல்லூர் (28),

16. கோள் தெங்கின் - குலைகளையுடைய தெங்கினையும்,

குலை வாழை - குலைகளையுடைய வாழையினையும்,

17. காய் கமுகின் - காயையுடைய கமுகினையும்,

கமழ் மஞ்சள் - மணநாறும் மஞ்சளினையும்,

18. இனம் மாவின் - இனமான மாமரங்களினையும்,

இணர் பெண்ணை - குலைகளையுடைய பனையினையும்,

19. முதல் சேம்பின் - அடிபரந்த சேம்பினையும்,

முளை இஞ்சி - முளையினையுடைய இஞ்சியினையுமுடைய விளைவரு வியன் கழனி (8) என முன்னே கூட்டுக.

20-25. [அகனகர் வியன்முற்றத்துச், சுடர்நுதன் மடநோக்கி, 3 னேரிழை மகளி ருணங்குணாக் கவருங், கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை, பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு, முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும் :]

சுடர் நுதல் 4 மடம் நோக்கின் (21) நேர் இழை மகளிர் உணங்கு உணா கவரும் (22) கோழி எறிந்த கொடு கால் கனம் குழை (23) - ஒளியையுடைய நுதலினையும் மடப்பம் பொருந்தின நோக்கினையும் பொருந்தின பூணினையுமுடைய மகளிர் உலருகின்ற நெல்லைத்தின்னும் கோழியையெறிந்த வளைந்த இடத்தையுடைய பொன்னாற் செய்த மகரக்குழை,

பொன் கால் புதல்வர் புரவி இன்று உருட்டும் (24) முக்கால் சிறு தேர் முன் வழி விலக்கும் (25) அகல் நகர் வியன் முற்றத்து (20) - பூண

---

கெழு செலவின்" (முருகு. 50) என்பதற்கும், 'மோடு - வயிறுமாம்,' என்று எழுதினர்; "மோடி கழல் குடியே" (தக்க. 241) என்பதற்கு அதனுரையாசிரியர், 'எல்லாரையும் பெற்ற வயிற்றையுடையாளென்றுமாம்' என்ற உரையும் இங்கே கருதத்தக்கது.

1 "கழாஅ மயிரி யாக்கைச் செங்கட் காரான், சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற, குமரிக் கூட்டில்" சிலப். ௰ : 121-3.

2 "கூடு கெழீஇய குடிவயினன்" (பொருந. 182); "குமரி மூத்த கூடோங்கு நல்லில்" (பெரும்பாண். 247); "பரந்துயர் நெற்கூடுகள்" பெரிய. திருநா. 10.

3 நேர்தல் கொடைப்பொருளில் வருமென்பதற்கு இதனை மேற்கோள் காட்டினர்; பா - வி. சூ. 58.

4 மடம் - கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை; தொல். களவு. சூ. 8, ந.

ணிந்த தாளினையுடைய சிறூர் 1 குதிரை பூட்டாமற் 2 கையாலுருட்டும் மூன்றுருளையையுடைய சிறுதேரினது வழியின் முன்னை விலக்கும்செல்வ மகன்றமனையினது அகன்ற முற்றத்தையுடைய குறும்பல்லூர் (28) என்க.

26 - 7. [விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக், கொழும் பல்குடிச் செழும்பாக்கத்து :]

இஃது, இருஞ்செருவின் (72) விலங்குபகையல்லது கலங்குபகை யறியாப் பாக்கமென மேலேகூட்டிற்று.

28. குறு பல் ஊர் நெடு சோணாட்டு - ஒன்றற்கொன்று அண்ணி தாய்ப் பலவாகிய ஊர்களையுடைய பெரிய சோழநாட்டில்,

சோழன் நாடென்பது 3 சோணாடென மரூஉமுடிபு.

சோழநாட்டுப்பட்டின (218) மென்க.

29 - 30. 4 வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி நெல்லொடு வந்த வல்வாய் பஃறி - வெள்ளிதாகிய உப்பினது விலையைச்சொல்லி விற்ற நெல்லைக் கொண்டு வந்த வலிய இடத்தையுடைய படகை,

பஃறி - ஓடமுமாம்.

31 - 2. பணை நிலை புரவியின் அணை முதல் பிணிக்கும் கழி சூழ் படப்பை - 5 பந்தியிலே நிற்றலையுடைய 6 குதிரைகளைப்பிணிக்குமாறு போலே சார்ந்த தறிகளிலே பிணிக்கும் கழிசூழ்ந்த பக்கத்தினையும்,

அணைமுதல்-அணையிடத்துத் தறியுமாம். படப்பை-தோட்டமுமாம்.

32 - 3. கலி யாணர் பொழில் புறவின் பூ தண்டலை - மனச் செருக்கு எழுதற்குக் காரணமான புதுவருவாயினையுடைய தோப்புக் களுக்குப் புறம்பாகிய பூஞ்சோலைகளையும்,

34 - 8. [மழைநீங்கிய மாவிசும்பின், மதிசேர்ந்த மகவெண்மீ, னுருகெழுதிற லுயர்கோட்டத்து, முருகமர்பூ முரண்கிடக்கை, வரியணி சுடர் வான்பொய்கை :]

---

1 குதிரை பூட்டப்பட்ட சிறுதேருமுண்டென்பது, "தச்சன் செய்த சிறுமா வையம்" (குறுந். ௬௧ : 1) என்பதனாலறியப்படும்.

2 "கால்வழேர் கையினியக்கி" கலி. அக : 8.

3 "சோழனாடு சோணாடென அன்கெட்டு முடிந்தது" தொல். குற்றியலுகரப். சூ. 79, ந.

4 உப்பை நெல்லுக்கு விற்றல்: "உப்புநொடை நெல்லின்", "நெல்லு முப்பு நேரே யூரீர், கொள்ளீ ரோவெனச் சேரிதொறு நுவலும்" அகநா. ௬0 : 4, ௩௯0 : 8-9.

5 பந்தி - குதிரைச்சாலை.

6 குதிரை படகிற்கு உவமை: "செறிதரு செருவிடை யெறிதொழி லிளையவர், நெறிதரு புரவியின் மறிதருந்திமில்" யா - வி. சூ. 86, மேற். "மணிகிளர் நெடுமுடி"

மழை நீங்கிய மா விசும்பில் (34) மதிசேர்ந்த மகம் வெள் மீன் (35) உருகெழு திறல் உயர் கோட்டத்து (36) வான் பொய்கை (38) - மழை மாசுநீங்கின பெரிய ஆகாயத்திடத்து மதியைச்சேர்ந்த 1 மகமாகிய வெள்ளியமீனினது வடிவு பொருந்தின வலியை யுடைய உயர்ந்த கரையையுடைய நன்றாகிய பொய்கைகளையும்,

2 மதியும் மீனும் பொய்கைக்கும் கரைக்கும் உவமிக்கும் பொருள்.

இனி உயர்கோட்டத்தை, எல்லாரும் மதியைச்சேர்ந்த மகவெண் மீனைப் பார்க்கைக்கு இடமாகிய கோயிலாக்கிக் 3 கோயிலும் பொய்கையுமென எண்ணுதலுமாம். இனிப் பொய்கைக்கரையிலே கோயிலாக்கிக் கோயிலும் பொய்கையும் மதிசேர்ந்த மகவெண்மீன் போன்றவென்றுமாம்.

முருகு அமர் 4 பூ முரண் கிடக்கை (37) வரி அணி சுடர் பொய்கை (38) - மணம்பொருந்தின பூக்கள் நிறத்தால் தம்முள் மாறுபட்ட பரப்பாலே பல நிறமணிந்த ஒளியினையுடைய பொய்கை,

39. இரு காமத்து இணை ஏரி - இம்மையிலும் மறுமையிலுமுண்டாகிய காமவின்பத்தினைக் கொடுத்தற்குரிய இணைந்த ஏரிகளையும்,

அது, 5 "சோமகுண்டஞ் சூரிய குண்டந் துறைமூழ்கிக், காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடுந், தாமின் புறுவ ருலகத்துத் தையலார், போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர்" என்றதனானுமுணர்க.

(?) இனி 6 வளகாமரேரி வணிகாமரேரி யென்றும், சங்கிராம காமம் வணிக்கிராம காமமென்று முரைப்ப.

40 - 41. 7 புலி பொறி போர் கதவின் திரு துஞ்சும் திண் காப்

---

1 மகநாள் முடமுகம் போல்வதாகலின், கரைக்கு உவமையாயிற்று.

2 "ஏரி வளாவிக் கிடந்தது போலு மிளம்பிறையே" (திருநா. தே.); "தேய்பிறை யுருவக் கேணி" சீவக. 2998.

3 "நிக்கந்தக் கோட்ட நிலாக்கோட்டம் புக்கு" (சிலப். கூ : 13) என்பதனாலும் காவிரிப்பூம்பட்டினத்தில் மதிக்குக் கோயிலுண்மை அறியலாகும்.

4 "முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கை" (பெரும்பாண். 294) என்பதற்கும் இவ்வாறே உரையெழுதினர். 5 சிலப். கூ : 59 - 62.

6 பி - ம். 'இனிக் கவளகாமரேரி இனி வணிகாமரேரி'

7 அரசர் கதவுகளில் தம் அடையாளத்தைப் பொறித்தல்: "ஏழெயிற் கதவ மெறிந்துகைக் கொண்டுநின், பேழ்வா யுழுவை பொறிக்கு மாற்றலை", "விடர்ப்புலி பொறித்த கோட்டை" (புறநா. ருரு : 8 - 9, கஎச : 17); "போற்றி மன்னநம் பொன்னங் கயற்குறி, மாற்றி யுத்தர வாயிற் கதவதில், ஏற்றி லச்சினை யிட்டனர் யாரையென், றூற்றல் வேந்த வறிகிலம் யாமென்றார்" திருவிளை. ருச : 22.

பின் - 1 புலியாகிய அடையாளத்தினையும் பலகைகள் தம்மிற் சேருதலை யுடைய கதவினையுமுடைய திருமகள் தங்கும் திண்ணிய மதிலினையும்,

42 - 50. [புகழ்நிலைஇய மொழிவளர, வறநிலைஇய வகனட்டிற், சோறுவாக்கிய கொழுங்கஞ்சி, யாறுபோலப் பரந்தொழுகி, யேறு பொரச் சேறாகித், தேரோடத் துகள்கெழுமி, நீறாடிய களிறுபோல, வேறுபட்ட வினையோவத்து, வெண்கோயின் மாசூட்டும் :]

சோறு வாக்கிய கொழு கஞ்சி (44) யாறு போல பரந்து ஒழுகி (45)- சோற்றை வடித்தொழுக்கிய கொழுவிய கஞ்சி யாறுகள்போலே எங்கும் பரந்தொழுகி,

ஏறு பொர சேறு ஆகி (46) - இடபங்கள் தம்மிற்பொருகையினாலே பின்பு சேறாய்,

தேர் ஓட துகள் கெழுமி (47) - பல தேர்களும் ஓடுகையினாலே தூளியாய்ப் பொருந்தி,

வேறு பட்ட வினை ஓவத்து (49) வெள் கோயில் (50) - வேறுபட்ட தொழில்களை யுடைய 2 சித்திரங்களையுடைய வெள்ளிய கோயில்களை,

நீறு ஆடிய களிறு போல (48) மாசு ஊட்டும் (50) - புழுதியை மேலே பூசிக்கொண்ட யானையைப்போல அழுக்கேறப்பண்ணும்,

கஞ்சி ஒழுகிச் சேறாகிக் கெழுமிக் கோயிலை மாசூட்டுதற்குக்காரண மாகிய அட்டிலெனக்கூட்டுக.

புகழ் நிலைஇய மொழி வளர (42) அறம் நிலைஇய அகல் அட்டில் (43) - இம்மைக்குப் புகழ் நிலைபெற்றசொல் எங்கும் பரவாநிற்க மறு மைக்கு அறம் நிலைபெற்ற அகன்ற அட்டில்,

இருமையினும்பெறும் பயனுண்டாகச் சோறிடும் சாலையென்றவாறு.

51 - 2. தண் கேணி தகை முற்றத்து பகடு எருத்தின் பல சாலை-குளிர்ந்த சிறிய குளங்களை உள்ளேயடக்கின முற்றத்தினையுடைய பெரிய எருத்திற்கு வைக்கோலிடும் பலசாலையினையும்,

53. தவம் பள்ளி - 3 தவஞ்செய்யும் அமண்பள்ளி பௌத்தப் பள்ளிகளையும்,

53 - 8. [தாழ்காவி, னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு, மாவுதி நறும்புகை முனைஇக் குயிறம், மாயிரும் பெடையோ டிரியல் போகிப், பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த், தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கும் :]

---

1 புலி யடையாளம் : "கொடுவரி யொற்றிக்கொள்கையிற் பெயர் வோற்கு" (சிலப். ௫ : 98); "நேரியன்பதா கையிற் புலி" தக்க. 156.

2 "மாடக்குச் சித்திரமும்" நன். பொதுப். 55.

3 காவிரிப்பூம்பட்டினத்தே இவ்விருவகைப் பள்ளிகளும் முற் காலத்திருந்தமை, மணிமேகலை, ௫ - ஆங்காதையாலுமுணரப்படும்.

1 அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும் (54) 2 ஆவுதி நறு புகை முனைஇ குயில் தம் (55) மா இரு பெடையோடு இரியல் போகி (56) - விளங்குகின்றசடையினையுடைய இருடிகள் தீயின்கண்ணே வேட்டலைச் செய்யும் 3 நெய்முதலியவற்றின் நறிய புகையை வெறுத்துக் குயில்கள் தம்முடைய கருமையையும் பெருமையையுமுடைய பேடைகளுடனே கெடுதலையுடையவாய் நீங்கிப்போய்,

பூதம் காக்கும் புகல் அரு கடி நகர் (57) தூது உண் அம் புறவொடு 4 துச்சில் சேக்கும் (58) தாழ் காவின் (53) - பூதங்கள் வாசலிலே காத்திருக்கும் புகற்கரிய அச்சத்தையுடைய காளிகோட்டத்திடத்திற் 5 கல்லைத் தின்னும் அழகிய புறவுகளுடனே குடியிருப்பாகத்தங்கும் இளமரக் காவினையும்,

முனிவரைத் தன்னிடத்தே கொண்டிருத்தலிற்காக்காரணமாயிற்று.

59 - 77. [முதுமரத்த முரண்களரி, வரிமணலகன்றிட்டை, யிருங்கிளை யினனொக்கற், கருந்தொழிற் கலிமாக்கள், கடலிறவின் சூடு தின்றும், வயலாமைப் புழுக்குண்டும், வறளடும்பின் மலர்மலைந்தும், புனலாம்பற் பூச்சூடியு, நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு, நாண்மீன் விராய கோண்மீன் போல, மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக், கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப், பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅ, திருஞ்செருவி னிகன்மொய்ம்பினோர், கல்லெறியுங் கவண்வெரீஇப், புள்ளிரியும் புகர்ப்போந்தைப், பறழ்ப்பன்றிப் பல்கோழி, யுறைக்கிணற் றுப் புறச்சேரி, மேழகத் தகரொடு சிவல்விளை யாட :]

---

1 "அவிர்சடை முனிவரு மருள" புறநா. ௪௩ : 4.

2 "புக்காவுதிகள் பலவேற்றும்", "வேள்வியாவுதி யுண்ணவோ" தக்க. 46, 252. 3 "நீர்நாண நெய்வழங்கியும்" புறநா. ௧௬௬ : 21.

4 "புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட் டுச்சி லிருந்த வுயிர்க்கு" (குறள், 340) ; "துச்சி லிருந்து துயர்கூரா மாண்பினிதே" இனியது நாற்பது, 39.

5 "ஆதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்" (கலி. ௫௬ : 16) ; "பொறிவரிப் புறவின் செங்காற் சேவல், சிறுபுன் பெடையொடு சேட்புலம் போகி, யரிமண லியவிற் பரறேர்ந் துண்டு" (அகநா. ௨௭௧ : 1 - 3) ; "கல்லுண்டு கடிய வெம்புங் கானுறை புறவ மெல்லாம்" (சீவக. 1430); "நுண்பொறிப் புறவின் செங்காற் சேவல், வெண்சிறைப் பெடையொடு விளையாட்டு விரும்பி, வன்பர லார்ந்த வயிற்ற வாகி" (பெருங். ௧. 52 : 46 - 8) ; "ஆதுணம் பறவைக ளேதுண் டோவறக், காதலந் துணையொடு கழுமிப் புல்லுவ", "கல்லிரைதேரினும் வீழ் துணை நீங்கினுங் கபோதகநோ, யல்லிரை யோத மனையது" தணிகைப். நாட்டு. 52, களவுப். 609.

புள் போந்தை புள் (74) வெரீஇ (73) இரியும் (74) கல் எறியுப் கவண் (73) - நிறத்தையுடைய 1 பனையிலிருக்கும் பறவைகள் அஞ்சிக் கெட்டுப்போதற்குக் காரணமான கல்லையெறியும் கவணையுடைய கலிமாக்கள் (62) என முன்னே கூட்டுக.

இனன் ஒக்கல் (61) கரு தொழில் கலி மாக்கள் (62) - ஓரினச் சுற்றத்தினையும் வலிய தொழிலையுமுடைய செருக்கின 2 பரதவர்பிள்ளைகள்

கடல் 3 இறவு இன்சூடு தின்றும் - (63) கடலிறுக்கனின் இனிய சுடப்பட்டதனைத் தின்றும்,

வயல் ஆமை புழுக்கு உண்டும் (64) - வயலில் ஆமையைப் புழுக்கின இறைச்சியைத் தின்றும்,

வறள் 4 அடும்பின் மலர் மலைந்தும் (64) - மணலிலே படர்ந்த அடப்பம் பூவைத் தலையிலே கட்டியும்,

புனல் ஆம்பல் பூ சூடியும் (66) - நீரினின்ற ஆம்பற்பூவைப் பறித்துச் சூடியும்,

நீல் நிறம் விசும்பின் வலன் ஏர்பு திரிதரு (67) நாள் மீன் விராய கோள் மீன் போல (68) - நீல நிறத்தையுடைய ஆகாயத்தே வலமாக எழுந்து திரியும் 5 நாள்களாகிய மீன்களோடே கலந்த கோள்களாகிய மீன்கள்போல,

மலர் தலை மன்றத்து (69) மேழகம் தகரொடு சிவல் விளையாட (77) பலர் உடன் குழீஇ (69) - அகன்ற இடத்தையுடைய மன்றிலே 6 மேழகக்கிடாயோடே சிவலையுங்கொண்டு பொருவித்து விளையாடும்படி பலரும் சேரத்திரண்டு,

---

1 பனையிலிருக்கும் பறவைகள் அன்றில் தூக்கணங்குருவி முதலியன; "முழவுமுதலரைய தடவுநிலைப் பெண்ணைக், கொழுமடல் விழைத்த சிறுகோற் குடம்பைக், கருங்கா லன்றில்" (குறுந். ௱௨௪ : 1-3); "வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே, யவையினும் பலவே சிறுகருங் காக்கை, யவையினு மவையினும் பலவே குவிமட, லோங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த, தூங்கணங் குரீஇக் கூட்டுள சினையே" தொல். களவு. சூ. 20, ந. மேற்.

2 பரதவர் - நெய்தனிலமாக்களுள் ஒருவகையார்.

3 இறவு - ஒருவகைமீன்; இறுலெனவும் வழங்கும்.

4 அடும்பு அடம்பெனவும் வழங்கும்.

5 நாள்களாகிய மீன்கள் - இருபத்தேழு நக்ஷத்திரங்கள்; கோள்களாகிய மீன்கள் - நவக்கிரகங்கள் முதலியவை.

6 மேழகக்கிடாய் - ஆட்டுக்கிடாய்; சிவல் - ஒருவகைப் பறவை; இவற்றின் போர்வென்றி, தகர்வென்றி யெனவும் சிவல்வென்றி யெனவும் முறையே கூறப்படும்; பு. வே. 349, 352-ஆம் பாடல்களைப்பார்க்க.

மாக்கள் தின்றும் உண்டும் மலைந்தும் சூடியும் விளையாடும்படி மீன் போற் குழீஇ யென்க.

இகல் மொய்ம்பினோர் (72) பெரு சினத்தால் (71) வரி மணல் அகல் திட்டை (60) இரு கிளை (61) முது மரத்த முரண் களரி (59) புறக்கொடாது (71) கையினும் கலத்தினும் மெய் உற தீண்டி (70) இரு செருவின் (72) விலங்கு பகை அல்லது (26) கொழு பல் குடி (27) கலங்கு பகை அறியா (26) செழுபாக்கத்து (27) - அங்ஙனம் பொருவித்தலிற் றோன்றும் மாறுபாடுசெய்யும் வலியினையுடையராய் ஆண்டுப் பிறந்த பெரிய சினத்தாலே அறலினையுடைத்தாகிய மணலினையுடைய அகன்ற மேட்டில் பெரிய கிளைத்தலையுடைய பழையமரத்தையுடையவாகிய பொருதற்குச் சமைந்த போர்க்களத்தேசென்று முதுகு கொடாமற் கையாற்குத்தியும் படைக்கலங்களாலே வெட்டியும் ஒருவர் மெய்யோடு ஒருவர்மெய் உறும்படி கலந்துபொரும் பெரிய போரை [1] விலங்குகின்ற பகையல்லது செருக்கினையுடைய பலகுடி கலங்கி எழுந்திருத்தற்குக் காரணமான பகையை அறியாத பாக்கங்களையும்,

பாக்கம் - கடற்கரையிலூர்கள்.

பறழ் பன்றி பல் கோழி (75) உறை கிணறு புறம் சேரி (76)-குட்டிகளையுடைய பன்றிகளையும் பலசாதியாகிய கோழிகளையும் [3] உறைவைத்த கிணறுகளையுமுடைய இழிகுலத்தோரிருக்குந் தெருவுகளையும்,

78 - 9. [கிடுகுநிரைத் தெஃகூன்றி, நடுகல்லி னரண்போல :] நடுகல்லின் அரண்போல கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி - [4] நடுகல்லினிற்கின்ற தெய்வமாயவனும் அவனுக்குவைத்த [5] கிடுகும் வேலும்போலக் கிடுகை நிரைத்து வேலையூன்றிப் புறக்கொடாது (71) என முன்னே கூட்டுக.

அரண் : ஆகுபெயர்.

---

1 "விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்" புறநா. உ௩0 : 4.

2 "முனைதரு பூசல் கனவினு மறியாது" (புறநா. ௪உ : 9) என்பதும், "பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய" (சிலப். க : 15) என்பதும், 'பதி யெழுவறியா - பதியினின்றும் பெயர்தலையறியாத; எனவே பகையின்மை கூறிற்று' என்னும் அதன் விசேடவுரையும் இங்கே ஒப்பு நோக்கற்பாலன.

3 உறையைக் குடலையென்பர் ; தக்க. 127, உரை.

4 "கைவண் குரிசில்கற் கைதொழூஉச் செல்பாண, தெய்வமாய் நின்றான் றிசைக்கு" பு. வெ. 252.

5 வேலும் கிடுகும் சேர்த்துக் கூறப்படுதல் : "நெய்கனி நெடுவேலெஃகி னிமைக்கு, மழைமருள் பஃறோல்", "மணியணி பலகை மாக்காழ் நெடுவேல்" அகநா. கஉ௫ : 9 - 10, ௩௬௯ : 18.

80 - 93. [நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய, குறுங்கூரைக் குடி நாப்ப, ணிலவடைந்த விருள்போல, வலையுணங்கு மணன்முன்றில், வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த, வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர், சினைச்சுறவின் கோடுநட்டு, மனைச்சேர்த்திய வல்லணங்கினான், மடற் றாழை மலர்மலைந்தும், பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும், புன்றலை யிரும்பரதவர், பைந்தழைமா மகளிரொடு, பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா, துவவுமடிந் துண்டாடியும் :]

1 புன்றலை இரு பரதவர் (90) - சிவந்த தலையினையுடைய பெரியபரதவர்,

உவவு (93) - உவாநாளாகையினாலே,

பாய் இரு பனி கடல் வேட்டம் செல்லாது (92) மடிந்து (93) - பரந்தகருமையையுடைய குளிர்ந்த கடலில் மீன்பிடித்தற்குப் போகாது மனவெழுச்சி தவிர்ந்து,

பைந்தழை மா மகளிரொடு (91) - பசிய 2 தழையினையுடைய கரிய நிறத்தினையுடைய தம்மகளிரோடே கூடி,

நெடு தூண்டிலில் காழ் சேர்த்திய (80) குறு கூரை குடி நாப்பண் (81) - நெடியதூண்டிலிற் காம்புகள் சார்த்திவைத்த குறிய இறப்பினையுடைய குடியிருப்பு நடுவில்,

நிலவு அடைந்த இருள் போல (82) வலை உணங்கு மணல் முன்றில் (83) மனை (87) - நிலவு நடுவேசேர்ந்த இருளைப்போலே வலைகிடந்து உலரும் மணலையுடைத்தாகிய முன்றிலினையுடைய மனையிடத்தே,

சினை சுறவின் கோடு நட்டு (86) சேர்த்திய வல் அணங்கினால் (87)-சினையையுடைய சுறவின் கொம்பைநட்டு அதனிடத்தே ஏற்றிய வலிய தெய்வங் காரணமாக,

வீழ் தாழை தாள் தாழ்ந்த (84) வெண் கூதாளத்து தண் பூ கோதையர் (85) - 3விழுதையுடைய தாழையின் அடியிடத்தேநின்ற வெண்டாளியினது தண்ணிய பூவாற் செய்த மாலையினையுடையராய்,

மடல் தாழை மலர் மலைந்தும் (88) - மடலையுடைய தாழையினது மலரைச் சூடியும்,

பிணர் பெண்ணை பிழி மாந்தியும் (89) - சருச்சரையையுடைய பனையிற் கள்ளையுண்டும்,

1 "புட்கை போகிய புன்றலை மகாரோடு" (மலைபடு. 253) என்றவிடத்தும் புன்றலை யென்பதற்குச் சிவந்ததலை யென்று உரையெழுதுவர்.

2 தழை - தளிர்கள், தழைகள், மலர்கள் இவற்றாலாகிய உடைவிசேடம்; புறநா. ௧௧௬, ௨௪௮ - ஆம்பாடல்களைப் பார்க்க.

3 இதனால் தென்னை விழுதில்தாழையென்று வழங்கப்படும்; "வீழ்இ றாழைக் குழவித் தீநீர்" பெரும்பாண். 57.

உண்டு ஆடியும் (93) - 1 நெற்கள்ளையுண்டு விளையாடியும்,

94. புலவு மணல் பூ கானல் - புலானுற்றத்தையுடைய மண லிடத்தே பூக்களையுடைய கடற்கரையிற் குடி (81) என்க.

95. [2] மா மலை அணைந்த கொண்மூ போலவும் - கரியமலையைச் சேர்ந்த செக்கர்மேகம் போலவும்,

இது, கரிய உயர்ந்த திரையின்மீதே சிவந்த யாற்றுநீர் பரந்ததற்கு உவமை.

96. தாய் முலை தழுவிய குழவி போலவும் - தாயுடைய முலை யைத் தழுவிய பிள்ளையைப் போலவும்,

இஃது ஒன்றுபடுதற்கு உவமை.

97. தேறு நீர் புணரியொடு யாறு தலைமணக்கும் - தெளிந்த கட லிற்றிரையோடே காவிரி தலைகலக்கும்,

98. [மலியோதத் தொலிகூடல்:] ஓதத்து ஒலி மலி கூடல் - ஓதத்தினால் ஒலிமலிந்த புகார்முகத்தே,

99. தீது நீங்க கடல் ஆடியும் - தீவினைபோகக் கடலாடியும்,

100. மாசு போக புனல் படிந்தும் - உப்புப்போக நீரிலே குளித் தும்,

101. [3] அலவன் ஆட்டியும் - ஞெண்டுகளை ஆட்டியும்,

[4] உரவு திரை உழக்கியும் - பரக்கின்ற திரையிலே விளையாடியும்,

102. பாவை சூழ்ந்தும் - [5] பாவைகளைப்பண்ணியும்,

---

1 இந்தக்கள் தோப்பி யென்று கூறப்படும்; "இல்லடு கள்ளின் றோப்பி பருகி - இல்லிலே சமைத்த கள்ளுக்களில் இனிதாகிய நெல் லாற் செய்த கள்ளையுண்டு" (பெரும்பாண். 142, ந.); "தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்" (அகநா. ௩௫ : 9) என்பதனுரை யில், 'தோப்பிக்கள் - நெல்லாற் செய்யுங்கள்' என்று எழுதியிருப்பதும் இங்கே அறியற்பாலது.

2 மலை திரைகளுக்கு உவமை: "மைவரை போற்றிரை யோடு கூடி", "குன்றுபோற் றிரைகள்" (தே. திருஞா.); "மலைக்கு நிக ரொப்பன வன்றிரைகள்", "தடமால் வரைபோற் றிரைகள்" தே. சுந்தா.

3 அலவனாட்டல்: "பொன்வரி யலவ னாட்டிய ஞான்றே", "ஓரை மகளி ரோராங் காட்ட, வாய்ந்த வலவன்" (குறுந். ௩௰௩ : 7, ௩௧௬ : 5 - 6); "கோதைய, டிணிமண லடைகரை யலவ னாட்டி" அகநா. உ௬௰ : 2 - 3.

4 "திரையுழந் தசைஇய நிரைவளை யாயமொடு" அகநா. ௧௰௰ : 1.

5 "பனைத்தோட் குறுமகள் பாவை தைஇயும், பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்தும்" (குறுந். உ௭௬ : 1 - 2); "பைஞ்சாய்ப் பாவை யீன்றனன்

பல் பொறி மருண்டும் - ஐம்பொறிகளால் நுகரும்பொருள்களை நுகர்ந்து மயங்கியும்,

103. அகலா காதலொடு பகல் விளையாடி-நீங்காத விருப்பத்துடனே பகற்பொழுதெல்லாம் விளையாடி,

பரதவர் (90) உவவுமடிந்து (93) மகளிரோடேகூடிக் (91) குடிநாப்பண் (81) மனையிடத்தே சேர்த்திய அணங்கினைற் (87) கோதையராய் (85) மலைந்தும் (88) மாந்தியும் (89) ஆடியும் (93) பின்னர்க் கடலிலே (98) தீதுநீங்க ஆடியும் (99) படிந்தும் (100) ஆட்டியும் உழக்கியும் (101) சூழ்ந்தும் மருண்டும் (102) காதலொடு பகல்விளையாடி (103) எனமுடிக்க.

104 - 17. [பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும், பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைத், துணைப்புணர்ந்த மடமங்கையர், பட்டு நீக்கித் துகிலுடுத்து, மட்டுநீக்கி மதுமகிழ்ந்து, மைந்தர் கண்ணி மகளிர் சூடவு, மகளிர் கோதை மைந்தர் மலையவு, நெடுங்கான் மாடத் தொள்ளெரி நோக்கிக், கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுட ரெண்ணவும், பாடலோர்த்து நாடக நயந்தும், வெண்ணிலவின் பயன்றுய்த்துங், கண்ணடைஇய கடைக்கங்குலான், மாஅகாவிரி மணங்கூட்டுந், தூஉவெக்கர்த் துயின்மடிந்து :]

பெறற்கு அரு தொல் சீர் துறக்கம் எய்க்கும் (104) நெடு கால் மாடத்து (111) - பெறுதற்கரிய பழைய தலைமையினையுடைய சுவர்க்கத்தையொக்கும் நெடிய கால்களையுடைய மாடத்திடத்தேயிருந்து,

[1] பாடல் ஓர்த்து நாடகம் நயந்தும் (113) வெள் [2] நிலவின் பயன் துய்த்தும் (114) - பாட்டைக்கேட்டு நாடகங்களை விரும்பிக்கண்டும் வெள்ளிய நிலவிற் பெறும்பயனை நுகர்ந்தும்,

மட்டு நீக்கி மது மகிழ்ந்தும் (108) - கள்ளுண்டலைக் கைவிட்டுக் [3] காமபானத்தை உண்டு மகிழ்ந்தும்,

பட்டு நீக்கி துகில் உடுத்தும் (107) - பட்டுடுத்தவற்றை நீக்கிப் புணர்ச்சிக்காலத்துக்கு நொய்யவாகிய வெள்ளியவற்றையுடுத்தும்,

---

யானே" (ஐங். கடுடு : 5); "பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ" (கலி. எசு : 6); "சாய்தாட் பிள்ளை தந்து கொடுத்தும்" கல்லாடம்.

[1] "கிளைநரம் பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காம, விளைபய னினிதிற் றுய்த்து" (சீவக. 2598) என்றவிடத்து இங்கே கூறப்பட்ட மூவகைச் செயல்களும் ஒருங்கே கூறப்பட்டமை கருதற்குரியது.

[2] நெடுநல். 95, அடிக்.

[3] சஙுo - ஆம் பக்கம் முதலடிக்குறிப்பைப் பார்க்க.

துணை புணர்ந்த மடம் மங்கையர் (106) கண் அடைஇய கடை கங்குலான் (115) - கணவரைக்கூடின மடப்பத்தையுடைய மகளிர் பின்பு கண்துயின்ற பிற்பட்ட சாமத்தையுடைய இராக்காலத்தே,

மாடத்தேயிருந்து (111) நயந்தும் (113) துய்த்தும் (114) மகிழ்ந்தும் (108) உடுத்தும் (107) துணைப்புணர்ந்த மடமங்கையர் (106) கண் துயின்ற கங்குல் (115) என்று கங்குற்கு அடைகூறினர்.

மைந்தர் கண்ணி மகளிர் சூடவும் (109) மகளிர் கோதை மைந்தர் மலையவும் (110) - மாடத்தேயிருந்து நுகர்ந்து [1] அனந்தர்மிக்கமையாற் கணவர்சூடிய கண்ணியைத் தமது கோதையாக நினைத்து மகளிர் சூடிக் கொள்ளும்படியாகவும் மகளிர் சூடிய கோதையைத் தமது கண்ணியாக நினைத்து மைந்தர் சூடிக்கொள்ளும்படியாகவும் கண்டுயின்ற கங்குலென இதுவும் கங்குற்கு அடைகூறினர்.

[2] நெடுங்கால் மாடத்து (111) குரூஉ சுடர் (112) ஒள் எரி நோக்கி (111) கொடு திமில் பரதவர் எண்ணவும் (112) கண் அடைஇய கடை கங்குல் (115) - அம்மாடத்திட்ட நிறவிய விளக்குக்களில் விடியற் காலத்து அவியாமல் ஒள்ளியவாய் எரிகின்ற அவையிற்றைப் பார்த்து இராக்காலத்தே வளைந்த திமிலைக்கொண்டு கடலிலே போன பரதவ ரெண்ணும்படியாகவும் கண்டுயின்ற கடைக்கங்குலென்றும் கங்குற்கு அடைகூறினர்.

விளக்குகளிலே எண்ணெயை வார்த்துத் தூண்டுவாரின்றி எல்லாரும் துயில்கோடலிற் சில எரிந்தவற்றை எண்ணினர்.

[3] பொய்யா மரபின் (105) மா காவிரி (116) பூ மலி பெரு துறை (105) மணம் கூட்டும் (116) தூ எக்கர் துயில் மடிந்து (117) - பொய்யாமல் நீர்வரும் முறைமையினையுடைய பெரிய காவிரி பூ மிக்க பெரிய துறைகளிற் பூமணங்களைக் கொண்டுவந்து திரட்டும் தூய இடுமணலிலே துயில்கொண்டுகிடந்து,

பரதவர் (90) பகல்விளையாடி (103) மாடத்திலிருப்பாரெல்லாரும் கண் அடைஇய கடைக்கங்குலிலே (115) தூவெக்கர்த் துயின்மடிந்து (117) மற்றைநாள் மகளிரொடு செறிய (155) எடுத்த விழவுறு வியலாவணம் (158) எனக் கூட்டுக.

---

[1] அனந்தர் - கள்ளின் மயக்கம்; "அனந்தர் நடுக்கம் - கள்ளின் செருக்கினாலுண்டான மெய்ந்நடுக்கம்" பொரு௩. 94, ௩.

[2] "உலகுகிளர்ந் தன்ன வுருகெழு வங்கம்........நீகான், மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய" அகநா. உ௫௫ : 1 - 6.

[3] "வான்பொய்ப்பினுந் தான்பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி" பட். 5 - 6.

118 - 41. [வாலிணர் மடற்றாழை, வேலாழி வியன்றெருவி, னல்லிறைவன் பொருள்காக்குந், தொல்லிசைத் தொழின்மாக்கள், காய்சினத்த கதிர்ச்செல்வன், றேர்பூண்ட மாஅபோல, வைகறொறு மசைவின்றி, யுல்குசெயக் குறைபடாது, வான்முகந்தநீர் மலைப்பொழியவு, மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவு, மாரி பெய்யும் பருவம் போல, நீரினின்று நிலத்தேற்றவு, நிலத்தினின்று நீர்ப்பரப்பவு, மளந்தறியாப் பல பண்டம், வரம்பறியாமை வந்தீண்டி, யருங்கடிப் பெருங்காப்பின், வலியுடை வல்லணங்கினோன், புலிபொறித்துப் புறம்போக்கி, மதிநிறைந்த மலிபண்டம், பொதிமூடைப் போரேறி, மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன், வரையாடு வருடைத் தோற்றம் போலக், கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை, யேழகத் தகரோ டுகளு முன்றில் :]

வான் முகந்த நீர் மலை பொழியவும் (126) மலை பொழிந்த நீர் கடல் பரப்பவும் (127) மாரி பெய்யும் பருவம் போல (128) - மேகம் தான் முகந்தநீரை மலையிடத்தே சொரிதற்காகவும் மலையிற் சொரிந்த நீரை மீண்டு கடலிலே பரப்புதற்காகவும் மாரிக்காலத்தே பெய்கின்ற செவ்விபோல,

வான் எழுவாயாய்ப் பெய்யுமென்னும் பயனிலைகொண்டது.

வால் இணர் மடல் தாழை (118) வேலாழி வியல் தெருவில் (119), அரு கடி பெரு காப்பின் (133) - வெள்ளிய பூங்கொத்துக்களையும் மடலினையுமுடைய தாழையையுடைய கரையினையுடைத்தாகிய கடலருகின் கண் இருக்கும் பரதவருடைய அகன்ற தெருவிடத்து [1] அரிய [2] காவலையுடைய பண்டசாலையின்கண்ணே,

வரம்பு அறியாமை வந்து ஈண்டி (132) நிலத்தினின்றும் நீர் பரப்பவும் (130) - எல்லை யறியாதபடி வந்து திரண்டு பின்னர் அப்பண்டசாலையிலே நின்றும் கடலிலே ஏற்றுதற்காகவும்,

வல் அணங்கின் நோன் வலி உடை (134) புலி பொறித்து புறம் போக்கி (135) உல்கு செய (125) மதி நிறைந்த மலி பண்டம் (136) - வலிய வருத்துந்தன்மையையுடைய [3] அச்சடையாளமாகிய வலியையுடைய புலியை அடையாளமாக இட்டுப் பண்டசாலைக்குப்புறம்பே

---

1 பி - ம். ' அகன்ற '

2 " வம்ப மாக்க டம்பெயர் பொறித்த, கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பல்பொதி, கடைமுக வாயிலுங் கருந்தாழ்க் காவலு, முடையோர் காவலு மொரீஇய வாகிக், கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக், கொட்பி னல்லது கொடுத்த லீயா, துள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும் " சிலப். ரு : 111 - 7.

3 அச்சு அடையாளம்.

புறப்படவிட்டுச் 1 சுங்கங்கொள்ளுதற்கு மதித்தற்றொழிலிற் குறையற்ற மிக்க பண்டங்களையும்,

நீரினின்று நிலத்து ஏற்றவும் (129) புலி பொறித்து புறம்போக்கி (135) உல்கு செய (125) அளந்து அறியா (131) மதி நிறைந்த (136) பல பண்டம் (131) - கடலினின்றும் பண்டசாலையிலே இறக்குதற்காகவும் புலிபொறித்து மரக்கலத்திற்குப் புறம்பே புறப்படவிட்டுச் சுங்கங் கொள்ளுதற்கு நெஞ்சாலே அளந்தறிந்து மதித்தல் நிறைந்த பல பண்டங்களையும்,

பரப்பவும் (130) ஏற்றவு (129)மென்னுமெச்சங்கள் புலிபொறித்து (135) என்னும் வினையொடு முடிந்தன.

பொதி 2 மூடை போர் ஏறி (137) - பொதிந்த பொதிகளடுக்கின போரிலேயேறி,

நீர் கடற்பரப்பவுமென்ற உவமைக்கு நிலத்தினின்று நீர்ப்பரப்பவும் நீர் மலைப்பொழியவுமென்ற உவமைக்கு நீரினின்று நிலத்தேற்றவும் பொருளாகக் கொள்க.

நல் இறைவன் பொருள் காக்கும் (120) தொல் இசை தொழில் மாக்கள் (121) காய் சினத்த கதிர் செல்வன் (122) தேர் பூண்ட மா போல (123) வைகல் தொறும் அசைவு இன்றி (124) குறை படாது உல்கு செய (125) - நல்ல அரசனுடைய பொருளைப் பிறர்கொள்ளாமற் காக்கும் பழையபுகழினையுடைய சுங்கங்கொள்வோர் எரிகின்ற சினத்தையுடைய கிரணங்களையுடைய பகலவன் தேர்பூண்ட குதிரைகளைப்போல ஒருபொழுதும் மடிந்திராது நாடோறும் இளைப்பின்றித் தாழ்வின்றாகச் சுங்கங்கொள்ள,

இதனை 3 இருவகைப் பண்டங்களுக்கும் கூட்டியுரைக்க.

மழை ஆடு சிமையம் மால் வரை கவாஅன் (138) வரை ஆடு 4 வருடை தோற்றம் போல (139) - மழையுலாவும் சிகரத்தையுடைய

---

1 சுங்கம்: "மறக்கலியுஞ் சுங்கமு மாற்றி" (விக்கிரம. உலா, 26); "தவிராத சுங்கந் தவிர்த்தகோன்" (குலோத். உலா, 26); "கலகமுஞ் சுங்கமுங் காய்கலியு மாற்றி, யுலகைமுன் காத்த வுரவோன்" இராசராச. உலா, 26.

2 மூடை - மூட்டை; "கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்கும்" பொருந. 245.

3 இருவகைப் பண்டங்கள் - பண்டசாலையிலிருந்து கப்பலில் ஏற்றப்படுவனவும் கப்பலிலிருந்து பண்டசாலையிலிறக்கப்படுவனவும்.

4 வருடை - மலையில் வாழும் ஒருவிலங்கு; "கருங்கலை, கடும்பாட்டு வருடையொடு தாவன வுகளும், பெருவரை", "அவன்மலைப், போருடை வருடையும் பாயாச், சூருடை யடுக்கத்த" (நற். ககக: 6-8, ௩டுக: 7 - 9);

வாகிய பெரிய மூங்கிலையும் பக்கமலையினையுமுடைய மலையிடத்தேயுலாவும் வருடைமானின் [1] தோற்றரவு போல,

கூர் [2] உகிர் ஞமலி கொடு தாள் ஏற்றை (140) ஏழகம் தகரோடு உகளும் முன்றில் (141) - கூரிய உகிரையுடைய நாயில் வளைந்த காலையுடைய ஏற்றையை [3] மேழகக்கிடாயோடே குதிக்கும் பண்டசாலையின் முற்றத்தினையும்,

[4] ஏற்றை தகரோடே இருவகைப் பண்டங்களையும் பொதிந்த மூடைப்போரேறி உகளுமுற்றமென்க.

142-3. குறு தொடை நெடு [5] படிக்கால் கொடு திண்ணை - அணுகினபடிகளையுடைய நெடிய ஏணிகள் சார்த்தின சுற்றுத் திண்ணையினையும்,

143. பல் [6] தகைப்பின் - பலகட்டுக்களையும்,

144. புழை - சிறுவாசலையும்,

வாயில் - பெரியவாசலையும்,

---

"நெடுவரை மிசையது குறுங்கால் வருடை" (ஐங். உ௮எ: 1); "வரைவாழ் வருடைக், கோடுமுற் றிளந்தகர்" (அகநா. ௬எ௮: 6-7); "வரைபாய் வருடை" (தொல். தொகைமரபு, சூ. 15, ந. மேற்.); "மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள், வரைவாழ் வருடை வன்றலை மாத்தகர் - முதுகிடத்தே கொண்ட நிலத்தைக் கைக்கொள்ளுஞ் செலவினையுடைய வளைந்த காலையுடைய வரையிடத்தே வாழும் எண்கால் வருடையில் வலிய தலையினையுடையபெரிய கிடாய்" (மலைபடு. 502-3, ந.); "வரையாடு வருடையும்" (சிலப். உரு : 51); "குன்றின்மேல் வருடைபாய்ந் துழக்கலின்" (சீவக. 1899); "இளையென்பன எண்கால் வருடையும் குரங்கும் போல்வன; எண் காலவாயினும் மாவெனப்படுதலின் வருடை கிளையாயிற்று" (தொல். மரபு. சூ. 32, பேர்.); "எட்டுக்காலுடையன வருடை; ஆறு காலுடையன கழிப்பாம்பு" நீல. தரும. செய். 54, உரை. [1] தோற்றரவு - தோற்றம்.

[2] உகிர் - நகம். [3] மேழகக்கிடாய் - ஆட்டுக்கிடாய்.

[4] "மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு மாற்றுமற் றிடையிடையெங்குங், கலைகளித் தேறிக் கானலில் வாழுங் கழுமல நகரென லாமே" திருஞா. தே.

[5] "விண்ணேணி, ரூர்புக வமைத்தபடிகால்" (கம்ப. ஊர்தேடு. 66); இதுபடுகாலெனவும் வழங்கும்; "ஏணிப்படுகால்" (பரி. ௧௦ : 11); "இருளில் படுகால் - மயக்கமற்ற ஏணி" சீவக. 2872, ந.

[6] "தாரருந்தகைப்பு - ஒழுங்குபாட்டையுடைய ஆண்டு வாழ்வார்க்கல்லது பிறர் புகுதற்கரிய மாளிகைக் கட்டணம்" பதிற். ௬௪ : 7, உரை.

போகு இடைகழி - பெரிய 1 இடைகழிகளையுமுடைய,

145 - 51. [மழைதோயு முயர்மாடத்துச், சேவடிச் செறிகுறங்கிற், பாசிழைப் பகட்டல்குற், றூசுடைத் துகிர்மேனி, மயிலியன் மானோக் கிற், கிளிமழலை மென்சாயலோர், வளிநுழையும் வாய்பொருந்தி :]

மழை தோயும் உயர் மாடத்து (145) வளி நுழையும் வாய் பொருந்தி (151) - மேகஞ் செறியும் உயர்ந்த மாடத்தில் 2 தென்காற்று வருஞ் சாளரங்களைச் சேர்ந்து,

சேவடி (146) - சிவந்த அடியினையும்,

செறி குறங்கின் (146) - செறிந்த 3 குறங்கினையும்,

பாசிழை (147) - பசிய பூணினையும்,

பகடு அல்குல் (147) - பெரிய வல்குலினையும்,

தூசு உடை (148) - தூசாகிய உடையினையும்,

துகிர் மேனி (148) - 4 பவளம்போலும் நிறத்தினையும்,

மான் நோக்கின் (149) - மான்போலும் பார்வையினையும்,

கிளி மெல் மழலை (150) - கிளிபோலும் மெல்லிய மழலை வார்த்தையினையும்,

மயில் இயல் (149) சாயலோர் (150) - 5 மயிலினது இயல்போலும் மென்மையினையுமுடைய மகளிர்,

152 - 4. ஓங்கு வரை மருங்கின் நுண் தாது உறைக்கும் காந்தள் அம் துடுப்பின் கவி குலை அன்ன செறி தொடி முன்கை கூப்பி - உயரா நின்ற மலைப்பக்கத்தே மெல்லிய தேன் துளிக்கும் செங்காந்தளினது அழகிய கண்ணிடத்து இணைந்த குலையையொத்த செறிந்த தொடியினை யுடைய முன்கை குவிக்க,

கூப்பவெனத் திரிக்க. இரண்டு காந்தண்முகை சேர்ந்தாலொத்த கையென்க. கவிதல் - ஒன்றோடொன்று சேர்தல்.

154 - 5. [செவ்வேள், வெறியாடு :] வெறி ஆடு செவ்வேள் - வெறியாடுதற்குரிய முருகனுக்கும்,

---

1 இடைகழி, 'ரேழி' என வழங்கும்.

2 "வேனிற் பள்ளித் தென்வளி தரூஉம், நேர்வாய்க் கட்டளை" (நெடுநல். 61 -2); "மான்கட் காலதர்" சிலப். ௫ : 8.

3 குறங்கு - தொடை.

4 "பளிங்குபுறத் தெறிந்த பவளப்பாவையி, னிளங்கொடி", "பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவை" (மணி. ௪ : 124 - 5, ௧௮ : 78); "பளிக்கறைப் பவழப் பாவை பரிசெனத் திகழு மேனி" சீவக. 192.

5 சிறுபாண். 16, அடிக்; மதுரை. 418, அடிக்.

155 - 60. [மகளிரொடு செறியத் தாஅய்க், குழலகவ யாழ்முரல, முழவதிர முரசியம்ப, விழவறு வியலாவணத்து, மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய, மலரணி வாயிற் பலர்தொழு கொடியும் :]

மை அறு சிறப்பின் சேர்த்திய (159) பலர் தொழு (160) தெய்வம் (159) - பிறப்பறுதற்குக் காரணமான தலைமையையுடைமையாற் கோயில்களிடத்தே உண்டாக்கின பலருந் தொழும் தெய்வங்களுக்கும்,

மகளிரொடு செறிய தாஅய் (155) குழல் அகவ யாழ் முரல (156) முழவு அதிர முரசு இயம்ப (157) விழவு அறு வியல் ஆவணத்து (158) - பாடுமகளிரோடே பொருந்தப் பரந்து [1] வங்கியம் இசையையுண்டாக்க யாழ் வாசிக்க முழவு முழங்க முரசு ஒலிப்ப எடுத்த திருநாள் நீங்காத அகன்ற அங்காடித் தெருவினையும்,

மகளிரொடு செறிய எடுத்தவிழவென்க.

சேவடி முதலியவற்றையுடைய சாயலோர் மாடங்களிற் சாளரங்களிற் பொருந்தி முன்கைகூப்பப் பலருந் தொழும் முருகவேளுக்கும் ஏனைத் தெய்வங்களுக்குமெடுத்த விழவறு வியலாவணமெனக் கூட்டுக.

மலர் அணி வாயில் கொடியும் (160) - [2] இல்லுறைதெய்வம் மகிழ மலரணிந்த மனைவாசலிற் கட்டின கொடிகளும்,

161 - 2. [வருபுன றந்த வெண்மணற் கான்யாற், றுருகெழு கரும்பி னொண்பூப் போல:] வரு புனல் தந்த வெள் மணல் கான் யாறு உரு கெழு கரும்பின் ஒள் பூ போல மேல் ஊன்றிய துகில் கொடியும் (168) - வருகின்ற நீர்கொண்டுவந்த வெள்ளிய மணலையுடைய காட்டாற்றுக்கரையினின்ற அழகுபொருந்தின கரும்பினது ஒள்ளிய பூவை யொக்க மேலூன்றின துகிற்கொடியும்,

கான் - மணமுமாம். [3] கடைத்தெருவின் இரண்டு புறத்திற்கும் எடுத்த கொடிக்கும் யாற்றங்கரையும் கருப்பம்பூவும் உவமைகூறினார்.

163 - 8. [கூழுடைக் கொழுமஞ்சிகைத், தாழுடைத் தண்பணியத்து, வாலரிசிப் பலிசிதறிப், பாகுகுத்த பசுமெழுக்கிற், காழூன்றிய கவிகிடுகின், மேலூன்றிய துகிற்கொடியும :]

கூழ் உடை கொழு மஞ்சிகை (163) - நெல்லையும் அரிசியையுமுடைய அழகிய மஞ்சிகை,

மஞ்சிகை - [4] கொட்டகாரமுமாம்.

---

1 வங்கியம் - புல்லாங்குழல் ; இதுவம்சமென்பதன் றிரிபென்பர்.

2இல்லுறைதெய்வம்: மதுரை. 164, 578, உரை; நெடுநல். 43, உரை.

3 "கூலமறுகிற் கொடியெடுத்து நுவலு, மாலைச் சேரி" சிலப். ௬: 131 - 3.

4 கொட்டகாரம் - ஒருவகைக் கட்டிட விசேடம்; "அட்டில்,

தாழ் உடை தண் பணியத்து (164) [1] மஞ்சிகை (163) - [2] தாழுடு தலையுடைய தண்ணிய பண்டங்களையுடைய மஞ்சிகை,

நெல்லுப்போல ஏனைப்பண்டங்கள் சிறந்தன அன்மையிற் [3] றண்ணியபண்டமென்றார். பண்டமெனவே உலகில்விற்கும் பண்டங்களெல்லாம் அடங்கின.

பாகு உருத்த (166) மஞ்சிகை (163) - பாக்குவெற்றிலை சொரிந்த மஞ்சிகை,

இனி உருத்தபாகெனமாறிச் சிந்தின பாகினையுடைய மஞ்சிகையென்றலுமாம்.

என்றது, கண்டசர்க்கரைக் கட்டுப்பாகினை.

இதனைப் பசுமெழுக்கென்பதனோடு கூட்டி ஆப்பியென்பாருமுளர்.

பசு மெழுக்கின் (166) மஞ்சிகை (163) - புது மெழுக்கினையுடைய மஞ்சிகையிடத்தே,

வால் அரிசி பலி சிதறி (165) - வெள்ளிய அரிசியாகிய பலிகளைத் தூவி,

காழ் ஊன்றிய கவி கிடுகின் (167) மேல் ஊன்றிய துகில் கொடியும் (168) - கால்கள் நட்டுவைத்த கவிந்த சட்டங்களின்மேலே நட்டுவைத்த வெள்ளிய துகிற் கொடிகளும்,

கால்கள் - சட்டங்களைத் தாங்குவன.

சிதறி ஊன்றிய. மஞ்சிகையிற்கவிந்த கிடுகென்க.

169 - 71. பல் கேள்வி துறை போகிய தொல் ஆணை நல் ஆசிரியர் உறழ் குறித்து எடுத்த உரு கெழு கொடியும் - பலவாகிய கேட்டற்றொழிலையுடைய நூற்றிரளை முற்றக்கற்ற பெரிய ஆக்கினையையுடைய நல்ல ஆசிரியர் வாதுசெய்யக்கருதிக் கட்டின அச்சம் பொருந்தின கொடிகளும்,

172. வெளில் இளக்கும் களிறுபோல - அசையாத கம்பத்தினை அசைக்கும் யானைபோலநின்று தூங்குநாவாய் (174),

---

கோட்டகாரம், பண்டசாலை, கூடகாரம், பள்ளியம்பலம், உரிமையிடம், கூத்தப்பள்ளியென இவற்றுள் நீங்கி" இறை. சூ. 21, உரை.

[1] மஞ்சிகை - தொம்பை; "ஆரியச் செப்பும் யவனமஞ் சிகையும், பொன்செய் பேழையொடு பொறித்தாழ் நீக்கி" (பெருங். க. 32 : 76 - 7); இதனை மஞ்சூஷா என்னும் வடமொழித் திரிபென்பர்.

[2] தாழ் - தாழ்ப்பாள்.

[3] தண்ணிய - இழிந்த; "தண்கான் - இழிந்தகாடு" (சிலப். உ : 54, அடியார்.); "எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன், றண்பதத்தாற் றானே கெடும்" குறள். 548.

173 - 5. [தீம்புகாரத் திரைமுன்றுறைத், தூங்குநாவாய் துவன்
றிருக்கை, மிசைக்கூம்பி னசைக்கொடியும் :]

தீ புகார் திரை முன் துறை - கட்கு இனிதாகிய புகாரிடத்துத்
திரையினையுடைய துறையின் முன்னே,

துவன்று இருக்கை தூங்கு நாவாய் மிசை கூம்பின் நசை கொடியும்-
நிறைந்த இருப்பினையுடைய அசைகின்ற நாவாயின்மேல் நட்ட பாய்
மரத்தின் மேலெடுத்த விரும்புதலையுடைய கொடிகளும்,

176 - 8. [மீன்றடிந்து விடக்கறுத், தூன்பொரிக்கு மொலி
முன்றின், மணற்குவைஇ மலர்சிதறி :]

மணல் குவைஇ மலர் சிதறி - மணலை மிகப்பரப்பிச் செம்பூக்களை
யுஞ் சிதறி,

மீன் தடிந்து விடக்கு அறுத்து ஊன் பொரிக்கும் ஒலி முன்றில் -
மீனை யறுத்துப் பின் இறைச்சியையுமறுத்து அவ்விரண்டு தசையினையும்
பொரிக்கும் ஆரவாரத்தினையுடைய முற்றத்தினையும்,

179 - 81. [பலர்புகுமனைப் பலிப்புதவி, னறவுநொடைக் கொடி
யோடு, பிறபிறவு நனிவிரைஇ :]

பலி புதவின் - தெய்வத்திற்குக் கொடுக்கும் பலியினையுடைய வாச
லினையு முடைய,

பலர் புகும் மனை நறவு நொடை கொடியோடு பிறபிறவும் நனி
விரைஇ - கள்ளுண்பார் பலருஞ்செல்லும் மனைகளிற் சிறப்புடைக் கள்
ளின் விலைக்குக் கட்டின கொடியோடே 1 ஏனையவற்றிற்குக் கட்டின
கொடிகளும் மிகக் கலக்கையினாலே செல்கதிர் நுழையா (183) என்க.

182. பல் வேறு உருவின் பதாகை - பலவாய் வேறுபட்ட வடி
வினையுடைய பெருங் கொடிகளும்,

நீழல் - நறவுநொடைக் கொடியோடே முற்கூறிய கொடிகளும்
பிற கொடிகளும் பதாகைகளும் விரவுகையினாலே இவற்றினிழலில்,

183. செல் கதிர் நுழையா செழு நகர் வரைப்பின் - 2 செல்
கின்ற ஞாயிற்றின் கிரணங்கள் நுழையப்படாத வளவிய ஊரெல்லை
யிடத்து மறுகு (193) எனக் கூட்டுக.

184. செல்லா நல் இசை அமரர் காப்பின் - கெடாத நல்ல புக
ழினையுடைய தேவர்கள் பாதுகாவலினாலே,

185 - 6. [நீரின் வந்த நிமிர்பரிப் புரவியுங், காலின் வந்த கருங்
கறி மூடையும் :]

நீரில் காலின் வந்த நிமிர் பரி புரவியும் - கடலிலே காற்றான்வந்த
நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளும்,

---

1 மதுரை. 366 - 73.

2 பெரும்பாண். 374, அடிக்.

நீரில் காலின் வந்த கருங்கறி மூடையும் - கடலிலே காற்றுன்வந்த கரிய மிளகுபொதிகளும்,

187. வடமலை பிறந்த மணியும் பொன்னும் - மேருவிலேபிறந்த மாணிக்கமும் [1] சாம்பூநத மென்னும் பொன்னும்,

188. குடமலை பிறந்த ஆரமும் அகிலும் - பொதியின் மலையிலே பிறந்த சந்தனமும் அகிலும்,

புகார்க்குத் தென்மேற்காதலிற் குடமலையென்றார் பொதியின் மலையை; அன்றி மேற்குள்ள மலையென்றுமாம்.

189. தென்கடல் முத்தும் - [2] தென்றிசைக் கடலிற் பிறந்த முத்தும்,

குணகடல் துகிரும் - கீழ்த்திசைக் கடலிற் பிறந்த பவளமும்,

190. கங்கை வாரியும் - கங்கையாற்றி லுண்டாகிய பொருளும்,

அவை யானையும் மாணிக்கமும் முத்தும் பொன்னு முதலியனவும் பிறவுமாம்.

190 - 91. [3] [காவிரிப் பயனு, மீழத் துணவும் :]

191. காழகத்து ஆக்கமும் - [4] கடாரத்திலுண்டான நுகரும் பொருள்களும்,

ஆக்கம் : ஆகுபெயர்.

192. அரியவும் - சீன முதலிய இடங்களினின்றும் வந்த கருப்பூரம் பனிநீர் குங்குமம் முதலியனவும்,

பெரியவும் - இவை யொழியப் பெரியவையாகிய பல பொருள்களும்,

நெரிய ஈண்டி - நிலத்தின்முதுகு நெளியும்படி திரண்டு,

193 - 5. [வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகி, னீர்நாப் பண்ணு நிலத்தின் மேலு, மேமாப்ப வினிது துஞ்சி :]

ஏமாப்ப நீர் நாப்பண்ணும் நிலத்தின் மேலும் இனிது துஞ்சி - ஏமாப்பினாலே புகாரினடுவிடத்தும் கரையினிடத்தும் அழிவின்றி இனிதாகத் தங்குகையினாலே,

வளம் தலை மயங்கிய நன தலை மறுகின் - செல்வம் தலை தெரியாத அகன்ற இடங்களையுடைய தெருவுகளையும்,

---

[1] சாம்பூநதம் - மேருமலையின் தென்பாலுள்ள நாவல் மரத்தின் கனிச்சாற்றிலிருந்து உண்டாயபொன்.

[2] தென்றிசைக் கடலென்றது, தாம்பிரபன்னிநதி கலக்கப்பெற்ற கடலை ; அந்தப்பாகம் கொற்கைத் துறையென்று வழங்கும்.

[3] இதற்கு உரைகிடைத்திலது ; காவிரியால் உண்டாகிய பொருள்களும் சிங்கள தேசத்திலிருந்து உண்டாகிய நுகர்பொருள்களு மென்க.

[4] கடாரம் - பர்மா.

செழுநகர் வரைப்பிற் (183) புரவி முதலியன ஈண்டித் (192) துஞ்சி (195) மயங்கிய மறுகு (193) என்க.

இனி, இனிது துஞ்சி (195) மீன் பிறழவும் (197) மா ஈண்டவும் (198) என மேலே கூட்டுவாருமுளர்.

196 - 217. [கிளைகலித்துப் பகைபேணாது, வலைஞர்முன்றின் மீன்பிறழவும், விலைஞர்குரம்பை மாவீண்டவுங், கொலைகடிந்துங் களவுநீக்கியு, மமரர்ப் பேணியு மாவுதி யருத்தியு, நல்லானொடு பக டோம்பியு, நான்மறையோர் புகழ்பரப்பியும், பண்ணிய மட்டியும் பசும் பதங் கொடுத்தும், புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக், கொடுமேழி நசையுழவர், நெடுநுகத்துப் பகல்போல, நடுவுநின்ற நன் னெஞ்சினோர், வடுவஞ்சி வாய்மொழிந்து, தமவும் பிறவு மொப்ப நாடிக், கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது, பல் பண்டம் பகர்ந்துவீசுந், தொல்கொண்டித் துவன்றிருக்கைப், பல்லாய மொடு பதிபழகி, வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற், சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு, மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப், புலம் பெயர் மாக்கள் கலந்தினி துறையும் :]

பழி தீர் தேஎத்து (216) முது வாய் ஒக்கல் (214) சாறு அயர் மூதூர் சென்று தொக்காங்கு (215)-குற்றமற்ற பிறதேசங்களிலே அறிவு வாய்த்த சுற்றத்தினையுடைய விழாக்களை நிகழ்த்தின பழைய ஊரி லுள்ளார் ஈண்டுவந்து குடியேறினாற் போல,

1 "செலவினும் வரவினும்" என்னுஞ் சூத்திரத்தாற் சென்றென் பது வந்தென்னும் பொருடந்தது.

2 வேறு வேறு உயர்ந்த (214) புலம் பெயர் மாக்கள் (217) - பலபல சாதிகளாயுயர்ந்த தத்தம் நிலத்தைக் கைவிட்டுப் போந்த மாக்கள்,

பலமொழி பெருகிய (216) மாக்கள் (217) - பல பாடைமிக்க மாக்கள்,

மாக்களென்றார், 3 ஐயறிவே யுடையராதலின்; என்றது சோனகர் சீனர் முதலியோரை.

---

1 தொல். கிளவி. சூ. 28.

2 "கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள், கலந்திருந் துறையு மிலங்குநீர்ப் பரப்பும்", "மொழிபெயர் தேத்தோ ரொழியா விளக்கமும்" சிலப் ௬ : 11 - 2, ௬ : 143.

3 ஐயறிவு - ஐம்பொறி யுணர்வு; மாக்கள் மனனுணர்வின்றி ஐம்பொறியுணர்வையே உடைய விலங்குபோல்வார்; இதனை, "மாவு மாக்களு மையறி வினவே", "மக்க டாமே யாறறி வுயிரே" (32, 33) என்னுந் தொல்காப்பிய மரபியற் சூத்திரங்களானுணர்க.

மாக்கள் (217) பல் ஆயமொடு பதி பழகி (213) கலந்து இனிது உறையும் (217) மறுகின் (198) - இம்மாக்கள் பல திரளோடே இவ் வூரிடத்தேபழகி ஈண்டை நன்மக்களோடே கூடி நன்றாக இருக்கும் மறுகென முன்னே கூட்டுக.

இவர்க ளிருத்தலின், வளர்ந்தலை மயங்கிய மறுகுகளாயின.

கிளை கலித்து பகை பேணாது (196) வலைஞர் முன்றில் மீன் பிறழவும் (197) விலைஞர் குரம்பை மா ஈண்டவும் (198) கொலை கடிந்தும் களவு நீக்கியும் (199) - மீன் திரளும் விலங்கின்திரளும் செருக்கி வலையாற் பிடிப்பாரையும் கொன்று இறைச்சி விற்பாரையும் தமக்குப் பகையாகக்கருதி யஞ்சாதே வலைஞர் முற்றத்தே அம்மீன் பிறழ்ந்து திரியும்படியாகவும் விலைஞர் குடிலிலே அவ்விலங்குகள் கிடக்கும்படியாகவும் முற்படக் கொலைத் தொழிலை அவர்களிடத்தி னின்றும் போக்கியும் பின்னர்க் களவு காண்பாரிடத்துக் களவுத் தொழிலைப் போக்கியும்,

அமரர் பேணியும் (200) - தேவர்களை வழிபட்டும்,

ஆவுதி அருத்தியும் (200) - யாகங்களைப்பண்ணி அவற்றான் ஆவுதிகளை அவர் நுகரப்பண்ணியும்,

நல் ஆனொடு பகடு ஓம்பியும் (201) - நல்ல பசுக்களோடு எருதுகளைப் பரிகரித்தும்,

1 "வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை", 2 "மெய்தெரி வகையி னெண்வகை யுணவின், செய்தியும் வரையா ரப்பா லான" 3 என்பவற்றால், வாணிகர்க்கு 4 உழவுத் தொழிலுரித்தாகலிற் பகடோம்பியு மென்றார். 5 யாகத்திற்குப் பசுவை ஓம்பியுமென்றார்.

---

1 தொல். மரபு. சூ. 77.

2 ஷை. ஷை. ஷை. 78.

ீ. 'என்பதனால்'

4 "அவருள் வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்தசெய்தியனவாகிய உழவுத்தொழிலும் நிரைகாத்தலும் வாணிகமு மென்பன, அவற்றின் ஒத்த சிறப்பினவன்றி அவற்றுள்ளும் ஒரோவொன்று ஒரோவருணத்தாருக்கு உரியதாகலானும் ஈண்டு அவை விதந்து கூறினா னென்பது. நிரைகாவலும் உழவுத் தொழிலும் வணிகர்க்கும் வேளாளர்க்குந் தமமொறுதல் போலாது......இச் சூத்திரங்களா னென்பது" தொல். மரபு. சூ. 80, பேர்.

5 "தீம்பா லொழுகப் பொழுதுதொறு மோம தேனுச் செல்வனவும்", "பூணுந் தொழில்வேள் விச்சடங்கு புரிய வோம தேனுக்கள், காணும் பொலிவின் முன்னையினு மநேக மடங்கு கறப்பனவா" (பெரிய. சண்டேசு. 5, 29); "சுரபிவேறாய்விடின் பால் அக்கினி கோத்திரப்

நான்மறையோர் புகழ் பரப்பியும் (202) - அந்தணர்க்குண்டாம் புகழ்களைத் தாங்கள் அவர்க்கு நிலைபெறுத்தியும்,

புண்ணியம் (204) பண்ணி அட்டியும் (203) - பெரிதாகிய புண்ணியங்களைத் தாங்கள் பண்ணி அவற்றைச் செய்யமாட்டாதார்க்குத் தானம் பண்ணியும்,

அம்: அசை.

பண்ணியமட்டியு மென்றதற்குச் சோற்றை ஆக்கியிட்டு மென்பாருமுளர்.

1 பசு பதம் கொடுத்தும் - (203) - விளைந்தநெல்லையும் பறிக்குங் 2 கமுகையும் உணவாகக் கொடுத்தும்,

இதற்கு அரிசியும் கறியுங் கொடுத்து மென்பாருமுளர்.

முட்டா தண் 3 நிழல் வாழ்க்கை (204) - இங்ஙனஞ்செய்யும் அறத்தொழில்கள் முட்டுப்படாத குளிர்ந்த அருளுடனே வாழும் இல்வாழ்க்கையையுடைய நன்னெஞ்சினோர் (207) என்க.

கொடு மேழி நசை உழவர் (205) நெடு நுகத்து பகல் போல (206) நடுவுநின்ற நல் நெஞ்சினோர் (207) - வளைந்த மேழியால் உழவுத்தொழிலை நச்சுதலையுடைய உழவரது நெடிய 4 நுகத்திற்றைத்த பகலாணிபோல நடுவுநிலையென்னுங்குணம் நிலைபெற்ற நன்றாகிய நெஞ்சினையுடையோர்,

என்றது, ஆண்டுறையும் 5 வேதவாணிகரை.

6 தம (209) பல் பண்டமும் (211) பிற (209) பல் பண்டமும் (211) ஒப்ப நாடி (209) - தம்முடையவாகிய பலசரக்குக்களையும் பிறவாகிய பலசரக்குக்களையும் பொருளொப்ப ஆராய்ந்து,

---

பரப்புக்குப் போதாது; அஃது இன்றி யொழியின் அவனுண்ணு னென்பது; அவன் வழியொழுகும் சுரபியைப் பறித்ததனுற் பயனிது", தக்க. 488, உரை.

1 "உண்டாயிற் பதங்கொடுத், தில்லாயி னுடனுண்ணும்" புறநா. ௬௰: 6 - 7.

2 கமுகு - பாக்கு.

3 நிழலென்பதற்கு அருளென்று ஈண்டுப் பொருள் எழுதியவாறே முன்னும் (பொருந. 149) எழுதினர்.

4 நுகம் - நுகத்தடி; பகலாணி - அதன் நடுவே தைத்த ஆணி.

5 "மெய்ந்நிக ரிலாதவன் வேத வாணிகன்" (சீவக. 1449); "வேதவணிகரல்லாதார் கலத்திற் பிரிவு வேதநெறியன்மையின் ஆராய்ச்சியின்று" தொல். அகத்திணை. சூ. 11, ந.

6 "பொற்போர் புரிவர் பிறர்பொருளுந் தமபோற் பேணிப் புரிவணிகர்" பிரபு. மாயையுற்பத்தி. 15.

வடு அஞ்சி வாய் மொழிந்து (208) - தம்குடிக்கு வடுவாமென்றஞ்சி மெய்யே சொல்லி,

கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது (210) - தாம் கொள்ளுஞ் சரக்கையும் தாம்கொடுக்கும்பொருட்கு மிகையாகக் கொள்ளாது தாம் கொடுக்குஞ் சரக்கையும் தாம்வாங்கும் பொருட்குக் குறையாகக்கொடாமல்,

பகர்ந்து வீசும் (211) - இலாபத்தை வெளியாகச்சொல்லிக் கொடுக்கும்,

தொல் கொண்டி (212) - பழைதாகிய கொள்ளையினையும்,

கொள்ளையென்றார், இந்நெறியை நடத்தினாரிடத்தல்லது பொருட்டிரள் உண்டாகாதென்றற்கு.

தண்ணிழல் வாழ்க்கையினையும் (204) தொல் கொண்டியினையும் (212) உடைய நன்னெஞ்சினோ (207) ரென்க.

துவன்று இருக்கை (212) - நெருங்கின குடியிருப்பினையும்,

காவிரி (6) புனல்பரந்து பொன்கொழிக்கும் (7) பல்லூர் நெடுஞ் சோணாட்டிற் (28) கழிசூழ்படப்பையினையும் (32) தண்டலையினையும் (33) பொய்கைகளையும் (38) ஏரிகளையும் (39) திண்காப்பினையும் (41) கோயிலைமாசூட்டுதற்குக் காரணமான (50) அட்டிலினையும் (43) சாலையினையும் (52) பள்ளியினையும் (53) குயில் (55) துச்சிற்சேக்கைக்குக் காரணமான (58) தாழ்காவினையும் (53) பாக்கங்களையும் (27) புறச்சேரியினையும் (76) முன்றிலினையும் (141) விழவறா ஆவணத்தையும் (158) மாக்கள் கலந்து இனிதுறையும் (217) வளர்தலை மயங்கிய மறுகுகளையும் (193) நன்னெஞ்சினோர் (207) துவன்றிருக்கை (212) யினையுமுடைய பட்டின (218) மெனவினைமுடிக்க.

218. முட்டா சிறப்பின் [1] பட்டினம் பெறினும் - குறைவுபடாத தலைமையினையுடைய பட்டினத்தை எனக்கு உரித்தாகப் பெறுவேனாயினும்,

219. வார் இரு கூந்தல் வயங்கு இழை ஒழிய - நீண்ட கரிய கூந்தலையுடைய விளங்குகின்ற பூணினையுடையாள் ஈண்டுப் பிரிந்திருப்ப,

220. வாரேன் வாழிய நெஞ்சே - யான் நின்னோடு கூடவாரேன்; நெஞ்சே, போய்வாழ்வாயாக;

[2] "அளிநிலை பொறாஅது" என்னும் அகப்பாட்டால் போக்கிற்கு ஒருப்படாமல் நிற்குங் குறிப்புணர்க.

220 - 21. கூர் உகிர் கொடுவரி குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு - கூரிய உகிரினையும் வளைந்தவரிகளையுமுடைய புலிக்குட்டி கூட்டிடத்தே அடையுண்டிருந்து வளர்ந்தாற்போல,

---

1 பட்டினம் - காவிரிப்பூம் பட்டினம்.

222. பிறர் பிணி அகத்து இருந்து பீடு கெழு முற்றி - பகைவர் காவலிடத்தேயிருந்து தனக்குப்பெருமை வயிரமாக முற்றி,

223 - 5. [அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று, பெருங்கை யானை பிடிபுக் காங்கு, நுண்ணிதி னுணர நாடி :]

நுண்ணிதின் உணர நாடி - தன்னுணர்வு கூரிதாக உணரும்படி இதுவே காரியமென்று ஆராய்ந்து,

பெரு கை யானை அரு கரை கவிய குத்தி குழி கொன்று பிடி புக்காங்கு - பெரிய கையினையுடைய யானை தான் அகப்படப்பண்ணின குழியில் ஏறுதற்கு அரிய கரைகளை இடியும்படி கோட்டாலேகுத்திக் குழியைத்தூர்த்துப் பிடியிடத்தே சென்றாற்போல,

225 - 6. [நண்ணார், செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்து:] நண்ணார் செறிவு உடை திண் காப்பு வாள் கழித்து ஏறி - அப்பகைவருடைய நெருங்கின திண்ணியகாவலாகிய வாட்படையை ஓட்டி அவ்விடத்தினின்றும் போந்து,

இனித் திண்காப்பிடத்தே வாளை உறைகழித்து வெட்டிப்போந்தென்றுமாம்.

227. உருகெழு [1] தாயம் ஊழின் எய்தி - அச்சம்பொருந்தின தன் அரசவுரிமையை முறையாலே பெற்று,

228. பெற்றவை மகிழ்தல் செய்யான் - தான் இறையாகப்பெற்ற அரசுரிமையால் மகிழ்ச்சிபொருந்துதல் செய்யானாய் மேலும் ஆசை மிக்கு,

228 - 38. [செற்றோர், கடியரண் டொலைத்த கதவுகொன் மருப்பின், முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றாட், குகிருடை யடிய வோங்கெழில் யானை, வடிமணிப் புரவியொடு வயவர் வீழப், பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத், தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு, வேறுபல் பூளையொ டுழிஞை சூடிப், பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச, மாக்க ணகலறை யதிர்வன முழங்க, முனைகெடச் சென்று முன்சமமுருக்கி :]

முடி உடை கரு தலை புரட்டும் முன் தாள் (230) உகிர் உடை அடிய (231) - முடியையுடைய கரியதலைகளையுருட்டும் முன்காலின் உகிருடைய அடிகளையுடையவாய்,

[2] தூறு இவர் துறு கல் போல (234) உழிஞை சூடி (235) செற்றோர்

---

1 "தாய்வயிற் றிருந்து தாய மெய்தி" பொருந. 132.

2 துறுகல் யானைக்கு உவமை : "மாசறக் கழீஇய யானை போலப், பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்", "கூழை யிரும்பிடிக் கைகரந் தன்ன, கேழிருந் துறுகல்", "மாயிருந் துறுக, றுகள்சூழ் யானையிற் பொலியத் தோன்றும்", "பொருதயானைப் புகர்முகங் கடுப்ப

(228) கடி அரண் தொலைத்த (229) யானையொடு (231) - தாறு படர்ந்த நெருங்கின மலைகள் போல உழிஞையைச்சூடித் தம்மரசாாற் போர்பெற்றாருடைய காவலையுடைய அரண்களையிடித்த யானைகளோடும்,

கதவு கொல் மருப்பின் (229) ஓங்கு எழில் யானை (231) - கத வைமுறிக்கும் கொம்பினையும் உயர்ந்த அழகினையுமுடைய யானையென்க.

வடி மணி புரவியொடு (232) - வடித்த மணிகட்டின குதிரைக ளோடும்,

போர் வேட்டு (234) - போரை விரும்பி,

பேய் கண் அன்ன பிளிறு கடி முரசம் (236) மா கண் அகல் அறை அதிர்வன முழங்க (237) - பேயின்கண்ணையொத்து முழங்குகின்ற காவலையுடைய முரசம் பெருமையை உடைத்தாகிய இடத்தையுடைய பாசறையிலே நடுங்குவனவாய் முழங்க,

அகலறை - மலைப்பக்கமுமாம்.

முனை கெட சென்று (238)- பகைப்புலம் கெடும்படி சென்று,

பெரு நல் வானத்து பருந்து உலாய் நடப்ப (233) வயவர்வீழ (232) முன்சமம் முருக்கி (238) - பெரிய நல்லவானிடத்தே பருந்து உலாவித் திரியும்படியாக வீரர் படும்படி முற்பட்ட தூசியைக் கெடுத்து,

யானைகளோடும் (231) புரவிகளோடும் (232) போர்வேட்டு (234) முரசம் (236) முழங்கச் (237) சென்று (238) பருந்துலாய்நடப்ப (233) வயவர்வீழ (232) முருக்கி (238) யென்க.

239. தலை தவ சென்று - அப்பகைவரரணிடத்தே மிகநடந்து,

239 - 42. [தண்பணை யெடுப்பி, வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி, மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக், கராஅங் கலித்த கண் ணகன் பொய்கை:] 1 வெள் பூ கரும்பொடு செந்நெல் நீடி 2 குவளை யொடு மா இதழ் நெய்தலும் மயங்கி கராம் கலித்த கண் அகன் பொய்கை தண் பணை எடுப்பி - வெள்ளிய பூக்களையுடைய கரும்புகளு டனே செந்நெல்லும் வளர்ந்து குவளையோடே பெருமையையுடைய இதழ்களையுடைய நெய்தலும் மயங்கப்பட்டு முதலைகள் செருக்கித்திரிந்த இடமகன்ற பொய்கைகளையுடைய மருதநிலத்துள்ள குடிகளை யோட்டி,

243 - 4. [கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச், செறுவும்

---

மன்றத் துறுகன் மீமிசைப் பலவுட, ஞெண்செங் காந்த ளவிழு நாடன்" குறுந். கஅ : 1 - 2, கசக : 4 - 5, உஎக: 5 - 6, உஅச : 1 - 3.

1 "நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்" (நான்மணி. 9); 'கரும்பொடு காய்நெற் கனையெரி யூட்டி" பு. வெ. 56.

2 " மாமலர்க் குவளையு நெய்தலு மயங்கிய, கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சி" மணி. கக: 38 - 9.

வாவியு மயங்கி நீரற்று :] 1 செறுவும் வாவியும் நீர் அற்று மயங்கி வேறு பல் பூளை (235) யொடு கொழு கால் புதவமொடு செருந்தி நீடி - செய்களும் வாவிகளும் நீரற்றுத் தம்மில் ஒன்றாய் இருவகைப்பட்ட பலவாகிய பூளைகளோடே 2 கொழுவிய தண்டுகளையுடைய அறுகோடே கோரைகளும் வளரப்பட்டு,

வேறுபல்பூளை இங்கேகூட்டிற்று; சிறுபூளையும் பெரும்பூளையுமாண் மையின் வேறுபல்பூளையென்றார்.

245. அறு கோடு இரலையொடு மான்பிணை உகளவும் - அறல் பட்ட கொம்பினையுடைய புல்வாய்க்கலையோடு மான்பிணை துள்ளிவிளை யாடும்படியாகவும்,

தலைதவச்சென்று தண்பணையெடுப்பி (239) நீடி (240) உகளவும் (245) என்க.

246 - 9. [கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி, யந்தி மாட்டிய நந்தா விளக்கின், மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழு, வம்பலர் சேக் குங் கந்துடைப் பொதியில்:]

கொண்டி மகளிர் உண் துறை மூழ்கி மெழுக்கம் அந்தி மாட்டிய நந்தா விளக்கின் மலர் அணி கந்து உடை பொதியில் - 3 பகை வர்மனையோராய்ப் பிடித்துவந்த மகளிர்பலரும் நீருண்ணுந்துறையிலே சென்றுமுழுகி மெழுகும் மெழுக்கத்தினையும் அவர்கள் அந்திக்காலத்தே கொளுத்தின அவியாத விளக்கினையுமுடைய பூக்களைச் சூட்டின தறி யினையுடைய அம்பலம்,

கந்து - 4 தெய்வமுறையுந் தறி.

---

1 பகைவர் நாட்டு நீர் நிலைகளில் யானையைப் படிவித்தலும் அவை களை உடைத்தலும் வழக்கமாதலின், 'நீரற்று' என்றார்; "ஒளிறு மருப்பிற் களிறவர, காப்புடைய கயம்படியினை", "கடிதுறைநீர்க் களிறுபடீஇ", "வெளிறி லோன்காழ்ப் பணைநிலை முனைஇக், களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்", "துறைநீர்க், கைமான் கொள்ளு மோவென, வுறையுண் முனியுமவன் செல்லு மூரே" (புறநா. ௧௫: 9 - 10, ௧௬: 6, ௨௩: 1 - 2, ௯௬: 7 - 9); "கரும்பொடு காய்நெற் கனை யெரி யூட்டிப், பெரும்புனல் வாய்திறந்த பின்னும்" (பு - வெ. 56); "எண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரைத், தெண்ணீர்ச் சிறுகுளங் கீள் வது மாதோ" புறநா. ௧௧௮ : 2 - 3.

2 "வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத், தாரறிய லாகா கிடந்தனவே - போரின், முகையவிழ்தார்க் கோதை முசிரியார் கோ மான், நகையனல்வேல் காய்த்தினார் நாடு" முத்.

3 "கொற்றமன்னர் மங்கைய ரேத்தல்சான்ற கோயிலும்" சீவக. 154.

4 "கந்துடை நிலையினும்" (முருகு. 226); "அருந்திறற் கடவு

வம்பலர் பலர் ஏறி தொழ சேக்கும் பொதியில்-புதியவர்கள் பலரு மேறித் தொழுதற்குத் தங்கும் [1] பொதியில்,

பொதியிலைமெழுகி விளக்கும் இட்டிருக்க வம்பமகளிரைவைத் தார்; அதனால் தமக்குப் புகழுளதாமென்று கருதி.

250 - 51. பரு நிலை நெடு தூண் ஒல்க தீண்டி பெரு நல் யானை யொடு பிடி புணர்ந்து உறையவும் - அத்தெய்வமுறையும் அம்பலத்தி னின்ற பருத்த நிலைமையினையுடைய நெடியதூண் சாயும்படி தம்முடம்பு உரிஞ்சிப் பெரிய நல்ல களிறுகளுடனே பிடிகள்கூடித் தங்கும்படி யாகவும்,

252 - 5. [அருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின், முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த, திரிபுரி நரம்பின் றீந்தொடை யோர்க் கும், பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்து:] தெருவில் அரு விலை நறு பூ தூஉய் முதுவாய் கோடியர் முழவொடு புணர்ந்த திரி புரி நரம் பின் தீ தொடை ஓர்க்கும் பெரு விழா கழிந்த பேஎ முதிர் மன் றத்து - ஆண்டுள்ள தெருவின்கண்ணே விலைகூறுதற்கரிய நறிய பூக்களைச் சிதறி அறிவு வாய்த்தலையுடைய கூத்தருடைய மத்தளத் திற்றாளத்தோடே கூடின முறுக்குதல்புரிந்த நரம்பின் இனிதாகிய கட் டினையுடைய யாழைக் கேட்கும் பெரிய திருநாளின்றாகிய அச்சம் முதிர்ந்த மன்றத்திடத்தே,

தூவி ஓர்க்குமென்க. தொடை : ஆகுபெயர்.

256 - 7. [[2] சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி, யழல்வா யோரி யஞ்சுவரக் கதிர்ப்பவும் :]

258. அழு குரல் கூகையோடு [3] ஆண்டலை விளிப்பவும் - இசைக்கு வருந்திக் கூப்பிடுகின்ற குரலையுடைய கூகைகளுடனே கூடி ஆண்டலைப் புள்ளுக் கூப்பிடும்படியாகவும்,

---

டிருந்துபலிக் கந்தமும்'', "இலகொளிக் கந்தமும்'' (மணி. சு:60, உச: 162); "மரஞ்சேர் மாடத், தெழுதணி கடவுள் போகலிற் புல்லென், றொழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை'', "மாத்தாட் கந்தின், சுரை யிவர் பொதியி லங்குடிச் சீறூர், நாட்பலி மறந்த'', "புதலிவர் பொதியிற், கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து'' (அகநா. கசுஎ: 14 - 6, உஅஎ, 4 - 6, நூஎ : 11 - 2); "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட'' புறநா. ருஉ : 12.

1 பொதியில் - அம்பலம்; முருகு. 226, ந.

2 இதற்குப் பழையவுரை கிடைக்கவில்லை ; சிறிய பூக்களையுடைய நெருஞ்சியோடு அறுகம்புல் பரவப்பெற்றுக் கொடிய வாயையுடைய நரிகள் பிறர்க்கு அச்சந்தோன்ற மிக்கு முழங்கவுமென்க.

3 சுஅ - ஆம் பக்கம், முதலடிக் குறிப்பைப்பார்க்க.

259 - 60. கணம் கொள் கூளியொடு கதுப்பு இகுத்து அசைஇ, பிணம் தின் யாக்கை பேய்மகள் துவன்றவும் - திரட்சிகொண்ட ஆண் பேய்களுடனே மயிரைத் தாழ்த்து இளைத்துப் பிணத்தைத் தின்னும் வடிவையுடைய பேய்மகள் நெருங்கும்படியாகவும்,

261. கொடு கால் - வளைந்த கால்களையுடைய பேய்மகளென முன்னே கூட்டுக.

261 - 2. விருந்து மாடத்து நெடு கடை துவன்றி உண்டு ஆறு. பெரு சோறு அட்டில் - விருந்தினர் மாடத்திடத்து நெடிய தலைவாசலிலே முற்பட நெருங்கியிருந்து பின்பு உள்ளே சென்று உண்டு மிக்குக் கிடக்கின்ற பெரிய சோற்றையுடைய அடுக்களை;

263 - 4. ஒள் சுவர் நல் இல் உயர் திணை இருந்து பைங்கிளி 1 மிழற்றும் பால் ஆர் செழுநகர்-சாந்திட்ட சுவர்களையுடைய நன்றாகிய அகங்களின் உயர்ந்த திண்ணைகளிலேயிருந்து பசிய கிளி வார்த்தை சொல்லுதற்குக் காரணமாகிய பால்நிறைந்த வளவியவூர்,

திண்ணை : விகாரம். இனி, உயர் திணை - உயர்ந்த மேனிலமென்றுமாம்.

265 - 7. [தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக், கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட, வுணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து :] கொடு வில் எயினர் தொடுதோல் அடியர் துடி பட குழீஇ கொள்ளை உண்ட உணவு இல் வறுகூடு உள் அகத்து இருந்து- கொடிய வில்லினையுடைய வேடர் செருப்புத் தொட்ட அடியினையுடையராய்த் துடியொலிப்பத் திரண்டு கொள்ளையாகக் கொண்டுண்ட நெல் பின் இல்லையான வறுவிய கூட்டினுடைய உள்ளாகிய இடத்தேயிருந்து,

268. 2 வளை வாய் கூகை நல் பகல் குழறவும் - வளைந்த வாயினையுடைய கூகை 3 அடியொத்த காலத்தே கூப்பிடும்படியாகவும்,

செழுநக (264) ரட்டிலிடத்துக் (262) கூட்டினுள்ளே யிருந்து (267) கூகை குழறவும் (268) என்க.

269 - 70. [அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப், பெரும்பாழ் செய்து மமையான் மருங்கற :] அரு கடி வரைப்பின் ஊர் கவின் அழிய 4 மருங்கு அற பெரு பாழ் செய்தும் அமையான் - அரிய காவலையுடைய

---

1 மிழற்ற லென்பதற்கு மெல்லக் கூறுதலென்றும் சில சொல்லுதலென்றும் உரை யெழுதுவர் ; சீவக. 1626, 2339, ந.

2 "நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப்பள்ளிக், குடிமிக் கூகை குராலொடு முரல" மதுரை. 169 - 70. 3 அடியொத்தகாலம் - நிழல் அடியோடு பொருந்தியகாலம் ; என்றது உச்சிக்காலத்தை ; "நிழலு, மடியகத் தொளிக்கு மாரழற் கானத்து" திருவாரூர். மும். 13.

4 மருங்கு - குலம் : " சூர் மருங்கு - சூரபன்மாவின் குலத்தை "

மதிலையுடைய பகைவர் படைவீடுகள் அழகழிய அவர்கள் குலமின்றாகப் பெரிய பாழாகப்பண்ணியதனாலும் செற்றம் ஆறானாய்,

பெற்றவை மகிழ்தல் செய்யானாய் (228) மேலும் ஆசைமிக்கு யானைகளோடும் (231) புரவிகளோடும் (232) போர்வேட்டு (234) முரசம் (236) முழங்கச் (237) சென்று முன்சமமுருக்கித் (238) தலைதவச் சென்று எடுப்பி (239) உகளவும் (245) உறையவும் (251) கதிர்ப்பவும் (257) விளிப்பவும் (258) குழறவும் (268) துவன்றவும் (260) பாழ் செய்தும் (270) ஊர்கவினழியப் (269) பாழ்செய்தும் அமையானாய் (270) என வினைமுடிக்க.

பாழ் செய்தலை இரண்டிடத்தும் கூட்டுக.

271 - 2. மலை அகழ்க்குவனே கடல் தூர்க்குவனே வான் வீழ்க்குவனே வளி மாற்றுவன் என - இவன் தெய்வத்தன்மையுடையனாதலின் இம்மலைகளையெல்லாம் அகழ்தலைச் செய்வன்; கடல்களையெல்லாம் தூர்த்தலைச் செய்வன்; தேவருலகைக் கீழ்வீழ்த்தலைச் செய்வன்; காற்றை இயங்காமல் விலக்குவனென்று உலகத்தார் மேற்கூறும்படியாகத் துறைபோகலினென்க.

பெரும்பாழ் செய்தும் அமையானாய், இங்ஙனம் பாழ்செய்தவன் மேல் இவையுஞ் செய்வனென்று கூறும்படியாகத் துறைபோனானென்றவாறு.

273. தான் முன்னிய துறைபோகலின் - தான் கருதிய போர்த் துறைகளெல்லாம் பொருதுமுடித்தானாகலின்,

274. பல் ஒளியர் பணிபு ஒடுங்க - பலராகிய [1] ஒளிநாட்டார் தாழ்ந்து தம் வீரங்குறைய,

ஒளியராவர் மற்றை மண்டலத்திற்கு அரசராதற்குரிய வேளாளர்.

275. தொல் அருவாளர் தொழில் கேட்ப - பழைய [2] அருவாள நாட்டிலரசரும் தாங்கள்செய்யுந் தொழிலை வந்துகேட்ப,

276. வடவர் வாட - அதற்கு வடக்கு நாட்டிலுள்ள அரசர்குறைய, குடவர் கூம்ப - குடநாட்டிலுள்ளார் மனவெழுச்சி குறைய,

277 - 91. [தென்னவன் றிறல்கெடச் சீறி மன்னர், மன்னெயில் கதவு மதனுடை நோன்றாண், மாத்தானை மறமொய்ம்பிற், செங்கண் ணாற் செயிர்த்துநோக்கிப், புன்பொதுவர் வழிபொன்ற, விருங்கோ வேண் மருங்குசாயக், காடுகொன்று நாடாக்கிக், குளந்தொட்டு வளம்

---

முருகு. 275; பட். 282, ந.

[1] ஒளி நாடென்பது செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தில் ஒன்று; தொல். எச்ச. சூ. 4, சே. ந.

[2] இது அருவா நாடெனவும் வழங்கும்; இதுவும் மேற்கூறிய பன்னிரு நிலத்துள் ஒன்று.

பெருக்கிப், பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக், கோயிலொடு குடி நிறீஇ, வாயிலொடு புழையமைத்து, ஞாயிறொறும் புதைநிறீஇப், பொருவேமெனப் பெயர்கொடுத், தொருவேமெனப் புறக்கொடாது, திருநிலைஇய பெருமன்னெயில் :]

புல் பொதுவர் வழி பொன்ற (281) - புல்லிய இடையராய் அரசாள்வோர் கிளைமுழுதுங் கெட்டுப்போக,

1 இருங்கோவேள் மருங்கு சாய (282) - ஐம்பெருவேளிர் குலமுழுதுங் குறைய,

காடு கொன்று (283) - சோழமண்டலத்திற் காடாகிய இடங்களை வெட்டிப் போகட்டு,

நாடு ஆக்கி (283) - பண்டுபோலக் குடியிருந்து விளையப்பண்ணி,

குளம் தொட்டு (284) - தூர்ந்த குளங்களைக் கல்லி,

வளம் பெருக்கி (284) - நாட்டிற்குச் செல்வத்தை மிகுத்து,

பிறங்கு நிலை மாடத்து உறந்தை 2 போக்கி (285) - பெரிய நிலைகளையுடைய மாடங்களையுடையஉறந்தையென்னும் தன்னூரைப்போக்கி,

கோயிலொடு குடி நிறீஇ (286) - கோயில்களோடே பழையகுடிகளையும் பண்டுபோல நிலைநிறுத்தி,

திரு நிலைஇய பெரு மன் எயில் (291) - திருமகள் நிலைபெற்ற பெரிய ஆக்கத்தையுடைய உறந்தையின் மதிலிடத்தே,

வாயிலொடு புழை அமைத்து (287) - பெரிய வாசல்களோடே சிறியவாசல்களையு முண்டாக்கி,

ஞாயில் தொறும் புதை நிறீஇ (288) - அதன்றலையில் எய்துமறையும் சூட்டுத்தோறும் அம்புக்கட்டுக்களையும் கட்டிவைத்து,

ஒருவேம் என புறம் கொடாது (290) பொருவேம் என பெயர் கொடுத்து (289) மன்னர் (277) மன் எயில் கதுவும் மதன் உடை நோன் தாள் (278) மா தானை மறம் மொய்ம்பின் (279) தென்னவன் திறல் கெட (277) செ கண்ணால் செயிர்த்து நோக்கி (280) சீறி (277) - யாம் தமியேமென்று கருதிப் பல அரசர்கள்வந்தால் முதுகிடாது அவர்களுடனும் பொரக்கடவேமென வஞ்சினத்தைச்சொல்லி அரசருடைய பெரிய அரண்களைக் கோபித்தழிக்கும் செருக்கினையுடைய வலிய முயற்சியினையும் பெருமையினையுடைய நாற்படையினையும் மறத்தையுடைத்தாகிய வலியினையுமுடைய பாண்டியனது வலிகெடும்படி தன் செய்ய கண்ணாலே குற்றத்தைச் செய்து பார்த்துக் கோபித்துப் பெற்றவை மகிழ்தல்செய்யா (228) னென முன்னே கூட்டுக.

---

1 இருங்கோவேளென்பான் திதியன்முதலிய ஐம்பெருவேளிர்களுள் ஒருவன்; மதுரை. 128 - 9, ந.

2 போக்கி - விரிவுறச்செய்து.

1 " கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக், குடிபழி தூற் றுங் கோலே னாகுக " என்று கூறும் வஞ்சினத்தால் தனக்கு ஓர் பெயர் பெறுதலின் வஞ்சினத்தைப் பெயரென்றார்.

292 - 4. [மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி, விசிபிணி முழவின் வேந்தர் சூடிய, பசும்மணி பொருத பரேரெறுழ்க் கழற்கால் :]

விசி பிணி முழவின் வேந்தர் தம் ஒளி மழுங்கி மின் ஒளி எறிப்ப சூடிய கழல் கால் - இறுகவலித்த வார்க்கட்டினையுடைய முரசுகளை யுடைய வழிபாடில்லாத வேந்தர் தம் அரசிழத்தலின் தமக்குமுன்புள்ள விளக்கங்கெட்டுப் பின்பு அவ் விளங்குகின்ற விளக்கம் தோன்றும்படி யாகத் தம் முடிமேலே சூடின வீரக் கழலையுடைய காலினையும்,

பசு மணி பொருத பரு ஏர் எறுழ் கழல் - பசிய மணிகளோடே மாறுபட்ட பெரிய அழகிய வலியினையுடைய கழலென்க.

295 - 7. பொன் தொடி புதல்வர் ஓடி ஆடவும் முற்று இழை மக ளிர் முகிழ் முலை திளைப்பவும் செ சாந்து சிதைந்த மார்பின் - பொன் னாற்செய்த தொடியினையுடைய பிள்ளைகள் ஓடிவந்து ஏறி விளையாடு கையினாலும் மெய்ம்முழுதுமணிந்த அணிகலங்களையுடைய மகளி ருடைய தாமரை முகைபோலும் முலைகள் புணர்தலாலும் சிவந்த சந்தன மழிந்த மார்பினையும்,

297. ஒள் பூண் - ஒள்ளிய பேரணிகலங்களையும்,

298. அரிமா அன்ன அணங்கு உடை துப்பின் - சிங்கவேற்றை யொத்த வருத்தத்தையுடைய வலியினையு முடைய,

299. திரு மா வளவன் - திருவின் பெருமையையுடைய கரிகாற் பெருவளத்தான்,

திண் காப்பு வாள் கழித்தேறிக் (226) காடுகொன்று நாடாக்கிக் (283) குளந்தொட்டு வளம்பெருக்கி (284) உறந்தைபோக்கி (285) குடி நிறீஇப் (286) பெருமன்னெயிலிலே (291) வாயிலொடு புழையமைத்து (287) ஞாயிறொறும் புதைநிறீஇ (288) இங்ஙனம் உருகெழுதாயம் ஊழி னெய்தித் (227) தென்னவன் திறல்கெடச்சீறி (277) அவன்திறை யாகத்தந்த அரசவுரிமைகளாற் பெற்றவையில் தான் மகிழ்தல் செய்யா னாய் (228) மேலும் ஆசைமிக்கு இவன் மலையகழ்க்குவன் தூர்க்குவன் (271) வீழ்க்குவன் மாற்றுவனென்று உலகங் கூறும்படியாக (272) உழிஞைசூடி (235) யானையோடும் (231) புரவியோடுஞ் (232) சென்று முருக்கி (238) எடுப்பிப் (239) பெரும்பாழ் செய்தும் அமையானாய்ப் (270) பணிபொடுங்கக் (274) கேட்ப (275) வாடக் கூம்பப் (276) பொன்றச் (281) சாயத் (282) தான் முன்னிய துறைபோகையினாலே (273) வழிபடா எனவேந்தர் (293) தம்மொளிமழுங்கி மின்னொளி

1 புறநா. எஉ : 11 - 2.

யெறிப்பச் (292) சூடிய (293) காலினையும் (294) மார்பினையும் பூணினை யும் (297) துப்பினையும் (298) உடைய கரிகாற் பெருவளத்தான் (299 என வினைமுடிக்க.

299 - 300. தெவ்வர்க்கு ஓக்கிய வேலினும் வெய்ய கானம் - [1] பகைவரைக் கொல்லுதற்கு அறுதியிட்டுவைத்த வேலினுங் கடியவா யிருந்தன காடு;

300 - 301. அவன் கோலினும் தண்ணிய தட மெல் தோளே - அவன் செங்கோலினுங் குளிர்ந்திருந்தன பெரிய மெல்லிய தோள்கள்.

நெஞ்சே (220), இவளை நேசமுடன் கொண்டு செல்வோமென்னின் கானம் அவன் (300) ஓக்கிய (299) வேலினும் வெய்யவாயிராநின்றன (300); இவடோள் (301) அவன் (300) கோலினும் தண்ணிய (301); இவளைப் பிரியாதுறைதலில் யான் போதற்கு ஆற்றுவாயிராநின்ற; ஆதலாற் பட்டினம்பெறினும் (218) வயங்கிழை ஈண்டுப் பிரிந்திருப்ப (219) யான் நின்னுடன் வாரேன்; இனி ஆண்டுப்போய் வாழ்வாயாக (220) என வினைமுடிக்க.

வாரேனென்றான், அவளை ஆற்றுவித்துப் பின்பு பிரிதல்கருதி. அது, [2] "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்" என்பதனு லுணர்க.

சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ண னார் பாடிய பட்டினப்பாலைக்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சி னார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

[3] முச்சக்கரமு * * * கானெருப்புற்று.

---

1 முல்லை. 77, ந.

2 தொல். கற்பு. சூ. 44.

3 இவ்வெண்பா பொருநராற்றுப்படை இறுதியிற் காட்டப்பட்டுள்ளது: ப. 128.

பத்தாவது

# * மலைபடுகடாம்.



*திருமழை தலைஇய விருணிற விசும்பின்*
*விண்ணதி ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்துத்*
*திண்வார் விசித்த முழவொ டாகுளி*
*நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டின்*
5 *மின்னிரும் பீலி யணித்தழைக் கோட்டொடு*
*கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தூம்பி*

---

* இந்நூல் கூத்தராற்றுப்படை யெனவும் வழங்கும்; தொல். எச்ச. சூ. 66, சே. ந; ஷை. புறத். சூ. 36, ந; ஷை. செய். சூ. 157, ந; ஷை ஷை. சூ. 228, இளம்; இ - வி. சூ. 300.

*பரந்த மொழியான் அடி நிமிர்ந்து வந்த தோலென்னும் வனப்பிற்கு இது மேற்கோள்*; தொல். செய். சூ. 228, இளம்.

1. *திருமழைதலைஇய*: " *தலைப்பெய நலைஇய* " முருகு. 9. இருணிற விசும்பு: " *இருணிற விருவிசும்பு* " (சீகாளத்தி. தென் கயிலை. 62); முருகு. 116, அடிக்.

இவ்வடி *கூத்தராற்றுப்படைக்கும்* (தொல். புறத். சூ. 36, ந.), *ஆசிரியம் அளவடியான் வந்ததற்கும், முடுகுதற்கும் மேற்கோள்*; தொல். செய். சூ. 32, பேர். ந; 67,

2. '*கடுப்ப*' *என்பது மெய்யுவமத்திற்குரியசொல்லென்பதற்கும்* (தொல். உவம. சூ. 15, இளம்.), *சிறுபான்மை பயனுவமத்திற்கும் வரு மென்பதற்கும்* (ஷை. ஷை. சூ. 14, பேர்.) *மேற்கோள்.*

1 - 2. மதுரை. 560.

3. '*முழ*' *உகரம் பெறுமல் வந்ததற்கு மேற்கோள்*; தொல். குற் *றியலுகர*. 78, ந.

2 - 3. " *பண்ணமை முழவு* " பதிற். *சக* : 3.

1 - 3. மலைபடு. 532; முருகு. 121, அடிக்.

5. பி - ம். '*அணிதழை*'

" *தாழ்பீலிப் பல்லியம்* " பு - வே. 24.

6. மலைபடு. 533; " *கண்ணறுத் தியற்றிய தூம்பு* " (பதிற். *சக* : 4); " *கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்* " புறநா. *கருஉ* : 15.

விளிப்பயி ரிமிருங் குறும்பரார் தூம்பொடு
விளிப்பது கவருந் தீங்குழ றுதைஇ
நடுவுநின் றிசைக்கு மரிக்குரற் றட்டை
10 கடிகவர் பொலிக்கும் வல்வா யெல்லரி
நொடிதரு பாணிய பதலையும் பிறவுங்
கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்
கடுக்கலித் தெழுந்த கண்ணகன் சிலம்பிற்
15 படுத்துவைத் தன்ன பாறை மருங்கி
னெடுத்துநிறுத் தன்ன விட்டருஞ் சிறுநெறி
தொடுத்த வாளியர் துணைபுணர் கானவ
ரிடுக்கண் செய்யா தியங்குந ரியக்கு
மடுக்கன் மீமிசை யருப்பம் பேணு

7. இவ்வடியின் பாடபேதம்போல் தோன்றும், "விளிப்பது பயி லுங் குறும்பர்துந் துமியொடு" என்ற அடியை வினைமுற்று வினையெச்ச மாதற்கு மேற்கோள் காட்டுவர்; நன். சூ. 350, மயிலை.

11. பாணிய பதலை: "பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்" குறுந். ருகூ : 1.

2 - 11. புறநா. ௧௫௨ : 14 - 8.

11 - 2. மலைபடு. 142 - 4.

13. மலைபடு. 365; "காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை" புறநா. ௨௦௬ : 10.

3 - 13. "புணர்புரி நரம்பின் றீந்தொடை பழுனிய, வணரமை நல்யா ழிளையர் பொறுப்பப், பண்ணமை முழவும் பதலையும் பிறவுங், கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக், காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்" (பதிற். ௪௧ : 1 - 5); "ஒருதலைப் பதலை தூங்க வொரு தலைத், தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கி", "சுவலழுந்தப் பலகாய, சில்லோதிப் பல்லிளைஞர்" புறநா. ௧௦௩ : 1 - 2, ௧௩௯ : 1 - 2.

15. மதுரை. 278, அடிக்.

16. "விசும்பினுக் கேணி நெறியன்ன சின்னெறி" திருச்சிற். 149. "செல்வர் மனத்திறேங்கி.........அஃகுநெறி" (சீவக. 1416) எனபதற்கு இவ்வடி மேற்கோள்.

15 - 6. தொல். களவி. சூ. 55, சே; இ - வி. சூ. 321, மேற்.

17 - 8. பெரும்பாண். 39 - 41.

19. மீமிசை, ஒருபொருட் பன்மொழி யென்பதற்கு மேற்கோள்; ா - வி. சிறப்பு.

20 திடிச்சுர நிவப்பி னியவுக்கொண் டொழுகித்
தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவிற்
கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி
னரலை தீர வுரீஇ வரகின்
25 குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
யிலங்குதுளை செறிய வாணி முடுக்கிப்
புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப்
புதுவது போர்த்த பொன்போற் பச்சை
30 வதுவை நாறும் வண்டுகம ழைம்பான்
மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்
தடங்குமயி ரொழுகிய வவ்வாய் கடுப்ப
வகடுசேர்பு பொருந்தி யளவினிற் றிரியாது

---

21. பொருந. 14 - 5, அடிக்.

தொண்டுபடுதிவவு : "தொண்டுபடு திவவின் முண்டக நல்யாழ்" ஆசிரியமாலை.

22. பி - ம். 'கேள்வி போகாது'

பொருந. 16 - 8.

23. சுகிர்புரி நரம்பு : "சுகிர்புரி நரம்பின் சீறியாழ்". (புறநா. ௧0௬ : 15); "வீணைச் சுகிர்புரி நரம்பு" சீவக. 728.

முருகு. 140 - 41.

21 - 3. சீவக. 559, ந. மேற்.

24. இயைபு வண்ணத்திற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். செய். சூ. 219, பேர்.

24 - 5. பெரும்பாண். 7 - 8.

27. பொருந. 10.

28. இவ்வடி, வினையெச்சம் அகரவீறன்றிப் பிற ஈற்றால் முடிக்குஞ் சொல்லை விசேடித்து வருதற்கு மேற்கோள்; தொல். வினை. சூ. 31, கல். ந.

30. பொருந. 19 - 20, அடிக் ; " விழவொலி கூந்தல் " (ஐங்குறு. ௬0௬ : 4); " கடிமகள் கதுப்பி னறி ", " வதுவை மகளிர் கூந்தல் கமழ்கொள " அகநா. ௨௬௬ : 5, ௩௭௮ : 2.

33. பி - ம். ' பொருந்திய வளவினில் '

இன்னுருபு வருமிடத்து இன்சாரியை வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; தொல். புணரியல், சூ. 29, ந.

31 - 3. பொருந. 6 - 8.

கவடுபடக் கவைஇய சென்றுவாங் குந்தி
35 நுணங்கர நுவறிய நுண்ணீர் மாமைக்
களங்கனி யன்ன கதழ்ந் துகிளர் உருவின்
வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியா
ழுமைவரப் பண்ணி யருநெறி திரியா
திசைபெறு திருவின் வேத்தவை யேற்பத்
40 துறைபல முற்றிய பைதீர் பாணரொ
டுயர்ந்தோங்கு பெருமலை யூறின் றேறலின்
மதந்தபு ஞமலி நாவி னன்ன
துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடிக்
கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ
45 விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத்
திலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்றக்
கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழற்

35. பி - ம். 'நுணங்கற னுவறிய'

37. "வணரமை நல்யாழ்" (பதிற். ௪௧ : 2) ; "வணர்கோட்டுச் சீறியாழ்" புறநா. ௧௫௫ : 1.

வள்ளுயிர்ப் பேரியாழ் : குறிஞ்சி. 100.

36 - 7. "களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்" புறநா. ௧௨௭ : 1, ௧௪௫ : 5.

42 - 3. பொருந. 42, அடிக்.

44. சிறுபாண். 14 - 5, அடிக்.

கதுப்பிகுத் தசைஇ : பட். 259.

45 - 6. சிறுபாண். 31.

44 - 6. இவ்வடிகளைப் பொருளானந்தமென்பர் ; யா - வி. ஒழிபு.

41 - 6. புறநா. ௧௩௫ : 1 - 10.

47. "கயங்கண் டன்ன......பெருமரக் குழாம்" (மலைபடு. 259-65); "பொய்கையும் போன்றதே, ஈச னெந்தை யிணையடி நீழலே" (தே. திருநா.); "கொய்ம்மலர்க் காவகம்......தெண்கயம் புக்கது போன்றதே" (சீவக. 872); "அசோகந் தண்பொழில், மணிக்கயத் தியன்ற மறுவி றண்ணிழல்", "அழல்கண் ணகற்றி நிழன்மீக் கூரி, நீர்புக் கன்ன நீர்மைத் தாகி" (பெருங். ௧. 40 : 121 - 2, ௨. 13 : 17 - 8); "வெவ்வாறு மெனக்குளிர்ந்து வெயிலியங்கா வகையியங்கும் விரிபூஞ் சோலை" கம்ப. நாடவிட்ட. 22.

புனல்கால் கழீஇய மணல்வார் புறவிற்
புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக்
50 கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ
தூமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின்
மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்
கியாமவ ணின்றும் வருது நீயிருங்
கனிபொழி கானங் கிளையொ டுணீஇய
55 துனைபறை நிவக்கும் புள்ளின மானப்
புனைதார்ப் பொலிந்த வண்டுபடு மார்பின்
வனைபுனை யெழின்முலை வாங்கமைத் திரடோண்
மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன்
முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பி
60 னிசைநுவல் வித்தி னசையே ருழவர்க்குப்
புதுநிறை வந்த புனலஞ் சாயன்

---

48. பெரும்பாண். 380.
"நீர்கால் கழீஇய வார்மண லெக்கர்" பெருங். ௧. 42 : 91.
50. மலைபடு. 569, அடிக்.
தொல். புள்ளிமயங். சூ. 17, ந. மேற்.
53. சிறுபாண். 143; பெரும்பாண். 28.
51 - 3. பெரும்பாண். 427, அடிக்; "மலையி னிழிந்து மாக்கட னோக்கி, நிலவரை யிழிதரும் பல்யாறு போலப், புலவ ரெல்லா நின் னோக்கினரே" (புறநா. ௪௨ : 19 - 21); "கடுவரை நீரிற் கடுத்துவர" (பு - வெ. 11); "பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய், மொய் கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்" கம்ப. கையடை. 15.
54 - 5. பொருந. 64, அடிக்; "வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி" புறநா. ௪௭ : 1.
57. "வாங்கமை மென்றோள்" பதிற். ௧௨ : 22.
58. மலைபடு. 424; "கொடுங்குழை கணவ", "திருந்திழை கணவ", "வாணுதல் கணவ", "நன்னுதல் கணவ", "ஆன்றோள் கணவ", "நல்லோள் கணவன்", "சேயிழை கணவ", "புரையோள் கணவ", "சேயிழை கணவ", "ஒண்டொடி கணவ" (பதிற். ௧௪ : 15, ௨௪ : 11, ௩௮ : 10, ௪௨ : 7, ௫௫ : 1, ௬௧ : 4, ௬௫ : 10, ௭௦ : 16, ௮௮ : 36, ௯௦ : 50); "செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ" புறநா. ௩ : 6.
59. மூ. குறிஞ்சி. 128.
60. "வித்திய பனுவல்" புறநா. ௨௩௭ : 5.
61. "வானி நீரினுந், தீந்தண் சாயலன்" (பதிற். ௮௬ : 12 - 3);

மதிமா றோரா நன்றுணர் சூழ்ச்சி
வின்னவி றடக்கை மேவரும் பெரும்பூ
ணன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொ
65 டுள்ளினிர் சேறி ராயிற் பொழுதெதிர்ந்த
புள்ளினிர் மன்ற வெற்றாக் குறுதலி
னாற்றி னளவு மசையுநற் புலமும்
வீற்றுவளஞ் சுரக்குமவ னாடுபடு வல்சியு
மலையுஞ் சோலையு மாபுகல் கானமுந்
70 தொலையா நல்லிசை யுலகமொடு நிற்பப்
பலர்புறங் கண்டவ ரருங்கலந் தரீஇப்

---

"நீரினுஞ் சாய லுடையன்", "வேனிற் புனலன்ன நுந்தை" (கலி. ௪௨ : 20, ௮௪ : 38); "நீரினு மினிய சாயற், பாரி" புறநா. ௧0௫ : 7-8.

50 - 65. "கூத்தராற்றுப்படையுள், 'கலம்பெறு......தலைவ' என அண்மைவிளியேற்று முன்னிலை குறித்து நின்ற ஒருமைப்பெயர், 'நீயிரும்......சேறிராயின்' எனப்பன்மையோடு முடிந்தது. இவ்வாறு வருங்காற் கூத்தரும் பாணரும் விறலியருமாகி ஆண்டுச் செல்வார் பலராயுழியே வரப் பெறுவதென்றும் தனியொருவனாயின் மயங்கப் பெறாதென்றுங் கொள்க" தொல். எச்ச. சூ. 60, தெய்வச்.

65 - 6. புள் : மலைபடு. 448 ; பெரும்பாண். 155; புறநா. ௧௨௪ : 2.
ஒப்பு : பொருந. 59 ; "நல்ல சகுன மென்னவெதிர் கண்டு வந் தாய் நம்பிநீ......புல்ல நின்றாய்" (பிரபு. பிரபுதேவர்வந்த. 47) ; "ஒரு நெறி யெதிர்ப்பா டுற்றது முன்னைப், பழுதறு பெருந்தவப் பயனது போலும்" தணிகையாறு. 169 - 70.

68. மலைபடு. 462 ; "நாடென்ப நாடா வளத்தன" (குறள். 739); "நிலஞ் சுரக்கு நிறைவளம்" கம்ப. நாடு. 38.

70. தொலையா நல்லிசை : "செல்லா நல்லிசை" (மலைபடு. 388); "கெடாஅ நல்லிசை நிலைஇ", "நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து" (பதிற். ௧௪ : 21, ௮௬ : 5); "மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும்......சாவா வுடம்பெய்தினார்" (திரி. 16); "ஒருவன திரண்டி யாக்கை யூன்பயி னரம்பின் யாத்த, வுருவமும் புகழு மென்றாங் கவற்றி னூழ் காத்து வந்து, மருவிய வுருவ மிங்கே மறைந்துபோ மற்ற யாக்கை, திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே", "பொன்று மிவ்வுட லின்பொருட், டென்று நிற்கு மிரும்புக, ழின்று நீர்கழிந் தீர்களாற், குன்றின் மேற்குடை வேந்திர்காள்" (சூளா. சீயவதை. 204, அரசியல், 226); ப. ௧௨௧ : 1 - ஆம் அடிக். ; ப. ௨௫௭ : 4 - ஆம் அடிக்.

புலவோர்க்குச் சுரக்குமவ னீகை மாரியு
மிகழுநர்ப் பிணிக்கு மாற்றலும் புகழுநர்க்
கரசுமுழுது கொடுப்பினு மமரா நோக்கமொடு
75 தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கையு
நல்லோர் குழீஇய நாநவி லவையத்து
வல்லா ராயினும் புறமறைத்துச் சென்றோரைச்
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
80 நல்லிதி னியக்குமவன் சுற்றத் தொழுக்கமு
நீரகம் பனிக்கு மஞ்சுவரு கடுந்திறற்
பேரிசை நவிர மேஎ யுறையுங்

---

72. ஈகைமாரி: மலைபடு. 75 - 6, 580.

71 - 2. சிறுபாண். 247 - 8, அடிக்; மதுரை. 145 - 6, அடிக்; "ஆண்டுநீர்ப் பெற்ற தார மீண்டிவர், கொள்ளாப் பாடற் கெளிதினி னீயும்" (பதிற். ௪௮ : 5 - 6); "எத்தினர் தரூஉங் கூழே நுங்குடி, வாழ்த்தினர் வரூஉ மிரவல ரதுவே", "வேந்துதரு விழுக்கூழ் பரி சிலர்க் கென்றும், அருகா தீயும் வண்மை" புறநா. ௧௨௨ : 6 - 7, ௩௨௦ : 16 - 7.

73. மதுரை. 139 - 40.

73 - 4. மதுரை. 131 - 2, அடிக்.

75 - 6. "ஈகைமாரி", "மழைசுரந் தன்ன வீகை நல்கி" (மலைபடு. 72, 580); (சிறுபாண். 124, அடிக்; மதுரை. 442, அடிக்); "ஆர் கலி வானந் தளிசொரிந் தாஅங், குறுவ ரார வோம்பா தூண்டு, நகைவ ரார நன்கலஞ் சிதறி" (பதிற். ௪௩ : 18 - 20); "நின், சுரத்தலும் வண்மையு மாரியுள", "அவன், வண்மைபோல் வானம் பொழிந்தநீர்" (பரி. ௪ : 27, ௨௨ : 7 - 8); "மழைசுரந் தன்ன வீகை" (அகநா. ௨௩௮ : 13); "வானத் தன்ன வண்மையும்", "மாரியன்ன வண்மை", "வரையா மரபின் மாரி போல.........கொடைமடம் படுதல்", "மாரி யீகை மறப்போர் மலையன்", "மாரி யன்ன வண்மையிற் சொரிந்து" (புறநா. ௫௫ : 15, ௧௩௩ : 6, ௧௪௨ : 3 - 5, ௧௫௮ : 7, ௩௬௭ : 16); "மாரியி னேற்பார்க் கவைநல்கி", "மாரிமழை வள்ளல்", "மழைவள்ளல்" சீவக. 365, 500, 899.

77 - 80. மூதுரை. 282 - 6.

82. மேவென்பது நசையென்னும் குறிப்பை உணர்த்துமென் பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 32, இளம். சே. தெய்வச். ந; இ - வி. சூ. 281.

காரி யுண்டிக் கடவுள தியற்கையும்
பாயிரு ணீங்கப் பகல்செய்யா வெழுதரு
85 ஞாயி றன்னவவன் வசையில் சிறப்பு
மிகந்தன வாயினுந் தெவ்வர் தேஎ
நுகம்படக் கடந்து நூழி லாட்டிப்
புரைத்தோல் வரைப்பின் வேனிழற் புலவோர்க்குக்
கொடைக்கட னிறுத்தவவன் றொல்லோர் வரவு
90 மிரைதேர்ந் திவருங் கொடுந்தாண் முதலையொடு
திரைபடக் குழிந்த கல்லகழ் கிடங்கின்
வரைபுரை நிவப்பின் வான்றோ யிஞ்சி
யுரைசெல வெறுத்தவவன் மூதூர் மாலையுங்
கேளினி வேளைநீ முன்னிய திசையே
95 மிகுவளம் பழுநிய யாணர் வைப்பிற்
புதுவது வந்தன் றிதுவதன் பண்பே
வானமின்னு வசிவு பொழிய வானு

---

83. காரியுண்டிக் கடவுள் : சீவக. 670.

84-5. பாயிருள்......ஞாயிறு : "பாயிருள் பருகிப், பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி" பெரும்பாண். 1-2.

"பாயிரு ணீங்கப் பல்கதிர் பரப்பி, ஞாயிறு குணமுதற் றோன்றி யாஅங்கு", "மாயிரு விசும்பிற் பன்மீ னொளிகெட, ஞாயிறு தோன்றி யாங்கு மாற்றா, ருறுமுரண் சிதைத்தநின் னோன்றாள்" பதிற். ருக : 5-6, சுச : 12-4.

பகல் செய்யா வெழுதரு ஞாயிறு: பெரும்பாண். 441-2; ப. உருரு: முதலடிக்.

87. நுகம்படக்கடந்து : "நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி" குறுந். அ০ : 5.

89. கொடைக்கடனிறுத்த : மலைபடு. 543; பெரும்பாண். 446, அடிக்.

90. கொடுந்தாண் முதலை : குறிஞ்சி. 257.

இரைதேர்ந்திவரும்.........முதலை : "இரைதேர் முதலையும்" சிலப். கங : 7.

91. கல்லகழ் கிடங்கு : மதுரை. 730, அடிக்.

92. "கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி" பதிற். கரு : ௧.

வான்றோ யிஞ்சி : "விண்ணுற நிவந்த பண்ணமை படைமதில்" பெருங். ௩. 4 : 3.

திட்ட வெல்லாம் பெட்டாங்கு விளையப்
பெயலொடு வைகிய வியன்க ணிரும்புனத்
100 தகலிரு விசும்பி னாஅல் போல
வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை
நீலத் தன்ன விதைப்புன மருங்கின்
மகுளி பாயாது மலிதுளி தழாலி
னகளத் தன்ன நிறைசுனைப் புறவிற்
105 கௌவை போகிய கருங்காய் பிடியேழ்
நெய்கொள வொழுகின பல்கவ ரீரெண்
பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக்
கொய்பத முற்றன குலவுக்குர லேனல்
விளைதயிர்ப் பிதிர்வின் வீயுக் கிருவிதொறுங்
110 குளிர்புரை கொடுங்காய் கொண்டன வவரை
மேதி யன்ன கல்பிறங் கியவின்
வாதிகை யன்ன கவைக்கதி ரிறைஞ்சி

---

97 - 8. மதுரை. 10 - 11.

100. அகலிரு விசும்பு: பெரும்பாண். 1; மதுரை. 267.

101. புன்கொடி முசுண்டை: நெடுநல். 13.

100 - 101. மதுரை. 280 - 81.

'ஆரல்' ஆலென்று வந்த இடைக் குறைக்கு இவ்வடிகள் மேற்கோள்; யா - வி. ஒழிபு. சூ. 2; யா - கா. ஒழிபு. 8, உரை.

99 - 101. ஊனங் தோன்றிய ஆனந்தவுவமை யென்பர்; யா - வி. ஒழிபு. சூ. 3.

102. மதுரை. 279.

105. கௌவை: மதுரை. 271.

105 - 6. ஐகார ஔகாரக் குறுக்கமும் நேரசையென்பதற்கு மேற்கோள்; யா - வி. அசை. சூ. 2.

108. பி - ம். 'குவவுக்குரலேனல்'

107 - 8. தினைக்கதிர்க்கு யானைக்கை உவமை: குறிஞ்சி. 35 - 8, அடிக்.

109 - 10. தினையரிதாளில் அவரை விளைதல்: "பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகாற், கொழுங்கொடி யவரை பூக்கும்" (குறுந். அ௨ : 4 - 5); "சிறுதினை கொய்த விருவி வெண்காற், காய்த்த வவரை" ஐங். உஅசு : 1 - 2.

111. "எருமை யன்ன கருங்கல்" புறநா. ரு : 1.

112. வடசொல் சிதைந்து வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; தொல். எச்ச. சூ. 6, ந; இ - வி. சூ. 175.

யிரும்புகவர் வுற்றன பெரும்புன வரகே
பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு
115 வாலிதின் விளைந்தன வைவனம் வெண்ணெல்
வேலீண்டு தொழுதி யிரிவுற் றென்னக்
காலுறு துவைப்பிற் கவிழ்க்கனைத் திறைஞ்சிக்
குறையறை வாரா நிவப்பி னறையுற்
றலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே
120 புயற்புனிறு போகிய பூமலி புறவி
னவற்பதங் கொண்டன வம்பொதித் தோரை
தொய்யாது வித்திய துளர்படு துடவை
யையவி யமன்ற வெண்காற் செறுவின்
மையென விரிந்தன நீணறு நெய்தல்
125 செய்யாப் பாவை வளர்ந்துகவின் முற்றிக்
காயங் கொண்டன விஞ்சி மாவிருந்து
வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும்
விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை

---

113. "இரும்புகவர் கொண்ட வேனற் பெருங்குரல்" நற். ௧௬௪ : 9.

112 - 3. கவைக்கதிர்......வரகு : "கவைக்கதிர் வரகின் சீறூர்" (அகநா. ௩௮௪ : 6); "கவைக்கதிர் வரகும்" பெருங். ௧. 49 : 105.

115. பி - ம். 'ஐவன வெண்ணெல்'

118 - 9. அறையுற்று.........அலமருங்கரும்பு : "அறைக்கரும்பு" (பொருந. 193); "அறையுறு கரும்பு" பதிற். எ௫ : 6 ; பெருங். ௧. 48 : 146.

116 - 9. கரும்புக்கு வேல் உவமை : "கரும்பின், வேல்போல் வெண்முகை" (நற். ௩௬௬ : 7 - 8); "தோடுகொள் வேலின் றோற்றம் போல, வாடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்" புறநா. ௩௫ : 9 - 10.

122. "ஏறு பொருதசெறு வுழாதுவித் துநவும்" பதிற். ௧௩ : 2. துளர்படு துடவை : "தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை" (பெரும்பாண். 201); "துடவையஞ் சிறுதினைத், துளரெறி நுண்டுகட் களைஞர் தங்கை" குறுந். ௩௯௨ : 4 - 5.

124. "மைவிரிந்தன நீலமும்" சூளா. நாடு. 11.

125 - 6. "பாவை யிஞ்சி" பெருங். ௧. 51 : 23.

127. பிடி முழந்தாள் : பெரும்பாண். 53, அடிக்; கலி. ௫௦ : 2.

128. மதுரை. 534, அடிக்.

காழ்மண் டெஃகங் களிற்றுமுகம் பாய்ந்தென
130 வூழ்மல ரொழிமுகை யுயர்முகந் தோயத்
துறுகல் சுற்றிய சோலை வாழை
யிறுகுகுலை முறுகப் பழுத்த பயம்பு
கூழுற் றலமரு முந்தூ ழகல்றைக்
கால மன்றியு மரம்பயன் கொடுத்தலிற்
135 காலி னுதிர்ந்தன கருங்கனி நாவன்
மாறுகொள வொழுகின வூறுநீ ருயவை
நாறுகொடி புழீஇயின கூவை சேறுசிறந்
துண்ணுநர்த் தடுத்தன தேமாப் புண்ணரிந்
தரலை யுக்கன நெடுந்தா ளாசினி
140 விரலூன்று படுக ணகுளி கடுப்பக்

129. "எடுத்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து, பிடிக்கண மறந்த வேழம்" முல்லை. 68 - 9.

காழ் மண்டெஃகம்: மதுரை. 739, அடிக்; "மடையமை திண் சுரை மாக்காழ் வேலொடு", "மாக்காழ் நெடுவேல்" (அகநா. கக்க: 13, ௩கூக: 18); "வேலே...... இருங்காழொடு......நிலைதிரிந் தனவே" புறநா. கஎ : 4 - 7.

131. சோலை வாழை: "சோலை வாழைச் சுரிநுகும்பு" குறுந். ௩0அ : 1.

134. "கால மன்றியு மரம்பயம் பகரும், யாண ரறாஅ வியன் மலை" (புறநா. ககசு : 13 - 4); "பருவ மன்றியும் பயன்கொடுப் பறாஅப், பலவு மாவுங் குலைவளர் வாழையு, மிருங்கனி நாவலு மிளமா துளமும்" (பெருங். உ : 20 : 61 - 3); "காலமன்றியுங் கனிந்தன கனி", "தீங்கனி, கால மின்றிக் கனிவது காண்டிரால்" கம்ப. வனம்புகு. 44, நாடவிட்ட. 18.

135. கருங்கனி நாவல்: புறநா. கஎஎ : 11.

137. "கூவை நாறுங் கொழுங்கொடிக் கவலையும்" (சிலப். உரு: 42); "பாவை யிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்" பெருங். க. 51 : 23.

138. "உண்ணுநர்த் தடுத்த நுண்ணிடி நுவணை" (மலைபடு. 445); "உண்ணுநர்த் தடுத்த, சாரற் பலவின்சுளை" அகநா. உ : 2 - 3.

138 - 9. புண்ணரிந்துக்கன ஆசினி: "கலைதொடு பெரும்பழம் புண்கூர்ந் தூறலின்" (மலைபடு. 292); "பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்" (பதிற். சுக : 1); "அள்ளிலைப் பலவி னளிந்துவீழ் சுளையும்" சீவக. 2109.

குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்துக்
கீழு மேலுங் கார்வாய்த் தெதிரிச்
சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி
முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்குசினைப் பலவே
145 தீயி னன்ன வொண்செங் காந்தட்
டூவற் கலித்த புதுமுகை யூன்செத்
தறியா தெடுத்த புன்புறச் சேவ
லூஉ னன்மையி னுண்ணா துகுத்தென
நெருப்பி னன்ன பல்லிதழ் தாஅய்
150 வெறிக்களங் கடுக்கும் வியலறை தோறு
மணவில் கமழு மாமலைச் சாரற்
றேனினர் கிழங்கினர் ஊனார் வட்டியர்

---

141. "குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை" (நன். சூ. 458, மயிலை. மேற்.); "குடிஞை யிரட்டுங் குளிர்வரை" பழ. 246.

140-41. பொருந. 210, அடிக்.

143. மலைபடு. 511.

143-4. மலைபடு. 11-2.

145. மலைபடு. 149; முருகு. 43; ப. ௨௪௪: 5-ஆம் அடிக்; "கார்த்திகை .....விளக்கிற் பூத்தன தோன்றி" (கார். 26); "வழுகி தழ்க் காந்தண்மேல் வண்டிருப்ப வொண்டீ, முழுகியதென் றஞ்சி முது மந்தி - பழகி, யெழுந்தெழுந்து கைநெரிக்கு மீங்கோயே திங்கட், கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று" (ஈங்கோய். 70); "தண் காந்த ளம்பூத், தழல்போல் விரியும்" (பாண்டிக்.); "தோன்றி வில்விளக்கே பூக்கும்" (நள. கலிதொடர். 28); "குழலிசைய வண் டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற் பாய, வழலெரியின் மூழ்கினவால்" யா - வி. சூ. 67, மேற்.

ஈகாரவீறு வேற்றுமைக்கண் இன்பெற்று வந்ததற்கும், இரண்டாம் வேற்றுமை யுருபு அன்ன வென்பதையுங் கொண்டு முடியுமென்பதற்கும் இவ்வடி மேற்கோள்; தொல். குற்றியலுகர. சூ. 78, ஷை எச்ச. 18, ந.

145-6. தொல். உவம. சூ. 16, பேர். மேற்.

149-50. மதுரை. 279-84, அடிக். "பூம்போது சிதைய வீழ்ந் தெனக் கூத்த, ராடுகளங் கடுக்கும்" புறநா. ௨௮: 13-4.

145-50. பரிசிற் பொருளானந்தத்திற்கு இவ்வடிகளை மேற்கோள் காட்டுவர்; யா - வி. ஒழிபு. சூ. 3.

152. ஊனார்வட்டி: "வேட்டுவன் மான்றசை சொரிந்த வட்டி யும்" புறநா. ௩௩: 1-2.

சிறுகட் பன்றிப் பழுதுளி போக்கிப்
பொருதுதொலை யானைக் கோடுசீ ராகத்
155 தூவொடு மலிந்த காய கானவர்
செழும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே
யிரும்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவி
ரன்றவ ணசைஇ யற்சேர்ந் தல்கிக்
கன்றெறி யொள்ளிணர் கடும்பொடு மலைந்து
160 சேந்த செயலைச் செப்பம் போகி
யலங்குகழை நரலு மாரிப் படுகர்ச்
சிலம்படைந் திருந்த பாக்க மெய்தி
நோனாச் செருவின் வலம்படு நோன்றா
மான விறல்வேள் வயிரிய மெனினே
165 நும்மில் போல நில்லாது புக்குக்
கிழவிர் போலக் கேளாது கெழீஇச்
சேட்புலம் பகல வினிய கூறிப்
பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு
குரூஉக்க ணிறடிப் பொம்மல் பெறுகுவி
170 ரேறித் தரூஉ மிலங்குமலைத் தாரமொடு

---

50 - 157. ஆற்றுப்படையுள் ஒருமைச்சொல் பன்மையோடு முடிவதற்கு, 'கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ...........இரும்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவிர்' என்னும் பகுதி மேற்கோள்; தொல். எச்ச. சூ. 66, இளம். சே. ந; இ - வி. சூ. 300.

158. மலைபடு. 256.

159 - 60. "செந்தீ யொண்பூம் பிண்டி" (மதுரை. 700 - 701); "எரியவி ருருவி னங்குழைச் செயலை", "செந்தீ யொண்பூம் பிண்டி" (குறிஞ்சி. 105, 118-9); "அணிமல ரசோகம் பூத்தன.........அழற்கணை தரித்த போன்றவே" நைடதம், அன்னத்தைக் கண்ணுற்ற. 36.

162 - 3. பி - ம். 'எய்திநோனாச் செருவின்'

164. மானவிறல்வேள் : மதுரை. 344.

165. மலைபடு. 491; "எங்கோ னிருந்த கம்பலை மூதூர், உடையோர் போல விடையின்று குறுகி" புறநா. ௩௪ : 1 - 2.

169. 'குரு' என்னும் பண்புரிச்சொல் நிறத்தையுணர்த்தி நீண்டு வருவதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 5, ந.

164 - 9. பெரும்பாண். 103 - 5.

வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்
குறைவின்று பருகி நறவுமகிழ்ந்து வைகறைப்
பழஞ்செருக் குற்றநும் மனந்த நீர
வருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்
175 வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை
முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ
வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனி
னின்புளிக் கலந்து மாமோ ராகக்
180 கழைவளர் நெல்லி னரியுலை யூழ்த்து
வழையமை சாரல் கமழத் துழைஇ
நறுமல ரணிந்த நாறிரு முச்சிக்
குறமக ளாக்கிய வாலவிழ் வல்சி

---

171. மலைபடு. 522; முருகு. 195, அடிக்.
தேக்கட்டேறல்: "தேம்பிழி தேறல்" குறிஞ்சி. 155.
172. பி-ம். 'குழைவின்று பருகி'
173. பொருந. 94-ஆம் அடியின் கீழ்க் குறிப்பினையும், மதுரை. 669-ஆம் அடியையும் பார்க்க.
174. அருவிதந்த பழம்: "ஆசினி முதுசுளை கலாவ............இழி தரு மருவி" (முருகு. 301-16); "பூநாறு பலவுக்கனி, வரையிழி யருவி யுண்டுறை தரூஉம்" குறுந். ௯0: 4-5.
176. "முளவுமா வல்சி" ஐங். ௩௬௪: 1, பி-ம்.
முளவுமாத் தொலைச்சிய: "முளவுமாத் தொலைச்சுங் குன்ற நாட" (அகநா. ௧௮௨: 8); "முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவர்" புறநா. ௩௨௫: 6.
177. "முடுவ றந்த பைந்நிணத் தடியொடு" மலைபடு. 563.
176-7. தொல். குற்றியலுகர. சூ. 78, இளம். ந; இ-வி. சூ. 90, மேற்.
179. இன்புளி: "தீம்புளி" மதுரை. 318.
181. பி-ம். 'வழையமல்'
வழையமை சாரல்: "நாகநெடுவழி" (சிறுபாண். 88); "வழைய மல் வியன்காடு" (பதிற். ௪௧: 13); "வழையமை நறுஞ்சாரல்" (கலி. ௫௩: 1); "வழையம லடுக்கத்து" அகநா. ௩௨௮: 1.
179-83. இன்புளிக் கலந்து..............குறமகளாக்கிய வல்சி: "எயிற்றிய ரிட்ட வின்புளி வெஞ்சோறு" சிறுபாண். 175.

யகமலி யுவகை யார்வமொ டளைஇ
185 மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர்
செருச்செய் முன்பிற் குருசின் முன்னிய
பரிசின் மறப்ப நீடலு முரியி
ரனைய தன்றவன் மலைமிசை நாடே
நிரையிதழ்க் குவளைக் கடிவீ தொடினும்
190 வரையர மகளி ரிருக்கை காணினு
முயிர்செல வெம்பிப் பனித்தலு முரியிர்
பலநா ணில்லாது நிலநாடு படர்மின்
விளைபுன நிழத்தலிற் கேழ லஞ்சிப்
புழைதொறு மாட்டிய விருங்க லரும்பொறி
195 யுடைய வாறே நள்ளிரு ளலரி
விரிந்த விடியல் வைகினிர் கழிமி
னளிந்துபலர் வழங்காச் செப்பந் துணியின்
முரம்புகண் ணுடைந்த பரலவற் போழ்விற்
கரந்துபாம் பொடுங்கும் பயம்புமா ருளவே
200 குறிக்கொண்டு மரங் கொட்டி நோக்கிச்
செறிதொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச
வறிதுநெறி யொரீஇ வலஞ்செயாக் கழிமின்
புலந்துபுனிறு போகிய புனஞ்சூழ் குறவ
ருயர்நிலை யிதணம் மேறிக் கைபுடையூஉ
205 வகன்மலை யிறும்பிற் றுவன்றிய யானைப்
பகனிலை தளர்க்குங் கவணுமிழ் கடுங்க
லிருவெதி ரீர்ங்கழை தத்திக் கல்லெனக்

185. சிறுபாண். 192.

179 - 85. சிறுபாண். 189 - 92.

192. பி - ம். 'நிலனொடு படர்மின்', 'சில நாள் படர்மின்.'

193. "இரும்புன நிழத்தலின்" குறிஞ்சி. 157.

194. கற்பொறி: "சிறுபொறி மாட்டிய பெருங்க லடாஅர்" (நற். கககூ : 2); "பொறியறிந்து மாட்டிய, பெருங்க லடாரும்" (புறநா. ககூ : 5 - 6); "கொல்புலி படுக்கும் பெருங்கனீ ளடார்" கூர்ம. சம்புத்தீவின். 29.

201. கைதொழூஉப்பழிச்ச: பெரும்பாண். 463, அடிக்.

206. பி - ம். 'நிலைதவிர்க்கும்'

கருவிர லூகம் பார்ப்போ டிரிய
வுயிர்செகு மரபிற் கூற்றத் தன்ன
210 வரும்விசை தவிராது மரமறையாக் கழிமி
னுரவுக்களிறு கரக்கு மிடங்க ரொடுங்கி
பிரவி னன்ன விருடேங்கு வரைப்பிற்
குமிழி சுழலுங் குண்டுகய முடுக்க
ரகழிழிந் தன்ன கான்யாற்று நடவை
215 வழூஉ மருங் குடைய வழாஅ லோம்பிப்
பரூஉக்கொடி வலந்த மதலை பற்றித்
துருவி னன்ன புன்றலை மகாரோ

208. "கருவிர லூகம் விளையாடும்" தே. திருஞா. சிராப்பள்ளி.

208-9. குறவர் கவணெறிதலும் அதற்கு யானை முதலியன அஞ்சுதலும்: "இலங்கொளி மருப்பிற் கைம்மா வுளம்புநர், புலங்கடி கவணையிற் பூஞ்சினை யுதிர்க்கும், விலங்குமலை", "பிடியொடு மேயுஞ் செய்புன் யானை, அடியொதுங் கியக்கங் கேட்ட கானவன், நெடுவரை யாசினிப் பணவை யேறிக், கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலி, னிறுவரை வேங்கையி னொள்வீ சிதறி, யாசினி மென்பழ மளிந்தவை யுதிராத், தேன்செ யிறாஅ றுளைபடப் போகி, நறுவடி மாவின் பைந் துணருழக்கிக், குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப், பலவின் பழத்துட் டங்குமலை" (கலி. ௨௩: 1-3, ௪௧: 7-16); "இரவின் மேய மரூஉம் யானைக், கால்வ லியக்க மொற்றி நடுநாள், வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன், கடுவிசைக் கவணி னெறிந்த சிறுகல், லுடு வுறு கணையிற் போகிச் சாரல், வேங்கை விரியிணர் சிதறித் தேன்சிதை யூஉப், பலவின் பழத்துட் டங்கு, மலைகெழு நாடன்", "காம்பின், வினைகழை யடைந்த கவண்விசைக் கடியிடிக், கனைசுட ரமையத்து வழங்கல் செல்லா, திரவுப்புன மேய்ந்த வுரவுச்சின வேழம்", "தினைமே யானை யினனிரிந் தோடக், கல்லுயர் கழுதிற் சேணோ னெறிந்த, வல் வாய்க் கவணின் கடுவெடி யொல்லென, மறப்புலி யுரற வாரணங் கதற, நனவுறு கட்சி நன்மயி லால, மலையுடன் வெரூஉ மாக்கல் வெற்பின்" (அகநா. ௨௯௨: 8-15, ௩௦௯: 12-5, ௩௯௨: 11-8); "இடுதினை தின்வேழங் கடியக் குறவர், வெடிபடு வெங்கவண்க லூன்ற-நெடு நெடென, நீண்டகழை முத்துதிர்க்கு மீங்கோயே" ஈங்கோய். 7.

211. முதலை யானையை விழுங்கல்: "களிறட்டு வீழ்க்கு, மீர்ப் புடைக் கராஅத் தன்ன" புறநா. ௧௦௪: 3-4.

213. மலைபடு. 474-6.

217. புன்றலை மகார்: மலைபடு. 253.

டொருவி ரொருவி ரோம்பினிர் கழிமி
னழுந்துபட் டலமரும் புழகமல் சாரல்
220 விழுந்தோர் மாய்க்குங் குண்டுகயத் தருகா
வழும்புகண் புதைத்த நுண்ணீர்ப் பாசி
யடிநிலை தளர்க்கு மருப்பமு முடைய
முழுநெறி யணங்கிய நுண்கோல் வேரலோ
டெருவை மென்கோல் கொண்டனிர் கழிமி
225 னுயர்நிலை மாக்கற் புகர்முகம் புதைய
மாரியி னிருதரு வில்லுமிழ் கடுங்கணைத்
தாரொடு பொலிந்த வினைநவில் யானைச்
சூழியிற் பொலிந்த சுடர்ப்பூ விலஞ்சி
யோரியாற் றியவின் மூத்த புரிசைப்
230 பராவரு மரபிற் கடவுட் காணிற்
றொழாநிர் கழியி னல்லது வறிது
நும்மியந் தொடுத லோம்புமின் மயங்குதுளி
மாரி தலையுமவன் மல்லல் வெற்பே
யலகை யன்ன வெள்வேர்ப் பீலிக்
235 கலவ மஞ்ஞை கட்சியிற் றளரினுங்
கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன
நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினு

---

218. பி - ம். 'ஒப்பினர் கழிமின்'
நன் - வி. சூ. 380, மேற்.

50 - 218. உயர்திணை யொருமையிற் பன்மை மயங்கியதற்கு இவ் வடிகள் மேற்கோள்; நன். சூ. 379, மயிலை.

219. புழகு: குறிஞ்சி. 96, அடிக்.

226. மதுரை. 183, அடிக்.

வில்லுமிழ் கடுங்கணை: "விற்பழுத் துமிழ்ந்த வெய்ய வெந்நுனைப் பகழி" (சீவக. 435); "விற்பழுத் துமிழும் வெய்யகணை" கூர்ம. இராமன் வனம்புகு. 56.

227. மதுரை. 47, அடிக்; நெடுநல். 169, அடிக்.

229. பி - ம். 'இயவிற்புரிசை மூத்த'

231. பி - ம். 'தொழாநீர் கழிமின்'

236 - 7. சிறுபாண். 56, அடிக்; "குரங்கன்னபுன் குறுங்கூளியர்" புறநா. ௧௩௬ : 13.

நேர்கொ ணெடுவரை நேமியிற் றொடுத்த
சூர்புக லடுக்கத்துப் பிரசங் காணினு
240 ஞெரேரென நோக்க லோம்புமி னுரித்தன் று
நிரைசெலன் மெல்லடி நெறிமாறு படுகுவிர்
வரைசேர் வகுந்திற் கானத்துப் படினே
கழுதிற் சேணோ னேவொடு போகி
யிழுதி னன்ன வானிணஞ் செருக்கி
245 நிறப்புண் கூர்ந்த நிலந்தின் மருப்பி
னெறிக்கெடக் கிடந்த விரும்பிண ரெருத்தி
னிருடுணிந் தன்ன வேனங் காணின்
முளிகழை யிழைந்த காடுபடு தீயி
னளிபுகை கமழா திறுயினிர் மிசைந்து
250 துகளறத் துணிந்த மணிமரு டெண்ணீர்க்
குவளையம் பைஞ்சுனை யசைவிடப் பருகி
மிகுத்துப் பதங்கொண்ட பரூஉக்கட் பொதியினிர்

---

239. சூர்புகலடுக்கம் : "சூருடை யடுக்கத்த" (நற். ௩ருக : 9); "சூருறை குன்றிற் றடவரை" பரி. கக : 23.

238 - 9. மலைபடு. 524 - 5 ; முருகு. 299 - 300.

240. பி - ம். 'ஞெரேரெவென'

ஞெரேரென : மலைபடு. 579.

242. பி - ம். 'வகுந்தின் கானத்து'

வகுந்து வழியென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; சிலப். கரு : 14-9, அடியார்.

243. கழுதிற்சேணோன் : குறிஞ்சி. 40 - 41.

247. வழக்கொடு பட்ட மரபு பிறழவும், செய்யுளின்பம்படின் அவ்வாறு செய்க வென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். மரபு. சூ. 1, பேர்.

248. பி - ம். 'முளிகழை யிசைந்த'

ப. ௩சுக : 5 - ஆம் அடிக்.

249. மிசைதல் வேறுவினைப் பொதுச்சொல் அன்றென்று கூறி இதனை மேற்கோள் காட்டினர் ; தொல். கிளவி. சூ. 46, ந.

250. மணிமருடெண்ணீர் : சிறுபாண். 152, அடிக் ; மதுரை. 351, அடிக்.

251. "குவளைப் பைஞ்சுனை பருகி" புறநா. கருஉ : 5.

புட்கை போகிய புன்றலை மகாரோ
டற்கிடை கழிதலோம்பி யாற்றநு
255 மில்புக் கன்ன கல்லளை வதிமி
னல்சேர்ந் தல்கி யசைதலோம்பி
வான்கண் விரிந்த விடியலேற் றெழுந்து
கானகப் பட்ட செந்நெறிக் கொண்மின்
கயங்கண் டன்ன வகன்மை யங்கண்
260 மைந்துமலி சினத்த களிறுமத னழிக்குந்
துஞ்சுமரங் கடுக்கு மாசுணம் விலங்கி
யிகந்துசேட் கமழும் பூவு முண்டோர்
மறந்தமை கல்லாப் பழனு மூழிறந்து
பெரும்பயங் கழியினு மாந்தர் துன்று
265 மிருங்கால் வீயும் பெருமரக் குழாமு

253. புன்றலைமகார்: மலைபடு. 217.

இவ்வடி, புள் வளையென்னும் பொருளில் வருமென்பதற்கு மேற்கோள்; சீவக. 2591, ந.

256. மலைபடு. 158.

260-61. யானையை விழுங்கும் பாம்பு: "களிறு பாந்தட் பட்டென", "களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்" (நற். கச: 8, உசுக: 6); "வெண்கோட் டியானை விளிபடத் துழவு, மகல்வாய்ப் பாந்தள்" (அகநா. சுஅ: 19-20); "பரிய களிற்றை யரவு விழுங்கி மழுங்க" (திருஞா. தே.); "குஞ்சரங் கோளிழைக்கும் பாம்பை" (திருச்சிற். 21); "களிறென்று பெரிய மாசுணம்............பெயர்தரு பிறுதியெம் பெருமானை" (பெரியதிரு. க. 2: 10); "புழுங்குவெம் பசியொடு புரளும் பேரரா, விழுங்கவந் தெதிரெதிர் விரித்த வாயின்வாய், முழங்கு திண் கரிபுகும்", "மதக்கதமா, வடங்கு பேழ்வயிற் றரவு", "இடிகொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்குங், கடிய மாசுணம்", "பெரிய பாந்தள், மறங்கிளர் மான யானை வயிற்றின வாக வாய்சோர்ந், துறங்கின" (கம்ப. தாடகை. 11, சித்திரகூட. 4, 35, சேதுபந்தன. 20); "கைந்நாக மேமேயு மாநாகம்" தக்க. 543.

262. சேட் கமழும்பூ: "சேணாறு பிடவம்" முல்லை. 25.

262-3. மலைபடு. 282-3.

265. பி-ம். 'இருங்கோல்'

259-65. கயங்கண்டன்ன......பெருமரக்குழாம்: மலைபடு. 47, அடிக்.

மிடனும் வலனு நினையினிர் நோக்கிக்
குறியறிந் தவையவை குறுகாது கழிமின்
கோடுபல முரஞ்சிய கோளி யாலத்துக்
கூடியத் தன்ன குரல்புணர் புள்ளி
270 னாடுகா ணனந்தலை மென்மெல வகன்மின்
மாநிழற் பட்ட மரம்பயி லிறும்பின்
ஞாயிறு தெருஅ மாக நனந்தலைத்
தேஎ மருளு மமைய மாயினு
மிருஅவண் சிலையர் மாதேர்பு கொட்குங்
275 குறவரு மருளுங் குன்றத்துப் படினே
யகன்கட் பாறைத் துவன்றிக் கல்லென
வியங்க லோம்பிநு மியங்க டொடுமின்
பாடி னருவிப் பயங்கெழு மீமிசைக்
காடுகாத் துறையுங் கானவ ருளரே
280 நிலைத்துறை வழீஇய மதனழி மாக்கள்
புனற்படு பூசலின் விரைந்துவல் லெய்தி
யுண்டற் கினிய பழனுங் கண்டோர்
மலைதற் கினிய பூவுங் காட்டி
யூறு நிரம்பிய வாறவர் முந்துற
285 நும்மி னெஞ்சத் தவலம் வீட
விம்மென் கடும்போ டினியி ராகுவி
ரறிஞர் கூறிய மாதிரங் கைக்கொள்பு

---

268. கோளியாலம்: "கோளி யாலத்துக் கொழுநிழல்" புறநா. ௫௮ : 2.

முரஞ்சல் முதிர்வாகிய குறிப்புணர்த்தற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 35, இளம். தெய்வச். ந.

270. நாடுகாணனந்தலை : "நாடுகா ணெடுவரை" பதிற். அ௫ : 7.

275. "புளிஞரு மருளும் போக்கருஞ் சுரம்" (தணிகையாறு.167); "குறவரு மருளுங் குன்றமொன்று" நசேலோ. குசேலர் மேல். 39.

இவ்வடி, உம்மை உயர்வு சிறப்புப் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 7, இளம். சே. ந ; நன். சூ. 271, 424, மயிலை ; நன். வி. சூ. 425, இ-வி. சூ. 256.

278. "பாடின் னருவிப் பயங்கெழு மாமலை" சீவக. 2112.

286. இம்மென்கடும்பு : "இம்மென விமிரும்" குறிஞ்சி. 147.

குறியவு நெடியவு மூழிழிபு புதுவோர்
நோக்கினும் பனிக்கு நோய்கூ ரடுக்கத்
290 தலர்தாய வரிநிழ லசையினி ரிருப்பிற்
பலதிறம் பெயர்பவை கேட்குவிர் மாதோ
கலைதொடு பெரும்பழம் புண்கூர்ந் தூறலின்
மலைமுழுதுங் கமழு மாதிரந் தோறு
மருவி நுகரும் வானர மகளிர்
295 வருவிசை தவிராது வாங்குபு குடைதொறுந்
தெரியிமிழ் கொண்டநும் மியம்போ லின்னிசை
யிலங்கேந்து மருப்பி னினம்பிரி யொருத்தல்
விலங்கன் மீமிசைப் பணவைக் கானவர்
புலம்புக் குண்ணும் புரிவளைப் பூசல்
300 சேயளைப் பள்ளி யெஃகுறு முள்ளி
னெய்தெற விழுக்கிய கானவ ரழுகை
கொடுவரி பாய்ந்தெனக் கொழுநர் மார்பி
னெடுவசி விழுப்புண் டணிமார் காப்பென
வறல்வாழ் கூந்தற் கொடிச்சியர் பாட

---

288 - 9. "குறியவு நெடியவுங் குன்று" சிலப். உஎ : 153 ; மணி. ௬ : 58.

290. வரிநிழல் : பொருந. 51 ; சிறுபாண். 11-2, அடிக்.

292. மலைபடு. 138 - 9, அடிக்.

கலைதொடு பெரும்பழம் : "கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்" குறுந். ௯சஉ : 1.

294. பி - ம். 'அருவி நுகக்கும்'

"ஆழருவி யரமகளி ராடுபவே" (கலி. ௪௦ : 23) ; "அமர நாடியர் துன்னியா டிடங்களும்" கம்ப. பிலநீங்கு. 8.

295 - 6. மதுரை. 363, அடிக்.

300 - 301. "மொய்த்த முட்டன துடற்றலை துளைப்ப முடுகிக், கைத்தலத்தினிமி ரக்கடிது கன்றிவிசிறும், மெய்த்த மெய்ப்பெரிய கேழலென" (கம்ப. விராதன். 33) ; "மெய்யுருவிய வையுறு முனைமுள்ளை, யெய்புதறின" சீகாளத்தி. கண்ணப்ப. 86.

303 - 4. "காஞ்சி பாடி.........காக்கம் வம்மோ காதலந் தோழி, .........நெடுந்தகை புண்ணே" (புறநா. உஅக : 5 - 9) ; "கொய்யாக் குறிஞ்சி பலபாடி - மொய்யிணர்ப், பூப்பெய் தெரிய னெடுந்தகை புண் யாங்காப்ப" பு. வெ. 79.

305 றலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை
மலைமா ரிடூஉ மேமப் பூசல்
கன்றரைப் பட்ட கயந்தலை மடப்பிடி
வலிக்குவரம் பாகிய கணவ னோம்பலி
னொண்கேழ் வயப்புலி பாய்ந்தெனக் கிளையொடு
310 நெடுவரை யியம்பு மிடியுமிழ் தழங்குகுரல்
கைக்கோண் மறந்த கருவிரன் மந்தி
யருவிடர் வீழ்ந்ததன் கல்லாப் பார்ப்பிற்கு
முறிமே யாக்கைக் கிளையொடு துவன்றிச்
சிறுமை யுற்ற களையாப் பூசல்
315 கலைகை யற்ற காண்பி னெடுவரை
நிலைபெய் திட்ட மால்புநெறி யாகப்

---

305. *தலைநாட் பூத்த வேங்கை:* "*தலைநாட் செருந்தி*" சிறு பாண். 147.

305-6. மதுரைக். 296-7, அடிக்.

307. *கயந்தலை மடப்பிடி:* நற். கநஎ : 6.

*கயந்தலை மடப்பிடி:* இது, *கயவென்பது மென்மையையுணர்த்து மென்பதற்கு மேற்கோள்;* தொல். உரி. சூ. 24, இளம். சே. ந.

311. *கருவிரன் மந்தி:* "*கருவிரன் மந்திச் செம்முகப் பெருங் கிளை*" (நற். ௩௩௪ : 1); "*கருவிரற் கடுவன்*" (புறநா. ௨௦௦ : 2); "*கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி*" திணைமாலை. 10.

311-2. "*காமர் மந்தி, கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி*" (குறுந். ௬௯ : 2-3); "*கருவிரன் மந்திக் கல்லா வன்பறழ்*", "*கருவிரன் மந்திக் கல்லா வன்பார்ப்பு*" ஐங். ௨எ௨ : 1, ௨அ௦ : 1.

313. *முறிமேயாக்கைக்கிளை:* "*முறிமேய் கடுவன்*" ஐங். ௨எ௬ : 1.

*முறி:* தொல். மரபு. சூ. 87, பேர். மேற்.

313-4. *பொருளானந்தத்திற்கு இவ்வடிகளை மேற்கோள் காட்டினர்;* யா-வி. *ஒழிபு.* சூ. 3.

311-4. "*மந்திகண் மறலி யெதிரெதி ருகள மருங்கிருந் துலாவிய கல்லாப், பைந்தலைப் பார்ப்பு மெழுந்துதாய்ப் பிழைத்துப் படாருவிடரினுக் கழுங்குஞ், சந்தனங் கமழுஞ் சாரல்*" காஞ்சிப். இருபத்தெண். 26.

315. முருகு. 42-3, அடிக்.

316. பி-ம். '*நிலை புணர்ந்திட்ட*'

315-6. "*மால்புடை நெடுவரைக் கோடு*" புறநா. ௧௦௫ : 6.

பெரும்பயன் றொகுத்த தேங்கொள் கொள்ளை
யருங்குறும் பெறிந்த கானவ ருவகை
திருந்துவே லண்ணற்கு விருந்திறை சான்மென
320 நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென
வான்றோய் மீமிசை யயருங் குரவை
நல்லெழி னெடுந்தே ரியவுவந் தன்ன
கல்யா றொலிக்கும் விடர்முழங் கிரங்கிசை
325 நெடுஞ்சுழிப் பட்ட கடுங்கண் வேழத்
துரவுச்சினந் தணித்துப் பெருவெளிற் பிணிமார்
விரவுமொழி பயிற்றும் பாக ரோதை
யொலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறுங்
கிளிகடி மகளிர் விளிபடு பூச
330 லினத்திற் றீர்ந்த துளங்கிமி னல்லேறு
மலைத்தலை வந்த மரையான் கதழ்விடை
மாறு மைந்தி னூறுபடத் தாக்கிக்
கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப
வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய
335 நல்லேறு பொருஉங் கல்லென் கம்பலை

---

316-7. மால்பிலேறித் தேன் கொள்ளுதல்: "பெருந்தேன் கண்படு வரையின் முதுமால், பறியா தேறிய மடவோன் போல" (குறுந். உளஅ: 5-6); "வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத், தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங், கானக நாடன் மகன்" (கலி. ருக: 8-10); "ஈவிளை யாட நறவிளை வோர்ந்தெமர் மால்பியற்றும், வேய்விளை யாடும் வெற்பா" திருச்சிற். 133.

319. மலைபடு. 467.

318-22. முருகு. 194-7, அடிக்.

323-4. அருவியொலிக்குத் தேரொலி: "குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக" (குறுந். கஅக: 2); "கற்பா லருவியி னொலிக்கு நற்றேர்" அகநா. கஅச: 17.

326. பி-ம். 'பரூஉவெளில்'

325-7. முல்லை. 35-6; சீவக. 1834.

328-9. தட்டை: குறிஞ்சி. 43-4, அடிக்; "கடுங்கழைத் தட்டைக் குன்றவர் மகளிர் காவலும்" திருக்காளத்தி. உ: 4.

331. மலைபடு. 406.

காந்தட் டுடுப்பிற் கமழ்மட லோச்சி
வண்கோட் பலவின் சுளைவிளை தீம்பழ
முண்டுபடு மிச்சிற் காழ்பயன் கொண்மார்
கன்றுகடா அ வுறுக்கு மகா அ ரோதை
340 மழைகண் டன்ன வாலைதொறு ஞெரேரெனக்
கழைகண் ணுடைக்குங் கரும்பி னேத்தமுந்
தினைகுறு மகளி ரிசைபடு வள்ளையுஞ்
சேம்பு மஞ்சளு மோம்பினர் காப்போர்
பன்றிப் பறையுங் குன்றகச் சிலம்பு
345 மென்றிவ் வனைத்து மியைந்தொருங் கீண்டி
யவலவு மிசையவுந் துவன்றிப் பலவுட
னலகைத் தவிர்த்த வெண்ணருந் திறத்த
மலைபடு கடா அ மாதிரத் தியம்பக்
குரூஉக்கட் பிணையற் கோதை மகளிர்
350 முழவுத்துயி லறியா வியலு ளாங்கண்
விழவி னற்றவன் வியன்கண் வெற்பே
கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டு

336. காந்தட்டுடுப்பு: பட். 153; கலி. ருக: 3-4, க0க: 3-4; அகநா. எஅ: 8-9, க0அ: 15; பெருங். உ. 15: 73-4.

337. கோள் கொத்திணையுணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தஞ்சை. 85, உரை.

340. பி-ம். 'ஞெரோவென', 'ஞேயென.'
"பூங்கரும் புடைந்த தீஞ்சா றடுபுகை புயலென் றெண்ணி" (நைடதம், நாடு. 16); "சுற்று பாகடு புகையவை சூழ்கரு முகிற்குல மொப்பன" சீகாளத்தி. நக்கீர. 14.

340-41. பெரும்பாண். 259-60, அடிக்.

342. "பாவடி யுரல பகுவாய் வள்ளை" (குறுந். அக: 1); "வெதிர்நெற் குறுவாநாம், வள்ளை யகவுவம்வா" கலி. சஉ: 7-8.

350. மதுரை. 327; "முழவங் கண்டுயி லாத முதுநகர்" சீவக. 856.

352. இவ்வடி, ஒற்று அளபெடுத்துச் சீர்நிலை யெய்தியதற்கும் (தொல். மொழி. சூ. 7, ந; ஷை. செய். சூ. 17, இளம்; ஷை. ஷை. சூ. 18, பேர்.), அளபெடை வண்ணத்திற்கும் (தொல். செய். சூ. 220, பேர். ந; யா-கா. ஒழிபு. 8, உரை), ஒற்று அளபெழுந்து நேரசையான தற்கும் (யா-வி. எழுத்து. சூ. 3), ஒற்று அளபெழுந்து ஓரலகு பெற்ற

முண்டற் கினிய பலபா ராட்டியு
மின்னும் வருவ தாக நமக்கெனத்
355 தொன்முறை மரபினி ராகிப் பன்மாண்
செருமிக்குப் புகலுந் திருவார் மார்ப
னுருமுரறு கருவிய பெருமலை பிற்பட
விறும்பூது கஞலிய வின்குரல் விறலியர்
நறுங்கா ரடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்
360 கைதொழூஉப் பரவிப் பழிச்சினிர் கழிமின்
மைபடு மாமலைப் பனுவலிற் பொங்கிக்
கைதோய் வன்ன கார்மழைத் தொழுதி
தூஉ யன்ன துவலை துவற்றலிற்
றேளந் தேருக் கடும்பரிக் கடும்பொடு

---

தற்கும் (யா. கா. ஒழிபு. 1, உரை), ஒற்றள பெடைக்கும் (நன். சூ. 91, மயிலை; இ - வி. சூ. 20) மேற்கோள்.

" 'கண்ண்.........கேட்டும்' என்புழிக் கண்ண் என்பது சீர்நிலை யெய்தித் தேமாவாயிற்று. 'தண்ண்ணென' என்றவழித் தட்பத்திற் சிறப்புக் கூறுதற்காக இயற்சீர்க்கண் ணகரவொற்றினை மிகக்கொடுத்து அளபெடுத்துச் செய்யுள் செய்தான். அது, மாசெல்சுரமென்னும் வஞ்சியுரிச்சீராவதனை யாகற்க; பாதிரியென முன்னின்ற இயற்சீரேயாக வென வழுவமைத்தவாறு" தொல். செய். சூ. 18, ந.

354· பரி. கக : 139, கங: 64, கச: 31, உக: 69.

356. பி - ம். 'திருவார் மார்பின்' 357. பி - ம். 'பின்பட'

"உருமுரறு கருவிய பெருமழை தலைஇ" அகநா. கடுஅ: 1.

358. இன்குரல் விறலியர் : மலைபடு. 536.

359. முருகு. 239.

358 - 60. "செறிதொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச, வறிது நெறியொரீஇ வலஞ்செயாக் கழிமின்" மலைபடு. 201 - 2.

361 - 2. "எழிலி, யெஃகுறு பஞ்சிற் றூகி.........நெடுவரை ஆடும்", "பனுவல் போலக் கணங்கொள, வாடுமழை தவழுங் கோடுயர் நெடுவரை" (நற். உசஎ : 3 - 5, நடுக: 2-3); "பொங்க லாடி, விண்டுச் சேர்ந்த வெண்மழை பொங்கலாடி யென்றது எஃகின பஞ்சுபோலப் பொங்கியெழுதலைச் செய்தென்றவாறு" (பதிற். டுடு : 14 - 5, உரை); "வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்", "பொங்கல் வெண்மழை, யெஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன, துவலை" அகநா. கநக : 6, உகஎ : 1 - 3.

362 - 4. "தாழ்நீர் நனந்தலை யழுந்துபடப் பாஅய்.........செறிந்

365 காஅய்க் கொண்டநும் மியந்தொய் படாமற்
கூவ லன்ன விடரகம் புகுமி
னிருங்க விருப்பத் திறவரை சேராது
குன்றிடம் பட்ட வாரிட ரழுவத்து
நின்று நோக்கினுங் கண்வாள் வௌவு
370 மண்கனை முழவின் றலைக்கோல் கொண்டு
தண்டுகா லாகத் தளர்த லோம்பி
யூன்றினிர் கழிமி னூறுதவப் பலவே
யயில்காய்ந் தன்ன கூர்ங்கற் பாறை
வெயில்புறந் தரூஉ மின்ன லியக்கத்துக்
375 கதிர்சினந் தணிந்த வமயத்துக் கழிமி
னுரைசெல வெறுத்தவவ னீங்காச் சுற்றமொடு
புரைதவ வுயரிய மழைமருள் பஃறோ

---

தவிம் மழைக்கே", "முழங்குகடன் முகந்த கமஞ்சூன் மாமழை, மாதிர நனந்தலை புதையப் பாஅய்" (நற். ௧௧௨ : 7 - 9, ௩௪௭ : 1 - 2); "பெயல்கான் மறைத்தலின் விசும்புகா ணலரே, நீர்பரந் தொழுகலி னிலங்கா ணலரே", "விசும்புகண் புதையப் பாஅய்.........பெயலா னுதே வானம்" (குறுந். ௩௫௫ : 1 - 2, ௩௮௦ : 1 - 3); "மாநிலந் தோன் றுமை மலிபெய றலைஇ" பரி.

365. மலைபடு. 13.

373. பி - ம். 'கூன்கட்பாறை'

சிறுபாண். 7 - 8, அடிக்; "வேலைக் காய்ச்சிமுன் னட்டுவைத் தன்ன வெம்பரல்" திருவையாற்றுப் புராணம், ௧ : 14.

374. இன்னலென்பது இன்னுமையென்னும் குறிப்புணர்த்து தற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. 6, இளம். சே. தெய்வச். ந.

375. கதிர் சினந்தணிந்தவமயம்: "சுடர்சினந் தணிந்து குன்றஞ் சேர" (நற். ௩௬௬ : 1, குறுந். ௧௧௫ : 1); "கதிர்சினந் தணிந்த கையறு மாலை" குறுந். ௩௮௭ : 2.

376. "உரைசெல வெறுத்தவவன் மூதூர் மாலையும்" மலை படு. 93.

377. மழைமருள்பஃறோல்: "மன்ன, ரெயிலூர் பஃறோல் போலச், சென்மழை" (நற். ௧௯௭ : 10-12); "மழையென மருளு மாயி ரும் பஃறோல்" (பதிற். ௬௨ : 2); "மழைத்தோற் பழையன்" (அகநா. ௧௮௬ : 15); "மழையுருவின தோல்", "மழையென மருளும் பஃ றோல்" புறநா. ௧௬ : 2, ௧௭ : 34.

லரசுநிலை தளர்க்கு மருப்பமு முடைய
பின்னி யன்ன பிணங்கரி னுழைதொறு
380 முன்னோன் வாங்கிய கடுவிசைக் கணைக்கோ
லின்னிசை நல்யாழ்ப் பத்தரும் விசிபிணி
மண்ணார் முழவின் கண்ணு மோம்பிக்
கைபிணி விடாஅது பைபயக் கழிமின்
களிறுமலைந் தன்ன கண்கூடு துறுகற்
385 றளிபொழி கானந் தலைதவப் பலவே
யொன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்தென
நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்
செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட
கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே

---

382. பி - ம். 'முழவுங்கண்ணு மோம்பி'

384. துறுகல்லிற்கு யானை உவமை: ப. ௫௫௫: 2 - ஆம் அடிக்; "வேழ, மிரும்பிணர்த் துறுகல் பிடிசெத்துத் தழூஉம்" ஐங். ௨௩௯: 1 - 2.

386. ஒன்னாத் தெவ்வர்: மலைபடு. 397; பெரும்பாண். 491.

பகைவர் தோல்விகண்டு ஆர்த்தல்: பெரும்பாண். 419; "வினைவ லதிகன், களிறொடு பட்ட ஞான்றை, யொளிறுவாட் கொங்க ரார்ப் பினும் பெரிதே" (குறுந். ௩௯௩: 4 - 6); "கொன்றுகளம் வேட்ட ஞான்றை, வென்றிகொள் வீர ரார்ப்பினும் பெரிதே", "எழுவுறழ் திணிதோ ளியறேர்ச் செழிய,னேரா வெழுவ ரடிப்படக் கடந்த, வாலங் கானத் தார்ப்பினும் பெரிதென", "மொய்வலி யறுத்த ஞான்றைத், தொய்யா வழுந்தூ ரார்ப்பினும் பெரிதே" (அகநா. ௩௬: 22 - 3, ௨௦௧: 4 - 6, ௨௪௬: 13 - 4); "உடன்றுமேல் வந்த வம்ப மன்னரை........ அழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக், கவிழ்ந்துநிலஞ் சேர வட் டதை" புறநா. ௭௭: 9 - 12.

388. செல்லாநல்லிசை: மலைபடு. 70, அடிக்; புறநா. ௩௯௫: 19.

387 - 9. நடுகல்: "விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந் தோ, ரெழுத்துடை நடுகல்" (ஐங். ௩௫௨: 1 - 2); "விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோ, ரெழுத்துடை நடுக லின்னிழல் வதியும், அருஞ்சுரக் கவலை", "நல்லமர்க் கடந்த நாணுடை மறவர், பெயரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்", "ஆடவர், பெயரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்", "விடுவாய்ச் செங்கணைக் கொடுவி லாடவர், நன்னிலை குறித்த கன்னிலை யதர", "நல்லிசை நிறுத்த நாணுடை மறவர், நிரைநிலை நடு

390 யின்புறு முரற்கைநும் பாட்டுவிருப் பாகத்
தொன்றெழுகு மரபினும் மருப்பிகுத்துத் துனைமின்
பண்டுநற் கறியாப் புலம்பெயர் புதுவிர்
சந்து நீவிப் புன்முடிந் திடுமின்
செல்லுந் தேஎத்துப் பெயர்மருங் கறிமார்
395 கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த
கடவு ளோங்கிய காடேசு கவலை
யொட்டா தகன்ற வொன்னாத் தெவ்வர்
சுட்டினும் பனிக்குஞ் சுரந்தவப் பலவே
தேம்பாய் கண்ணித் தேர்வீசு கவிகை
400 யோம்பா வள்ளற் படர்ந்திகு மெனினே

கல்" (அகநா. ௬௭ : 10 - 12, ௬௭ : 8 - 10, ௧௩௧ : 9 - 11, ௧௭௯ : 7-8, ௩௮௭ : 14 - 5); "கெடுவி னல்லிசை சூடி, நடுகல் லாயினன் புரவல னெனவே", "அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித், தினிநட் டனரே கல்லும்" (புறநா. ௨௨௧ : 12 - 3, ௨௬௪ : 3 - 4); "சீர்த்த துக ளிற்றீய்த் தெய்வச் சிறப்பெய்த, நீர்ப்படுத் தற்கு நிலைகுறித்துப் - போர்க் களத்து, மன்னட்ட வென்றி மறவோன் பெயர்பொறித்துக், கன்னட் டார் கல்சூழ் கடத்து", "கோள்வாய்த்த சீயம்போற் கொற்றவர்தம் மாவெறிந்து, வாள்வாய்த்து வீழ்ந்த மறவேலோய் - நாள்வாய்த், திடை கொள லின்றி யெழுத்துடைக் கல்வாய், மடைகொளல் வேண்டு மகிழ்ந்து" (தொல். புறத். சூ. 5, ந. மேற்.); "மாலை துயல மணி யெறிந்து மட்டுகுத்துப், பீலி யணிந்து பெயர்பொறித்து - வேலமரு, ளாண்டக நின்ற வமர்வெய்யோற் காகென்று, காண்டக நாட்டினர் கல்" (பு. வெ. 251); "பட்டோர் பெயரு மாற்றலு மெழுதி, நட்ட கல்லும்" திருவாரூர் மும். ௧௬ : 1 - 2.

390. முரற்கை: "பாணர் நரம்புளர் முரற்கை போல", "பாணர் நரம்புளர் முரற்கையின் யாத்தபயன்" ஐங். ௪௦௨ : 2 - 3, ௪௦௭ : 1 - 2.

395 - 6. மராஅத்த கடவுள்: "மன்ற மராஅத்த பேஎமுதிர் கட வுள்" (குறுந். ௮௭ : 1); "தொல்வலி மராஅமு, முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர்" கலி. ௧௦௧ : 13 - 4.

397. ஒன்னாத்தெவ்வர்: மலைபடு. 386, அடிக்.

398. "எரிசுடர்க் கடவுளுங் கருதின்வே முள்ளமும்", "நினையு நெஞ்சமுஞ் சுடுவதோர் நெடுஞ்சுரம்" கம்ப. தாடகை. 5, வனம்புகு. 38.

399. தேர்வீசுகவிகை: மதுரை. 224, அடிக்.

400. "கொடியோள் கணவற் படர்ந்திகு மெனினே" மலைபடு. 424.

மேம்பட வெறுத்தவவன் றொழிறிணை மூதூ
ராங்கனை மற்றே நம்ம னோர்க்கே
யசைவுழி யசைஇ யஞ்சாது கழிமின்
புலியுற வெறுத்ததன் வீழ்பிணை யுள்ளிக்
405 கலைநின்று விளிக்குங் கானமூ ழிறந்து
சிலையொலி வெரீஇய செங்கண் மரைவிடை
தலையிறும்பு கதழு நாறுகொடிப் புறவின்
வேறுபுலம் படர்ந்த வேறுடை யினத்த
வளையான் றீம்பான் மிளைசூழ் கோவலர்
410 வளையோ ருவப்பத் தருவனர் சொரிதலிற்
பலம்பெறு நசையொடு பதிவயிற் றீர்ந்தநும்
புலம்புசே ணகலப் புதுவி ராகுவிர்
பகர்விரவு நெல்லின் பலவரி யன்ன
தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக்
415 கல்லென் கடத்திடைக் கடலி னிரைக்கும்
பல்யாட் டினநிரை யெல்லினிர் புகினே
பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவிர்
துய்ம்மயி ரடக்கிய சேக்கை யன்ன
மெய்யுரித் தியற்றிய மிதியதட் பள்ளித்
420 தீத்துணை யாகச் சேந்தனிர் கழிமின்
கூப்பிடு கடக்குங் கூர்நல் லம்பிற்
கொடுவிற் கூளியர் கூவை காணிற்
படியோர்த் தேய்த்த பணிவி லாண்மைக்

---

ஓம்பாவள்ளல் : மதுரை. 146, அடிக்.

403. அசைவுழி யசைஇ : பெரும்பாண். 44.

406. மரைவிடை : "மரையான் கதழ்விடை" மலைபடு. 331.

408 - 9. ஏறுடையினத்த ஆன் : "கறங்குமணி துவைக்கு மேறு டைப் பெருநிரை" (மலைபடு. 573) ; நெடுநல். 4, அடிக்.

414. துருவையும் வெள்ளையும் : "கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்" பெரும்பாண். 153.

417. பி-ம். 'விதவையும்'

421 - 2. "கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்" புறநா. ௨௩ : 5.

423. "படியோர்த் தேய்த்த வாண்மை" (பதிற். ௭௧ : 6) ; "படி யோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை" அகநா. ௨௨ : 5.

கொடியோள் கணவற் படர்ந்திகு மெனினே
425 தடியுங் கிழங்குந் தண்டினர் தரீஇ
யோம்புந ரல்ல துடற்றுந ரில்லை
யாங்குவியங் கொண்மி னதுவதன் பண்பே
தேம்பட மலர்ந்த மராஅ மெல்லிணரு
மும்ப லகைத்த வொண்முறி யாவுந்
430 தளிரொடு மிடைந்த காமர் கண்ணி
திரங்குமர ஞாரிற் பொலியச் சூடி
முரம்புகண் ணுடைந்த நடவை தண்ணென
வுண்டனி ராடிக் கொண்டனிர் கழிமின்
செவ்வீ வேங்கைப் பூவி னன்ன
435 வேய்கொ ளரிசி மிதவை சொரிந்த
சுவல்விளை நெல்லி னவரையம் புளிங்கூ
ழற்கிடை யுழந்தநும் வருத்தம் வீட
வகலு ளாங்கட் கழிமிடைந் தியற்றிய
புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவிர்

---

424. மலைபடு. 400.

கொடியோள் கணவன்: மலைபடு. 58, அடிக்.

425. "பராஅரை வேவை பருகெனத் தண்டி" பொருந. 104.

429. யானை யாவை முறித்தல்: "பெருங்கை வேழ, மென்சினை யாஅம் பிளக்கும்", "உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய, யாஅ வரிநிழல்", "அத்த யாஅத்துப், பொரியரை முழுமுத லுருவக் குத்தி ........தடமருப்பி யானை", "களிறு,........நிலையுயர் யாஅத் துலையக் குத்தி" (குறுந். ஙஎ : 2 - 3, உஙஉ : 4 - 5, உருரு : 1 - 5, ஙoஎ : 4-6) "நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுட், படிஞிமி றுகடியுங் களிறே", "யானைதன், கொன்மருப் பொடியக் குத்திச் சினஞ்சிறந், தின்னு வேனி லின்றுணை யார, முளிசினை யாஅத்துப் பொளிபிளந் தூட்ட" அகநா: ருக : 8 - 9, ஙஙரு : 4 - 7.

430 - 31. "மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணி" புறநா. உகூச : 2.

திரங்குமரல் : அகநா. சக : 12, ககக : 7, ஙஉஎ : 10 ; சிலப். கக : 77.

435. பி - ம். 'விதவை'

435 - 6. "ஆய்மக ளட்ட வம்புளி மிதவை" புறநா. உகரு : 4.

434 - 6. பெரும்பாண். 194 - 5.

75

440 பொன்னறைந் தன்ன நுண்ணே ரரிசி
வெண்ணெறிந் தியற்றிய மாக்க ணமலை
தண்ணெ னுண்ணிழு துள்ளீ டாக
வசையினிர் சேப்பி னல்கலும் பெறுகுவிர்
விசையங் கொழித்த பூழி யன்ன
445 வுண்ணுநர்த் தடுத்த நுண்ணிடி நுவணை
நொய்ம்மர விறகின் ஞெகிழி மாட்டிப்
பனிசே ணீங்க வினிதுடன் றுஞ்சிப்
புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்
புல்லரைக் காஞ்சிப் புனல்பொரு புதவின்
450 மெல்லவ விருந்த வூர்தொறு நல்லியாழ்ப்
பண்ணுப்பெயர்த் தன்ன காவும் பள்ளியும்
பன்னா ணிற்பினுஞ் சேந்தனிர் செலினு
நன்பல வுடைத்தவன் றண்பணை நாடே
கண்புமலி பழனங் கமழத் துழைஇ
455 வலையோர் தந்த விருஞ்சுவல் வாளை
நிலையோ ரிட்ட நெடுநாண் டூண்டிற்
பிடிக்கை யன்ன செங்கண் வராஅற்
றுடிக்க ணன்ன குறையொடு விரைஇப்
பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்

---

441. பி-ம். 'எள்ளெறிந்து', 'எண்ணெறிந்து'

442. நுண்ணிழுது : "நீரினு நுண்ணிது நெய்யென்பர்" நாலடி. 282.

445. பி-ம். 'இடிநுண்ணுவணை'
உண்ணுநர்த்தடுத்த நுண்ணிடி நுவணை : மலைபடு. 138, அடிக்.

448. மலைபடு. 65-6, அடிக்.

451. "பண்ணுப் பெயர்த்தாங்கு" பதிற். சுரு : 15.

452. பி-ம். 'சேர்ந்தனிர்'
"பலநாட் பயின்று பலரொடு செல்லினும்" புறநா. கoக: 2.

454. பி-ம். 'சண்புமலிபழனம்', 'காண்புமலி', 'கண்பமல்.'
கண்பு : மதுரை. 172, அடிக்.
கண்புமலி பழனம் : "கழனிக் கண்பு" பெருங். உ. 19 : 187.

457-8. வராற்றுடிக்கணன்னகுறை : "கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்" (மதுரை. 320) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

459. பகன்றைக்கண்ணி : ஐங். அஎ : 1; பதிற். எசு : 12.

460 ஞெண்டாடு செறுவிற் றராய்க்கண் வைத்த
விலங்க லன்ன போர்முதற் றொலைஇ
வளஞ்செய் வினைஞர் வல்சி நல்கத்
துளங்குதசும்பு வாக்கிய பசும்பொதித் தேற
லிளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும் பெறுகுவிர்
465 முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண்சோறு
வண்டுபடக் கமழுந் தேம்பாய் கண்ணித்
திண்டேர் நன்னற்கு மயினி சான்மெனக்
கண்டோர் மருளக் கடும்புட னருந்தி
யெருதெறி களம ரோதையொடு நல்யாழ்
470 மருதம் பண்ணி யசையினிர் கழிமின்
வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇச்
செங்க ணெருமை யினம்பிரி யொருத்தல்
கனைசெலன் முன்பொடு கதழ்ந்துவரல் போற்றி
வனைகலத் திகிரியிற் குமிழி சுழலுந்
475 துனைசெலற் றலைவா யோவிறந்து வரிக்குங்
காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்
யாண ரொருகரைக் கொண்டனிர் கழிமி

---

461. நெற்போருக்கு மலை: பொருந. 244; பெரும்பாண். 240-41, அடிக்; "போரொடு நிகர்வன புணர்மலை" (கம்ப. நாடு. 46); "தெரிந்திடும்போர்கள்..... மேருவாயவே" (கந்த. நாடு. 22); "நெடுங் களத் தம்பொற் குன்ற நிரையெனப் பெரும்போர் செய்தார்" (திருவிளை. நாடு. 27); "வரைகளொப்பன போர்" சீகாளத்தி. நக்கீர. 14.

463. துளங்குதசும்பு: "தசும்புதுளங் கிருக்கைத், தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்" பதிற். ௪௨: 11-2.

464. இளங்கதிர் ஞாயிறு: மணி. பதிகம், 1.

467. மலைபடு. 319.

468. பொருந. 97.

469-70. நல்யாழ் மருதம்பண்ணி: மலைபடு. 534; மதுரை. 658.

471. "வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇ" (நற். ௩௫௦: 1, புறநா. ௩௪௮: 1); "வெண்ணெ லரிநர் பின்றைத் ததும்புந், தண்ணுமை வெரீஇய தடந்தா ளாரை", "வெண்ணெ லரிநர் மடிவாய்த் தண்ணுமை......படுபு ளோப்பும்" அகநா. ௪௦: 13-4, ௨௦௪: 10-11.

475. பி-ம். 'இறந்து பனிக்கும்'

476. கட்கின்சேயாறு: மலைபடு. 555.

ணிதியந் துஞ்சு நிவந்தோங்கு வரைப்பிற்
பதியெழ லறியாப் பழங்குடி கெழீஇ
480 வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத்
தியாறெனக் கிடந்த தெருவிற் சாறென
விகழுநர் வெரூஉங் கவலை மறுகிற்
கடலெனக் காரென வொலிக்குஞ் சும்மையொடு
மலையென மழையென மாட மோங்கித்
485 துனிதீர் காதலி னினிதமர்ந் துறையும்
பனிவார் காவிற் பல்வண் டிமிரு
நனிசேய்த் தன்றவன் பழவிறன் மூதூர்
பொருந்தாத் தெவ்வ ரிருந்தலை துமியப்
பருந்துபடக் கடக்கு மொள்வாண் மறவர்
490 கருங்கடை யெஃகஞ் சாத்திய புதவி
னருங்கடி வாயி லயிராது புகுமின்
மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்
வெல்போர்ச் சேஎய்ப் பெருவிற லுள்ளி

---

478. மு. அகநா. ௩௭அ : 1.
மலைபடு. 575; "துஞ்சுநீ ணிதியது சுரமை" சூளா. நாடு. 1.
வடசொல் சிதைந்து வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; தொல். எச்ச. சூ. 6, இளம்; இ - வி. சூ. 635.

479. பி - ம். 'பதியெழவறியா', 'பதியெழுவறியா.'
"பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய" "பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட, மதுரை மூதூர்" சிலப். க : 15, கடு : 5 - 6.

481. பி - ம். 'யாறு கிடந்த'
தெருவுக்குயாறு : மதுரை. 359, அடிக்.

483. "கவ்வையுங் கடும்புன லொலியுங் காப்பவர், செவ்வனா ருயிரஞ் சிலைக்கும் பம்பையு,மெவ்வெலாத் திசைகளு மீண்டிக் காரொடு பவ்வநின் றியம்புவ தொத்த வென்பவே" சீவக. 42.

484. மாடத்திற்கு மலை : மதுரை. 474, 488, 501 - 2.
மழை மாடத்திற்கு : பொருந. 84.

491. மலைபடு. 165, அடிக்; "தடைஇய வாயி றடையாது நுழைந்து" தணிகையாறு. 231.

492. "வயிரிய மாக்கள்.........மன்ற நண்ணி" (பதிற். உக : 8 - 9); "மன்றுபடு பரிசிலர்" புறநா. கரு௫ : 11.

493. பி - ம். 'சேஎய் பெருவிறல்'

வந்தோர் மன்ற வளியர் தாமெனக்
495 கண்டோ ரெல்லா மமர்ந்தினிதி ஞெக்கி
விருந்திறை யவரவ ரெதிர்கொளக் குறுகிப்
பரிபுலம் பலைத்தநும் வருத்தம் வீட
வெரிகான் றன்ன பூஞ்சினை மராஅத்துத்
தொழுதி போக வலிந்தகப் பட்ட
500 மடநடை யாமான் கயமுனிக் குழவி
யூமை யெண்கின் குடாவடிக் குருளை
மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள்
வரைவாழ் வருடை வன்றலை மாத்தக
ரரவுக்குறும் பெறிந்த சிறுகட் டீர்வை
505 யளைச்செறி யுழுவை கோளுற வெறுத்த
மடக்கண் மரையான் பெருஞ்செவிக் குழவி
யரக்குவிரித் தன்ன செந்நில மருங்கிற்
பரற்றவ ழுடும்பின் கொடுந்தா ளேற்றை
வரைப்பொலிந் தியலு மடக்கண் மஞ்ஞை
510 கானக் கோழிக் கவர்குரற் சேவல்
கானப் பலவின் முழவுமருள் பெரும்பழ
மிடிக்கலப் பன்ன நறுவடி மாவின்
வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரந்
தூவற் கலித்த விவர்நனை வளர்கொடி

---

493 - 4. முருகு. 284 - 5.

492 - 4. "தன்றெறல் வாழ்க்கை" என்பதன் விசேடவுரைக்கு இவ்வடிகள் மேற்கோள்; சிலப். கரு : 195, அடியார்.

497. "பரிபுலம் பினரென" (சிலப். ௧0 : 226); "பரிபுலம் பினனிவன்" மணி. ௯ : 57.

498. பி - ம். 'மராஅத்த'

502 - 3. வருடை : ப. ருசச: 4 - ஆம் அடிக்.

507. பொருந. 43, அடிக்.

510. மு. குறுந். உசஉ : 1.

500 - 510. இங்கே கூறப்பட்ட விலங்கினங்களிற்சில சிலப்பதிகாரம், உரு : 48 - ஆம் அடி முதலியவற்றிற் கூறப்பட்டுள்ளன.

511. மலைபடு. 143 - 4.

512. நறுவடிமா : பெரும்பாண். 309; நற். உசங : 3; குறுந். ௬௩௧ : 5 - 6; ஐங். ௯௧ : 1, உ௧௩ : 1; கலி. ச௧ : 14, அச : 1 - 2.

515 காயுய்க் கொண்ட நுகமரு ளூறை
பருஉப்பளிங் குதிர்த்த பலவுறு திருமணி
குரூஉப்புலி பொருத புண்கூர் யானை
முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள்
வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்த
520 ளாகந் திலக நறுங்கா ழாரங்
கருங்கொடி மிளகின் காய்த்துணர்ப் பசுங்கறி
திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்

---

517. புலி பொருத யானை: "பூம்பொறி யுழுவைப் பேழ்வா யேற்றை, தேங்கமழ் சிலம்பிற் களிற்றொடு பொரினே", "கொன்முரா ணிரும்புலி யரும்புழைத் தாக்கிச், செம்மறுக் கொண்ட வெண்கோட் டியானை", "புலிபொரச் சிவந்த புலாவஞ் செங்கோட்டு.........வேழம்", "வயக்களிறு பொருத வாள்வரி வேங்கை" (நற். கoச: 1 - 2, கருக: 2 - 3, உoஉ: 1 - 4, உருரு: 4); "சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கி" (குறுந். அஅ: 2); "மறங்கொ ளிரும்புலித் தொன்முரண் டொலைத்த, முறஞ்செவி வாரணம்", "புகர்முகக் களிறொடு புலிபொரு துழக்கும்", "வாயிழி கடாத்த வான்மருப் பொருத்தலோ, டாய் பொறி யுழுவை தாக்கிய பொழுதின்", "பெருங்களிற் றினத்தொடு வீங் கெருத் தெறுழ் முன்பி, னிரும்புலி மயக்குற்ற விகன்மலை" (கலி. சஉ: 1 - 2, சரு: 12, சகூ: 3-4, சஅ: 6 - 7); "புலியொடு பொருது சினஞ் சிறந்து வலியோ, ரவுக்களி றொதுங்கிய மருங்கில்", "குயவரி யிரும் போத்துப் பொருத புண்கூர்ந், துயங்குபிடி தழீஇய மதனழி யானை" (அகநா. உகக: 6 - 7, ருகஅ: 22 - 3); "வரிவயம் பொருத வயக் களிறு" புறநா. கoo: 7.

517-8. யானை முத்துடை மருப்பு: முருகு. 304 - 5; குறிஞ்சி. 35 - 6; "முத்துடை மருப்பின் மழகளிறு" (பதிற். ருஉ: 3); "முத் தார் மருப்பின்" (கலி. சo: 4); "வைந்நுதி வான்மருப் பொடிய வுக்க, தெண்ணீ ராலி கடுக்கு முத்தமொடு" (அகநா. உஅஉ: 6 - 7); "அடியடி யளக்கர்நிரையே துணிபடுபிறக்கநடு வொடிமடி மருப்பிணைகள் சொரி குருதி முத்த நினையோம்" குலோத். பிள்ளை. முத்தப். 8.

519. "கோடல் வீயுகு பவைபோ, லிலங்கே ரெல்வளை", "ஊழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால்", "ஊழுற்ற கோடல்வீ, யிதழ் சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு" (கலி. எ: 15 - 6, சஅ: 11, கஉக: 13 - 4); "உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்" (புறநா. கூo: 1); "துணைமலர்க் காந்த ளூழ்த்துச் சொரிவபோற் றோன்றி முன்கை, யணிவளை நலத்தோ டேங்க" சீவக. 1742.

522. மலைபடு. 171, அடிக்.

கானிலை யெருமைக் கழைபெய் தீந்தயிர்
நீனிற வோரி பாய்ந்தென நெடுவரை
525 நேமியிற் செல்லு நெய்க்க ணிறாஅ
லுடம்புணர்பு தழீஇய வாசினி யனைத்துங்
குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி
கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப
நோனாச் செருவி னெடுங்கடைத் துவன்றி
530 வானத் தன்ன வளமலி யானைத்
தாதெருத் ததைந்த முற்ற முன்னி
மழையெதிர் படுகண் முழவுக ணிகுப்பக்
கழைவளர் தூம்பின் கண்ணிட மிமிர
மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
535 நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்

---

525. மலைபடு. 238 - 9, அடிக்.

524 - 5. நெடுவரை.........இறால்: மூருகு. 299 - 300.

“ அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து, திணிநெடுங் குன்றந் தேன் சொரி யும்மே ” புறநா. ௧௦௯ : 7 - 8.

527. “குடாஅது, பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற், பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும் ” புறநா. ௧௬௬ : 26 - 8.

527 - 8. “ மலைத்தலைய கடற்காவிரி ” (பட். 6) ; “ குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு, கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்கும், காவிரி ” சிலப். ௧௦ : 106 - 8.

526 - 9. மதுரைக். 695 - 7.

530. மலைபடு. 377 ; “ காள மேகமு நாகமுந் தெரிகில ” கம்ப. சித்திரகூட. 2.

531. தாதெருத் ததைந்த முற்றம் : “ மன்றத், தெருவினுண் டாது குடைவன வாடி ” (குறுந். ௪௬ : 3 - 4) ; “ தாதெரு மன்றம் ” (கலி. ௧௦௩ : 62, ௧௦௮ : 60 ; சிலப். ௧௬ : 102, ௧௭ : “ மாயவன்றம் ”, ௨௭ : 74) ; “ தாதெரு மறுகு ” நற். ௩௪௩ : 3 ; அகநா. ௧௬௫ : 4 ; புறநா. ௩௩ : 11, ௨௧௫ : 2, ௩௧௧ : 3.

532. மலைபடு. 1 - 3, அடிக்.

533. மலைபடு. 6, அடிக்.

534. மருதம்பண்ணிய : மலைபடு. 469 - 70, அடிக்.
கருங்கோட்டுச் சீறியாழ் : நெடுநல். 70, அடிக்.

கடவ தறிந்த வின்குரல் விறலியர்
தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅ
தருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை
விருந்திற் பாணி கழிப்பி நீண்மொழிக்
540 குன்றா நல்லிசைச் சென்றோ ரும்ப
லின்றிவட் செல்லா துலகமொடு நிற்ப
விடைத்தெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக்
கொடைக்கட னிறுத்த செம்ம லோயென
வென்றிப் பல்புகழ் விறலோ டேத்திச்
545 சென்றது நொடியவும் விடாஅ னசைதர
வந்தது சாலும் வருத்தமும் பெரிதெனப்
பொருமுர ணெதிரிய வயவரொடு பொலிந்து
திருநகர் முற்ற மணுகல் வேண்டிக்
கல்லெ னொக்க னல்வலத் திரீஇ
550 யுயர்ந்த கட்டி லுரும்பில் சுற்றத்
தகன்ற தாயத் தஃகிய நுட்பத்
திலமென மலர்ந்த கைய ராகித்
தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்

---

536. இன்குரல் விறலியர் : மலைபடு. 358.

534 - 6. முருகு. 212, அடிக்; மதுரை. 217 - 8, அடிக்.

538. அருந்திறற் கடவுள் : மணி. ௬ : 60.

"கடவுட் பழிச்ச" பதிற். ௬௧ : 6.

541. பொருந. 176; பெரும்பாண். 466, ந. அடிக்; புறநா. ௧௬௫ : 1 - 2, அடிக்.

542. பெரும்பாண். 445.

543. மலைபடு. 89; பெரும்பாண். 446, அடிக்; "பெய்ம்முகி லென்னக் கொடைக்கடனிறுக்கு மிக்குவாகு" கூர்ம. சூரியன் மரபு. 8.

544. "மறம்வீங்கு பல்புகழ்" (பதிற். ௩௨ : 8); (திருவாசகம், பொற்சுண்ணம், 18 ; பெரிய. திருநீலகண்டயாழ்ப். 5 ; திருவால. ௫௬ : 9) ; "காந்திருளை வென்று களிவென்றி பாடவெபோல்" "மின்னைப் புறங்கண்ட வீரப் புகழ்பாட, லென்ன" சோக்கநாதருலா.

549. கல்லெனொக்கல் : பெரும்பாண். 21, அடிக்.

550. உரும்பில் சுற்றம்: "உரும்பில் சுற்றமொ டிருந்தோற் குறுகி" பெரும்பாண். 447.

553. "மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே" புறநா. ௨௭ : 6.

நெடுவரை யிழிதரு நீத்தஞ்சா லருவிக்
555 கடுவரற் கலுழிக் கட்கின் சேயாற்று
வடுவா ழெக்கர் மணலினும் பலரே
அதனால், புகழொடுங் கழிகநம் வரைந்த நாளெனப்
பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளமொடு
நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி
560 துவந்த வுள்ளமோ டமர்ந்தினிது நோக்கி
யிழைமருங் கறியா நுழைநூற் கலிங்க
மெள்ள றுசிறப்பின் வெள்ளரைக் கொளீஇ
முடுவ றந்த பைந்நிணத் தடியொடு
நெடுவெ ணெல்லி னரிசிமுட் டாது
565 தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து
பலநா ணிற்பினும் பெறுகுவிர் நில்லாது
செல்வேந் தில்லவெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கூறி விடுப்பி னும்முட்
டலைவன் றாமரை மலைய விறலியர்
570 சீர்கெழு சிறப்பின் விளங்கிழை யணிய

555. கட்கின் சேயாறு : மலைபடு. 476.

556. மதுரை. 236, அடிக் ; சிலப். உ௪ : 125 - 6.

559 - 60. “ யாந்தன் னறியுந மாகத் தான்பெரி, தன்புடை மையி னெம்பிரி வஞ்சி ” புறநா. ௩௪க : 6 - 7.

561. பொருந. 82 - 3, அடிக்.

563. மலைபடு. 177.

565. குறிஞ்சி. 238, அடிக்; “ தலைநாள் விழைவொடு ” வி - பா. குருகுல. 79.

565 - 6. “பலநாள் பயின்று பலரொடு செல்லினுந், தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ ” (புறநா. ௧0௧ : 2 - 3); “ பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலோர் தம்முழை, யென்னானும் வேண்டுப வென்றிகழ்ப - வென்னானும், வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர், காண்டொறுஞ் செய்வர் சிறப்பு ” நாலடி. 159.

567 - 8. பொருந. 121 - 2.

569. பாணன் பொற்றாமரை சூடுதல் : பொருந. 159 - 60, அடிக்.

569 - 70. விறலியர் இழை பெறுதல் : “ வசையின் மகளிர் வயங் கிழை யணிய ” பதிற். கஉ : 23.

பாணன் பொற்றாமரை பெறுதலும் விறலி இழை பெறுதலும் பொருந. 159 - 62, அடிக்.

நீரியக் கன்ன நிரைசெல னெடுந்தேர்
வாரிக் கொள்ளா வரைமருள் வேழங்
கறங்குமணி துவைக்கு மேறுடைப் பெருநிரை
பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி
575 நிலந்தினக் கிடந்த நிதியமோ டனைத்து
மிலம்படு புலவ ரேற்றகைந் நிறையக்
கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கையின்

---

571. செலவுக்கு நீரியக்கம்: மலைபடு. 51 - 3, அடிக்.

572. வரைமருள்வேழம்: "வரைமருளு முயர்தோன்றல...... யானை" (மதுரை. 46 - 7); "மலையெனத், தேனிறை கொள்ளு மிரும் பல் யானை" (புறநா. சஎ: 34 - 5); "மஞ்சிவர் குன்றென மலைந்த வேழமே" (சீவக. 2230); "மலையே மலையோடு மலைந்தனபோற், கொலைவேழமொ டேற்றன குஞ்சரமே" (சூளா. அரசியல். 104); "யானை மலையென மலைவ" கம்ப. மிதிலை. 3.

573. ஏறுடைப் பெருநிரை: மலைபடு. 408 - 9; நெடுநல். 4, அடிக்.

574. "பொலம்படைக் கலிமா", "பொலம்படையமா" (புறநா. சசசு: 19, நடுகூ: 14); "புனையும் பொலம்படைப் பொங்குளைமான்" பு - வெ. 276.

பொன்னென்பது பொலமெனத் திரிந்து வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; இளம். புள்ளி. சூ. 61, இளம். ந.

575. மலைபடு. 478; மதுரை. 215, அடிக்; "நிலந்தினக் கிடந்த நெடுநிதிச் செல்வம்" தணிகையாறு. 25.

576. ஏற்றகை: நாலடி. 98.

"இலம்படு.........நிறையவென வரும்; உரிச்சொல்லாகலான் உருபு விரியாதெனினும் இலத்தாற் பற்றப்படும் புலவரென்னும் பொருளுணர நிற்றலின் வேற்றுமை முடிபாயிற்று" (தொல். புள்ளி. சூ. 21, இளம்); "'இலம்.........நிறைய' இதற்கு இல்லாமையுண்டாகின்ற புலவரெனப் பொருள்கூறுக" (ஷை. ஷை. ஷை. ந.); இலம்பாடு வறுமையை யுணர்த்துமென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 62, இளம். சே. தெய்வச். ந.

576 - 7. "இலம்படு புலவ ரேற்றகை ஞெமரப், பொலஞ்சொரி வழுதி" பரி. சு0: 126 - 7.

571 - 7. பரிசிலர்க்குத்தேர் தருதல்: மலைபடு. 399 - 400; சிறுபாண். 142 - 3, அடிக்; மதுரை. 224, அடிக்.

வளம்பிழைப் பறியாது வாய்வளம் பழுநிக்
கழைவளர் நவிரத்து மீமிசை ஞெரேரெனை
580 மழைசுரந் தன்ன வீகை நல்கித்
தலைநாள் விடுக்கும் பரிசின் மலைநீர்
வென்றெழு கொடியிற் றோன்றுங்
குன்றுசூ ழிருக்கை நாடுகிழ வோனே.

---

பரிசிலர்க்குத் தேரும் குதிரையுங் கொடுத்தல்: மதுரை. 223 - 4, அடிக்.

பரிசிலர்க்கு யானை கொடுத்தல்: பொருந. 126 - 7, அடிக்; சிறு பாண். 142 - 3, அடிக்; மதுரை. 99 - 102, அடிக்.

579. ஞெரேரெனை: மலைபடு. 240.

580. மழை சுரந்தன்ன வீகை: மலைபடு. 72; 75 - 6, அடிக்; "எழிலி வான மெள்ளினன் றரூஉங், கவிகை வண்கைக் கடுமான் றோன்றல்" (தொல். எச்ச. சூ. 18, ந; உவம. 14, பேர். மேற்.); "மழை விழை தடக்கை வயவா ளெழினி", "கார்கள்ள வுற்ற பேரிசை யுதவி" தொல். உவம. சூ. 14, பேர். மேற்.

582. வென்றெழுகொடி: முருகு. 67, அடிக்; முல்லை. 90 - 91, அடிக்; "உரவுக் களிற்று வெல்கொடி" பதிற். அஅ: 17.

581 - 2. "பல்வேறு குழூஉக்கொடி பதாகை நிலைஇப், பெரு வரை மருங்கி னருவியி னுடங்க" (மதுரை. 373 - 4); "வரையிழி யருவியி னொளிறுகொடி நுடங்க", "வரைமிசை யிழிதரு மருவியின் மாடத்து, வளிமுனை யவிர்வருங் கொடிநுடங்கு தெரு", "வான்றோய் வெல்கொடி, வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்க" (பதிற். உடு: 11, சஎ: 3 - 4, சுசு: 1 - 2); "களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர, வொளிறுவன விழிதரு முயர்ந்துதோன் றருவி, நேர்கொ ணெடுவரை", "பெருவரை யிழிதரு நெடுவெள் ளருவி, யோடை யானை யுயர்மிசை யெடுத்த, வாடுகொடி கடுப்பத் தோன்றுங், கோடுயர் வெற்பன்" (அகநா. கசுஉ: 22 - 4, ௩௱அ: 12 - 5); "மனையிற் பொலி மாக நெடுங்கொடி மாலை யேய்ப்ப, வினையிற்றிரள் வெள்ளரு வித்திர ளேங்கி வீழ" (கம்ப. கடறுவு. 50); "அமையகிற்கு மலங்கலேறு பிறங்க வெண்கொடி யாடுமா, லிமைய வெற்பு மதன்கணின்று மெடுத்த கங்கையு மென்னவே" தக்க. 634.

583. நாடுகிழவோன்: "மலைகிழவோனே" (முருகு. 317) என் பதனடிக்குறிப்பைப் பார்க்க.

## இதன்பொருள்.

1 - 2. திரு மழை தலைஇய இருள் நிறம் விசும்பின் விண் அதிர்பு இமிழ் இசை கடுப்ப - [1] செல்வத்தையுண்டாக்கும் மழையைப்பெய்த இருண்ட நிறத்தையுடைய மேகத்தினது ஆகாயத்திடத்திலே நின்று முழங்கும் ஓசையையொப்ப,

நடுக்கங்கூறவே மிக்கவொலியென்றாயிற்று.

2 - 3. பண் அமைத்து திண் வார் விசித்த முழவொடு - பண்கள் தன் [2] கண்களிலே உண்டாக்கப்பட்டுத் திண்ணிய வாரால‌ே இறுக வலித்த மத்தளத்தோடே,

[3] "இடக்க ணிளியா வலக்கண் குரலா, நடப்பது தோலியற் கருவி யாகும்" என்பதனாற் பண்ணமைத்தென்றார்.

3. ஆகுளி - சிறுபறையும்,

4. நுண் உருக்குற்ற விளங்கு அடர் பாண்டில் - கரைய உருக்குதலுற்ற விளங்கின தகடாகத்தட்டின [4] கஞ்சதாளமும்,

5. மின் இரு பீலி அணி தழை கோட்டொடு - விளங்குகின்ற கரிய [5] பீலியாகிய அழகினையுடைய தழையைக்கட்டின கொம்போடே,

6. கண் இடை விடுத்த களிறு உயிர் தூம்பின் - கண்களின் நடுவே வெளியாகத் திறந்த [7] யானையின் கைபோலும் நெடுவங்கியத்தோடே,

[8] உயிர்: ஆகுபெயர். இனி, [9] யானை நெட்டுயிர்ப்புக் கொண்டாற்போலும் ஓசையையுடையவென்றுமாம்.

---

[1] "எடுப்பதூஉ மெல்லா மழை" குறள். 15.

[2] கண் - அடிக்கும் பக்கம். [3] சீவக. 675, 2596, ந. மேற்.

[4] கஞ்சம் - வெண்கலம்.

[5] பீலி - மயிற்றோகை; ஒருவகை வாச்சியமுமாம்; "விழிக்குந் தழைப்பீலி" சுந்தா. தே. [6] கண் - கணு.

[7] "கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின் - கண் திறக்கப்பட்ட தூம்பாகிய களிற்றினது கைபோலும் வடிவையுடைய பெருவங்கியத்தை இசையுங்கோள்" புறநா. கஉஉ: 15, உரை.

[8] உயிர்த்தலையுடைய மூக்காதலின், துதிக்கை இங்கே உயிரெனப்பட்டது; "நெடுமூக்கிற் கரியினுரி மூடிக் கொண்டார்" (தே. திருநா. பொது); "மாதிரக் களிற்றின் வரிக்கைவாண் மூக்கிடை மடுப்ப" (கம்ப. நிந்தனை. 2); "முழவிற் பூரித்த கும்ப குடந்தொறு, மூரி யேழ் கட லுந்தரு மூக்கின" (தக்க. 273); "உயிர்க்குறு நாசிகை யாக வுள்ளவும்" (பிரபு. முனிவரர். 13); "கமழ்கந்தங் கையான் மோக்கு மண்ணு" திருவானைக்காப். கடவுள்.

[9] "நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை, யியம்புணர் தூம்பி னுயிர்க்கு

7. இளி பயிர் இமிரும் குறு பரம் தூம்பொடு - இளியென்னும் நரம்பினுடைய ஓசையைத் தாளொலிக்கும் குறிய மேலாகிய தூம் போடே,

இது குறுந்தூம்பு. பயிர் - தழைத்தல்.

8. [1] விளிப்பது கவரும் தீ குழல் துதைஇ - பாட்டைச் சுருதி குன்றாமற் கைக்கொண்டு நிற்கும் இனிய குழலும் நெருங்கப்பட்டு,

9. நடுவு நின்று இசைக்கும் [2] அரி குரல் தட்டை - கண்களுக்கு நடுவே நின்றொலிக்கும் நரம்பின் ஓசையையுடைய [3] கரடிகையும்,

இனித் தாளமானத்திடையே நின்றொலிக்கும் [4] அரித்தெழுகின்ற ஓசையையுடைய வென்றுமாம்.

10. கடி கவர்பு ஒலிக்கும் வல் வாய் எல்லரி - விளக்கத்தை யுடைத்தாகிய தாளத்தைக் கைக்கொண்டு ஒலிக்கும் வலிய வாயை யுடைய [5] சல்லியும்,

11. நொடி தரு பாணிய பதலையும் - மாத்திரையைச் சொல்லும் தானத்தையுடைய [6] ஒருகண் மாக்கிணையும்,

பிறவும் - கூறாத வாச்சியங்களும்,

12. கார்கோள் பலவின் காய் துணர் கடுப்ப - கார்காலத்தாலே பழுத்தலையுடைய பலாவினது காயை மிகவுடைய தொத்தை யொப்ப,

13. நேர் சீர் சுருக்கி காய [7] கலம் பையிர் - தம்மிலொத்த கனத்தையுடையவாகக் கட்டிக் காவின வாச்சிய முட்டுக்களையுடைய பையையுடையிராய்,

---

மத்தம்" (ஐங். ௬௭௭ : 1 - 2) ; "ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை, தொகுசொற் கோடியர் தூம்பி னுயிர்க்கும்", "செறிநடைப் பிடி யொடு களிறுபுணர்ந் தென்னக், குறுநெடுந் தூம்பொடு முழவுபுணர்ந் திசைப்ப" அகநா. ௧௧௧ : 8 - 9, ௩௦௧ : 16 - 7.

1 விளிப்பது - பாடுவது ; திரி. 10 ; மணி. ௪ : 13.

2 அரிக்குரற்றட்டையென்பதற்குத் தவளையினது குரலையுடைய தட்டைப் பறையென்று பொருள் கோடலுமாம் ; "இட்டுவாய்ச்சுனைய பகுவாய்த் தேரை, தட்டைப் பறையிற் கறங்கு நாடன்" குறுந். ௧௯௩ : 2 - 3. 3 ப. ௬௦௧ : 5-ஆம் அடிக்.

4 "அரிக்கூ டின்னியம்" (மதுரை. 612) என்பதற்கு, 'அரித் தெழும் ஓசையையுடைய சல்லி கரடி முதலியவற்றோடே கூடின இனிய ஏனைய வாச்சியங்கள்' என்றார்முன். 5 ப. ௬௦௧ : 5- ஆம் அடிக்.

6 "பதலை யொருகண் பையென வியக்குமின்" புறநா. ௧௫௨ : 17.

7 "கலப்பை - யாழ் முதலியவற்றையுமிட்ட பெட்டிகள்" சீவக. 864, ந.

முழவொடே ஆகுளியும் (3) பாண்டிலும் (4) கோட்டொடும் (5) தூம்பொடும் (6) குறுந்தூம்பொடும் (7) தட்டையும் (9) எல்லரியும் (10) பதலையும் பிறவும் (11) நீங்குழலும் நெருங்கப்பட்டு (8) அவற்றைச் சுருக்கிக் காய கலப்பையிர் (13) என்க.

14. கடு கலித்து எழுந்த கண் அகல் சிலம்பில் - கடுமரம் மிக்கு வளர்ந்த இடமகன்ற பக்கமலையில்,

15. படுத்து வைத்தன்ன பாறை மருங்கில் - படுத்துவைத்தாற் போன்ற ஒத்தநிலமாகிய கற்பாறையின் பக்கத்தில்,

16. எடுத்து நிறுத்தன்ன இட்டு அரு சிறு நெறி - நிலத்தே கிடக்கின்ற வழியை எடுத்து நிறுத்தினாற்போன்ற இட்டிய அரிய சிறியவழியை,

17. தொடுத்த வாளியர் துணை புணர் கானவர் - தொடுத்த அம்பினையுடையராய்த் தம் மனைவியரோடு கூடியிருக்கின்ற கானவர்,

18. [இடுக்கண் செய்யா தியங்குந ரியக்கும்:] இயங்குநர் இடுக்கண் செய்யாது இயக்கும் - வழிபோவாரை வருத்துதலைச் செய்யாமல் வழிபோக்கும்,

19 - 20. [அடுக்கன் மீமிசை யருப்பம் பேணா, திடிச்சுர நிவப்பி னியவுக்கொண் டொழுகி:] அடுக்கல் மீமிசை இடி சுரம் நிவப்பின் இயவு 1 அருப்பம் பேணாது கொண்டு ஒழுகி - மலையிடத்து மிக்க உயர்ச்சியிற் கல்லையிடித்த அருநிலத்தில் உயர்ந்த வழியைப் போதற்கு அரிதாகக் கருதாதே போதக்கடவேமென்று நெஞ்சாலே கொண்டுநடந்து,

கல்லையிடித்து ஆக்கிய வழி.

சிலம்பிற் (14) பாறைமருங்கிற் (15) சிறுநெறியைக் (16) கானவர் (17) போக்கும் (18) சுரத்தில் இயவுக்கொண்டொழுகி (20) யென்க.

21. தொடி திரிவு அன்ன தொண்டு படு திவவின் - தொடியினது உறழ்ச்சியையொத்த உறழ்ச்சியையுடைய ஒன்பதென்னுமெண் உண்டான வார்க்கட்டினையும்,

2 வலித்தல் மெலித்தல் செய்யவேண்டுதலின், உறழ்ச்சி கூறினர்.

22 - 4. [கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக், குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி, னரலை தீர வுரீஇ:]

கேள்வி அனைத்தும் போகா - நூற்கேள்வி அடைய முற்றுப்பெற்று,

3 கடிப்பகை அனைத்தும் அரலை தீர உரீஇ - வெண்சிறுகடுகளவும்

---

1 அருப்பம் - அருமை.

2 "நெகிழ வேண்டுமிடத்து நெகிழ்ந்தும் இறுக வேண்டுமிடத்து இறுகியும் நரம்பு துவக்கும் வார்க்கட்டு" சிறுபாண். 221 - 2, ந; பெரும்பாண். 12 - 3, ந.

3 பேய்க்குப் பகையாதலின் வெண்சிறுகடுகைக் கடிப்பகையென்றார்; "ஐயவிக் கடிப்பகை" மணி. ௭ : 73.

1 கொடும்பு இல்லையாம்படி 2 தீற்றி,

முடங்கிப் பரற்றன்மையாயிருத்தலிற்கொடும்பை 3 அரலையென்றார்.

அரலை - குற்றமுமாம். இனி, வெண்சிறுகடுகெனவும் கேள்விதப்பா தென்பாருமுளர்; அது வடிவிற்கு உவமையாதலிற் பொருந்தாது.

குரல் ஓர்த்து தொடுத்த சுகிர் புரி நரம்பின் - ஓசையை ஓர்ந்து பார்த்துக் கட்டின வடித்து முறுக்கின நரம்பினையும்,

கேள்வி போகா, உரீஇத் தொடுத்த நரம்பென்க.

24 - 5. வரகின் குரல் வார்ந்தன்ன நுண் துளை இரீஇ - வரகின் கதிர் ஒழுகின தன்மைத்தாக நெருங்கின நுண்ணிய துளைகளையிருத்தி,

இது, 4 பொல்லம் பொத்துமிடத்திற்றுளை. 5 "பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக், கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை" என்றார் பிறரும்.

26 - 9. [சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி, யிலங்குதுளை செறிய வாணி முடுக்கிப், புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப், புதுவது போர்த்த பொன்போற் பச்சை:]

இலங்கு துளை செறிய ஆணி முடுக்கி - விளங்குகின்ற துளைகள் நிரம்பும்படி சுள்ளாணிகளை இறுகத் தைத்து,

புதுவது வெண்கை புனைந்த யாப்பு அமைத்து - புதிதாக யானைக் கொம்பாற் செய்த யாப்பை அமையப்பண்ணி,

யாப்பு - பத்தலிற் குறுக்கே வலிபெற ஓட்டுவது.

சிலம்பு அமை பத்தல் பசையொடு சேர்த்தி புதுவது போர்த்த பொன்போல் பச்சை - ஒலித்தலமைந்த பத்தலிலே 6 பற்றோடே கூட்டிப் புதிதாகப் போர்த்த பொன்னிறம்போலும் நிறத்தையுடைய தோலினையும்,

இரீஇ முடுக்கி அமைத்துச் சிலம்புதலமைந்த பத்தலிலே போர்த்த பச்சையென்க

30 - 31. [வதுவை நாறும் வண்டுகம ழைம்பான், மடந்தை:]

வண்டு வதுவை நாறும் ஐம்பால் மடந்தை - தன்னிடத்திருந்த வண்டு கலியாணம் செய்தமகளுடைய நாற்றத்தை நாறுதற்குக் காரண மான மயிரினையுடைய மடந்தை,

வதுவைக்கு எல்லா மணமும் உளவாதல்பற்றி வதுவை நாறு மென்றார்.

---

1 கொடும்பு - கொடுமுறுக்கு (கொடி முறுக்கு.)

2 தீற்றி - உருவி. 3 அரலை - சிறுகல்.

4 பொல்லம் பொத்தல் - இரண்டு தலைப்பையுங் கூட்டித் தைத்தல்; "பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை" பொருந. 8.

5 பெரும்பாண். 7 - 8. 6 பற்று - பிசின்.

கமழ் ஐம்பால் - [1] இயல்பான மணத்தையுடைய ஐம்பால்.

31-2. [மாண்ட நுடங்கெழி லாகத், தடங்குமயி ரொழுகிய வவ் வாய் கடுப்ப :] எழில் நுடங்கு மடந்தை மாண்ட ஆகத்து அடங்கு மயிர் ஒழுகிய அ வாய் கடுப்ப - [2] அழகு கட்புலனாகி நின்றசையும் மடந்தையது மாட்சிமைப்பட்ட மார்பிடத்தே சென்று பின்பு இல்லை யான மயிர் ஒழுங்குபட்டுக்கிடக்கின்ற அழகிய வயிற்றிடத்தை யொக்க,

33-4. அகடு சேர்பு பொருந்தி அளவினில் திரியாது கவடு பட கவைஇய சென்று வாங்கு உந்தி - பொல்லம்பொத்துதல் நடுவேசேரப் பட்டுக் கட்கு இனிதாய்த் தனக்குக் கூறுகின்ற அளவிலே வேறுபடா மற் பகுத்தலுண்டாக அகத்திட்ட உயர்ந்து வளைந்த உந்தியினையும்,

[3] உந்தி - யாழகத்து ஓருறுப்பு.

35-7. நுணங்கு அரம் நுவறிய நுண் நீர் மாமை களங்கனி அன்ன கதழ்ந்து கிளர் உருவின் வணர்ந்து ஏந்து மருப்பின் வள் [4] உயிர் [5] பேரியாழ் - நுண்ணிய அரத்தாலே அராவின நுண்ணிய நீர்மையினை யுடைய கரியநிறத்தாலே களம்பழத்தின் நிறத்தை ஒத்தனவாய்க் கடுகித் தோன்றுகின்ற நிறத்தையுடைய வளைந்தேந்தின கோட்டினையுமுடைய பெரிய ஓசையினையுடைய பேரியாழ்,

திவவினையும் (21) நரம்பினையும் (23) பச்சையினையும் (29) உந்தி யினையும் (34) மருப்பினையுமுடைய பேரியாழ் (37) என்க.

38. [அமைவரப் பண்ணி யருணெறி திரியாது :] பேரியாழ் (37) அருள் நெறி திரியாது அமைவர பண்ணி - பேரியாழைத் தனக்கு நூலினுற் கூறிய வழிகளைத் தப்பாதபடி பொருந்துதல்வரச் சமைத்து,

39-40. இசை பெறு திருவின் வேந்து அவை ஏற்ப துறை பல முற்றிய - இசையை எக்காலமும் கேட்கின்ற செல்வத்தினையுடைய அர சர்களுடைய அவைக்களத்தே அவர்கள் செவிக்கொள்ளும்படி தாம்

---

[1] இயல்பான மணம் - இயற்கை மணம்; "செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே" குறுந். உ : 4-5.

[2] இவ்வழகு இலாவணிய மெனப்படும்.

[3] "உந்தி யென்பது, கொப்பூழினையும், ஆற்றிடைக்குறையினை யும், தேர்த்தட்டினையும், யாழ்ப்பத்தற்றுளையினையு முணர்த்தும்" நன். சூ. 271, மயிலை.

[4] உயிர் - ஒலி; குறிஞ்சி. 100, ந; "உயிரி லெழுத்து மெண்ணப் படாஅ" தொல். செய். சூ. 44.

[5] பேரியாழ் - இருபத்தொரு நரம்புகளையுடையது; பெருங்கல மெனவும்படும். இதனுடைய இலக்கணம், சிலப்பதிகாரம், அடி யார்க்குநல்லாருரைப்பாயிரத்தாலறியலாகும்.

வாசிக்கும் [1] துறைகள் பலவற்றையும் வாசித்துமுடித்த,

40. பை தீர் பாணரொடு - [2] பசுமையற்ற பாணரோடே,

என்றது, கல்வி முதிர்ந்தமையின் இளமையற்ற பாணரென்றவாறு.

41. உயர்ந்து ஓங்கு பெரு மலை ஊறு இன்று ஏறலின் - உயர்ந்து வளர்ந்த கற்கள் தம்மிற்றொடரும் பெரிய மலைகள் வேறோரிடையூறின்றாக ஏறி வருகையினாலே,

42-3. [மதந்தபு ஞமலி நாவி னன்ன, துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடி :] துளங்கு இயல் மெலிந்த மதம் தபு ஞமலி நாவின் அன்ன கல் பொரு சிறு அடி - அசைகின்ற இயல்பினான் இளைத்த வலி கெட்ட நாயினது நாவினையொத்த கல்லுப்பொருகின்ற சிறிய அடியினையும்,

ஏறலின் மெலிந்த அடியென்க.

44-6. [கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ, விலங்கு மலைத் தமர்ந்த சேயரி நாட்டத், திலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்ற :]

விலங்கு மலைத்து அமர்ந்த சேயரி நாட்டத்து - மாறோடு மாறுபட்டுப் பொருந்தின செவ்வரியையுடைய கண்ணினையும்,

இலங்கு வளை விறலியர் - விளங்குகின்ற வளையினையுமுடைய விறல்படப் பாடியாடுவார்,

கணம் கொள் தோகையின் கதுப்பு இகுத்து அசைஇ நின் புறம் சுற்ற - திரட்சியைக் கொண்ட மயில்போலே மயிரைத்தாழ்த்து இளைத்து நின்னைப் புறத்தே சூழ,

அடியினையும் (43) நாட்டத்தினையும் (45) வளையினையுமுடைய விறலியர் (46) கதுப்பிகுத்து அசைஇச் (44) சுற்ற (46) என்க.

47-8. [கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழற், புனல்கால் கழீஇய மணல்வார் புறவில் :]

[3] புனல் கால் கழீஇய மணல் வார் புறவில் - பெருகும்நீர் [4] துராலை வாரிக்கொண்டு போன மணலொழுங்குபட்ட சிறுகாட்டிடத்தில்,

---

[1] துறைபலவென்றது, வலிவு, மெலிவு, சமமென்னும் மூன்று தானத்திலும் ஒவ்வொன்றில் எழுதானம் முடித்துப்பாடும் இருபத்தொரு பாடற்றுறைகளை ; "மூவேழ் துறையு முறைபுளிக் கழிப்பி" (புறநா. ௧௫௨ : 20); "ஏழே யேழே நாலேமூன் றியலிசை யிசையியல்பா வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்" தே. தாளச்சதி.

[2] பசுமை - இளமை ; "பசுங்கதிர் - பச்சைக் கதிர் ; பசுமை நிறத்திற் சென்றதன்று ; இளமையிற் சென்றது" தக்க. 605, உரை.

[3] "புனல்கால் கழீஇய - நீர்பெருகிய காலத்தே ஏறிய இடத்தைத் தூய்தாக்கிப் போன" பெரும்பாண். 380, ந.

[4] துரால் - குப்பை.

கயம் புக்கன்ன பயம் படு தண் நிழல் - குளத்திலே புகுந்தா லொத்த பயனைத்தருகின்ற குளிர்ந்த நிழலிலே,

49 - 50. [புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக், கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ :]

புலம்பு விட்டு இருந்த காட்சி கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ- வழிவந்த வருத்தத்தைக் கைவிட்டிருந்த அறிவினையுடைய பேரணிகலங்களைப் பெறுங் கூத்தருடைய சுற்றத்திற்குத் தலைவனே,

புனிறு இல் ஒக்கல் - ஈன்றணிமையில்லாத சுற்றம்,

என்றது, பிள்ளையைப் பெற்றவர்கள் பிள்ளையைக்கொண்டு கூட வந்திலர்களென்றவாறு.

கலப்பையிராய் (13) இயவுக்கொண்டொழுகி (20) யாழைப் (37) பண்ணித் (38) துறைபலமுற்றிய பாணரோடு (40) விறலியர் புறஞ்சுற்றத் (46) தண்ணிழலிலே (47) இருந்த (49) கண்ணுளரொக்கற்றலைவனே (50) என வினைமுடிக்க.

கலப்பையிரென்னும் பன்மை தலைவனென்னுமொருமையொடு முடிந்தது, 1 "ஒருமை சுட்டிய" என்னுஞ் சூத்திரத்தால்.

51 - 3. தூ மலர் துவன்றிய கரை பொரு நிவப்பின் மீமிசை நல் யாறு கடல் படர்ந்தாஅங்கு யாம் அவண் நின்றும் வருதும் - தூய பூக்கள் நெருங்கின கரையைப்பொருகின்ற ஓக்கத்தினையுடைய மலையுச்சியினின்றும் இழிந்த நல்லயாறு கடலைநோக்கிப் போனாற்போல யாம் அவனை நோக்கிச் சென்று சில பெற்றுவருகின்றேம் ;

இனி, 2 மலையிற்பொருள்களை வாரிக்கொண்டு யாறு கடலைநோக்கிப் போனாற்போல அவ்விடத்துள்ள பொருள்களை வாரிக்கொண்டு வருகின்றேமென்றுமாம்.

53 - 5. [நீயிருங், கனிபொழி கானங் கிளையொ டுணீஇய, துனைபறை நிவக்கும் புள்ளின மான :]

கனி பொழி கானம் கிளையொடு உணீஇய துனை பறை நிவக்கும் புள் இனம் மான - பழங்களைச் சொரிகின்ற காட்டிற் பழங்களைச் சுற்றத்தோடே சென்று தின்றற்கு விரைந்த பறத்தற்றொழிலிலே ஓங்கும் பறவைத்திரளை யொக்க,

நீயிருமென்பது 3 மேலே கூட்டுதும்.

56. புனை 4 தார் பொலிந்த வண்டு படு மார்பின் - கைசெய்த

---

1 தொல். எச்ச. சூ. 65. 2 பெரும்பாண். 427, உரையைப் பார்க்க.

3 மேலே யென்றது 65 - ஆம் அடியினுரையை.

4 தார் - மார்பின்மாலை ; "பொலந்தார் மார்பி னெடியோன்" (மதுரைக். 61); "தாரொடு பொலிய - தங்கணவர் மார்பின் மாலையோடே அழகுபெற" மதுரைக். 264 - 6, ந.

மாலையாற் பொலிவுபெற்ற வண்டுகளை உண்டாக்குகின்ற மார்பினை யுடைய கணவன் (58) என்க.

57. வனை புனை எழில் முலை - ஓவியங்களிலே முலையாகப்பண்ணின கைசெய்த அழகைத் தன்னிடத்தேயுடைய முலையினையும்,

வாங்கு அமை திரள் தோள் - வளைந்த மூங்கிலையொத்த திரண்ட தோளினையும்,

58. மலர் போல் மழை கண் 1 மங்கையர் கணவன் - பூப்போலும் குளிர்ச்சியையுடைய கண்ணினையுமுடைய கற்புடை மகளிர்க்குக் கணவன்,

59. முனை பாழ் படுக்கும் துன்அரு துப்பின் - பகைப்புலத்தைப் பாழுண்டாக்கும் கிட்டுதற்கரிய வலியினையும்,

60. [இசை நுவல் வித்தி னசையே ருழவர்க்கு :] நுவல் இசை வித்தின் நசை ஏர் உழவர்க்கு - தாம் பிறரைக்கூறும் புகழாகிய விதையாலே பிறர்பொருள்களை நச்சுதலாகிய ஏருழவினையுடைய பரிசிலர்க்கு,

என்றது, புகழைவித்திப் பொருளையெடுப்பரென்றவாறு.

61. புது நிறை வந்த புனல் அம் சாயல் - புதுப்பெருக்காய்வந்த நீர்போலும் அழகையுடைய மென்மையினையும்,

என்றது, தண்ணீர் அரியகாலத்தேவந்து பயன்தருமாறுபோல இவனும் பயன்றருவனென்றவாறு.

62. மதி மாறு ஓரா நன்று உணர் சூழ்ச்சி - தனதறிவின் ஆக்கத்திற்கு மாறுகிய கேட்டை நினையாது ஆக்கத்தினையேயுணரும் நினைவினையும்,

63. வில் நவில் தட கை - விற்றொழிலிலே பயின்ற பெரிய கையினையும்,

மேவரும் பெரும்பூண் - பொருந்துதல் வரும் பேரணிகலங்களையுமுடைய,

64. நன்னன் சேய் நன்னன் படர்ந்த கொள்கையொடு - நன்னன் மகனாகிய நன்னனை நினைத்த கோட்பாட்டுடனே,

துப்பினையும் (59) சாயலினையும் (61) சூழ்ச்சியினையும் (62) கையினையும் பூணினையும் (63) உடைய நன்னனென்க.

65. உள்ளினிர் சேறிராயின் - அவன்தரும் பரிசில்கள் இவையென்று அப்பரிசில்களை உள்ளினிராய் நீயிரும் (53) செல்வீராயின்,

65 - 6. [பொழுதெதிர்ந்த, புள்ளினிர் மன்ற வெற்றாக் குறுதலின் :] என் தாக்குறுதலின் எதிர்ந்த பொழுது புள்ளினிர் மன்ற -

1 மக்களுட் பெண்பாலாரைப்பாடுதல் சிறப்பின்மையின் இவ்வாறு கணவரோடு சேர்த்துப் பாடுதல் மரபென்பர் ; தொல். புறத்திணை. சூ. 26, ந.

என்னை எதிர்ப்படுகையினாலே நீர் புறப்படுகின்றபொழுது நமக்குவரும் ஆக்கத்தை எதிர் கொண்டுநின்ற நன்முகூர்த்தத்தோடே நன்னிமித்தத்தையும் உடையிராயிருந்தீர், அறுதியாக ;

67. ஆற்றின் அளவும் - வழியினது நன்மையினது அளவும் தீமையினதளவும்,

அசையும் நல் புலமும் - நீர் தங்கும் நன்றாகிய இடங்களும்,

68. வீறு வளம் சுரக்கும் அவன் நாடு படு வல்சியும் - பிறர்நாட்டுக்கு இல்லாத செல்வத்தை மாறாமற்கொடுக்கும் அவன் நாடுவிளைகின்ற உணவுகளும்,

நாடெனவே 1 மலைநாடும் காட்டுநாடும் தண்பணைநாடுங் கூறினார் ; அது மேற்காண்க.

69. மலையும் - அவனாட்டின் மலைகளின் தன்மையும்,

சோலையும் - அவனாட்டிற் சோலைகளின் தன்மையும்,

மா புகல் கானமும் - விலங்குகள் விரும்பித்திரியுங் காட்டின் தன்மையும்.

ஆற்றினதளவு முதலிய ஐந்தினையும் இக் கூறியமுறையே கூறாமல் மயங்கக் கூறுவர், கூறும்வழிக்கண் ஆண்டுள்ளனவே கூறவேண்டுதலின்.

70 - 72. தொலையா நல் இசை உலகமொடு நிற்ப பலர் புறம் கண்டு அவர் அருங்கலம் புலவோர்க்கு தரீஇ சுரக்கும் அவன் ஈகை மாரியும் - கெடாத நல்லபுகழ் உலகமுள்ளளவும் நிற்கும்படியாகப் பகைவர் பலரையும் முதுகுகண்டு அவர் திறையாகத்தந்த பெறுதற்கரிய பேரணிகலங்களை முற்பட அறிவுடையோர்க்குக் கொடுத்துப் பின் அவர்க்குச்சொரியும் அவன் பொன்மழையும்,

73. இகழுநர் பிணிக்கும் ஆற்றலும் - தன்னை இகழ்ந்திருக்கும் பகைவரை அரசுகொடாமற் சுருக்கும் அறிவின்வலியும்,

73 - 6. புகழுநர்க்கு அரசு முழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு தூ துளி பொழிந்த பொய்யா வானின் வீயாது சுரக்கும் அவன் நாள்மகிழ் இருக்கையும் - 2 சூதர் மாகதர் பாணர் கூத்தர் முதலியோர்க்குத் தான் புறங்கண்ட பகைவரரசை முற்றுங்கொடுப்பினும் அமைதி பிறவாத அறிவுடனே தூய துளியைப் பெருகச்சொரிந்த பருவம்பொய்யாத மேகம் பின்னரும் பெய்யுமாறுபோலப் பின்னரும் மாறாமற்சொரியும் அவனுடைய நாளோலக்கமும்,

---

1 மலைநாடு - குறிஞ்சி, காட்டுநாடு - முல்லை, தண்பணைநாடு-மருதம்.

2 சூதர் - நின்றேத்துவார் ; மாகதர் - இருந்தேத்துவார் ; மதுரை. 670, ந.

நோக்கு - 1 நோக்கனோக்கம். "வீயாவீண்டும்" என வீயாமை அகற்சிமேற்று.

77 - 80. [நல்லோர் குழீஇய நாநவி லவையத்து, வல்லா ராயினும் புறமறைத்துச் சென்றோரைச், சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி, நல்லிதி னியக்குமவன் சுற்றத் தொழுக்கமும் :] நா நவில் 2 நல்லோர் குழீஇய அவையத்து சென்றோரை வல்லாராயினும் புறம் மறைத்து சொல்லி காட்டி சோர்வு இன்றி விளக்கி நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கமும் - தாம் கற்றவை நாவிடத்தே பயின்ற நல்ல அறிவினையுடையோர் திரண்ட தன் அவைக்களத்திடத்தே சென்ற அறிவுடையோரைத் தாம் கற்றவற்றை மனங்கொள்ளக் கூறமாட்டாராயினும் மாட்டாமையை மறைத்துத் தாம் பொருளைச் சொல்லிக்காட்டி அதனைத் தப்பின்றாக எல்லார் மனமுங்கொள்ளும்படி அறிவித்து நன்றாகநடத்தும் அவனுடைய சுற்றத்தாருடைய பேரொழுக்கமும்,

---

1 நோக்கு அல் நோக்கம் - கண்ணால் நோக்கும் நோக்கமன்றி மனத்தால் நோக்கும் நோக்கம்; அஃதாவது கருதுதல்; தொல். வேற்றுமைமயங்கு. சூ. 10, ந.

2 நல்லோர் குழீஇய அவை - நல்லவையும் நிறையவையும்; "அவற்றுள், நல்லவை யென்பது நாடுங் காலை, எத்துறை யானு மிருவரு மியம்பும், அத்துறை வல்லோ ரறனொடு புணர்ந்தோர், மெய்ப்பொருள் கண்டோர் மிக்கவை யோர்ப்போர், கற்றவர் கல்விக் கடாவிடை யறிவோர், செற்றமுஞ் சினமுஞ் சேரா மனத்தோர், முனிவொன் றில்லோர் மூர்க்க ரல்லோர், இனிய முகத்தோ ரிருந்துரை கேட்போர், வேந்த னொருவர்க்குப் பாங்கு படினும், தாந்தா மொருவர்கட் பாங்கு படாதோர், அன்னோர் முன்னரக் கூறிய பொழுதில், தொலையு மாயினுந் தொலைவெனப்படாது, வெல்லு மாயினு மிகச்சிறப் புடைத்தே", "நிறையவை யென்பது நினையுங்காலை, எல்லாப் பொருளுந் தன்னகத் தடக்கி, எதிர்வரு மொழிகளை யெடுத்துரைப் பதுவே" (யா - வி. ஒழிபு. சூ. 3, மேற்.); "புகழுந் தருமநெறி நின்றோர்பொய் காமம், இகழுஞ் சினஞ்செற்ற மில்லோர் - நிகழ்கலைகள், எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றோ, நல்லா யவைக்கு நலம்", "நலனடக்கஞ் செம்மை நடுவுநிலை ஞானம், குலனென் றிவையுடையோர் கோதில் - புலனில்லோர், சென்று மொழிந்தனவுங் கேட்போர் செறிந்தவிடம், அன்றோ நிறைந்த வவை" (வெண்பாப்பாட்டியல், பொது. 9, 10); "ஆறுட் பகைசெற் றருங்கலை யோர்ந்து, பாரிற் கீர்த்தி படைத்தோர் வைகுதல், நல்லவை யடக்கம் வாய்மை நடுநிலை, சொல்லு நன்மை யுடையோர் தொகைஇ, வல்லார் மொழியினும் வல்லுந ராக்கிக், கேட்போ ருறையவை நிறையவை யாகும்" இ - வி. சூ. 936, உரை, மேற்.

நவிலுதல் - கூறியடிப்படுதல். சுற்றம் - கல்வியுடையோர்.

81 - 3. நீர் அகம் பனிக்கும் அஞ்சு வரு கடு திறல் பெரு இசை நவிரம் மேஎய் உறையும் காரி உண்டி கடவுளது இயற்கையும் - கடல் சூழ்ந்த உலகுநடுங்கும் அஞ்சுதல்தோன்றுங் கடியவலியையுடைய பெரிய புகழினையுடைய [1] நவிரமென்னுமலையைப் பொருந்தியிருக்கும் நஞ்சை ஊணாகவுடைய இறைவனது இயல்பும்,

பனிக்குங்காரி; திறலினையுடைய காரி.

84 - 5. பாய் இருள் நீங்க பகல் செய்யா எழுதரும் ஞாயிறு அன்ன அவன் வசை இல் சிறப்பும் - பரந்த இருள்நீங்கும்படி பகற்பொழுதைச் செய்து தோன்றும் [2] ஞாயிற்றையொத்த அவனுடைய [3] பகையாகிய இருளைக் கடிந்த குற்றமில்லாத தலைமையும்,

86 - 9. [[4] இகந்தன வாயினுந் தெவ்வர் தேஎ, நுகம்படக் கடந்து நூழி லாட்டிப், புரைத்தோல் வரைப்பின் வேனிழற் புலவோர்க்குக், கொடைக்கட னிறுத்தவவன் றொல்லோர் வரவும்:] தெவ்வர் தேம் இகந்தன ஆயினும் நூழிலாட்டி நுகம் பட கடந்து புரை தோல் வரைப்பின் வேல் நிழல் புலவோர்க்கு கொடை கடன் இறுத்த அவன் தொல்லோர் வரவும் - பகைவர்தேயம் சேணிகந்தனவாயினும் [5] ஆண்டுச் சென்று [6] தூசிப்படையைக் கொன்றுகுவித்து வலியுண்டாகவென்று பின்னர் உயர்ச்சியையுடைய யானை அணிந்து நிற்கின்ற அணியிலே சென்று பொருத [7] வேற்போரின் விளக்கத்தையுடைய அறிவுடையோர்க்குக் கொடுத்தற்குரிய நாடும் ஊரும்முதலியவற்றைக் கொடுத்த அவனுடைய குடியிலுள்ளோர் தோற்றரவும்,

---

[1] நவிரமென்னும் மலை இக்காலத்துத் திரிசூலகிரி யென்றும் பருவதமலை யென்றும் வழங்கப்படுகின்றது; இதில் காரியுண்டிக் கடவுளுடைய திருக்கோயில் இருக்கின்றது; இக்காலத்து வழங்கும் அவரது திருநாமம் ஸ்ரீ காளகண்டேசுவரரென்பது; இம்மலை திருவண்ணாமலையின் வாயுதிக்கில் உள்ளது.

[2] பகையைக்கடிதலுக்கு ஞாயிறு இருளைக் கெடுத்தல் உவமை: "ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள்சீக்குஞ் சுடரேபோல், வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையும்" (கலி. ௧௦௦: 1 - 2); "ஞாயிற்றனையை நின்பகைவர்க்கு" புறநா. ருக: 6.

[3] "உறை நிறுத்திய வாளினுற் பகையிருளொதுக்கி" திருவிளை. நாடு. 1. [4] புறநா. ருக: 9 - 11.

[5] ப. உஅரு: 1 - ஆம் அடிக்.

6 தூசிப்படை - முற்படை.

7 வேற்போர்: யானையைக்குத்துதற்கு வேலுரியதாகலின் யானையணியிலே வேற்போரைக் கூறினர்; மலைபடு. 129. அடிக்.

1 காஞ்சிசான்ற வயவராதலின், அவரைப் புலவரென்றார்.

90 - 91. இரை தேர்ந்து இவரும் கொடு தாள் முதலையொடு திரை பட குழிந்த கல் அகழ் கிடங்கின் - இரையைத் தேடியுலாவும் வளைந்தகாலினையுடைய முதலைகளோடே திரையுண்டாக ஆழ்ந்த கல்லை யகழ்ந்த கிடங்கினையும்,

92. வரை புரை நிவப்பின் வான் தோய் இஞ்சி - மலையையொத்த உயர்ச்சியையுடைய வானைத்தீண்டும் மதிலினையுமுடைய,

93 - 4. உரை செல வெறுத்த அவன் மூதூர் மாலையும் கேள் - புகழ் எங்கும் பரக்கும்படி செறிந்த அவனுடைய பழைய ஊரினதியல் பும் இருக்கும்படி கேட்பாயாக ;

ஆற்றினதளவு முதலியவற்றையெண்ணி இன்னதும் இன்னதும் இருக்கும்படி கேட்பாயாக வெனமுடிக்க.

94. [இனி வேளை நீ முன்னிய திசையே :] இனி நீ 2 வேளை முன் னிய திசையே கேள் - அவற்றில் இப்பொழுது நீ நன்னனைக் கருதிச் செல்கின்ற திசையைக் கேள் ;

திசை, ஆற்றினளவை யுணர்த்திநிற்றலின் ஆகுபெயராயிற்று ; ஏகா ரம் : பிரிநிலை.

95 - 6. மிகு வளம் பழுநிய யாணர் வைப்பின் புதுவது வந்தன்று - மிகுகின்ற செல்வம் முற்றுப்பெற்ற புதுவருவாயையுடைய ஊர்களாலே புதிதாகிய தன்மை வந்தது ;

96. [இது வதன் பண்பே :] அதன் பண்பு இது - அவ்வழியின் செய்தி இத்தன்மைத்து ;

97 - 8. [வானமின்னு வசிவு பொழிய வானு, திட்ட வெல்லாம் பெட்டாங்கு விளைய :] ஆனது இட்ட எல்லாம் பெட்டாங்கு விளைய வா னம் மின்னு வசிவு பொழிய - அமையாதே நிலத்தேயிட்ட விதைகளெல் லாம் இன்னவாறே விளையவேண்டுமென்று ஆண்டுள்ளார் விரும்பினாற் போலே விளையும்படியாக மேகம் மின்னுகிய பிளந்து வடுப்படுதலோடே பெய்கையினாலே,

99. பெயலொடு வைகிய வியல் கண் இரு புனத்து - அம்மழை யோடே தங்கின அகன்ற இடங்களையுடைய பெரிய கொல்லைநிலத்தே,

100 - 101. [அகலிரு விசும்பி னுஅல் போல, வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை :] புல் கொடி முசுண்டை அகல் இரு விசும்பின் ஆல்போல வாலிதின் விரிந்த - புல்லிய கொடியினையுடைய முசுண்டை

1 காஞ்சி சான்றவயவர் - நிலையாமையை எப்பொழுதும் உள்ளத்துக் கொண்டிருத்தலமைந்த வீரர் ; "காஞ்சி சான்ற வயவர் பெரும" பதிற். ௬௫ : 4, க௦ : 39.

2 வேள் - நன்னன் ; மலைபடு. 163 - 4, ந.

1 ஏனைப் பூதங்கள் தோன்றுதற்குக் காரணமான பெரிய ஆகாயத்திற் 2 கார்த்திகையாகிய மீன்போல வெள்ளிதாக மலர்ந்தன ;
3 ஆரல், ஆலெனவிகாரம்.

102 - 6. [நீலத் தன்ன விதைப்புன மருங்கின், மகுளி பாயாது மலிதுளி தழாலி, னகளத் தன்ன நிறைசுனைப் புறவிற், கௌவை போகிய கருங்காய் பிடியேழ், நெய்கொள வொழுகின பல்கவ ரீரெண் :] பல்கவர்ஈர் எண் நீலத்து அன்ன விதை புனம் மருங்கின் அகளத்து அன்ன நிறை சுனைபுறவின்மகுளி பாயாது மலிதுளிதழாலின் 4 கௌவை போகிய கரு காய் பிடி ஏழ் நெய் கொள ஒழுகின - பலவாகக் கிளைத்த பசிய எள்ளுத் தோடுகளெல்லாம் நீலமணியையொத்த நிறத்தையுடையவாயெழும்படி அவற்றை விதைத்த கொல்லையின்பக்கத்தில் நீர்ச்சாலையொத்த நிறைந்த சுனைகளையுடைய காட்டிடத்தே அரக்குப்பாயாமல் மிக்க துளி தழுவுகையினுலே இளங்காயாகிய தன்மைபோன கரியகாய் ஒருபிடியிலே ஏழ்காயாக நெய் உள்ளே கொள்ளும்படியாக வளர்ந்தன ;

107 - 8. [பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக், கொய்பதமுற்றன குலவுக்குர லேனல்:] 5 பொய் பொரு கயமுனி முயங்கு கை கடுப்ப குலவு குரல் ஏனல் கொய் பதம் உற்றன - தம்மில் விளையாடிப் பொருகின்ற யானைக்கன்றுகளின் ஒன்றோடொன்றுசேர்ந்த கைகளையொப்பத் தம்மிற் பிணையுங்கதிர்களையுடைய தினை அறுக்குஞ் செவ்வியாகமுற்றின ;

109 - 10. [விளைதயிர்ப் பிதிர்வின் வீயுக் கிருவிதொறுங், குளிர்புரை கொடுங்காய் கொண்டன வவரை:] அவரை இருவிதொறும் விளைதயிர் பிதிர்வின் வீ உக்கு குளிர் புரை கொடு காய் கொண்டன - அவரைகள் தினையரிதாள்தோறும் முற்றின தயிரினது பிதிர்ச்சிபோலும் பூக்களுதிர்ந்து அடியிலே அரிவாளை யொக்கும் வளைந்த காயைக்கொண்டன ;

---

1 ப. உகO : 1 - ஆம் அடிக்.

2 "மழையில் வான மீனணிந் தன்ன, குழையமன் முசுண்டை வாலிய மலர" அகநா. உகச : 1 - 2.

3 "வடவயின் விளங்கா லுறையெழு மகளிருட், கடவு ளொருமீன் சாலினி" (பரி. ரு: 43 - 4) என்பதும், 'ஆரலென்னும் பெயர் ஆலெனக் குறைந்து நின்றது' என்னுமதனுரையும் இங்கே அறியற்பாலன.

4 கௌவை : ப. ருகசு : 4 - ஆம் அடிக்.

5 "பொய்பொரு முடங்குகை" (சிலப். கரு : 50) என்றவிடத்து, 'புரைபொருந்திய வளைந்தகை' என்று அடியார்க்குநல்லார் உரையெழுதியிருத்தலின் பொய்பொரு என்பதைக் கைக்கு அடையாக்கிப் பொருள் கொள்ளலுமாம்.

குளிர் - கிளிகடிகருவியுமென்ப.

111 - 3. [மேதி யன்ன கல்பிறங் கியவின், வாதிகை யன்ன கவைக்கதி ரிறைஞ்சி, யிரும்புகவர் வுற்றன பெரும்புன வரகே:] பெரு புனம் வரகு மேதி அன்ன கல் பிறங்கு இயவின் வாதி கை அன்ன கவை கதிர் இறைஞ்சி இரும்பு கவர்வுற்றன - பெரிய புனத்தில் வரகுகள் எருமை கிடந்தாற்போன்ற கற்பெருத்த வழியிடத்திலே தருக்கங் கூறுகின்றவன் கையிடத்து இணைந்த விரல்களையொத்த இரட்டித்த கதிர்கள் முற்றி வளைந்து அரிவாளாலே அரிதலுற்றன;

114 - 44. [பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு, வாலி தின் விளைந்தன வைவனம் வெண்ணெல், வேலீண்டு தொழுதி யிரிவுற் றென்னக், காலுறு துவைப்பிற் கவிழ்க்கனைத் திறைஞ்சிக், குறையறை வாரா நிவப்பி னறையுற், றுலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே, புயற் புனிறு போகிய பூமலி புறவி, னவற்பதங் கொண்டன வம்பொதித் தோரை, தொய்யாது வித்திய துளர்படு துடவை, யையவி யமன்ற வெண்காற் செறுவின், மையென விரிந்தன நீணறு நெய்தல், செய்யாப் பாவை வளர்ந்துகவின் முற்றிக், காயங் கொண்டன விஞ்சி மாவிருந்து, வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும், விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை, காழ்மண் டெஃகங் களிற்றுமுகம் பாய்ந்தென, வூழ்மல ரொழிமுகை யுயர்முகந் தோயத், துறுகல் சுற்றிய சோலை வாழை, யிறுகுகுலை முறுகப் பழுத்த பயம்புக், கூழ்ற் றலமரு முந்தூ ழகலறைக், கால மன்றியு மரம்பயன் கொடுத்தலிற், காலி னுதிர்ந்தன கருங்கனி நாவன், மாறுகொள வொழுகின வூறுநீ ருயவை, நூறொடு குழீஇயின கூவை சேறுசிறந், துண்ணுநர்த் தடுத்தன தேமாப் புண் ணரிந், தரலை யுக்கன நெடுந்தா ளாசினி, விரலூன்று படுக ணருகுளி கடுப் பக், குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்துக், கீழு மேலுங் கார்வாய்த் ததிரிச், சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி, முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்குசினைப் பலவே :]

பூ மலி புறவில் புயல் புனிறு போகிய (120) அம் 1 பொதி 2 தோரை அவல் பதம் கொண்டன (121)-பூ மிக்க காட்டிடத்தே மழையால் ஈன்றணிமைதீர்ந்து முற்றிய அழகிய குலையினையுடைய 3 மூங்கில் நெல் அவலிடிக்குஞ் செவ்வியைக்கொண்டன;

இது மூங்கில்.

---

1 பொதி - பொதிந்தகுலை.

2 தோரை - ஒருவகைநெல்லும் மூங்கில்நெல்லும்; மதுரை. 287, ந.

3 இதனை, "அவலவலென்கின்றன நெல்" (தொல். எச்ச. சூ. 26, சே. ந. மேற்.) என்பது விளங்கச் செய்கின்றது.

ஐயவி (123) தொய்யாது துளர் படு துடவை வித்திய (122) அமன்ற (123) - வெண்சிறுகடுகு உழாதே களைக்கொட்டால் அடிவரைந்து கொத்தும் தோட்டங்களிலே விதைக்கப்பட்டனவாய் நெருங்கி விளைந்தன;

இஞ்சி (126) செய்யா பாவை வளர்ந்து கவின் முற்றி (125) [1] காயம் கொண்டன (126) - இஞ்சிமுதல் ஒருவராற் பண்ணப்படாத பாவைகள் வளரப்பட்டு அழகு முதிர்ந்து [2] காழ்ப்பைக்கொண்டன;

இஞ்சிக்கிழங்கைப் பாவையென்றல் மரபு.

கொழு கொடி கவலை (128) குழிதொறும் வயவு பிடி முழந்தாள் கடுப்ப (127) விழுமிதின் [3] வீழ்ந்தன (128) - கொழுவிய கொடியினையுடைய கவலை குழிகடோறும் வலியபிடியின் மடித்த முழந்தாளையொக்கும்படி சீரிதாகக் கீழே வளர்ந்தன;

மா இருந்து (126) வீழ்ந்தன (128) - முற்றி மாவாந்தன்மை தம்மிடத்தே உளவாய் வீழ்ந்தன;

காழ் மண்டு எஃகம் களிறு முகம் பாய்ந்தென (129) - காம்பிலே தைத்த வேல் யானையைக் குத்திற்றென்னும்படியாக,

ஊழ் மலர் ஒழி முகை உயர் முகம் தோய (130) துறு கல் சுற்றிய சோலை வாழை (131) - முறைப்பட மலர்தலையொழிந்த முகைகளினுடைய உயர்ந்த முகங்கள் சென்று தீண்டும்படியாக நெருங்கின மலைகளைச் சூழ்ந்துநின்ற சோலையாகிய வாழை,

வேல் யானையைக்குத்தினாற்போல வாழைப்பூ மலையைத்தீண்டி நின்றதென்றுணர்க; வாழைப்பூ உதிர்ந்து பின்பு உலராதுநிற்றல் இயல்பு.

இறுகு குலை முறுக பழுத்த (132) - காய்நெருங்கின குலை மிகவும் நெகிழும்படி பழுத்தன;

உந்தூழ் ஊழுற்று (133) பயம் புக்கு (132) அலமரும் (133) - பெருமூங்கில் நெல்லு முற்றுதலுற்றுப் பயன்படுந்தன்மையிலே புகுந்து அசையாநிற்கும்;

மரம் காலம் அன்றியும் பயன் கொடுத்தலின் (134) - ஆண்டுள்ள மரங்கள்தாம் காலமன்றியும் நிலவிசேடத்தாற் பயனைக்கொடுத்தலின்,

நாவல் காலின் கரு கனி (135) அகல் அறை (133) உதிர்ந்தன (135) - நாவல் காற்றாலே கரியபழம் அகன்ற பாறையிலே உதிர்ந்தன;

இது சினைவினை முதலொடு முடிந்தது.

---

1 காயம் - உறைப்பு; "உப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினும்" நாலடி. 116.

2 காழ்ப்பு - உறைப்பு.

3 ப. கூகக : 1 - ஆம் அடிக்.

நீர் ஊறு உயவை மாறு கொள் ஒழுகின (136) - விடாய்த்த காலத்தில் வாய் நீரூறுதற்குக் காரணமான உயவைக்கொடி நீரோடே மாறுபாடுகொள்ளும்படி படர்ந்தன ;

என்றது, தண்ணீர் தேடவேண்டாவென்றவாறு.

கூவை 1 நூறொடு குழீஇயின (137) - கூவைக்கிழங்கு நீறுந்தன்மையோடே முற்றித்திரண்டன ;

தேமா (138) சேறு சிறந்து (137) உண்ணுநர் தடுத்தன (138) - பழமாக்கள் சாறுமிக்கு 2 உண்பாரை வேறொன்றிற் செல்லவொட்டாமல் தடுத்துக்கொண்டன ;

நெடு தாள் ஆசினி (139) 3 புண் அரிந்து (138) அரலை உக்கன (139) - நெடிய அடியையுடைய ஆசினிப்பலாப் புண்ணும்படி வெடித்து உள்ளுள்ள விதைகள் சிந்தின ;

விரல் ஊன்று படு கண் ஆகுளி கடுப்ப (140) குடிஞை இரட்டும் நெடு மலை அடுக்கத்து (141) - விரல்தீண்டுகின்ற முழங்குங்கண்ணையுடைய சிறுபறையை ஒக்கப் பேராந்தை பேடும்சேவலும் மாறிக்கூப்பிடும் நெடிய மலைப்பக்கத்தே,

அலங்கு சினை பலவு (144) கார் வாய்த்து எதிரி (142) சுரம் செல் கோடியர் முழவின் (143) 4 கீழும் மேலும் (142) தூங்கி (143) 5 முரஞ்சு கொண்டு இறைஞ்சின (144) - அசைகின்ற கொம்பினையுடைய பலாக்கள் மழை மிகப்பெய்யப்பட்டு அதனைத் தாம் ஏற்றுக்கொண்டு வழி போகின்ற கூத்தருடைய மத்தளங்கள்போலே கீழும் மேலுந்தூங்கி முற்றுதல்கொண்டு தாழ்ந்தன ;

வெள் கால் செறுவில் (123) - வெள்ளிய அரிதாள்களையுடைய செய்யிலே,

---

1 நூறு - நீறு.

2 " உண்ணுநர்த் தடுத்த நுண்ணிடி நுவணை - தன்னை நுகர்வாரை வேறொன்றை நுகராமற்றடுத்த.........பிண்டி " (மலைபடு. 445, உரை); " நெய்த லெருமையி னிரைதடுக் குநவுமென்றது நெய்தலானது அக்கரும்பு முதலாய மற்றோரிரையின் பாங்கரிற்செல்லாது தன்னையே நின்று தின்னும்படி தான் போதவுண்ட எருமைநிரையைத் தடுக்குமிடங்களுமென்றவாறு " (பதிற். கஉ : 3 - 4, உரை); " செலல் விலங்குதேன் - தன்னைவிட்டுப் போகையை விலக்குந்தேன் " தக்க. 360, உரை.

3 " பசும்பு ணென்றது புண்பட்ட வாய்போலப் பழுத்து விழுந்த பழத்தினை " (பதிற். சுக : 1) என்பது இங்கே பயன்படும்.

4 " வேரு முதலுங் கோடு மொராங்குத், தொடுத்த போலத் தூங்குபு தொடரிக், கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவின் " குறுந். உருஎ: 1 - 3. 5 " முரஞ்சன் முதிர்வே " தொல். உரி. சூ. 35.

1 ஐவனம் வெண்ணெல் (115) பால் வார்பு கெழீஇ பல் கவர் வளி போழ்பு (114) வாலிதின் விளைந்தன (115) - ஐவனநெல்லும் வெண்ணெல்லும் பால்கட்டிச் சிறிது முற்றிப் பலவாய்க் கவர்த்த காற்று ஊடறுக்கப்பட்டு நன்றாக விளைந்தன ;

வார்தல் ஒழுகுதலாதலிற் கட்டுதலையுணர்த்திற்று. கெழுமுதல் ஈண்டு முற்றுதலை யுணர்த்திற்று. பல்கவர்வளியெனவே நாலுகாற்றும் அடித்து முற்றுதல் கூறினார்.

தீ 2 கழை கரும்பு (119) கவிழ் கணைத்து (117) - இனிய கோலாகிய கரும்பு தோடு கவிழ்தலோடே தண்டுதிரண்டு,

அறை குறை வாரா நிவப்பின் (118) - 3 பாத்தி குறைபடுதலுண்டாகாத வளர்ச்சியோடே,

வேல் ஈண்டு தொழுதி இரிவு உற்றென்ன (116) கால் உறு துவைப்பின் இறைஞ்சி (117) - வேற்படைதிரண்டதானை கெட்டுப்போதலை உற்றதென்னும்படி காற்று மிகப் படுகின்ற ஆரவாரத்தாலே சாய்ந்து,

அறை உற்று (118) ஆலைக்கு அலமரும் (119) - வெட்டுதலுற்று ஆலையிலேசென்று பயன்படுதற்கு அசையாநிற்கும் ;

கரும்பு திரண்டு நிவப்போடே இறைஞ்சி அலமருமென்க.

நீள் நறு நெய்தல் மை என விரிந்தன (124) - நீண்ட நறியநெய்தல் கருமைதான் வடிவுகொண்டதென்னும்படியாக அலர்ந்தன ;

நீ முன்னிய திசையைக்கேள் (94) ; வானம்பொழிகையினாலே (97), பெயலோடுவைகிய புனத்து (99), முசுண்டை மலர்ந்தன (101) ; எண் ஒழுகின (106) ; ஏனல் கொய்பதமுற்றன (108) ; அவரை கொண்டன (110) ; வரகு கவர்வுற்றன (113) ; புறவிலே (120), தோரை கொண்டன (121) ; ஐயவி அமன்றன (123) ; இஞ்சி காயங்கொண்டன (126) ; கவலை வீழ்ந்தன (128) ; வாழை (131) பழுத்தன (132) ; உந்தூழ் அலமரும் (133) ; நாவல் உதிர்ந்தன (135) ; உயவை ஒழுகின (136) ; கூவை குழீஇயின (137) ; தேமாத் தடுத்தன (138) ; ஆசினி உக்கன (139), பலவு இறைஞ்சின (144) ; வெண்காற்செறுவிலே (123), ஐவனநெல்லும் வெண்ணெல்லும் விளைந்தன (115) ; கரும்பு அலமரும் (119) ; நெய்தல் விரிந்தன (124) ; இவ்வாறே மிக்க வளம் முற்றுப்பெற்ற புதுவருவாயையுடைய ஊர்களாலே (95) புதிதாகிய தன்மைவந்தது ; அவ்வழியின்பண்பு இத்தன்மைத்து (96) என வினைமுடிக்க.

இஃது 4 ஆற்றினது நன்மையின் அளவுகூறிற்று.

---

1 பு. நகூஅ : 2 - ஆம் அடிக்.

2 கழைக்கரும்பு, ஒருவகைக் கரும்பென்பாருமுளர்.

3 " கரும்புநடு பாத்தி " நற்றி. உகூஉ : 7 ; ஐங். கூரு : 1.

4 மலைபடு. 67.

145. *தீயின் அன்ன ஒள் செ காந்தள்* - நெருப்பினையொத்த ஒள்ளிய செங்காந்தளினது,

இதற்கு நன்னனென்னும்பெயர் தீயோடடுத்த தன்மையின்,[1] ஆனந்தமாய், பாடினோரும் பாட்டுண்டாரும் இறந்தாரென்று ஆளவந்தபிள்ளையாசிரியர் குற்றங்கூறினாராலெனின், அவர் அறியாதுகூறினார்; செய்யுள் செய்த கௌசிகனார் ஆனந்தக்குற்றமென்னுங் குற்றமறியாமற் செய்யுள் செய்தாரேல், இவர் நல்லிசைப்புலவராகார்; இவர்செய்த செய்யுளை நல்லிசைப்புலவர்செய்த ஏனைச்செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் காரணம் ஆனந்தக்குற்றமென்பதொரு குற்றம் இச்செய்யுட்கு உறாமையானென்றுணர்க.

இச்சொன்னிலை நோக்குமிடத்து ஒருகுற்றமுமின்று; என்னை? அன்னவென்னும் அகரவீற்றுப் பெயரெச்ச உவமவுருபு தீயென்னும் பெயரைச் சேர்ந்துநின்று இன்சாரியை இடையே அடுத்துநிற்றலின். நன்னனென நகரமுதலும் னகரவொற்றீறுமாய் நிற்குஞ் சொல்லாயினன்றே அக்குற்றம் உளதாவதெனமறுக்க. நன்னவென அண்மைவிளியாய்நின்ற முன்னிலைப் பெயரென்று குற்றங்கூறுவார்க்கு இப்பாட்டுப் படர்க்கையேயாய் நிற்றலிற் குற்றமின்றென்க.

நூற்குற்றங்கூறுகின்ற [2] பத்துவகைக்குற்றத்தே, [3] "தன்னானொரு பொருள் கருதிக் கூறல்" என்னுங்குற்றத்தைப் பின்னுள்ளோர் ஆனந்தக்குற்றமென்பதொரு குற்றமென்று நூல்செய்ததன்றி [4] அகத்தியனாரும்

---

[1] ஆனந்தமாய் - ஆனந்தக்குற்றமாகி; ஆனந்தக்குற்றமென்பது எழுத்தானந்தம், சொல்லானந்தம், பொருளானந்தம், யாப்பானந்தம், தூக்கானந்தம், தொடையானந்தமென அறுவகைப்படும்; அவற்றுள் இங்கே சொல்லியது சொல்லானந்தத்திலடங்குமென்பர்; "இயற்பெயர் மருங்கின் மங்கலமழியத், தொழிற்சொல் புணர்ப்பினது சொல்லானந்தம்" யா - வி. ஒழிபு; யா - கா; ஒழிபு. 9, உரை; இ - வி. சூ. 887.

[2] பத்துவகைக்குற்றங்களாவன: "சிதைவெனப் படுபவை வசையற நாடிற், கூறியது கூறன் மாறுகொளக் கூறல், குன்றக் கூறன் மிகைபடக் கூறல், பொருளில மொழிதல் மயங்கக் கூறல், கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல், பழித்த மொழியா னிழுக்கங் கூற, றன்னா னொரு பொருள் கருதிக் கூற, லென்ன வகையினு மனங்கோ ளின்மை, யன்ன பிறவு மவற்றுவிரி யாகும்" தொல். மரபு. சூ. 108.

[3] "தன்னானொருபொருள் கருதிக்கூறலென்பது மலைபடுகடாத்தினை ஆனந்தக்குற்றமெனப் பிற்காலத்தானொருவன் ஒரு சூத்திரங்காட்டுதலும் பதமுடிப்பென்பதோர் இலக்கணம் படைத்துக்கோடலும் போல்வன" தொல். மரபு. சூ. 108, பேர்.

[4] "இனி ஆனந்தவுவமை யென்பன சிலகுற்றம் அகத்தியனார் செய்தா

தோல்காப்பியனாரும் இக்குற்றங்கூறுமையிற் சான்றோர்செய்யுட்கு இக்குற்றமுண்டாயினும் கொள்ளாரெனமறுக்க.

146 - 7. தூவல் கலித்த புது முகை ஊன் செத்து அறியாது எடுத்த புல் புறம் சேவல் - மழையாலே செருக்கிவளர்ந்த புதிய முகையைத் தசையாகக்கருதி முகையென்றறியாதேயெடுத்த புற்கென்ற முதுகினையுடைய பருந்து,

148. ஊன் அன்மையின் உண்ணாது உகுத்தென - தசையல்லாதபடியாலே தின்னுமல் எவற்றையுஞ் சிந்திப்போகட்டதாக,

149 - 50. நெருப்பின் அன்ன பல் இதழ் தாஅய் வெறி களம் கடுக்கும் வியல் அறைதோறும் - நெருப்பினையொத்த பல இதழ்கள் பரந்து வெறியாடுகின்ற களத்தையொக்கும் அகன்ற பாறைகடோறும்,

151. மணம் இல் கமழும் மா மலை சாரல் - மணஞ்செய்த மனைபோல மணக்கும் பெரிய மலைப்பக்கத்திற் சிறுகுடி (156) யென்க.

152. தேனினர் கிழங்கினர் ஊன் ஆர் [1] வட்டியர் - தேனினையுடையராய்க் கிழங்கினையுடையராய்த் தசைநிறைந்த கடகத்தையுடையராய்,

153. சிறு கண் பன்றி பழுதுளி போக்கி - சிறிய கண்ணினையுடைய பன்றியிற் பழுதானவற்றைப்போக்கி அதன் தசையையும்,

[2] பழுதுளி; உளி: பகுதிப் பொருள்விகுதி.

154 - 5. [பொருதுதொலை யானைக் கோடுசீ ராகத், தூவொடு மலிந்த காய கானவர்:] தூவொடு மலிந்த பொருது தொலை யானை கோடு சீர் ஆக காய கானவர் - மற்றுள்ள தசைகளோடேநிறைந்த வட்டிகளையும் தம்மிற் பொருதுபட்ட யானையினது கொம்புகள் காவுமரமாகக் காவிக்கொண்டுவந்த கானவருடைய,

156 - 7. செழு பல் யாணர் சிறுகுடி படினே இரு பெரு ஒக்கலொடு பதம் மிக பெறுகுவிர் - வளவிய பல புதுவருவாயினையுடைய

---

ரெனக் கூறுபவாகலின் அவையிற்றை எவ்வாறு கோடுமெனின், அவைகள்தாம் அகத்துள்ளும் பிறசான்றோர் செய்யுளுள்ளும் வருதலிற் குற்றமாகா; அகத்தியனாராற் செய்யப்பட்ட மூன்று தமிழினுமடங்காமை வேறு ஆனந்தவோத்தென்பது ஒன்றுசெய்தாராயின் அகத்தியமுந் தொல்காப்பியமும் நூலாகவந்த சான்றோர் செய்யுங்குற்றம் வேறுபடாவென்பது ” தோல். உவம. சூ. 37, பேர்.

[1] வட்டி, கடகம் - பனையகணியாற் செய்தபெரிய பெட்டி; “ முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த, வகன்பெரு வட்டி ” ஐங். சஎ: 1 - 2.

[2] “ முறையுளி; உளி: பகுதிப்பொருள்விகுதி ” பெரும்பாண். 462, ந.

சிறிய ஊரிலேதங்கிற் கரிய பெரிய சுற்றத்தோடே அவ்வுணவுகளை மிக வும் பெறுகுவிர் ;

158. [அன்றவ ணசைஇ யற்சேர்ந் தல்கி :] அசைஇ அன்று அல் சேர்ந்து அவண் அல்கி - அவற்றைப்பெற்று இளைப்பாறி அற்றைநாள் இராப்பொழுதும் அவர்களுடனே பொருந்தி அவ்விடத்தே தங்கி,

159 - 60. கன்று எரி ஒள் இணர் கடும்பொடு மலைந்து சேந்த செயலை செப்பம் போகி - கன்றின நெருப்புப்போன்ற ஒள்ளிய பூங் கொத்துக்களைச் சுற்றத்தோடே சூடிச் சிவந்த அசோகமரத்தையுடைய செவ்விய வழியைப்போய்,

161 - 2. அலங்கு கழை நரலும் [1] ஆரி படுகர் சிலம்பு அடைந் திருந்த [2] பாக்கம் எய்தி - அசைகின்ற மூங்கிலொலிக்கும் அரிதாயிழி யும் வழிகளையுடைய சிலம்பைச்சேர்ந்திருந்த சீறூர்களைச்சேர்ந்து,

163 - 4. நோனா செருவின் வலம் படு நோன் தாள் மானம் விறல் [3] வேள் வயிரியம் எனினே - பகைவரைப் பொறுமற் பொரும்போரினை யும் வெற்றியுண்டாகும் வலியமுயற்சியினையும் மானத்தையும் வெற்றி யையுமுடைய நன்னனுடைய கூத்தரேமென்று கூறுவீராயின்,

165. நும் இல் போல நில்லாது புக்கு - நும்முடைய மனைபோல வாசலில்நில்லாதே உள்ளேசென்று,

166. கிழவிர் போல கேளாது கெழீஇ - முன்பே கிழமையுடை யீர் போலே அவரைக்கேளாதே உறவுகொள்ளுகையினாலே,

167. சேண் புலம்பு அகல இனிய கூறி - சேணிடைவந்த நுமது வருத்தந்தீரும்படி இனியமொழிகள் அவர்கூறி,

168. [பருஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு :] பொழிந்த நெய்க்கண் பருஉ [4] குறை வேவையொடு - மிகச்சொரிந்த நெய்யிடத்தே பருத்த தசைகிடந்து வெந்த பொரியலோடே,

169. குரூஉ கண் இறடி பொம்மல் பெறுகுவிர் - நிறவிய வடி வினையுடைய தினைச்சோற்றைப் பெறுகுவிர் ;

170 - 88. [எறித் தரூஉ மிலங்குமலைத் தாரமொடு, வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல், குறைவின்று பருகி நறவுமகிழ்ந்து வைக றைப், பழஞ்செருக் குற்றநும் மனந்த றீர, வருவி தந்த பழஞ்சிதை வெண்காழ், வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை, முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை, பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ, வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனி, னின்புளிக் கலந்து மாமோ ராகக், கழைவளர் நெல்லி னரியுலை யூழ்த்து, வழை யமை சாரல் கமழத் துழைஇ, நறுமல ரணிந்த நாறிரு முச்சிக், குறமக

1 ஆரி - அருமையையுடையது. 2 பாக்கம் - பக்கத்திலுள்ளது.

3 வேள் : மலைபடு. 94, ந. 4 குறை - குறைக்கப்பட்டது.

ாக்கிய வாலவிழ் வல்சி, யகமலி யுவகை யார்வமொடளீஇ, மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர், செருச்செய் முன்பிற் குருசின் முன்னிய, பரிசின் மறப்ப நீடலு முரியி, ரனைய தன்றவன் மலைமிசை நாடே:]

அவன் மலை மிசை நாடு அனையது அன்று (188)-அந்நன்னனுடைய மலையினது உச்சியில் நாடு யான் முற்கூறிய தன்மைத்தன்று; மிகவும் சிறப்புடைத்து; ஆண்டுப் பெறுவனவற்றைக் கேட்பீராக;

பிணவு நாய் முடுக்கிய தடியொடு (177) வருவிசை தவிர்த்த கடமான் கொழு குறை (175) முளவுமா தொலைச்சிய பைந்நிணம் பிளவை (176) விரைஇ (177) - பெண்ணாகிய நாய் ஓடிக்கடித்த உடம்பின் தடிகளோடே ஓடிவருகின்ற விசையைக் கெடுத்துக்கொன்ற கடமானின் கொழுவிய தசையையும் எய்ப்பன்றியைக்கொன்ற பசுத்தநிணத்தை யுடைய பிளக்கப்பட்ட தசைகளையும் கலந்து,

வேய் பெயல் விளையுள் தேகள் தேறல் (171) குறைவு இன்று பருகி (172) - மூங்கிற்குழாய்க்குள்ளே பெய்தலையுடைய முற்றிய தேனாற்செய்த கட்டெளிவைக் குறைவின்றாக நிரம்பவுண்டு,

நறவு மகிழ்ந்து (172) - பின்னர் 1 நெல்லாற்சமைத்த கள்ளை உண்டு மகிழ்ந்து,

முற்படக் கூறிய தசைகளைத் தின்று இடையே தேறலைப்பருகிப் பின் நறவுமகிழ்ந்தென்க.

வைகறை (172) பழஞ்செருக்கு உற்ற நும் அனந்தல் தீர (173) - விடியற்காலத்துக்கள்ளுண்டு மகிழ்ச்சியுற்ற நும்முடைய மதந்தீரும்படி, வைகறையனந்தலென்க.

அருவி தந்த பழம் (174) ஊழ்த்து (180) சிதை வெள் காழ் (174) மா (179) - நீர் கொண்டுவந்த பலாப்பழம் செவ்வியழிந்து உதிர்ந்த வெள்ளிய விதையில் மாவையும்,

வெள் புடை கொண்ட துய் தலை பழனின் (178) இன் புளி (179) உலை (180) மோர் ஆக கலந்து (179) - வெள்ளிய புறத்தைக்கொண்ட ஆரத்தை இடத்தேயுடைய புளியம்பழத்தின் இனிய புளிப்பையும் உலையாகவார்த்த மோருக்கு அளவாகக்கலந்து,

கழை வளர் நெல்லின் அரி (180) வழை அமை சாரல் கமழ துழைஇ (181) (ஆக்கிய 183) - மூங்கிலிலேநின்று முற்றிய நெல்லினரிசியைச் சுரபுன்னை நெருங்கிய மலைச்சாரலெல்லாம் நாறும்படியாகத் துழாவி ஆக்கிய,

வால் அவிழ் வல்சி (183) - வெள்ளிய சோறாகிய உணவை,

நறு மலர் அணிந்த நாறு இரு முச்சி (182) குறமகள் (183) - நறியமலரைச் சூடின நாறுகின்ற கரிய மயிர்முடியினையுடைய குறச்சாதியின் மகளாக்கியவென்க.

1 நெல்லாற் சமைத்த கள்: ப. ருசுo: 1 - ஆம் அடிக்.

கள்ளுண்டபின்பு அனந்தல்தீரச் சோற்றைப் பெறுகுவிரென்க.

அகம் மலி உவகை ஆர்வமொடு அளைஇ (184) - நெஞ்சுநிறைந்த மகிழ்ச்சியை உடையராய் விருந்தினரைப்பெற்றேமென்னும் ஆசையோடே நெஞ்சுகலந்து,

[1] மக முறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர் (185) - தத்தம் பிள்ளைகளைக்கொண்டு முறை சொல்லித் தடுக்கையினாலே மனைகடோறும் பெறுகுவிர்;

அண்ணன், அம்மானென்றாற் போல்வன முறை.

எறி தரூஉம் இலங்கும் மலை தாரமொடு (170) - தாங்கள் உச்சிமலையிலே எறிக் கொண்டுவரும் விளங்குகின்ற மலையிற் பண்டங்களோடே,

அவை சந்தனம், அகில், பொன், மணி முதலியன.

தடுப்ப மனைதொறும் தாரத்தோடே வல்சியைப் பெறுகுவிரென்க.

செரு செய் முன்பின் குருசில் முன்னிய (186) பரிசில் மறப்ப நீடலும் உரியிர் (187) - ஆண்டுப்பெற்றவற்றாலே போரைச்செய்கின்ற வலியையுடைய நன்னனிடத்துப் பெறக்கருதிய பரிசிலை மறக்கும்படி நீட்டித்திருத்தலுமுரியிர்;

189 - 91. நிரை இதழ் குவளை கடி வீ தொடினும் வரை அரமகளிர் இருக்கை காணினும் உயிர் செல வெம்பி பனித்தலும் உரியிர் - நிரைத்த இதழையுடைய குவளையில், [2] தெய்வம் விரும்புதலிற் கடியவாகிய பூக்களைக் கிட்டினும் ஆண்டை வரையரமகளிருடைய இருப்பைக் காணினும் உயிர்போம்படி வெதும்பி நடுங்குதலுமுரியிராகையினாலே பலநாள்நில்லாது நிலனுடு படர்மின் (192) என வினைமுடிக்க.

இத்துணையும் [3] அசையுநற்புலமும் வல்சியும் சேரக்கூறினார்.

192. [4] [பலநா ணில்லாது நிலநாடு படர்மின்:]

193 - 5. [[5] விளைபுன நிழத்தலிற் கேழ லஞ்சிப், புழைதொறு

[1] "மகமுறை தடுப்ப........ - தான் உள்ளேயிருந்து தன் பிள்ளைகளைக்கொண்டு நும்மை அடைவே எல்லாரையும் போகாது விலக்குகையினாலே; இனி, பிள்ளைகளை உபசரிக்குமாறு போல உபசரித்து விலக்க வென்றுமாம்" சிறுபாண். 192, ந.

[2] "தான் விரும்புதலிற் சுரும்பினமும் மொய்யாத........செங்காந்தள்" முரு. 43 - 4, ந.		[3] மலைபடு. 67 - 8.

[4] இதற்கு உரைகிடைக்கவில்லை; பலவாகிய நாட்கள் தாழ்த்து நில்லாமல் நிலத்திலுள்ள நாட்டுவழியே செல்மினென்க. நிலனுடு என்ற பாடத்திற்குப் பூமிவழியேயென்க.

[5] "சிறுகட் பன்றி, யோங்குமலை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி, நூழை நுழையும் பொழுதில்" நற். ௧௯ : 2 - 4.

மாட்டிய விருங்க லரும்பொறி, யுடைய வாறே :] ஆறே கேழல் விளை புனம் கிழத்தலின் அஞ்சி புழைதொறும் மாட்டிய இரு கல் அரு பொறி உடைய - வழிகள், பன்றி முற்றின தினைப்புனத்தை 1 நொக்குகையி ஞலே இதற்கு அஞ்சிச் செல்வழிகடோறும் 2 கொளுத்திவைத்த பெரிய கற்பொறிகளையுடைய ; ஆகையிஞலே,

195 - 6. [நள்ளிரு ளலரி, விரிந்த விடியல் வைகினிர் கழி மின் :] 3 நள் இருள் வைகினிர் அலரி விரிந்த விடியல் கழிமின் - செறிந்த இருட்காலத்தே தங்கினிராய் ஞாயிற்றின்கதிர் விரிந்த விடியற் பொழுதிலே போவீர் ;

197. நளிந்து பலர் வழங்கா செப்பம் துணியின் - செறிந்து பல ரும் போகாதவழியைப் போகத்துணிவீராயின், அவ்விடம்,

198 - 9. [முரம்புகண் ணுடைந்த பரலவற் போழ்விற், கரந்து பாம் பொடுங்கும் பயம்புமா ருளவே :] 4 முரம்பு கண் உடைந்த பரல் அவல் போழ்வில் பாம்பு கரந்து ஒடுங்கும் பயம்பும் உளவே - மேட்டு நிலம் தன்னிடத்திலே விண்ட பரலையுடைய பள்ளநிலத்திற் பிளப்பிலே பாம்பு மறைந்து கிடக்கும் குழிகளுமுள ;

உம்மையாற் புலி முதலியனவுள்ள குழிகளுங்கொள்க. மார்: அசை.

200. குறிக்கொண்டு மரம் கொட்டி நோக்கி - அப்பயம்பை மனத் தாலே குறித்தல் கொண்டு விலங்கிற்கு மரங்களிலேயேறிக் கொட்டிப் பார்த்து,

201. செறி தொடி விறலியர் கை தொழூஉ பழிச்ச - செறிந்த வளை யினையுடைய விறலியர் அப்பாம்பு மனமகிழும்படி கையாற்றொழுது வாழ்த்த,

202. [வறிதுநெறி யொரீஇ வலஞ்செயாக் கழிமின் :] நெறி வறிது ஒரீஇ வலம் செயா கழிமின் - விலங்குகிடக்கும்வழியைச் சிறிது அகலப்போய் வலப்பக்கத்து வழியை நுமக்கு வழியாகச் செய்து கொண்டு போவீராக ;

வலம் : ஆகுபெயர்.

203. [புலந்துபுனிறு போகிய புனஞ்சூழ் குறவர் :] புனிறு போகிய புனம் சூழ் குறவர் புலந்து - ஈன்றணிமைதீர்ந்து முற்றின தினைப்புனத்தைக் காத்தற்குச்சூழ்ந்த குறவர் தினையழிகின்றதற்கு வெறுத்து,

புலர்ந்தென்பது பாடமாயின், முற்றியென்க.

---

1 நொக்குகை - உண்டு குறையச்செய்கை.

2 கொளுத்தி - பொருத்தி.

3 ப. சகூச : 3 - ஆம் அடிக்.

4 முரம்பு - பருக்கைக்கல்லாலாகிய மேட்டுநிலம்.

204. உயர் நிலை இதணம் ஏறி கை புடையூஉ - உயர்ந்த நிலையினை யுடைய பரணிலேயேறிக் கையைக்கொட்டி,

205. அகல் மலை இறும்பில் துவன்றிய யானை - அகன்றமலையிற் குறுங்காட்டிடத்தே நிறைந்த யானைகளினுடைய,

206. பகல் நிலை தளர்க்கும் கவண் உமிழ் கடு கல் - பகற்பொழுதே நிற்கின்ற நிலையைக்கெடுக்கும் 1 கவண்காலுகின்ற கடிய கற்கள்,

பகைநிலைதளர்க்குமென்று பாடமாயின், பகைத்த நிலையென்க.

207 - 10. [இருவெதி ரீர்ங்கழை தத்திக் கல்லெனக், கருவிர லூகம் பார்ப்போ டிரிய, வுயிர்செகு மரபிற் கூற்றத் தன்ன, வரும்விசை தவிராது :]

உயிர் செகு மரபின் கூற்றத்தன்ன - உயிர்களைப் போக்கும் முறைமையாலே கூற்றத்தையொக்கும் ; அவைதாம்,

கரு விரல் ஊகம் பார்ப்போடு கல்லென இரிய.- கரிய விரலையுடைய குரங்குகள் பார்ப்போடே கல்லென்னுமோசைபடக் கெடும்படியாக,

இரு வெதிர் ஈர்ங்கழை தத்தி விசை தவிராது வரும் - பெரிய மூங்கிலினது பசிய கோலைக்கடந்து வருகின்றவிசை மாறாது வரும் ;

மரம் மறையா கழிமின் - அதற்கு மரங்களிலே ஒதுங்கிநின்று போவீராக ;

குறவர் (203) ஏறிக் கைபுடையூஉத் (204) தளர்க்குங்கல் (206) கூற்றத்தன்ன (209) ; அவை இரியத் (208) தத்தி (207) விசைதவிராதுவரும் ; அதற்கு மரமறையாக் கழிமின் (210) என்க.

211 - 2. உரவு களிறு கரக்கும் இடங்கர் ஒடுங்கி இரவின் அன்ன இருள் தூங்கு வரைப்பின் - வலிய யானையை விழுங்கும் முதலைகள் தங்கப்பட்டு இராக்காலத்தை யொத்த இருள்செறியும் 2 மிளைகளையும்,

213. குமிழி சுழலும் குண்டு கயம் முடுக்கர் - குமிழிகள் சுழன்றுவரும் ஆழ்ந்தநீராழ்ந்த மடுக்களையுடைய முடுக்கரையுமுடைய,

முடுக்கர் - நீர்குத்தின இடங்கள். முடுக்கரையுமுடைய யாறு (214.)

214. அகழ் இழிந்தன்ன கான் யாறு நடவை - ஏறுதற்கும் இறங்குதற்கும் அரியவாகையினாலே அகழிலே இழிந்தாற் போன்ற காட்டாற்றுவழி,

215. 3 வழூஉம் மருங்கு உடைய - காலோடுமிடங்களையுடைய ; அவ்விடத்திற்கு,

---

1 " கல்கால் கவணையென்றது கற்களைக்கான்றாற்போல இடையறாமல் விடும்கவணென்றவாறு " பதிற். அஅ : 18, உரை.

2 மிளை - காவற்காடு ; இஃது இளையெனவும் வழங்கும்.

3 வழூஉம் - வழுக்கும்.

215 - 8. [வழாஅ லோம்பிப், பரூஉக்கொடி வலந்த மதலை பற்றித், துருவி னன்ன புன்றலை மகாரோ, டொருவி ரொருவி ரோம்பினிர் கழிமின் :]

துருவின் அன்ன 1 புன்றலை மகாரோடு - செம்மறி யாட்டினையொத்த புற்கென்ற தலையினையுடைய பிள்ளைகளோடே,

வலந்த பரூஉ கொடி மதலை பற்றி வழாஅல் ஓம்பி - மரங்களிற் சுற்றிக் கிடக்கின்ற பரிய கொடியாகிய பெரிய பற்றுக்கோட்டைப் பிடித்துக் காலோடுதலைப் பரிகரித்து,

ஒருவிர் ஒருவிர் ஓம்பினிர் கழிமின் - ஒருவிரை ஒருவிர் பாதுகாத்துப் போவீராக ;

219. அழுந்து பட்டு அலமரும் புழகு அமல் சாரல் - கிழங்கு தாழவீழ்ந்து அசையும் மலையெருக்கு நெருங்கின பக்கமலையில்,

220 - 21. [விழுந்தோர் மாய்க்குங் குண்டுகயத் தருகா, வழும்பு கண் புதைத்த நுண்ணீர்ப் பாசி :] விழுந்தோர் மாய்க்கும் குண்டு கயத்து அருகா கண் புதைத்த நுண் நீர் பாசி வழும்பு - வீழ்ந்தோரை மறைக்கும் ஆழத்தையுடைய குளங்களுக்கு அருகாக இடம் மறைதற்குக் காரணமாகிய நுண்ணிய நீர்மையையுடைய பாசியினது குற்றம்,

2 " வழும்பறுக்க கில்லாவாந் தேரை - வழும்பில்சீர் " என்றார் பிறரும்.

222. அடி நிலை தளர்க்கும் அருப்பமும் உடைய - அடி ஊன்றியிட்ட நிலையை ஓடப்பண்ணும் ; அதுவுமன்றி அவ்விடம் போதற்கு அருமையையுமுடைய ; அதற்குப் பரிகாரமாக,

223 - 4. முழுநெறி அணங்கிய நுண் கோல் வேரலோடு எருவை மெல் கோல் கொண்டனிர் கழிமின் - வழிமுழுதும் பின்னிவளர்ந்த நுண்ணிய கோல்களையுடைய சிறுமூங்கிலோடே வேழத்தினது மெல்லிய கோல்களையும் பற்றுக்கோடாகப் பிடித்துப் போவிர் ;

இத்துணையும் ஆற்றினது தீமையினளவு (67) கூறினார்.

225 - 8. [உயர்நிலை மாக்கற் புகர்முகம் புதைய, மாரியி னிகுதரு வில்லுமிழ் கடுங்கணைத், தாரொடு பொலிந்த வினைநவில் யானைச், சூழியிற் பொலிந்த :]

புகர் முகம் புதைய சூழியின் பொலிந்த உயர் நிலை மா கல் வினை நவில் யானை - புகரையுடைய முகமறையும்படி முகபடாத்தாற் பொலிவு பெற்ற உயர்ந்த நிலையினையுடைய பெருமையையுடைய மலைபோலும் போர்த்தொழிலிலே பயின்ற யானையினையும்,

---

1 " புன்புறம் - புற்கென்றபுறம் " (பெரும்பாண். 376, ந.) ; " புல்லென்சடை - புற்கென்றசடை " புறநா. உ௫உ : 2, உரை.

2 நாலடி. 352.

மாரியின் [1] இருதரு வில் [2] உமிழ்கடு கணை - மழைபோலத் தாழ்ந்து விழும் வில்லுக்கான்ற கடிய அம்பினையுமுடைய,

தாரொடு பொலிந்த மூத்த புரிசை (229) - தூசிப்படையோடே பொலிவுபெற்ற பழைய மதில்,

மதில், ஆகுபெயராய்த் திருப்பதியையுணர்த்திற்று. என்றது காரியுண்டிக் கடவுளுடைய படைமிகுதிகூறிற்று. அன்றிப் பகைப்புலத்தை அழித்தற்கும் அந்நிலத்தைக் காத்தற்கும் நன்னன்வைத்த படையுமாம்.

228 - 9. [சுடர்ப்பூ விலஞ்சி, யோரியாற் றியவின் மூத்த புரிசை :] சுடர் பூ இலஞ்சி யாறு ஓர் இயவின் மூத்த புரிசை - ஒளியையுடைய பூக்களையுடைய மடுவினையுடைய யாற்றுக்கரையில் ஒருவழியினையுடையவூர்,

'ஓராற்றியவு' பாடமாயின் ஒருப்பட்ட வழியென்க.

இனி அம்பையுடைய தூசிப்படையோடு பொலிந்த யானையென்று யானைக்கு அடையாக்கி அவ்வியானையினுடைய பூக்களெழுதின முகபடாம் போலே உயர்நிலைமாக்கற் புகர்முகம் புதையப்பொலிந்த சுடர்ப்பூவையுடைய புரிசையென்றுமாம்; இன்னும் யானையின் மத்தகம் போலே பொலிந்த சுடர்ப்பூவையுடைய புரிசை யென்றுமாம்; இன்னும் யானையின் மத்தகம்போலே பொலிந்த சுடர்ப்பூ இலஞ்சியையுடைய உயர்நிலைமாக்கல்லையுடைய புரிசையென்பாருமுளர். அவர் சுனையிடத்து மேலெழுந்த குவளை முதலியவற்றின் அரும்புகள் தலைசாய்ந்து கற்புதையக் கிடந்ததற்கு யானையின் மத்தகத்துப்புகரை உவமையென்று கொள்வர்.

230. [பராவரு மரபிற் கடவுட் காணின் :] புரிசை (229) பராவு அரு மரபின் கடவுள் காணின் - கோயிலிற் பராவுதற்கரிய முறைமையினையுடைய கடவுளைக் கண்டீராயின்,

231. [தொழாநிர் கழியி னல்லது :] நீர் தொழா கழியின் அல்லது - நீர் வணங்கிப்போம் அத்தனையல்லது,

நீரென்பது குறிஞ்சின்றது. இனித் தொழாநிரென்பது [3] மறையன்றித் தொழுதென்று பொருடருமேனுமுணர்க.

231 - 2. வறிது நும் இயம் தொடுதல் ஓம்புமின் - சிறிது நும்முடைய வாச்சியங்களைத் தீண்டுதலைக் காப்பீராக; அதற்குக் காரணமென்னையெனின்,

---

1 இருத்தல் - சொரிதல்; "இருத்த கண்ணீர் - சொரியப்பட்ட கண்ணீர்" புறநா. ௧௭௩ : 13, உரை.

2 "உமிழ்தல் - புறப்படவிடுதல்" என்பர் தக்கயாகப்பரணி உரையாசிரியர்; 110, 602.

3 மறை - எதிர்மறை.

232 - 3. [மயங்குதுளி, மாரி தலையுமவன் மல்லல் வெற்பே :] அவன் மல்லல் வெற்பு மயங்கு துளி மாரி தலையும் - அவனது வளவிய நவிரமென்னுமலை மயங்கின துளியையுடைய மழையை இடைவிடாமற் பெய்யா நிற்கும் ;

என்றதனாற்பயன் : வாச்சியங்களும் நனைந்து நுமக்கும் போதலரி தென்பதாம்.

234 - 5. [அலகை யன்ன வெள்வேர்ப் பீலிக், கலவ மஞ்ஞை கட்சியிற் றளரினும் :]

1 அலகை அன்ன வெள் வேர் பீலி மஞ்ஞை - பலகறையையொத்த வெள்ளிய 2 வேரினையுடைய பீலியையுடைய மயில்,

கட்சியில் கலவம் தளரினும் - அக்காட்டிடத்தே ஆடுதற்குவிரித்த கலாபத்தினது பாரத்தாலே ஆடியிளைத்து நிற்பினும்,

236 - 7. [கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும் :]

நெடு கழை கொம்பர் - நெடிய மூங்கிலின் கவடுகளிலே,

கடு பறை கோடியர் மகாஅர் அன்ன கடுவன் உகளினும் - கடிய பறையினையுடைய கூத்தருடைய பிள்ளைகளையொத்த கடுவன்பாயினும்,

238 - 9. [நேர்கொ ணெடுவரை நேமியிற் றொடுத்த, சூர்புக லடுக் கத்துப் பிரசங் காணினும் :]

3 நேர் கொள் நெடு வரை சூர் புகல் அடுக்கத்து - செவ்வையைத் தன்னிடத்தே கொண்ட நெடியமலையில் தெய்வம் விரும்பின பக்க மலையிலே,

நேமியின் தொடுத்த பிரசம் காணினும் - தேருருள்போல்வைத்த தேனிறாலைக் காணினும்,

240 - 41. [ஞெரேரென நோக்க லோம்புமி னுரித்தன்று, நிரை செலன் மெல்லடி நெறிமாறு படுகுவிர் :]

ஞெரேரென நோக்கல் உரித்தன்று - கடுகப்பார்த்தல் நுமக்குரிய தொழிலன்று ; அதற்குக் காரணமென்னையெனின்,

மெல் அடி நிரை செலல் நெறி மாறுபடுகுவிர் - மெல்லிய அடியாலே நிரைத்துச் செல்லுதலையுடைய வழிதப்புவிர் ;

ஓம்புமின் - ஆதலால் அங்ஙனம் நோக்குதலைப் பாதுகாப்பீர் ;

இதுவும் ஆற்றினது அருமை (67) கூறிற்று.

---

1 அலகு, பலகறை - சோழி ; பறையலகென்பது பலகறையென மருவிற்றென்பர் ; (சீவக. 2773, ந.) ; "பறையலகே, யைதாம் பலகறை யென் றனவே" ஆனந்த. வண்டு. 415.

2 வேர் - அடிக்குருத்து ; இது முருந்தென வழங்கும்.

3 நேர்கொள் நெடுவரை - செங்குத்தானமலை.

242. வரை சேர் வகுந்தின் கானத்து படினே - மலையைச் சேர்ந்த வழியினையுடைய காட்டிடத்தே செல்லின்,

243 - 9. [கழுதிற் சேணோ னேவொடு போகி, யிழுதி னன்ன வானிணஞ் செருக்கி, நிறப்புண் கூர்ந்த நிலந்தின் மருப்பி, னெறிக் கெடக் கிடந்த விரும்பிணை ரெருத்தி, னிருடுணிந் தன்ன வேனங் காணின், முளிகழை யிழைந்த காடுபடு தீயி, னளிபுகை கமழா திருயினிர் மிசைந்து :]

கழுதில் சேணோன் (243) நிறம் புண் கூர்ந்த (245) ஏவொடு போகி (243) நெறிகெடகிடந்த (246) ஏனம் (247) - பரணின்மேலிருந்த யானை முதலியவற்றிற்கு எட்டாதவன் எய்த மருமத்திற்புண் மிகுதற்குக் காரணமான அம்போடேபோகி நெறிகெடக் கிடந்த பன்றி,

நிலம் தின் மருப்பின் (245) இழுதின் அன்ன வால் நிணம் செருக்கி (244) இரு பிணர் எருத்தின் (246) இருள் துணிந்தன்ன ஏனம் (247)- கிழங்குகளை அகழ்ந்து தின்கையினாலே மண் தின்றுதேய்ந்த கொம்பினையும் நெய்விழுதை யொத்த வெள்ளியநிணம் செருக்கும்படி கரிய சருச்சரையையுடைத்தாகிய கழுத்தினையுமுடைய இருள் அற்றுக்கிடந்தாற்போன்ற ஏனம்,

செருக்கவெனத் திரிக்க.

ஏனம் காணின் (247) முளி கழை இழைந்த காடு படு தீயின் (248) நளி புகை கமழாது [1] இருயினிர் மிசைந்து (249) - பன்றியைக் கண்டீராயின் உலர்ந்த மூங்கில் தம்மில் இழைந்ததனாற் பிறந்த காடெங்கும் உண்டாகிய தீயினாலே செறிந்த புகைநாறாமல் [2] வக்கி மயிர்போகச் சீவித் தின்று,

250 - 51. [துகளறத் துணிந்த மணிமரு டெண்ணீர்க், குவளையம் பைஞ்சுனை யசைவிடப் பருகி :] குவளை அம் பைஞ்சுனை துகள் அற துணிந்த மணி மருள் தெள் நீர் அசைவு விட பருகி - குவளையால் அழகிய பசிய நிறத்தவாகிய சுனையில் கலக்கமறத் தெளிந்த [3] பளிங்கென்றுமருளும் [4] தெளிந்தநீரை வழியின் இளைப்புத் தீரும்படி குடித்து,

அசைவு : விகாரம்.

252. [மிகுத்துப் பதங்கொண்ட பரூஉக்கட் பொதியினிர் :] பரூஉ கண் பதம் மிகுத்து கொண்ட பொதியினிர் - பருத்த இடத்தையுடைய

---

1 இருவுதல் - நெருப்பில் வாட்டி மயிர்போகச் சீவுதல்.

2 வக்குதல் - வாட்டுதல் ; " வன்பெரும் பன்றி தன்னை யெரியினில் வக்கி ", " கொழுப்பரிந்து, வர்தனகொண் டெழுந்தழலில் வக்தவன வக்தவித்து " பெரிய. கண்ணப்ப. 117, 145.

3 குறிஞ்சி. 57, அடிக்.

4 துணிந்த - தெளிந்த ; " துணிநீர்-தெளிந்தநீர் " மதுரை. 283, ந.

தசையாகி உணவை முழுதுந் தின்னாமல் மிகுத்துவைத்துக் கட்டிக் கொண்ட பொதியின் சுமையினையுடையிராய்,

253. புள் கை போகிய 1 புன்றலை மகாரோடு-வளை கையினின்றும் போதற்குக் காரணமான சிவந்த தலையினையுடைய பிள்ளைகளோடே,

2 பிள்ளையைப் பெற்றால் வளையிடாராகலின், வளைபோதற்குப் பிள்ளைகள் காரணமாயினர்.

254 - 5. [அற்கிடை கழிதல் லோம்பி யாற்றநு, மில்புக் கன்ன கல் லளை வதிமின் :] இடை கழிதல் ஓம்பி ஆற்ற நும் இல் புக்கன்ன கல் அளை அற்கு வதிமின் - அவ்விடத்துப் போதலைப் பரிகரித்து வழியிடத் தனவாகிய நும் இல்லிலே புக்காலொத்த கன்முழைஞ்சுகளிலே இராக் காலத்துத் தங்குவிர் ;

இஃது அசையுநற்புலமும் (67) வல்சியும் (68) சேரக்கூறிற்று.

கானத்துப்படின் (242) மிசைந்து (249) பருகிப் (251) பொதியினி ராய் (252) மகாரோடே (253) கழிதலோம்பி அற்கு (254) வதிமின் (255) என்க.

256. அல் சேர்ந்து அல்கி அசைதல் ஓம்பி - இராக்காலத்திற்கு எல்லாருங்கூடித் தங்கி இளைப்பாறி,

257. வான் 3 கண் விரிந்த விடியல் எற்றெழுந்து - வானிடத்தே ஞாயிற்றின்கதிர் விரிந்த விடியற்காலத்தே துயிலுணர்ந்தெழுந்து,

258. கான் அகப்பட்ட செ நெறி கொண்மின் - காட்டிடத்தே கிடந்த செவ்விய நெறியைப் போவீராக ;

259 - 65. [கயங்கண் டன்ன வகன்பை யங்கண், மைந்துமலி சினத்த களிறுமத னழிக்குந், துஞ்சுமரங் கடுக்கு மாசுணம் விலங்கி, யிகந்துசேட் கமழும் பூவு முண்டோர், மறந்தமை கல்லாப் பழனு மூழிறந்து, பெரும்பயங் கழியினு மாந்தர் துன்னா, ரிருங்கால் வீயும் பெருமரக் குழாமும் :]

அகல் பை அம் கண் (259) மைந்து மலி சினத்த களிறு மதன் அழிக்கும் (260) 4 துஞ்சு மரம் கடுக்கும் மாசுணம் விலங்கி (261) - அகன்ற

1 பட். 90, ந. 2 பி - ம். 'பிள்ளைப் பேற்றால்'

3 உலகிற்குக் கண்ணாதலின் சூரியனைக் கண்ணென்றார் ; "வான் கண் விழியா" (சிலப். ௧௦ : 1) என்றவிடத்து வான்கணென்பதற்கு ஆதித்தனென்று அரும்பதவுரையாசிரியரும் உலகிற்குக் கண்ணாகிய ஆதித்தனென்று அடியார்க்குநல்லாரும் எழுதியிருப்பனவும், "எண்ணுக்கு வரும்புவனம் யாவினுக்குங் கண்ணாவா னிவனே யன்றோ" (வி - பா. அருச்சுனன்றவநிலை. 43) என்பதும் இங்கே அறிதற்குரியன.

4 துஞ்சுதல் தூங்குதலாதலின் அஃது இங்கே விழுந்துகிடத்தலாயிற்று.

படத்தினையும் அழகியகண்ணினையுமுடைய வலிமிகுகின்ற சினத்த வாகிய யானைவலியைக் கெடுத்து விழுங்கும் விழுந்துகிடக்கின்ற பெரு மரங்களையொக்கும் பெரும்பாம்பு கிடக்கின்ற வழியைவிலங்கி,

பெரு பயம் கழியினும் (264) ஊழ் இறந்து (263) இகந்து சேண் கமழும் பூவும் உண்டோர் (262) மறந்து அமைகல்லா பழனும் (263) மாந்தர் துன்னார் (264) - அவற்றாற்கொள்ளும் பெரியபயன் கொள்ளா மற்போகிலும் முற்காலம் அடிப்பட்டுப் போந்த முறைமையைக்கடந்து தாம் நிற்கின்ற இடத்தைக்கடந்து தூரியநிலத்தே சென்றுநாறும் பூவை யும் நுகர்ந்தவர் மறந்து உயிர்வாழ்தலாற்றாத பழங்களையும் தெய்வங்க ளன்றி மானிடர் அணுகாராகையினாலே,

ஊழிறந்து துன்னாரென்க.

இரு கால் வீயும் (265) பழனும் (263) கயம் கண்டன்ன (259) பெரு மரம் குழாமும் (265) - நீளுங்காம்பையுடைய அப்பூக்களையும் பழத்தையும் குளத்தைக்கண்டாற்போலும் குளிர்ச்சியையுடைய பெரிய மரக்குழாத்தினையும்,

266 - 7. [இடனும் வலனு நினையினிர் நோக்கிக், குறியறிந் தவையவை குறுகாது கழிமின்:] நினையினிர் குறி அறிந்து இடனும் வலனும் நோக்கி அவை அவை குறுகாது கழிமின் - யான்கூறியதனை நினைத்து அவற்றின் குறிகளையறிந்து இடத்தினும் வலத்தினும் பார்த்து அவையிற்றை அவையிற்றை அணுகாமற் போவீர்;

விலங்கி நோக்கிக் குறுகாது கழிமினென்க.

இது சோலை (69) கூறிற்று.

268 - 9. கோடு பல முரஞ்சிய கோளி ஆலத்து கூடு இயத்தன்ன குரல் புணர் புள்ளின் - கொம்புகள்பலவும் முற்றிய பழத்தைத் தன் னிடத்தே கொண்டதாகிய [1] ஆலமரத்திடத்தேகூடின பல வாச்சியங் களையொத்த பல ஓசையுங்கூடின பறவைத்திரளையுடைய,

பறவைத் திரளையுடைய நாடுகாணனந்தலையென்க.

270. [2] நாடு காண் நனை தலை மென் மெல அகன்மின் - நாடு களை யெல்லாம் காணலாயிருக்கின்ற அகன்ற இடத்தையுடைய மலையை மெல்லமெல்லப் போவீர்;

---

[1] மதுரை. 543 - 4, அடிக்; ப. ௬௦௦ : 3 - ஆம் அடிக்; "இவ் வோசைகளின் வேறுபாடுகளைநோக்கிப் பல்வேறு புள்ளோசைகளை உவ மங் கூறினார்" மதுரை. 536 - 44, ந.

[2] "நாடுகாணெடுவரையென்றது தன்மேலேறி நாட்டைக்கண்டின் புறுதற்கு ஏதுவாகிய ஓக்கமுடைய மலையென்றவாறு" (பதிற். அ௫ : 7); திருக்குறுங்குடியின் பக்கத்துள்ள ஒரு மலையினுச்சி மிகவும் உயர்ந்து நாடுகாணியென இன்றும் வழங்குகின்றது.

நனந்தலை : ஆகுபெயர்.

271. மா நிழல் பட்ட மரம் பயில் இறும்பின் - பெரியநிழலுண்டான மரம் நெருங்கின குறுங்காட்டாலே,

272. [ஞாயிறு தெறூஅ மாக நனந்தலை :] மாகம் ஞாயிறு தெறூஅ நன தலை - ஆகாயத்தில் திரியும் ஞாயிற்றாற் சுடப்படாத அகன்ற இடத்தையுடைய குன்றம் (275),

273 - 5. தேஎம் மருளும் அமையம் ஆயினும் 1 இரு வன் சிலையர் மா தேர்பு கொட்கும் குறவரும் மருளும் குன்றத்து படினே - திசை தெரியாமல் மயங்கும் இராக்காலமாகினும் முறியாத வலியவில்லையுடையராய் விலங்குதேர்ந்துநின்று சுழன்றுதிரியும் குறவருமுட்பட மயங்குங் குன்றத்தே நீங்கள் செல்லின்,

276 - 7. [அகன்கட் பாறைத் துவன்றிக் கல்லென, வியங்க லோம்பிநும் மியங்க டொடுமின் :] இயங்கல் ஓம்பி அகல் கண் பாறை துவன்றி கல்லென நும் இயங்கள் தொடுமின் - அவ்வழியைப் போதலைப் பரிகரித்து அகன்ற இடத்தையுடைய பாறையிலே குவிந்து கல்லென்னும் ஓசைபட நும்முடைய வாச்சியங்களை வாசிப்பீராக ;

278 - 9. பாடு இன் அருவி பயம் கெழு மீமிசை காடு காத்து உறையும் கானவர் உளரே - ஓசையினிதாகிய அருவியின்பயன் பொருந்திய உச்சிமலையிலே காட்டைக் காத்திருக்குங் கானவர் பலருமுளர் ;

ஏகாரம் : ஈற்றசை.

280 - 81. நிலை துறை வழீஇய மதன் அழி மாக்கள் புனல் படு பூசலின் - நிலையாய்ப்போம் துறையைத்தப்பி ஆழத்திலேபுக்க வலியழிந்த மாக்கள் புனலிலே அழுந்துகின்ற வருத்தங்கண்டு விரைந்தெடுப்பாரைப்போல,

281 - 6. [விரைந்துவல் லெய்தி, யுண்டற் கினிய பழனுங் கண்டோர், மலைதற் கினிய பூவுங் காட்டி, யூறு நிரம்பிய வாறவர் முந்துற, நும்மி னெஞ்சத் தவலம் வீட, விம்மென் கடும்போ டினியி ராகுவிர் :]

நெஞ்சத்து அவலம் வீட விரைந்து வல் எய்தி - திசைமயக்கத்தாற் கலங்கி அறிவழிந்த நெஞ்சிற் கேடு போம்படி ஓடிக் கடுகவந்து சேர்ந்து,

உண்டற்கு இனிய பழனும் கண்டோர் மலைதற்கு இனிய பூவும் காட்டி - எல்லாரும் உண்டற்கு இனியவாகிய பழங்களையும் கண்டவர்கள் சூடுதற்கு இனியவாகிய பூக்களையும் நுமக்குக்காட்டி,

நீர் அவற்றை நுகர்ந்த பின்பு.

---

1 இருவன் சிலையரென்பதற்கு இருமையைப்போன்று வளைந்த வலிய வில்லையுடையவரெனப் பொருள்கோடலுமாம் ; "சிலையு மான......... பச்சிறுப் பிறழும்" (பெரும்பாண். 269 - 70) என்னும் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.

அவர் ஊறு நிரம்பிய ஆறு முந்துற - அக்கானவர் இடையூறு மிக்க வழியை நுமக்கு முற்படப் போகையினாலே,

நும்மின் 1 இம்மென் கடும்பொடு இனியிராகுவிர் - நும்முடைய இம்மென்னும் ஓசையையுடைய சுற்றத்தோடே மனமகிழ்வீர்;

287. அறிஞர் கூறிய மாதிரம் கைக்கொள்பு - திசைமயக்கம் நாடியறிவார் கூறிய திசையையுட் கொண்டு,

288 - 9. [குறியவு நெடியவு மூழிழிபு புதுவோர், நோக்கினும் பனிக்கு நோய்கூ ரடுக்கத்து :]

புதுவோர் நோக்கினும் பனிக்கும் நோய் கூர் அடுக்கத்து - புதிய மாந்தர் கண்ணால் நோக்கினும் தலைநடுக்கும் நோய்மிக்க பக்கமலையிடத்து,

குறியவும் நெடியவும் ஊழ் இழிபு - குறியனவும் நெடியனவுமாகிய குவடுகளை முறைமைப்பட இழிந்து,

290. அலர் தாய 2 வரி நிழல் அசையினிர் இருப்பின் - பூப்பரந்த பல வரிகளையுடையவாகிய நிழலிலே இளைத்திருப்பின்,

291. பல திறம் பெயர்பவை கேட்குவிர் - பலகூறுபாடுகளையுடையவாய் எழுகின்ற ஓசைகளைக் கேட்பீர்;

மாதோ : அசை.

292. கலை தொடு பெரு பழம் புண் கூர்ந்து ஊறலின் - 3 முசுக்கலை தோண்டின பெரிய பலாப்பழம் புண்மிக்குத் தேனூறுகையினாலே,

293. மலைமுழுதும் கமழும் மாதிரந்தோறும் - மலைமுழுதும் அத்தேன் நாறுந் திசைகடோறும்,

294 - 6. [அருவி நுகரும் வானர மகளிர், வருவிசை தவிராது வாங்குபு குடைதொறுந், தெரியிமிழ் கொண்டநும் மியம்போ லின்னிசை :] வாங்குபு வருவிசை தவிராது இமிழ்கொண்ட அருவி நுகரும் வான்அரமகளிர் குடைதொறும் நும் இயம் போல் தெரி இன் இசை - உள்ளபண்டங்களை வாங்கிக்கொண்டு வருகின்ற விசைதவிராது ஒலித்தலைக்கொண்ட அருவியை ஆடும் தெய்வமகளிர் அதனைக் கையாற்குடையுந் தோறும் நும்முடைய வாச்சியங்களைப்போல் தாளந்தெரிகின்ற இனியவோசையும்,

297 - 9. [இலங்கேந்து மருப்பி னினம்பிரி யொருத்தல், விலங்கன் மீமிசைப் பணவைக் கானவர், புலம்புக் குண்ணும் புரிவளைப் பூசல்:]

---

1 சுற்றத்தார் இசைப்புலவராதலால், இம்மென் கடும்பென்றார்.

2 இடையிடையே வெயிலும் கலந்திருத்தலின் தாயவரி நிழலென்றார்; வரிநிழலென்பதற்கு, செறியாத நிழலெனப் பொருள்கூறினர் முன்; சிறுபாண். 12, ந.

3 முசு - குரங்கின் சாதியிலொன்று; கலை - அதன் ஆண்.

விலங்கல் மீமிசை பணவை கானவர் புலம் புக்கு உண்ணும் - மலையின்மேலிட்டபரணிற் கானவர் தினைப்புனத்தைப் புகுந்துதின்னும்,

இலங்கு ஏந்து மருப்பின் இனம் பிரி [1] ஒருத்தல் புரி வளை பூசல் - விளங்குகின்ற ஏந்தின கொம்பையுடைய தன்னினத்தைப் பிரிந்த [2] யானைத்தலைவனைப் பிடித்தற்கு விரும்பின வளைத்தலையுடைய ஆரவாரமும்,

300 - 301. [சேயளைப் பள்ளி யெஃகுறு முள்ளி, னெய்தெற விழுக்கிய கானவ ரழுகை:] சேய் அளை பள்ளி எய் எஃகு உறு முள்ளின் தெற இழுக்கிய கானவர் அழுகை - நெடிய முழையாகிய இருப்பிடத்தில் தங்கும் எய்ப்பன்றி தனது கூர்மையுறுகின்ற முள்ளால் எய்துகொல்லுகையினாலே பட்ட கானவர் அழுகின்ற அழுகையும்,

302 - 4. [கொடுவரி பாய்ந்தெனக் கொழுநர் மார்பி, னெடுவசி விழுப்புண் டணிமார் காப்பென, வறல்வாழ் கூந்தற் கொடிச்சியர் பாடல் :] கொழுநர் மார்பில் கொடுவரி பாய்ந்தென நெடு வசி [3] விழுப்புண் தணிமார் காப்பென அறல் வாழ் கூந்தல் கொடிச்சியர் பாடல் - தம் கணவர் மார்பிலே புலி பாய்ந்ததாகப் பட்ட நெடிய பிளத்தலையுடைய சீரிய புண்ணை ஆற்றுதற்குக் காவலென்று கருதி அறல் வீற்றிருந்த மயிரினையுடைய கொடிச்சியர் பாடும் பாட்டாலெழுந்த ஓசையும்,

305 - 6. தலைநாள் பூத்த பொன் இணர் வேங்கை மலைமார் இடூஉம் ஏமம் பூசல் - முதல்நாளிலே பூத்த பொன்போலுங் கொத்தினையுடைய வேங்கைப்பூவைச் சூடுதற்கு மகளிர் புலிபுலியென்று கூப்பிடும் ஏமத்தையுடைய ஆரவாரமும்,

வேங்கைவளைந்து பூவைக் கொடுத்தலின், அச்சந்தீர்த்த பூசலென்றார்.

307. கன்று அரைபட்ட [4] கய தலை மட பிடி - கன்று வயிற்றிலேயுண்டான மெல்லிய தலையினையுடைய மடப்பத்தையுடைய பிடியை,

308. வலிக்கு வரம்பாகிய [5] கணவன் ஓம்பலின் - வலிக்கு

---

1 ஒருத்தல் - யானைத்தலைவன் ; கலி. சுசு : 3, ந ; அகநா. எஅ : 4, உரை.

2 தலைமைவாய்ந்த ஆண் யானையை யானைத்தலைவனெனக் கூறுதல் மரபு ; "ஊதத், தலைவனே யொத்துப் பொலிந்தது சந்திர சைலம்" (கம்ப. வரைக்காட்சி. 7) ; ஏந்தலெனவும் கூறப்படும் ; "இருங்களிற் றினநிரை யேந்தல்" நற்றி. கஅ0 : 2. [3] ப. சுகூ : 1 - ஆம் அடிக்.

4 கய : மென்மையை யுணர்த்துமுரிச்சொல் ; தொல். உரி. சூ. 24.

5 கணவனென்பது அஃறிணையாண்பாற்பொருளிலும் வழங்கும் ; "மாயா வேட்டம் போகிய கணவன், பொய்யா மரபிற் பிணவுநினைந் திரங்கும்" (நற். க0௲ : 7 - 8) ; "வங்காக் கடந்த செங்காற் பேடை, யெழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது" நற்றி. கடுக : 1 - 2.

ஓரெல்லையாகிய 1 களிறு 2 கவழந்தேடிக்கொடுத்துப் பாதுகாத்துப் போகையினாலே,

309. ஒள் கேழ் வய புலி பாய்ந்தென - அப்போக்கினைக்குறித்து ஒளித்திருந்து ஒள்ளிய நிறத்தையுடைய வலியபுலி பாய்ந்ததாக,

309 - 10. கிளையொடு நெடு வரை இயம்பும் இடி உமிழ் தழங்கு குரல் - அப்பிடி தன்சுற்றத்தோடே நெடியமலையிடத்தே கூப்பிடும் இடியோசைபோலும் முழங்குங்குரலும்,

இடியுமிழ்ந்த ஓசையை ஆகுபெயரான் உமிழ் என்றார்.

311. கை கோள் மறந்த கரு விரல் மந்தி - பார்ப்பைத் தன் கையால் தழுவிக்கோடலை மறந்த கரிய விரலையுடைய மந்தி,

312. அரு விடர் வீழ்ந்த தன் கல்லா பார்ப்பிற்கு - எடுத்தற்கு அரிய ஆழ்ந்த முழையிலே வீழ்ந்திறந்த தன்குட்டிக்கு,

கல்லாமை - 3 தனக்குரியதொழிலைக் கல்லாமை.

313 - 4. முறி மேய் யாக்கை கிளையொடு துவன்றி சிறுமை உற்ற களையா பூசல் - தளிரைமேய்ந்துவளர்ந்த வடிவினையுடைய சுற்றத்தோடே நெருங்கி நோய்மிக்க விலக்கப்படாத ஆரவாரமும்,

மந்தி பார்ப்பிற்குத் துவன்றிச் சிறுமையுற்ற பூசலென்க.

315 - 6. கலை கை அற்ற காண்பு இன் நெடு வரை நிலைபெய்து இட்ட மால்பு நெறியாக - முசுக்கலை ஏறமுடியாதென்று செயலற்ற காட்சியினிய உயர்ந்தவரையிலே நிலைபெறுண்டாகக் கூட்டி நட்ட 4 கண்ணேணியே வழியாகச்சென்று,

---

1 களிறு பிடிக்குக் கவளந்தேடிக்கொடுத்தல்; "கயந்தலை மடப்பிடி யுயங்குபசி களைஇயர், பெருங்களிறு தொலைத்த முடத்தாளோமை" (நற். ௧௩௭ : 6 - 7); "பிடிபசி களைஇய பெருங்கை வேழ, மென்சினை யாஅம் பிளக்கும்" (குறுந். ௩௭ : 2 - 3); "யானைதன், கொன்மருப் பொடியக் குத்திச் சினஞ்சிறந், தின்னு வேனி லின்றுணை யார, முளிசினை யாஅத்துப் பொளிபிளந் தூட்ட" (அகநா. ௩௩௫ : 4 - 7); "கறுத்தமுலைச் சுற்பிடிக்குக் கார்யானை சந்தம், இறுத்துக்கை நீட்டுமீங் கோயே", "சந்தனப்பூம் பைந்தழையைச் செந்தேனிற் றோய்த்தி யானை, மந்த மடப்பிடியின் வாய்க்கொடுப்ப" (ஈங்கோய். 23, 38); "வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளை யளைமிகு தேன்றோய்த் துப், பிரச வாரிதன் னிளம்பிடிக் கருள்செயும் பிருதி" பெரியதிருமொழி, ௧. 2 : 5.

2 கவழம் : "கவழக் களிப்பியன்மால் யானை" திணைமாலை. 42.

3 தனக்குரிய தொழிலாவது தாயின்மார்பை இறுகப் பற்றுதல்.

4 கண்ணேணியாவது கணுக்களிலேயே அடிவைத்து ஏறிச்செல்லும்படி அமைத்துள்ள மூங்கில்; உச்சியிலுள்ள தேனிறாலை அழிக்கும்

317. பெரு பயன் தொகுத்த தேம் கொள் கொள்ளை - பெரியபய னுண்டாகத் [1]தேனீத் திரட்டிவைத்த தேனையழித்துக்கொண்ட கொள்ளையாலுண்டான ஆரவாரமும்,

318 - 9. [அருங்குறும் பெறிந்த கானவ ருவகை, திருந்துவே லண்ணற்கு விருந்திறை சான்மென :]

திருந்து வேல் அண்ணற்கு விருந்து இறை சான்மென - திருந்தும் வேலினையுடைய நன்னனுக்குப் புதிதாகக்கொடுத்தற்கு [2]இவற்றிற் கைக்கொண்டபொருள்கள் அமையுமெனக் கருதிச்சென்று,

அரு குறும்பு எறிந்த கானவர் உவகை - அழித்தற்கு அரிய [3]குறும்புகளை யழித்த கானவர் மகிழ்ச்சியிலுண்டான ஆரவாரமும்,

320 - 22. நறவு நாட்செய்த குறவர் தம் பெண்டிரொடு மான் தோல் சிறுபறை கல்லென கறங்க வான் தோய் மீமிசை அயரும் [4]குரவை - [5]நறவை நாட்காலத்தேகுடித்த குறவர் தம்பெண்டிரோடே கூடி மான்றோல் போர்த்த சிறுபறை கல்லென்னும் ஓசைபடவொலிப்ப வானைத்தீண்டும் உச்சி மலையிலே ஆடுங் குரவைக்கூத்தின் ஆரவாரமும்,

323 - 4. [நல்லெழி னெடுந்தே ரியவுவந் தன்ன, கல்யா றொலிக்கும் விடர்முழுங் கிரங்கிசை :] நல் எழில் நெடு தேர் இயவு வந்தன்ன ஒலிக்கும் கல் யாறு விடர் முழங்கு இரங்கு இசை - நல்ல அழகினையுடைய நெடிய தேர்கள் வழியிலே ஓடிவந்த தன்மையவாக ஒலிக்கும் கல்லின்மேல்வரும் யாறுகள் முழைஞ்சுகளிலேவீழ்ந்து மாறுதொலிக்கும் ஓசையும்,

325 - 7. நெடு சுழி பட்ட கடுங்கண் வேழத்து உரவு சினம் தணித்து பெரு வெளில் பிணிமார் விரவு மொழி பயிற்றும் பாகர்

---

பொருட்டுச் செங்குத்தான மலையிலேறிச்செல்வதற்கு அதன் அயலில் இவ்விரண்டு மூங்கில்களைக்கூட்டி நிறுத்தி யமைப்பது வழக்கம்

[1] "உய்த்திட்டுந் தேனீ" நாலடி. 10.

[2] இவற்றில் - இச்சிற்றரண்களில்.

[3] குறும்பு - பகைவர்தங்கும் சிற்றரண்.

[4] குரவை இருபாலாரும் விரவி ஆடுவதாதலின், குறவர் தம் பெண்டிரொடு அயருங் குரவை யென்றார்; "பெண்டிரொடு விரைஇ, மறுகிற் றூங்குஞ் சிறுகுடிப் பாக்கத்து", "வியலறை வரிக்கு முன்றிற் குறவர், மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்" (அகநா. ௧௧௮ : 3 - 4, ௨௩௨ : 9 - 10); "மாயவன்றன் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னையொடும்;.........தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" (சிலப். ௧௭); "மாமணி வண்ணனுந் தம்முனும் பின்ஞையு, மாடிய குரவை யிஃது" மணி. ௧௧ : 65 - 6.

[5] "நாட்கள்ளுண்டு" புறநா. ௧௨௩ : 1.

ஓதை - காட்டாற்றின் நெடியகழியிலே வீழ்ந்து அகப்பட்ட தறுகண்மையையுடைய யானையினது வலிய சினத்தைத் தணியப்பண்ணிப் பெரியகம்பத்திலே சேர்த்தற்குத் தமதேவற்றொழிலைச் செய்தற்குக் காரணமான 1 பேச்சுக்களைப்பேசி அவற்றிலே பயிலப்பண்ணும் பாகருடைய ஆரவாரமும்,

328 - 9. ஒலி கழை தட்டை புடையுநர் புனந்தொறும் கிளி கடி மகளிர் விளி படு பூசல் - ஒலிக்கும் மூங்கிலாற்செய்த 2 தட்டையைப் புடைத்துப் புனங்கடோறும் கிளியையோட்டுகின்ற மகளிர்கூப்பிடுதலாற் பிறந்த ஆரவாரமும்,

330. இனத்தின் தீர்ந்த துளங்கு 3 இமில் நல் ஏறு - நிரையினின்றும் பெயர்ந்த அசையும் 3 குட்டேற்றினையுடைய இடபமும்,

331. மலை தலைவந்த மரையான் கதழ் விடை - எக்காலமும் போர் செய்து போர்த்தொழில் தன்னிடத்திலே கைவந்த மரையானினது விரைந்த ஏறும்,

332 - 5. [மாறு மைந்தி னூறுபடத் தாக்கிக், கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப, வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய, நல்லேறு பொரூஉங் கல்லென் கம்பலை :]

கோவலர் குறவரோடு ஒருங்கு இயைந்து ஆர்ப்ப - முல்லைநிலத்திற் கோவலரும் குறிஞ்சிநிலத்திற்குறவரும் சேரக்கூடி வென்றதன் வெற்றி தோன்ற ஆரவாரிக்கும்படி,

மாறு மைந்தின் ஊறு பட தாக்கி பொரூஉம் கல்லென் கம்பலை - முதுகிடாத வலியுடனே புண்ணுண்டாம்படி முட்டிப்பொரும் கல்லென்கின்ற ஓசையையுடைய ஆரவாரமும்,

ஏறும் விடையும் ஆர்ப்பப் பொரூஉம் கம்பலையென்க.

நல் ஏறு வள் இதழ் குளவியும் குறிஞ்சியும் குழைய பொரூஉம் கம்பலை - எருமையேறுகள் வளவிய இதழையுடைய குளவியும் குறிஞ்சியும் வாடும்படி தம்மிற் பொருகின்ற ஆரவாரமும்,

336 - 9. [காந்தட் டுடுப்பிற் கமழ்மட லோச்சி, வண்கோட் பலவின் சுளைவிளை தீம்பழ, மூண்டுபடு மிச்சிற் காழ்பயன் கொண்மார், கன்றுகடா அ வுறுக்கு மகாஅ ரோதை :]

வள் கோள் பலவின் விளை தீ பழம் சுளை உண்டு படு மிச்சில் காழ் பயன் கொண்மார் - வளவிய குலைகளையுடைய பலாவினது முற்றின

1 இப்பேச்சுக்களை, ப. ௨௭அ : 3-ஆம் அடிக்குறிப்பால் அறியலாம்.

2 தட்டையாவது மூங்கிலைக் குறுக்கே நறுக்கிப் பலவாகப்பிளந்து ஓசையுண்டாகும்படி ஒன்றிலே தட்டுங்கருவி ; குறிஞ்சி. 43 - 4, ந.

3 இமில், குட்டேறு - இடபத்தினுடைய முன்முதுகின்மேல் உருண்டு பருத்துத் தோன்றும் ஒருறுப்பு.

இனிய பழத்திற்சுளையை விரும்பினோரெல்லாரும் தின்று கீழ்வீழ்ந்து கிடக்கும் மிகையான பழத்தின் விதையைப் பயன்கோடற்கு,

கன்று காந்தள் துடுப்பின் கமழ் மடல் ஓச்சி கடாவுறுக்கும் மகார் ஓதை - கன்றுகளைப்பிணைத்துக் காந்தளினது துடுப்புப்போலும் கமழுகின்ற மடலாலேயடித்துக் கடாவிடும் பிள்ளைகளுடைய ஆரவாரமும்,

340. [1] [மழைகண் டன்ன வாலைதொறு ஞெரேரென :]

341. [கழைகண் ணுடைக்குங் கரும்பி னேத்தமும் :] கரும்பின் கழை கண் உடைக்கும் எத்தமும் - கரும்பின்கோலைச் சாறுகொள்ளும் ஆலையின் ஓசையும்,

342. தினை குறு மகளிர் இசை படு வள்ளையும் - தினையைக் [2] குறுகின்ற மகளிருடைய இசைமிகுகின்ற [3] வள்ளைப்பாட்டும்,

343 - 4. சேம்பும் மஞ்சளும் ஓம்பினர் காப்போர் [4] பன்றி பறையும் - சேம்பையும் மஞ்சளையும் விதைத்து வளர்ந்தபின்பு பன்றி கிழங்கு அகழாமற் காப்போருடைய பன்றிக்குக் கொட்டும் பறையோசையும்,

குன்று அகம் சிலம்பும் - இவ்வோசைகளால் மலையிடத்தெழும் எதிரொலியும்,

345. என்ற இவ்வனைத்தும் - என்று யான்கூறிய இவ்வெல்லா ஓசைகளும்,

345. [இயைந்தொருங் கீண்டி :] ஒருங்கு இயைந்து ஈண்டி - சேரப்பொருந்தித் திரளப்பட்டு,

346. [அவலவு மிசையவுந் துவன்றிப் பலவுடன் :] அவலவும் மிசையவும் பல உடன் துவன்றி - தாழ்வரையிலுள்ளனவும் உச்சிமலையிலுள்ளனவுமாகிய ஒழிந்த பல ஓசைகளும் சேர நெருங்குகையினாலே,

247 - 8. [அலகைத் தவிர்த்த வெண்ணருந் திறத்த, மலைபடு கடாஅ மாதிரத் தியம்ப :] எண் அரு திறத்த அலகை தவிர்த்த மலை படு கடாம் மாதிரத்து இயம்ப - எண்ணுதற்கு அரிதாகிய கூறுபாட்டையுடையவாகையினாலே எண்ணையொழிந்த [5] மலைகளாகிய யானைக்கு உண்டாகின்றவொலி திசைகளெல்லாமொலிப்ப,

கடாம், ஆகுபெயராய் அதனாற்பிறந்த ஓசையையுணர்த்திற்று.

வரிநிழலிருப்பின் (290) இன்னிசையும் (296) பூசலும் (299) அழுகையும் (301) பாடலும் (304) பூசலும் (306) குரலும் (310) பூச

---

1 இதற்கு உரை கிடைத்திலது; மேகத்தைக்கண்டாலொத்த கொட்டில்கள்தோறும் விரைவாக வென்க; ஆலை: ஆகுபெயர்; பெரும்பாண். 260 - 61, ந.    2 குறுகின்ற - குத்துகின்ற.

3 வள்ளைப்பாட்டு - உலக்கைப்பாட்டு.

4 இது குடப்பறையென்வும் வழங்கும்; "பன்றிப் பறையே குடப் பறை யாகும்" பிங்கல. 1518.    5 மலைபடு. 572, அடிக்.

லும் (314) கொள்ளையும் (317) உவகையும் (318) குரவையும் (322) இசையும் (324) ஓதையும் (327) பூசலும் (329) கம்பலையும் (335) ஓதையும் (339) எத்தமும் (341) வள்ளையும் (342) பறையும் (344) என்றிவ் வனைத்தும் (345) குன்றகச்சிலம்பும் (344) ஒருங்கியைந் தீண்டப்பட்டு (345) ஒழிந்த ஓசைகளும் துவன்றுகையினாலே (346) மலைகளாகிய யானைக்குண்டாகின்ற வொலி (348) பலதிறம்பெயர்பவை (291) மாதிரத்தியம்ப (348) அவற்றைக் கேட்குவிர் (291) என முடிக்க.

இருப்பிற் (290) கேட்குவிர் (291) என்க.

மலைக்கு யானையை உவமித்து அதன்கட்பிறந்த ஓசையைக் கடாமெனச்சிறப்பித்தவதனால், இப்பாட்டிற்கு மலைபடுகடாமென்று பெயர் கூறினார்.

349 - 51. [குரூஉக்கட் பிணையற் கோதை மகளிர், முழவுத்துயி லறியா வியலு ளாங்கண், விழவி னற்றவன் வியன்கண் வெற்பே :]

அவன் வியன் கண் வெற்பு - அந்நன்னனுடைய அகன்ற இடத்தை யுடையமலை,

குரூஉ கண் பிணையல் கோதை மகளிர் - பலநிறம் பொருந்தின இடத்தையுடையதாகிய பிணைத்தலையுடைய மாலையினையுடையமகளிர் ஆடற்கு எற்ற,

முழவு துயில் அறியா வியலுள் ஆங்கண் விழவின் அற்று - முழவு கண்ணுறக்கமறியாத அகன்ற ஊரிடத்துக்கொண்ட திருநாளையொத்துச் சிறந்திருக்கும் ;

352 - 3. கண் தண்ணென கண்டும் கேட்டும் உண்டற்கு இனிய பல பாராட்டியும் - காண்டற்கு இனியவற்றைக் [1] கண்குளிரக்கண்டும் கேட்கப்படுவனவற்றைச் செவிகுளிரக்கேட்டும் உண்டற்கு இனிய பல உணவுகளைக் கொண்டாடியுண்டும்,

354 - 5. [இன்னும் வருவ தாக நமக்கெனத், தொன்முறை மரபினி ராகி :] நமக்கு இன்னும் வருவதாக என தொல் முறை மரபினிர் ஆகி - நமக்கு மேலும் இந்நுகர்ச்சி உண்டாவதாகவென்று விரும்பிப் பழைய உறவான மக்களைப்போலும் முறைமையினையுடையிராய்ச் சில நாள் தங்கி,

355 - 6. பல் மாண் செரு மிக்கு புகலும் திரு ஆர் மார்பின் - பலவாய் மாட்சிமைப்பட்ட [2] வஞ்சிமுதலியபோர்த்தொழில் மிக்குநடத்தலாலே உலகம்புகழுந் திருமகள் நிறைந்திருந்த மார்பினையுடைய நன்னனுடைய,

1 "காங்கூப்பிக் கண்குளிரக் கண்டு" முநது. இறுதிவெண்பா, 9.

2 வஞ்சி - போர்செய்தற்குப் பகைவர்மேற்செல்லுதல்.

357. உரும் உரறு கருவிய பெரு மலை பிற்பட - உருமேறுமுழங்குந் தொகுதியையுடைய பெரியமலை நுமக்குப் பின்னும்படி,

358-9. இறும்பூது கஞலிய இன் குரல் விறலியர் நறு கார் அடுக்கத்து குறிஞ்சி பாடி - அதிசயம்நெருங்கின இனிய யாழையுடைய விறல்பட ஆடுமகளிர் நறிய கரிய பக்கமலையிலே குறிஞ்சியென்னும் பண்ணைப்பாட,

குரல் : ஆகுபெயர். பாடி, பாடவென்க.

360. கை தொழூஉ பரவி பழிச்சினிர் கழிமின் - நீரும் ஆண்டுறையும் தெய்வங்களைக் கையாலேதொழுது எம் குறை முடித்தால் நுமக்கு இவை தருதுமென்று பரவுக்கடன் பூண்டு வாழ்த்திப் போவீர் ;

மரபினிராகிப் (355) பாடிப் (359) பழிச்சி (360) மலை பிற்படக் (357) கழிமின் (360) என்க.

361. [மைபடு மாமலைப் பனுவலிற் பொங்கி :] பனுவலின் பொங்கி மை படு மா மலை - சூல் முதிர்வதற்கு முன்பு 1 எஃகுறு பஞ்சிபோலப் பொங்கிச் சென்று கார்காலம்வருமளவும் மேகம் கிடக்கும் பெரிய மலையிடத்தில்,

362. கை தோய்வு அன்ன கார் மழை தொழுதி - கை சென்று பிடிக்குந் தன்மையையொத்த அணுகுதலையுடைய கரிய மேகத்திரள்,

363. தூஉய் அன்ன துவலை துவற்றலின் - வலியத் தூவினாலொத்த துவலைகளைத் தூவுகையினாலே,

364. தேஎம் தேறு கடு பரி கடும்பொடு - திசைகளைத் துணிந்து கொள்ளமாட்டாத கடிய செலவினையுடைய சுற்றத்தோடே,

365. காஅய் கொண்ட நும் இயம் தொய்படாமல் - காவிக்கொண்ட நும்முடைய வாச்சியங்கள் நனையாதபடி,

366. கூவல் அன்ன விடரகம் புகுமின் - கிணறுகள்போன்ற 2 முழைஞ்சுகளிடத்தே புகுவீர்,

367. இரு கல் இகுப்பத்து இறு வரை சேராது - பெரிய கல்லினது திரட்சியினிடத்து முறிந்துநின்ற மலைகளைச்சேராதே,

368-72. [குன்றிடம் பட்ட வாரிட ரழுவத்து, நின்று நோக்கினுங் கண்வாள் வௌவு, மண்கனை முழவின் றலைக்கோல் கொண்டு, தண்டுகா லாகத் தளர்த லோம்பி, யூன்றினிர் கழிமி னூறுதவப் பலவே:]

நின்று கண் நோக்கினும் வாள் வௌவும் (369) இடம் பட்ட குன்று (368) - நின்று கண்ணாற்பார்க்கினும் 3 கண்ணினொளியைத் தன் அழகாலே வாங்கிக்கொள்ளும் இடமுண்டாகிய மலையில்,

1 எஃகுறுபஞ்சி - பன்னியபஞ்சு.

2 முழைஞ்சு - குகை.

3 ப. ௩௭௪ : 4 - ஆம் அடிக்கீ.

உம்மை : அவற்றைநுகர மனத்தாற்கருதின் அம்மனத்தையும் வாங்கிக் கொள்ளுமென எச்சவும்மை.

அரு இடர் அழுவத்து (368) ஊறு தவ பல (372) - பொறுத்தற்கு அரிய வருத்தத்தைச் செய்யும் குழிகளிடத்துப் பிறக்கும் இடையூறுகள் மிகப்பல ; அவற்றை,

மண் கனை முழவின் தலை (370) தண்டு காலாக (371) கொண்டு (370) - மார்ச்சனைசெறிந்த முழவிடத்திற் காமரத்தை நுமக்குக் காலாக வாங்கிக்கொண்டு,

தளர்தல் ஓம்பி (371) கோல் (370) ஊன்றினிர் கழிமின் (372) - அடி உள்ளேவிழுதலைப் பரிகரித்து அத்தண்டாகிய கோலை ஊன்றிப் போவீர் ;

373. அயில் காய்ந்தன்ன கூர் கல் பாறை - வேல்காய்ந்தாற் போலும் 1 குடுமிக்கூர்ங் கற்களையுடைய பாறையில்,

374. வெயில் புறந்தரூஉம் இன்னல் இயக்கத்து - குளிர்ச்சி வாராமல் வெயில் பாதுகாக்கும் இன்னாமைசெய்யும் வழியிடத்திற் போம் பொழுது,

375. கதிர் சினம் தணிந்த அமயத்து கழிமின் - ஞாயிறு 2 சினம் மாறின அந்திப்பொழுதிலே போவீர் ;

376 - 8. [உரைசெல வெறுத்தவவ னீங்காச் சுற்றமொடு, புரைதவ வுயரிய மழைமருள் பஃறோ, லரசுநிலை தளர்க்கு மருப்பமு முடைய:]

உரை செல வெறுத்த அவன் நீங்கா சுற்றமொடு புரை தவ உயரிய மழை மருள் பல் 3 தோல் அருப்பமும் உடைய - புகழ் பரக்கும்படி செறிந்த நன்னனுடைய நீங்காத படைத்தலைவரோடே உயர்ச்சி மிக வுயர்ந்த 4 மேகமென்று மருளும் பல யானைத்திரளையுடைய அரண்களையும் அவ்வழியுடைய ;

அரசு நிலை தளர்க்கும் அருப்பம் - பொரவந்த அரசர் நிலையுடைமையைக் கெடுக்கும் அரண்,

379. பின்னி அன்ன பிணங்கு அரில் நுழை தொறும் - அவ்வரண்களிற் பின்னிவைத்தாலொத்த கொடிபிணங்கின சிறுகாட்டையுடைய சிறிய வழிகடோறும்,

1 "பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்" அகநா. ௫ : 13.

2 சினம் : "காய்சினந் தவிராது கடூஉர் பெழுதரு, ஞாயிறு" (புறநா. ௫௧ : 5 - 6) என்றவிடத்துச் சினமென்பதற்கு வெம்மையெனப் பொருள் கூறுவர் அதனுரையாசிரியர்.

3 "மழையென மருளும்பஃறோல்" (புறநா. ௧௭ : 34) என்னுமிடத்துத் தோலென்பதற்குப் பரிசையெனப் பொருள்கூறுவர் அதனுரையாசிரியர். 4 மலைபடு. 530, அடிக்.

380-83. முன்னோன் வாங்கிய கடு விசை கணை கோல் இன் இசை நல் யாழ் பத்தரும் விசி பிணி மண் ஆர் முழவின் கண்ணும் ஓம்பி கை பிணி விடாது பைபய கழிமின் - முன்போகின்றவன் முகத்திலடியாமல் வாங்கிவிட்ட கடியவிசையையுடைய திரண்டகோல் இனிய இசையைத் தன்னிடத்தே கொண்ட நல்ல யாழின் பத்தரையும் வலித்துக் கட்டின மார்ச்சனை செறிந்த முழவின்கண்ணையும் கெடாதபடி காத்து அவனைக் கரம்பிடித்துக் கோடலை விடாதே மெல்லமெல்லப் போவீர்;

நாடுகாணனந்தலை (270) முதல் இத்துணையும் மலை (69) கூறிற்று. இவ்விடத்து யாற்றின்றன்மையும் (67) சேரக்கூறினார்.

384. களிறு மலைந்தன்ன கண் கூடு துறுகல் - யானைகள் தம்மிற் சேர்ந்து பொருதாலொத்த ஒன்றினிடத்தே ஒன்று கூடிநெருங்கின கல்லிடத்தே,

385. தனி பொழி கானம் தலை தவ பலவே - மழைபெய்கின்ற காடுகள் அவ்விடத்து மிகப்பல;

386-7. ஒன்னா தெவ்வர் உலைவு இடத்து ஆர்த்தென நல் வழி கொடுத்த நாண் உடை மறவர் - ஏவல்பொருந்தாத பகைவர் முதுகிட்ட அளவிலே தமது வெற்றிதோன்ற ஆரவாரித்தாராக, அதுபொறாமல் இவ்விடம் உயிர்கொடுத்தற்கு நல்லகாலமென்று மீண்டு உயிரைக்கொடுத்த நாணத்தையுடைய மறவருடைய,

388-9. செல்லா நல் இசை பெயரொடு நட்ட கல் ஏசு கவலை எண்ணு மிக பலவே - கெடாத நல்ல புகழினையுடைய பெயர்களை எழுதி நட்டகற்கள் முதுகிட்டுப்போனவரை இகழும் பலவழிகள் எண்ணுதல் மிகும்படி பலவாயிருக்கும்;

390-91. இன்பு உறு முரற்கை நும் பாட்டு விருப்பாக தொன்று ஒழுகும் மரபின் நும் மருப்பு [1] இகுத்து துனைமின் - இன்பமிகுகின்ற தாளத்தினையுடைய நும்முடைய பாட்டு அந்நடுகல்லில் தெய்வத்திற்கு விருப்பமாகப் பழமைநடக்கின்ற முறைமையினையுடைய நும்முடைய யாழைவாசித்து விரையப் போவிர்;

மருப்பு: ஆகுபெயர்.

392-3. பண்டு நற்கு அறியா புலம் பெயர் புதுவிர் சந்து நீவி புல் முடிந்து இடுமின் - முற்காலம் நன்மையறியாத தீயநிலத்தை வழியறியாமற்போய் மீண்டுவந்த புதியவர்கள் பின்வருகின்றவர்களும் அவ்வாறு போய் மீளாதபடி பலவழிகளுங்கூடின சந்தியைக் கையாலே துடைத்து அடையாளமாக ஊகம்புல்லை முடிந்திட்டு வைப்பீர்;

நற்கு; நன்கின்விகாரம்.

---

1 இகுத்தல் - ஒலித்தல்; மலைபடு. 532, ந.

கானம் பல (385); ஆண்டுக் கல் (389) நட்ட (388) கவலை பல (389) ; அக்கல்லிற்கு மருப்பிகுத்துத் துனைமின் (391); அப்பொழுது புதுவிர் (392) புல்முடிந்திடுமின் (393) எனக்கூட்டுக.

394. செல்லும் தேஎத்து - நீங்கள் போம் தேசத்திலே,

394 - 6. [பெயர்மருங் கறிமார், கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த, கடவு ளோங்கிய காடேசு கவலை :]

கல் எறிந்து மருங்கு பெயர் அறிமார் எழுதிய கடவுள் - கல்லை [1] இடந்துகொண்டு அதனிடத்தே இவ்வாறே பொருதுபட்ட இன்னு னென்று அவன் பெயரை உலகமறிவதற்கு எழுதிய கடவுள்,

நல் அரை மராத்த கடவுள் - நல்ல அரையினையுடைய மராத்திடத் தனவாகிய கடவுள்,

என்றது, மராமரத்தின் நிழலிலே நட்ட கல்லென்றவாறு.

கடவுள் ஓங்கிய காடு ஏசு கவலை - அக்கடவுளின் தெய்வத்தன்மை மிக்க தன்கொடுமையாற் பிறகாடுகளையிகழும் பலவழிகளில்,

397 - 8. [ஒட்டா தகன்ற வொன்னுத் தெவ்வர், சுட்டினும் பனிக் குஞ் சுரந்தவப் பலவே :]

ஒட்டாது அகன்ற ஒன்னு தெவ்வர் சுரம் தவ பலவே - நன்னனைப் பொருந்தாதே நீங்கின அவன் ஏவற்குப் பொருந்தாத பகைவரிருக்கும் அருநிலங்கள் மிகப்பல ;

இதனால் இகழுநர்ப்பிணிக்கும் ஆற்றல் (73) கூறினர்.

சுட்டினும் பனிக்கும் சுரம் - தத்தமூர்களிலேயிருந்து நினைப்பினும் தலைநடுங்குவிக்குஞ் சுரம்,

399 - 400. தேம் பாய் கண்ணி தேர் வீசு [2] கவி கை ஓம்பா வள் ளல் படர்ந்திகும்எனினே - தேன்சொரிகின்ற கண்ணியினையும் தேரைச் சிதறும் கொடுத்துக்கவிந்த கையினையுமுடைய [3] தனக்கென்று ஒரு பொருளும் பேணுத நன்னனை நினைத்துச் செல்கின்றேமென்று கூறு வீராயின்,

401 - 2. [மேம்பட [4] வெறுத்தவவன் றொஃறிணை மூதூர், ஆங்

1 இடந்து - பெயர்த்து.

2 "ஆனுதீயுங் கவிகை", "இசை விளங்கு கவிகை" (புறநா. ௩௪ : 7, ௧௦௨ : 6) என்ற இடங்களில் கவிகையென்பதற்கு இடக்கவிந்தகை யென வுரையெழுதுவர் அதன் உரையாசிரியர்; "கலம்பெயக் கவிந்த கழறொடித் தடக்கையின்" மலைபடு. 577.

3 மதுரை. 146 - ஆம் அடியின் உரையையும் அதனடிக்குறிப்பையும் பார்க்க.

4 செல்வத்தைக் குறிக்கும் வெறுக்கையென்னும் பெயருக்கும், இங்கே செல்வமுண்டான என்று பொருள் செய்யப்பட்டிருக்கும் வெறுத்த

கன மற்றே நம்ம ஞோர்க்கே :] நம்மனோர்க்கு ஆங்கனம் மேம்பட வெறுத்த அவன் தொல் திணை மூதூர் அற்று - நம்மையொக்கும் பரிசிலர்க்கு அப்பகைப்புலம் எல்லாவூர்களினும் மேலாம்படி செல்வமுண்டான நன்னனுடைய பழைதாகிய உயர்ந்த ஒழுக்கத்தினையுடைய பழையவூர்களையொக்கும் ;

403. அசைவுழி அசைஇ அஞ்சாது கழிமின் - இளைத்தவிடத்தே யிளைப்பாறி அஞ்சாமற் போவீர் ;

404 - 5. [புலியுற வெறுத்ததன் வீழ்பிணை யுள்ளிக், கலைநின்று விளிக்குங் கான மூழிறந்து :] புலி உற வீழ் தன் பிணை உள்ளி வெறுத்த கலை நின்று விளிக்கும் கானம் ஊழ் இறந்து - புலி பாய்கையினாலே பட்ட தன் பிணையை நினைத்து வெறுத்த கலைநின்று கூப்பிடும் அக்காட்டை முறைமைப்படப்போய்,

406. சிலை ஒலி வெரீஇய செங்கண் மரைவிடை - வில்லின் ஓசைக்கு வெருவின சிவந்தகண்ணையுடைய மரையேறு,

407. தலை இறும்பு கதழும் நாறு கொடி புறவின் - முற்பட்ட குறுங்காட்டிலே விரைந்தோடும் நாறுகின்ற கொடிகளையுடைய காட்டிடத்து,

408 - 9. வேறு புலம் படர்ந்த ஏறு உடை இனத்த வளை ஆன் தீ பால் - வேற்றுப்புலங்களிலே சென்று மேய்ந்த ஏற்றையுடைய நிரையிடத்தனவாகிய சங்குபோல் வெள்ளிய பசுக்களின் இனிய பாலை,

409 - 10. [1] மிளை சூழ் கோவலர் வளையோர் உவப்ப தருவனர் சொரிதலின் - நிரையைக் காவல் சூழ்கின்ற இடையர் வளையினையுடைய மகளிர் மனமகிழும்படி கொண்டுவந்து சொரிகையினாலே,

411 - 2. [பலம்பெறு நசையொடு பதிவயிற் றீர்ந்தநும், புலம்புசே ணகலப் புதுவி ராகுவிர் :] பலம் பெறு நசையொடு நும் பதிவயின் தீர்ந்த புலம்பு சேண் அகல புதுவிர் ஆகுவிர் - பலத்தைப்பெறவேண்டுமென்னும் ஆசையுடனே நும்முடைய ஊரினின்றும் போந்தவருத்தம் விட்டுநீங்குகையினாலே விருந்தாந்தன்மையையுடையிராகுவிர் ;

413 - 6. [பகர்விரவு நெல்லின் பலவரி யன்ன, தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக், கல்லென் கடத்திடைக் கடலி னிரைக்கும், பல்யாட் டினநிரை :] பகர் பல விரவு நெல்லின் அரி அன்ன தகர் விரவு துருவை வெள்ளையொடு விரைஇ கல்லென் கடத்திடை கடலின் இரைக்கும் பல்யாட்டு இனம் நிரை - பண்டம்விற்ற பலவுங்கூடுநெல்லின் அரிசியையொத்தனவாகக் கிடாய்விரவுகின்ற செம்மறித்திரள் வெள்யாட்

---

வென்னுஞ் சொல்லிற்கும் இயைபு ஏதேனும் உண்டோவென்பது ஆராய்ச்சிக் குரியது.

1 "மிளைசூழ் கோவல ரிருக்கை" சீலப். ௧௬ : 4.

டெனே கலந்து கல்லென்கின்ற ஓசையையுடைய காட்டிடத்தே கடல் போலேயொலிக்கும் பல யாட்டினினங்களையுடைய திரள்களிலே,

பகர்நெல்: வினைத்தொகை.

416. எல்வினிர் புகினே - இராக்காலத்தையுடையிராய்ச் செல்லின்,

மனத்தே அக்காலத்தைக் கருதுதலின், உடைமையாயிற்று.

417. பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவிர் - பாலும் பாற்சோறும் நுமக்கென்று சமையாமல் தமக்குச் சமைத்திருந்தவற்றைப் பெறுகுவிர்;

418. துய் மயிர் அடக்கிய சேக்கை அன்ன - மெல்லிய தலைமயிரினையுடைய சேணமிட்ட படுக்கையையொத்த,

419. மெய் உரித்து இயற்றிய மிதி அதள் பள்ளி - 1 ஆடுகளின் மெய்யையுரித்து ஒன்றாகத்தைத்த வார்மிதித்த தோற்படுக்கையிலே,

420. தீ துணையாக சேந்தனிர் கழிமின் - கொடியவிலங்குகள் வாராதபடி 2 இடையர் ஒளித்த நெருப்புத் துணையாகத் தங்கிப் போவிர்;

421 - 2. 3 கூப்பிடு கடக்கும் கூர் நல் அம்பின் கொடு வில் கூளியர் கூவை காணின் - கூப்பிடாத அவ்வெல்லையைக் 4 கூவாநிற்கும் கூரிய நல்ல அம்பினையும் கொடியவில்லினையுமுடைய நாடுகாக்கும் வேடருடைய திரளைக்கண்டீராயின், அவர்களுக்கு,

423 - 4. படியோர் தேய்த்த பணிவு இல் ஆண்மை கொடியோள் கணவன் படர்ந்திகும் எனினே - தன்னை வணங்காதாரை அழித்த தாழ்ச்சியில்லாத பகைவரைஆளுந்தன்மையினையுடைய நன்னனை நினைத்துப் போகின்றேமென்று கூறின்,

கொடியோள்கணவன் - கொடியினையுடையோள் கணவன்; இதனால் அவன்தேவி கற்புமிகுதி கூறினார்.

5 இது நன்னனென்னும் பொருட்டாய் நின்றது.

425 - 6. தடியும் கிழங்கும் 6 தண்டினர் தரீஇ ஓம்புநர் அல்லது உடற்றுநர் இல்லை - தசைகளையும் கிழங்குகளையும் நும்மைநலிந்து தின்

---

1 'கிடாயினுடைய தோல்களைப் பாயலாகவுடைய முதியோன்' பெரும்பாண். 151, ந.

2 "கடைகோற் சிறுதீ யடைய மாட்டித், திண்கா லுறியன் பானைய னகல, னுண்பஃ றுவலை யொருதிற நனைப்பத், தண்டுகா லூன்றிய தனிநிலை யிடையன்" அகநா. ௨௭௪ : 5 - 8.

கூப்பிடு - ஓரெல்லை; "நாக்குமுக் கூப்பிடுவளர்ந்து", "முக் கூப்பிடு; வளர்ந்தநெடு நாக்கடிது கொண்டாய்" சிதம்பர. சோமநாத, 21, 34. 4 பி - ம். 'கடவாநிற்கும்' 5 ப. ௬௪ : 2 - ஆம் அடிக். 6 "தண்டி - பலகாலலைத்து" பொருந. 104, ந.

னப்பண்ணிப் பாதுகாப்பாரல்லது வருத்துவார்களில்லை; அவற்றை நுகர்ந்து,

427. ஆங்கு [1] வியம் கொண்மின் - அவ்விடத்து அவர் போகச் சொன்னவழியை நுமக்கு வழியாகக் கொண்டுபோவீர்;

அது அதன் பண்பே - அக்காட்டின் தன்மை அத்தன்மைத்தாயிருக்கும்;

428. தேன் பட மலர்ந்த மராஅ மெல் இணரும் - தேனுண்டாக மலர்ந்த மராவினது மெல்லிய பூங்கொத்தும்,

429. உம்பல் அகைத்த ஒள் முறி யாவும் - யானைமுறித்த ஒள்ளிய தளிர்களையுடைய [2] யாம் பூவும்,

430 - 31. [தளிரொடு மிடைந்த காமரு கண்ணி, திரங்குமர னாரிற் பொலியச் சூடி:] திரங்கு மரல் நாரில் தளிரொடு மிடைந்த [3] காமரு கண்ணி பொலிய சூடி - உலர்ந்த மரல் நாரிலே தளிர்களோடே நெருங்கக்கட்டின விருப்பம் மருவின கண்ணியை அழகுபெறச் சூடி,

432. முரம்பு கண் உடைந்த நடவை தண்ணென - பருக்கையையுடைய மேட்டுநிலத்திடம் விண்ட சிறுவழி மழைபெய்து குளிருகையினாலே,

433. உண்டனிர் ஆடி கொண்டனிர் கழிமின் - அந்நீரைக்குடித்துக் குளித்து வழிக்குமுகந்துகொண்டு போமின்;

434 - 6. [செவ்வீ வேங்கைப் பூவி னன்ன, வேய்கொ ளரிசி மிதவை சொரிந்த, சுவல்விளை நெல்லி னவரையம் புளிங்கூழ்:]

செ வீ வேங்கை பூவின் அன்ன அவரை - சிவந்தபூக்களையுடைய வேங்கைப்பூவினையொத்த நிறத்தையுடைய அவரைவிதை,

வேய் கொள் அரிசி - மூங்கில் தன்னிடத்தே கொண்ட அரிசி,

சுவல் விளை நெல்லின் அரிசி - மேட்டுநிலத்தேவிளைந்த நெல்லின் அரிசி,

சொரிந்த மிதவை புளியங்கூழ் - இவற்றைப் புளிக்கரைத்த உலையிலே சொரிந்து ஆக்கின குழைந்த புளியங்கூழை,

437. அற்கு இடை உழந்த நும் வருத்தம் வீட - இராக்காலத்து, காட்டிடத்துப் பகற்பொழுதுவந்த நும்வருத்தம் போம்படி,

438 - 9. [அகலு ளாங்கட் கழிமிடைந் தியற்றிய, புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவிர்:] ஆங்கண் அகலுள் கழி மிடைந்து இயற்றிய புல் வேய் குரம்பை குடிதொறும் பெறுகுவிர் - அவ்விடத்து அகன்ற ஊரிடத்துக் கழிகளால் தெற்றிப் பண்ணின புல்லான்வேய்ந்த குடில்களிலிருக்கும் குடிகளிடந்தோறும் பெறுகுவிர்;

---

1 வியம் - ஏவல். [2] பி - ம். 'ஆச்சாவிற் பூவும்'

[3] காமரு: ப. ௪௪ : 3 - ஆம் அடிக்.

கூழை அற்குப் பெறுகுவிரென்க.

440-43. [பொன்னறைந் தன்ன நுண்ணே ரரிசி, வெண்ணெறிந் தியற்றிய மாக்க ணமலை, தண்ணெ ணுண்ணிழு துள்ளீ டாக, வசையினிர் சேப்பி னல்கலும் பெறுகுவிர் :]

அசையினிர் சேப்பின் - இளைப்பாறி அவ்விடத்தே சிலநாள் தங்குவீராயின்,

பொன் அறைந்தன்ன நுண் நேர் அரிசி வெண்ணெறிந்து இயற்றிய மா கண் அமலை - பொன்னை நறுக்கினாலொத்த நுண்ணிய ஒத்த அரிசியை வெள்ளையெறிந்தாக்கின கரிய இடத்தையுடைய சோற்றுத் தடியை,

தண்ணென் நுண் இழுது உள்ளீடாக அல்கலும் பெறுகுவிர் - தண்ணென்ற நுண்ணிய நெய்விழுதை உள்ளே இட்டுண்ணும்படி நாடோறும் பெறுகுவிர் ;

444. விசயம் கொழித்த பூழி அன்ன - கருப்புக்கட்டியைக் கொழித்த பொடியையொத்த,

445. உண்ணுநர் தடுத்த இடி நுண் நுவணை - 1 தன்னை நுகர்வாரை வேறொன்றை நுகராமல் தடுத்த இடித்தலால் நுண்ணிதாகிய தினைப் 2 பிண்டியொடு,

சேப்பின் நுவணையோடே அமலையை இழுது உள்ளீடாக அல்கலும் பெறுகுவிரென்க.

நுவணையோடெனை ஒடு விரிக்க.

446-7. நொய் மரம் விறகின் ஞெகிழி மாட்டி பனி 3 சேண் நீங்க இனிது உடன் துஞ்சி - நொய்ய மரமாகிய விறகாலாக்கின 4 கடைக்கொள்ளியை எரித்துப் பனி விட்டுநீங்கும்படி இனிதாகச்சேரத் துஞ்சி,

448. புலரி விடியல் புள் ஓர்த்து கழிமின் - இராக்காலம் நீங்குதலையுடைய விடியற்காலத்தே நிமித்தம் பார்த்துப் போவிர் ;

புள்ளோர்த்தென்றதற்குப் புட்களின் குரல்கேட்டுப் போவீரென்றுமாம்.

இத்துணையும் கானமும் (69) கானத்து ஆற்றினது நன்மையும் அசையுநற்புலமும் (67) வல்சியும் (68) சேரக்கூறினர்.

449. புல் அரை காஞ்சி - புற்கென்ற அரையினையுடைய காஞ்சி மரத்தினையும்,

---

1 மலைபடு. 138-ஆம் அடியின் உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க. 2 பிண்டி - மா.

3 "சேணீங்கிய - கைவிட்டு நீங்க" மதுரை. 198, ந.

4 கடைக்கொள்ளி : ப. ௨௨௮ : 2-ஆம் அடிக்.

புனல் பொரு [1] புதவின் - நீர்வந்து பொருகின்ற அறுகுகளையும்,

450. மெல் அவல் - மெல்லிய விளைநிலங்களையும்,

450-53. [இருந்த வூர்தொறு நல்லியாழ்ப், பண்ணுப்பெயர்த் தன்ன காவும் பள்ளியும், பன்னா ணிற்பினுஞ் சேந்தனிர் செலினு, நன் பல வுடைத்தவன் றண்பணை நாடே :]

காவும் - பொழில்களையும்,

பள்ளியும் - இடைச்சேரிகளையுமுடைய,

அவன் தண் பணை நாடே - நன்னனுடைய குளிர்ந்த மருதநிலத்தை யுடைய நாடு,

பல் நாள் நிற்பினும் சேந்தனிர் செலினும் இருந்த ஊர்தொறும் - பலநாள் நிற்பினும் ஒருநாள் தங்கிப்போகினும் நீர் நுகர்தற்குக் குடி நீங்காதிருந்த ஊர்கள்தோறும்,

நல் யாழ் பண்ணு பெயர்த்தன்ன நல் பல உடைத்து - நல்ல யாழின் பண்ணை மாறி வாசித்த தன்மையவாக நன்றாகிய பல பொருள்களை யுடைத்து;

காஞ்சி முதலியவற்றை உடையநாடு ஊர்தோறும் நன்பலவுடைத் தென்க.

[2] பண் ஒன்றையொன்றொவ்வாது இனிதாயிருக்குமாறுபோல நுகரும் பொருள்களும் ஒன்றையொன்றொவ்வா இனிமையுடையவென்றார்.

454-5. கண்பு மலி பழனம் கமழ துழைஇ வலையோர் தந்த இரு சுவல் வாளை - கண்பு நெருங்கின மருதநிலத்தைப் பூக்கள்நாற வளைத்து ஆராய்ந்து வலையைவீசுவார் கொண்டுவந்த பெரிய கழுத்தினை யுடைய வாளைத்தடியை,

456-8. நிலையோர் இட்ட நெடு நாண் தூண்டில் பிடி கை அன்ன செ கண் வரால் துடி கண் அன்ன குறையொடு விரைஇ - ஓரிடத்தில் நிலைபெற நிற்றலையுடையோரிட்ட நெடிய கயிற்றையுடைய தூண்டிலிற் பட்ட பிடியின் கையையொத்த சிவந்த கண்ணையுடைய வராலினது துடியின் கண்ணை யொத்த தடியோடேகலந்து,

459. [3] பகன்றை கண்ணி பழையர் மகளிர் - பகன்றைப்பூவாற் செய்த கண்ணியையுடைய கள்விற்கும் வலையருடைய மகளிர்,

---

[1] "புதவொரு விகற்பப் புல்லா குமமே" பிங்கல. 3001.

[2] "பையு ளுறுப்பிற் பண்ணுப்பெயர்த்தாங்கு அளிக்கும் நனை யெனக் கூட்டி, எல்லாப் பண்களிலும் வருத்தத்தைச் செய்யும் உறுப் பினையுடைய பாலைப்பண்கள் பலவற்றையும் ஒரோவொன்றாகப் பெயர்த்து வாசிக்குமாறுபோலே ஒன்றையொன்று ஒவ்வாத இன்பத்தை உண்டவர்க்குக் கொடுக்கும் பலதிறத்து மதுவெனவுரைக்க" பதிற். ௬௰ : 15, உரை. [3] பகன்றை: ப. ௪௲௧ : 4-ஆம் அடிக்.

460-62. ஞெண்டு ஆடு செறுவில் தராய்க்கண் வைத்த விலங்கல் அன்ன போர் முதல் தொலைஇ வளம் செய் வினைஞர் வல்சி நல்க - ஞெண்டுகள் ஆடித்திரியும் செய்க்கு அருகில் மேட்டுநிலத்தேயிட்ட மலையை யொத்த போர்களை அடியிலேவிழ அழித்துக் கடாவிட்டு வளப்பத்தை யுண்டாக்கும் உழவர் நெல்லை முகந்து தராநிற்க,

463. 1 துளங்கு தசும்பு வாக்கிய பசு பொதி தேறல் - களிப்பு மிகுதியால் அசையும் மிடாவினின்றும் வார்த்த பசிய மூங்கிலாலாக்கின கட்டெளிவை,

464. [இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும் பெறுகுவிர் :] ஞாயிறு இள கதிர் களங்கள் தொறும் பெறுகுவிர் - ஞாயிற்றினது இளைய கதிர்களெறிக்குங்காலத்திலே களங்கடோறும் பெறுகுவிர் ;

வினைஞர் வல்சிநல்காநிற்கப் பழையர்மகளிர் விரைஇத் தேறல் நல்காநிற்கப் பெறுகுவிர் என்க.

465-8. [முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண்சோறு, வண்டு படக் கமழுந் தேம்பாய் கண்ணித், திண்டேர் நன்னற்கு மயினி சான் மெனக், கண்டோர் மருள :]

வண்டு பட கமழும் தேன் பாய் கண்ணி திண் தேர் நன்னற்கும் அயினி சான்மென கண்டோர் மருள - வண்டு படியும்படி நாறும் தேன் சொரிந்த கண்ணியினையும் திண்ணிய தேரினையுமுடைய நன்னனுக்கும் உணவாதற்கு அமையுமென்று கண்டோர்கள் மருளும்படி,

முள் அரித்து இயற்றிய வெள் அரி வெள் சோறு - முள்ளைக் கழித்து ஆக்கின கொழுப்பால் வெள்ளிய நிறத்தையுடைய தடிகளையிட்ட வெள்ளிய சோற்றை,

வெள்ளிய நிறத்தையுடைய தடிகளை வெள்ளரியென்றார், ஆகுபெயராக்கி.

மருள இயற்றிய வென்க.

468. கடும்புடன் அருந்தி - நும் சுற்றத்துடனேயுண்டு,

469-70. எருது எறி களமர் ஓதையொடு நல் யாழ் மருதம் பண்ணி அசையினிர் கழிமின் - எருத்தையடிக்கின்ற உழவரோசையோடே கூடும்படி நல்லயாழை மருதத்தை வாசித்து இளைப்பாறிப் போவீர் ;

இத்துணையும் நாடுபடு வல்சியும் (68) அசையுநற்புலமும் (67) சேரக் கூறினார்.

---

1 "தசும்புதுளங்கிருக்கை" (பதிற். ௬௨ : 11) என்பதும், 'தன் களிப்பு மிகுதியால் தன்னையுண்டார் உடல்போல அத்தசும்பு இருந்து ஆடும்படியான இருப்பு' என்னும் அதனுரையும் இங்கே அறியற்பாலன

471-3. வெள் நெல் அரிநர் தண்ணுமை வெரீஇ செ கண் எருமை இனம் பிரி ஒருத்தல் கனை செலல் முன்பொடு கதழ்ந்து வரல் போற்றி - வெள்ளிய நெல்லையறுப்பார் கொட்டின பறையோசைக்கு வெருவிச் சிவந்த கண்ணையுடைய எருமைத்திரளைப் பிரிந்த கடா ஆரவாரிக்குஞ் செலவினையுடைய வலியொடே நும்மேல் விரைந்து வருதலைப் பேணி,

474-5. வனை கலம் திகிரியின் குமிழி சுழலும் துனை செலல் [1] தலைவாய் ஓவு இறந்து வரிக்கும் - குயவன்வனைகின்ற மட்கலத்திற் சக்கரம்போலக் குமிழி சுழன்று தோன்றும் விரைந்த செலவினையுடைய வாய்த்தலையில் ஒழிவின்றி ஓடும் யாறு (476),

476-7. காணுநர் வயாஅம் கட்கு இன் சேயாற்றின் யாணர் ஒரு கரை கொண்டனிர் கழிமின் - காண்பார் விரும்பும் கட்கு இனிய சேயாற்றினது புதுவருவாயையுடைய ஒரு கரையை வழியாகக்கொண்டு போவிர் ;

வயாம் : [2] ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங் கெட்டது. சேயாறு: அவ்வியாற்றின் பெயர்.

478-87. [நிதியந் துஞ்சு நிவந்தோங்கு வரைப்பிற், பதியெழ லறியாப் பழங்குடி கெழீஇ, வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத், தியாறெனக் கிடந்த தெருவிற் சாறெனை, விகழுநர் வெரூஉங் கவலை மறுகிற், கடலெனக் காரென வொலிக்குஞ் சும்மையொடு, மலையென மழையென மாட மோங்கித், துனிதீர் காதலி னினிதமர்ந் துறையும், பனிவார் காவிற் பல்வண் டிமிரு, நனிசேய்த் தன்றவன் பழவிறன் மூதூர் :]

பல் வண்டு இமிரும் பனி வார் காவின் (486) - பலவண்டுகளொலிக்கும் குளிர்ந்த நெடிய பொழில்களையும்,

இகழுநர் வெரூஉம் (482) நிவந்து ஓங்கு வரைப்பின் (478) - நன்னனை இகழ்ந்திருப்பார் அஞ்சும் மிகவோங்குமதிலையும்,

சாறு என (481) கெழீஇ (479) கடல் என கார் என ஒலிக்கும் சும்மையொடு (483) வியல் இடம் பெறாஅ விழு பெரு நியமத்து (480) - திருநாளென்னும்படி மாந்தர் பொருந்திக் கடலெனக் காரென ஒலிக்கும் ஆரவாரத்தோடே திரிதரற்கு அகன்ற இடம்பெறாத சீரிய பெரிய

1 "காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை, யோவிறந் தொலிக்கு மொலியே யல்லது" (சிலப். கo : 108-9) என்றவிடத்து ஓவிறந்தென்பதற்கு ஓவுதல் தவிர்ந்தென்று அரும்பதவுரையாசிரியரும், வாய்த்தலையோ விறந்தொலிக்கு மொலியென்பதற்கு, 'வாய்த்தலைக்கிட்ட கதவின்மீ தெழுந்து குதிக்கின்ற புதுப்புனலொலி' என்று அடியார்க்கு நல்லாரும் எழுதிய உரைகள் இங்கே அறியற்பாலன.

2 தொல். வினை. சூ. 41.

அங்காடித் தெருவினையும்,

கவலை மறுகின் (482) - பல கவர்த்தன்மையையுடைய குறுந்தெருக் களையும்,

1 பதி எழல் அறியா பழ குடி (479) துனி தீர் காதலின் இனிது அமர்ந்து உறையும் (485) மாடம் மலை என மழை என ஓங்கி (484) - ஊரினின்றும் போர்தலையறியாத பழையகுடி வெறுப்பில்லாத விருப்பத் தோடே நன்றாதல் பொருந்தியிருக்கும் மாடங்கள் மலையென மழை யென ஓங்குகையினாலே,

யாறு என கிடந்த தெருவின் (481) - யாறென்னும்படி கிடந்த பெருந் தெருவினையும்,

2 இரண்டு மருங்கின் மாடமுந் தெருவும் யாறும் கரையும் போன்ற வென்றார்.

நிதியம் துஞ்சும் (478) அவன் பழவிறல் முது ஊர் நனி சேய்த்து அன்று (487) - காவினையும் மதிலினையும் நியமத்தினையும் மறுகினையும் தெருவினையுமுடைய, பொருட்டிரள் தங்கும் அவன் பழைய வெற்றியை யுடைய மூதூர் மிகவும் தூரிதன்றென்க.

இது மூதூர்மாலை (93) கூறிற்று.

488 - 9. பொருந்தா தெவ்வர் இரு தலை துமிய பருந்து பட கடக் கும் ஒள் வாள் மறவர் - நன்னனைப் பொருந்தாத பகைவருடைய கரிய தலைகள் துணியப் பருந்துகள் படியப் போரைவெல்லும் ஒள்ளிய வாளை யுடைய மறவர்,

490 - 91. கரு கடை எஃகம் சாத்திய புதவின் அரு கடி வாயில் அயிராது புகுமின் - தம்முடைய கரிய காம்பினையுடைய வேலைச் சாத்தி வைத்துக் காத்திருக்கின்ற பல தெற்றுவாசல்களையுமுடைய அரிய கோபுரவாயிலை ஐயுறாமற் புகுவீர்;

492 - 5. [மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர், வெல்போர்ச் சேஎய்ப் பெருவிற லுள்ளி, வந்தோர் மன்ற வளியர் தாமெனக், கண்டோ ரெல்லா மமர்ந்தினிதி னோக்கி :]

மன்றில் வதியுநர் சேண் புலம் பரிசிலர் கண்டோர் எல்லாம் - அம் பலங்களிலே தங்குவாராகிய தூரிய நிலங்களினின்றும் வந்த கூத்தர் முதலியோராய நும்மைக் கண்டோரெல்லாம்,

---

1 "பதியெழு வறியா - பதியினின்றும் பெயர்தலை யறியாத; எனவே பகையின்மை கூறிற்று. பழங்குடி - தொன்மரபு; ஆதிகாலத் தேறிய குடியுமாம்" சிலப். க : 13, அடியார்.

2 "இருகரையும் யாறும்போன்றன, இரண்டு பக்கத்தின் மனைகளும் தெருவுகளும்" மதுரை. 359, ந.

அளியர் தாம் வெல் போர் சேஎய் பெருவிறல் மன்ற உள்ளி வந்தோர் என அமர்ந்து இனிதின் நோக்கி - இவ்வளிக்கத் தக்கவர்தாம் வெல்லும் போரைவல்ல முருகனைப்போலும் நன்னனைப் பரிசிலர்க்குக் கொற்றமாக நினைத்து வந்தோரென்று கருதி முகம்பொருந்தி இனிதாகப் பார்த்து,

496 - 7. [விருந்திறை யவரவ ரெதிர்கொளக் குறுகிப், பரிபுலம் பலைத்தநும் வருத்தம் வீட:] 1 பரி புலம்பு அலைத்த வருத்தம்வீட அவர் விருந்து நும் இறை எதிர்கொள அவர் குறுகி - தரித்தலானுண்டான தனிமை வருத்தின வருத்தம் போம்படி அவ்விடத்தோர் விருந்தாய் நீங்கள் தங்குதலை எதிரேற்றுக் கொள்கையாலே அவர்களைச் சேர்ந்திருந்து,

498 - 500. [எரிகான் றன்ன பூஞ்சினை மராஅத்துத், தொழுதி போக வலிந்தகப் பட்ட, மடநடை யாமான் கயமுனிக் குழவி :]

எரி கான்றன்ன பூ சினை மராஅத்து தொழுதிபோக வலிந்து அகப்பட்ட மடம் நடை ஆமான் குழவி - நெருப்பைக் கான்றாலொத்த பூங்கொம்புகளையுடைய மராமரத்திடத்தே கிடந்த இனமெல்லாங் கெட்டுப் போகப் போகமாட்டாது அகப்பட்ட மடப்பத்தையுடைய நடையையுடைய ஆமானினது குழவி,

கயம் முனி குழவி - யானைக்கன்றினையது,

501. [ஊமை யெண்கின் குடாவடிக் குருளை :] எண்கின் குடாவடி ஊமை குருளை - கரடியின் வளைந்த அடியினையுடைய வாய் திறவாக் குட்டி,

502 - 3. மீமிசை கொண்ட கவர் பரி கொடு தாள் வரை வாழ் வருடை வல் தலை மா தகர் - முதுகிடத்தே கொண்ட நிலத்தைக் கைக்கொள்ளும் செலவினையுடைய வளைந்த காலையுடைய வரையிடத்தே வாழும் எண் கால்வருடையில் வலிய தலையினையுடைய பெரியகிடாய்,

இனி வருடையும் தகருமென வேறாகக் கூறலுமாம்.

504. அரவு குறும்பு எறிந்த சிறு கண் தீர்வை - பாம்பினது வலிகளையழித்த சிறிய கண்ணினையுடைய கீரி,

505 - 6. அளை செறி உழுவை கோள் உற வெறுத்த மடம் கண் மரையான் பெரு செவி குழவி - முழையிலே செறிந்திருந்த புலி பாய்ந்து உறுகையினாலே தன் உடலை வெறுத்த மடப்பத்தையுடைய கண்ணினையுடைய மரையானினது பெரிய செவியினையுடைய குழவி,

---

1 "பரிபுலம்பினர்" (சிலப். ௧௦ : 226) என்றவிடத்துச் செலவால் வருந்தினரென அரும்பதவுரையாசிரியரும், 'வழிவரும் வருத்தத்தால் மிகவும் வருந்தினர்......பரி - மிகுதி ; பரிபுலம்பினர் ஒரு சொல்லுமாம்' என அடியார்க்கு நல்லாரும் எழுதியவுரைகள் இங்கே கருதற்குரியன.

507 - 8. அரக்கு விரித்தன்ன செந்நிலம் மருங்கின் பரல் தவழ் உடும்பின் கொடு தாள் ஏற்றை - அரக்கைப் பரப்பினாலொத்த சிவந்த நிலத்திடத்திற் சுக்கான் கல்லிலே தவழும் உடும்பினது வளைந்த காலையுடைய ஏறு;

509. வரை பொலிந்து இயலும் மடம் கண் மஞ்ஞை-மலையிடத்தே அழகுபெற்று ஆடும் மடப்பத்தையுடைய கண்ணினையுடைய மயில்,

510. கானம் கோழி கவர் குரல் சேவல் - கானத்திடத்துக்கோழியினது பெடையை அழைக்கின்ற குரலையுடைய சேவல்,

511. கானம் பலவின் முழவு மருள் பெரு பழம் - காட்டிடத்துப் பலாவினுடைய முழவென்று மருளும் பெரியபழம்,

512 - 3. [இடிக்கலப் பன்ன நறுவடி மாவின், வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரம் :] நறு வடி மாவின் இடி கலப்பன்ன வடி சேறு விளைந்த தீ பழம் தாரம் - நறிய வடுக்களையுடைய மாவினது பொடிச்செய்த 1 கண்டின் கலப்பையொத்த பிழியப்படும் சாறு முற்றின இனிய பழமாகிய பண்டம்,

514. தூவல் கலித்த இவர் நனை வளர் கொடி - மழையாற்செருக்கின பரக்கின்ற அரும்புகளையுடைய மணம்வளருகின்ற 2 நறைக்கொடி,

515. 3 காஅய் கொண்ட நுகம் மருள் நூறை - காவிக்கொண்டு வந்த நுகமென்று மருளும் 4 நூறைக்கிழங்கு,

நூறை - 5 மலங்கென்பாருமுளர்.

516. [பருஉப்பளிங் குதிர்த்த :] உதிர்த்த பருஉ பளிங்கு - மரத்தினின்றும் சிதறியுதிர்த்த பருத்த 6 நிகரமாகிய 7 கருப்பூரம்,

பல உறு திரு மணி - பலவிலைபெற்ற அழகிய மாணிக்கம்,

517 - 8. [குரூஉப்புலி பொருத புண்கூர் யானை, முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள் :] குரூஉ புலி பொருத புண் கூர் முழு வலி யானை முத்துடை மருப்பின் மிகு திரள் - நிறத்தையுடைய புலிபொரப்பட்ட புண்மிக்க குறைவில்லா வலியையுடைய யானைகளினுடைய முத்துடைக் கொம்புகளினுடைய மிக்கதிரள்,

519. வளை உடைந்தன்ன வள் இதழ் காந்தள் - வளையுடைந்தாற் போன்ற வளவிய இதழையுடைய காந்தட்பூ,

---

1 கண்டு - கற்கண்டு.

2 நறைக்கொடி - ஒருவகைக்கொடி ; "தண்கமழ் நறைக்கொடி கொண்டு" (ஐங்குறு. ௨௭௬ : 2.) 3 காஅய், காவி - தோளிற்சுமந்து.

4 பி - ம். 'நூற்றைக்கிழங்கு' 5 மலங்கு - ஒருவகைமீன்.

6 நிகரம் - திரள் ; "நிகரவேறு வேறாய.........ஆரம்" தக்க. 106.

7 கருப்பூரம் - ஒருவகைமரம் ; "இமயச்சாரற் கருப்புரக்கன்று" சீவக. 1267.

520. நாகம் - புன்னைப்பூ,

திலகம் - திலகப்பூ,

நறு காழ் ஆரம் - நறிய வயிரத்தையுடைய சந்தனம்,

521. [கருங்கொடி மிளகின் காய்த்துணர்ப் பசுங்கறி :] மிளகின் கரு கொடி காய் துணர் பசு கறி - மிளகினது கரிய கொடிகள் காய்த்த கொத்திற் பசியமிளகு,

முன்னர் மிளகென்றது முதலை; கறி, சினை.

522. திருந்து அமை விளைந்த தேன் கள் தேறல் - நன்றாகிய மூங்கிற் குழாயிலே முற்றிய தேனாற்செய்த கட்டெளிவு,

523. கான் நிலை எருமை கழை பெய் தீ தயிர் - காட்டிடத்து நிலைமையினையுடைய எருமையினது,மூங்கிற்குழாயிலே தோய்த்தஇனியதயிர்,

524. நீல் நிறம் 1 ஓரி பாய்ந்தென - முற்றுகையினாலே 2 நீல நிறத்தையுடைய ஓரிநிறம் பரந்ததாக,

524 - 5. நெடு வரை நேமியின் செல்லும் நெய் கண் இறால் - நெடியவரையில் இறாலிடத்தை விட்டுப்பாயுந் தேனைத் தன்னிடத்தே உடைய இறால்கள்,

526 - 9. [உடம்புணர்பு தழீஇய வாசினி யனைத்துங், குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி, கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப, நோனாச் செருவி னெடுங்கடைத் துவன்றி :]

தழீஇய ஆசினி - நன்றென்று கூட்டிக்கொண்ட ஆசினிப்பலா,

குடமலை பிறந்த தண் பெரு காவிரி கடல் மண்டு அழுவத்து கய வாய் கடுப்ப - குடகமலையிற்பிறந்த குளிர்ந்த பெரியகாவிரி கடலிலே மிக்குச் செல்கின்ற ஆழத்தையுடைய புகார்முகத்தையொப்ப,

நோனா செருவின் நெடு கடை - பகைவர் பொறுத்தலாற்றாத போரினையுடைய தலைவாசலிலே,

3 அனைத்தும் உடம்புணர்பு துவன்றி,

530 - 31. 4 [வானத் தன்ன வளமலி யானைத், தாதெருத் ததைந்த முற்ற முன்னி :]

1 "ஓரியென்பது தேன்முதிர்ந்தாற் பரக்கும் நீலநிறம்; முசுக்கலையெனினும் அமையும்" புறநா. ௧௦௯, உரை.

2 "நீனெய்தாழ்கோதை - நீலநிறத்தையுடைய தேனெய் தங்கிய கோதை" பரி. ௧௧ : 124, பரிமேல்.

3 இதற்கு உரைகிடைத்திலது; மேற்கூறிய யாவும் ஒருமிக்கச் சேரப்பெற்று நெருங்கியென்க.

4 இதற்கும் உரைகிடைக்கவில்லை; மேகங்களை யொத்த வளப்பம் மிகுந்த யானைகளையுடைய தாதாகிய எருக்கள் நெருங்கின முன்றிலையடைந்தென்க.

532. மழை எதிர் படு கண் முழவு கண் இருப்ப - மழைமுழக்கத்திற்கு எதிராகமுழங்கும் கண்ணையுடைய முழவின் கண்கள் ஒலியா நிற்க,

533. கழை வளர் தூம்பின் கண் இடம் இமிர - மூங்கிலாகிய இசை வளரும் பெருவங்கியத்தினது திறந்தகண்ணிடம் ஒலியாநிற்க,

534 - 6. [மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ், நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக், கடவ தறிந்த வின்குரல் விறலியர் :]

மருதம் பண்ணிய கரு கோடு சிறு யாழ் நரம்பு மீது இறவாது உடன்புணர்ந்து ஒன்றி இன் குரல் விறலியர் - மருதத்தை வாசித்த கரிய தண்டினையுடைய சிறிய யாழின்நரம்பினோசைக்கு மேற்போகாது அவ்வோசையுடனேகூடி ஓரோசையாய் இனிதாகிய பாட்டினையுடைய விறல்பட ஆடும் மகளிர்,

கடவது அறிந்த விறலியர் - தலைவனைக் கண்டாற் செய்யக்கடவ தொழிலை யறிந்த விறலியர்,

537. தொன்று ஒழுகு மரபின் இயல்பு வழாஅது - பழைதாய் நடக்கும் முறைமையினையுடைய தம் இலக்கணத்தில் தப்பாமல்,

538. அரு திறல் கடவுள் பழிச்சியபின்றை - 1 பொறுத்தற்கு அரிய வலியையுடைய கடவுளை முதலில் வாழ்த்தின பின்பு,

முற்றத்தையணுகி (531) இருப்ப (532) விறலியர் (536) தேவபாணியைப் பாடினபின்பு (539) என்க.

539. விருந்தின் பாணி கழிப்பி - சென்றூற் புதிதாகப்பாடும் பாட்டுக்களைப் பாடி,

539 - 40. நீண்மொழி குன்றா நல் இசை சென்றோர் உம்பல் - வேல் நிழற் புலவோர்க்குக் (88) கொடுத்தவற்றை வாங்காதபடி தாம் கூறிய வஞ்சினங்களிற் குறையாத நல்ல புகழிலே நடந்தோருடைய வழியில் வந்தவன்,

இச்சூற் கொடைக்கடனிறுத்த அவன் தொல்லோர் வரவு (89) கூறினர்.

541 - 3. [இன்றிவட் செல்லா துலகமொடு நிற்ப, விடைத்தெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக், கொடைக்கட னிறுத்த செம்மலோயென :]

இடை தெரிந்து உணரும் பெரியோர் மாய்ந்தென - நன்று இது தீது இஃதென்று ஆராயும் பெரிய உபகாரிகள் இறந்தார்களாக,

இன்று இவண் செல்லாது உலகமொடு நிற்ப கொடை கடன் இறுத்த செம்மலோய் என - நின்பேர் இக்காலத்து இவ்வுலகிலே நடந்துவிடாதே உலகமுள்ளளவும் நிற்கும்படி கொடையாகிய கடனை முடித்த தலைமையை உடையோயென்றுகூறி,

1 "நலம்பொறுக்க லாத பிண்டி நான்முகன்" சீவக. 402.

544. வென்றி பல் புகழ் விறலோடு ஏத்தி - வெற்றியாலுண் டாகிய பல புகழ்களை 1 ஐம்பொறிகளைத் தன் வசமாக்கின வெற்றி யோடே புகழ்ந்து,

545. சென்றது நொடியவும் விடாஅன் - நும்மனத்திற்சென்ற வினைப் புகழ்களை முற்றக்கூறவும் அமையானுய்,

545 - 6. நசை தர வந்தது சாலும் வருத்தமும் பெரிது என - என்மேலுள்ள நசை கொண்டுவருகையினுலே என்னிடத்து வந்ததே அமையும் ; வழிவந்த வருத்தமும் பெரிதென முகமன்கூறி,

547 - 8. பொரு முரண் எதிரிய வயவரொடு பொலிந்து திருநகர் முற்றம் அணுகல் வேண்டி - பொருகின்ற மாறுபாட்டினை எதிர்கொண் டிருக்கும் படைத் தலைவரோடே பொலிவுபெற்றுச் செல்வத்தையுடைய தன் மனையின் முற்றத்தை நீங்கள் செல்லுதலை விரும்பி,

பொலிந்தென்னுமெச்சத்தை உடையவென்பதனோடு முடிக்க.

549. கல்லென் ஒக்கல் நல் வலத்து இரீஇ - கல்லென்னும் ஆர வாரத்தையுடைய சான்றோரிருக்கின்ற நன்றாகிய 2 சமயத்திருக்குமண்ட பத்தேயிருந்து,

வலம் - இடம்.

இதனுல் நல்லிதினியக்குமவன் சுற்றத்தொழுக்கமும் (80), அவன் நாண் மகிழிருக்கையும் (76) கூறினுர்.

550 - 52. உயர்ந்த கட்டில் உரும்பு இல் சுற்றத்து அகன்ற தாயத்து அஃகிய நுட்பத்து இலம் என மலர்ந்த கையர் ஆகி - உயர்ந்த அரசவுரிமையினையும், கொடுமையில்லாத அமைச்சர் முதலியோரையும் அகன்ற நாட்டினையும், சுருங்கின அறிவினையுமுடையராய் இரந்து வந் தோர்க்கு யாம் இல்லேமென்று கூறி இல்லையென்று மறித்த கையினையு முடையராய்,

கட்டில் - சிங்காதனமுமாம். தாயம் - உரிமைகளெல்லாவற்றையும் கூறிற்றுமாம்.

553. தம் பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர் - தம் பெயரை உலகில் நிறுத்தாமல் தம்முடனேகொண்டு பொன்றக் கெட்டுப் போன அரசர்,

554 - 6. நெடுவரை இழிதரு நீத்தம் சால் அருவி கடு வரல் கலுழி கட்கு இன் சேயாறு வடு வாழ் எக்கர் மணலினும் பலரே - நெடியமலை யில்நின்றுங் குதிக்கும் பெருக்கு நிறைந்த அருவியினது கடிய வரத்தினை

1 "புலனைந்தும் வென்றான்றன் வீரமே வீரம்" தனிப்.

2 சமயத்திருக்குமண்டபம்: (சீவக. 2370, ந.); "சமயமண்டப நிறைந்திருந்ததிரி சங்குமைந்தன்" அரிச்சந்திர. வேட்டஞ்செய். 16.

உடைத்தாகிய பெருக்கினையுடைய கண்ணுக்கு இனிய சேயாற்றின் அறல் வீற்றிருந்த இடுமணலாகிய மணலினும்பலர் ;

557. [அதனால், புகழொடுங் கழிகநம் வரைந்த நாளென :] அதனால் நம் வரைந்தநாள் புகழொடும் கழிக என - ஆகையினாலே நமக்குத் தெய்வம் இத்துணைக்காலமிருவென எல்லையிட்டுவிட்ட நாள் புகழோடே கழிந்துபோவதாகவென்று கருதி,

558. [பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளமொடு :]

பரந்து இடம் கொடுக்கும் உள்ளமொடு - கொடுத்தற் றொழிலிலே விரிந்து அதற்கே இடங்கொடுக்கும் நெஞ்சுடனே,

விசும்பு தோய் உள்ளம் - ஆகாயத்தையொத்த பெரிய உள்ளம்,

559 - 60. [நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி, துவந்த வுள்ளமோ டமர்ந்தினிது நோக்கி :] நயந்தனிர் உவந்த உள்ளமொடு சென்ற நும்மினும் தான் பெரிது அமர்ந்து இனிது நோக்கி - பரிசில் பெறுதற்கு விரும்பி மகிழ்ந்த நெஞ்சத்தோடே சென்ற நும்மினுங்காட்டில் தான் பெரிதும் முகனமர்ந்து இனிதாகப்பார்த்து,

561 - 2. [இழைமருங் கறியா நுழைநூற் கலிங்க, மெள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ :] எள் அறு சிறப்பின் இழை மருங்கு அறியா நுழை நூல் கலிங்கம் வெள் அரை கொளீஇ - இகழ்ச்சியற்ற தலைமையினையுடைய இழைபோனவிடமறியாத நுண்ணிய நூலாற் செய்த புடைவைகளை, அழுக்கேறின சீலைகள் கிடத்தலின் வெள்ளிதாகிய அரையிலே உடுத்தி,

563 - 6. [முடுவ றந்த பைந்நிணத் தடியொடு, நெடுவெணெல்லி னரிசி முட்டாது, தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து, பலநா ணிற்பினும் பெறுகுவிர் :]

வழி சிறந்து பல நாள் நிற்பினும் - அவ்விடம் நும் நெஞ்சிற்குச் சிறப்பெய்திப் பலநாள் நின்றீராயினும்,

முடுவல் தந்த பைந்நிணம் தடியொடு - பெண்நாய் கடித்துக் கொண்டு வந்த பசிய நிணத்தையுடைய தசைகளோடே,

நெடு வெள் நெல்லின் அரிசி முட்டாது - நெடிய வெள்ளிய நெல்லின் அரிசியும் முட்டுப்படாமல்,

தலைநாள் அன்ன புகலொடு பெறுகுவிர் - முதல் நாட்போன்ற விருப்பத்தோடே பெறுகுவிர் ;

566 - 8. [நில்லாது, செல்வேந் தில்லவெந் தொல்பதிப் பெயர்ந்தென, மெல்லெனக் கூறி விடுப்பின் :] நில்லாது எம் தொல் பதி பெயர்ந்து செல்வேம் தில்ல என மெல்லென கூறி விடுப்பின் - அவ்விடத்து நில்லாதே எம்முடைய பழையவூரே மீண்டு போவேம் ; இஃது

எங்களுக்கு விருப்பமென்று அவன் பொறுக்கச் சொல்லி அவனைக் கைவிடின்,

568 - 9. நும்முள் தலைவன் தாமரை மலைய - நுங்களில் தலைவனானவன் பொற்றாமரையைச் சூட,

569 - 70. விறலியர் சீர் கெழு சிறப்பின் விளங்கு இழை அணிய - விறல்பட ஆடுமகளிர் அழகுபொருந்தின தலைமையினையுடைய விளங்குகின்ற பேரணிகலங்களைப் பூண,

571. நீர் இயக்கு அன்ன நிரை செலல் நெடு தேர் - நீரின் செலவினை யொத்த நிரைத்துச்செல்கின்ற செலவினையுடைய நெடியதேர்கள்,

572. வாரி கொள்ளா வரை மருள் வேழம் - யானைபடுகின்ற விடத்திற் பிடித்துக் கொள்ளாத மலையென்று மயங்கும் யானைகள்,

என்றது, பகைவர்திறைதந்த யானைகளை.

573. கறங்கு மணி துவைக்கும் ஏறு உடை பெரு நிரை - ஒலிக்கும் மணிகள் ஆரவாரிக்கும் ஏறுகளையுடைய பெரிய பசுத் திரள்கள்,

574. பொலம் படை பொலிந்த கொய் சுவல் புரவி - பொன்னாற் செய்த கலனைமுதலியவற்றாற் பொலிவுபெற்ற மனச்செருக்கால் மயிரைப் பலகாலுங் கொய்யும் கழுத்தினையுடைய குதிரைகள்,

575. நிலம் தின கிடந்த நிதியமோடு - மண்தின்னும்படி பழைதாய்க்கிடந்த பொருட்டிரளோடே,

அனைத்தும் - எல்லாவற்றையும்,

576 - 7. இலம் படு புலவர் ஏற்ற கை நிறைய [1] கலம் பெய கவிழ்ந்த கழல் தொடி தடகையின் - இல்லாமையுண்டான புலவர் ஏற்ற கைந்நிறையும்படி பேரணிகலங்களைச் சொரிகையினாலே கீழ்நோக்கின உழலுந்தொடியணிந்த பெரிய கையினிடத்துண்டாகிய,

இதனாற் புலவோர்க்குச் சுரக்கும் அவன் ஈகைமாரி (72) கூறினார்.

578. வளம் பிழைப்பு அறியாது - தான்கொடுத்தசெல்வம் கெடுதலையறியாதபடி,

578 - 9. வாய் வளம் பழுநி கழை வளர் நவிரத்து மீமிசை - வாய்த்த வளப்பம் முற்றுப்பெற்று மூங்கில்வளர்ந்த நவிரமென்னும் பெயருடைய மலையிடத்துச்சியிலே,

579 - 80. ஞெரேரென மழை சுரந்தன்ன ஈகை - கடுக மழை சொரிந்தாற்போன்ற கொடையாலே,

580 - 81. [நல்கித், தலைநாள் விடுக்கும் பரிசில் :] தலைநாள் பரிசில் நல்கி விடுக்கும் - முதனாளிலே பரிசில்தந்து போகச்சொல்லும்,

---

1 "கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித்தடக்கை" அகநா. ௨௯௫ : 20.

581 - 3. மலை நீர் வென்று எழு கொடியில் தோன்றும் 1 குன்று சூழ் இருக்கை நாடு கிழவோனே - மலையினின்றும் விழுகின்ற அருவிகள் வென்றுயர்கின்ற கொடிகள்போலத்தோன்றும் மலைகள்சூழ்ந்த பரப்பினையுடைய நாட்டிற்கு உரிமையையுடையோன்.

விடுப்பிற் (568) சென்றோரும்பல் (540) நாடுகிழவோன் (583) தன் கையிடத்துண்டாகிய (577) மழைசுரந்தன்ன இயல்பாகிய கொடைத்தொழிலாலே (580) வளம்பிழைப்பறியாதபடி (578) நிதியத்தோடே (575) தேர் (571) வேழம் (572) நிரை (573) புரவி (574) இவையனைத்தும் (575) உயர்ந்தவன் தாமரை மலைய விறலியர் (569) இழையணியத் (570) தலைநாளிலே பரிசிலாக (581) நல்கி (580) விடுக்கும் (581) என முடிக்க.

இதனால், வீயாதுசுரக்குமவன் வியன்மகிழிருக்கை (76) கூறினார்.

கலப்பையிராய் (13) ஒழுகிச் (20) சுற்ற (46) இருந்த (49) தலைவ (50), யாறு கடற்படர்ந்தாங்கு (52) யாம் அவனைக்கருதிச்சென்று பரிசில் பெற்று வருகின்றேம்; நீயிரும் (53) நன்னற்படர்ந்த கொள்கையொடு (64) சேறிராயின் (65), எற்றுக்குறுதலின் (66) எதிர்ந்தபொழுதையும் (65) புள்ளையும் உடையிரா யிருந்தனிர் (66) ; இனி யாற்றினதளவும் புலமும் (67) வல்சியும் (68) மலையும் சோலையும் கானமும் (69) ஈகைமாரியும் (72) ஆற்றலும் (73) இருக்கையும் (76) சுற்றத்தொழுக்கமும் (80) கடவுளதியற்கையும் (83) அவன் சிறப்பும் (85) தொல்லோர் வரவும் (89) மூதூர்மாலையும் (93) இருக்கும்படி கேட்பாயாக; அவற்றுள் இனி வேளை நீ முன்னிய திசையைக்கேள் (94); பெட்டாங்கு விளைய (98) வானம் பொழிகையினாலே (97) முசுண்டை (101) முதலாகப் பல (144) ஈருகவெண்ணிய இம் மிகுவளம் பழுநியவைப்பாலே (95) புதுவதுவந்தன்று; அவ்வழியின்பண்பு இத்தன்மைத்து (96); அவற்றைக்கண்டு கானவர் (155) சிறுகுடிப்படின் (156) ஒக்கலொடும் பதமிகப்பெறுகுவிர் (157); அசைஇ அன்று அற்சேர்ந்து அவண் அல்கிப் (158) போகிப் (160) பாக்கமெய்தி (162) விறல்வேள் வயிரியமெனிற் (164) பொம்மல் பெறுகுவிர் (169); அவன்மலைமிசைநாடு அனையதன்று (188); ஆண்டுத் தேக்கட்டேறலைப் (171) பருகி நறவைமகிழ்ந்து (172) அனந்தல்தீர (173) மகமுறைதடுப்ப மனைதொறும் (185) தாரத்தோடே (170) வல்சியைப் (183) பெறுகுவிர் (185); பெற்றால் பரிசில் மறப்ப நீடலுமுரியிர் (187); அங்ஙனம் நீட்டிப்பிற் பனித்தலுமுரியிர் (191); ஆதலால் பலநாணில்லாது நாடுபடர்மின் (192); படரும்

1 குன்றுசூழிருக்கையென்றது பல்குன்றக்கோட்டத்தை; இது, தொண்டைமண்டலத்துள்ள 24 கோட்டங்களுள் ஒன்று.

பொழுது அவ்வாறு (195) அரும்பொறி (194) உடையவாகையினாலே நள்ளிருள் (195) வைகினிர் விரிந்த விடியல் கழிமின் (196); கழிந்து செப்பந்துணியின் (197) வலஞ் செயாக்கழிமின் (202); கழிந்து குறவர் (203) எறித் (204) தளர்க்குங்கல் (206) கூற்றத்தன்ன (209); அவை தாம் இரியத் (208) தத்தி (207) விசை தவிராது வரும்; அதற்கு மர மறையாக்கழிமின் (210); கழிந்து கான்யாற்று நடவை (214) வழூஉம் மருங்குடைய (215); அவ்விடத்திற்கு வலந்த பரூஉக் கொடிமதலைபற்றி (216) வழாலோம்பி (215) ஒருவிரொருவிரோம்பினிர் கழிமின் (218); கழிந்து நுண்ணீர்ப்பாசிவழும்பு (221) அடி நிலை தளர்க்கு மருப்பமு முடைய (222); அதற்கு வேரலோடு (223) மென்கோல் பற்றினிர்கழி மின் (224); கழிந்து கடவுட்காணின் (230) வெற்பு மாரிதலையு (233) மாதலின், நும்மியங்தொடு லோம்புமின் (232); ஓம்பி மஞ்ஞைநுளரி னும் (235) கடுவன் உகளினும் (237) பிரசங்காணினும் (239) ஞரே ரென நோக்கலுரித்தன்று (240); நெறிமாறுபடுகுவிர் (241); அங்ங னம் நெறி மாறுபடாமற்போய்க் கானத்துப்படின் (242) எனங்காணின் (247) மிசைந்து (249) பருகிப் (251) பொதியினிராய் (252) மகா ரோடே (253) கழிதலோம்பி அற்குக் (254) கல்லளைவதிமின் (255); வதிந்து விடியலெழுந்து (257) செந்நெறிக்கொண்மின் (258); கொண்டு விலங்கி (261) நோக்கிக் (262) குறுகாதுகழிமின் (267); கழிந்து நாடுகாணனந்தலை மென்மெல அகன்மின் (270); அகன்று குன்றத்துப்படின் (275) இயந்தொடுமின் (277); தொட்டால் கானவரு ளர் (279); அவரெய்திக் (281) காட்டி (283) முந்துற (284) இனி யிராகுவிர் (286); அங்ஙனமினியிராய் அவர் கூறிய மாதிரங்கைக் கொண்டு (287) இழிந்து (288) இருப்பின் (290) மலைபடுகடாம் (348) பலதிறம் பெயர்பவை கேட்குவிர் (291); கேட்டபின் அவன்வெற்பு விழவினற்று (351); ஆண்டுத் தொன்முறை மரபினிராகிப் (355) பாடிப் (359) பழிச்சி (360) மலைபிற்படக் (357) கழிமின்(360); கழிந்து துவலை துவற்றலின் (363) விடரகம்புகுமின் (366); புகுந்து குன்றில் ஆரிடரமு வத்து (368) ஊறு தவப்பல (372); அவற்றைக் கோல்கொண்டு (370) ஊன்றினிர்கழிமின் (372); கழிந்து இன்னலியக்கத்து (374) அமயத் துக்கழிமின் (375); கழிந்து அவ்விடம் அருப்பமுமுடைய (378); அவ் வரண்களிற் போயின் நுழைதொறும் (379) கைபிணிவிடாதுகழிமின் (383); கழிந்தாற் கானம்பல (385); கல் நட்ட (388) கவலைகள்பல (389); அக்கல்லிற்கு மருப்பிகுத்துத்துனைமின் (391); அப்பொழுது புதுவிர் (392) புன்முடிந்திடுமின் (393); இட்டுப்போனாற் சுரந்தவப்பல (398); ஓம்பாவள்ளற் படர்ந்திகுமெனின் (400) நம்மனோர்க்கு ஆங் கனம் (402) மூதூர் (401) அற்று (402); அசைவுழியசைஇ அஞ்சாது

கழியின் (403) ; அக்கானத்தையிறந்து (405) கோவலர் பாலைச் (409) சொரிகையினாலே (410) அவர்க்கு விருந்தாவிர் (412) ; அங்ஙனம் விருந்தாய் ஆட்டின் நிரையிலேபுகிற் (416) பாலும் மிதவையும் பெறுகுவிர் (417) ; அவற்றைப்பெற்று அதட்பள்ளியிலே (419) சேர்ந்தனிர்கழியின் (420) ; கழிந்து கூளியர்கூவைகாணிற் (422) படர்ந்திகுமெனின் (424) தடியும் கிழங்குந் தரீஇ (425) ஓம்புநரல்லது உடற்றுநரில்லை (426) ; அவற்றையருந்தி வியங்கொண்மின் ; அதன்பண்பு அஃது (427) ; அப்பண்பைக்கண்டு கண்ணியைச் (430) சூடித் (431) தண்ணென (432) உண்டனிர்ஆடிக் கொண்டனிர்கழியின் (433) ; கழிந்தாற் புளிங்கூழை (436) அற்குக் (437) குடிதொறும் பெறுகுவிர் (439) ; பெற்று அசையினிர் சேப்பின் (443) நுவணையோடு (445) அமலையை (441) இழுதுள்ளீடாக (442) அல்கலும் பெறுகுவிர் (443) ; அவற்றைப்பெற்று ஞெகிழி மாட்டித் (446) துஞ்சிப் (447) புள்ளோர்த்துக் கழியின் (448) ; கழிந்தால் அவன் தன்பணைநாடு நன்பலவுடைத்து (453) ; அதனையடைந்தால் வினைஞர் வல்சிநல்கப் (462) பழையர் மகளிர் (459) விரைஇத் (458) தேறலை (463) நல்க (462) அவற்றைப் பெறுகுவிர் (464) ; அவற்றைப் பெற்றபின்பு அவரவரிட்ட வெண்சோற்றை (465) அருந்தி (468) மருதம்பண்ணிக் கழியின் (470) ; கழிந்து எருமையொருத்தல் (472) கதழ்ந்து வரல்போற்றிச் (473) சேயாற்றின் (476) ஒருகரைக்கொண்டனிர்கழியின் (477) ; கழிந்தால் அவன்மூதூர் சேய்த்தன்று (487) ; அவ்வூரிற்சென்றால் அருங்கடிவாயிலை அயிராது புகுமின் (491) ; புக்காற் பரிசிலர் (492) கண்டோரெல்லாம் (495) எதிர்கொளக் குறுகிப் (496) பின்னர்மூற்றமுன்னிக் (531) கடவுள் வாழ்த்தியபின்னர் (538) விருந்திற்பாணிகழிப்பிச் (539) செம்மலோயெனக் கூறி (543) எத்திச் (544) சென்றதுநொடியவும் விடாஅய் (545) வருத்தமும்பெரிதெனக் கூறி (546) அணுகல்வேண்டி (548) நல்வலத்திரீஇ (549) மாய்ந்தோர் (553) மணலினும் பலர் (556) ; அதனால் நம் வரைந்தநாள் புகழொடு கழிகவென்று கருதிப் (557) பரந்திடங்கொடுக்கு மூள்ளத்தோடே (558) அமர்ந்து நோக்கிக் (560) கலிங்கம் (561) வெள்ளரைக்கொளீஇப் (562) பலநாள் நிற்பினும் (566) தடியொடு (563) அரிசிமுட்டாது (564) தலைநாளன்ன புகலொடு (565) தரப்பெறுகுவிர் ; நில்லாது (566) செல்வேமென (567) விடுப்பின் (568) சென்றோரும்பல் (540), நாடுகிழவோன் (583), அவன் தன் கையிடத் துண்டாகிய (577) மழைசுரந்தன்ன இயல்பாகிய கொடைத்தொழிலாலே (580) வளம்பிழைப் பறியாதபடி (578) நிதியத்தோடே (575) தேர் (571) வேழம் (572) நிரை (573) புரவி (574) இவையனைத்தையும் (575) தலைவன்றுமரைமலைய விறலியர் (569) இழையணியத் (570) தலைநாளிலே பரிசிலாக (581) நல்கி (580) விடுக்கும்

(581); ஆதலால், அவன்பாற் றாழாமற் கடிதாகச் சென்று பரிசில்பெறு வீராகவெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னனைப் பாடிய மலைபடுகடாத்திற்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த உரை முற்றிற்று.



வெண்பா.

[1] தூஉஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல்
மாஅ மிசையான்கோ னன்ன னறுநுதலார்
மாஅமை யெல்லாம் பசப்பு.

வெண்பா.

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.

# பத்துப்பாட்டு

## நச்சினார்க்கினியருரை

## முற்றுப்பெற்றது.



1 பி - ம். 'தூஉஉய்த்தீம்புகையத்தொல்விசும்பிற்' "தூஉஉத் தீம்புகை" என்பதில் தூஉஉ என்பது நான்கு மாத்திரை பெற்று நின்ற தாதலின், இது செப்பலோசை பிழையாது வந்ததென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் முதலியோர் (தொல். நூன். சூ. 6, ந; யா - வி. எழுத். சூ. 4; இ - வி சூ. 743); பேராசிரியர் வேறு கூறுவர்; தொல். செய். சூ. 62.

உ

கணபதி துணை.

# அரும்பதமுதலியவற்றின் அகராதி.

[எண் - பக்க எண்.]

# இடம் விளங்காத மேற்கோள்களின் முதற் குறிப்பகராதி.

[எண்கள்—பக்க எண்கள்.]